# மதுரை நாயக்கர்கள் வரலாறு



ஆசிரியர்

**ஆர். சத்தியநாத அய்யர்**

தமிழில்

**எஸ். அர்ஷியா**

**கருத்து - பட்டறை**

மதுரை




நூல் விவரக் குறிப்பு

நூலின் தலைப்பு : மதுரை நாயக்கர்கள் வரலாறு /
ஆசிரியர் : ஆர்.சத்தியநாத அய்யர் / தமிழில் : எஸ்.அர்ஷியா /
முதல் பதிப்பு : 2016 ஜனவரி /
வெளியீடு : கருத்து=பட்டறை, 2 முதல் தளம், நாகா வளாகம்,
4வது நிறுத்தம், திருநகர், மதுரை-625 006 / பேசி : 98422 65884 /
பக்கங்கள் : 440 / அளவு : டெம்மி / புள்ளி : 11 /
வடிவமைப்பு : சே.குப்புசாமி /
அட்டை வடிவமைப்பு : ஜீவமணி /
தாள் : பி.பி. 18.6 ஜிஎஸ்எம்/
அச்சு : கேபிடல் இம்ப்ரஷன், சென்னை - 14

விலை ரூ. 370

History of the Nayaks of Madura / R.Sathyanatha Aiyar /
Translated by : S.Arshiya / First Edition : 2016 January /
Publishing : Karuthu = Pattarai, 2 First Floor, Naga Complex,
4th Stop, Thirunagar, Madurai - 625 006 / Cell : 98422 65884 /
Pages : 440 / Size : Demmy / Point : 11 / Layout : S.Kuppusamy /
Wrapper Design : Jeevamani / Paper : B.P. 18.6 GSM/
Printing : Capital Impression, Chennai - 14

Rs. 370

## பதிப்புரை

## வரலாற்றின் மறு வாசிப்பு

நவீன கால சிந்தனை மேலோங்கி நிற்கும் இந்த யுகத்தில் வரலாற்றின் அவசியம் புரியப்படாமல் இருப்பதுகூட அதிகாரம் சார்ந்த அரசியலாக செயல்படுத்தப்படுகிறது.

அதிகாரத்தின் வரலாறு என்பது வாசிப்பவர்களின் எண்ணங்களின் நிறங்களை பொறுத்தே உருவாக்கம் பெறுகிறது.

நேர்கோட்டுப் பாதையற்ற பயணமாயினும், அதனுள் மலிந்து கிடக்கும் வன்மங்கள் குறித்த பொறுப்பேற்றல் மற்றும் கணக்கீடல் பற்றி அறுதியிடுவது போன்ற மீள்பார்வைக்கான போக்குகளை துவக்குவது என்ற அடிப்படையில் வரலாற்று புத்தகங்கள் வாசிக்கப்படல் வேண்டும். அப்படி மறுவாசிப்பு கைகூடும் நேரத்தில்தான் நிகழ்காலம் குறித்த கருத்துகள் நிதர்சனமாக அமையும் என்ற நம்பிக்கையில் மாபெரும் வரலாற்றாசிரியர் எஸ்.சத்தியநாதய்யரின், “மதுரை நாயக்கர்கள் வரலாறு” எனும் இந்நூலை வெளியிடுகிறோம்.

தமிழ்நாட்டு வரலாற்றுலகில் என்றென்றும் மறக்க முடியாத ஆளுமையாக எஸ்.சத்தியநாதய்யர் திகழ்கிறார் என்றாலும், அவர் வாழ்வு குறித்து எவ்வித குறிப்புகளும் சரியாக கிடைக்காதது தமிழ்நாட்டு அறிவுலகின் துரதிர்ஷ்டம் என்றால் மிகையல்ல.

தனது வரலாற்று ஆய்வுக்கு அவர் எடுத்துக் கொண்ட பிரயத்தனங்கள் குறித்து வரலாற்றாசிரியர் கிருஷ்ணசாமி அய்யங்கார் தனது அறிமுகவுரையில் சிறப்பாக குறிப்பிட்டிருக்கிறார்.

இன்றைய இளைய தலைமுறையினர், வரலாற்றை முறையாக வாசிப்பதற்கு ஏற்ற ஆவணமாக இந்நூல் திகழ்கிறது என்றால் ஆச்சரியமல்ல.

இந்நூலை மொழிபெயர்க்க வேண்டும் என்று கூறியவுடனே எவ்வித மறுப்புமில்லாமல் ஏற்றுக்கொண்டு உரிய நேரத்திற்கு முன்னரே மொழிபெயர்த்து கொடுத்துதவிய நல் உள்ளம் கொண்ட தோழர் எஸ்.அர்ஷியா என்றென்றும் வணக்கத்துக்குரியவர் ஆவார்.

மற்றும் எமது பணியில் உடன் பயணிக்கும் தோழர்கள் அறிவுமணி, மோகன், எழுத்தாளர் சா.தேவதாஸ், தொல்லியல் ஆய்வாளர் த.காந்திராஜன் ஆகியோருக்கும் எமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

*2.2.2016*                                                  **கருத்து=பட்டறை**

*மதுரை - 6*

# மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

**எஸ்.அர்ஷியா**

---

**எஸ்.சையத் உசேன் பாஷா**

*இவர் மதுரையைச் சேர்ந்தவர். விவசாயம்சார் தொழிலைச் செய்பவர். மனைவி அமீர்பேகம், மகள் எஸ்.அர்ஷியா.*

**இவரது நூல்கள்**

**சிறுகதைகள்**

*கபரஸ்தான் கதவு, மரணத்தில் மிதக்கும் சொற்கள்*

**நாவல்கள்**

*ஏழரைப் பங்காளி வகையறா, பொய்கைக்கரைப்பட்டி, அப்பாஸ்பாய் தோப்பு, கரும்பலகை*

**கட்டுரைகள்**

*சரித்திரப் பிழைகள்*

**மொழிபெயர்ப்புகள்**

*நிழலற்ற பெருவெளி, திப்பு சுல்தான், பாலஸ்தீன்.*

## உள்ளே...

# முன்னுரை

மதுரை நாயக்கர்கள் வரலாறு குறித்த ஆய்வுகள், பல்வேறு வகைகளில் கவனத்தைப் பெற்றிருக்கின்றன. அவற்றுள் ஒருசில முயற்சிகளே, வரலாற்றுடன் தொடர்பு கொண்டவையாக இருக்கின்றன. ஜே.ஹெச். நெல்சனின் சிறுகுறிப்புக் கையேடான மெஜுரா கண்ட்ரி (Madura Country), கால்டுவெல்லின் தின்னவேலி சரித்திரம் (History of Tinnevelly) ஆகிய இரண்டும், முக்கியமாகக் கல்வெட்டியல் ஆய்வுகளில் உருவாகியிருக்கும் முன்னேற்றத்தாலும், அதிலிருந்து சிறுவிரிவாக, அடுத்தக் கட்டத்தை அடைந்திருக்கும் எழுதப்பட்ட ஆதாரங்களாலும் காலாவதியாகி, வரலாறு இப்போது புதிய தரிசனங்களைப் பெற்று வருகின்றது. இந்தியத் தொல்லியல் ஆய்வுகளின் நீட்சியாக வி. ரங்காச்சாரி நடத்திய சமீபத்திய நிகழ்த்துகளில், மதுரை நாட்டுடன் தொடர்புடைய, அறுதியாக மதிப்பிடமுடியாத இயேசு சபையின் ஆவணங்கள் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படவில்லை. மதிப்புமிகு அவ்வாவணங்கள், முறைமையுடன் கூடிய முழுமைக் கொண்டவை. முக்கியமாக, விஜயநகர அரசப் பிரதிநிதிக் குடும்பங்கள் தொடர்பாக எழுதப்பட்டவை. வரலாற்றுப் பாட மாணவரான சத்தியநாத அய்யர், முதலாண்டு வரலாறு (ஹானர்ஸ்) தேர்வுக்காக, தன்னை ஈடுபடுத்தி, மெட்ராஸ் யுனிவர்சிடியில் இந்த ஆய்வை மேற்கொண்டு முடித்தார். இப்பணிக்கான மொழியறிவைப் பெறுவதற்காக, பிரஞ்சு மொழியைக் கற்றுத்தேர்ந்தார். அதனால் மதபோதகரும் திருச்சினாப்பள்ளி புனித ஜோசப் கல்லூரியின் பேராசிரியரு மான பி. கார்டே வழங்கிய ஆவணங்களைப் பொருத்தமாக மொழி பெயர்க்க முடிந்தது. அம்மொழிபெயர்ப்பை மேம்படுத்துவதில் மிகக்குறைந்த அளவே திருத்தங்கள் அல்லது மதிப்புறுத்தும் மாறுபாடுகள் இருந்தன. அவரது ஆய்வுக் கட்டுரையின் பிறதொகுதிகள் விளக்க ஆராய்ச்சியின் அடிப்படையிலானவை. அவற்றை வரலாற்றுத் தொகுதிகளாக, தனதாக ஏற்றுக்கொள்ளும் திட்டம் மெட்ராஸ்

யுனிவர்சிடிக்கு இருந்தது. அந்தக்கட்டுரைகள் தனக்கான இடத்தைக் கோரிக்கொள்பவையாக இருந்தன. எனது பரிந்துரை, அவற்றுக்குத் தேவையில்லாததாகவும் இருந்தது. பதிப்பாசிரியராக எனது பணி, திட்டமிட்ட ஒரு வரையறைக்குள்ளாகவே அமைந்து போனது. எந்தவொரு இடத்திலும் பெரிதாய் மாறுதலின்றி, சொல்லின் பொருளளவில் அம்முழுப்பணியும் இருப்பதை உணர முடிந்தது. இயல்புகடந்து சற்றே மிகைப்படுத்தப் பட்டோ அல்லது குறைமதிப்பீடாகவே இருந்த ஒருசில இடங்கள் மட்டுமே, திருத்தங்கள் செய்யப்பட்டன. திருத்தங்கள் தேவைப்பட்ட இடங்களில், ஒருசில குறிப்புகளை மட்டுமே அதில் நான் இணைத்தேன். அவற்றுள் சில சற்றே நீளமானவை. அதேவேளையில், ஆய்வில் இடம்பெற்றுள்ள இயேசு சபையின் ஆவணங்கள் குறித்த ஒரு எடுத்துரைப்பு, சற்றே மிகையானது என்று, இந்த முன்னுரைக் குறிப்பில் கவனப்படுத்த விரும்பு கின்றேன். சில இடங்களில் சற்றே மிகைதான் என்றும் அவ்வாவணங்கள் முழுமையாக நேர்மை யானவையென எண்பிக்க அல்லது ஆதரிக்கப்படத்தக்கவையல்ல என்றும், எனது கருத்துடன் சத்தியநாத அய்யர் உடன்பட்டுப் போகின்றார். அந்தவகையில் இந்தத் திருத்தப் பணி, எனக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தந்தது என்பதை, இங்கே பகிர்ந்து கொள்கின்றேன்.

சத்தியநாத அய்யர் என்னுடன் பணிபுரிந்த ஆண்டு களில், தனது வேலையில் மட்டும் மிகவும் கருத்துள்ள வராக மட்டுமல்லாமல், எனது சொந்தப் பணிகளுக்கும் பேருதவியாக இருந்தார் என்பதை, இங்கே உவகையுடன் பதிவு செய்கின்றேன். கலந்தாய்வு விவாதங் களின்போது, கவனப்படுத்தப்பட்டதை நேர்மையாக ஒத்துக் கொள்ளக் கூடிய நேரியப் பார்வை, அவரிடமிருந்தது. அவரது திறனாய்வுகள் மெய்ப்பொருளுடன் இணைத்துக் கொள்ளுமளவில் திறம்கொண்டதாகவும் இருந்தன. சத்தியநாத அய்யரின் பேராசிரியர் பி.கார்டே, இப்பணியில் உரிமையோடு காட்டிய பெருவிருப் பத்தை நிச்சயமாகக் குறிப்பிட்டே ஆகவேண்டும். மெட்ராஸில் கிடைக்கப் பெறாத இயேசு சபையின் ஆவணத்தொகுதி களை தனது மாணவருக்குக் கொடுத்து ஊக்கப்படுத்தியது, பேருதவியாக இருந்தது. பி.கார்டே அவர்களின் அருட்குணத்துக்கும், இடரார்ந்த பகுதிகளை முழுவதுமாக

வாசித்து உதவிபுரிந்த மதபோதகரும், திருச்சினாப்பள்ளி புனித ஜோசப் கல்லூரியின் பிரஞ்சுமொழிப் பேராசிரியருமான ஜே. போர்தோட் ஆகிய இருவருக்கும் மனமார்ந்த நன்றிகள். அவர்களின் ஒப்புறுதி, மொழிபெயர்ப்புக்கு பெரியதொரு அங்கீகாரமாக அமைந்தது. நூலாக்கத்தில் பெரும்உதவியை நல்கிய, கல்கத்தா ஆக்ஸ்போர்டு யுனிவர்சிடி பிரஸ்ஸின் மேலாளர் சி.டபிள்யூ. ஸ்டூவர்ட், அச்சுப்பணியை செப்பமாகச் செய்துகொடுத்த மெட்ராஸ் டயோசிஸன் பிரஸ்ஸின் கண்காணிப்பாளர் ஜார்ஜ் கென்னத் போற்றுதலுக்கு உரியவர்கள்.

சுதந்திரமாகச் செயல்பட அனுமதித்த மெட்ராஸ் யுனிவர்சிடியின் ஆட்சிமன்றக் குழு, எனது பரிந்துரையை யும் ஏற்று, மெட்ராஸ் யுனிவர்சிடியின் வரலா(ற்)றுத் தொகுப்பு வரிசையில் இந்நூலையும் சேர்க்க அனுமதித் ததற்கு, எனது நன்றியைத் தெரிவிக்கக் கடப்பாடு இருப்பதை ஒப்புக்கொள்கின்றேன்.

*மெட்ராஸ் யுனிவர்சிடி,* **எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார்**
*டிசம்பர் 3, 1923.*

# அறிமுகம்

மதுரை நாயக்கர்கள் வரலாறு பதினைந்து, பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளையும் மற்றும் பதினெட்டாம் நூற்றாண்டின் முதல் முப்பத்தாறு ஆண்டுகளையும் நடைமுறையில் உள்ளடக்கி, கர்நாடிக் பகுதி, பிரிட்டிஷ் ஆட்படுநிலைக்கு உள்ளாகியக் காலம் வரையில் உள்ள விஜயநகரப் பேரரசின் முழுநிறை நாட்களைக்கொண்ட தென்னிந்தியாவின் வரலாற்றையும் பேசுவதாகும். அதை விரித்துக்கூறுவதென்றால் மிகமுக்கியமாக, பதினான்காம் நூற்றாண்டில், வென்று நிலம்கொள்ளத் தொடங்கிய முகம்மதியப் படையின் அச்சுறுத்தல் பேரலைக்கு எதிராக முன்னெடுக்கப்பட்ட, இந்துத் தன்னுரிமையின் மிகநீண்ட தொடர் போராட்டம் எனக் கொள்ளலாம். ஹொய்சாலர் ஆட்சியின் கடைசிமன்னர் மூன்றாம் வல்லாளன் (வீரபல்லாலா) திருச்சினாப் பள்ளியில் உயிர்த்துறந்த சம்பவமும் (1343), சந்தா சாகிப்பின் நம்பிக்கைத் துரோகச் செயலால் நாயக்க வம்சத்தின் கடைசி அரசி மீனாட்சியின் தற்கொலையும் (1736), இக்காலகட்டத்தின் முக்கியச் சம்பவங்களாக அமைந்திருக்கின்றன.

இந்த ஆய்வுக்கட்டுரை, விஜயநகரப் பேரரசின் வரலாற்றையும், தொலைதூரத்திலிருந்து அது செயல்படுத்திய அரசப் பிரதிநிதித் துவத்தையும் இணைத்துப்பேசும் ஒரு முயற்சியை மேற் கொண்டுள்ளது. பேரரசின் தலைநகரை, முகம்மதியப் படை கைப்பற்றிக் காவல் அரணை நிர்மாணித்ததும், வல்லாளனின் அதிகாரிகள் எதிர்பாராதத் திருப்பமாக, விஜயநகரத்துக்கான அடிக்கல் நாட்டினர். அவர்களின் அப்பெருமுயற்சி, இரண்டரை நூற்றாண்டுகளுக்கும்மேலாக ஒரு தடுப்புச் சுவராயிருந்து, வடக்கிலிருந்து முகம்மதியர்களின் ஊடுருவலைத் தடுத்து, தென்னிந்தியாவைப் பாதுகாத்து வந்தது. அவ்வரசப் பிரதிநிதித் துவத்துக்குப் பின்னாலுள்ள பல்வேறுவகையிலானத் தொடர்புகள், தனியியல்புக் கூறுகளாகயிருந்து வரலாற்றை சுவாரசியப்படுத்து கின்றன.

கடற்கரைப் பகுதிகளில், தங்களது வர்த்தக மையங்களை ஆரம்பத்தில் ஏற்படுத்திய ஐரோப்பிய நிறுவனங்கள், தங்களை வளமாகச் செழுமைப்படுத்திக்கொண்டு, ஆட்சிக்கும் அதிகாரத்துக்

கும் 'தள்ளுமுள்ளு' நடத்திக்கொண்டிருந்த மண்ணின் மைந்த ஆட்சியாளர்களுக்கு உதவுவதுபோல உதவி, பின்னர் தங்களை முன்னெடுத்துக் கொண்டது, மதுரையில் அரசப் பிரதிநிதித்துவம் செய்துகொண்டிருந்தவர்களிடமும் செய்ய நேர்ந்தது. இந்தியப் பகுதியில் தனது செயல்களை நேர்த்தியாகச் செய்து, அதிகாரத்தை நிலைநாட்டிய முதல் ஐரோப்பிய நாடு, போர்த்துக்கீஸ். வர்த்தக ஆளுமையில் அந்தநாடு இரட்டைத் தளத்தில் இயங்கியது. கடற்கரைப் பகுதிகளில் முக்கிய நிலைகளும், உள்நாட்டில் சில பகுதிகளும் அதன்வசம் இருந்தன. மேலும், திட்டமிட்ட அரசியல் அதிகாரத்துக்கு, அந்நாட்டு மிஷனரிகளின் முயற்சிகளையும் பின்னணியாகக் கொண்டிருந்தது. குறிப்பாகத் தொடக்கக் காலத்தில் இயேசு சபையின் பணிகள் பாண்டிய நாட்டுக் கடற்கரையின் மீனவக் குடியிருப்புப் பகுதிகளில் செய்யப்பட்டிருந்தன. அரசப் பிரதிநிதி நாயக்கர்கள் ஆண்ட மதுரைப் பகுதியிலும், தொடக்கக் கால மிஷனரிகள் பல முயற்சிகளை மேற்கொண்டிருந்தன. நாயக்கர்களின் தலைநகர் மதுரையை, மிக முக்கிய மிஷனரிகளின் மையமாக உருப்படுத்திக்கொண்டன. அதன்வழியாக, மிக விரைவில் திருச்சினாப்பள்ளியிலும் தங்கள் பணிகளைப் பகிர்ந்துகொண்டன. கிடைத்திருக்கும் ஆவணங்களைத் திட்டமிட்ட முறையில் அகழ்ந்து பார்த்தோமானால், மதுரை வரலாறு இவ்வாறு சுவைநிறைந்ததாக இருக்கின்றது.

இந்த வரலாற்றைப் புரிந்துகொள்வதற்கு, விஜயநகரத்தின் முக்கியச் சிறப்பம்சங்களையும், தெற்கே அதன் அரசப்பிரதி நிதித்துவத் தொடர்பையும் அறிவது, முதலாவது தேவையாக இருக்கின்றது. பதிமூன்றாம் நூற்றாண்டின் இறுதியில், ஒரு சூறாவளியைப்போல முகம்மதியப் படைகள் தீபகற்பம் முழுவதும் சுழன்றடித்து ஊடுருவின. பல்வேறு நிலைகளைக் கைப்பற்றிய அப்படைகள், முக்கியமான நிலைகளில் காவல் அரண்களை நிறுவின. தெற்கில் அவ்வாறு நிலைநிறுத்தப்பட்டது, இந்துத் தன்னுரிமையை சவப்பெட்டியில் வைத்து ஆணி அறைந்தது போலாகிவிட்டது. தமிழ் நிலப்பகுதியில் முக்கியமான இரண்டு இடங்களில் முகம்மதியப் படைக்களங்கள் நிர்மாணிக்கப்பட்டன. அவற்றில் ஒன்று, மதுரையில் அமைந்தது. பாண்டிய வம்சத்தின் சந்ததியினர், தங்களுக்குள் சகோதர யுத்தம் நடத்தி ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு, போரில் வெற்றிபெறுவதற்கு முகம்மதியர்களின் உதவிகேட்டு விடுத்த அழைப்பின் பாவத்திற் கான சம்பளம், அது. மற்றொரு புறநிலையம் ஸ்ரீரங்கம் தீவைக் கடந்து, கொள்ளிடம் ஆற்றின்வடக்கே ஐந்துமைல் தொலைவில், ஹொய்சாலத்தின் முந்தையத் தலைநகரான கண்ணனூரில் அமையப்

பெற்றது. இந்த இருநிலைகளும், மா'அபர் மாகாணம் அமைவதற்கு வெளிப்படையானக் காரணங்களாக இருந்தன. இந்த மாகாணம், முகம்மது-பின்-துக்ளக்கின் பரந்த சாம்ராஜ்ஜியத்தின் இருபத்து மூன்று மாகாணங்களில், மிகமுக்கிய ஒன்றாக மாறியது. ஆனால் முகம்மதின் உறவுக்கார சகோதரர் பஹா-வுத்-தீன், இருபத்துமூன்று மாகாணங்களுடனிருந்தத் தொடர்புப் பின்னலில், தேவகிரிக்கும் மா'அபருக்கும் இடையில், சாகரில் கலகம் செய்து ஒருபிளவை உண்டாக்கினார். இதனை வல்லாளன் தனக்குச் சாதகமாக ஆக்கி, தேவகிரிக்கும் மா'அபருக்கும் இடையில், திருவண்ணாமலையில் தன்னை வலுவாக நிலை நிறுத்திக்கொண்டார். அதேவேளையில் வடக்கு எல்லைக்கு மூன்றாவது வழித்தடத்தை உருவாக்கி, முக்கியமான இடங்களில் காவல் அரண்நிலைகளை நிர்மாணித்தார். பஹா-வுத்-தீனின் கலகத்தால் உருவானக் கிளர்ச்சி, தொடர்ச்சி யானப் போராட்டங்களாக மாறி, முகம்மது தனது நிலையைக் காத்துக்கொள்வதற்கே படாதபாடுபட வேண்டியதாகிவிட்டது. அதனால் தெற்கில், அவரால் பெயரளவில் மட்டுமே கவனம் செலுத்த முடிந்தது. முகம்மதின் மிக முக்கிய மாகாணமாகக் கருதப்பட்ட மா'அபர் தனிமைப்படுத்தப்பட்டு, ஏறத்தாழ பத்தாண்டு காலப் போராட்டம் பல்வேறு கட்டங்களாக நடந்தது. ஹொய்சால மன்னர் நுட்பமான நடவடிக்கையொன்றை மேற்கொண்டார். திருச்சினாப்பள்ளியிலிருந்து தனது படைகளை குறுக்காக புதுக்கோட்டை மற்றும் ராம்நாட் முழுவதுக்கும் கீழே இராமேஸ்வரம்வரைக்கும் அனுப்பிவைத்தார். இந்த நடவடிக்கை அவருக்கு அரியபலனைத் தந்தது. மதுரையை ஆண்ட முகம்மதியர்களை தங்களைக் காத்துக்கொள்ளக்கூட வழியின்றி தலைதெறிக்க ஓட வைத்தது. ஆனால் நொடியில் தலைகீழாக மாறிப்போகும் போர், முகம்மதியர்களுக்கே பரிசைத் தந்தது. நம்பவைத்து கழுத்தை அறுத்தத் துரோகச் செயலால் வல்லாளன் முகம்மதியர்களின் வலையில் வீழ்ந்தார். இந்த நிகழ்வால், இந்துத் தன்னுரிமை சிலகாலம் தாழ்ந்து, முகம்மதியர்களின் இருப்பை மதுரையில் மேலும் சிலஆண்டுகள் ஊழ்வினையாய் நீடிக்கச் செய்தது. வல்லாளனுடன் நெருக்கமாகயிருந்து, அனைத்துப் போராட்டங்களிலும் அவருடன் இணைந்துசெயல்பட்ட அதிகாரிகள், எதிராளிகளின் எதிர்ப்பைக் கடந்து முன்னேறி, வெற்றியைக் கொண்டுவந்தனர். அதிகாரிகள் ஒன்றுபட்டு இணைந்து போராடக் காரணமாக இருந்த ஒரேநோக்கம், இந்துத்தன்னுரிமை மட்டுமே. குமார கம்பணன் என்றழைக்கப்பட்ட இளவரசர் ஒருவர், மதுரையில் முகம்மதிய சாம்ராஜ்ஜியம் முடிவுக்கு வரக்காரணமாக இருந்தார். இந்தப்பெரும் வெற்றியை மையமாக

வைத்து, மதுரா விஜயம் என்றொரு கவிதைக் காப்பியம் எழுதப் பட்டுள்ளது. குமார கம்பணனின் மனைவியருள் ஒருத்தியான கங்கா தேவி அதை இயற்றியுள்ளார். முகம்மதியர்களிடமிருந்து மதுரைப் பகுதியை 1358ஆம் ஆண்டுவாக்கில் கம்பணன் கைப்பற்றியத் தகவல்களை கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. ஹொய்சாலர்களின் ஆட்சியின்போதே விஜயநகரப் பேரரசுக்கான அடிக்கல், துங்கபத்ரா நதிக்கரையில் நாட்டப்பட்டுவிட்டது என்பதை அறியமுடிகின்றது. ஹொய்சால சாம்ராஜ்ஜியத்தின் துவக்கத்திலேயே கைப்பற்றப்பட்ட மதுரா மாகாணம், விஜயநகரப் பேரரசுக்கு கைமாறிவிட்டது.

பாண்டிய நாடு சோழர்களால் வெற்றிகொள்ளப்பட்டு, அந்நிலப் பகுதியும் சோழப் பேரரசுடன் இணைத்து ஆட்சிசெய்யப்பட்டது. கங்கைகொண்ட சோழன் ராஜேந்திரன், பாண்டிய மன்னர்களின் தன்னுரிமையை ஒழித்து, சோழப் பேரரசுவுடன் இணையவைத்த மாபெரும் போராளி என்று கருதப்படுகின்றார். அவரது வெற்றிக்குப் பின்பு, ஏறத்தாழ ஒண்ணரை நூற்றாண்டு காலம் பாண்டியர்கள், சோழர்களின் பண்ணைநில உரிமைமுறையில் இருந்துவந்தனர். இணைக்கப்பட்டப் பாண்டியப் பேரரசுப் பகுதிக்கு, சோழர்கள் தமது அரசப்பிரதிநிதிகளை அடிக்கடி நியமித்து, உரிமை நடைமுறையாட்சியை பலப்படுத்திக் கொண்டனர். அதனால் பாண்டிய மன்னர்கள் கீழ்படிந்தே இருந்தனர். பதிமூன்றாம் நூற்றாண்டின் பாதிக்குப் பின்னால் பாண்டியர்கள் மீதான சோழர்களின் பிடி மெல்லமெல்லத் தளர்ந்தது. அந்தச்சூழலில் பாண்டியர்கள் தங்களை வலுப்படுத்திக்கொண்டு, சுதந்திர முயற்சிகளை மேற்கொண்டனர். இதன் ஒரு பகுதியாக இலங்கைப் பேரரசர் பராக்கிரம பாஹுவுக்கு பாண்டியர்கள் ஒத்துழைப்பு தந்தனர். பாஹுவுக்கு ஆதரவாகப் பாண்டியர்கள், சோழர்களுடன் போரிட்டனர். கடும்போரின் இறுதியில் இலங்கைப் படையையும், ஆதரவாகக் களமிறங்கிய உதவிப்படைகளையும் முறியடித்த மூன்றாம் குலோத்துங்கச் சோழன், பாண்டியர்களை அரசியல்ரீதியாக அழித்தொழிக்க பல்வேறு யத்தனங்களைக் கைக்கொண்டார். இது, இயற்கையாகவே சோழர்கள்மேல் பாண்டியர்களுக்கு கடும்வெறுப் பணர்வை உருவாக்கியிருந்தது. தொடர்ந்துவந்த அரசியல் மாற்றங் கள், புதிய சேர்க்கைகள் சோழர்களின் நிலையைத் தலைகீழாகக் கவிழ்த்துப்போட்டது. பாண்டியர்கள் வெகுவிரைவிலேயே புகழ்பெற்றப் பேரரசை உருவாக்கி, ஏறத்தாழ நூறாண்டுகள் வரை ஆண்டனர். பேரரசர் ஒருவனின் இறப்புக்குப் பின், பதவியைக் கைப்பற்ற அடித்துக்கொண்ட சகோதர யுத்தத்தில் பாண்டியப் பேரரசு உடைந்துபோனது. சகோதரர்களில் ஒருவர் அழைப்பின் பேரில் முகம்மதியர்கள் பாண்டிய நாட்டுக்குள் பிரவேசித்தபோது,

சோழர்களின் அதிகாரம் அழிந்து, வழக்கொழிந்து கொண்டிருந்தது. பாண்டியர்கள் தங்களின் சுதந்திரப் பேரரசை உருவாக்கிக் கொண்டிருந்தக் காலத்தில், சோழநாட்டைச் சேர்ந்தவர்களை மதுரை, ராம்நாட் ஆகிய மாவட்டங்களில் குறுநில அரசர்களாக பதியம்போட்டு, பாண்டியர்களின் அதிகாரத்தை மட்டுப்படுத்தும் முயற்சிகள் சோழர்களால் மேற்கொள்ளப்பட்டன. அப்படியானக் குறுநிலத் தலைவர்கள் மானாமதுரை பகுதியிலும் அதன் சுற்று வட்டாரத்திலும், மாவலி வானாதிராயர் எனும் பட்டத்துடன் சிலர் நியமிக்கப்பட்டனர். பாண்டியர்களின் அதிகாரம் ஏறுமுகம் கொள்ளத் தொடங்கியதும், அந்த மாவலி வானாதிராயர்கள் தங்கள் நடவடிக்கைகளை மாற்றி, விசுவாசிகள்போல பம்மிக்கொண் டார்கள். மீண்டும் அவர்களின் நடமாட்டம் அந்தப்பகுதியில், விஜயநகரப் பேரரசின் தொடக்கக் காலத்தில்தான் வெளியில் தெரிந்தது. மதுரையை முகம்மதியர்கள் கைப்பற்றி, ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகாலம் ஆட்சிசெய்தனர். அந்தக்காலகட்டத்தில் பாண்டியர்கள் மதுரையிலோ அல்லது அதைச் சுற்றியப் பகுதிகளிலோ எங்கும் காணப்படவில்லை. விஜயநகரத்தின் முதல் அரசப்பிரதிநிதி மதுரையைக் கைக்கொண்ட பின்பே, அவர்கள் தங்களை மெல்லமெல்ல வெளிப்படுத்திக்கொண்டனர். அந்த வகையில், கி.பி. 1310ஆம் ஆண்டுவாக்கில் மாலிக் காபூர் மதுரையைக் கைப்பற்றியதாக எடுத்துக்கொள்ளலாம். 1316ஆம் ஆண்டுவாக்கில், முற்றிலும் மாறானநிலையில், மலபார் பகுதியை ஆண்ட ரவிவர்மன் குலசேகரன், முகம்மதியக் காவல் அரணைக் கைப்பற்றியபோதும், பாண்டியர்கள் மதுரையில் தங்கள் பிடியை முற்றிலுமாக இழந்திருந்தனர். மதுரையில் விஜயநகர இளவரச இரத்தம்கொண்ட முதல் அரசப்பிரதிநிதி வந்ததும், மாவலி வானாதிராயர்களின் நடமாட்டம் அதிகரித்தது. மதுரையைச் சுற்றியுள்ள இடங்களின் முக்கியப் பகுதிகளுக்கானப் பொறுப்பை அவர்கள் பெற்றுக்கொண்டனர். விஜயநகரத்தின் அடிக்கல் இவ்வாறாக, மதுரையில் அரசப் பிரதிநிதித்துவத்துடன் நிறுவன மாகத் தொடங்கியது. குமார கம்பணன் முதல் அரசப்பிரதியானான். தொடர்ந்து, அவனது உறவினன் இரண்டாம் ஹரிஹரன், முதலாம் விஜயநகரப் பேரரசரால் அவ்வுயர்பதவியில் அமர்த்தப்பட்டான்.

மதுரையின் அடுத்தக் கட்ட அரசப்பிரதிநிதித்துவம் இரண்டாம் தேவராயரின் மேம்பாட்டு நிலையின்கீழ் அமைந்தது. லக்கனா மற்றும் மாதனா என்ற இரு சகோதரர்களின் பொறுப்பில் ஒட்டு மொத்தத் தமிழ் தேசப்பரப்பும் இருந்தது. பின்னவன், தஞ்சாவூர் நாட்டின் பொறுப்பைப் பெற்றிருந்தான். முன்னவன், விஜயநகரத் தில் உயர்பதவியில் இருந்தான். அப்பதவியுடன் மதுரை மாகாண

அரசாங்கத்தின் நிர்வாகமும் அவனுக்குக் கூடுதல் பொறுப்பாக இருந்தது. கி.பி. 1440ஆம் ஆண்டுவாக்கில் தென்னாடு முழுவதும் அவன் பொறுப்புக்கு வந்து, மதுரையின் அரசப்பிரதிநிதி பட்டமும், தென்கடலின் பிரபு பட்டமும் அவனுக்கு வழங்கப்பட்டிருந்தது. இரண்டாவது பட்டம் முன்னெப்போதும் இல்லாத, புதிய ஒன்று. அந்தப்பட்டத்தின் மூலமாக அந்த சாம்ராஜ்ஜியம் கடலுடன் தொடர்பு கொண்டிருந்தது என்பது தெளிவாகின்றது. பதிமூன்றாம் நூற்றாண்டிலும், பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் பாண்டியப் பேரரசு கடல்கடந்தப் பயணத்தைக் கொண்டிருந்தது. அதன்மூலம் சாம்ராஜ்ஜியமும் வர்த்தகமும் பெருகியிருந்தது. இந்தநிலையில் தக்காணத்தின் மீது முகம்மதிய சுல்தான் நடத்தியப் படையெடுப்பில் விஜயநகரப் பேரரசு, பல பகுதிகளை இழந்திருந்தது. இறுதிவெற்றியைப் பெறுவதற்கானத் திட்டத்தில் ராணுவத்தைச் சீரமைக்கவும் வளங்களை மேம்படுத்தவும் உயர்பொறுப்பிலிருந்த தண்டநாயகன் லக்கனா, தலைமையினால் திரும்ப அழைக்கப்பட்டான். தண்டநாயகன் எனும் சொல்லை, 1442-43ஆம் ஆண்டுகளில் விஜயநகரத்தில் தங்கியிருந்த முகம்மதியப் பயணி அப்துர் ரஜாக் 'ஒளிரும் வார்த்தை'களாகக் குறிப்பிட்டிருக்கின்றார்.

கி.பி.1449ஆம் ஆண்டில் தேவராயரின் இறப்பையொட்டி, முகம்மதியர்களின் தொடர் போர் நடவடிக்கைகளாலும் கலிங்கத்தை ஆண்ட கஜபதிகளின் புதிய வருகையாலும் சாம்ராஜ்ஜியம் நிலைகுலைந்தது. ஒரு பத்தாண்டுகாலம் பெரும்கேடு தொடர்ந்துகொண்டே இருந்தது. 1335ஆம் ஆண்டைச் சேர்ந்த கலிங்க கஜபதிகளின் முதல்ஆட்சியாளர், தன்முயற்சி மேற்கொண்டு, நாட்டின் எல்லையை கடலோரம் வரை விரிவாக்கியிருந்தார். நெல்லூர் மாவட்டத்தையும் அந்த மன்னர் கைப்பற்றியிருந்தார். கலிங்க ஆட்சியாளர்களின் தூர எல்லைக் காவல் அரணாக உதயகிரி இருந்துவந்தது. அதுபோல, தென்னாற்காடு மாவட்ட எல்லைவரை கலிங்க கஜபதிகள் சூறையாடலைத் தொடர்ந்திருந்தனர். இதனை உள்ளூர்களில் காணப்படும் சில கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. வடக்கேயிருந்தப் பேரரசுகள் பரந்த எல்லைப்பரப்பைக் கட்டியாள முடியாமல், பிடிதளர்ந்து, அதனைத் தங்கள் பிரதிநிதிகளிடம் ஒப்படைத்திருந்தனர். சாளுவ நரசிம்மன் காலத்தில், அவரது தளபதியான நரசா, பாண்டிய மன்னர்களில் ஒருவரான மானாபூசாவை வென்றார். பாண்டியர்கள் தின்னவேலிக்கு விரட்டியடிக்கப் பட்டார்கள். முகம்மதியர்களின் தொடர் போர் நடவடிக்கைகள், கலிங்கத்தை ஆண்ட கஜபதிகளின் புதிய வருகை ஆகிய குழப்பங்களை, தன்முனைப்புடன் மீண்டும் தங்கள் சுதந்திரத்தைப் பெறவோ

அல்லது தங்கள் மூதாதையர் வழிமரபைத் திரும்ப அதிகரித்துக் கொள்ளவோ பாண்டியர்கள் பயன்படுத்திக் கொண்ட யூகங்க ளெல்லாம், தெளிவாகின்றன. இந்தக்குழப்பம் கிட்டத்தட்ட 1450ஆம் ஆண்டிலிருந்து அடுத்தநூற்றாண்டின் தொடக்கம் வரை யிலும் நீடித்தது. அப்போது நேர்ந்த பெரும் கிளர்ச்சியின் மூலமாக, வீர நரசிம்ஹா 1505ஆம் ஆண்டு பதவிக்கு வந்தார். எதிரிகளை தாக்குதலுக்கும் நெருக்கடிக்கும் உள்ளாக்கி, விஜயநகரப் பேரரசின் அரசப் பிரதிநிதித்துவத்தை மீட்டெடுத்தார்.

இதுபோன்ற அமைப்புமுறை, கிருஷ்ண தேவராயரால் மட்டுமே உருவாக்கியிருக்க முடியும். 1509ஆம் ஆண்டின் இறுதியில் அவர் அரியணை ஏறியபோது, போர்த்துக்கீசியர்களின் அபகரித்துக் கொள்ளும் வலிய செல்வாக்கு, நிலைபெற்றிருந்தது. வடக்கு எல்லையில் முகம்மதியர்களுக்குள் நிலவியக் கருத்துவேறுபாடு களும், குழப்பங்களும், சிரமங்களும் அவர்களின் போக்கைக் கொஞ்சம் மட்டுப்படுத்தியிருந்தது. அதேவேளையில், கஜபதிகளின் படையெடுப்பு அதன் உச்சத்தைத் தொட்டிருந்தது. ஒரியர்கள், தஞ்சாவூர் மாவட்டம் வரையிலும் வரிசைகட்டி வந்துவிட்டிருந் தனர். இந்த இக்கட்டானக் குழப்பநிலைக்கு இடையில், தூர மாகாணமான மதுரை பிராந்தியம், சரியான ஆட்சித்தலைமை இல்லாமல், இருப்பவர்களும் அடித்துக்கொள் வதை உணர்ந்த கிருஷ்ணதேவராயர், கவனத்தை அதன்மீது பதித்தார். திட்டமிட்டுச் சென்ற அவர், கிளர்ச்சியாளர்கள் எவரையும் விட்டுவைக்காமல் அடக்கியொடுக்கி, அந்த மாகாணத்தை தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்தார். அப்படியே போர்த்துக்கீசியர்களுடன் ஓர் ஒப்பந்தம் செய்து, அவர்களின் வர்த்தகத் தேவைகளுக்கேற்ப நடமாட அனுமதித்தார். முகம்மதியர்களிடம் தனது படைச் செல்வாக்கைக் காட்ட, வடக்கு எல்லையில் சிலபல நடவடிக்கை களை மேற்கொள்ளவும் செய்தார். சாம்ராஜ்ஜியத்துக்குள் ஊடுருவமுயன்ற கஜபதிகளை முறியடிக்க, பல்வேறு யத்தனங் களைக் கைக்கொண்டார். அப்படியே அவர்களுடன் ஒருதெளிவான உடன்படிக்கையையும் செய்துகொண்டார். இந்தவகையில், தனது சாம்ராஜ்ஜியத்தை மறுசீரமைப்புக்கு உள்ளாக்கினார். இந்த மறுசீரமைப்புத் திட்டங்களெல்லாம் 1520ஆம் ஆண்டுக்குப் பின்னர், ராய்ச்சூர் போருக்குப் பின்னால் நடந்ததாக, அவரது கல்வெட்டு ஒன்று தெளிவுபடக் கூறுகின்றது. கஜபதிகளுடன் போர் முடிந்தகை யுடன், அப்படியே தெற்கே ஒருபயணத்தை அவர் மேற்கொண் டிருக்கின்றார். அப்போது ராய்ச்சூரில், இரு நதிகளுக்கு இடையி லானப் பகுதியில் ஆதில்ஷாவின் படைகள், தனது ஆக்கிரமிப்பைத் தொடங்கியிருந்தன. அத்தகவல் கிடைத்ததுமே, பயணத்தை

பாதியிலேயே முறித்துக்கொண்டு திரும்பிய கிருஷ்ண தேவராயர், ராய்ச்சூரில் முகாமிட்டிருந்த பிஜப்பூர் படைகளைத் தலைதெறிக்க ஓடவிட்டார். ஆதில்ஷாவைத் துரத்தித்துரத்தி விரட்டியடித்து விட்டு, தலைநகருக்குத் திரும்பிய அவர், அதேகாலுடன் மீண்டும் தெற்கே தனது பயணத்தைத் தொடர்ந்தார். 1520-25ஆம் ஆண்டு வரையிலான இந்தக் காலகட்டம், அவர் மறு சீரமைப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டதாகத் தெரிகின்றது. அப்போது தான் அவர், வீர நரசிம்ஹாவை சோழ தேசத்துக்கான அரசப்பிரதிநிதி யாக அமர்த்தியிருக்க வேண்டும். மேலும் நாகம நாயக்கரை மதுரை மாகாணத்தைத் தனிப்பொறுப்புடன் நிர்வகிக்கவும் அனுமதித் திருக்க வேண்டும். 1525ஆம் ஆண்டில் அவர் கடும்நோய்த்தாக்கு தலுக்கு உள்ளானதாக, விஜயநகரப் பேரரசு வெளியிட்ட அச்சுத ராயரின் ஆவணமொன்று குறிப்பிடுகின்றது. கிருஷ்ணதேவராயரின் இளைய மகன் தொடர்புடைய பல ஆவணங்கள், அச்சுத ராயரின் ஆட்சியை பகர ஆட்சி என்று அதைக் குறிப்பிடுகின்றன. அநேகமாக, இந்தக் காலகட்டத்தில் தூரப்பிரதேசங்களிலிருந்த கிளர்ச்சியாளர்கள் தங்கள் வேலையை மீண்டும் காட்டியிருக்க வேண்டும். தெற்கே அரசப் பிரதிநிதியாக நாகமாநாயக்கர் இருந்த காலகட்டமும் அதுதான்.

நாகமா அனுபவமுள்ள ஓர் அதிகாரியாவார். அவரது எஜமானரின் பார்வையில், நாகமாவின் சமுதாய மதிப்புநிலை அல்லது சிறப்பு, நரசாவிலிருந்து வேறுபட்டதாகக் காணப்பட வில்லை. அதேவேளையில் மூப்புநிலையின்மை குறிப்பிட்ட அந்த உச்ச பதவியைப் பெறுவதற்குத் தடையாக இருந்தது. 'முக்கிய மானதும் பிரச்சனைக்குரியதுமாக உள்ள அரசுகளை நிர்வகிக்க, அனுபவமற்ற நபர்களை கிருஷ்ணா நியமிக்க மாட்டார்' என்று அவரே கூறுகின்றார். வீர நரசிம்ஹாவை சோழ தேசத்துக்கு அரசப் பிரதியாக நியமித்ததையொத்தது, மதுரையின் உயர்பொறுப்புக்கான அதிகாரி பதவி. நாகமாநாயக்கரின் நிர்வாகம் சமரசமில்லாமலும், அரசப் பிரதிநிதியை ஏற்கமறுத்து, பதிமூன்றாம் மற்றும் பதினான்காம் நூற்றாண்டின் துவக்கத்தில் ஆட்சிசெய்த பாண்டியர் களின் வழித்தோன்றல்களான, சிறுகுறு நில ஆட்சியாளர்களைக் கட்டுப்படுத்தி வைக்கக், கடுமையாகச் செயல்பட வேண்டிய பணியும் காத்திருந்தது. அதில் அதிருப்தியுற்றவர்களின் குற்றச் சாட்டுகள் கணிசமான எண்ணிக்கையில் தலைமைக்குச் சென்றடைந்தது. கிருஷ்ணதேவராயரிடம் நேரில் முறையீடு செய்வதற்காக, போலிப் பகட்டானக் குற்றச்சாட்டுகளுடன் அதிருப்தியாளர்கள் காத்திருந்ததுமுண்டு. வரலாற்று ஆவணங்கள் கொடுக்கும் இத் தரவுகளை ஒப்புநோக்க, நடைமுறையில்

எந்தவொரு கல்வெட்டு ஆதாரமும் இல்லாமல் போனது, துரதிர்ஷ்டம். அதனால், மதுரையின் சந்திரசேகர பாண்டியனையோ அல்லது தஞ்சாவூரின் வீரசேகர பாண்டியனையோ, அவர் தம் வாழ்வியல் முறையையோ அறியமுடியவில்லை. சமீபகாலம்வரை சோழ மற்றும் பாண்டியர்களின் அரச குடும்பங்கள் அதிகாரத்துடன் இருந்ததும், தற்போதும் அவர்களின் வழித்தோன்றல்களில் சிலர் அதிகாரமில்லாமலும் மூதாதையர்களின் சொத்துகள் இல்லாமலும் வாழ்வது, ஒத்துக்கொள்ள முடியாததாக இல்லை. சோழ தேசத்தின் அரசப் பிரதிநிதியான வீர நரசிம்ஹா, கிருஷ்ணதேவராயரின் இறுதி நாட்களில் ஏதோ சில காரணங்களுக்காக கிளர்ச்சிசெய்ததும், பின்பு பாதுகாப்புத்தேடி நாட்டைவிட்டு திருவாங்கூர் தேசத்துக்கு ஓடிப் போனதையும் புரிந்துகொள்ள முடியவில்லை. அதுபோலவே அதிகாரமிக்க இரண்டு அரசப் பிரதிநிதிகளும் ஒரேநேரத்தில் ஒன்றுபோலவே தலைமைக்குக் கட்டுப்படாமல் நடந்துகொண்டதன், தூண்டுகோல் எது என்பதையும் அறிய முடியவில்லை. மாகாண அரசாங்கங்கள் மீது கிருஷ்ணதேவராயரின் உன்னிப்பான, நேரடிக் கண்காணிப்பு, அரசப் பிரதிநிதிகளுக்கு காழ்ப்புணர்வைத் தந்திருக்க வேண்டும். சோழ தேசத்தின் அரசப் பிரதிநிதி, தன்னை பேரரசுக்கு எதிரான ஒரு கிளர்ச்சியாளராகவே மாற்றிக்கொண்டதும், ஒருகட்டத்தில் பயத்தில் ஓடிப்போய்விட்ட நிலையில், மதுரையின் அரசப்பிரதிநிதி அறைகூவல்களை விடுத்தாலும் ஒரு தூர இடைவெளியைக் கடைப்பிடித்துவந்ததுடன் பேரரசின் விதிமுறைகளுக்கு உட்பட்டே நடந்துகொண்டதும் குறிப்பிடத்தக்கது. அதேநேரத்தில், தந்தை நாகமா நாயக்கருக்கு எதிரானப் போரை, மகன் விஸ்வநாத நாயக்கர் நடத்தியக் கற்பனைப் புனைவை இங்கே ஒப்பிட்டுப் பார்க்கக்கூடாது.

மதுரையில் நாயக்க வம்சத்தின் தொடக்கம் என்று, பல்வேறு தேதிகள் கொடுக்கப்படுகின்றன. மொத்த விவாதங்களும், பிரதிநிதித்துவம் தொடங்கியதைக் கொண்டும், கிருஷ்ண தேவ ராயரின் ஆட்சிக்கால முடிவைக்கொண்டும் போதுமான ஆதாரங்களால், மதிப்பீடு செய்து நிரப்புகின்றன. முன்னமே, மதுரையில் பிரதிநிதித்துவம் தொடங்கியதென்பது, பேரரசின் தொடக்கத்தோடு ஒத்துப்போகின்றது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், உண்மையானப் புள்ளியான, மதுரை நாடு அல்லது அரசின் துணைமை அல்லது கீழ்ப்படியான நிலை எப்போது பேரரசுடன் முழுமையாக ஒருங்கிணைந்தது. நாயக்க ஆட்சியின் சுயாதீனமாக (அரை சுயாதீனமான?), மேலாளுமை எப்போது தொடங்கியது. வேறுவகையில், மதுரையில் நாயக்க வம்சம் எப்போது சுதந்திரமாக ஆளத்தொடங்கியது என்றொரு கேள்வியும் எழுகின்றது. இந்த

இரண்டு புள்ளிகளுமே வேறுவேறுவிதமான அம்சங்களையும் வேறு தேதிகளையும் உறுதியாகக் கொண்டிருக்கின்றன. பிரதிநிதித் துவத்தின் தொடக்கம் 1345ஆம் ஆண்டுக்கும் 1358ஆம் ஆண்டுக்கும் இடையிலானதாக இருக்கும் என்று, மதுரை சுல்தான்கள் வெளியிட் டுள்ள நாணயங்களைக் கொண்டு ஓரளவு முடிவுக்கு வரலாம். குமார கம்பணனின் மனைவியருள் ஒருத்தியான கங்கா தேவியின் கவிதைச் செய்யுள்களின்படி, மதுரை சுல்தான் குமார கம்பணனால் போரில் கொல்லப்படுகின்றார். கல்வெட்டுகளில் அச்சம்பவம் 1358 ஆம் ஆண்டுக்கு இணையானதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. கல்வெட்டு களில் குறிக்கப்பட்டுள்ள தேதிக்கு முன்பாகவே முகம்மதியர்களின் ஆக்கிரமிப்பு நடந்திருக்க வேண்டும். நாயக்கர்களின் ஆட்சி சுதந்திரமாக 1558-59ஆம் ஆண்டுகளில் தொடங்கியதாக காலம் குறிக்கப்படுகின்றது. நாயக்கர் ஆட்சியின் தொடக்கம், அரை சுதந்திரத்துடன் தொடக்கத்திலிருந்தே இருந்தது என்றால், அந்தத்தேதியை ஒருவிதத்தில் ஏற்றுக்கொள்ளலாம். ஆனால், ஆவணங்களில் தொக்கி நிற்கின்ற அர்த்தங்களைப் பார்த்தால், அவை நாயக்க வம்சத்தின் தொடக்கத்துடன் அவற்றை இணைக்க முயற்சிப்பதாகத் தெரிகின்றது. அவ்வாறிருக்க, தந்தையை வெற்றி கொண்ட மகன் விஸ்வநாத நாயக்கரை, மதுரையில் நாயக்க வம்சத்தின் தொடக்கமாக நியமனம் செய்வது திகைப்பூட்டுவ தாகவே இருக்கின்றது. விஸ்வநாதனின் நாயக்க வம்சத் தொடக்கம் என்பது, விஜயநகரப் பேரரசர் கிருஷ்ண தேவ ராயரின் கடைசி ஆண்டுகளுக்குக் கொஞ்சம் முன்னதாக இருக்கலாம். அதாவது, 1529-30ஆம் ஆண்டுவாக்கில் இருக்கலாம். (Sources of Vijayanagar history, Madras University Historical Series, I). நாகமாவின் கீழ்படியாமை, சோழ நாட்டில், வீர நரசிம்ஹாவின் கிளர்ச்சி இவ் விரண்டும் ஒருவகையில் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக இருக்கின்றன. நாகமாவை ஒழுக்கத்திற்குள் கொண்டுவருவதில் வெற்றியடையும்போது, வீர நரசிம்ஹா தண்டனைக்குப் பயந்து, தப்பி திருவாங்கூர் நாட்டுக்கு ஓடிவிடுகின்றார். தனது சொந்தப் படையைக்கொண்டு, முரண்டுபிடிக்கும் தனது பிரதிநிதி மீதே நடவடிக்கையெடுக்கப் புறப்பட்டது, சற்றேறக்குறைய அச்சுத ராயரின் முதல்நடவடிக்கையாக இருக்கலாம். ஆயினும் அச்சுத ராயர், திருச்சினாப்பள்ளிக்கு அருகிலிருக்கும் தீவான ஸ்ரீரங்கம் வரையில்தான், தனது படையை வழிநடத்திக் கொண்டு போனார். பின்னர், படையெடுப்பு திருவடி நாடு வரையில், அவரது மைத்துனர் சாலாக் ராஜு திம்ம ராஜு அல்லது சாலக்கம் திருமலை என்பவரின் தலைமையில்தான் நடந்தது. அவர்தான் தன்னியல் போடு போர்ச்சேவையில் ஈடுபட்டார். அந்தப்போர் வெற்றியைத்

தந்தது. திருவடி அரசு திறைசெலுத்தி அடங்கியிருப்பதாகப் பணிந்தது. அதற்குப் பகர நன்றியாக, தனது மகள்களில் ஒருத்தியை பாண்டிய அரசர் அச்சுதராயருக்கு மணம்முடித்து வைத்தார். அந்தவகையில் பாண்டிய அரசர் மதுரையின் பிரதிநிதியாக இல்லை என்பது வெளிப்படையாகத் தெரிகின்றது. அப்போது விஸ்வநாத நாயக்கர் வெளிப்படையாக பாண்டிய நாட்டின் பிரதிநிதியாக அறிவிக்கப்பட்டிருந்தார். ஆயினும், நிர்வாக முக்கியத்துவம், அலுவலகக் கண்காணிப்பு நிலை எல்லாவற்றிலுமே பேரரசர் தலையீடு அல்லது அவரது சிறப்பு அதிகாரம் பெற்றவரால் மேலாண் ஆதிக்கம் இருந்துகொண்டே இருந்தது. விஸ்வநாத நாயக்கரின் நிலைமை, மதுரையின் சாதாரண ஆளுநரைப்போலவே காணப் பட்டது. பிரதிநிதித்துவத்துக்கானத் துல்லியக் காரணிகள், அந்தநேரத்தில் ஒன்றுக்கொன்று ஒவ்வாத, உடன்பாடற்றதாகவே இருந்தன. அங்கே, பாண்டியர்கள் ஒருபுறம் செல்வாக்கை இழந்து கொந்தளித்துக் கொண்டிருந்தனர். மறுபுறம், மாவலித் தலைவர்கள் எதைப் பற்றுவது என்று அலையாடினர். மற்ற சிறு, குறு தலைவர்கள், தங்களுக்கான இடத்துக்குப் போட்டியிட்டுக் கொண்டிருந்தனர். விஸ்வநாத நாயக்கரின் நேரம் முழுவதுமே ஒவ்வொன்றையும் இறுதிபடுத்துவதிலும், புதிதாக உருவாக்குதலிலுமே செலவழிந்தது. அவரிடமிருந்த வளமும் அரசின் தேவைகளை மீட்டெடுக்கும் அளவிலானதாக இருக்க வில்லை. ஆயினும், இந்தச் சூழல்கள் எல்லாம் மதுரையின் பிரதிநிதியைக் கட்டுப் படுத்துவதாகவோ, பேரரசரின் நடவடிக்கைக்கு உள்ளாக்கிய தாகவோ இருக்கவில்லை. ஒரு பிரதிநிதியின் நிலை என்னவென்பது, பின்பானக் காலத்திற்கு இது, எடுத்துக்காட்டாக அமைந்தது. தெக்கத்தி நாட்டில் ஏற்பட்டக் குழப்பங்களை சீர்செய்து விட்டு அச்சுதராயர் தலைநகருக்குத் திரும்பும்போது, 1534 ஆம் ஆண்டுவாக்கில் கிருஷ்ணா நதிக்கரையில் தங்கினார். அவர் முகாமிட்டக் கரையில் தன் தாயாரின் பண்பைப் போற்றி, அவரளித்தக் கொடை குறித்த ஆதாரம், அங்கிருக்கின்றது. அந்த வகையில், அச்சுதராயரின் வரலாற்றுப் போக்கிலும் தெளிவற்ற நிலை இருக்கவே செய்கின்றது. ஒருவேளை பெரும்பாலானவை வெளித்தெரியவில்லை. ஆயினும் அவர் சில அசாதாரணமான சூழ்நிலைகளை சந்தித்தே வந்திருக்கின்றார் என்பது மட்டும் வெளிப்படையானது. அச்சுதராயர் தனது அதிகாரத்தில் குறைகள் கொண்டவராகவே இருந்திருக்கின்றார். அது, அவரது சொந்தக் குறைகள். மூன்றுசகோதரர்களால் உருவாக்கப்பட்ட அதிகாரத்தை, தனது இரண்டு மைத்துனர்களிடம் கொடுத்தது, தனது அதிகாரத்தைத் தானே குறைத்துக் கொண்டது போலாகிவிட்டது.

ஆட்சியில் செல்வாக்கையும் குறைத்திருந்தது. மருமகன்களில் ஒருவரான கிருஷ்ணதேவ ராயர் அல்லது அவரது சகோதரர் ரங்கா ஆகியோரின் உரிமைக்கோரல் விருப்புவெறுப்பற்ற நிலையா அல்லது திறமுடைய ஆதரவா என்று கணிக்கமுடிய வில்லை. அதில், கிருஷ்ணதேவராயரின் அரசிகள் பங்கும் இருந்தது. அது, மெல்ல மெல்லக் கிளர்ச்சியாக உருப்பெற்று, பிஜப்பூர் படையெடுப்பின்போது, பெருங்குழப்பநிலையை உருவாக்கி யிருந்தது. அது, முடிவுக்கு வந்தபோது, அச்சுதராயருக்குப்பின் பொறுப்பேற்ற அவரது மகன் வேங்கடா அளித்த சிறுகாலத்துக்கான ஆட்சி, மரணத்துடன் முடிந்துபோனது. பின்னர் ஆட்சிக்கு வந்த சகோதரன் ரங்காவின் மகன் சதாசிவராயர், மூன்று சகோதரர்களின் ஆட்சியை மறுஉருவாக்கம் செய்தார். அந்தவகையில் தெற்குப் பிரதிநிதித்துவத்தைப் பொறுத்தவரையில், குழப்பம் மிகுந்த சூழ்நிலைகளில் பேரரசின் இடையீடு என்பது, புதிய ஆட்சித் தொடங்கிய முதலிரண்டு மூன்றுஆண்டுகள் வரை இருக்கவே செய்தது.

திருவாங்கூர் போருக்குப் பின்னால், புதிய வரையறைகள் அறிமுகம் செய்யப்பட்டன. அச்சுதராயர், மதுரை மற்றும் தஞ்சாவூர் ஆகிய இரண்டு அரசுகளுக்கு இடையிலான எல்லைகளை மறுநிர்மாணம் செய்தார். தனது கொழுந்தியாளின் கணவன் அல்லது சகபாடியான சின்ன செவப்பாவை -செவப்ப நாயக்கரை- தஞ்சாவூருக்குப் பிரதிநிதியாக நியமித்தார். வீர நரசிம்ஹாவை முழுப்பொறுப்பில் ஈடுபடுத்தாததையே இது, காட்டுகின்றது. அதேவேளையில் மதுரையின் பிரதிநிதித்துவத்திலிருந்து சிலபகுதி களை தஞ்சாவூருடன் இணைத்துவிட்டார். மறுநிர்மாணம் செய்யப்பட்ட மதுரைப் பிரதிநிதித்துவத்தில், இன்றைய மதுரை மற்றும் ராமநாதபுரம் மாவட்டங்களின் மேலாண்மையுடன், மதுரையின் தென்பகுதி மற்றும் பாண்டியர்களின் வாரிசுகளான சட்டபூர்வ, சட்டபூர்வமற்றவர்களின் ஆளுகையிலுள்ள பகுதிக ளடங்கிய தின்னவேலி, ஆகியவற்றை தனது பிரதிநிதித்துவத்தில் மேலாட்சி உரிமை பெற்றிருந்தது. சிறு குறுநிலப் பகுதிகளை ஆண்டுகொண்டிருந்த பாண்டிய வாரிசுத் தலைவர்கள், திருவாங்கூர் நாட்டுடன் உறவு வைத்திருந்தார்கள். கடலோரப் பகுதிகள், போர்த்துக்கீசியர்களின் தொழில்களுக்காகத் திறந்துவிடப்பட்டது போலவும், தெற்கிலுள்ள முக்கியத் துறைமுகங்கள் போர்த்துக்கீசிய தொழிற்சாலைகளுடனும் இருந்தன. மற்ற எல்லாமும்கூட போர்த்துக்கீசிய வர்த்தகம் சார்ந்ததாகவே இருந்தன. போர்த்துக் கீசியர்களைப் பொறுத்தவரை, அவர்களுடைய ஒவ்வொரு செயல்பாட்டிலும் சமயப் பணிப் பரப்பாளர்களின் பங்களிப்பு

இருந்துவந்தது. தெற்குப் பகுதிக்கு பிரான்ஸிஸ் சேவியரின் வருகை, புதிய அதிகாரமுள்ள செல்வாக்கை உருவாக்கியது. அவர்களின் அரசியல் நோக்குப் பார்வை, அந்தகாலத்து வரலாற்றாய்வாளர் களால் போதிய கவனம் செலுத்தப்படவில்லை. பரவாஸ்கள், கடலோரப் பகுதிகள் முழுவதும் நிறைந்திருந்தனர். அவர்கள் வெகு விரைவிலேயே கிறிஸ்தவர்களாக மதம்மாற்றப்பட்டனர். இந்த மதமாற்றம் குடிமக்களின் பற்றுறுதி, இந்திய ஆட்சியாளர்களிட மிருந்து போர்த்துக்கீசிய அரசருக்கு மாற்றிக்கொள்வதை அடிப்படை யாகக் கொண்டது என, பேசத்தொடங்கினர். ஒட்டுமொத்த மதமாற்றமும் கடலோரப் பகுதியைச் சேர்ந்த தொழில் தெரிந்த மக்களின் மதமாற்றமாகும். அவர்கள் எல்லோருமே முத்துக் குளித்தல் தொழிலில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருந்தவர்கள். அவ்வுண்மைக் காரணமாகவே, அவர்களைப் போர்த்துக்கீசிய அரசரின் பெயரில் மதம்மாற்றினர். இதன்படி விஜயநகரப் பேரரசுக்குக் கடப்பாடு கொண்டிருந்தத் தென்பகுதி கடலோர மக்கள், அப்படியே போர்த்துக்கீசிய அரசரின் குடிகளாக மாற்றப் பட்டதில், சமயப் பணிப்பரப்பாளர்களின் பங்களிப்பு இருந்தது. இப்படியானச் சம்பவங்கள், தனது ஆட்சியின் எல்லைக்குள் நடந்து கொண்டிருப்பதை எந்த சூழ்நிலையிலும் கண்டுகொள்ளாமலேயே ஒரு பேரரசின்நிலை இருந்துவந்துள்ளது. இந்தச் செயல்பாடுகள் நடந்துகொண்டிருந்தபோது, திருவாங்கூர் ஆட்சியாளரும் தனது கைவரிசையை வெற்றிகரமாக தீபகற்பம் முழுமைக்கும், குறிப்பாக தூத்துக்குடியில் செய்தார். இந்த இரண்டு அபாயங்களும் தங்களை ஒருங்கிணைத்துக்கொண்ட சம்பவங்களால், பேரரசரின் தலையீடும் பேரரசின் சிறப்பு அலுவலரின் நியமிப்பும் ஏற்பட்டது. இதனால் தான், திருவடி நாட்டின் மீது ராம ராஜ வித்தலாவால் படையெடுக்க நேர்ந்தது. சதாசிவராயரின் பெயரில் ஆட்சிசெய்யும் மூன்று சகோதரர்களில் ஒருவரான இவர்தான் உண்மையிலேயே ஆட்சி நடத்தினார். அவரது நடவடிக்கையால், திருவடி ஒரு எல்லைக்குள் தன்னை நிலைப்படுத்திக்கொள்ளக் காரணமாக அமைந்தது. கடலோரப் பகுதியில் பரவாஸ்களின் அரசியல் கடப்பாட்டைக் குறைத்தது. படகாஸ்களின் அத்துமீறிய நடவடிக்கைகளை சேவியர் தனது குற்றச்சாட்டுகளாக வைத்தார். படகாஸ்களின் கடுமைவாய்ந்த செயல்களால் அவர் புலம்பவும் செய்தார். ராமராஜ வித்தலா, அவரது இளைய சகோதரர் திம்மா, தங்களின் செயலுரிமைத் தனிப் பொறுப்பைக் கவனித்துக் கொண்டு, பாண்டிய நாட்டில் பத்தாண்டு களுக்கும் மேலாக இருந்தனர். இந்தக்காலகட்டத்தில் மதுரையின் பிரதிநிதி விஸ்வநாதா, அவரது மகன் கிருஷ்ணப்பா ஆகியோர், சிறப்பு அலுவலர்களின் கீழ் அடங்கியிருக்க வேண்டியிருந்தது. பிரதிநிதி, தன்னை மாறாபற்றுடையவராக வெளிப்படுத்தினார்.

அவர் மகன் கிருஷ்ணப்பா போர்வகைமைகளில் தன்னை தகுதியான வராக நிரூபணம் செய்துகொண்டார். வித்தலாவின் செயலுரிமைத் தனிப்பொறுப்பு, சிலோன் மீதானப் படையெடுப்புக்காக நீட்டிக்கப் பட்டது. அந்தப்படையெடுப்பில், இளம் இளவரசர் கிருஷ்ணப் பாவையும் பங்கெடுக்கச் செய்தனர். கடைசியில் வித்தலாவும் அவரது சகோதரரும் போரை முடிவுக்குக் கொண்டுவந்தனர். பிறகு, நிர்வாகத்தில் புதிய உத்தரவுகளை அறிமுகம்செய்து, பேரரசின் நிர்வாகத்துக்குக் கட்டுப்பட்டு, எல்லைக்கு வெளியேயான அதிகாரத்தை வரையறுத்தனர். பின்பு, எல்லைப்பரப்பின் ஆட்சியை யும், அரசியல் செல்வாக்கு ஆகிய அனைத்தையும் பிரதிநிதி விஸ்வநாத நாயக்கரிடம் விட்டுவிட்டுச் சென்றனர். தெற்கே, ராமராஜ வித்தலாவின் செயலுரிமைத் தனிப்பொறுப்பை முடித்துக்கொண்டு, அதிகாரத்தின் உயர்பதவியை விஸ்வநாத நாயக்கரிடம் கொடுத்தது, பிரதிநிதித்துவ வரலாற்றில் புதிய தொடக்கத்தை உருவாக்கியது. மதுரை பிரதிநிதித்துவத்தின் தொடக்கம் குறித்தக் கேள்விகளையும் வரலாற்றுப் பதிவாளர் களிடம் எழுப்பியது. இவைகளுக்கு காரணங்கள் இல்லாமல் இல்லை. அதிகாரமும் அதன் கௌரவமும் மறுகட்டுமானம் செய்யப்பட்ட பின்பும், எல்லாமே பழையபடிக்குப் போனது. இரண்டாம் தேவராயா நியமித்த முந்தைய செயலுரிமைத் தனிப்பொறுப்பு அலுவலரான தன்னாயக் லக்கனாவரால் கைப்பற்றப்பட்டது.

பிரதிநிதித்துவத்தின் அதிகாரப் பரவல், பலப்பல மாற்றங்களைக் கண்டு, தனது வடிவத்தை அகலப்படுத்தி, உரிமைகளைக் கோரிப் பெற்றது. நாயக்க வம்சம் அல்லது பிரதிநிதித்துவத்திற்கு அடிகோலியவராக விஸ்வநாத நாயக்கர் குறிப்பிடப்படுகின்றார். அந்நிகழ்வு, *1558-59*களில் நடந்ததாகக் கணக்கிடப்படுகின்றது. செயலுரிமைத் தனிப்பொறுப்பு அலுவலர்களின் வருகைக்கு முன்னமே, இந்த மாகாணம் சில விரிவுகளுடன் விஸ்வநாத நாயக்கரால் நல்லபடியாகவே நிர்வகிக்கப்பட்டது. விஸ்வநாத நாயக்கர் வெளிப்படையாகவே பிரதிநிதித்துவத்துக்கு வந்த வெளிஆபத்துகளை ஒத்துக்கொண்டார். தனக்கு அதிகாரமளித்தத் தலைமைக்கும், தனக்குமிடையிலான உறவை மிகச்சிறப்பாக ஒழுங்குபடுத்திக்கொண்டார். அதுபோலவே, தனது எல்லைக்குள் ளிருக்கும் முக்கியமானப் பாளையக்காரர்களிடம் முறையாகவும் நெறியுடனும் நடந்துகொண்டார். இந்தப்பணியை செய்துமுடிக்க பத்தாண்டுகள் ஆனது என்பதில் ஆச்சரியம் ஏதுமில்லை. சீர்திருத்த வாதியாக நடந்துகொண்ட பிரதிநிதி மகன் விஸ்வநாத நாயக்கர், தந்தை நாகமா கொண்டிருந்த பிரதிநிதித்துவத்திலிருந்து முற்றிலும்

மாறுபட்டவராக இருந்தார். அதனாலேயே அவரால் எதையும் வெற்றிகொள்ள முடிந்தது. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தலைக்கோட்டைப் போர்வரையில், பிரதிநிதித்துவ அரசாங்கங்கள் ஓர் ஒழுங்கற்றப் பயணத்தையே நடத்திக்கொண்டிருந்தன. அப்போர், பேரரசின் கௌரவத்தை மிகமோசமாகவே சீரழித்து விட்டது. தன்னிடமிருந்து அதிகாரம்பெற்ற பிரதிநிதியாட்சியாளர் களிடம் பலவீனத்துடன் ஒதுங்கியிருக்கவேண்டிய நிலையும் ஏற்பட்டது. திருமலையின் ஆட்சிக்காலத்தில் பேரரசின் நிலை கேடுறாத நிலையில் இருந்தது. இந்நிலையிலும்கூட ராஜகுடும்பத் தில், குறிப்பாக சதாசிவத்தின் குடும்பத்தில், சதாசிவத்தின் மரணம் இயற்கையானதா இல்லை, மற்றபடியானதா என்ற கேள்வி, பல ஆண்டுகள் வரை குழப்பத்தைத் தந்துகொண்டிருந்தது. மரண சம்பவத்தையடுத்து திருமலை நாயக்கர் செய்துகொடுத்த ஏற்பாடுகள், பேரரசின் நிர்வாகத்தில் குறிப்பிடத் தக்க அம்சங்களை ஏற்படுத்தியது. அதேவேளையில் பேரரசின் ஒருங்கிணைப்புக்கு அழிவார்ந்த சம்பவங்களை சூல்கொள்ளச்செய்தது. சதாசிவ ராயருக்கு மூன்றுமகன்கள். மூவரும் உயிருடன் இருந்தனர். மூத்தவர், ஸ்ரீரங்கா. ஒட்டுமொத்த சாம்ராஜ்ஜியமும் அவரிடம் போய்ச்சேர்ந்தது. அவரது ஆட்சியின் கீழ் சகோதரர்கள் இருவரும், சில பல அதிகாரங்களுடன் பிரதிநிதிகளாக இருந்தனர். மேல்புறத்தி லுள்ள மலைத்தொடர்களை உள்ளடக்கியப் பகுதி, ஸ்ரீரங்கப் பட்டிணத்தைத் தலைமையிடமாகக்கொண்டு, அந்தப்பொறுப்பு மூத்தவன் ராமாவிடம் ஒப்படைக்கப்பட்டது. மலைத்தொடர் களுக்குக் கீழேயான, பெனுகொண்டாவைத் தலைமையிடமாகக் கொண்ட இடத்தைத் தவிர, மற்ற பகுதிகளான தொண்டா, சோழ மற்றும் பாண்டிய மண்டலங்கள், அத்துடன் திருவாங்கூர் நாடும் இளைய சகோதரர் வேங்கடாவுக்குக் கொடுக்கப்பட்டது. இப் பரந்தப் பரப்புக்கு பிரதிநிதித்துவத்தின் தலைமையிடமாக, சந்திரகிரி அமைந்திருந்தது. இந்த ஏற்பாடுகளால் சில, உடனடி பாதுகாப்புச் சாத்தியச் சூழல்கள் இருக்கவே செய்தன. சாம்ராஜ்ஜியத்தின் ஒட்டுமொத்த கவனமும் முழுஅளவில் வடக்கேயிருந்து ஆபத்தைக் கொண்டுவரும் முகம்மதியப் படையெடுப்பு, கோல்கொண்டாவிலிருந்தோ அல்லது பிஜப்பூரிலிருந்தோ அல்லது இரண்டும் ஒருங்கிணைந்தோ வரலாம் என்று கணிக்கப்பட்டது. பொறுப்புகள் பகிர்ந்தளிக்கப்பட்ட இந்த ஏற்பட்டால், பெரிய பாதிப்பு பேரரசுக்கு இருக்கவாய்ப்பில்லை. ஆனால், உயிர்நிலை யான குறையென்பது, நேர்த்தியல்லாத-ஒழுங்குப்படுத்தப்படாத- ஆற்றலாகத்தான் இரண்டு பிரதிநிதிகளிடமும் இருந்தது. அவர்களுக் கிடையில் அரசியல் ஒருங்கிணைப்பு மிகத்தேவையாக இருந்தது.

ஸ்ரீரங்காவின் ஆட்சிகாலத்தில் அது புரிபடக்கூடியதாக இருந்தது. 1579-80 ஆம் ஆண்டுகளின்போது இதுபோலானதொரு அவப்பெயர் பேரரசுக்கு நேர்ந்தது. பெனுகொண்டாவை, முகம்மதியப் படைகளில் ஒன்றான கோல்கொண்டா கைப்பற்றியபோது, ஸ்ரீரங்கா எதிர்பாராதவிதமாகக் கைதியாக நேர்ந்தது. பிடிபட்டு, சிலகாலம் வரை விடுவிக்கப்படவில்லை. ஓர் உடன்பாட்டு முடிவின்படிதான் ஸ்ரீரங்கா விடுதலையாக முடிந்தது. அதன்பின்பு, ஏழெட்டு ஆண்டுகள் அவரது ஆட்சிகாலத்தில் எந்தவொரு காயமும் இல்லாமல், நாடு தப்பிப்பிழைத்தது. அவரது மரணத்துக்குப் பின், 1586ஆம் ஆண்டில் இளைய சகோதரர் வேங்கடா, அரியணை ஏறினார். இரண்டாவது சகோதரரான ராமா, மூத்தவருக்கு முன்னமே காலமாகியிருந்தார். முன்னெச்சரிக்கைத் தருகின்ற சில விஷயங்கள், வரவிருக்கும் பிளவுகளைக் காட்டித்தந்துவிடும். பெனுகொண்டா முற்றுகையின்போதும், ஸ்ரீரங்கா சிறையில் கைதியாக இருந்தபோதும், மதுரை நாயக்கர் வீரப்பா, தன்னை சுதந்திரமானவராக ஆக்கிக்கொள்ள முயன்றதைக் கூறலாம். மட்டுமல்லாமல், தஞ்சை நாயக்கரின் உதவியுடன் வேங்கடா, தனது அதிகாரத்தை மதுரை மீது உறுதிப்படுத்த முடிவுசெய்ததும், பிளவுக்கான முதல்முயற்சி அலையாகக் கருதலாம். அநேகமாக, இதனை ஸ்ரீவல்லபா மற்றும் வரதுங்க பாண்டியனின் புதுக்கோட்டை ஏடுகள், வல்லம் பிரகாரப் போர் என்று குறிப்பிடுகின்றன. 1586 ஆம்ஆண்டில் வேங்கடராயரின் பதவியேற்புக்குப் பின்பும், மதுரை பிரதிநிதித்துவ விவகாரத்தில் அதேகுழப்பங்கள் இருக்கச் செய்தன. வேங்கடராயர் தனது சகோதரரின் மகன் திருமலாவை செயலுரிமைத் தனிப்பொறுப்பை கவனித்துக் கொள்ளும் அலுவலராக நியமித்து, பிரதிநிதித்துவத்தின் கடப்பாட்டை மறுப்பவர்களை வழிக்குக் கொண்டுவர அனுப்பினார். ராமாராயரின் மூத்தமகனான திருமலா, நியமிக்கப்பட்ட அலுவல்களை மேற்கொள்ளாமல், கிளர்ச்சி செய்யும் பிரதிநிதிகளிடம் உப்புச்சப்பற்றக் காரணங்களுக்கெல்லாம் விளக்கங்கள் கேட்டு, தனது பணியைத் துல்லியமாகச் செய்து கொண்டிருந்தார். அதுபோல, பணிகள்முடிந்து நேரே பேரரசின் தலைமையகத்துக்குத் திரும்புவதற்குப் பதிலாக, இளைஞனாக இருந்த அவர், தனது தந்தையின் பிரதிநிதித்துவம் செயல்பட்டுக் கொண்டிருக்கும் ஸ்ரீரங்கப்பட்டிணத்துக்கு நேரடியாகப் போய் விட்டார். இந்தச்செய்கை பேரரசுக்குள் குழப்பத்தை விதைத்த முதல்சம்பவமாக அமைந்துவிட்டது. வேங்கடா, சகோதரரின் மகனைத் தனியாக விட்டுவிட்டார். அது, ஸ்ரீரங்கப்பட்டிணத்தில் குழப்பத்தை ஏற்படுத்தியது. இந்தத்தொடர் நிகழ்ச்சிகள், அந்த நூற்றாண்டின் இறுதியிலும் அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்திலும்

தொடர்ந்தபடியே இருந்தன. பேரரசர் வேங்கடாவுக்கும் நியமிக்கப் பட்ட செயலுரிமைத் தனிப்பொறுப்பு அலுவலரான திருமலாவுக்கு மிடையில் உருவாகியிருக்கவேண்டிய நல்லெண்ணம் உருப் பெறாமல், தணிக்கமுடியாத பேதங்களாக வலுவடைந்தன. ஒருகட்டத்தில் தாளமுடியாத நிலையில், பின்னாளில் மைசூர் சாம்ராஜ்ஜியத்தைக் கட்டமைத்த மகாராஜா ராஜா உடையார், - தற்போது தனக்குத் திறைசெலுத்திக் கொண்டிருப்பவர்- ஸ்ரீரங்கப் பட்டிணத்தில் தன்னெழுச்சியுடன் படையெடுப்பு நடத்தி, அதைக் கைப்பற்றியதைக் கண்டு திருப்தியடைந்தார். பேரரசருக்கு பல்வேறு சொந்தப் பிரச்சனைகள் இருந்தன. கோல்கொண்டா நடத்தவிருக்கும் நிச்சயமானப் படையெடுப்பையும் அதன் சூறையாடலையும் சமாளிக்கும் திராணியில்லாமல்தான் அவர் இருந்தார். படை யெடுப்பின்போது ஸ்ரீரங்கப்பட்டிணம் வீழ்ந்தால், அதைக் காரணமாக வைத்து, கோல்கொண்டா தலைநகரை முற்றுகையிடும் அபாயமும் இருந்தது. இளைய சகோதரருக்கு அளிக்கப்பட்ட ஸ்ரீரங்கப்பட்டிணத்தின் பிரதிநிதித்துவம், அடங்கமறுக்கும் சகோதரரின் மகனால், சந்தேகத்துக்கு இடமளிக்கும் வகையில் ஆகிவிட்டது. அவரது எதிர்கால விசுவாசம், கேள்விக்குரியதாகவே இருந்தது. இவ்வாறாக, ஸ்ரீரங்கப்பட்டிணத்தின் பிளவு அல்லது பிரிவு, பேரரசை சிதறச்செய்வதற்கான முதல்நடவடிக்கையாக அமைந்துவிட்டது.

1614ஆம் ஆண்டில் வேங்கடா காலமாகும்போது, அவருக்குக் குழந்தைகள் ஏதுமில்லை. எதிர்பாராதவிதமாக, பேரரசின் உரிமைக் கொண்டாடி, வேங்கடாவின் அரசிகளில் ஒருத்தியின் மகனைக் கொண்டுவந்தார்கள். அந்த அரசி, கொப்பூரித் தலைவர்களின் குடும்பத்திலிருந்து வந்தவர். வேங்கடாவுக்கும் அவரது ஆலோசகர் களுக்கும் அந்தத் தாய்மைப்பேற்றில் சந்தேகம் இருந் தது. அதனால், முன்னமே ‘சிக்கராயா’ என்று அறியப்பட்ட அவரது சகோதரரின் மகன் ஸ்ரீரங்காவை, வேங்கடா அடுத்த வாரிசு என்று அறிவித் திருந்தார். அதன்படி, அரியணையை அலங்கரிக்கும் அடுத்த ஆட்சி யாளராக சிக்கராயா-ஸ்ரீரங்கா அறிவிக்கப்பட்டார். கொப்பூரிகளின் தலைவர் ஜக்கராயர், அந்த அரசியின் சகோதரரும்கூட. பேரரசரின் உத்தேச மகனுக்காகக் களமிறங்கினார். அரச குடும்பத்தை ஒட்டுமொத்தமாகக் கருவறுக்கும் சந்தர்ப்பத்துக்காகக் காத்திருந்தார். வாய்ப்புக்கிட்டியதும் ஸ்ரீரங்கா, அவரது குழந்தைகளான மூன்று மகன்கள், இரண்டு மகள்கள் அத்தனைப் பேரையும் கொன் றொழித்துவிட்டு, வேங்கடாவின் உத்தேச மகனுக்கு பட்டம் சூட்டினார். இதனிடையே அரச குடும்பத்தின் விசுவாசியான படைத்தலைவர் யச்சம நாயக்கர், ஸ்ரீரங்காவின் குழந்தைகளில்

ஒருமகனைக் காப்பாற்றி, சலவைத் தொழிலாளி மூலம் வேறெங்கோ கடத்திச்சென்று வளர்த்ததாக, ஒருதகவலும் வழக்கத்தில் உள்ளது. பெருங்களப்பலியிலிருந்து இளவரசன் ராமாவைக் கொண்டுவந்து அரியணையில் அமர்த்தும் கடப்பாடு, அரச விசுவாசப் படைத் தலைவருக்கு இருந்தது. யச்சமா, ஒரு குறுநிலத் தலைவர். கிளர்ச்சியாளர் ஜக்கராயருக்கும் அவரது கூட்டாளிகளுக்கும் சிம்மசொப்பனமாக நிற்கவேண்டிய அவசியம் உருவாகியிருந்தது. அதனால் அரச குடும்பத்துக்கு விசுவாசமானவர்களை ஒன்று திரட்டினார். அவர்களிடம் ஆதரவைக் கேட்டார். அவர் எதிர்பார்த்ததுபோல, நடந்துவிடவில்லை. தஞ்சாவூர் அரசரைத் தவிர, வேறுயாரும் ஆதரிக்க முன்வரவில்லை. மதுரை நாயக்கர், சிக்கல்களிலிருந்து தான் விட்டுவிடுதலையாகிக் கொள்வதில் மட்டுமே ஆர்வம் காட்டினார். விசுவாசமற்றவர்களுக்குத் தலைமை தாங்கி, அகதி இளவரசனுக்கும் அவனுக்குப் பாதுகாப்பளிக்கும் யச்சம நாயக்கருக்கும், தஞ்சாவூர் அரசருக்கும் எதிராக நின்றார். மதுரை நாயக்கர், செஞ்சி நாயக்கர், தின்னவேலி பாண்டியர்கள், போர்த்துக்கீசியர்கள் மற்றும் அநேகமாக தூரத்திலிருந்த திருவாங்கூர் அரசும்கூட, துரோகியின் பக்கம் அல்லது கிளர்ச்சியாளர் ஜக்கராயர் பக்கம் அணிதிரண்டு நின்றனர். மைசூர், இந்தப்போரில் ஈடுபாடுகாட்டாமல் தனியே ஒதுங்கிக்கொண்டது. ஜக்கராயர் மற்றும் யச்சம நாயக்கர் படைகள், பிரபலமானப் போர்க்களமான தொப்பூரை மையமாகக் கொண்டு இருபுறமும் அணிவகுத்து நின்றன. மைசூரின் பெயர், எந்த இடத்திலும் காணப்பட வில்லை. மைசூர் படையின் பங்களிப்பின்மையை, வடக்கிலிருந்து முகம்மதியர்களின் படையெடுப்புக் காரணமாக இருக்கலாம் எனச்சொல்லிவிட முடியாது. விசுவாசமின்மையின் உள் நோக்கத்தையே இந்தப் பங்களிப்பின்மைக் காட்டுகின்றது. அதேவேளையில், நிகழப்போகின்ற பிஜப்பூர் அல்லது கோல்கொண்டா படையெடுப்புகளும் ஒருகாரணமாக இருக்கலாம். எதுகாரணமாக இருந்தாலும், மைசூர் எந்தப்பக்கத்திலும் இருக்க வில்லை. அதேவேளையில், மதுரை ஜக்கராயரின் பின்னால் துணிந்துநின்றது. அந்தவகையில், வேங்கடாவுக்கு வாரிசாக, 'அப்படியொரு' உத்தேச மகன் இருந்தானா என்பதும், அவனை முன்வைத்து, இத்தனைப்பேர் அணி திரண்டு நிற்கின்றார்களே என்றும் அதன் ஆழத்தை, குணாதிசியத்தைத் தோண்டிப் பார்க்க வேண்டியதில்லை. அது, பேரரசைப் பங்குபோட்டுக்கொள்ளும் பொதுவானதொரு நோக்கம் மட்டுமே. சிலர், ஜக்கராயர் கை காட்டும் நபர், உண்மையான வாரிசாக இருக்கலாம் என்று நம்பவும் செய்தனர். படைத்தலைவர் யச்சமா காட்டும் அகதி இளவரசனும்

உண்மையாக இருக்கலாம் என்றும் நம்பினர். இருதரப்பினரின் உரிமைக்கோரலும் கவனிக்கப்பட வேண்டியதாக இருந்தது. அதேவேளையில் ஜக்கராயர் மற்றும் அவரது நண்பர்களின் பேரரசுக்கு எதிரான கிளர்ச்சிக்கு ஒருகாரணம் இருக்கின்றது என்பதை முடிவாகக் கொள்ளலாம். ஆனால், மதுரை நாயக்கரின் வரலாற்றைப் பொறுத்தவரை, முதலாம் வீரப்பாவின் ஆட்சியின் போது, சுதந்திரமாகத் தங்களை வைத்துக்கொள்வதற்கான யத்தனங்கள் இவை என்று, வெளிப்படையாகத் தெரிகின்றது.

அதன்பிறகு ஒவ்வொரு தரப்பினரின் நிலையும் தெளிவாக இருந்தது. திறைசெலுத்துபவர்கள் பட்டியலில் இருந்த மதுரை நாயக்கர்களின் பேரரசுக்கு எதிரானக் கொள்கைகள், பெரும்வடிவு பெற்று, சுதந்திரமாகச் செயல்படுவதற்கானச் சாத்தியங்களை உருவாக்கியிருந்தன. பேரரசுக்கு விசுவாசமில்லாமல் நடந்து கொண்ட இந்த வழிகாட்டுதலால், திறைசெலுத்தும் ஏனையவர்கள் எப்படி நடந்துகொள்வார்களோ என்ற கேள்வியையும், மத்தியில் எழுப்பியிருந்தது. இரண்டாம் ஸ்ரீரங்கா மற்றும் அவருக்குப் பின்னால் ஆட்சிக்குவந்த இரண்டாம் வேங்கடா ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் பேரரசு, ஒருவழியாக இணைந்துசெயல்படும் போக்கைக் கொண்டிருந்தது. அதன்படி, திறைசெலுத்துபவர்கள் தங்களது கொள்கைகளை தாங்களே வடி வமைத்துக்கொள்வது போல, அவர்கள் வழிக்கே விடப்பட்டனர். இதன்விளைவாக, பெருமளவில் பரப்பளவுகொண்டவர்களான மதுரை மற்றும் மைசூர் ஆட்சியாளர்கள் தங்கள் எல்லைப்பகுதி களை மாற்றியமைத்துக் கொண்டபோது, பேரரசின் அதிகாரநிலை விரும்பியோ, விரும்பாமலோ பார்வையாளராக மட்டும் இருக்க நேர்ந்தது. எதிர்வரும் முகம்மதியப் படையெடுப்புக்கு எதிரான நிலையில், இப்படியானதொரு போக்கை பேரரசு கையாளவேண்டியிருந்தது. பிஜப்பூர், பேரரசின் வலப்பக்கத்தில் தனது முன்னெடுப்பைத் தொடங்கிவிட்டது. அது, கோல்கொண்டாவுடன் புரிந்துணர்வு கொண்டுள்ளது. அதனால் கோல்கொண்டாவும் பேரரசுக்கு எதிரானப் போக்கை அனைத்துத் தரப்பிலிருந்தும் தொடங்கிவிடும். பிஜப்பூர், மிகத்துல்லியமாக கர்நாட்டிக்கின் மலைத்தொடர்களுக்கு மேலே இருக்கின்றது. கோல்கொண்டா அப்படியே பேரரசின் கீழுள்ள மலைத்தொடர்களில் இருக்கின்றது. பிஜப்பூரின் மூர்க்கமான முதல்தாக்குதல் பேரரசின் மீது மிகச்சரியாக பெனுகொண்டாவிலும், பின்பு சந்திரகிரியிலும், இறுதியாக, வேலூரிலும் அமையும் என்று கருதப்பட்ட நிலையில், முதல் தாக்குதல் மைசூரிலும் அதையடுத்து, இக்கேரியிலும் நடத்தப் பட்டது. பிஜப்பூரின் தாக்குதலை எதிர்த்துநிற்கும் பெரும்பணியை,

மைசூர் தாங்கி நின்றதுடன் கணிசமான அளவில் போராடவும் செய்தது. இந்தப்பணிகளின் மூலமாக, மைசூர் தனது எல்லைகளை விரித்துக்கொண்டது. சென்னப்பட்டிணாவில் பிரதிநிதியாக இருந்த ஜகதேவ ராயாவின் எல்லைகளில் பெரும்பகுதியும், மைசூரின் கிழக்கேயுள்ள கணிசமானப் பகுதியும் சேலத்தின் பாரா மஹால் ஆகியவையும் மைசூருடன் இணைந்தன. அதேவேளையில் பிஜப்பூர் தனது முன்னெடுப்பை படிப்படியாக நகர்த்தி, மைசூரின் மாவட்டங்களான சித்தல்துருக், தும்கூர் மற்றும் கோலார் ஆகியவற்றுடன் பெங்களூரின் பாதிக்கும் அதிகமானப் பகுதியை கைப்பற்றியிருந்தது. பெங்களூரின் ஓர்எல்லையில், மைசூரும் பிஜப்பூரும் நேருக்குநேர் பொருதி நின்றன. நேர்மைக்கேடுடைய மதுரை நாயக்க அரசு, தனக்காகவோ அல்லது பேரரசுக்காகவோ போராடவில்லை. அதேவேளையில் மைசூர் தன்னை பேரரசுக்குப் பரிந்துசெயலாற்றும் நிறுவனமாகக் காட்டிக்கொண்டது. மதுரை அப்படிக்கோருவதற்கான வாய்ப்பைத் தவிர்த்துவிட்டது. 1642ஆம் ஆண்டில் மூன்றாம்ஸ்ரீரங்கா அரியணைக்குவந்த சிலகாலத்திலேயே சாம்ராஜ்ஜியம் மோசமான நிலையில் இருப்பதைக் கண்ணுற்று, சில பல முடிவுகளுக்கு வந்தார். சமச்சீரற்ற நிலையிலிருக்கும் ஆட்சியை சீர்படுத்தித் தொடருவதற்கு, முக்கியமாக திறைசெலுத்து பவர்களின் அனுசரணை வேண்டும் என்று கருதினார். குறிப்பாக, தென்பகுதியைச் சேர்ந்த அதிகாரமிக்க மதுரை நாயக்கர்களின் ஆதரவை எதிர்பார்த்தார். இந்த நாயக்கர்களை தனக்குக் கட்டுப் பட்டவர்களாகக் கொண்டுவருவதற்கான முயற்சிகளை அவர் மேற்கொண்டார். அந்தவகையில், அவர் மைசூரை விட்டுவிட்டார். அது, பெரிதாகப் பேரரசுக்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கவில்லை. சென்னப்பட்டிணாவின் பிரதிநிதித்துவத்தை மட்டும் அது கைப்பற்றியிருந்தது. அதுவும் பிஜப்பூர் படை யெடுப்பைத் தடுக்கும்நோக்கில் சென்றபோது, அது நடந்தேறியது. ஆயினும், அந்தச்செயல்பாடுகூட மறைமுகமாகப் பேரரசுக்கு சேவைசெய்ததாகக் கருதப்பட்டது. தனித்துவிடப்பட்டுவிட்டப் பேரரசுக்கு கோல்கொண்டாவின் படையெடுப்பின்போது உதவ யாருமில்லை. எதிர்ப்பைக் கடந்து முன்னேறுகின்ற முயற்சியில் கோல்கொண்டா மெல்லமெல்ல பேரரசைத் தனக்குக் கீழே கொண்டுவந்தது. தெற்கேயிருந்து திறைசெலுத்துபவர்களின் உதவி கிடைத்து, பேரரசின் படைகளுக்குத் துணையாக, இரண்டாம் வரிசையாக நின்றிருந்தாலே பேரரசின் பாதுகாப்பு வலுப்பெற்றிருக் கும் என்பது தெளிவாகத் தெரிகின்றது. இந்தக்கூட்டு முயற்சி மைசூருடன் சேர்ந்துநடந்திருந்தால், வெற்றி எளிதாகக் கிடைத் திருக்கும். இந்த வாய்ப்பு, தெற்கத்திய பிரதிநிதிகளால் தூக்கி

யெறியப்பட்டுவிட்டது. அதுமட்டுமல்லாமல், தன் மீது படையெடுத்துவரும் பேரரசரைத் தடுப்பதற்காக, பிஜப்பூரின் தலையீட்டுக்கு வரவேற்பு அளித்ததே, திருமலை நாயக்கர்தான். திருமலை நாயக்கரின் இந்தச் செயல்பாடுகள் உண்மையிலேயே மிகத்தெளிவாக இருக்கின்றன. ஆயினும் பெருமளவில் அவரது செயல்பாடுகள் எதிலும் குறிக்கப்படவில்லை. மைசூரிலிருந்து படையெடுப்பதற்கு சாத்தியங்கள் இருந்ததாக, அவருக்கு ஆதரவாகப் பேசப்படுகின்றன. ஆனால், மைசூரில் படையெடுப்புக்கான சாத்தியங்கள் இருக்கவில்லை. மைசூரின் பிடி, **1646**ஆம் ஆண்டுவாக்கில் தளர்ந்துவிட்டது. ஆனால் திருமலை நாயக்கரின் பேரரசுக்கு எதிரான நடவடிக்கைகள் குறைந்திருந்ததாக இல்லை. அடுத்த கால்நூற்றாண்டு அல்லது அதற்கும்மேலாக, பேரரசர் ஓர் அகதியைப்போலவே நடத்தப்பட்டார். அவ்வப்போது, தனது ஆதரவாளர்களின் ஆதரவைப்பெற்று, தனக்கு அதிகாரம் இருப்பதாகக் காட்டிக்கொண்டார். பேரரசின் வீழ்ச்சி பிரதிநிதித்துவ ஆட்சிசெய்தவர்களுக்கு சந்தேகமேயில்லாமல், மகிழ்ச்சியான இறுதித் தீர்ப்புநாள்தான். பிஜப்பூருக்கு எதிரானப் போரைக் கொண்டு மைசூர் தன்னை, நேரத்தில் காத்துக்கொண்டது. மதுரை நாயக்கரோ வல்லமைமிகுந்தப் பேராற்றலால் தன் சொந்த எல்லைகளைத் தாண்டி, தன்னை நிலைப்படுத்திக் கொண்டார்.

கொங்குநாட்டு எல்லையில், மைசூரின் சிக்கதேவராஜ உடையாரின் கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ள, வெற்றிபெற்ற விவரணைக் குறிப்புகள், குழப்பங்கள் மிகுந்த அறிக்கைகளாக, தெளிவற்றவையாக இருக்கின்றன. அவை, ஒரு பதினைந்து ஆண்டுகால அல்லது ஒரு பத்தாண்டுகால வரலாற்றை பிழைபடாத, நேரிய, புறமல்லாத புரிதலைக் கோரிநிற்கின்றன. சென்னப் பட்டிணத்தின் பிரதிநிதித்துவத்தைக் கைப்பற்றியதன் விளைவாக, மைசூரின் சாம்ராஜ உடையார், மதுரையின் வடக்கு எல்லைவரை தனது ஆட்சிப்பரப்பெல்லையை விரிவாக்கியிருந் தார். மேற்குத் தொடச்சி மலைகளின் அடிவாரமும் அவரது எல்லையாகியிருந்தது. மீதமுள்ள மைசூர் அரசின் இடம், பிஜப்பூரின் பெயரில் அதேகால கட்டத்தில் ரந்துல்லாகான் மற்றும் அவரைப் பின்தொடர்ந்து வந்தவர்களால் கைக்கொள்ளப்பட்டது. அந்தப்பகுதியின் பெரும் தளபதியாக இருந்தவரின் ஓய்வுக்குப்பின், பெல்லாரி மாவட்டம், மைசூரின் மாவட்டங்களான சித்தல்துர்க், தும்கூர் மற்றும் கோலார் ஆகியவையும், வேறுசில பகுதிகளும் ஷாஜியிடம் விடப்பட்டன. அவர், ரந்துல்லாகானின்கீழ், இரண்டாம்கட்டத் தளபதியாக இருந்தார். இரண்டாம் வேங் கடாவின் பேரரசின் பரப்பெல்லை, ஷாஜியின் பிஜப்பூர் பரப்பெல்லைக்கும் கோல்கொண்டாவுக்காக

மீர் ஜும்லா வென்றெடுத்தப் பரப்பெல்லையின் விளிம்புவரை இருந்தது. அந்தப் பரப்பெல்லையை மீர் ஜும்லா, படை முதலிய துறைகளின் செலவீனங்களுக்கு ஈடாக எடுத்துக்கொண்டிருந்தார். மேலும், அதன் நிலமானியப் பணிகளை கோல்கொண்டாவின் கட்டுப்பாட்டிலேயே விட்டிருந்தார். ஒரு திருமண ஒப்பந்தத்தின் பேரில் பிஜப்பூர் மற்றும் கோல்கொண்டா சுல்தான்கள் தங்களுக் கிடையே அமைதிப் பேணிக்கொண்டனர். 1636ஆம் ஆண்டின் அந்த ஒப்பந்தத்தின்படி, உடனடியாக நிகழவிருந்த முகலாயப் படையெடுப்பின் ஆபத்து தவிர்க்கப்பட்டது. மூன்றாம் ஸ்ரீரங்கா, 1642ஆம் ஆண்டில் பதவிக்குவந்தபோது, இதேநிலைதான் பேரரசில் நீடித்தது. அடுத்து வந்த ஆண்டுகளில்தான் மாற்றங்கள் நேர்ந்தன. ஷாஜி, செஞ்சிக் கோட்டையை ஆக்கிரமிக்க, தனது திட்டத்தை நீட்டினார். பிஜப்பூரின் விருப்பத்துக்காக கோட்டையை வெகு எளிதாகவும் கைப்பற்றினார். ஆனால் கடைசியில், அதனைத் தனது சொந்தப் பகுதியாக, ஜாகிராக இணைத்துக்கொண்டார். இந்த விஷயத்தில் அவருக்கு மதுரை நாயக்கரின் ஆதரவு இருந்திருப்பது தெரியவருகின்றது. பிஜப்பூருக்காக நடத்தப்பட்ட, ஷாஜியின் இந்த வெளிப்படையானப் படையெடுப்பை, இயேசு சபையின் கடிதங்கள், தன் பங்குக்கு திருமலை நாயக்கர் நடத்தியப் பேரரசுக்கு எதிரான இராஜதுரோகம் என்று குறிப்பிடுகின்றன. எல்லா வகைகளிலும் பிஜப்பூர் எடுத்த முன்னெடுப்புகளை கோல்கொண்டா இரண்டாவதாக முன்னெடுத்துச் செய்தது. இப்போது குறிப்பாக, வேலூரைநோக்கி. ஸ்ரீரங்கா, தெற்குநோக்கிப் படையெடுத்துச் சென்று, தனது பேரரசின் கீழுள்ள நிலவுடமை யாளர்களை, திறைசெலுத்துபவர்களை வென்று, அதிகாரத்தை நிலைநாட்டிவிடக்கூடாது என்பதில் இரண்டுசுல்தான்களின் எண்ணமும் ஒருகுறியாக இருந்தது. திருமலை நாயக்கரோ, குயுக்தியானத் தனது திட்டங்களின் மூலம் கோல்கொண்டாவும் பிஜப்பூரும் ஒரேநேரத்தில் தெற்குநோக்கிப் படையெடுத்து வரும்படியாக, வெற்றிகரமாகக் காய் நகர்த்தி ஒருங்கிணைத் திருந்தார். வேலூரைப் பொறுத்த இந்த விஷயத்தில் பேரரசருக்கு, இரட்டை லாபம் இருந்ததாகக் கருத வாய்ப்புண்டு. அவர் கோல்கொண்டாவைத் திருப்பியடித்து விரட்டினார். வேலூரை முற்றுகையிட்டார். இந்த வெற்றிகரமானச் செயல்பாட்டுக்கு அவருக்கு செவப்ப நாயக்கரின் உதவிகிடைத்தது. அந்த நேரத்தில் செவப்ப நாயக்கர், அரியணையை அபகரித்தவராக இல்லை. ஆயினும் கோல்கொண்டா, தனது தாக்குதலைத் தொடர்ந்தது. அதன் தாக்குதலில் தாக்குப்பிடிக்க முடியாதவராக ஸ்ரீரங்கா தடுமாறி, கடைசியில் அந்த இடத்திலிருந்து இடம்பெயர்ந்து

செல்லவேண்டி வந்தது. இதன்விளைவாக, ஷாஜி சத்தமில்லாமல் செஞ்சியை நோக்கி நகர்ந்துவிட்டார். வேலூரின் வீழ்ச்சி, செஞ்சியின் ஆக்கிரமிப்பு, குறிப்பிடும்படியான மைசூரின் சுதந்திரச் செயல்பாடுகள், ஸ்ரீரங்காவின் நிலையை நம்பிக்கையற்றதாக ஆக்கியது. அருகில் எங்கிருந்தேனும் பயனுள்ள உதவியைப் பெற முடியாத நிலைதான் இருந்தது. இதையடுத்து அவர், தூரத்திலிருந்த ஷாஜஹானிடம் 1653ஆம் ஆண்டில் உதவி கோரினார். தனது ஆட்சியையும் பரப்பெல்லையையும் மீட்டுத்தரும் உதவியை வழங்குவதற்கு, இஸ்லாத்தைத் தழுவவேண்டுமென்று முகலாயப் பேரரசர் கூறினால், அதைச் செய்வதற்கும் தயாராக இருப்பதாக மனமார்ந்து முன்வந்தார். தக்காணத்திற்கு, ஔரங்கசீப்பின் வருகையும், பிஜப்பூரையும் கோல்கொண்டாவையும் கைப்பற்ற அவர்செய்த சூழ்ச்சிகள், பேரரசர் மூன்றாம் ஸ்ரீரங்கா மனதில் நம்பிக்கை விதையை விதைத்தது. அவர் வெளிப்படையாகவே, தெற்கில் தன்னை ஆதரிக்கும் இந்து ஆட்சியாளர்களை ஒன்றுதிரட்ட முனைந்தார். அந்த ஒருங்கிணைப்பின்வழியே, முகம்மதிய ஆட்சியாளர்களை ஒய்த்துவிட்டு, எல்லைப்பரப்பை முன்னைப்போல ஆக்கிவிடலாம் என்று கருதினார். இந்த முயற்சிக்கு மைசூரிடமிருந்து அவருக்கு இசைவானக் குறிப்பு எதுவும்வரவில்லை. திருமலை நாயக்கரின் தாய்நாட்டுப் பற்றில்லாத்தன்மை ஒருங்கிணைக்கும் முயற்சிகளுக்கு எதிராகவே இருந்தது. அது, மைசூருக்கும் மதுரைக்குமிடையிலானக் கசப்பை மேலும் அதிகரிக்கச் செய்தது. 1652ஆம் ஆண்டிலிருந்து 1656-57ஆம் ஆண்டு வரையில் இரண்டு முகமதிய ஆட்சியாளர்களின் எல்லைப்பரப்பு முழுவதும், தக்காணத்தின் முகலாயப் பிரதிநிதி ஔரங்கசீப்பால் எட்டுத்திசைகளிலும் வளைக்கப்பட்டிருந்தது. இந்துக்களின் செயற்கூட்டு வெற்றிக்கான வாய்ப்புகள், அந்தநேரத்தில் நிரம்பவே இருந்தன. ஏதோ சில காரணங்களால், முகலாய ஆட்சியாளர்களுக்கு எதிராக, இந்து அதிகாரங்கள் ஒன்றுதிரண்டு நிற்கவேண்டிய தருணத்தில், மைசூர் ஆட்சியாளரிடமிருந்து பேரரசர் மனவேறுபாடு கொண்டு விட்டார். இந்து ஆட்சியாளர்கள் தங்களுக்குள் இரண்டுபிரிவுகளாக எதிரெதிரே நின்றனர். அதே வேளையில் மைசூர் மீதானத் தாக்குதலை, தெற்கிலிருந்த அனைத்து இந்து அதிகாரங்களும் நடத்தின. கந்திருவநரசா இந்தத் தாக்குதலுக்கு எதிரான நடவடிக்கையை, போராட்டத்துடன் எதிர்கொண்டார். அத்துடன் தன்னைக் காத்துக்கொள்ளவும் செய்தார். அவரது மரணமும் மதுரையின் திருமலை நாயக்கர் மரணமும் ஏறத்தாழ ஒரேநேரத்தில் நேர்ந்தது. தக்காணத்திலிருந்த முகம்மதிய அதிகாரங்கள் பெருமளவு மாற்றியமைக்கப்பட்டன. முகலாய

அரியணையைக் கைப்பற்றுவதற்கானப் போராட்டத்தில் உடன் பிறந்தாரைக் கொல்லும் பெரும்அழிவிலிருந்து உண்டாகும் திடீர்எழுச்சிகள் குறைக்கப்பட்டன. அடுத்த பத்தாண்டுகள் நடைமுறையில், முகம்மதியர்களின் தலையீடுகள் இல்லாமல் கடந்துபோயின. இப்போது புரிதலுக்கான கேள்வி ஒன்று எழுகின்றது. தஞ்சாவூருக்கு எதிராக, செஞ்சிக்கும் மதுரைக்கு மிடையில் ஒருங்கிணைப்பு ஏற்படாதிருந்தால், மதுரை மீதான பகைமையை மைசூர் கைவிட்டிருக்குமா? மைசூருக்கும் மதுரைக் குமானப் போர்கள் நடந்ததற்கானக் காரணங்கள், அவர்களிடையே உருவாகியிருந்தக் கசப்புத்தன்மையும் வெற்றிகளின் வேறுபல காரணங்களுமே ஆகும். இந்த இருஆட்சியாளர்களுக்குமிடை யிலானப் போரின்போது, மதுரை தஞ்சாவூரின் மீது தாக்குதல் நடத்தி, வென்று வீழ்த்தித் தோற்கடித்தது. அதேவேளை, காலச் சுழற்சி மராத்தியர்களின் அதிகாரத்தை அதன்மீது படியச்செய்தது. மைசூரும் மதுரையும் தங்கள் அதிகாரத்தில் நீர்த்துப்போனபின்பே, தங்களுக்குள் அமைதியை உருவாக்கிக்கொள்ள முயன்றனர். அப்போது தெற்கில், மராத்தியர்கள் வலுவான அதிகாரம் கொண்டவர்களாக ஆகியிருந்தார்கள். சிவாஜி நடத்திய கர்நாட்டிக் மீதான படையெடுப்பு மராத்தியர்களின் முன்னெடுப்பை மெல்ல மெல்ல நகர்த்தியது. பிஜப்பூரின் முந்தையப் படையெடுப்பும் ஆக்கிரமிப்பும் பயம்தருவதாக இருந்தது. நூற்றாண்டின் கடைசிப் பத்தாண்டுகள் அல்லது அதற்கும் மேலேயும், முகம்மதிய ஆட்சி யாளர்களின் அதிகாரம் ஔரங்கசீப்பின் தலைமையிலான முகலாயப் படைகளுக்கு எதிரான மரணப்போராட்டத்துடன் வீழத்தொடங்கியது. தென்னிந்திய அரசியலில் அவர்களின் அதிகாரம் முடிவுக்கு வந்தது.

ஸ்ரீரங்காவின் எதிர்காலம் அந்தநேரத்தில் நேர்மைக்கேடுடைய நிலையிலேயே இருந்தது. பல்வேறு பண்புகளைக்கொண்ட நிலவுடமையாளர்களின் கூட்டாக, இழுபறியுடனும் அது இருந்தது. முன்னமே குறிப்பிட்டதுபோல, 1646ஆம் ஆண்டின் சுதந்திரப் போக்கு மைசூருக்குள் நிலவியது. அடுத்த ஐந்து அல்லது ஆறு ஆண்டுகள் பேரரசர், தனது நிலவுடைமையாளர்களை, திறை செலுத்தியவர்களை ஒன்றுதிரட்டும் முயற்சியில் ஈடுபட்டு, முகலாயச் சக்ரவர்த்தியிடம் பரிதாபமானக் கோரிக்கைகளை வைக்க முயன்றார். ஆனால் அவையெல்லாமே உட்சபட்சமானத் தோல்வி யிலேயே முடிந்தன. இதையடுத்து மைசூர், போராட்ட குணம் கொண்ட அதிகாரமாய் மாறியிருக்கவேண்டும். பேரரசருக்கு வேறு எங்கும் இடம் கிடைக்காதபோது, மற்றவர்கள் மறுத்துவிட்ட நிலையில், இக்கேரி அரசர், அவருக்கு தஞ்சம் கொடுத்தார். அவர்

எடுத்துக்கொண்ட முனைப்பு, பயன் அளிப்பதாகத்தான் இருந்தது. மைசூர் மீது படையெடுப்பதற்கான தூண்டுகோலாக தெற்கத்திய மாகாணங்களுக்குள் ஓர் ஒருங்கிணைப்பு உருவானது. மைசூர் அரசர் தேவராஜாவின் காலத்திலும் அதற்குமுன்பு, சிக்கதேவ ராஜாவின் ஆட்சியின்போதும் இருந்த ஒருங்கிணைப்புபோல, அது உயிர்ப்புடன் இருந்தது. இவை எல்லாவற்றிலிருந்தும் மைசூர் வெற்றிகரமாக வெளியே வந்தது. வெற்றியைத் தீர்மானித்த இந்தப்போர், ஈரோட்டில் நடந்தது. 1672ஆம் ஆண்டிலும் அதற்கும் கொஞ்ச காலம் அதிகமாக நடைபெற்ற இந்தப் போரில், மைசூர் ஒருங்கிணைந்தப் படைகளை தோற்கடிக்க எண்ணியது. அதன்படி, அது தனது விரிவாக்கத்தை கொங்கு எல்லைவரை விரித்தெடுத்தது. அதுதான் பேரரசர் ஸ்ரீரங்கா, கடைசியாகத் தோற்றமளித்த போராக இருக்கின்றது. அவர்குறித்த ஆவணங்கள், 1662-63ஆம் ஆண்டு களின் பெல்லாரி மாவட்டத்தில் காணப்படுகின்றன. பின்னர், 1667ஆம் ஆண்டில் கோயமுத்தூர் மாவட்ட ஆவணங்களில் அவர் பெயர் காணப்படுகின்றது. ஈரோடு போருக்குப் பின்னர் அவர், இக்கேரியில் தஞ்சம் புகுகின்றார். அதன்பின்னர், பேரரசருக்காக நடத்தப்பட்டப் போர்களில் மைசூருக்குக் கிடைத்த வெற்றிகளான சக்கரப்பட்டிணா மற்றும் ஹாசன் ஆகிய இடங்களில் பேரரசரின் பெயர் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. ராமராஜவிஜயத்தின்படி இப்போர் விஜயநகரக் குடும்பத்தின் மற்றொரு வழித்தோன்றலும், தலைக்கோட்டைப் போரில் வெற்றியைக் கொண்டாடிய ராமராஜாவின் வழித்தோன்றலான கோதண்டராமன், மைசூரின் வரலாற்றில் புகழ்பெற்றத் தளபதியான தளவாய் குமரய்யாவைத் தோற்கடித்தார். அதைத்தாண்டி, ஸ்ரீரங்கா குறித்த தகவல் ஏதும் கிடைக்கவில்லை. அவரது மரணம், சிவாஜியின் முடிசூட்டு விழாவையொட்டி நடந்திருக்கலாம். சிவாஜியின் தெற்குநோக்கியப் படையெடுப்பு, கர்நாடகத்தின் மீது அவரது ஆளுமையைச் செலுத்தியது, 1677ஆம் ஆண்டுவாக்கில் இருந்திருக்க, அத்தனை வாய்ப்பில்லை. அது ஒருவேளை, விஜயநகரப் பேரரசின் கடைசிக் கட்டத்தில் நேர்ந்திருக்கலாம். விஜயநகரப் பேரரசின் நாணயங் களைப்போலவே சிவாஜியும் வெளியிட்டிருப்பது, அதைத் தெளிவாக்குகின்றன. இது, தனது ஒற்றைச் செருப்பை யானை மீதேற்றி அனுப்பி, அதிகாரத்தை நிலைநாட்ட எடுத்துக்கொண்ட ஔரங்கசீப்பின் முயற்சிகளுக்கு, எதிர் நடவடிக்கையாக இருக்க முடியும். இந்தக்கதை, மதுரையை ஆண்ட மூன்றாம் முத்துவீரப்ப நாயக்கர் அமைதியை நிலைநாட்ட எடுத்துக்கொண்ட முயற்சியின் தொடர்ச்சியாகக் கருதப்படுகின்றது. மேலும், இந்தக் கதை, பிஜப்பூர் மற்றும் கோல்கொண்டாவின் வீழ்ச்சியைத் தொடர்ந்து

எழுதப்பட்ட ஒன்றாகவும் இருக்கின்றது. சிவாஜியின் முயற்சிகளுக்கு முன்பானதாகவும் இருக்கின்றது. ஸ்ரீரங்காவின் மரணமும் பேரரசின் முடிவும் 1677ஆம் ஆண்டுக்கு முன்னதாக இருக்கலாம். 1675ஆம் ஆண்டுக்குப் பின்பு பேரரசர்களின் பெயர், 1710ஆம் ஆண்டுவரையில் ஆவணங்களில் குறிக்கப்படுகின்றன. அதன்பின்பு, தென்னிந்திய வரலாறு என்பது, பேரரசின் பிழைத்திருக்கும் பிரதிநிதிகளுக்கும், மராத்தியர்களின் குழப்பம் நிறைந்த இருத்தலுக்கும், முகலாயத் தளபதிகளின் படை முன்னெடுப்புகளுக்கும் இடையிலான வரலாறாகத்தான் இருந்தது. அடுத்த ஐம்பது ஆண்டுகள் தங்களை திருச்சினாப்பள்ளியின் எஜமானர்களாக ஆக்கிக்கொள்ளும் போராட்டம் தொடர்ந்தபடியே இருந்தது. விஜயநகரப் பேரரசிலிருந்து வெளியேறி, ஔரங்கசீப்பின் தலைமையிலான முகலாயர்களின் வெற்றியிலும் தன்னைத் தற்காத்துக் கொண்டது, மைசூர் அரசு மட்டும்தான். மதுரை செய்யாத ஒன்றான, தனது தூதுக்குழுவை அது அனுப்பிவைத்தது. அதனாலேயே, முகலாயர்களின் தாக்குதலுக்கு உள்ளாகாமல், தனது நிலையைத் தொடர அனுமதிக்கப்பட்டது. மதுரை நாயக்கர்களின் வரலாறு முடிந்துபோனது.

## 1

# மதுரை நாயக்கர்கள் வரலாறு

மதுரை நாயக்கர்கள் வரலாறு, தோராயமாக இருநூறு ஆண்டுகால உயிர்ப்பை உள்ளடக்கியது. பதினாறாம் நூற்றாண்டின் இரண்டாம் காலிறுதியில் தொடங்கி, பதினெட்டாம் நூற்றாண்டின் இரண்டாம் அரையிறுதிவரையிலானக் காலத்தைத் தன்னகத்தே கொண்டது. அதன்தொடர்ச்சியான வரலாற்றைத் தொகுத்து, 1868ஆம் ஆண்டில் மெட்ராஸ் சிவில் சர்வீஸ் அதிகாரியான ஜே.ஹெச். நெல்சன், தி மெஜுரா கண்ட்ரி என்றபெயரில் ஒருநூலை வெளியிட்டார். அதற்காக, தமிழ், தெலுங்கு மொழிகளில் எழுதப்பட்டிருந்த பல்வேறு வரலாறுகளை, நாட்டின் பல்வேறு இடங்களிலிருந்து சேகரிப்பட்ட கல்வெட்டுகளை மற்றும் மறைபொருள் குறியீட்டின் குறிப்புகளை, மிகக் கவனமாக அவர், ஆய்வுசெய்தார். இதைத்தொடர்ந்து, தான் எடுத்துக்கொண்டிருக்கும் பணியுடன் தொடர்புடைய சற்றேறக் குறைய, எல்லாவகையானத் தகவல்களையும் ஒருங்கிணைத்தார். குறிப்பாக, மதுரையிலும் திருச்சினாப்பள்ளியிலும் மற்றும் தெற்கில் வேறு பல இடங்களிலும் குடியேறிய இயேசு சபை சமயப்பணிப் பரப்பாளர் களின் நிர்வாக அறிக்கைகளிலிருந்து முக்கியமானவற்றைப் பொறுக்கியெடுத்து, அவற்றை வரலாற்றைக் கருத்தில்கொண்டு தனது பணித்திட்டத்துடன் இணைத்தார். அந்தவகையில் அவரது மதிப்புறு பணி, சிறப்புடையதாகக் கருதப்படுகின்றது.

கேள்விக்குரிய சிலவிஷயங்களுக்கு, நம்பகமான அடிமூலம் அல்லது மூலமுதலை அடையும்வழியில், பல்வேறு இடர்பாடுகள் தனக்கு ஏற்பட்டதையும், நம்பகமான சில மூலங்களைப் போதுமான தரவுகள்கொண்டு தெளிவாக்குவதற்கு பல்வேறுபட்ட பொதுப்பணிகளுக்கிடையில், தன்னால் முடியாதுபோன இயலாமையையும், அவற்றுள் வரலாற்றுப் பணிகளுக்குத் தேவையான ஒருசில தரவுகள் ஒழுங்கமைவற்று, முன்னுக்குப்பின் மாறுபட்டிருப்பதையும் நெல்சன் ஒப்புக்கொள்கின்றார். தனது பணிகளையும், தனது பார்வைகளையும் மறுஆய்வு செய்யும் தேவையிருப்பதை அவர் முன்கூட்டியே அறிவிக்கின்றார். நூல் வெளியாவதற்கு ஐம்பது ஆண்டுகால உழைப்பு தேவைப்பட்

டிருந்தபோதும், அதைத் தொகுப்பதில் வரலாற்றுப் பொருள் கூறு சாசனங்கள், கல்வெட்டியல் குறிப்புகள் மற்றும் இலக்கியக் குறிப்புகள், குறிப்பாய் முன்னதைத் தொகுக்கும்போது, அவருக்குள் பரபரப்பும் பதற்றமும் இருந்தது தெளிவுறுகின்றது. இயேசு சபையின் ஆவணங்களுடன் இயைந்துபோய், பிரத்யேக நம்பிக்கையுடன் அவர் தொகுத்த சில தரவுகள், அணுகத்தக்க மற்ற தரவுகளிலிருந்து சிறிதும் பிசகாது, ஆய்வுநோக்கத்துடனும் ஒப்பாய்வுடனும் செய்யப்பட்டிருக்கின்றன. ஆயினும், 1900 ஆம் ஆண்டுக்குப் பின்பு, விஜயநகர சாம்ராஜ்ஜியம் தொடர்பாக, பல்கலைக்கழக ஆதரவுப் பயிற்சியாளர்கள் பணிமேற்கொள்பவர் களுக்கு, அதனால் பலனேதும் இருக்கப் போவதில்லை. அதுபோல, அக்காலகட்ட வரலாற்றின் மீது, சரியான முன்னோக்கை அவர் எட்டவில்லை. இந்தக்குறைபாடுகள், சில நிச்சயமாகத் தவிர்க்க முடியாதபோதும், நெல்சனின் இவ்வரிய பணி புகழ்ச்சிக்குரியது; சரித்திரக் கட்டமைப்பில் நம்பிக்கைக்குரிய, பாராட்டத்தக்க முன்னெடுப்பு இது.

இதே திசையில், இரண்டாவது முயற்சியை மேற்கொண்டவர், வி. ரங்காச்சாரி, எம்,ஏ., எல்டி., இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையின் (1914-17), மெட்ராஸ் கல்விப் பிரிவில் பணி யாற்றியவர். அவர், இயேசு சபையின் கடிதங்களைத் தவிர்த்து, ஏறத்தாழ மற்ற அனைத்து மூலத்தரவுகளையும் நெல்சன் மீது முழுநம்பிக்கைக் கொண்டு ஏற்றுக்கொண்டிருக்கின்றார். புத்தகத்தில் தென்படும் மிகமுக்கியமானத் தனிக்குறியீடுகளின் பண்புவிளக்கம், அணுகத் தக்க அளவில் இல்லாததாக இருக்கின்றது. அந்தவகையில், கருத்தாழமுள்ள தீங்கு எதுவும் அவரது பணியில் காணப்பட வில்லை. அதனாலேயே அவரது இந்தப்பணி, மதிப்பீட்டு ஆற்றலுக் கானதாகவோ அல்லது விரிவான ஒன்றாகவோ இதுவரைக் கண்டுகொள்ளப்படவில்லை.

'மெக்காலேயின் பணியைப்போல பெரிய அளவிலானது, தான் எடுத்துக்கொண்டிருப்பது' என்று, முன்னுரையில் ரங்காச்சாரி தனது பணியைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். முகம்மதியப் படைகள் மதுரையை வெற்றிகொண்ட காலத்துக்கு சற்றுமுன்னே, தனது களத்தை 1310ஆம் ஆண்டிலிருந்து எடுத்துக்கொள்கின்றார். முகம்மதியப் படையின் வெற்றிகளையும் விஜயநகரப் பேரரசின் வெற்றிகளையும் மிகநீண்ட அளவுக்கு எடுத்துவைத்து விவரிக் கின்றார். குறிப்பாக, கிருஷ்ணதேவராயர், அச்சுதராயர் ஆகியோரைப் பற்றி சிலாகித்தாலும், அவர்களைப் பற்றிய பல தரவுகள் ஒன்றோடொன்று பொருந்திப் போகவில்லை. அதிலும் முன்னிலைப்படுத்தும் செய்திகளின் பொதுஒழுங்கு பல பகுதிகளில்

குறைபாடுகளுடன் காணப்படுகின்றது. நாயக்கர்களின் நிதிநிலைத் தொடர்பானக் கேள்விகள், விஸ்வநாத நாயக்கரின் தலைமையின் கீழ் விஜயநகரப் பேரரசின் பிரதிநிதித்துவ ஆட்சித் தொடங்கிய துமே, உடனடியாக எழுப்பப்படுகின்றன. நெல்சன்கூட, திருமலை நாயக்கரின் தலைமையில் ஆட்சியமைந்ததும் இந்தக்கேள்வியை எழுப்பத் தவறவில்லை. அது அவருக்கு, இயேசு சபையின் நடை முறைக் கொள்கை மதிப்பீட்டில், நாயக்கர்களின் அடக்கியாள்கின்ற நிலமுறைத் தொடர்பானக் கருத்தாக அமைந்துபோனது. இதுபோன்றக் குற்றச்சாட்டுகள் முறையாக, திருமலை நாயக்கரின் ஆட்சிக் காலத்துக்குப் பின்பு எழுப்பப்பட்டிருக்க வேண்டும். நாயக்க வம்சத்தின் முதல் ஆட்சியாளரின் பணிகள் குறித்து முன்னரே விளக்கப்பட்ட பின்பும் ரங்காச்சாரி, நாயக்கர் ஆட்சியின் பொது குணாம்சங்களைப் பிரதிபலிக்கின்றார். பெரும்பாலான அனுமானங்கள் பொதுவாகவே, குறிப்பிட்ட அந்த இடத்துக்கு நெருக்கமாக அமைந்துவிடுவதுண்டு. காலவரிசைப்படி, தி ஹிஸ்டரி ஆஃப் தி கர்நாடகா கவர்னர்ஸ் என்ற அந்த நூல், வெளிப்படையாகவே காலத்தால் முந்தியதாக இருந்தாலும், ஒவ்வொரு ஆட்சித் துவக்கத்தின்போதும், அது குறிப்பிடப்படு கின்றது. சரியான முறையிலானத் தரவுகளைத் தேர்வுசெய்வது, பூர்வாங்கமாகத் தவிர்க்கமுடியாத ஒன்றாகிவிடுகின்றது. ஆசிரியர் இடைவிடாமல், கூரிய நுண்ணுணர்வுப் பார்வையாளர்களாக (இத்தாலிய எழுத்தாளரும் பயணியுமான நிக்காலோ) மானுச்சியையும் வீலர் என்பவரையும் குறிப்பிடுகின்றார். அக்குறிப்புகள் யாவுமே பொருத்தமில்லாது நகைப்புக்கிடமாகி, அவர்களைப் பழிந்துரைப்பதாகவே ஆகிவிடுகின்றது. இதில் வீலரை, ‘அவர் அளவுக்கதிகமான கற்பனைத் திறன்கொண்ட வரலாற்றாசிரியர்’ என்று வேறு, குறிப்பிட்டுச் சொல்கின்றார். உண்மை மற்றும் பார்வை மீதான விரிவான ஆராய்வு, குறைந்தபட்ச மெய்த்தன்மையுடன் பொருந்திப்போவதாக அவரிடமிருந்து எழுச்சி பெறவில்லை. வரலாற்றுத் திறனாய்வுகளுக்கான, தகுதியானக் கோட்பாட்டுச் சூத்திரங்கள் வாரித்தள்ளப்பட்டு, முகம்மதியர் களுடன் திருமலை நாயக்கர் நடத்திய பேரப் பேச்சுகளை, தாய் நாட்டுப் பற்றில்லாதவர்கள் என்ற இகழ்வானக் குற்றப் பழிச்சாட்டு தலுக்கு உள்ளாக்குகின்றார். வரலாற்றுக் கதாபாத்திரங்கள், அவர்களின் நேரத்தில் பெருவழக்காயிருக்கின்ற, நன்கு உகந்ததாய் அமைகின்ற நிலைக்கேற்ப மதிப்பிடப்படவேண்டும். மேலாக, நன்னெறி சார்ந்த வரலாற்று உண்மைகள், வரலாறு ஆகிவிடாது. பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த வரலாற்று அறிஞர்கள் சார்லஸ் விக்டர் லாங்க்ளாய்ஸ் மற்றும் சார்லஸ் செய்னொபாஸ் ஆகியோர்,[1] இங்கே

குறிப்பிட்டுச் சொல்லும்படி, நினைவில் கொள்ளத்தக்கவர்கள். அவர்கள், 'நடத்தைச் சார்பான விரிவான நுண்ணாய்வுகள் குறைந்த பட்ச நீதிமுறைக்குக் கட்டுப்பட்ட வகையிலாவது அமைய வேண்டும்' என்கின்றனர்: உதாரணத்துக்கு, ஜாபாவில் நெப்போலியன் நடந்துகொண்டது சரியா அல்லது தவறா என்பதோ, அல்லது நேபிலில் நெல்சன் இயங்கியவகை முறையானதா என்பதோ, ஒரு வரலாற்று ஆய்வாளனுக்குக் கேள்வியில்லை. அந்தப் பிரச்சனையின் முடிவாக, உண்மையுடன் தொடர்புடையப் பொருள் பொதிந்த பார்வையுடன் என்ன கிடைக்கப் பெறுகின்றது என்பதைத்தான், வரலாற்று அறிஞர்கள் கண்டடைய வேண்டும். ரங்காச்சாரியின் பணிகளில், பல்வகைப் பொருள்கொண்ட தகவல் குறிப்புகள் நிறைந்திருப்பது, அதன் தகுதி அல்லது மதிப்பு, பொருத்தம் அல்லது இயல்புதாண்டி, தலையாயக் குணாம்சமாக இருக்கின்றது. முக்கியமான சில குறிப்புகள், போதுமான கவனத்துடன் பரிசீலிக்கப்படவில்லை. அதில் ஒருபகுதி அச்சுப்பிழை திருத்துதலில் போதாமையுடன் இருக்கின்றது. ஒன்றை ஏற்றுக் கொள்ளும்முன்பு அல்லது வெளியிடும்முன்பு அவற்றின் உண்மைத்தன்மைக்கு சான்றளிக்கப்பட்டிருக்க வேண்டும். அதுபோல, சலிப்பூட்டும் வெறும்சொற்தொகுதிகள் அடிக்கடி தேவையில்லாமல் நீண்டமேற்கோள்களாக இடம்பெற்றுள்ளன. சிறப்பியல்பு பண்புவிளக்கத்தின்போதும், சாதனை மதிப்பீட்டின் போதும், தெவிட்டுகின்ற அளவுக்குப் பாராட்டுதல் அல்லது புண்படுத்துகின்ற அளவுக்கு பழித்துரைப்பு என உருக்கொடுக்கப் பட்டிருக்கின்றது. எண்ணற்ற இடங்களில் தொடர்ந்து அல்லது அடிக்கடி பயன்படுத்தப்பட்டுள்ள தகுதியற்ற அழிமதிச்சொற்கள், நகைப்புக்கிடமான சொற்கள், பொருத்தமற்றச் சொற்கள் இவையாவும், இந்தக் கேள்விகள் ஒருபோதும் தீர்க்கப்பட முடியாதவை[2] என, முற்றும் நம்பத்தகுந்த இடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்கின்றன. அவரது குறிப்புகளில், சீர்படுத்துவதற்குரிய தனிப்பட்ட தன்மைகளும், சுவைத்திற உணர் வின்மையும் பெருமளவு காணக்கிடைக்கின்றன. அதேவேளையில், ஒரு வரலாற்றறிஞருக்கு அனைத்து எண்ணங்களையும் பதிவுசெய்வது என்பதும், கடினமான ஒன்றுதான். தரவுகளின் உண்மையை மதிப்பீடு செய்வதைக்காட்டிலும், திரட்டுவது எளிதானது. தரவுகளை உண்மையாகப் பயன்படுத்துவதில்தான் ஒரு வரலாற்றறிஞரை பழம்பொருள் திரட்டுபவரிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றது. இதனை லார்ட் ஆக்டன் என்பவர், 'வலுவான விமர்சனத் தன்மையுடன் வரலாற்றை வாசிப்பதில், புலமை என்ற விருப்பம் முழுநிறைவு பெறுகின்றது'[2] என்கின்றார். பாடுபொருள் களைத் தேர்வுசெய்வதில் தனிச்சிறப்புடன் வேறுபாடுகளைக்

கண்டறிவது, அதைக் கொண்டுசெல்வதில் வலுவான எண்ணங்கள் ஆகியவை, ஒரு வரலாற்று அறிஞர் செயல்படுவதற்கானத் தேவையான அம்சங்கள். இவற்றை ஒருபோதும், ஒரு வரலாற்று அறிஞர் விட்டுக்கொடுத்துவிடக் கூடாது. காலக்கிரமமாகத் தொகுப்பட்டவைகளை அவற்றின் முகமதிப்புடன் எடுத்துக் கொள்ள வேண்டும். முழுபணியையும் விசித்திரமானக் காதல் கதையின் தோற்றமாகக் கொள்ளவேண்டும். அப்போதுதான் எடுத்துக்கொண்ட பொருளும், பாணியும் அழகானத் தோற்ற மளிக்கும் என்று, பேராயர் வில்லியம் டெய்லர்[3] கூறுகின்றார். இதுமட்டுமே அவரது கருத்துடன் ஒத்தநிலையாக இருக்கின்றது. அதனடிப்படையில் வரலாறு, அடுத்தடுத்து நிகழ்கின்ற இந்திய வரலாறு, கட்டற்றப் புனைவுகளுடன் சங்கமிக்கின்றது.[4]

இதுதொடர்பான சில கட்டுரைகள் மற்றும் பல்வேறுவகை யிலான அவ்வப்போதையக் குறிப்புகள், பிரதானமாக நெல்சனின் பணிகளை எடுத்துச்சொல்லும் முயற்சிகளாக, கடமையுணர்வுணர் வுடன் தென்படுகின்றன. அவற்றை வரலாற்று ஆய்வுகளுக்கானப் பங்களிப்பாக கருதுவதற்கு இடமில்லை.

**ஆதாரங்கள்:** மதுரை நாயக்கர்களின் வரலாறுக்கான மூல ஆதாரங்கள், காலக்கிரம வரிசையிலான நிகழ்வுகள் மற்றும் வாழ்க்கை நினைவுக் குறிப்புகளாக இருக்கின்றன. அதனால் அவற்றை, சம காலத்தின் ஆதார மதிப்பீடுகளாக ஏற்க முடிய வில்லை. அவற்றை உள்ளூர்ப் பாரம்பரியத்தைப் பிரதிபலிக்கும் உண்மைகளாக வேண்டுமானால் எடுத்துக்கொள்ளலாம். அப்போது புழக்கத்திலிருந்த ஆதாரங்களை, குறிப்புகளாகக்கொண்டு அவை வெளிப்படையாகத் தொகுக்கப்பட்டவையாக உள்ளன. அந்த வகையில் அவை மற்றொருவரால் பயன்படுத்தப்பட்ட இரண்டாம் வகை ஆதாரங்களாக காணப்படுகின்றன. அதனால், முறையான வரலாற்று மதிப்பீடுகளுக்கு அவை தூரமாகவும் உள்ளன. இன்னும் சிலவேளைகளில் அவை, நிலைசரிந்து தெருப் பேச்சுக்கள் போலவும் தங்களை அடையாளப்படுத்துகின்றன. முதலாவதாக, கலோனல் மெக்கன்ஸி தொடர்பானத் தரவுகள் சேகரிக்கப்பட்டன. அந்த வாக்குமூலங்கள் மற்றும் குறிப்புகளைப் பதிவு செய்ததில் எதுவுமே சிறப்பியல்பாய் அமைந்ததாக இருக்கவில்லை. மட்டுமல் லாமல், அவையெவையுடனும் அவர் நுண்ணாய்வையும் மேற் கொள்ளவில்லை. இவ்வாறாக, அவற்றுள் சில, விட்டுக்கொடுக் காத உள்திறனாய்வுகளுக்குத் தகுதியுள்ளவையாக ஆகமுடிய வில்லை. ரத்தமும் சதையுமாக அதன் பயன்பாட்டை அவர் கண்காணிக்கவுமில்லை. ஆகையினால் அவை மிகுந்த எச்சரிக்கை யுடன் பயன்படுத்தப்பட வேண்டும். பேராயர் கால்டுவெல்

மிகப்பெரிய கண்டனத்தைப் பதிவுசெய்கின்றார்: ‘அவை மரபுரீதியான நிலைக்கும் கீழே விழுந்து கிடக்கின்றன. தூயகண்டு பிடிப்புகளைக் காட்டிலும் சற்றே சிறந்தவையாக இருக்கின்றன. அவை பெரியளவிலான மாற்றத்துக்குக் கொண்டுசெல்லப்பட வேண்டும்.[5] நடுநிலை தவறாத, ஆராய்ந்து ஒப்பிட்டுப்பார்க்கும் கூராய்வு மட்டுமே, செறிவான வரலாற்றின் மறுகட்டுமானத்துக்கு அடித்தளமாக அமையும்.’ கீழேகொடுக்கப்பட்டுள்ள ரோஸ்பெரி யின் குறிப்புகள் சில, ஏறத்தாழ நம்முடன் ஒத்துப்போகின்றவையாக இருக்கின்றன: ‘செயிண்ட். ஹெலினாவில் நெப்போலியன் வாழ்க்கையைப்பற்றி ஒருவர் தீவிரமாக ஆய்வுசெய்ய விரும்பினால், முதலில் அந்தப்பழம்பெரும் இலக்கியம் பற்றிய பிரமையை எந்தவகையிலாவது அவர் உணர்தல்வேண்டும். அல்லது உண்மைகளைக் கண்டறியும் சாத்தியங்களாவது அவருக்கு இருக்கவேண்டும். மறுபதிவை மறுபரிசீலனையின்றி நிராகரிக்க வேண்டும். ஒன்றுக்கு மேற்பட்ட வாசிப்புகளால், சந்தேகத்துக் குரியதை வரலாற்றுத் தரவுகளிலிருந்து சலித்தெடுத்துவிடமுடியும். அதிகமாகக் கேள்வி எழுப்புபவை அவற்றுள் இடம்பெற வலியுறுத்தும்’.[6] சொந்த ஆதாரங்கள், நாம் எடுத்துக்கொண்ட நோக்கத்தை சுரண்டிவிடும். இங்கே பெரும்பாலும் அதுபோன்ற தகவல்களே, பதினாறாம் நூற்றாண்டுக்கு மூலஆதாரங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

காலக்கிரமத்திலான, பெரும்பாலான வரலாற்றுத் தரவுகள் திரட்டப்பட்டு, மொழிபெயர்க்கப்பட்டு, அவை கவனமாக வில்லியம் டெய்லரால் திருத்தியமைக்கப்பட்டு, 1835ஆம் ஆண்டில் ‘ஓரியண்டல் ஹிஸ்டாரிகல் மானுஸ்கிரிப்ட்’ எனும்தலைப்பில், இரண்டுதொகுதிகளாக வெளியானது. அவரது மொழிபெயர்ப்பு துல்லியமான அர்த்தத்தைக் கொடுக்கவில்லை என்று கருதப் பட்டது. அதனால், அதனை மூலஆதாரங்களுடன் பலமுறை ஒத்துப்பார்த்தனர். அவரது, ‘கேடலாக் ராய்சொனி ஆஃப் ஓரியண்டல் மானுஸ்க்ரிப்ட்’ எனும் நூல், மூன்றுதொகுதிகளாக முறையே 1857, 1860 மற்றும் 1862ஆம் ஆண்டுகளில் வெளியாயின. பல்வேறு தரவுகளைக் கொண்ட பெருந்தொகுப்பான அவை, உள்ளூர் ஆவணங்களின் சாரத்தைக் கொண்டிருந்தன. அந்த ஆவணங்களின் மதிப்பு, தனித்தனியே உள் மற்றும் புற ஆய்வு களுக்கு உட்படுத்தப்பட்டன. தி ‘ஹிஸ்டரி ஆஃப் தி கர்நாடிகா கவர்னர்ஸ்’ எனும்நூல், மிகச்சுருக்கமானப் பதிவுகளையே கொண் டிருந்தாலும், பயனுள்ள, தனித்தன்மை வாய்ந்ததாகவும், தொடர் புடைய தகவல்களைக் கொண்டதாகவும் இருக்கின்றது. அதனுடைய குடிமரபுவழிப்பட்டியல் முழுமையானதைவிட,

தொகுக்கப்பட்ட மற்ற வரலாற்று காலக்கிரமவரிசைகளைப்போல, மறுக்கப்படாத ஒன்றாக இருப்பது முக்கியமானது. *மிருத்யுஞ்ஜய* என்னும் கையெழுத்துப் பிரதி மற்றும் பாண்டியர்கள் வரலாறு ஆகியவை, காலக்கிரம வரலாற்றின் அடிப்படையில், சிறப்பான வையாக இருக்கின்றன. டெய்லர் கையாண்ட பிந்தைய நூலின் மேம்படுத்தப்பட்டப் பதிப்பு,[7] தற்போது கிடைக்கின்றது. எங்களுக்கு வழங்கப்பட்ட, மற்ற உள்ளூர் கையெழுத்து மூலப்படிகள் மதிப்புறு தகவல்களை சற்று அதிகமாகவோ அல்லது குறைவாகவோ கொண்டிருந்தன. தி தஞ்சாவூரி ஆந்திர ராஜுலு சரிதா[8] எனும் நூலும் அதுபோலவே இருந்தது. குறிப்பாக, டெய்லர் கையாண்ட *தஞ்சாவூரி வாரி சரித்ரா* மிகமுக்கியமான ஆவணமாக இருக்கின்றது அந்நூல் பதினாறு மற்றும் பதினேழாம் நூற்றாண்டின் தஞ்சாவூர் வரலாற்றைக் குறிப்பாகக் கொண்டிருக்கின்றது. அதுவே மதுரை விவகாரங்களில் முக்கியமாக, நாயக்க வம்ச அடித்தளத்தின் மீது கூடுதல் ஒளிபாய்ச்சக் கூடியதாகவும் இருக்கின்றது. *சிங்கள திவிப கதா* எனும்நூல் தனித்தன்மைக் கொண்டதாக இருக்கின்றது. இவற்றைத்தவிர, எதிர்பாராத மூலைமுடுக்குகளிலிருந்து ஏராள மான பாளையக்காரர்களின் வாழ்க்கைக் குறிப்புகள் வரலாற்றின் பக்கங்களில் சுடர்விட்டு ஒளிர்கின்றன.

*சாகித்யரத்னாகரம், ருக்மணிபரிணாயம்* போன்ற சமஸ்கிருத இலக்கிய நூல்கள் உள்ளிட்ட பலநூல்கள், முக்கியமாக தஞ்சாவூர் நாயக்கர்களைப் பற்றி அக்கறைகொண்டு, மறைமுகமாக மதுரை வரலாற்றைக் கவனப்படுத்துகின்றன. இந்தப்பணிகள் எல்லாமே, பெரும்பாலும் சமகாலத் தகுதியைக் கொண்டிருக்கின்றன. கற்றறிந்தவர்களால் எழுதப்பட்ட அவை, தேவையானத் தரவுகளை எளிதில் சென்றடையும் வண்ணம் உள்ளன என்பது, தனிச்சிறப்பு. சமஸ்கிருதத்திலும் தெலுங்கிலும் இன்னும்பல நூல்கள் விஜயநகரப் பேரரசையும், அதன் ஆட்சியாளர்களையும் குறிப்பிட்டு எழுதப் பட்டுள்ளன. பேரரசின் செல்வாக்கைப் பெருமளவு கொண்ட மதுரையில் நடந்த பல்வேறு நிகழ்வுகளை உள்ளடக்கியதாக அவை இருக்கின்றன. திருமலை நாயக்கருக்கு காலத்தால் முந்தையவர் களைப் பற்றிப் பேசும்போது, பொதுவான ஆதாரங்களின் அடிப்படையில் பேசிவிடலாம். அந்தக் காலகட்டத்தில் மதுரை, விஜயநகரப் பேரரசின் ஆளுமைப் பிரதிநிதித்துவத்தைக் கொண் டிருந்தது. மதுரை நாயக்கர்களின் வரலாறு தொடர்பானப் பணிகளுக்குமுன்பு, விஜயநகரப் பேரரசின் வரலாறுகுறித்த தெளிந்த அறிவு தேவையான ஒன்று.

இலக்கிய ஆதாரங்களில் மிகமுக்கியக் கிளையாக - கடித வடிவிலான முடங்கல் ஆதாரங்கள்- அறிக்கைகள் இடம்பெறு

கின்றன. தென்னிந்தியாவில் பல்வேறு மதமாவட்டங் களில் குடியேறிய இயேசு சபையினர், ஐரோப்பாவுக்கு எழுதியனுப்பிய ஆண்டறிக்கைகள், பல்வேறு தரவுகளைக் கொண்டவையாக இருக்கின்றன. இந்த அறிக்கைகள் அல்லது கடிதங்களின் மூலம் இத்தாலிய, போர்த்துக்கீசிய, லத்தீன் மொழிகளில் இருந்தன. அவற்றை பிரஞ்சு மொழிக்கு இயேசு சபையின் பங்குத்தந்தை ஜே. பெர்ட்ராண்ட் மொழிமாற்றம் செய்தார். இக்கடிதங்களை உள்ளடக்கிய லா மிஷன் டு மதுரே எனும் நான்குதொகுதிகளை அவர் முறையே 1847, 1848, 1850 மற்றும் 1854ஆம் ஆண்டுகளில் பாரிஸில் வெளியிட்டார்.[9] முதல்தொகுதி இந்தியாவைப் பற்றிய அறிமுகத்தையும், பொதுவான பார்வையையும், கிறிஸ்தவ மதப் பரப்பாளர்கள் மேற்கொண்ட பணிகளையும் கொண்டதாக இருந்தது. மற்ற தொகுதிகள் அதனுடன் தொடர்புடைய கடிதங்களையும், குறிப்பிட்ட சில ஆவணங்களையும் கொண் டிருந்தன. நாட்டில் வசித்த உயர்கல்வி கற்றவர்களால் எழுதப்பட்ட அவ்வெழுத்துக்கள் ,ிருந்த மதிப்புடையனவாய்க் கருதப்பட்டன. அவ்வெழுத்துகள், தென்னிந்தியாவின் பதினேழாம் மற்றும் பதினெட்டாம் நூற்றாண்டின் ஒருபகுதியின் மதம், சமூகம், பொருளாதாரம் மற்றும் அரசியல் நிலைமைகளை வெளிச்சம் போட்டுக் காட்டுவதாய் இருந்தன. எழுதிய அவர்களின் முக்கிய நோக்கமாக மதம் இருந்தது.[10] அதேவேளையில் மற்றக்குறிப்புகளை அவர்கள் தவிர்த்துவிடவில்லை. அதன்விளைவாக, அரசியல் நிகழ்வுகளைத்தேடும் ஒரு வரலாற்றாய்வாளர், இந்த ஆதார ஆவணங்களுக்குள் மூழ்கிஎழுந்தால், போதுமான வரலாற்றுத் தரவுகளை வாரியெடுக்க முடியும். அந்தவகையில் இந்திய மரபு நிகழ்வுகள் தொடர்பான, மிகச்சரியான தேவைகளுக்கு, அவர்கள் பொதித்துக் கொடுத்த நூலாக, மெக்கன்ஸி மானுஸ்க்ரிப்ட் இருக்கின்றது. அந்தவகையில், நாட்டின் அரசியல் நிலைகள் குறித்து, 1659ஆம் ஆண்டு முதல் 1686ஆம் ஆண்டு வரையிலான சுருக்கமான விவரங்களை, திருச்சபை நடவடிக்கைகளுக்கு இடையி லான வகையில், சாதாரண அறிவிப்புகளாகவே கொடுத்திருக் கின்றன. திருமலை நாயக்கர் மற்றும் அவருக்குப்பின் பதவியேற்ற இரண்டுஆட்சியாளர்களின் வரலாற்றை, 1656ஆம் ஆண்டு முதல் 1682ஆம் ஆண்டு வரையில், போதுமான அளவில் எழுதப்பட வில்லை. ஆனால் எழுதப்பட்டிருப்பவை முக்கியமான ஆவணங்கள் ஆகியிருக்கின்றன.

ஜே. லாக்மேனின் கூர்நோக்கு, இயேசு சபையின் சான்றுரைக்கு நியாயமான மதிப்பீடாக இருக்கின்றது. ‘இயேசு சபையைவிட, தேசிய இனங்களையும் நாட்டுப்பகுதிகளையும் விவரிக்க தகுதி

வாய்ந்த மனிதர்கள் யாருமில்லை. அவர்களின் கல்வி; அவர்களின் விரிவான வாசிப்பு; பயணம் மேற்கொண்ட பகுதிகளிலெல்லாம் அங்கிருக்கும் மொழிகளை அறிந்துகொள்ள அவர்கள் மேற் கொண்ட யத்தனங்கள்; மெல்ல மெல்ல உள்நுழைந்து, அவர்கள் கொண்டிருந்த கலை அறிவியல் திறமைகள் மூலமாக உருவாக்கிக் கொண்ட சந்தர்ப்பங்கள்; மறுக்கப்பட்ட இடங்களிலும்கூட தடையின்றி நழுவிச்செல்லும் போக்கு; குடிமக்களிடம் தயக்க மில்லாமல் நெருங்கி அணுகும் இயல்பு; அவர்களுடன் கலந்து உறவாடுவது; அவர்களுடன் நீண்டகாலத்துக்குத் தங்குவது; இவையெல்லாமே எங்கள் இயேசு சபையினர், கட்டாயம் தேசிய இனங்களின் குணாதிசியங்களைக் கண்டறியும் துல்லியமான நுண்ணறிவுத் திறத்தையும் மேதமையையும், கடலோரப்பகுதிகளை மட்டுமே சென்றடைந்திருக்கும் மற்றவர்களைக் காட்டிலும், அதிகமாகப் பெற்றிருந்தார்கள். கடலோரப் பகுதிகளுக்குச் சென்ற வர்கள், வெறுமனே இடப்பெயர்வுக் கணக்குக்கு ஆளானவர்கள் அல்லது ஆதாயம்பெறுகின்ற பணிகளுக்காகச் சென்றவர்கள். ஒட்டு மொத்தத்தில், இயேசு சபையினர் மிகச்சிறந்த சந்தர்ப்பங்களைப் பெற்று, பல தூர நாடுகளிலிருந்து விலைமதிப்பிடவியலாத தரவுகளை அழகுற எழுதியுள்ளனர். அவர்களில் பலர், எழுது கோலைக் கையாளும் தொழிலைமட்டுமே கொண்டவர்களாக ஆகிப்போனார்கள். அவர்களுக்குத் தனிப்பட்டக் கருத்துகளும் இருந்தன'[11] என்கின்றார். பங்குத்தந்தை பெர்ட்ராண்ட், 'இயேசு சபையினரால் எழுதப்பட்டக் கடிதங்களில் தலையாயவை எவையுமே, பதிப்பக எண்ணங்கள் இல்லாமல் எழுதப்பட்ட வையே. அதை எழுதியவர்கள் தங்கள் கடமையாகவும், நம்பிக்கைக் குரியதாகவும், மனதாரவும் தங்களின் மேலதிகாரிகளுக்கும் அல்லது சக உறுப்பினர்களுக்கும் பணி மற்றும் வெற்றியின் சித்திரமாக, எந்தவொரு வண்ணமும் அதீதப் புனைவுமில்லாமல் எழுதி வந்தனர்' என்கின்றார்.[12] ஆனால் இந்தத்தகுதிகளெல்லாம் வரலாற்று மதிப்பீட்டில் சந்தேகத்துக்கு உரியதாகவே இருக்கின்றன. தங்கள் இருப்பை நியாயப்படுத்தும் தேவை மற்றும் முக்கியத்துவத்தை மேம்படுத்திக்கொள்ளவும், இந்தப்பணிகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டனர்.[13] அதனாலேயே அவர்கள் அறிந்தோ அல்லது அறியாமலேயோ சிலவற்றை மிகைப்படுத்தியோ அல்லது தவறானத் தகவல்களையோ எழுதப்படவேண்டியும் இருந்தது. இதுபோலானதொரு இடரார்ந்த நெருக்கடி, லா மிஷன் டு மதுரேயின் ஆங்கிலப் பதிப்பில், பதினேழாம் மற்றும் பதினெட்டாம் நூற்றாண்டின் தென்னிந்திய வரலாற்றை நன்குஅறிந்த கல்வியாளர் ஒருவராலேயே எழுதப்பட்டுவிட்டது. பல்வேறு அம்சங்களைக்

கொண்ட அதனை, எல்லோரும் விரும்பவே செய்தார்கள். முக்கியத்துவம் மற்றும் அவசரம் இதுபோன்று கூடுதலாக மதிப்பிட வைத்துவிடுகின்றது.

வெளிநாட்டுப் பயணிகளால் எழுதப்பட்ட தங்கள் பயணம் குறித்த விவரணை அறிக்கைகள் மற்றும் அவதானிப்புகள், தேவையாக இருந்தபோதிலும் அவற்றில் சில மேலெழுந்தவாரி யாகவும் சிலவேளைகளில் அவை, தேவைக்கு அதிகமாய் இருந்துவிடுவதுமுண்டு. முக்கியமான அவதானிப்புகளில், அவை தனிச்சிறப்பு வாய்ந்தவையாக இருந்தும், உள்ளூர் நிறுவன விஷயங்கள்தானே என்று, அவற்றை வரலாற்றுப் பதிவாளர்கள் புறக்கணித்துவிடுவதும் உண்டு. இந்த இடைவெளி, சமகாலத்தின் வெளிநாட்டுப் பயணிகளால் மட்டுமே நிரவமுடிகின்றது. உள்ளூர் வரலாற்றாளர்களால் கவனிக்கப்படாத அவற்றுக்கு வெளிநாட்டு வர்ணம் அப்பயணியால் பூசப்படலாம். அதிலிருந்து, இனமறியப் படாதத் தனித்தன்மையான புதுக்கருத்து வாசிக்கப்படலாம். அறிக்கைகளும் நிகழ்வுகளும் புது அர்த்தத்துடன் வெளியாகலாம். ஆனால், தொடர்புடைய ஆதாரங்கள் இல்லாதபட்சத்தில், அதன் உண்மையான சிறப்புகள் மாறி, புரட்டுக் கருத்துக் கூறாகிவிடும் வாய்ப்பும் அதிலுள்ளது. இதுபோன்ற நிகழ்வுகளுக்கு தெரிவிக்கப் படும் இசைவு, சிலவேளைகளில் தீர்க்கமுடியாத பாதகங்களையும் உருவாக்கிவிடுவது உண்டு. ஒரு வெளிநாட்டுப் பயணியின் அவதானிப்பு, அப்பொருளின் உண்மைக் கோணத்தை எதிர் நிலைக்குத் தள்ளி, வெற்று ஆரவாரம் நிறைந்ததாகவும் ஆக்கி விடுவதுண்டு. பொதுவான இந்தத்தகுதிப்பாடுகளும் குறைகளும், பெரிய அளவிலோ அல்லது சிறிய அளவிலோ அவ்வெளிநாட்டுப் பயணியின் தகுதி, கலாச்சாரம் மற்றும் அவரது சிறப்பான சூழல் ஆகியவற்றுக்கேற்பவே அமைகின்றது. இந்தநிகழ்வில், பர்ராதாஸ் மற்றும் நூனிஜ் ஆகியவர்களின் விவரணைகள், ஜான் நியூ ஹாப் மற்றும் பலரின் அவதானிப்புகள், தேவோனட் மற்றும் மானுச்சி யின் சாதாரணக் குறிப்புகள் மற்றும் புர்ச்சாவின் அறிக்கைகள் அடங்கிய ‘பில்கிரிம்ஸ்’ போன்றவை, பல உண்மைகளையும் நிகழ்வுகளையும் வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன. முகம்மதிய வரலாற்றாளர்கள் மற்றும் பயணிகளால் எழுதப்பட்ட பதினேழு மற்றும் பதினெட்டாம் நூற்றாண்டின் மதுரை பற்றியத் தரவுகளில் பல, தவறானக் குறிப்புகளைக் கொண்டிருக்கின்றன. இவற்றைக் கடக்கும்போது, செயிண்ட். ஜார்ஜ் கோட்டைக் குறித்த மதிப்புமிகு ஆவணங்கள் சூறையாடப்பட்டது உள்ளிட்ட நிகழ்வுகள் நமது பார்வைக்குக் கிடைக்கின்றன.

வரலாற்றைப் பொருத்தவரையில் கல்வெட்டுகள், புறந்தள்ளி விட முடியாத அளவுக்கான ஆவணங்களாக உள்ளன. பொது வாகவே கல்வெட்டு ஆதாரங்கள், சமகாலத்தைச் சேர்ந்தவையாக வும், துல்லியமாக வரையறுக்கப்பட்டத் தரவுகளாகவும், தனிப்பட்ட மனிதர்களின் ஆற்றல் கூறுகளை, மற்ற ஆதாரங்களைக் காட்டிலும் மிகக்குறைவாகவே கொண்டிருக்கின்றன. ஆனால் அவை வழங்கும் தரவுகள் மீது, மிகவும் கவனம் செலுத்தப்பட வேண்டியுள்ளது. அரசர்கள் மற்றும் அரசாங்கத்தின் பெருமை யடித்துக் கொள்கின்ற போலியான, மோசடியான ஏடுகள், கல்வெட்டுகளும் உலவுகின்றன. அவை கண்டுபிடிக்கப்பட வேண்டியவை. உண்மையானக் கல்வெட்டுகள் பாதுகாக்கப்பட வேண்டியவை. என்றபோதிலும், உண்மையிலிருந்து வேறுபட்டுத் தெரியும் இந்த ஆதாரங்கள், மிகப் பொதுவானவையாகவும், வலுவற்ற அரைகுறையானத் தகவல்களாக குடிவழிமரபுக்குரியப் பட்டியலாகவும், குடிவழிமரபுக்குரிய விவரங்களாகவும் உண்மைக்குத் தொடர்பற்ற ஆவணங்களாகவும் ஆகிவிடுகின்றன. கல்வெட்டுகள் தன்னளவில், இலக்கிய ஆதாரங்களைப்போல வகைதொகையின்றி மேன்மையைப் பேசுவதில்லை. அதற்கு இலக்கிய ஆதாரங்கள் தேவையான, பயனுள்ள போஷாக்காக அமைகின்றன. கல்வெட்டுகள் வரலாற்றின் உலர்ந்த எலும்புகளாக மட்டுமே காணப்படுகின்றன. அவற்றை உண்மையான மற்றும் ஜீவனுள்ளப் பகுதிகளாக மாற்றுவது இலக்கியத் தரவுகளே. நெல்சன் தனது ஆதார ஆவணங்களாகக் கொண்டிருந்தது, கைநிறைய சாசனங்களையும் மற்ற கல்வெட்டுகளையும்தான். தற்போது, நிலை மேம்பட்டிருக்கின்றது. தேவைக்கு அதிகமான விஷயங்கலெல்லாம் வடிகட்டப்பட்டுவிட்டன. ஏறத்தாழ, நமது காலத்தின் எல்லாவகையிலானக் கல்வெட்டுத் தரவுகளும் சீவெல்லின் தொகுப்பாக, லிஸ்ட்ஸ் ஆஃப் ஆன்டிகுட்டிஸ், மெட்ராஸ் எனும்பெயரில், மெட்ராஸ் கல்வெட்டியல் துறையின் ஆண்டறிக்கைகளாக, திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் தொகுதி களாக, பர்கீஸ் மற்றும் நடேச சாஸ்திரியின் தமிழ் மற்றும் சமஸ்கிருதக் கல்வெட்டுகள், மற்றும் சில பதிப்புகளாக கிடைக்கின்றன.

நாயக்க ஆட்சியின் தொல்எச்சங்கள் மதுரை, தின்னவேலி, ராம்நாட் மற்றும் திருச்சினாப்பள்ளி மாவட்டங்களில் பிரதானமாகக் காணப்படுகின்றன. குறிப்பாக, மதுரை நகரமும் அதைச் சுற்றி யுள்ளப் பகுதிகளும் பழம்பொருள் தொகுதிகளை நமக்குப் பெரு மளவில் வழங்குகின்றன. பொதுக்கட்டடங்கள், நம்மிடம் சொல்வ தற்காக, தங்களுக்குள் நிறையக் கதைகளை நிரப்பி வைத்திருக்

கின்றன. எண்ணற்ற இடங்கள் நாயக்க வம்சத்தினரின் பெயரை மனதில் ஆழப்பதியச் செய்கின்றன. தென் மாவட்டங்கள் குறித்த அறிவு, பழைய ஆதாரங்களைத் தெளிவாக அறிவதற்கு உதவு கின்றன.

இந்த மூல ஆதாரங்களைத்தாண்டி, மிகவும் நம்பகத்தன்மை கொண்ட ராபர்ட் ஓர்மே மற்றும் எப்.சி. தன்வார்ஸ்சின் படைப்புகள், ஏற்கனவே பயன்படுத்தப்பட்டவையாக இருந்தாலும், மிகவும் முக்கியமானவை. இந்தத்தரவுகள் அத்தனையுமே நாயக்க சாம்ராஜ்ஜியத்தின் விவரங்களுடன் நாம் இணையப் போதுமான வையாக இருக்கின்றன. அவற்றுள் பல, எதிர்கால வரலாற்று ஆய்வுகளுக்கு இடமளிப்பதாகவும் இருக்கின்றன.

நாயக்க வம்சத்தின் அடித்தளத் தொடக்கம்- மதுரையில் நாயக்கர் ஆட்சியின் தோற்றத்தை அனைத்துத்தரவுகளும் ஒரேமாதிரியாகப் பேசுகின்றன. காஸ்யபக் கோத்திரத்தைச் சேர்ந்த நாகம நாயக்கரின் மகன், விஸ்வநாத நாயக்கரிலிருந்து அப்பாரம்பரியம் தொடங்கு கின்றது. கல்வெட்டுகளும்கூட இந்தக்கோணத்துக்கு தங்கள் ஆதரவை நல்குகின்றன. முதலாம் வேங்கடனின் தளவாய் அக்ரஹார ஏடுகள், வீர பூபா (வீரப்ப நாயக்கர்) விஸ்வநாத நாயக்கரின் குடும்பத்தில் பிறந்தவர் என்று தெளிவுபடுத்துகின்றது. இரண்டாம்வேங்கடனின் கூனியூர் ஏடுகள், திருமலை நாயக்கரின் மூதாதையர்களைத்தேடி, விஸ்வநாத நாயக்கரிலிருந்தே தொடங்கு கின்றன. நாயக்க வம்சத்தின் பல்வேறு கல்வெட்டுகளில், பின்னவரின் பெயர் பல இடங்களில் எழுதப்பட்டுள்ளது. சொக்கநாத நாயக்கர் பல இடங்களில் விஸ்வநாத சொக்கநாதர் என்று காணப்படுகின்றார்.

விஜயநகரப் பேரரசின் பிரதிநிதியாக, விஸ்வநாத நாயக்கரின் மதுரை ஆட்சித் தொடக்க நாள் குறித்துத் தொகுக்கப்பட்ட உள்ளூர் வரலாறுகள், பல்வேறு காலத்தைச் சுட்டுகின்றன. முக்கியமான இந்தக் கேள்விக்கான பதிலாக, கற்றறிந்தவர்களிடம் ஒருமித்தக் கருத்து இன்னும் உருவாகவில்லை என்பது, முக்கியமானது. விஸ்வநாத நாயக்கர், 1559ஆம் ஆண்டில் பதவியேற்றிருப்பார் என்ற நெல்சனின் கருத்தோட்டத்தை, ஆர். சீவெல் அப்படியே உள்வாங்க, அதை இந்திய அரசாங்கத்தின் கல்வெட்டியலாளர் ராவ் பகதூர் எச். கிருஷ்ண சாஸ்திரி[14]யும் ஏற்றுக்கொண்டிருக்கின்றார். இந்தப் பார்வை, ஒருபாதி சரியானது என்று பாண்டியர்கள் வரலாற்று மற்றும் மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதிகளின் வழியே அறியமுடிகின்றது. டெய்லரால் மொழிபெயர்க்கப்பட்ட கையெழுத்துப் பிரதிகளின் மீது மிகவும் நம்பிக்கைக் கொண்டிருந்

தார். மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப்பிரதி விஸ்வநாத நாயக்கரின் முடிசூட்டுவிழாவைக் குறிப்பிட்டுப் பேசுகின்றது. ஆனால் அவர் அதிகாரத்துக்கு வந்ததைப் பதிவுசெய்யவில்லை. மதுரையில் அவர் பல நல்ல திட்டங்களையெல்லாம் செய்துமுடித்த பின்புதான், அவரைப் பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டிருக் கின்றன என்பது தெளிவாகின்றது. அநேகமாக, நெல்சன் கூறுவது[15] உண்மையாக அமையும்வகையில் - அவர் எழுதுவதற்குமுன்பு- 1560ஆம் ஆண்டுக்கு முன்பான எந்தவொரு கல்வெட்டும் விஸ்வநாத நாயக்கரைப் பற்றிக் குறிப்பிடவில்லை. இந்தக் கேள்வியை அவர் முழுவதுமாக விவாதிக்கவில்லை. அதேவேளை யில், விஸ்வநாத நாயக்கரின் அரசாங்கம் 1559ஆம் ஆண்டில் பதவியேற்றது சரியான தேதிதான் என்றும் சந்தேகப்படுவதற்கு காரணம் எதுவுமில்லையென்றும் திருப்திகொண்டுவிட்டார்.

ரங்காச்சாரி, இந்தக்கேள்வி தொடர்பான விவாதங்களை முன்னெடுத்து, முயற்சிசெய்திருக்கின்றார். ஆனால் அவருக்கு நல்லதீர்வுகள் கிடைக்கப்பெறவில்லை. கல்வெட்டுகள் தவறாக நிறுவிய 1559ஆம் ஆண்டை கொள்கைப்பிடிப்புபோல ஏற்றுக் கொண்டு, மேற்கொண்டு எதை நோக்கியும் பயணிக்காமல், அப்படியே விட்டுவிட்டார்.[16] 1567ஆம் ஆண்டின் சதாசிவத்தின் கிருஷ்ணாபுரம் ஏடுகளில் காணப்பட்ட 'பாண்டியகுல ஸ்தபாணாச் சாரியா' பட்டத்துக்குரியவர் நாகம நாயக்கர்தான் என நம்பிக்கைக் கொண்டு, அவரை 1532-33ஆம் ஆண்டில் திருவாங்கூர் படையெடுப் பின்போது, விஜயநகரப்பேரரசின் முதன்மைத் தளபதியாக இருந்தார் என நிரூபணம் செய்ய முயலுகின்றார்.[17] அந்தவகையில், நாகம நாயக்கர் 1535ஆம் ஆண்டிற்கு முன்பு, கிளர்ச்சிசெய்து ஆட்சியைக் கவிழ்த்திருக்கமாட்டார் என்றும் வாதம்செய்கின்றார். அவர் அவ்வாறு செய்திருந்தால், 1535ஆம் ஆண்டுமுதல் 1557ஆம் ஆண்டு வரையில் விஜயநகரப் பேரரசின் பிரதிநிதிகளாக இருந்த விஸ்வநாத நாயக்கர் மற்றும் வித்தலா ஆகியோர் காலத்திலும் தொடர்ந்திருப்பார் என்று நிறுவுகின்றார். அதில் முதலாமவர், நாகம நாயக்கரின் மகன். பின்னவர், உறவினர். இந்தப் பிரதிநிதிகளின் ஆட்சிக்காலத்தில் நாகம நாயக்கர் அவ்வாறு ஆட்சிக்கவிழ்ப்பு செய்திருந்தால், நிச்சயமாக அந்தநிகழ்வு குறைந்தபட்சம் அந்தக் காலத்தின் கல்வெட்டுகளில் பதிவுசெய்யப் பட்டிருக்கும். இவ்வாறாக ரங்காச்சாரி, 'தலைமைக்கு எதிரான கடமை தவறி, கிளர்ச்சியை நாகம நாயக்கர் 1557 அல்லது 1558ஆம் ஆண்டில் நடத்தி யிருக்கலாம். மேலும் அவரது தோல்வியும், அவர் மகனது பதவி உயர்வும் 1559 ஆம்ஆண்டில் நிகழ்ந்திருக்கலாம்' என்ற முடிவுக்கு வருகின்றார்.[18] 1535ஆம் ஆண்டிலிருந்து 1557ஆம் ஆண்டு வரையி

லான நாகம நாயக்கரின் கிளர்ச்சி தொடர்பாக, பதிவுசெய்யப்பட்ட கல்வெட்டுகள் ஏதும் இல்லை.[19] நாகம நாயக்கரின் விசுவாசத்தைப் போற்றி, 1532-33 ஆம் ஆண்டுகளில் வழங்கியதாகச் சொல்லப்படும் பட்டம், அவருக்கானது அல்ல. அப்பட்டம், அவரதுபேரன் கிருஷ்ணப்ப நாயக்கருக்கானதாகும். இதுகுறித்து, சதாசிவத்தின் கிருஷ்ணாபுர ஏடுகளிலுள்ள செய்யுள்களை ஆதாரமாகக் கொள்ளலாம்.[20]

*‘யஸஸ்வினா பாண்டியகுலஸ்தபாணாசார்யக்கீர்த்தனா*
*மானோமா (நியேனா) தக்ஷிணாமஹாசமுத்திரதிஸ்வரேநாச்சே*
*நாகமாக்ஷமாபாபாவ்திரேனா நாலனபாக்கீர்த்தனா’*

ஒருவேளை நாகம நாயக்கர், அச்சுத ராயரின் தளபதியாக இருந்திருந்தால், அது நிச்சயமாகப் பதிவுசெய்யப்பட்டிருக்கும். அவை கல்வெட்டுகளில் இல்லாதுபோனாலும், திருவாங்கூர் படையெடுப்பை நேரடியாக விளக்கும் *அச்சுதராயபையூதயம்* எனும் நூலில் குறைந்தபட்சம் பதிவுசெய்யப்பட்டிருக்கும். ‘இந்தப்படையெடுப்பில் நாகமாவின் பாத்திரத்தை முற்றிலுமாக, கிருஷ்ண சாஸ்திரி புறக்கணித்திருப்பது, ஆச்சரியம்தருவதாக இருக்கின்றது’ என்று ரங்காச்சாரி குறிப்பிடுகின்றார்.[21]

டெய்லர் இந்தக்கேள்வியை, ‘இருபதாண்டுகளுக்கு முன்பு, அதாவது 1538ஆம் ஆண்டில் பொருத்தி, மறுஆய்வுக்கு உட்படுத்துகின்றார்.[22] அவரது கருத்துநோக்கம் அல்லது செயல் இலக் கம் அந்நிகழ்வுக்கும், விஸ்வநாத நாயக்கரின் அதிகாரயேற்பு அனுமான நாளுக்கும் இடையில் கொஞ்சம் இடைவெளியை ஏற்படுத்துவதாக உள்ளது. வில்க்ஸ், ‘மதுரையில் நாயக்க வம்சத் தின் அடிக்கல், 1532ஆம் ஆண்டில்[23] நாட்டப்பட்டது’ என்று நாள் குறிக்கின்றார். கால்டுவெல், நெல்சனின் தேதியை மறுபரிசீலனை செய்யச் சொல்லி, வலுவானக் கோரிக்கை வைப்பதுடன், 1520ஆம் ஆண்டில் அது நடந்திருக்க வேண்டும் என்று பரிந்துரையும் செய்கின்றார்.[24] பதவியேற்புத் தேதியை மாற்றியமைக்கவேண்டிய நீண்டநெடியக் கோரிக்கையை அது கொண்டிருக்கும் அதேவேளையில், 1559ஆம் ஆண்டு கற்றறிந்தவர்களால் மறுப்பின்றி ஆழமாக உணர்ந்து ஏற்கப்பட்டிருந்தது. விஜயநகரப் பேரரசின் ஆணைக்கு எதிராக, நாகம நாயக்கர் உருவாக்கிய கிளர்ச்சி, நாயக்க வம்சத்தின் தொடக்கம் தொடர்பானக் கேள்வியின் அம்சமாக ஆகிவிட்டிருக்கின்றது. இந்தக் கிளர்ச்சியும் விஸ்வநாத நாயக்கரின் பிரதிநிதித்துவமும் மரபுரீதியாக மிக நெருக்கமாக இருப்பதால், சந்தேகத்தையும் கொண்டிருக்கின்றது.

*1557-58*ஆம் ஆண்டு, நிலைநிறுத்தப்பட முடியாத தேதியாகிப் போன நாகம நாயக்கரின் ஏகாதிபத்தியத்துக்கு எதிரான அறைகூவல், கல்வெட்டுகள் மற்றும் பல்வேறு ஆதாரங்களின் வழியே கவனமாக ஆய்வுசெய்யப்பட்டு, தெளிவுறுத்தப்பட்டுள்ளது. *1484*ஆம் ஆண்டின் கல்வெட்டொன்றில், 'விஜயநகரப் பேரரசர் முதலாம் சாளுவ நரசிங்ஹாவின் முதன்மைப் பணியாள்'[25] என்று அவரைக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த உயர்பதவியை அடைவதற்கு, அவர் முப்பது அல்லது முப்பத்தைந்து ஆண்டுகளை செலவிட்டிருக்க வேண்டும். அந்நிலையில், கிளர்ச்சிசெய்ததாகப் புனைந்து சொல்லப் படும் போது, அவர் வயது *110* ஆண்டுகளைத் தாண்டியதாக இருக்கின்றது. கல்வெட்டுகளில் காணப்படும் இந்த நாகமா, மதுரை வரலாற்றுக் காலக்கிரமத்தில் சொல்லப்படும் விஸ்வநாத நாயக்கரின் தந்தையாக இருக்கமுடியாது என்பது கிருஷ்ண சாஸ்திரியின் கருத்தாகும். அதற்கு ரங்காச்சாரி, ஒப்புதல் கொடுக் கின்றார். மேலும், குறைந்தபட்சம் *1549*ஆம் ஆண்டுவாக்கில், செவப்ப நாயக்கர்[26] தஞ்சாவூரில் ஆட்சியை நிறுவினார் என்பதற்கு போதுமான அளவிற்கு ஆதாரங்கள் காட்டப்படுகின்றன. இந்தநிகழ்வு முந்தையதாகக்கூட இருக்கக்கூடும். *1541*ஆம் ஆண்டு அச்சுத ராயர் மரணமடைந்தபோது, தஞ்சாவூரை தனது மைத்துனி (அண்ணி) முத்திமாம்பாளுக்கு சீதனமாகக் கொடுக்கச்சொல்லி கேட்டுக் கொண்டார். முத்திமாம்பாள் செவப்ப நாயக்கரின் மனைவி.[27] நாகம நாயக்கரின் கிளர்ச்சி, பிறகு மறைமுகமான தீர்வைக் கொடுத்திருந்தாலும், பாண்டிய அரசருக்கு எதிராக தஞ்சாவூர் அரசரின் ஆக்கிரமிப்பு, அதுபோல ஒருநிகழ்வு நடந்ததாக எந்தவொரு புனைவும் *1549*ஆம் ஆண்டுக்குப் பின்பு, இடம்பெற வில்லை. மேலும், அச்சுத ராயரின் ஆட்சிக்காலத்தில் நாகம நாயக்கர் கிளர்ச்சி செய்திருக்க வாய்ப்பே இல்லை. முன்பே குறிப் பிட்டதுபோல அங்கே கல்வெட்டு அல்லது இலக்கிய ஆதாரங்கள் எதுவுமே சான்றளிப்பதாகவும் இல்லை. மேலும், திருவாங்கூர் படையெடுப்பின்போது, அதைச் செயல்படுத்தும் ஓர் அதிகாரியாக, அவர் இருந்து வந்திருக்கின்றார். வரலாற்றுத் தரவுகளின் அடிப்படையில், அவர் மேன்மைதங்கிய ஓர் அதிகாரியாக அரசப்பிரதிநிதி அல்லது பொதுவருவாய் அதிகாரியாக இருந்து, ஒட்டுமொத்தத் தென்னாட்டை தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக் கின்றார். கிளர்ச்சிக்குமுன்பு அவர், பல பொறுப்புகளைச் சுமந்த நம்பிக்கையான ஓர் அதிகாரி. மிக உயர்ந்த இப்பதவி, அச்சுத ராயரின் கீழ், சலக ராஜு திம்மராசு வகித்துவந்தார். அவருக்குப்பின் அதை, வித்தலா ஏற்றுக்கொண்டார். அதனால், நாகம நாயக்கரின் கிளர்ச்சி, அச்சுத ராயரின் ஆட்சிக்காலத்துக்கு முன்பு, அதாவது கிருஷ்ண தேவராயர் காலத்தில் நடந்திருக்கலாம்.

கால்டுவெல், இந்தக்காலத்தை சற்றே முன்னுக்கு 1520ஆம் ஆண்டுக்குத் தள்ளுகின்றார். ராய்ச்சூர் வெற்றிக்குப்பின்பு, சிலகாலம் கிருஷ்ணதேவராயர் தொல்லைகள் ஏதுமின்றி, 1525ஆம் ஆண்டு வரைக் கழித்ததாகத் தெரிகின்றது. அதேவேளையில், அவரது இறுதிக் காலம் அப்படி இருந்ததாகத் தெரியவில்லை என நூனிஜ்ஜின் குறிப்புகளும், சில கல்வெட்டு ஆதாரங்களும் தெரிவிக்கின்றன. போர்த்துக்கீசிய வரலாற்றுக் குறிப்பொன்று,[28] 'அரசரின் உடல்நிலை, அவருக்குத் துயரமளிப்பதாக மாறிவிட்டது. அவர் பொறுப்புகளை தனது மகனுக்கு விட்டுக்கொடுக்க ஆயத்தமானார்' என்கின்றது. மன்னர் இறந்துவிட்டார். அவரை அமைச்சர் ஒருவர் விஷம்வைத்துக்கொன்றதாக நம்பப்பட்டது. இதேகாலகட்டத்தில் அரசரின் நம்பகமான பொறுப்புள்ள அதிகார மிக்க அதிகாரியால் குழப்பங்கள் உருவாக்கப்பட்டன. அச்சுதராயபியூதயம்[29] மற்றும் 1528ஆம் ஆண்டின் கல்வெட்டுகளால் அறியப்படும் சோழநாட்டின் ஆளுநர் வீர நரசிம்ஹா, அதனைச் செய்தார். அரசருக்குக் கீழ்பபடியாமை எனும் நாகம நாயக்கரின் திட்டம் ஒருவேளை வீர நரசிம்ஹா மீதும் செல்வாக்கைச் செலுத்தியிருக்கலாம். இதையடுத்து, தலைநகரில் குழப்பங்கள் உருவாயின. இவ்வாறாக, கிருஷ்ணதேவராயரின் இறுதிக்காலத்தில் நாகம நாயக்கரின் கிளர்ச்சி நடந்திருக்கலாம்.

இந்தத் தரவுகளின் அடிப்படையில் மதுரையில் நாயக்கர் வம்ச ஆட்சியின் தொடக்கம் குறித்துத் தெளிவாகின்றது. மேலும், தஞ்சாவூரி ஆந்திர ராஜுலு சரிதா[30] போதுமானத் தரவுகளை முன்வைக்கின்றது. பாண்டியர்கள் மீது சோழப் படையெடுப்பு, ராயரிடம் உதவிகேட்டு பாண்டியனின் கோரிக்கை, பிரச்சனைகளைத் தீர்க்கச்சொல்லி நாகம நாயக்கர் தலைமையில் படை அனுப்புதல், நாகம நாயக்கரின் வெற்றி மற்றும் அபகரிப்பு, தந்தை நாகம நாயக்கர் மீது தாக்குதல் நடத்திய மகன் விஸ்வநாத நாயக்கரின் வெற்றி, இறுதியில் நாகம நாயக்கருக்கு மன்னிப்பு, விஸ்வநாத நாயக்கர் மதுரையின் அரசப்பிரதிநிதியாக நியமனம், இவையெல்லாமே கிருஷ்ணதேவராயரின் ஆட்சிக்காலத்தில்தான் இடம்பெறுகின்றன. கிருஷ்ணதேவராயரின் இறப்புக்குபின் சில காலம் விஸ்வநாத நாயக்கர், புதிய நிர்வாகத்தை அமைத்து பேரரசை மேம்படுத்தினார் என்றும் கூறப்படுகின்றது. இதன் உண்மைத் தன்மை ஆய்வுக்குரியது.

கல்வெட்டுகள், வரலாற்றுத் தரவுகள் மற்றும் இன்னபிற ஆதாரங்களால் விஸ்வநாத நாயக்கர் மதுரையில் நாயக்க வம்சத்தின் பதியத்தை, கிருஷ்ண தேவராயரின் இறப்புக்கு 1530களுக்கு முன்பே போட்டுவிட்டார் என்பது தெளிவாகின்றது. சில கல்வெட்டுகளின்

வழியே, விஸ்வநாத நாயக்கர் மதுரையின் ஆட்சியாளர் பொறுப்பில் திகழ்ந்தார் என்பதும் உறுதியாகின்றது. 1906ஆம் ஆண்டின் பிறசேர்க்கை 'அ' வில் வரிசை எண். 14, 1598ஆம் ஆண்டைப் பற்றிப் பேசுகின்றது.[31] அதுவும், அதேஆண்டின் முதலாம் வேங்கடனின் வெள்ளாங்குடி ஏடுகளும்[32] பாண்டிய மன்னன் திருவடியையும் மற்ற அரசர்கள், தளபதிகளை விஸ்வநாத நாயக்கர் வென்ற சாதனைகளைக் குறிப்பிடுகின்றன. தனது வீரத்தால் மதுரா ராஜ்ஜியத்தைக் கட்டியமைத்தக் கதைகளை அவை பிரலாபிக் கின்றன. இந்தத் தகவல்களை சதாசிவத்தின் கிருஷ்ணாபுரம் ஏடுகள், மறைமுகமாகக் குறிப்பிடுகின்றன. 1912ஆம் ஆண்டின் வரிசை எண். 17-ல் உள்ள 1565 குரோதனா ஏடு,[33] ராமராஜ அய்யனிடமிருந்து திருவடியின் தேசத்தை விஸ்வநாத நாயக்கர் 'அமரநாயகமாக'ப் பெற்றார் என்கின்றது. இந்த ஆதாரங்களைக்கொண்டு அவர், திருவாங்கூர் வரையிலான பரப்பெல்லையை தன் கட்டுக்குள் வைத்திருந்தார் என்பதும் உறுதியாகின்றது. அதற்கு அவர், மதுரையின் அதிகாரத்தை கையில் வைத்திருந்தால் மட்டுமே முடிந்திருக்கும் என்பதும் தெளிவாகின்றது. இந்தநிகழ்வுகள் எல்லாமே, அச்சுத ராயரின் திருவாங்கூர் படையெடுப்பையொட்டி நடந்தவையாகவே குறிப்பிடப்படுகின்றன. மேலும், மதுரையில் நாயக்கர் ஆட்சியை அமைப்பதற்கு உள்ள தடைகளை நீக்கும்வகை யில், பொறுப்பு மேற்கொள்வதாகக் காட்டப்படுகின்றன. தலைநகரிலிருந்து விஸ்வநாத நாயக்கர் விஜயநகரப் படைகளுக்குத் துணையாக வந்தார் என்பதை ஏற்பதற்கானச் சான்றுகள் இல்லை. அவர் ஏற்கனவே, மதுரையில் இருப்பது உறுதியான நிலையில் குழப்புவதாக இருக்கின்றது. அதேவேளையில், அவர் அச்சுத ராயரின் தளபதிகளுக்கு, இப்படையெடுப்பின்போது ஒத்துழைப்பு தந்தது, 1908ஆம் ஆண்டின் வரிசை எண். 133ன்படி,[34] 1535ஆம் ஆண்டின் கிராம தானம் குறித்தப் பதிவுகள் தென்படுகின்றன. விஸ்வநாத நாயக்கரின் ஒத்துழைப்புக்காக, அச்சுத ராயாரால் வழங்கப்பட்ட கிராமக் கொடைக் குறிப்பு, விஸ்வநாத நாயக்கர் அச்சுத ராயரின் முகவர் என்று பதிவிட்டிருக்கின்றது.

விஸ்வநாத நாயக்கருக்கு அரசப்பிரதிநிதியாக பதவிஉயர்வு வழங்கியது தொடர்பானதொரு வரலாற்று ஆய்வு, 'அப்பதவி, அப்படியே தூக்கிக்கொடுக்கப்பட்டதல்ல' என்று, ஓர் அழகிய முடிச்சை அவிழ்த்துக் காட்டுகின்றது. விஜயநகரப் பேரரசின் இறையாண்மையைக் காக்க, வட இந்தியப் படையெடுப்புகளில் தன்னை நிரூபித்துக் காட்டியதற்கும்; அதே அரசரின் காலத்தில் வடக்கில் மிகச்சிறப்பாக சேவையாற்றியதற்குத்தான் அவருக்குப் பதவிஉயர்வு தரப்பட்டது என்று நுட்பமாக, வித்தியாசப்படுத்திக்

காட்டுகின்றது. பர்ராதாஸ் மற்றும் நூனிஜ் ஆகியோரின் குறிப்புகள், கிருஷ்ணதேவராயருடன் ராய்ச்சூர் படையெடுப்பில் விஸ்வநாத நாயக்கரும் கலந்துகொண்டதைப் போதுமான ஆதாரங்களால் தெளிவுபடுத்துகின்றன. நாகம நாயக்கர் போர் தந்திரங்களில் மிகப்பெரிய சாமர்த்தியசாலிதான் என்றாலும், அந்தநேரத்தில் செயல்படுவதற்கு முடியாமல் மிகவும் வயது முதிர்ந்தவராக இருந்தார்.[35] அவரது மகன் விஸ்வநாத நாயக்கரோ, மிகவும் இளமை யாகவும், அழகாகவும், பெருந்தகைமை வாய்ந்தவராகவும், தந்தை யின் இடத்திலிருந்து அரசருக்குப் பணியாற்றுபவராகவும் ஆகிப் போனார்.[36] மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி, 'விஸ்வநாதன், அவரது பதினாறு வயதிலிருந்தே அரசர் வேட்டைக்குப் போகும்போது, உடன்போகிறவராக இருந்தார்' என்கின்றது. தி ஹிஸ்டரி ஆஃப் கர்நாடகா கவர்னர்ஸ் ஆவணங்கள், 'வடக்கில் கிளர்ச்சிசெய்துகொண்டிருந்த சிற்றரசர்களை அடக்க, கிருஷ்ணதேவ ராயரால் விஸ்வநாத நாயக்கர் அனுப்பிவைக்கப் பட்டார்' என்கின்றது. அந்த ஆவணங்களில் காணப்படும் தரவுகள், 'அவர் அங்கா, வங்கா, கலிங்கா, காஷ்மீர மற்றும் நேபாள நாடுகளை தோல்வியுறச் செய்து, கீழ்ப்படுத்தியதாக'க் கூறுகின்றது. ஒரிசா மற்றும் பல இடங்களில் அரசர் இருக்கும்போதே அவர் படையெடுப்பில் மிகச்சிறப்பாகச் செயல்பட்டதாக மிகைப்படுத்திக் கூறுவதாகவும் நம்ப இடமிருக்கின்றது. இந்த சாதனைகளெல்லாம் கிருஷ்ணதேவராயர் ஆட்சிக்காலத்தில் நடந்திருப்பதற்கான வாய்ப்புகள் சற்றே அதிகம்தான். ஒருபுள்ளியில்கூடும் இந்த ஆவணங்களெல்லாமே விஸ்வநாத நாயக்கர், கிருஷ்ணதேவராயரின் தலைமையில் ஒரிசா அரசருக்கு எதிராக, முகம்மதியர்களுக்கு எதிராக நேர்த்தியாகச் செயல்பட்டதால், அவருக்கு மதுரையின் அரசப்பிரதிநிதித்துவம் தரப்பட்டது என்று உறுதியாக நம்பமுடிகின்றது.

அரசப்பிரதிநிதித்துவத்துடன் விஸ்வநாத நாயக்கர் எத்தனை ஆண்டுகாலம் செயல்பட்டார் என்ற கேள்வி, மிக முக்கியமானதாக இருக்கின்றது. பாண்டியர்களின் வரலாறு, அவரது ஆட்சிக் காலத்தை இரண்டு ஆண்டுகளும் நான்குமாதங்களும் என்கின்றது. இந்தக்காலம் என்பது மிகவும் குறுகியது. மிகவும்குறைந்த இக்காலத்துக்குள் எண்ணற்ற வெற்றிகளையும் குடியேற்றங்களை யும் நிச்சயமாகச் செய்யமுடிந்திருக்காது. தி ஹிஸ்டரி ஆஃப் கர்நாடகா கவர்னர்ஸ் ஆவணங்கள் பாளையமுறை உருவாக்கப் பட்டதிலிருந்து, அவர் இருபத்தாறு ஆண்டுகள் ஆட்சி செய்தார் என்று வரையறுக்கின்றது. சப்ளிமெண்டரி மானுஸ்கிரிப்ட் என்ற ஆவணம், மொத்தத்தில் அவரது ஆட்சிக்காலம் இருபத்தாறு

ஆண்டுகள் என்கின்றது. மூன்றுகாலகட்ட ஆட்சியாளர்களிடம் அவர்களின் பிரதிநிதியாக, அவர் இருபத்தியிரண்டரை ஆண்டுகள் ஆட்சிசெய்தார் என்று மதுரைத்தலவரலாறு வரையறுக்கின்றது. கம்பம் பள்ளத்தாக்கை வென்று, ராமபத்திர நாயக்கருக்கு பெரியகுளத்தை[37] பாளையமாக வழங்கியக் காலத்துக்குப் பிறகும், மதுரைக் கோட்டைக்கு எழுபத்தியிரண்டு அரண்கள் கட்டப்பட்டப் பிறகும், விஸ்வநாத நாயக்கர் இருபதாண்டுகள் உயிர்வாழ்ந் திருப்பது, தெளிவாகின்றது. இந்த ஆராய்வின் முக்கியத்துவம் நெல்சன் மற்றும் அவரைப் பின்தொடரும் ஆய்வாளர்களின் கருத்தியல் திட்டம், தனி முழுமைவாய்ந்த பயனின்மையைக் கொண்டிருப்பதைக் காட்டுகின்றது. எல்லா வகையிலான வரலாற்றுத் தரவுகளும் விஸ்வநாத நாயக்கரின் முதல் அரசப் பிரதிநிதித்துவம் 1535ஆம் ஆண்டு முதல் 1544ஆம் ஆண்டுவரை யிலும், மீண்டும் அதேபதவியை அவர், 1545-46ஆம் ஆண்டு என ஓராண்டுமாக இருந்திருக்கின்றார் என்கின்றன. இதனை ரங்காச்சாரி ஏற்றுக்கொள்கின்றார். ஆனால், இடைவெளி குறித்து எதையும் அவர் விளக்கவில்லை. இக்காலகட்டத்தில் விஸ்வநாத நாயக்கர் பணியிலிருந்து தள்ளிவைக்கப்பட்டிருந்தாரா அல்லது வேறு எங்காவது பணிக்கு அனுப்பப்பட்டாரா என்பது கேள்வியாக இருந்தாலும், கிருஷ்ணதேவ ராயரால் நியமிக்கப்பட்ட நாளிலிருந்து அவர் மதுரையின் ஆட்சியாளராகவே இருந்தார் என்பது உறுதியாகின்றது.

இறுதியாக, ஜான் நியூஹாப் தனது குறிப்பில்,[38] காலவெளியி லான இவ்வரலாற்றின் பல இடங்களில் தகவமைப்புகள் செய்யப்பட்டிருப்பதாக உறுதிப்படுத்துகின்றார். 1533ஆம் ஆண்டின் நிகழ்வைக் குறிப்பிடும் அவர், 'மதுரை நாயக்கர்கள் தங்கள் நாட்டை தங்களின் முழுக்கட்டுப்பாட்டில் கொண்டிருக்கவில்லை. பரவாஸ் என்னும் மீனவர்கள் வாழ்ந்த பகுதி முழுவதையும் போர்த்துக்கீசியர்களிடம் விட்டுவிட்டனர். அங்கு அவர்கள் சுதந்திரமாக மதம்பரப்பினார்கள்' என்கின்றார். இந்தவிவாதம், மதுரையில் நாயக்கர்களின் சாம்ராஜியத்தை பதியனிட்ட விஸ்வநாத நாயக்கரின் ஆட்சி குறித்த விவாதத்தைத் தொடங்கிவைக்கின்றது.

### அடிக்குறிப்புகள்

1. Introduction to the Study of The History, p.XII
2. I.A., 1914, p.260
3. Ibid,1917, p.58
4. This Criticism of Mr.Rangachari's work is allowed to pass for the followoing considerations:- Mr.Rangachari's is an elaborate

work on the subject and challenges criticism by thos that take up the subject for further research. The Criticism above has nothing personal in it and applies obly to the pbulished work. Almost the same opinion of the work was expressed by, Mr.R.Sewell the historian of Vijayanagar, in a letter he wrote to me some time back. A review of the work at the beginning renders it superflous to make the constant referances which otherwise would be inevitable and in a case like, this, undesirable –Ed.

5. History of Tinnevelly p.55
6. Napoleon, The last Phase, pp.7-8
7. Madurai thalavaralaru. the prose introdenction to the Tiuppanimalai, Sen tamil Publication. No.27 a translation of this is appended. See Appendix. E
8. S.K.A., Sources, p.319
9. Some of the important letters bearing on political history have been translated by me in to English and given in Appendix A. Scattered references are also rendered in to English and introduced in their proper places.
10. Bertrand, iii, 273, Vida Appendix A, Letter No.6
11. Travels of the Jesuits, I, Preface, pp.viii-ix
12. ii, pp.v-vi
13. Ibid, p.64
14. Archaeological Survey of India Report, 1911-12, p.194
15. p.87
16. I,A., 1914, p.258
17. Ibid. p.191
18. Ibid, p.260
19. Ibid, p.15
20. E. I., ix p.336, 11. 115-6; Appendix D, No.61
21. I.A., 1914, p.191 n.
22. O.H. MSS., ii p.88
23. I, P.34
24. History of Tinnevelly, p.55
25. Appendix D, No.4
26. His inscription dated 1549, vide, T.S.Kuppusamy sastri: A Short History of the Tanjore Nayak Princes p.4
27. Ibid., p.3: Tanjavuri Vari Charitra – Taylor, C.R., iii, p.176
28. R.Sewell, A Forgotten Empire pp.356-360
29. S.K.A. Sources pp.158 and 162
30. Ibid., p.319 et seq.
31. Appendix D, No.97

32. Appendix D, No.96
33. Ibid, No.56
34. Ibid, No.14
35. R.Sewell, A Forgotten Empire, p.327
36. Ibid, P.230
37. Taylor, L, C.R., iii, pp.376-8
38. P.296. Vide Appendix C.

# 2

# விஸ்வநாத நாயக்கர் (1529-1564)

கிருஷ்ணதேவராயரின் நம்பிக்கைக்கு உரிய அதிகாரிகளில் ஒருவர், நாகம நாயக்கர். அவர் ராயரின் தளபதியாக, கோட்டையா என்ற பண்டகசாலைக் காப்பாளராக, தோஷாகானா அதிகாரி என்ற பொருளாளராக, தலைமை வருவாய் அதிகாரியாக, தென்பகுதியின் அரசப்பிரதிநிதியாக, பல்வேறுவகையானப் பாத்திரங்களை ஏற்றிருந்தார். தெற்குபிராந்திய நிர்வாகத்தின் பொதுமேற் பார்வை யாளர் பொறுப்பும் அவரிடமிருந்தது. இத்தனை ஆளுமைகளுடன், அரசரின் இராணுவத்தின் ஒருபகுதியையும் அவர் தனது கட்டுக்குள் வைத்திருந்தார். அவருக்கென்று தனியே சொந்தப் படையும் இருந்தது. இதுபோன்றதொரு உயர்மதிப்பு நாகமாவுக்குக் கிடைத்ததன் பின்னணியில், அவரது முன்வரலாற்று நேர்த்தி, உதவிகரமாக இருந்தது. முந்தைய ஆட்சிகளில் அவரது செயல் பாடுகள் முக்கியத்துவம் வாய்ந்தவையாகப் பொறித்துவைக்கப் பட்டிருந்தன. சாளுவ நரசிங்கரிடம், மிகமுக்கியமானப் பணியாள ராக, நாகமா இருந்தார். அவருக்குக் கீழே பல முகவர்கள் செயல்பட்டனர்.[1] துளுவ சாம்ராஜ்ஜியத்தை நிறுவியதில் நாகமாவின் பங்கு அளப்பரியது. இதுபோன்ற அரியசேவைப் பணிகளுக்கு ஒப்புக்கொடுத்திருந்த அவரை, கிருஷ்ணதேவராயர் தன்னுடனே வைத்துக்கொண்டார். அறிவார்ந்த அரசர்கள், தங்களுக்கு முன்னிருந்த ஆட்சியாளர்களிடம் பணிபுரிந்தவர்களை தங்களுடன் வைத்துக்கொள்வது, வழக்கமான ஒன்றாகவும் இருந்துவந்தது.

காலக்கிரம வரிசையில் நாகமாவின் பனாரஸ் பயணம், மிகவிரிவாகவே எடுத்தியம்பப்பட்டிருக்கின்றது. அவர் பணியில் இல்லாத காலங்களில், பொறுப்பை இராமபத்ர நாயக்கரிடம் நம்பிக்கையுடன் விட்டுவிட்டுச் சென்றிருக்கிறார். அவர் குடும்பத்தை நிலைபேறு அடையச் செய்வதற்கு ஓர் ஆண் குழந்தை அவருக்குத் தேவையாக இருந்தது. அது, அவரை பெரும்பக்தனாக மாற்றியிருந்தது. அதனால் அவர் நேரங்காலமெல்லாம் பார்க்காமல், பனாரஸிலிருந்த கடவுள் விஸ்வநாதனை பிரார்த்திப்பதிலும் தனது கவனத்தைச் செலவிட்டார். மேலும், தொலைதூர அசௌகரியப் பயணங்களை அவர் சிரத்தையுடன் மேற்கொண்டார். இரண்டாம்

வேங்கடனின் கூனியூர் ஏடுகள் விஸ்வநாதனின் பிறப்பு, அவரது தந்தையின் இனிய குணநலன்களாலும் விஸ்வேஸ்வரக் கடவுளின் அருளாலும் நடந்தது என்று தெரிவிக்கின்றன. ஆனால், அது சம்பவித்த நாள் எதுவும் தெளிவுறக் குறிக்கப்படவில்லை. என்ற போதும், அவரது வாழ்க்கை வரலாற்றின்படி கிருஷ்ணதேவ ராயருக்கு விஸ்வநாதன் பதினாறுவயதில் அறிமுகப்படுத்தப்பட்ட தாகத் தெரிகின்றது. அந்தவகையில், அவர் 1495ஆம் ஆண்டு வாக்கில் பிறந்திருக்கலாம்.

பதினாறு வயதில் அறிமுகப்படுத்தப்பட்ட விஸ்வநாதன், அரசருக்கு சேவைசெய்யும் ஒரு 'வெற்றிலைப் பெட்டி'யாக, தன் பணியைத் துவங்குகின்றார். பழந்தின்றுக் கொட்டைப் போட்ட வரும் எதிர்காலத்தை நுட்பமாகக் கணிக்கத்தெரிந்தவருமான நாகமா, மகனுக்குத் தோதான, நேரியப் பணியைப் பெறுவதற்கு எந்தவொரு சிரமமும் அடையவில்லை. விஸ்வநாதன் மிகஎளிதாக, அரசரின் தனி உதவியாளர்களில் ஒருவராக ஆகிப்போனார். அவரது இனிய தோற்றம், போதிக்கப்பட்ட கல்வி, ஆண்மையான தைரியம் ஆகியவை, ராயரின் மதிப்பீட்டில் அவரை மேலும்மேலும் உயர்த்திக்கொண்டே போயின. ஒரிசா மன்னருக்கு எதிரானப் படையெடுப்பின்போது, அரசருடன் அவரும் உடன்சென்றார். ஈடுபாடுகொண்ட அவரது பணியால், ஒரு படைப்பிரிவுக்கு அவர் பொறுப்பேற்றார். கி.பி. 1520ஆம் ஆண்டு ராய்ச்சூர் கைப்பற்றப் பட்டதில் அவரது பங்களிப்பும் இருந்தது. படிப்படியாக புகழின் உச்சம்நோக்கி நகர்ந்து, தந்தையைப்போலவே அரசரின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகிப் போனார். கடினமானப் பணிகளின் போதும், சிறப்பு நிகழ்ச்சிகளுக்காகவும் அவர் தனி அதிகாரத்துடன் தெற்கே பிரதிநிதியாக அனுப்பிவைக்கப்பட்டார்.

கிருஷ்ணதேவராயரின் ஆட்சிக்காலத்தின் இறுதிப்பகுதியில், ராஜ்ஜியத்தின் தெற்கு எல்லையில் மரபு உரிமை பனிமூட்டம் சூழ்ந்துகொண்டது. அப்போது அவரது கவனமும் தலையீடும் தேவைப்பட்டது. சோழ அரசன் வீரசேகரன் என்பவன், பாண்டிய நாட்டுக்குள் ஊடுருவி, அரசன் சந்திரசேகரனின் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டான். இதன்விளைவாக, அபகரித்துக் கொண்டவனிடமிருந்து நாட்டை மீட்க உதவிசெய்யுமாறு பின்னவன், ராயரிடம் முறையிட்டான். கன்னியாகுமரிவரையில் விஜயநகர சாம்ராஜ்ஜியம் பரவியிருந்தாலும், பழைய ஆட்சி யாளர்களான பாண்டியர்களும், சோழர்களும் தங்கள் முன்னோர்கள் ஆட்சிசெய்துவந்தப் பகுதிகளில் சாதாரணமாகவே அரசர்கள்போல இருந்துவந்தனர். அதனால் தனக்குக் கீழ், நிலஉரிமை பண்ணைய முறையில் இருக்கும் இருவருக்கிடையில் காரசாரமானப் போர்

உருவாவதை தேவராயர் விரும்பவில்லை. ஆனாலும், அப்பிரச்சனைக்கு விரைந்து முடிவெடுக்கத் திட்டமிட்டார். தெற்குப் பிராந்தியத்தின் அமைதிக்குப் பொறுப்பாளரான நாகமா, அப்போது தலைநகரில் இருந்தார். அவரை அனுப்பி, பாண்டிய மன்னனின் குற்றச்சாட்டுக்கும் கோரிக்கையுமான இன்ன பிற விஷயங்களுக்குத் தீர்வுகண்டு, அவனது ராஜ்ஜியத்தை அவனிடமே மீண்டும் ஒப்படைத்து ஆவணசெய்ய உத்தரவிட்டார். குறைந்தகால அவகாசத்திலேயே நாகமா, சோழனைத் தோற்கடித்து அவன் ஆக்கிரமித்த இடங்களை மீட்டார். அவரது நடவடிக்கையின் அடுத்தப்பகுதி, அதாவது மீட்கப்பட்டப் பகுதியில் பாண்டியனை மீண்டும் பதவியிலமர்த்துவது. ஆனால் அதைச் செய்வதற்கு நாகமா தயங்கினார். நாட்டில் அரசு அமைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய முயன்றபோது, அப்போது அங்கே நடந்தக் குளறுபடிகள் அவரது யோசனையை மறுபரிசீலனைக்கு உள்ளாக்கின. ராஜ்ஜியத்தை மீட்டு, பாண்டியனிடம் ஒப்படைக்கச் சொல்லி பேரரசர் உத்தரவிட்டிருந்தும், நிலைபேறுடைய ஏற்பாடுகளுக்கு வாய்ப்பிருந்தும், அதற்கானச் சூழல் நிலவியும் நாகமா அப்படிச் செய்யவில்லை. ஆதிக்க மனப்பான்மையுடைய ஆளுமை அவருக்கிருந்தது. தளர்விலா ஊக்கமுடைய, சிறிதும் விட்டுக்கொடுக்காத, முழுநிறைக் கண்டிப்புடைய நிர்வாகி, அவர். தனது யோசனையில் உறுதியாக இருந்தார். சிறிய நிலப்பரப்பை ஆண்ட, தகுதியற்ற, முந்தைய ஆட்சியாளர்களை எண்ணிப்பார்த்தார். நாட்டின் அமைதியான வளர்ச்சிக்கு, தீர்க்கமான மறுசீரமைப்பு தேவை என்று உணர்ந்தார். அதற்காக, பாண்டியர்களிடம் அவர் நடந்துகொண்ட விதம் அத்தனைத் தெளிவானதாக இருக்கவில்லை. நாகமாவுக்கும் பாண்டியர்களுக்கும் இடையில் பேதம் உருவாகியது. நாகமா மீதானக் குற்றச்சாட்டுகளை பாண்டிய அரசன், பேரரசரிடம் கொண்டுசென்றான். நாகமாவின் திடீர்மாற்றம் குறித்தும், ராயர் விரைந்து தண்டனை வழங்கியதுதொடர்பான வரலாற்றுத் தரவுகளும் அத்தனைவிரிவாக இல்லை. ஆனால் **தஞ்சாவூரி ஆந்திர ராஜுல சரிதா** எனும்நூல், நாகமாவின் நிலை சிறப்பாகவே இருந்தது என்று, சூழ்நிலையை விரிவாக விளக்குகின்றது. தனது பார்வையையும் எண்ணங்களையும் பேரரசரிடம் நாகமா வலுவான வார்த்தைகளால் எடுத்துரைத்தார் என்றும் தெரிவிக்கின்றது. தனது தவறுதலான நடவடிக்கைகளை பேரரசரிடம் குற்றச்சாட்டுகளாகப் பதிய, பாண்டிய அரசன் சென்றிருப்பதை அறிந்ததும், நாகமா தனது நம்பிக்கைக்குரிய பணியாளன் இராமபத்ர நாயக்கரை தலைமையகத்துக்கு அனுப்பியதும் தெரிகின்றது. இதெல்லாவற்றையும் தாண்டி பேரரசர், எந்த இழப்புவந்தாலும் சரியென்று பாண்டியனை ஆட்சியில் அமர்த்தவும், பழைய ஏற்பாடுகளைத் தொடரவும்

தயாராகிவிட்டார். தெற்கில் புதிய நடவடிக்கைகளை எடுக்க அவர் தயாராக இருக்கவில்லை. அடுத்தடுத்து ராயர் எடுத்த நடவடிக்கைகள், நாகமாவை நிலைகுலையச் செய்துவிட்டன.

நாகமாவின் கீழ்ப்படியாமை, அடங்காது கிளர்ச்சிசெய்கின்ற போக்கில், கிருஷ்ணதேவராயர் மிகவும் சீற்றமடைந்ததாகச் சொல்லப்படுகின்றது. கலகம்செய்வது யாராக இருந்தாலும் அந்தநபரை விருப்பமிருந்தால் தனது அதிகாரிகள் தண்டிக்கலாம் என்று வெளிப்படையாக அறிவிப்புவிடுத்தார். அந்த அறிவிப்புக்கு, நாகமாவின் மகன் விஸ்வநாதன் மட்டுமே செவி சாய்த்தார். ராயருக்கு, அவரைத் தேர்வு செய்வதில் தயக்கம் இருந்தது. ஆனாலும் அதை உதறிவிட்டு, பெரும்படையைக் கொடுத்து நாகமாவைத் தண்டிக்க அனுப்பி வைத்தார். நாகமாவுக்கும் விஸ்வநாதனுக்குமானப் பேச்சுவார்த்தை தோல்வியில் முடிந்து, போர்மேகம் மூண்டது. தந்தையும் மகனும் எதிரெதிராய் மோதிக்கொண்டார்கள். நாகமா கைதியாகச் சிறைபிடிக்கப்பட்டு, பேரரசர் முன்னால் நிறுத்தப்பட்டார். மகன் விஸ்வநாதனின் ஒருங்கிணைந்த செயல்பாடு, அளவுக்கதிகமான விசுவாசம், கடமையுணர்வு ஆகியவைக் காரணமாக, தந்தை நாகமாவின் கலகச் செயல்பாடுகளை பேரரசர் மன்னித்துவிட்டார். இந்த முழுக்கதையும் கட்டற்ற, வண்ணமயமானப் புனைவு எனத் தெளிவாகத் தெரிகின்றது. அநேகமாக, நாகமா தனது மகன் விஸ்வநாதனின் அதிகாரிகளால் கௌரவமாக அழைத்துவரப்பட்டிருக்கலாம். அல்லது தனது பிரியத்துக்குரிய மகனின் மேன்மைக்காக, பேரரசருக்கான சேவைப்பணியிலிருந்து ஓய்வு பெறுவதற்கானத் திட்டத்துடனும் நாகமா திரும்பிவந்திருக்கலாம். பேரரசரின் மன்னிப்புக்குப் பிறகு, நாகமா என்ன ஆனார் என்பது தெரிய வில்லை. பிற்படநேர்ந்த அவரது வாழ்க்கை அல்லது மரணம் குறித்து, எந்தவொருத் தகவலையும் வரலாறு தன்னிடம் வைத்துக்கொள்ளவில்லை.

பாண்டியனுடன் பின்னர் பேரரசர் நடத்திய உரையாடலின் போது, நாகமா குறித்த உண்மைத் தகவல்களை அறிந்துகொண்டார். நாகமாவின் பார்வையும் செயல்பாடுகளும் நடைமுறைப்படுத்தக் கூடியவைதான் என்பதை உணர்ந்தார். தனது இயலாமையினால் உடமையாளரிடமே திரும்ப ஒப்படைக்க உத்தரவிட்டதாக, பேரரசர் வெளிப்படையாக ஒத்துக்கொண்டார். பின்னர் விஸ்வநாதனை தெற்கின் அரசப்பிரதிநிதி என்ற பட்டத்துடனும், தெற்குப்பகுதியின் சிம்மாசன பிரபு என்ற பட்டத்துடனும் நியமனம்செய்தார்.

பொறுப்பேற்றுக்கொள்வதற்காக விஸ்வநாத நாயக்கர் விஜயநகரிலிருந்து பெரும்படையுடன் கிளம்பினார். மதுரையை

வந்தடைந்த அவருக்கு, கோட்டையின் நிலை அவ்வளவு திருப்தி கரமாக இருக்கவில்லை. தனது தளவாயும் பிரதானியுமான அரிய நாதர் மற்றும் கேசவப்ப நாயக்கர் உதவியுடன் கோட்டையையும் காவல் அரண்களையும் மறுசீரமைப்பு செய்தார். அத்துடன் சுந்தரேஸ்வரருக்கும் மீனாட்சிக்கும் கோவில்களை நிர்மாணித்தார். வருவாய்த் திரளும் வாய்ப்புகளுக்கு ஏற்ப, நாட்டின் அபிவிருத்தித் திட்டங்களை மேம்படுத்தினார். மக்களிடம் பெருந்தன்மையுடன் நடந்துகொண்டார். வரிகளை அபூர்வமாக வசூல்செய்தார். அதேவேளையில் தனது தந்தை சேர்த்துவைத்த செல்வங்களை, பொதுமக்களின் பயனுக்காகத் தாராளமாகச் செலவிட்டார். இதனிடையே, பாண்டிய அரசர்கள் இனம் முற்றிலுமாக முடங்கிப் போய், விஸ்வநாத நாயக்கர் தேசத்தின் முழுஆட்சியாளனாக ஆகியிருந்தார். பாண்டியர்களின் இந்த வழக்கொழிவு சந்திரசேகரப் பாண்டியனுக்கும் அவன் குடும்பத்துக்கும் மட்டுமே பொருந்தும். தென்காசிப் பாண்டியர்களை இது குறிக்காது. சந்திரசேகரப் பாண்டியனும் பாண்டிய ஆட்சியாளன் என்றே அறியப்படு கின்றான். அவனது ஆட்சி, சோழர்களின் வலுச்சண்டையில் வழக்கொழிந்து விட்டது என வரலாற்றுத் தரவுகள் பகர்கின்றன.

சோழமண்டலத்தின் விஜயநகர அரசப்பிரதியாக, ஆரம்பத்தில் விஸ்வநாத நாயக்கரே இருந்துவந்தார். கிருஷ்ணதேவராயரின் இறப்புக்குப் பின்பு (1530), ஆட்சிப் பொறுப்புக்கு வந்த இளைய சகோதரர் அச்சுத ராயர் நிர்வாகச் சீரமைப்புக்காக, சில மாற்றங்களை மேற்கொண்டார். மதுரையின் ஆளுகையிலிருந்து சோழ மண்டலத் தைப் பிரித்து, தன் மனைவி திருமலாம்பாளின் சகோதரியின் கணவன் செவ்வப்ப நாயக்கரை அதன் பிரதிநிதியாக நியமித்துக் கொண்டார். இந்தப் புதிய ஏற்பாட்டின்படி, திருச்சினாப்பள்ளி மதுரையின் ஆளுகைக்கு வந்துசேர்ந்தது. வல்லம் தஞ்சாவூருக்குப் போனது. வரலாற்றுத் தரவுகள், விஸ்வநாதன் மற்றும் தஞ்சை அரசர் இருவருமாக இந்த இடங்களைப் பரிமாற்றம் செய்துகொண்டனர் என்று தெரிவிக்கின்றன. ஆனால் அது, இருவரின் விருப்பத்தின் பேரில் நடந்தது அல்லவென்றும், பேரரசரின் ஏற்பாட்டின்படி பரிமாற்றம் செய்யப்பட்டது என்றும், இதன்மூலமாக அந்தந்தப் பகுதிகள் சுதந்திரமாக வலுப்பெறும் என்றும் ஆதாரங்கள் காட்டப் பெறுகின்றன.

திருச்சினாப்பள்ளி மதுரையின் ஆளுகைக்கு வந்ததும் முதல் வேலையாக அதன் பாதுகாப்பைப் பலப்படுத்தும் பணியை விஸ்வநாத நாயக்கர் ஏற்றுக்கொண்டார். வழிப்பறிக் கொள்ளைக் காரர்களின் அழிவுவேலையை வெற்றிகரமாக அழித்தொழித்தார். காவேரியின் இருகரைகளிலும் இருந்த காடுகளை அப்புறப்

படுத்தினார். இதனால் கொள்ளைக்காரர்களின் கூடாரங்கள் முற்றிலுமாக ஒழிக்கப்பட்டன. பக்தர்களின் உயிருக்கும் உடமைக்குமான காவல் பாதுகாப்பை தேவையான அளவுக்கு உருவாக்கினார். பாதுகாப்பு அரண்களால் நகரை வலிமைப்படுத்தினார். நகரைச் சுற்றி இரண்டடுக்குச் சுவரும் பெரிய அகழியும் அமைத்தார். குறிப்பாக, திருச்சினாப்பள்ளி மற்றும் ஸ்ரீரங்கத்திலுள்ள கோவில்கள் மீது, அதிக அக்கறை காட்டினார். தெப்பக்குளம் அவருக்கு பெரும்பெயரை பெற்றுத்தந்தது. ஸ்ரீரங்கம் கோவில் அவரால் எழுப்பப்படவில்லை என்று வரலாற்றுக் குறிப்புகள் செப்புகின்றன. அநேகமாக, அக்கோவிலின் சீரமைப்புப் பணிகளையும் மற்ற புதிய கட்டுமானங்களையும் அவர் செய்திருக்கலாம். அக்கோவிலுக்கு மூன்றுலட்சம் பவுன்களை செலவிட்டதாகக் **கோயிலோலுஹு** என்ற ஆவணம் இயம்புகின்றது. கோவிலைச் சுற்றிலும் வீடுகளைக் கட்டி, அங்கே மக்களைக் குடியேற்றினார்.

பரந்த மதுரைப் பரப்பின் வடக்கே சீரமைப்பு, பாதுகாப்பு மற்றும் கோவில் புணரமைப்பில் விஸ்வநாதநாயக்கர் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்தபோது, தளபதியும் துணை ஆட்சியாளருமான அரியநாதர், தூரத் தெற்கே தின்னவேலி தேசத்தில் அமைதியையும், சட்டம் ஒழுங்கையும் பராமரிக்க முயன்றுகொண்டிருந்தார். அவரது பணி, அத்தனை எளிதாக இருக்கவில்லை. கயத்தாறைச் சுற்றிலும் வலுவாக நிலைபெற்றிருந்த குறுநிலத் தலைவர்களின் எதிர்ப்பை, அவர் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. அவர்கள் மண்ணுரிமைப் போருக்குத் தயாராக இருந்தனர். தங்களை பஞ்ச பாண்டியர்கள் என்று அழைத்துக் கொண்டனர். முன்னால் ஆட்சியிலிருந்த பாண்டியர்களுக்கு அவர்கள் திறைசெலுத்தி வந்தவர்கள் என்று வரலாற்றின் பக்கங்கள் கூறுகின்றன. ஒருசில தரவுகள், தாத்தா சந்திரசேகர பாண்டியனின் காமக்கிழத்திகளுக்குப் பிறந்தவர்களின் வழிப் பேரப்பிள்ளைகள் அவர்கள் என்றும் கூறுகின்றன. பதினைந்தாம் நூற்றாண்டிலும்கூட பிற்காலப் பாண்டியர்கள் மதுரைப் பகுதியில் காணப்படவில்லை என்று கல்வெட்டுகள் கூறுகின்றன. விஜயநகரப் பேரரசின் விரிவாக்கம், அவர்களை தெற்கின் எல்லை வரை விரட்டியடித்திருக்கின்றது. சட்டப்படியான நிலையில், பதினாறாம் நூற்றாண்டிலும்கூட மதுரையில் பாண்டிய அரசர்கள் காணப்படவில்லை. தென்காசியைச் சுற்றிலுமிருந்த பாண்டியர்கள் மட்டும் மதுரை மீதான தங்கள் உரிமையைத் தொடர்ந்து கோரிக் கொண்டிருந்தனர். சட்டப்பூர்வமற்ற பாண்டியர்களை அல்லது உரிமை கோரும் முந்தைய ஆட்சியாளர்களிடம் நிலவுரிமைப் பெற்ற பண்ணையாளர்களை, அடக்கி ஒடுக்கி தன்வயப்படுத்த அரியநாதர் முயன்றார். திட்டமிட்ட வலுவான அரசை அமைப்பதற்காக அந்நிய அதிகாரத்தை ஏற்க மறுத்தவர்களை, எதிர்ப்பு

உணர்ச்சியின்றி இணங்கவைக்க கடும்பிரயோகத்தை மேற் கொண்டார். ஆயினும் தன் வயப்படுத்தும் முறைகள் தோல்வி யையே தந்தன. எதிர்ப்பாளர்களால் மறுதலிக் கப்பட்டார். அதனால் விஸ்வநாதநாயக்கரிடம் படைத்துறைக்கானப் போர்ப்பொருள் நாடி முறையிட்டார். விஸ்வநாத நாயக்கரோ எதிர்ப்பாளர்களின் வீரமரபை மதித்து, நவநாகரித்துடன் நடக்க அரிய நாதருக்கு உத்தரவிட்டார். இதையடுத்து, பெரும்பாலானோர் சமாதானத்துக்கு வந்துசேர்ந்தனர். சில குறுநிலத் தலைவர்கள் பாளையமுறையில் இணைந்துகொள்ள சம்மதம் தெரிவித்தனர்.

திருவாங்கூருக்கு அச்சுத ராயர் படையெடுத்து வந்தது, இந்தப் போராட்டத்துடன் தொடர்புடையதுதானா என்று தெளிவுற எங்கும் காணப்படவில்லை. ஒருவேளை, தென்காசியில் தன்னொதுக்கமாக வாழ்ந்துவந்த/பதுங்கியிருந்த பழைய பாண்டிய வம்சத்தினர், மதுரையின் அரசியல் அமைதிக்கு பங்கம் விளைவிக்கத் தூண்டி விட்டிருக்கலாம். எது எப்படியோ, விஜய நகரத்துக்கு எதிராக, எதிராளிகளுக்குப் புகலிடமாக விளங்கிய திருவடி எனுமிடத்தில் உருவாகி வந்தக் குழப்பங்களுக்கு முடிவுகட்ட, இந்தப் படை யெடுப்பு வழிவகை செய்தது. விஸ்வநாத நாயக்கரின் அரசப் பிரதிநிதித்துவத்துக்கு இருந்துவந்த அத்தனைத் துன்புறுத்தல்களும், இந்த முடிவால் அகன்றுபோயின. இதையடுத்து, தென்காசிப் பாண்டியர்கள் பண்ணை நிலக்குடிமை யாளர்களாக மாறினர். பாண்டிய இளவரசியொருத்தியை அச்சுத ராயருக்கு மணமுடித்துத் தந்து, இணக்கமான நிலைக்கு வழி ஏற்படுத்தப்பட்டது.[2] திருவடியும் திறைசெலுத்தும் நாடாக மாறியது. இதனை புத்தளவீர ராம வர்மன் கல்வெட்டு உறுதிப்படுத்துகின்றது.[3] தின்னவேலியில் இறுதியாக அமைதி ஏற்படுத்துவதற்கு பேரரசின் தலையீடு தேவையாக இருந்தது. அரிய நாதர் மற்றும் அவரது ராணுவ உதவி யில்லாமல் விஸ்வநாத நாயக்கர் தனியாக சாதித்தார் என்பது நம்பு வதற்கு உகந்ததாக இல்லை. வரலாறுகளில் நிலைநிறுத்தப்பட் டிருக்கும் இந்தத் தகவல்கள் உச்சபட்சப் புனைவாக, ஏற்கமுடியாத ஒன்றாக இருக்கின்றது. விஸ்வநாத நாயக்கர் மதுரையின் ஆட்சி யாளராக இருந்தபோதும், குறைந்த அளவிலான அதிகாரத்தையே கொண்டிருந்தார். பேரரசின் தளபதிகளின் உதவியுடன் ஒட்டு மொத்த நடைமுறையை மேற்கொண்டார் என்பது தெளிவாகின்றது. இந்தவிவகாரத்தில் விஸ்வநாத நாயக்கரின் மகன் கிருஷ்ணப்ப நாயக்கர் பெரும்பங்கு வகித்தார் என்று சதாசிவம் நடத்திய கிருஷ்ணாபுரம் ஏடுகளின் ஆய்வில் தெரியவருகின்றது.

தின்னவேலி வெற்றிக்குப் பிறகு விஸ்வநாத நாயக்கரும் அரிய நாதரும் நாட்டை முன்னேற்றுவதில் தங்களை ஈடுபடுத்திக் கொண்

டனர். தின்னவேலி நகரம் விரிவுபடுத்தப்பட்டு, மேம்படுத்தப் பட்டது. கோவில்கள் நிர்மாணிக்கப்பட்டன. கிராமங்களும், தெருக்களும் உருவாக்கப்பட்டன. குடிமக்களுக்குத் தேவையான வசதிகள் அத்தனையும் பார்த்துப் பார்த்து, செய்துதரப் பட்டன. விவசாயத்தின் மீது அக்கறை செலுத்தப்பட்டது. நீர்ப்பாசனத் திட்டங்கள் மேம்படுத்தப்பட்டன. விவசாயம் செழிப்புறும் வகையில் பல்வேறுத் திட்டங்கள் கொண்டுவரப்பட்டன. நிர்வாக ஒழுங்குமுறைக்கும், அமைதிக்கும் ஏற்றவகையிலானத் திட்டங்கள் கண்டறிந்து செயல்படுத்தப்பட்டன.

கட்டுப்பாடுகளுக்கு உட்பட்ட, முறையான நிர்வாகத்தை உருவாக்குவதற்கு முன்பாக, விஸ்வநாத நாயக்கர் கம்பம்-கூடலூர் நாட்டின்மீது படையெடுப்பை நிகழ்த்தவேண்டியிருந்தது. சோழ அரசனிடமிருந்து[4] கைப்பற்றப்பட்ட அந்தப்பகுதியிலிருந்து திறை செலுத்தப்படாமலிருந்தது. சிலர் அங்கிருந்து வெளியேறிவிட்டனர். அதிருப்திகொண்ட சிலர் அணுகமுடியாத இடத்தில் இருந்து கொண்டு குழப்பங்களை விளைவித்து வந்தனர். விஸ்வநாத நாயக்கர் இதுகுறித்து நடவடிக்கை மேற்கொள்ள, தனது அதிகாரி களிடம் கலந்தாலோசித்தார். தன் தந்தையின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக விளங்கிய ராமபத்ர நாயக்கரிடம் கலகத்தை ஒடுக்கும் பணியை ஒப்புவித்தார். கம்பம் கோட்டையை வெற்றிகரமாகச் சூறையாடிய ராமபத்ர நாயக்கர், சோழர் வம்ச வழியினரை விஸ்வநாத நாயக்கருக்கு அடிபணியச் செய்தார். ராமபத்ர நாயக்கரின் நீண்ட மற்றும் நம்பிக்கைக்குரியப் பணிகளை அங்கீகரித்து, வைகைக் கரையிலுள்ள வடகரைக்கு அவரைப் பாளையக்காரராக நியமனம் செய்தார்.

**ஆட்சிப்பரப்பு** - விஸ்வநாத நாயக்கரின் ஆட்சிப் பரப்பெல்லை, வடக்கில் உரத்தூர் மற்றும் வாலிகொண்டபுரத்தையும், தெற்கில் கன்னியாகுமரியையும் கொண்டிருந்தது. கோயமுத்தூர், ஈரோடு, தாராபுரம், மேற்குத் தொடர்ச்சியில் மேலமலையை மேற்கிலும், கிழக்கே ராமேஸ்வரத்தையும் கடலையும் கொண்டிருந்தது[5] என்று மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி கூறுகின்றது. 1600ஆம் ஆண்டு மரணமடைந்த தளவாய் மற்றும் பிரதானி என்ற இரு பெரும் அதிகார முத்திரைகளைக்கொண்ட அரிய நாதரின் பணிக்காலத்தில், விஸ்வநாத நாயக்கரின் சாம்ராஜ்ஜிய எல்லை இவ்வளவுதான் இருந்தது என்று, டெய்லரின் மொழிபெயர்ப்பை நெல்சன் மேற்கோள் காட்டுகின்றார்.[6] மேலும் மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதியின் பொருள்விளக்கம் ஒரு நிலையிலிருந்து மற்றொன்றுக்கு மாற்றும்போது செய்யப்படும் பெயர்ச்சிகளையும் கொண்டிருப்பதாகப் படுகின்றது.

வரலாற்றின் கணக்கிலிருந்து பார்க்கும்போது, விஸ்வநாத நாயக்கரின் மரணத்துக்கு முன்பு மதுரை அரசு தோராயமாக, நவீன சொற்தொகுதியின்படி மதுரை, ராம்நாட், தின்ன வேலி, திருச்சினாப்பள்ளி, கோயமுத்தூர் மற்றும் சேலம் ஆகிய மாவட்டங் களையும், திருவாங்கூரின் ஒருபகுதியையும் கொண்டிருந்தது. இதுவரை விவரிக்கப்பட்டதைக்கொண்டு பார்க்கும்போது, விஸ்வநாத நாயக்கரின் வளர்ச்சிப்போக்கு பாண்டியப் பேரரசையும், சோழப் பேரரசின் ஒருபகுதியையும் தனது ஆளுமையின்கீழ் வைத்திருந்தது, தெளிவுறத் தெரிகின்றது. இதில் கேள்வியொன்று தொக்கி நிற்கின்றது. அதாவது, கோயமுத்தூரும் சேலமும் விஸ்வநாத நாயக்கருக்கு கீழ்ப்படிந்து இருந்ததா? இயேசு சபையினரின் கடிதங்களின்படி அவையிரண்டும் திருமலை நாயக்கர் காலத்தில் மதுரை ஆளுகையின் கீழ் இருந்ததாக அறியமுடிகின்றது. கல்வெட்டுகள் இதனைத் தெளிவுபடுத்துகின்றன. வரலாற்றின் பக்கங்களிலோ அல்லது கல்வெட்டுகளிலோ திருமலை நாயக்கருக்கு முன்பு யாரும் அவையிரண்டையும் வெற்றிகொண்ட தாகக் குறிப்பிடப்படவில்லை. பதினாறாம் நூற்றாண்டின் கல்வெட்டு ஆவணங்களில் விஜயநகரப் பேரரசர்கள் இம்மாவட்டங் களில் பெருமளவு காணப்படுகின்றனர். இவ்விரு மாவட்டங்களி லும் நாயக்கர்களின் ஆளுமைத் தொடங்குவதற்கு முன்னமே, மதுரையின் ஆட்சிப்பரப்பெல்லைக்குள் அவற்றை இணைத்துக் கொண்டுவிட்டது, இந்தச் சூழ்நிலையில் தெளிவாகின்றது. அது போலவே, விஸ்வநாத நாயக்கருக்கு வழங்கப்பட்ட தெற்குப்பகுதி யின் சிம்மாசன பிரபு என்ற பட்டம், பெயரைக்காட்டிலும் சற்றே மேம்பட்ட ஒருசொல். அவ்வளவுதான். இம்மாவட்டங்களில் காணப்படும் பதினாறாம் நூற்றாண்டின் கல்வெட்டுகளில்கூட மதுரை நாயக்கர்கள் இதுபோன்ற பெயர்களைக் குறிப்பிட்டுக் கொள்ளவில்லை. எது எப்படியோ, விஸ்வநாத நாயக்கரின் மரணத் துக்கு முன்பே, நாயக்கர்களின் உச்சபட்ச ஆட்சிப்பரப்பெல்லையை அடைந்தாகிவிட்டது. அவருக்குப் பின்வந்தவர்கள், ஆட்சியில் ஒருங்கிணைப்பை மட்டும் பார்த்துக் கொண்டார்கள். அண்டை நாடுகளிலிருந்தும் அயல்நாடுகளிலிருந்தும் படையெடுப்பு நடந்து விடாமல் காத்துக்கொண்டார்கள். கோயமுத்தூர் மற்றும் சேலம் மாவட்டங்களில் விஸ்வநாத நாயக்கரின் நடைமுறைத் தொடர்புகள் குறித்து, அவற்றை அவர் வென்றாரா அல்லது அரசப் பற்றால் அவை இணைந்துகொண்டனவா என்று ரங்காச்சாரியிடமும் தெளிவானப் பார்வை இல்லை. ஒருவேளை இவ்விரு மாவட்டங் களையும் வெற்றிபெற்று இணைத்துக்கொள்ள நினைத்திருக்கலாம்.[7]

பரப்பெல்லையில் விஸ்வநாத நாயக்கரின் நிர்வாகம் அங்கீகரிக்கப்பட்டிருந்தாலும், நடைமுறையில் கட்டுப்படுத்தும்

அவரது ஆட்சியாற்றல் வெவ்வேறு நிலைகளில் வேறுபட்டே இருந்தது. மற்றபகுதிகளில் செலுத்தப்பட்ட கவனம்போல கோயமுத்தூர் மற்றும் சேலம் பகுதிகளுக்குக் கிடைக்கவில்லை. மைசூர் சுதந்திரமாக தன்னாட்சி பெற்றதும், அதையடுத்து அது படையெடுப்பை மேற்கொண்டதும் அந்தப்பகுதியின் எல்லைகள் முக்கியத்துவம் பெற்றதாக ஆயின. சாம்ராஜ்ஜியத்தின் மற்ற பகுதிகளில் இதுபோன்றே நிர்வாகமுறை செயல்பட்டதா என்ற தொரு சந்தேகமும் இருந்துகொண்டே இருக்கின்றது. தேசத்தின் பரப்பெல்லை விரியவிரிய முறையாகத் திறைசெலுத்தும் தலைமை களிடம் ஒருசில பகுதிகளை ஒப்படைப்பது வழக்கத்தில் இருந்து வந்தது. கடற்கரைப் பகுதிகளைப் பொறுத்தமட்டில் விஸ்வநாத நாயக்கர் மட்டுமல்ல, அவருக்குப்பின் வந்தவர்களும்கூட மேலைதேசத்திலிருந்து வந்து வர்த்தகத்தில் ஈடுபட்ட நாடுகளிடம் ஒப்படைத்து, அவர்கள் செலுத்தும் மிகக்குறைந்த திறையில் திருப்திபட்டுக் கொண்டார்கள்.[8]

இதுபோன்ற விரிவடைந்த முடியரசுகள், கோட்டைக் கொத்தளங் களின் கண்காணிப்பு வழியாகப் பாதுகாக்கப்படும். எல்லைப்புறத்தி லிருக்கும் அரண்கள் மட்டுமல்லாமல், உட்புறத் திலிருக்கும் அரண்களும் இப்பணியில் ஈடுபடும். நாயக்கர்கள் கட்டியக் கோட்டைகளின் பட்டியல், வரலாறுமுழுவதும் நெடியதாக இருக்கின்றது.[9] அதில், ‘விஸ்வநாத நாயக்கரின் பங்களிப்பு உண்மை யிலேயே என்ன?’ என்பதைக் கண்டறிவது, கடினமான ஒன்று. ராஜ்ஜியத்தின் பாதுகாப்பை உறுதிப்படுத்தியதாக, விஸ்வநாத நாயக்கருக்கே ஒட்டுமொத்தப் புகழையும், ரங்காச்சாரி கொடுத்து விடுகின்றார். நாயக்கர் ஆட்சியின் தொடக்கக் காலத்தில் எந்தப் பகுதியிலிருந்தும் படையெடுக்கும் அபாயம் இயற்கையிலேயே இருக்கவில்லை. தலைக்கோட்டை போருக்குப் பின்பே நிலைமை சீர்கெட்டது. ராஜ்ஜியத்தின் பல்வேறு மாகாணங்கள் தங்களின் சொந்தப் பாதுகாப்பை தாங்களே உறுதிசெய்துகொள்ளும் நிலை உருவானது. மதுரையைப் பொறுத்தமட்டில் பதினேழாம் நூற்றாண்டின்போதுதான் அந்நியப் படையெடுப்பு நடந்தது. அதனால் விஸ்வநாத நாயக்கர் பாதுகாப்புக்காக சிறிய அளவிலான ஏற்பாடுகளை மட்டுமே செய்திருக்கமுடியும். பிற்காலத்துத் தேவை களை எண்ணி, போதுமான ஏற்பாடுகளைச் செய்திருக்க வாய்ப் பில்லை. விஸ்வநாத நாயக்கர் தொலைநோக்குச் சிந்தனையுடன் செயல்பட்டிருக்கலாம் என்று எண்ணவும் இடமில்லை.

**பாளையங்களின் நிர்வாகம்** - அமைதியை ஏற்படுத்தி ஒழுங்குமுறையை நிலைநாட்டிய பின்பு, விஸ்வநாத நாயக்கரும் அரியநாத முதலியாரும் நாடுமுழுவதும் சீரான நிர்வாகத்துக்குத்

திட்டமிட்டார்கள். பாண்டியர்களிடமிருந்து நிலமானிய முறையில் உரிமைபெற்றவர்கள், முகம்மதியர்களின் நெருக்கடிகளுக்கு உள்ளாகி, தங்கள் நாட்டைவிட்டு துன்பத்துடன் இடம்பெயர்ந்து வந்தவர்கள், மேய்ச்சல் நிலங்களைத் தேடிவந்தவர்கள், தங்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள் என்ற வகைமைக்குள்ளானவர் களை ஒன்றுதிரட்டி, புதிய அரசுமுறையில் இணைத்தனர். நாட்டில் அமைதியை உருவாக்குவதற்கும், வளர்ச்சியை மேம்படுத்துவதற் கும் அது உதவிகரமாக இருந்தது. விவசாயம் ஊக்கங்குறைந்து தளர்வுற்ற நிலையிலிருந்தது. நிலங் கள் பெரும்பாலும் காடுகளால் நிறைந்திருந்தன. மக்களின் பாதுகாப்புக்கும் வாழ்வாதாரத்துக்கும் அவை பலவகைகளில் இடர்தருபவையாக இருந்தன. ஒழுங்கு முறையின்மை எல்லா இடங்களிலும் நிறைந்திருந்தது. இந்தச்சூழ் நிலையில் மத்திய நிர்வாகம், அதிகப்படியாக எதையும் செய்யவிய லாத நிலையே இருந்தது. அவ்வப்பகுதிகளில் சக்தியுடன் இயங்கிய வர்களையும், உள்ளூரில் சுதந்திரமாகச் செயல்பட்டவர்களையும் பெருமளவு நம்பியே இயங்கவேண்டியிருந்தது. சாகர வேகத்துடன் வந்துசேர்ந்த புதியவர்களின் திறன்களை அமைதி நடவடிக்கை களுக்கு மடைமாற்றி, அவர்களுக்கும் அவர்களின் புதியதிட்டங் களுக்கும் மதிப்புதரப்பட்டது. அடுத்ததாக, நாட்டின் பாதுகாப்புத் தொடர்பான நடவடிக்கைகள் முறைப்படுத்தப்பட்டன. ஆபத்து, பாதுகாப்பின்மை மற்றும் இடையூறு ஏற்படும் காலங்களில் மேற்கூறிய சக்திகள் அனைத்தும் ஒன்றுகூடி, கூட்டுநடவடிக்கையில் ஈடுபடும் சாத்தியங்கள் ஏற்படுத்தப்பட்டன. இதுபோன்ற அரசியல், பொருளாதார, ராணுவ உத்திகளை விஸ்வநாத நாயக்கரும் அரிய நாத முதலியாரும் ஒருங்கிணைத்து உருவாக்கியச் செல்வாக்கு மிக்கப் பகுதிகள், பாளையங்கள் என்று அழைக்கப்பட்டன.

நாடு, எழுபத்தியிரண்டு பாளையங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது என வரலாற்றுத் தரவுகள் கூறுகின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒரு பாளையக்காரர் தலைவராக இருந்தார். அவர்கள் மதுரைக் கோட்டையிலிருந்த எழுபத்தியிரண்டு காவல் அரண்களிலும் ஆளுக்கு ஒருவராகப் பாதுகாப்புப் பொறுப்பில் இருந்தனர். விஸ்வநாத நாயக்கரால் கட்டமைக்கப்பட்ட பாளையங்கள் எத்தனை என்றும் அறுதியிட்டுச் சொல்ல முடியவில்லை. அதுபோல, அவருக்குப் பின்னால் அரசப்பிரதிநிதியாகப் பொறுப் பேற்றுக் கொண்டவர்கள் கோட்டைகளைக் கட்டியதற்கும் ஆதாரங்கள் இல்லை. அவை அதிகாரங் கொண்டு கைப்பற்றப் பட்டக் கோட்டைகள் என்பதை, பிற்பாடு அறிய முடிகின்றது. அழியாது தொடர்ந்து எஞ்சிநின்ற இந்த எழுபத்தியிரண்டு கோட்டைகளை, மரபுரீதியாக வரலாற்றில் இணைத்துக் கொண் டிருக்கவும் வாய்ப்பிருக்கின்றது. விஸ்வநாத நாயக்கரின் செயல்

களைப் பின்பற்றுபவர்கள் மக்கள் நலத்தை மிகுதியாக விரும்பி, நாட்டுக்குள் எளிதில் அந்நியர்கள் புகுந்துவிடமுடியாத அளவில் கடினமான, செங்குத்தானக் கோட்டைகளைக் கட்டுவதற்கானத் திட்டங்களை ஆரம்பத்தில் வகுத்திருக்கலாம். திண்டுக்கல்லில் மட்டுமே பதினெட்டுப் பாளையக்காரர்கள் இருந்தார்கள். ஒட்டு மொத்த ராஜ்ஜியத்தின் எண்ணிக்கையில் அது, நான்கில் ஒருபங்கு. ஆரம்பத்திலிருந்த எண்ணிக்கையிலானப் பாளையக்காரர்கள் நாயக்க வம்சம் முடிவுறும் தருணத்திலும் அதே எண்ணிக்கையில் இருந்தார்கள் என்பதை நம்புவது கடினமாகத்தான் உள்ளது.

பாளையங்கள் தொடர்பான நிர்வாக நடைமுறைகளில் விஸ்வநாத நாயக்கர் பல்வேறு பிரச்சனைகளை எதிர்கொண்டார். தன்னைப் பின்பற்றுபவர்களும், முந்தைய ஆட்சிகளில் அனுபவித்து வந்தவர்களும் உருவாக்கியக் குழப்பங்களில் அவர் தத்தளித்துப் போனார். அதனால், அதிருப்தியடைந்த தலைமைகளை தக்கநிலைக்கு உயர்த்தி, மதிப்புக்கொடுத்தார். அவர்களுக்கு நிலத்தின் மீதான உரிமையைக் கொடுத்து, சாமர்த்தியமாகச் சமாளித்தார். மட்டுமீறி பெருமைப்படுத்தும் சுயமோகத்தைக் கட்டுப்படுத்தி, அவர்களின் பொறுப்புணர்வை அதிகப்படுத்தச் செய்தார். காவல் அதிகாரம் மற்றும் நீதி நிர்வாகச் சுதந்திரத்தை முழுமையாக அவர்களிடமே ஒப்படைத்தார். நல்லதோ அல்லது கெட்டதோ பாளையக்காரர்கள் அவர்களின் எல்லைக்குள் அனைத்து அதிகாரங்களும் கொண்டவர்களாக இருந்தார்கள். அதற்குப் பிரதியாக, நாயக்கர்களுக்கு தங்கள் நிலவருமானத்தில் மூன்றில் ஒருபகுதியை திறையாகச் செலுத்திவந்தார்கள். மற்றும் போர்க்காலங்களில் தங்கள் எஜமானனுக்குத் தேவைப்படும் பட்சத்தில், தங்களிடமிருந்த பயிற்சிபெற்ற ராணுவத்தை அனுப்பிவைத்தார்கள். நடைமுறையில், பாளை யக்காரர்கள் தங்கள் வருமானத்தில் மூன்றில் ஒருபங்குக்கு மேலாகவே அனுபவித்துக் கொண்டார்கள். மேலும், விசுவாசம் மற்றும் பொதுச் சேவைகளின்போது, அவர்கள் செலுத்திவந்தத் திறையில் மானியங்களும், தள்ளுபடிகளும் வழங்கப்பட்டன. சிலவேளைகளில் ஒட்டுமொத்தத் திறைக்கும் விலக்கு அளிக்கப்பட்டது.

பாளையக்காரர்களின் தகுதியும் அதிகாரமும் ஒரேமாதிரியாக இருக்கவில்லை. அவர்களின் கடந்தகாலச் சேவைகளும், உடமைகளும் சமமான அந்தஸ்தையும் கொண்டிருக்கவில்லை. காலக் கிரமத்தில் அவர்களின் நடவடிக்கைகளும் நிலையுமே பெரும் மாறுதலுக்கு உள்ளாயின. விளைவாக, அவர்களின் கடமையும், பொறுப்புமே மாற்றமடைந்திருந்தது. 1611[7] ஆண்டின் விக்கோவின் கடிதம்,[10] ‘எருமைக்கட்டி சக்திவாய்ந்த பாளையக்காரராக இருந்தார்.

அரச சபையில் அவருக்கு அதிகசெல்வாக்கு இருந்தது. நாயக்கரின் மூவாயிரம் காலாட்படையையும் இருநூறு குதிரைகளையும் ஐம்பது யானைகளையும் நிர்வகிக்கும் மேலாண்மை அவரிடம் இருந்தது' என்று கூறுகின்றது.

ராணுவத்தை மூலமுதலாகக்கொண்டு, அதனடிப்படையில் தேசப்பணிகள் நிர்மாணிக்கப்பட்டன. இந்தத் திட்டமுறை எல்லாத் தரப்பையும் திருப்திப்படுத்தவில்லை. திருப்திப்படுத்தவும் முடியவில்லை. விஸ்வநாத நாயக்கரின் மகன் பொறுப்பேற்ற துவக்க காலத்தில், கிளர்ச்சியாளர்களை அடக்க எடுத்துக்கொண்ட முயற்சிகள், இதற்கு நல்லதொரு உதாரணம். அதேவேளையில், பெரும்பாலானப் பாளையக்காரர்கள் விசுவாசம் குன்றாமல், நீண்டகாலம் நாயக்கர்களிடம் பணிந்து நடந்துவந்தனர் என்பதை ஏற்றுக்கொண்டுதான் ஆகவேண்டும். அத்தியாவசியத் தேவைகள் காலதாமதமின்றி பூர்த்திசெய்யப்பட்டன. அமைதியும் சட்டம்-ஒழுங்கும் உறுதிப்பாட்டுடன் நிலைநாட்டப்பட்டன. விவசாய மேம்பாடு தேசத்தில் அசுரவளர்ச்சி அடைந்திருந்தது. காடுகள் அழிக்கப்பட்டன. களர்நிலங்கள் சீர்படுத்தப்பட்டு, சாகுபடிக்கு உகந்தவையாக மாற்றப்பட்டன. இந்தத் திட்டமுறை, அந்நியப் படையெடுப்பை தடுக்கும் சிறந்தமுறையாக இருந்தது. குறிப்பாக, அந்நிய ஆக்கிரமிப்புக்கு எதிரானதாக இருந்தது. செஞ்சியிலும் தஞ்சாவூரிலும் நிகழ்ந்த நேர்வுகள்போல, மதுரையில் எதுவும் நடந்துவிடவில்லை. தன்போக்கில் மதுரை சீராக இருந்தது. பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் மாவட்ட ஆட்சி நிறுவ முயன்றபோது பாளையக்காரர்களின் போர், தீரத்துடன் உள்ளுரம்கொண்டதாக அமைந்தது. மதுரை நிர்வாகத்துக்கு விழுந்த இடியின்போது, ஆட்சியெல்லையின் பலபகுதிகளில் அதிர்வு ஏற்பட்டது. உயிர்த் துடிப்புள்ள பாளையக்காரர்கள் மிகுஆற்றலுடன் செயல்பட்டார்கள். வென்று நிலம்கொள்ளுதல் மற்றும் கீழ்ப்படியச் செய்தல் என்பதும், பாளையக்காரர்களின் போர் என்பதும், தனித்தனியாகப் பார்க்கப்பட வேண்டும். ஆனால் இந்தச்செயல்பாட்டுமுறை தன்னகத்தே, உள்ளுக்குள் பல்வேறு சொத்தைகளையும் கொண்டிருந்தது. ஒவ்வொரு செயல்பாடும், கீழ்ப்படியாதத் தலைமையின்மேல் அதிகப்படியான சுமையாக, நிரந்தரமாகச் சுமத்தப்பட்டதுதான் வேடிக்கையானது. இந் நிலையால், பின்னால் ஏற்பட்டதுபோல, தொடக்கத்திலேயே சீரழிவு ஏற்பட்டிருந்தால், ஆற்றல்வாய்ந்த, அடக்கமுடியாத மிகப்பெரியக் கிளர்ச்சியும், சீர்குலைவும் உருவாகி யிருக்கும். ஆனால் அந்தநேரத்தில் வேறுசாத்தியங்கள் ஏதுமில்லாத தால், வேறுவழியில்லாமல் படையுருவாக்கத்தை உண்டுபண்ண வேண்டியிருந்தது. இத்திட்டச் செயல்பாட்டுமுறையில் பலவீனத்

தின் அறிகுறிகள் தென்பட்டபோதெல்லாம், அப்போதைக்கப்போது நிலைமை சரிசெய்து கொள்ளப்பட்டது. படிப்படியாகச் சீரழிவதைத் திரும்பப்பெற்று, நிரந்தர மேன்மைக்கொள்ள வேண்டுமென்று எந்த ஆட்சியாளரும் உணராததுதான், இதில் பரிதாபம். இறுதியில், இந்தநிலை மைய அதிகாரத்தைப் பலவீனப்படுத்தியதுடன், மற்றவர்களின் கைகளால், தனக்கான இறுதி அழிவையும் வரவேற்றுக் கொண்டது. ஏ.ஜே. ஸ்டூவர்ட்[11] பாதுகாப்பு ஒழுங் கமைவு முறை குறித்துத் தரமானச் சான்றிதழ் வழங்கினாலும், அவரது ஐரோப்பிய பண்ணை நில உடமை ஒத்திசைவு, வேறு விஷயங்கள் பற்றிப் பேசாமல் சுலபமாகக்கடந்து, பொது விஷயங் களை மட்டுமே பேசிவிட்டுப் போகச்செய்கின்றது. பேராயர் கால்டுவெல்லுக்கு இதன் நல்லபக்கங்களைப் பற்றிப் பேசும் மனநிலை இருக்கவில்லை.[12] இந்தமுயற்சிகளை ஒரேயடியாக அவர் பழிந்துரைக்கின்றார். ஆனால் அந்தநேரத்தில் அவர் மாற்றுச் சாத்தியங்களைப்பற்றி ஏனோ பரிந்துரை செய்யவில்லை. நெல்சன்,[13] அத்திட்டங்களின் நடைமுறையிலிருந்த நல்லவிஷயங்களைப் பற்றி யோசிக்காமல், இறுதிப்பத்திரம் எழுதும்வேகத்திலேயே இயங்கினார். இவ்வாறாக, பாளையத் திட்ட நடைமுறைக் குறித்த வரலாற்றின் பக்கங்களில் விஸ்வநாத நாயக்கர் மற்றும் அரியநாத முதலியார் ஆகிய இருவரின் பெயர்களும் குறிப்பிடப்படுகின்றன. அதிலும், அதன் தொடக்கப் புள்ளியில் மற்றவருக்குப் பங்கு இருந்தும், பின்னவருக்கே முழுவதுமானது என்று பொருந்த வைக்கப்படுகின்றது. ஒருவகையில் பாளையக்காரர்கள் குறிப்பாக, அரியநாத முதலியாருடனும் அந்தப்பெயருடனும் கூடுதல்நெருக்க மாகவே இருந்தனர் என்பது உண்மையும்கூட. விஸ்வநாத நாயக்கர் தனது நம்பிக்கைக்குரிய அதிகாரியும் துணை ஆட்சியாளருமான அரிய நாத முதலியாருடன் இணைந்தே திட்டங்களை நடைமுறைப் படுத்தினான். அதனால் யாரொருவரும் தனிப்பட்டமுறையில் அதன் நற்பெயரைக் கொண்டுசெல்வது, அத்தனை எளிதானது அல்ல.

பாளையங்களாக நாட்டை நிர்வகிக்கும்போது, பிரச்சனைகள் அத்தனை சுலபமாகத் தீர்க்கப்பட்டிருக்குமா என்றொரு கேள்வி எழுகின்றது. பாளையங்களாக நாடு உருமாற்றப்பட்ட சொற்ப காலத்திலேயே விஸ்வநாத நாயக்கர் இறந்துவிட்டதாக நெல்சன் கூறுகின்றார்.[14] அச்சம்பவம் 1563ஆம் ஆண்டில் நடந்ததாகக் குறித்துக் காட்டுகின்றார். தி ஹிஸ்டரி ஆஃப் தி கர்நாடகா கவர்னர்ஸ் என்ற ஆவணம், பாளையக்காரர்களை அறுதியாக உறுதிபடுத்திய பின்பு, விஸ்வநாத நாயக்கர் இருபத்தாறு ஆண்டுகள் ஆட்சிசெய்ததாகப் பகர்கின்றது. பாளையங்களின் உருவாக்கம் 1538ஆம் ஆண்டு

நடந்ததாக, அவ்வாவணம் குறிப்பிடுகின்றது. ராமபத்ர நாயக்கரின் கணக்குவழக்கை எடுத்துவைக்கும் டெய்லர்,[15] வடகரைப் பாளையத்தின் பொறுப்பேற்றுக்கொண்ட அவர் இருபதாண்டுகள் ஆண்டு அனுபவித்து, அதன்பின்பே இறந்ததாகவும், அவர் இறந்த நிகழ்வுக்கு விஸ்வநாத நாயக்கர் இரங்கல் தெரிவித்ததாகவும் கூறுகின்றார். இவ்வாறாக, பின்னவரின் சான்றுவலிமை, முன்னவரின் வாழ்க்கை வரலாற்றுப் பக்கங்களை உறுதிப்படுத்து கின்றன. கல்வெட்டுகளில் ராமப்ப நாயக்கராகக் குறிப்பிடப்பட் டுள்ளது, இந்த ராமபத்ர நாயக்கராக இருந்தால், குறிக்கப்பட்டுள்ள அந்த இருபதாண்டு காலம் என்பது 1535க்கும் 1552க்கும் இடையிலானதாக இருக்கமுடியும். ராமபத்ர நாயக்கரின் கல்வெட்டு ஆவணங்கள் 1535க்கும் 1552க்கும் இடையிலானக் காலத்துடன் ஒத்துப்போகின்றது. கல்வெட்டு ஆதாரங்கள் வெளிப்படையாகக் குறிப்பிடும் காலமான 1535 வுடன் தி ஹிஸ்டரி ஆஃப் தி கர்நாடகா கவர்னர்ஸ் என்ற ஆவணம்தரும் தகவலும் ஒத்துப்போய், வலியுறுத்தும் பாங்குடன் இருக்கின்றது. இவ்வாறாக, நெல்சன் குறிப்பிடும் காலம் விலக்கப்படுகின்றது. இப்படியொரு முடிவுக்கு நெல்சனால் எப்படி வரமுடிந்தது என்று எங்கும் தெளிவாகக் குறிப்பிடப்படவில்லை. நெல்சனின் தவறு வெளிப்படையானது. 1559 ஆம் ஆண்டு, நாயக்க ஆட்சி தொடங்கியதாக ஒரு கணிப்பு நெல்சனிடம் இருக்கின்றது.

**விஸ்வநாத நாயக்கரின் அதிகாரிகள்** - விஸ்வநாத நாயக்கர் தான் கைக்கொண்ட அனைத்துத் துறைகளையும் திறனுடன் கையாண்டார். செயற்கரிய அரிய காரியங்களை நம்பிக்கையான அதிகாரிகளின் உதவியுடன் செயல்படுத்தினார். தனது தந்தையிடம் பக்திகொண்டிருந்த பல பணியாளர்களைத் தன்னிடத்தே வைத்துக் கொண்டார். முன்கூட்டியே யோசிக்கும் திறனுள்ள அரிய நாத முதலியார் அவர்களுள் ஒருவர். காஞ்சிவரத்தை அடுத்துள்ள கிராமமொன்றில் ஏழைப்பெற்றோருக்குப் பிறந்த அவர், உச்சபட்சப் பொறுப்புவாய்ந்த விஸ்வநாத நாயக்கரின் தளவாய் மற்றும் பிரதானிப் பதவிக்கு உயர்ந்தது, சிறிதும்சாயாத நேர்நிமிர்வான தகுதிகளால் மட்டும்தான். இக்கட்டான சூழ்நிலைகளில், தனது பணியாளர்கள் அத்தனைபேரையும் விஸ்வநாத நாயக்கருடன் இணைந்து, ஈடுபாட்டுடன் செயல்பட வைத்தார். அதனாலேயே விஸ்வநாத நாயக்கரின் 'இரண்டாவது அதிகாரம்' என்று டெய்லரால் பேசப்படுகின்றார்.[16] 1560ஆம் ஆண்டின் தாமிரப் பட்டயக் குறிப்பொன்று, விஸ்வநாத நாயக்கரும் அரிய நாத முதலியாரும் இணைந்து, தின்னவேலி நாட்டிற்கு பன்னிரண்டு கிராமங்களைக் கொடையாகக் கொடுத்ததைக் குறிப்பிடுகின்றது.[17]

வீரப்பண்பு செறிந்த வரலாற்றுச் சார்புடைய குணம் இயல்பாக அரியநாத முதலியாரிடம் இருந்தது. அருஞ்செயல்களை பண்புநிறையுடன் செய்துமுடிக்கும் ஆற்றல், எளிதில் அறியப்படாத வைகளையும், மறைவானச் செயல்களையும் கண்டறிந்து, கடினமான விஷயங்களுக்கு எளிதானத் தீர்வைத் தருபவராகவும் அவர் இருந்தார். முழு அதிகாரம் பெற்ற தனித்தன்னாட்சியாளரான கிருஷ்ணதேவராயர்[18], அரியநாத முதலியாரின் திறமைகளைக் கண்டறிந்து, எதிர்பாராதவகையில் அடுத்தடுத்து உயர்பதவிகளைக் கொடுத்து சிறப்பித்தார். அவரது முழுவாழ்க்கையுமே மரபார்ந்த நன்னடத்தைகளால் ஆனது. அதனாலேயே அவரது செய்கைகள் மட்டுமீறியதல்லாமல், குழப்பமோ, தடுமாற்றமோ இல்லாமல் அவருக்கானப் பெருமைகளையும், மேன்மைகளையும் சேர்த்தது. குதிரைமீது அமர்ந்ததுபோலான அரியநாத முதலியாரின் சிலை புதுமண்டபத்திலும், ஆயிரங்கால் மண்டபத்திலும் நினைவுச் சின்னமாகச் செதுக்கப்பட்டுள்ளது. அது, அவரது முக்கியத்து வத்துக்குக் கொடுக்கப்பட்டச் சிறப்பு ஆகும்.

விஸ்வநாத நாயக்கரிடம் முதன்மைவாய்ந்த, சிறப்புமிக்க அதிகாரியாகச் செயல்பட்ட மற்றுமொருவர், ராமபத்ர நாயக்கர். நாட்டில் அமைதியையும் ஒழுங்கையும் நிறுவியதில் இவரது பங்களிப்பு அளப்பரியது. விஸ்வநாத நாயக்கருக்கு மிகவும் நெருக்கமானவரும்கூட. வரலாற்றின் பக்கங்களில் அடுத்தடுத்துக் காணப்படுகின்ற ஒருவராகவே இவர் இருந்துவந்துள்ளார். 1535க்கும் 1552க்கும் இடையிலானக் கல்வெட்டுகளில் காணப்படுகின்ற ராமப்ப நாயக்கர் இவராகவே இருக்க அதிகவாய்ப்புண்டு. 1535ஆம் ஆண்டின் 129/1905 மற்றும் 1552ஆம் ஆண்டின் 428/1916 ஆவணங்கள் இவரைப்பற்றிக் கூடுதலாகப் பேசுகின்றன.[19] அதில் அவர், ராம ராஜ வித்தலாவின் முகவர் என்று குறிப்பிட முனைகின்றது. இதிலுள்ள இரண்டாவது ஆவணம், அரசரின் உத்தரவின்படி இவருக்கு அளிக்கப்பட்ட பரிசைப் பற்றி பறைகின்றது. 1538ஆம் ஆண்டின் ஆவண எண். 121/1908 அச்சுத ராயர், இவருக்கு தகுதியின் அடிப்படையில் வழங்கியப் பரிசு குறித்துப் பேசுகின்றது.[20] 1542ஆம் ஆண்டின் ஆவண எண். 65/1916 மற்றுமொரு பரிசு குறித்து[21] இயம்பு கின்றது. 1550ஆம் ஆண்டின் ஆவணம் எண். 119/1907 ராமப்பாவின் பெயரைச் சுட்டுகின்றது.[22]

விஸ்வநாத நாயக்கரின் மகன் கிருஷ்ணப்ப நாயக்கரின் பெயர், தந்தையின் காலகட்டமான 1546, 1550, 1553 மற்றும் 1555 ஆம் ஆண்டுகளின் கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ளது.[23] சதாசிவம் ஆய்வுசெய்த கிருஷ்ணாபுரம் ஏடுகளில், திருவடி மீது எடுக்கப்பட்ட படையெடுப்பில் அவரது பங்களிப்பு குறித்துக் குறிப்பிடப்பட்

டுள்ளது. விஸ்வநாத நாயக்கரின் ராணுவத்தில் கிருஷ்ணப்ப நாயக்கரின் அரியசேவை குறிப்பிடத்தக்கதாக இருந்தது.

**விஸ்வநாத நாயக்கரின் குணஇயல்புகளும் செயல்பாடுகளும்** - கல்வெட்டு ஆய்வுகளின்படி விஸ்வநாத நாயக்கர், ஒரு மாவீரன் என்று அறியமுடிகின்றது. வரலாற்றின் பக்கங்கள் அவரை வீரப்பெருந்தகை என்று பகர்கின்றன. பணிசெய்துமுடிக்கும் நற்பேரை வழங்குகின்றன. ஒருகல்வெட்டு அவரை, ‘பிரச்சனைகளை முடித்துவைப்பதில் சிறந்த சூரன்’ என்றும் போற்றுகின்றன.[24] நாட்டில் நிலவிய பதற்றம், தகிப்புக்கு இடையிலும் தனது அதீத தந்திரங்களாலும் காரியத்தைச் சித்திக்கச்செய்யும் யுக்திகளாலும், நாட்டை வெற்றிகரமாக நடத்திச்சென்றவர் என்று கொண்டாடுகின்றன. அவரது குணஇயல்புகள், வெற்றிகளுக்கு முக்கியக் காரணிகளாக அமைந்திருக்கக்கூடும்.

விஸ்வநாத நாயக்கர் வாழ்வின் வளர்ச்சிப்போக்கைப் புகழ்ந்து பாடுவதில், ரங்காச்சாரி கொஞ்சமும் களைத்ததுபோலத் தெரியவில்லை.[25] ஓர்ஆட்சியாளராக மற்றும் ஒருநிர்வாகியாக வரலாற்றில் இடம்பெற்ற விஸ்வநாத நாயக்கருடன், எந்தளவுக்கு இணைந்து போகமுடியுமோ அந்தளவுக்கு, வரலாற்று ஆய்வாளரான ரங்காச்சாரி பயணித்து தயக்கமோ, எல்லைவரையறையோ இன்றி போற்றிப் பாடுகின்றார்.[26] இதுபோன்ற கதாநாயக வழிபாடு, ஆய்வுநோக்குக்கு உகந்தது அல்ல. சந்தேகமில்லாமல் விஸ்வநாத நாயக்கர் அபரிமிதமான ஆற்றல்கொண்ட, நடைமுறையிலான ஒருநிர்வாகிதான். நாட்டில் சட்டம்-ஒழுங்கை, அமைதியை நிறுவிய மகிமை அவரையே சேரும். பாளையமுறை நிர்வாகம் என்பது நடைமுறையில் பல்வேறுவிதமானப் பிரச்சனைகளையும் சிக்கல்களையும் உள்ளடக்கியது. ஆனால் அவர் தூரத்தில் இருந்துகொண்டு அதிகாரமாய் உத்தரவுகளை மட்டும் போடுபவ ராக இருக்கவில்லை. பாளையமுறையின் கட்டுமானத்தில் விஸ்வநாத நாயக்கரின் பங்களிப்பைக்காட்டிலும் அரியநாத முதலியாரின் பங்களிப்பு கூடுதல்தான். விஸ்வநாத நாயக்கர் மறவ நாட்டை மனநிறைவு தராதநிலையில் விட்டுவிட்டார். அது, ராஜ்ஜியத்தின் அமைதிக்கு ஊறுவிளைவிக்கும் அபாயத்தைக் கொண்டிருந்தது. அவர் விஜயநகரத்தின் மாட்சிமைத் தங்கிய ஆட்சிமுறையில் பயிற்சி அளிக்கப்பட்டவர். அப்படியானப் பயிற்சியைத்தான் அவர் பெற்றிருந்தார். அவரது பணியில் தற்சார்புடைய நுட்பங்கள் அதிக அளவில் இருந்தன. அதேவேளையில் அவர் மற்றவர்களின் பணிகளுக்கு நன்றியுடையவராகவோ, கடன்பட்டவராகவோ இல்லை என்று எளிதாகச் சொல்லிவிட முடியாது. கவனிக்கப்பட வேண்டிய மிகமுக்கியமானத் தேவைகளை அந்தநேரத்திலேயே

பூர்த்திசெய்து, பிரச்சனைகளைத் தீர்த்துவைப்பதில் விஸ்வநாத நாயக்கர் சிறந்தவராக இருந்தார். அதை பயனுடையதாகவும் மாற்றினார்.

மதுரையின் ஆட்சியாளராக விஸ்வநாத நாயக்கர் இருந்து வந்தபோதும், மிகச்சிறந்த பணிகளை அவர் மேற்கொண்டிருந் தாலும் வேறோர் ஆய்வு, அவர் தனது ஆளுகையில் உச்ச பட்ச அதிகாரம் கொண்டவரில்லை என்று, நமது மதிப்பீட்டைக் குலைக்கின்றது. விஸ்வநாத நாயக்கரின் புகழைக் கவ்வி இருட்டிப்புச் செய்கின்றது, ராமராஜ வித்தலாவின் தெற்குப் படையெடுப்பு. ராமராஜ வித்தலா விஜயநகர இளவரசர். அவர் தெற்கில் இருந்த காலகட்டத்தில் விஸ்வநாத நாயக்கர் துணைமை யான அல்லது இரண்டாம்படியான அல்லது கீழ்ப்படியான முக்கியத்துவமே பெற்றிருக்கின்றார். அக்காலகட்டத்தில் நாடு, அவரது கட்டுப்பாட்டை இழந்து குழப்பத்தில் இருந்தது. ஆனாலும் அவர் பேரரசின் நிர்வாகத் திட்டங்களை நம்பிக்கைக்குரிய வகையில் செயல்படுத்தினார். அந்தவகையில் விஜயநகரப் பேரரசு, ஒட்டுமொத்த சாம்ராஜ்ஜியத்தை தூரத்திலிருந்தே நிர்வகிக்கும் அளவில் வலிமையாக இருந்தது.

ராமராஜ வித்தலாவின்கீழ், விஸ்வநாத நாயக்கர் பணியாளராக இருந்தார் என்பதை பல்வேறு கல்வெட்டுகள் துல்லியமாகத் தெரிவிக்கின்றன. 1916ஆம் ஆண்டின் ஏடுகளின் 385, 599 மற்றும் 721ஆம் குறிப்புகளில், வித்தலாவின் முகவராக அவர் குறிப்பிடப் பட்டிருக்கின்றார். அச்சுத ராயரின் ஆட்சித்தலைமையை விஸ்வநாத நாயக்கர் ஏற்றுக்கொண்டிருப்பதை 1908ஆம் ஆண்டின் குறிப்பு 113, 1915ஆம் ஆண்டின் குறிப்பு 622, 1916ஆம் ஆண்டின் குறிப்பு 599 ஆகியவை பறைசாற்றுகின்றன.[27] 1560ஆம் ஆண்டின் அந்நியூர் கல்வெட்டும் இதையே உறுதிப்படுத்துகின்றது.[28] கல்வெட்டுகளில் சில, தெற்குப்பகுதி விவகாரங்களில் வித்தலா உச்சபட்ச அதிகாரம் கொண்டவராக இருந்தார் என்று, விஸ்வநாத நாயக்கரின் நிலையை விவரிக்கின்றன. விஸ்வநாத நாயக்கர் வெளியிட்ட நாணயங்களில்[29] சில, விஜயநகரப் பேரரசின் கீழ் அவர் செயல்பட்டதற்கு எதிரான தாக இல்லை. பேரரசுகளின் கீழ் செயல்படும் மாகாண ஆட்சி யாளர்கள் தாங்களாகவே, குறைந்தமதிப்பிலான நாணயங்களை வெளியிட்டுக்கொள்ளும் வழக்கம் புழக்கத்தில் இருந்துவந்தது. 'புதிய அரசப்பிரதிநிதியின் ஆளுமைக்குள் உள்ள நாட்டுக்கு வந்தோம். அதுவும் பேரரசுக்கு திறைசெலுத்தும் நாடாகவே இருந்தது. அரசப்பிரதிநிதிகள் பல்வேறு வகைகளில் செம்பு நாணயங்களை அச்சிட்டுக் கொண்டனர். இன்று நம் கையிலிருக் கும் அந்த நாணயங்கள் அடுத்த ஆட்சியின்போது செல்லுபடியாக

வில்லை'[30] என்று சீசர் பிரடெரிக் தனது குறிப்பில் எழுதியுள்ளது, நாணயங்கள் அச்சிடப்பட்டதை உறுதிசெய்கின்றது.

இவ்வாறாக விஸ்வநாத நாயக்கர், விஜயநகரப் பேரரசின் விசுவாசமிக்கப் பிரதிநிதியாக தெற்கில் இருந்தாலும், நாட்டின் உள்ளாட்சி நிர்வாகத்தில் அவர் தன் அதிகாரத்தை நிறையவே செலுத்தினார். அவரது பணிகள் எல்லாமே, தனித்தன்மையின் அடையாளங்களுடனே விளங்கின. அவரால் வழங்கப்பட்ட வரிக்குறைப்பு, கடன்களை நீக்குதல், தண்டனைத் தவிர்ப்பு, பாவ மன்னிப்பு போன்றவை பல கல்வெட்டுகளில் விரிவாக இடம் பெற்றுள்ளன. தென்காசிப் பாண்டியர்கள் விஸ்வநாத நாயக்கரிடம் விசுவாசமிக்கவர்களாகவும், திறைசெலுத்துபவர்களாகவும் இருந்துவந்தனர். அவர்களை ஆதரித்து இடமளித்து, அதிகாரங் களை கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்தினார். விஸ்வநாத நாயக்கரின் நிர்வாகம் குறித்த எண்ணற்ற கல்வெட்டுகள், அப்பாண்டியர்களால் வெட்டப்பட்டன. 1558ஆம்[31] ஆண்டின் கல்வெட்டில், விஸ்வநாத நாயக்கர் மற்றும் அதிவீர ராமா பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. 1564 ஆம்ஆண்டில் அதிவீர ராம பாண்டியனுக்கு முடிசூட்டியிருக் கின்றார். விஸ்வநாத நாயக்கரின் நாணயங்களில் பாண்டிய முத்திரைச் சின்னமான மீன் பொறிக்கப்பட்டுள்ளது. ஹல்ட்ஸ்சின் நாணயத் திரட்டு, எண் 16-ல், மேற் கூறியத் தகவல் குறிப்பிடப்பட் டுள்ளது. அந்நாணயத்தின் முகப்பில் பாண்டியன் பெயரும், மறுபக்கத்தில் விஸ்வநாத நாயக்கர் பெயரும் இடம்பெற்றுள்ளது. விஸ்வநாத நாயக்கரின் மகன் கிருஷ்ணப்ப நாயக்கரும் இதே கொள்கையைக் கடைப்பிடித்து, பாண்டியர்களிடம் மிக நெருக்க மாக இருந்தார். சதாசிவம் ஆய்வுகளை மேற்கொண்ட கிருஷ்ணாபுரம் ஏடுகளில் காணப்படும் '**பாண்டியகுலஸ்தபாணாச் சாரியா**' என்ற பட்டம், ஒருவேளை இப்படியாகத்தான் வந்திருக் கும். விஸ்வநாத நாயக்கர், தனக்குக் கீழ் உத்தண்டர் எனும்பெயரில் பல முகவர்களை நியமித்திருந்தார்.[32] அவரது தகுதியைப் போற்றும் கல்வெட்டுகள் நிறையவே இருக்கின்றன.

**விஸ்வநாத நாயக்கரின் வயது மற்றும் மரணம்** - வரலாற்றின் பக்கங்களில் எங்கும் விஸ்வநாத நாயக்கரின் மரணம் சம்பவித்தத் தேதி குறிப்பிடவில்லை. இந்தக் கேள்விக்குப் பதிலாக வெளிச்சம் பாய்ச்சும் ஒரே ஆதாரமாக, மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி மட்டுமே இருக்கின்றது. அதில் விஸ்வநாத நாயக்கரின் மகன் கிருஷ்ணப்ப நாயக்கருக்கு ருத்ரோகாரி தை 11ஆம் நாள், ஜனவரி 25, 1564, முடிசூட்டியதாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.[33] வரலாற்றில் மற்ற இடங்களில் காணப்படுவதைக் காட்டிலும் இந்தத்தேதி, 'மிகச்சரியாக' இருக்கும் என்று ரங்காச்சாரி அபிப்ராயப்படுகின்றார்.

மேலும் அவர், கிருஷ்ணப்ப நாயக்கர் 1562ஆம் ஆண்டில் அரியணை ஏறினார். விஸ்வநாத நாயக்கர் 1563ஆம் ஆண்டில் காலமானதாகப் பதிவு செய்கின்றார். ஆயினும், அவரது அபிப்ராயம் காலவரன் முறை சக்கரத்துக்குள் வராமல், சமன்பாடு தவறுகின்றது. நெல்சன், விஸ்வநாத நாயக்கரின் மரணத்தை 1563ஆம் ஆண்டு டிசம்பருக்கு ஒத்திப்போடுகின்றார். மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி மற்றும் ஹிஸ்டரி ஆஃப் தி கர்னாடகா[34] கவர்னர்ஸ் ஆகியநூல்களில் இடம்பெற்றுள்ளத் தரவுகளையும், மரணத்துக்கு முன்பே மகனுக்கு முடிசூட்டியக் கணக்கையும் அவர் எடுத்துக்கொள்ளவில்லை. தனது வீரஞ்செறிந்த பணிகளுக்குப் பின்னால், விஸ்வநாத நாயக்கர் கொஞ்சம் ஓய்வெடுக்க விரும்பியிருக்கலாம். அதனால் கிருஷ்ணப்ப நாயக்கரின் பதவியேற்பு கொஞ்சம்தள்ளி, 1564ஆம் ஆண்டின் துவக்கத்திற்குப் போயிருக்கலாம். அதன்பின்பு, விஸ்வநாத நாயக்கரின் மரணம் நிகழ்ந்திருக்கலாம்.[35] தந்தையின் தகுதிகளைப் புகழுவதற்காக மகனால் எழுதப்பட்ட அக் கல்வெட்டுகள், விஸ்வநாத நாயக்கர் மரணமடைவதற்கு முன்னர், 1563ஆம் ஆண்டு தயாரிக்கப்பட்டிருக்கலாம். அதனால் அந்தக்கல் வெட்டு, அதேதேதியுடன் இடம்பெற்றிருக்க வாய்ப்புகள் உண்டு. அதில் இடம்பெற்றிருக்கும் சாகா ஆண்டுக்கும், ஆங்கில ஆண்டுக் கும் ஒத்துப்போனாலும், அதில் இடம்பெற்றிருக்கும் குரோதன ஆண்டு தவறாக இருக்கின்றது. இந்தத்தவறு, எடுத்து எழுதும்போது நேர்ந்திருக்கலாம். இவற்றையெல்லாம் பார்க்கும்போது, அந்தக்கல்வெட்டு 1565ஆம் ஆண்டைக் குறிப்பதாக இருக்கலாம். மேலும் விஸ்வநாத நாயக்கரின் மரணம், 1564ஆம் ஆண்டு நிகழ்ந்திருக்க சாத்தியங்கள் இருக்கின்றன.

விஸ்வநாத நாயக்கரின் மரணத்தின்போது வயதைக் கணக்கிடு வதற்காக, கீழ்க்கண்டக் குறிப்புகளை ரங்காச்சாரி உற்றுநோக்கு கின்றார். 'விஸ்வநாதன் பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அல்லது ஒரு பத்தாண்டுகள் முன்னதாகப் பிறந்திருக்கலாம். 1563ஆம் ஆண்டு அவன் மரணமடையும்போது 60 வயதுக்கு மேலிருக்க வாய்ப்பில்லை'.[36] கடுமையான பணி களுக்கிடையி லிருந்த அவன், 55 அல்லது 64 வயதுக்குள் இறந்திருக்கலாம்.[37] 1559ஆம் ஆண்டின்போது விஸ்வநாதன் மனிதத்தன்மையின் முதல்வனாக இருந்தான்'.[38] இந்தக் குறிப்புகளைக் கொண்டு ரங்காச்சாரி எடுத்த முடிவுகள் உறுதியற்ற, துல்லியமல்லாத, குழப்ப மான மற்றும் பொதுநிலைக்கு எதிர்மாறானதாகவும் இருக்கின்றன. முன்னமே குறிப்பிட்டது போல, விஸ்வநாத நாயக்கர் அநேகமாக, 1495ஆம் ஆண்டில் பிறந்திருக்கலாம். எழுபது வயதை நெருங்கும் போது மரணமடைந்திருக்கலாம்.

## அடிக்குறிப்புகள்

1. Appendix D, Nos 4 and 2
2. 41 and 50 of 1900, M.E.R., 1900, p.27
3. Appendix D, No.36
4. Taylor, C.R., iii, p.377
5. Ibid., O.H., MSS, II, p.117
6. Ibid, p.118
7. I.A., 1915, p.59
8. Nieuhoff, p.295. Vide Appendix, C
9. Taylor, O. H. MSS, ii p.167
10. Bertrand, II, p.125, Vide Appendix, Letter No.10
11. Manual of Tinnevelly, p.42
12. History of Tinnevelly, pp.58-9
13. Page. 98
14. Page 101
15. C.R., III pp.377-8
16. O.H.MSS., ii p.111
17. Appendix D, No.49
18. Taylor, O. H. MSS ii, pp.113-5
19. Appendix D, Nos 13 and 39
20. Appendix D, No.18
21. Ibid, No.20
22. Ibid, No.30
23. Ibid, Nos 25, 32, 42 and 43
24. Ibid., No.23
25. I.A., 1916, p.74
26. Ibid., 1915, p.60
27. Appendix D., Nos. 48, 33, 37 and 14 respectively.
28. Ibid., Nos 14. 51. 33 and 50
29. The Rev. J.E Tracy pandyan Coins P.6; I, A., 1892, p.325, Nos.15 and 16
30. Purchas, His Piligrims, x, p.99
31. Appendix D, No.47
32. Ibid., No.34
33. Taylor, O.H. MSS., ii p.117
34. Ibid., pp.18 and 20 – Tamil Passage
35. Appendix D, No.56
36. I. A., 1916, p.75, n
37. Ibid., p.75
38. I. A., 1914, p.254

3

# முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கர் (1564-1572)

**வி**ஸ்வநாத நாயக்கரின் மகன் குமார கிருஷ்ணப்பா மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதியின்படி, ருத்ரோத்கரி ஆண்டு, தை 11ஆம் நாளன்று முடிசூட்டப்பட்டார். அந்தநாள், ஆங்கில ஆண்டு 1564, ஜனவரி மாதம் 25 ஆம்நாளுடன், தோராய மாகப் பொருந்திப் போகின்றது. ரங்காச்சாரி, அவரது பதவியேற்பு விழா 1562ஆம் ஆண்டு நடந்தது என்று குறிப்பிடுவதுடன், அவர் ஆட்சியுரிமை பெற்றபின்பான முதல்நிகழ்வு, 1565ஆம் ஆண்டு தலைநகர் விஜயநகரத்தைப் பாதுகாக்கும்பொருட்டு பங்கெடுத்த தலைக்கோட்டைப் போர் என்றும் கூறுகின்றார். அவர் பதவியேற்ற பின்பும், விஸ்வநாத நாயக்கரின் மரணத்துக்குப் பின்பும், அதிருப்தியடைந்திருந்த பாளையக்காரர்களின் கிளர்ச்சி, எதிர் கொள்ளமுடியாத அளவுக்கு மதுரையில் உச்சத்தை அடைந் திருந்தது. அதனாலேயே படைகளை, கடுவேகமாக உருவாகி யிருக்கும் பிரச்சனைகளிலிருந்து பேரரசைக் காக்க, கிருஷ்ணப்ப நாயக்கரால் அனுப்பியிருக்க முடியாது. அதேவேளையில் முகம்மதியப் படையெடுப்பு விஜயநகரத்தின் மீது திடீரெனத் தொடர்ந்தபோது, மதுரையிலிருந்து கொஞ்சம் தாமதமாக உதவி சென்றடைந்தது. அதாவது, 1565ஆம் ஆண்டின் துவக்கத்தில் இது நடந்தது. மதுரையில் அரியநாத முதலியார் இருந்தபோதும்கூட, கிளர்ச்சியாளர்களின் தலைவனாக நடந்துகொண்ட தும்பிச்சி நாயக்கரின் கலகச் செயல்பாடுகள் குறைந்திருக்கவில்லை. புதிய ஆட்சியாளராக கிருஷ்ணப்ப நாயக்கர் பதவியேற்றதும், கூடுதல் கவனத்தைச் செலுத்தவேண்டியதானது. விஸ்வநாத நாயக்கர் பாளையங்களிடம் கொண்டிருந்த நடைமுறைகள், எல்லாத்தரப்பை யும் திருப்திப்படுத்தியதாகத் தெரியவில்லை. பாளையக்காரர்களில் வடக்குப் பக்கத்திலிருந்து வந்திருந்த தனது ஆதரவாளர்களுக்கு, அவர் பல சிறப்பு முன்னுரிமைகளைக் கொடுத்திருந்தார். அதனா லேயும் தும்பிச்சி நாயக்கரின் செயல்பாடுகள் பெருவெறுப்பைத் தந்தனவாக இருந்தன. புதிய ஆளுமையின்கீழ் இயங்க, ஒத்துழைக்க முரண்டுபிடித்தார். மேலும் அவர் ஒருபகுதி மக்களிடையேயும், மதுரை அதிகாரத்திலேயுமே செல்வாக்கு மிகுந்தவராக இருந்து

வந்தது, வரலாற்றின் பக்கங்களில் தெளிவாக இருக்கின்றது. கீழக்கரையிலுள்ள ஒரு கல்வெட்டு,[1] அச்சுத ராயருடன் சேர்த்து அவரையும் குறிப்பிடுகின்றது. சோபாக்ரிட் (1543) என்ற ஒரு கல்வெட்டு, தும்பிச்சிக்கு, 'சில்லவார்களின் தலைவன்' என்றொரு பட்டமிருந்ததைச் சுட்டிக் காட்டுகின்றது. 'வாங்கா'வின் அரசன்[2] என மற்றொரு பட்டமும் அவருக்கிருந்தது. 1608ஆம் ஆண்டின் இயேசு சபையினரின் கடிதமொன்று[3] 'தொமிசி ராயன்' என்பவன் தொட்டியர்களின் தலைவனாக இருந்தான் என்று விவரிக்கின்றது. அநேகமாக அவன், தும்பிச்சியின் வழித் தோன்றலாக இருக்கலாம். இத்தனைச்செல்வாக்கும் கொந்தளிப்புமான தலைவர், மற்ற பாளையக்காரர்களைப்போல பணிவடக்கமுள்ளவராக, வரம்பு மீறாத, கட்டுப்பாடுடையவராக இருந்திருக்க வாய்ப்பில்லை. தனது ஆதரவாளர்களை பெருமளவுத் திரட்டிய தும்பிச்சி, அதிருப்தியிலிருந்தத் தலைவர்களையும் ஒன்றிணைத்து, பரமக்குடியை மையமாகவைத்து, தன்னை வலுப்படுத்திக்கொண்டார். அரண்களையும் வலிமைப்படுத்திக் கொண்டார். சுற்றிலுமுள்ளப் பகுதிகளைச் சூறையாடினார். கிருஷ்ணப்ப நாயக்கரின் அதிகாரத்தை மறுதலித்தார். தும்பிச்சி நாயக்கரின் இந்தவிவகாரத்தில் கிருஷ்ணப்ப நாயக்கர் மிகுந்த சுறுசுறுப்பையும், முந்தார்வத்தையும், ஈடுபாட்டையும் கொண்டிருந்தார். தன் தந்தையின் ஆதரவாளர்களில் ஒருவரான தளவாய் பெத்த கேசவப்ப நாயக்கரின் தலைமையில், தும்பிச்சியை அடக்கும் நடவடிக்கைக்கு ஒப்புதல் அளித்தார். தும்பிச்சி நாயக்கரோ, மதுரையிலிருந்து வந்த பெரும்படையை மூர்க்கமாக எதிர்கொண்டார். கிருஷ்ணப்ப நாயக்கர், காலமான தனது தளபதியின் மகன் சின்ன கேசவனை பதிமூன்று பாளையக்காரர்களுடனும், பெரும்படையுடனும், சில பீரங்கிகளையும் முதல்கட்டமாக அனுப்பி, கோட்டையை தூளாக்கச் செய்தார். பின்னர், இரண்டாம் கட்டமாக அனுப்பியப் படைதான் வெற்றியை ஈட்டிவந்தது. தும்பிச்சி கைது செய்யப்பட்டார். பின்னர் தலை துண்டிக்கப்பட்டார். அதேவேளையில், கலகக்காரர் தும்பிச்சியின் இரண்டு மகன்களையும் பெருந்தன்மையுடன் கிருஷ்ணப்ப நாயக்கர் நடத்தினார். சுற்றியுள்ள சில கிராமங்களைச் சேர்த்து, பரமக்குடி மற்றும் பரம்பூர் பகுதிகளை பாளையங்களாக்கி, அவர்களிடமே ஒப்படைத்தார். மீதமிருந்த தும்பிச்சி நாயக்கரின் ஆளுகைக்குட்பட்டப் பகுதிகளை அரசுக்குச் சொந்தமாக்கிக் கொண்டார். இந்த நடவடிக்கையை, அவர் மற்ற பாளையக்காரர்களுக்கு ஒருபாடமாகப் புகட்டினார். இந்த நடவடிக்கைகளின் வழியே, விஸ்வநாத நாயக்கரின் திட்டமுறைகள் ஒருசிலருக்கு அதிருப்தியைத் தந்திருந்தது என்பதைக் காட்டுகின்றது. அதைத்தவிர்த்து,

பெரும்பாலானப் பாளையக் காரர்கள் விஸ்வநாத நாயக்கருக்குப் பின்வந்த ஆட்சியாளர்களுக்கு விசுவாசமாகவும், ஒத்துழைப்பையும் தந்துவந்தார்கள் என்பதையும் மறுத்துவிட முடியாது.

**இலங்கை மீது படையெடுப்பு - சிங்கள தீப கதா[4]:-** கிருஷ்ணப்ப நாயக்கர் இலங்கையை வெற்றிகொண்ட கதையை விவரமாக மதிப்பீடு செய்கின்றது. நம்பத்தகுந்த உண்மைகளைக் கொண்டதாக அது, தோற்றமளிக்கின்றது. தும்பிச்சி நாயக்கர் கொல்லப்பட்ட சம்பவத்தையடுத்து, அவரது நண்பரான கண்டி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கரைப் பற்றி அவதூறாக அந்தக்கதையில் பேசுகின்றார். அதனால் சினமுற்ற கிருஷ்ணப்ப நாயக்கர், தனது பாளையக்காரர்களில் ஐம்பத்திரண்டுபேரையும் பெரும்படையையும் நவபாஷணா வழியாக, இலங்கைக்கு வழிநடத்திச்சென்று, மன்னாரில் முகாமிடுகின்றார். அங்கிருந்து, நாயக்க மன்னரின் மேலாண்மையை ஏற்கச்சொல்லியும், திறைசெலுத்தச் சொல்லியும் கண்டி அரசருக்குத் தகவல் அனுப்பப்படுகின்றது. அவற்றை நிராகரித்த கண்டி அரசர் 40,000 படைவீரர்களை, நான்கு மந்திரிகள் மற்றும் எட்டு தேஷ் அனதாளு என்ற ஆளுநர்களின் தலைமையில் அனுப்பி, அந்நிய ஊடுருவலைத் தடுக்க ஆணையிடுகின்றார். புத்தளம் எனுமிடத்தில் இருதரப்புக்கும் கடும்போர் நடக்கின்றது. தும்பிச்சி நாயக்கரைக் கொன்று கலகத்தை அடக்கிய, அதே சின்ன கேசவ நாயக்கன் கண்டி இராணுவத்தை, தனது தலைமையிலான 20,000 படைவீரர்களையும், சில தளபதிகளையும் கொண்டு சிதறியோட விடுகின்றான். இரண்டு மந்திரிகள், ஐந்துதளபதிகள் மற்றும் பலரை சிறைப்பிடிக்கின்றான். அவர்கள் மனிதாபிமானத்துடன் நடத்தப்படுகின்றார்கள். ஆனால் சிறைப்பட்டவர்கள், தங்கள் அரசனைத் தூண்டிவிட்டு, மேலும் போர்புரிய வைக்கின்றார்கள். அவரும் 60,000 வீரர்களை, 10,000 அந்நிய (அநேகமாக, அவர்கள் போர்த்துக்கீசியர்கள்) வீரர்களைக் கொண்ட படையை திரட்டிக் கொண்டு போர்க்களம் புகுகின்றார். மீண்டும் இரத்தக் களறி. மயான பூமியில் 8,000க்கும் அதிகமான அந்நிய வீரர்களும், சிங்கள வீரர்களும் உயிர் துறக்கின்றார்கள். கிருஷ்ணப்ப நாயக்கரும் அவரது தளபதிகளும் அத்தனைப் போராடியும், கண்டி அரசனை உயிருடன் பிடிக்கமுடியவில்லை. அவர் களத்தில் இறந்துகிடக்கின்றார். அவரது உடல் தக்கமரியாதையுடன் தலைநகருக்கு அனுப்பி வைக்கப்படுகின்றது. மதுரை நாயக்கர் மூன்று நாட்கள் அங்கே தங்கியிருக்கின்றார். இறந்துபட்ட கண்டி அரசரின் குடும்பம், இலங்கையின் பழைய தலைநகரான ஆரம்கம் எனும் இடத்துக்கு அனுப்பிவைக்கப்படுகின்றது. அவர்கள் கௌரவமாக நடத்தப்படு கின்றார்கள். இலங்கையின் ஆளுநராக, தனது மைத்துனனான

விஜய கோபால நாயக்கரை அமர்த்தி, முறையான திறைகளுக்கு வழிவகை செய்துவிட்டு, கிருஷ்ணப்ப நாயக்கர் மதுரைக்குத் திரும்பினார்.

ஒட்டுமொத்தமாய் இந்தக்கதை, மதுரை நாயக்கரின் மீது புகழ் வெளிச்சத்தைப் பாய்ச்சுவதாக உள்ளது. நாயக்கர்களின் ஆதரவாளர் களில் யாரேனும் ஒருவர், இதை எழுதியிருக்கலாம். மிகவிரிவாக, துல்லியமாக, நன்கு வரையறுக்கப்பட்ட சரிநுட்பத்துடன், மருளற்றுப் பேசுகின்றது, இந்தக்கதை. ஆனாலும் அதிலுள்ள சில தகவல்கள், தகுதியான சான்றுகளில்லாமல் ஏற்றுக்கொள்ள முடியாதவையாக இருக்கின்றன. இலங்கை மீதானப் படை யெடுப்பு, வழக்கமான திறைசெலுத்தாமல் நிறுத்திவைக்கப்பட்டது தொடர்பாகத்தான் இருக்கமுடியும். கிருஷ்ண தேவராயர், அச்சுத ராயர் மற்றும் சதாசிவ ராயர் ஆகியோர் விஜயநகரப் பேரரசர்களாக இருந்த காலகட்டத்திலேயே, இலங்கை மதுரை ஆட்சியின் கீழ் இருந்துவந்துள்ளது. பேரரசர்களின் புகழை அது, போற்றி வந்திருப்பது தெளிவாகத் தெரிகின்றது. இந்நிலையில், கிருஷ்ணப்ப நாயக்கர் படையெடுப்பு, நிலம்வென்று கொள்ளும் முறையாகத் தெரியவில்லை. வரலாற்றின் பக்கங்களில் இருக்கும் தரவுகளின் அடிப்படையில், மதுரை நாயக்கர்களின் மேலாண்மையை ஏற்கச் செய்வதும், செலுத்தப்படாத திறையை முறையாகப் பெறுவதற்கு மான தாக்குதலாகத்தான் இருக்கமுடியும். அதை கிருஷ்ணப்ப நாயக்கர், கண்டி அரசரின் பழிந்துரையைத் துடைத்துக் கொள்வதற் கான போர்போல, சூழல்கள் தெளிவிக்கின்றன. மதுரை ஆட்சி யாளர்கள் மீதுகொண்ட ஈடுபாட்டால், பெரும்பாலான இடங்களில் விடுதல்களுடனும், முழுவதும் தவறே செய்யாத உத்தமபுத்திரன் எனும் வகையிலும் எழுதப்பட்ட இந்தக்கதை, மதுரை ஆட்சி யாளனின் புகழுக்கு எதிராகவும் ஒரு தோற்றத்தைத் தருகின்றது. இலங்கையில் மதுரையின் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்ட விஷயத்திலும் சந்தேகங்கள் எழுகின்றன. படையெடுப்புக்குப் பின், மதுரைக்கும் இலங்கைக்குமான உறவு நெருக்கமாக இருந்ததற்கான ஆதாரங்கள், அரசப் பிரதிநிதி நியமனத்துக்குப் பின்பு எதுவும் காட்டப்படவில்லை. அநேகமாக, ஓர் அதிகாரி அங்கே நியமிக்கப் பட்டிருக்கலாம். அவர் மூலமாக திறை பெறப்பட்டிருக்கலாம்.

இலங்கை மீதான படையெடுப்புக் குறித்த கல்வெட்டு ஆதாரங்கள் குறைவாகவும், போதாநிலையிலும் இருக்கின்றன. ஒருவேளை சதாசிவராயர் 1564-65 காலகட்டத்தில் இலங்கையில் பெரும்பொருளைக் கொள்ளைகொண்டு வந்ததை,[5] தருக்குடன் பிற்காலத்தில் அவருக்குப் பின்வந்தவர்களும் தொடர்ந்திருக்கலாம்.

அப்படியான பட்சத்தில் தனிநோக்கத்துக்குரிய விரைவுப் படையெடுப்பாக அது குறுகிய காலத்திலேயே முடிந்திருக்கும். 1567ஆம் ஆண்டின் தாராமங்கலம் கல்வெட்டு, வீர வசந்தராயர் இலங்கையை வெற்றிகொண்டதாகக் குறிப்பிடுகின்றது.[6] விஜயசிம்ஹாவின் மகாவம்சம் நூலில், அக்காலகட்ட இலங்கை மீதான மதுரைப் படையெடுப்பு குறித்து, குறிப்புகள் ஏதும் காணப்படவில்லை. அதேவேளையில் அக்காலகட்ட இலங்கை வரலாறு குழப்பமான நிலையிலேயே காணப்படுகின்றது. எது எப்படியோ மற்ற தரவுகளின் வழியேயும் கிருஷ்ணப்ப நாயக்கர் இலங்கை மீது படையெடுத்துச் சென்றது உறுதியாகின்றது. அப்படையெடுப்பு, வென்று நிலம் கொள்ளுதலுக்கானது அல்ல. செலுத்தப்படாத திறையை முறையாகப் பெற, அமலாக்கம் செய்வதற்கு என்று உறுதியாகின்றது.

ரங்காச்சாரி, 'போர் நடந்தது உண்மை. அவர் ஏற்றுக்கொண்டது, சிறப்புக்குரியது'[7] என்று நெல்சனின் ஆய்வு முடிவுகளைக் குறிப்பிடுகின்றார்.[8] டெய்லரின் கூற்றுப்படி, 'அது நடக்கவில்லை என்று மறுக்கமுடியாது. அது, குறுகிய மனப்பான்மையுள்ள அல்லது குறையறிவுள்ளது' என்கிறார். தான் ஆய்வுசெய்த விஷயங்களின் அடிப்படையில் தனக்குக் கிடைத்த ஆதாரங்களின் மேல் அவர், இதை கவனமான வார்த்தைகளால் வெளிப்படுத்து கின்றார். 'இந்தக் கையெழுத்துப் பிரதியில் குறிக்கப்பட்டுள்ள நிகழ்ச்சிவிரிவுரை மிகவும் குறிப்பானது. இதிலுள்ளப் பெயர்கள், இடங்கள், சூழல்கள் எல்லாமே கலப்பற்ற கற்பனைத்திறம்.... இலங்கை மீது படையெடுத்தது. அதை வெற்றிகொண்டது போலான பொதுவான உண்மைகள், அதுபோல ஒன்று நடந்திருந் தால், எழுத்து வழியாகக் கிடைத்திருக்கும்' என்பதாக இருக்கின்றது.[9]

**கிருஷ்ணப்ப நாயக்கரும் விஜயநகரமும்** - இந்தக்கேள்விக்கு தெளிவற்ற முடிவே ரங்காச்சாரியின் கருத்தாக இருக்கின்றது. ஒரு இடத்தில், 'அவனது விசுவாசம் தெளிவாக இருக்கின்றது'[10] என்கிறார். மற்றொரு இடத்தில், 'பேரரசருடனான அவனது உறவு ஐயப்பாட்டு நிலையில் ஒன்றாகவுள்ளது'[11] என்கிறார். 1565 ஆம்ஆண்டில் பேரரசரிடம் கிருஷ்ணப்ப நாயக்கர் கொண்டிருந்த உறவுமுறையை நிரூபிக்க, 1561ஆம் ஆண்டின் கல்வெட்டைத் தூசிதட்டுகின்றார். இந்தக்கேள்விக்கான பதிலை, 1567ஆம் ஆண்டின் சதாசிவ ராயரின் கிருஷ்ணாபுரம் ஏடுகள், அறியமுடியாத சந்தேகத்தின் நிழல் ஏதுமற்று நிரூபணம் செய்கின்றன. அக் கல்வெட்டுகளில் கிருஷ்ணப்ப நாயக்கர் பல்வேறு புகழுரைகளால்

ஸ்நானம் செய்யப்படுகின்றார். உச்சபட்சக் கொண்டாட்டமானப் பட்டங்கள் வழங்கப்பட்டதை அந்தக் கல்வெட்டுகள் படம்பிடிக் கின்றன. அதிலொன்று, ‘கடமை குறித்த உண்மையை அறிந்தவன்’[12] என்று ஏகமாய்ப் பாராட்டுகின்றது. இப்படியான பலபட்டங்களை அவர் கொண்டிருந்தார். 1568 மற்றும் 1571ஆம் ஆண்டுகளின் சதாசிவ ராயர் கல்வெட்டுகளில்,[13] கிருஷ்ணப்ப நாயக்கர் குறித்து வேறுபல சுட்டுக்குறிப்புகளும் உள்ளன. 1571ஆம் ஆண்டின் கல்வெட்டில் கிருஷ்ணப்ப நாயக்கரின் சிறப்புத் தகுதி குறித்து எழுதப்பட்டிருந்தது. **மிருத்யுஞ்ஜய** எனும் கையெழுத்துப் பிரதியில் அரிய நாத முதலியாரின் வாழ்க்கையை முழுமைநிலை எட்டாது, குறைபாடுகளுடன் நடைமுறைத் தொடர்புகள் குறிக்கப்பட்டிருந்தாலும், அதில் குறிப்பிடப்பட்டுள்ளதுபோல, விஜய நகரத்தை முகம்மதியர்கள் இன்னலுக்கு உள்ளாக்கியபோது, தலைநகரின் பாதுகாப்புக்கு அரிய நாத முதலியார் அனுப்பி வைக்கப்பட்டது உண்மைதான். இடரார்ந்த அந்த நேரத்தில் பேரரசுக்கு அரிய நாத முதலியார் ஆற்றிய பணிகள் குறித்து உறுதிசெய்யப்பட்ட, தெளிவானத் தரவுகள் எதுவுமில்லை. வடக்கில் அவர் நடந்துகொண்ட முறைகள், செயல்பாடுகள் குறித்து, ரங்காச்சாரி கட்டுப்பாடற்றச் சொற்களால் முரண்பாடான, பொருத்த மற்ற, நம்பமுடியாத, விரிவான கதைகளை எடுத்தியம்புகின்றார். தலைக்கோட்டைப் போர் முடிந்த இரண்டு ஆண்டுகளுக் குள்ளாகவே 1566-67ஆம் ஆண்டுகளில் அக்ஷய வருடத்தில் அவர் மதுரைக்குத் திரும்பி, நிரந்தரமாகவே தங்கிவிடுகின்றார். அனுபவங்கள் தந்தப் பாடங்களால் அவர் பணிவுடையவராக, தன்னடக்கத்துடன், மெய்யறிவார்ந்த மனிதராக மாறியது, தெளிவாகத் தெரிகின்றது. இவற்றை அடிப்படையாகக் கொண்டு, அரிய நாத முதலியாரின் திரும்புகையை[14] ரங்காச்சாரி வளமாக யூகங்களுக்கு உள்ளாக்கி, விளக்கமளிக்கின்றார்.

1566-67ஆம் ஆண்டுவாக்கில் வடக்கிலிருந்து திரும்பிய அரியநாத முதலியார் சமுதாயத் தொடர்புடைய பணிகளில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். காஞ்சிவரத்திலிருந்து தனது உறவினர் களை வரவழைத்து, சோழவந்தான் மற்றும் பல கிராமங்களில் அவர்களைக் குடியமர்த்தினார். அவர்களுக்காக பல வீடுகளையும் ஒரு கோவிலையும் கட்டினார். மக்கள் குடியேறுவதற்குத் தேவையான அத்தனை அத்தியாவசியங்களையும் அங்கே வழங்க ஏற்பாடு செய்தார். மதுரைப் பேரரசுக்கு உட்பட்டப் பகுதிகளில் கட்டிடங்களையும் கோவில்களை மேம்படுத்துவதிலும் மற்றக் கட்டுமானங்களிலும் அக்கறைக் காட்டினார். **மிருத்யுஞ்ஜய** எனும் கையெழுத்துப் பிரதியில் 1600ஆம் ஆண்டுவரை, அடுத்தடுத்த

நான்கு ஆட்சியாளர்களிடம் அவர் தளவாயும் பிரதானியுமாக இருந்தார் என்று புகழப்பட்டிருக்கின்றது. கிருஷ்ணப்ப நாயக்கரின் ஆலோசகராகவும் முதன்மை நண்பராகவும் அரிய நாத முதலியார் இருந்ததாக ரங்காச்சாரி கூறுகின்றார். 'தனது மரணம்வரையில் நாட்டின் நிர்வாக மேன்மைக்காக வழிகாட்டும் உந்துதலுடன் செயல்பட்ட அவரிடம், நாயக்கர்கள் ஓர் உபகரணம்போல இருந்தார்கள்' என்று நெல்சன் தொடர்கின்றார். இதுபோன்ற முக்கியத்துவம் வாய்ந்த முடிவுக்குவர, போதுமான ஆதாரங்கள் இருக்கவே செய்கின்றன. 1570ஆம் ஆண்டின் கல்வெட்டு[15] ஒன்று, விஸ்வநாத நாயக்கர், கிருஷ்ணப்ப நாயக்கர் மற்றும் வீரப்ப நாயக்கர் ஆகியோரின் பதிலாள் என்று அவரைக் கொண்டாடு கின்றது.

கிருஷ்ணப்ப நாயக்கர் ஆட்சியின் தொடக்க காலம், பல்வேறு நெருக்கடிகளைக் கொண்டிருந்தது. தும்பிச்சி நாயக்கரின் தலைமையில் ஒன்றுதிரண்ட அதிருப்திப் பாளையக்காரர்களின் கலகத்தை அடக்கி, நாட்டில் அமைதியை நிலைநாட்டுவதில் கவனம் செலுத்தவேண்டியிருந்தது. திறைசெலுத்தாமல் முரண்டுபிடித்த இலங்கை கண்டி அரசரை வழிக்குக் கொண்டு வந்து, முறையாகத் திறை பெறவேண்டியுமிருந்தது. தனது கடமை திறம்புகையால் பேரரசுக்கு தன்னால் ஏதும்நேர்ந்துவிடக் காரணமாக இருந்துவிடக்கூடாதென்று கவனம்செலுத்த வேண்டி யிருந்தது. இவற்றிலெல்லாம் கவனம் செலுத்துகையில், நாட்டின் அமைதியான நிர்வாகத்திலும் முன்னேற்றத்திலும் மனம்குவித்து பணிசெய்ய முடியாதநிலையே இருந்தது. பாளையங் கோட்டைக்குக் கிழக்கே, கிருஷ்ணாபுரம் என்றொரு நகரத்தை கிருஷ்ணப்ப நாயக்கர் நிர்மாணித்தார். கடையம்-கிருஷ்ணாபுரம் என்று மற்றொரு நகரத்தை, தின்னவேலியின் மேற்கே கட்ட மைத்தார். பாளையங்கோட்டை கிருஷ்ணாபுரம், கிருஷ்ணப்ப நாயக்கரின் பெருங்கவனத்தைப் பெற்றது. சதாசிவ ராயரின் கிருஷ்ணாபுரம் ஏடுகள், திருவேங்கடநாதர் கோவிலுக்கு எண்ணற்ற கிராமங்களைக் கொடையாகக் கொடுத்தாகக் கூறுகின்றன. கிருஷ்ணப்ப நாயக்கரால் கட்டப்பட்ட அந்தக்கோவில், வட்ட வடிவச் சூழ்சுற்றுச்சுவரைக் கொண்டது. அங்கே அகன்ற மற்றும் ஓங்கிய கம்பீரமான கோபுரம் உயர்ந்துநின்றது. அழகிய கற்தூண் களால் கட்டிய, பெரிய ரெங்க மண்டபம் அங்கிருந்தது. தூண்கள், மேற்கூரைகள் வண்ணம்செய்யப்பட்டிருந்தன. அக்கோவி லுக்கு கிருஷ்ணப்ப நாயக்கர், தேர் ஒன்றை கட்டினார்.[16] அது சுற்றிவர, கோவிலையொட்டி சாலைகள் அமைத்தார். அங்கே, விஷ்ணு சிலையை கட்டமைப்பு செய்தார். இதனைத்தவிர்த்து, சிவன்

கோவிலையையும் கிருஷ்ணப்ப நாயக்கர் நிர்மாணித்தார். ஒரு தெப்பக்குளத்தையும் பல அக்ரகாரங்களையும், அந்த நகரத்தின் மற்ற தேவைகளையும் அவர் பார்த்துக் கொண்டார். 1565ஆம் ஆண்டின் கிருஷ்ணாபுரம் கல்வெட்டு,[17] அந்தக்கோவிலுக்கு ஆறுகிராமங்களையும், அலிகுடியில் கொஞ்சம் நிலத்தையும் தானமாகக் கொடுத்ததைக் குறிப்பிடுகின்றது. அநேகமாக, அந்த நகரம், முன்னமே உருவாக்கப்பட்டிருக்கலாம். இப்போது மேம்பாட்டுப் பணிகள் மேற்கொண்டிருக்கலாம். மற்றகோவில் களுக்கு கிருஷ்ணப்ப நாயக்கர் வழங்கிய நன்கொடை, மானியங் களை பல்வேறு கல்வெட்டுகள் பிரதிபலிக்கின்றன.

**கிருஷ்ணப்ப நாயக்கரின் குணஇயல்புகள் மற்றும் பணிகள்** - தந்தை விஸ்வநாத நாயக்கரின் ஆட்சியின்போதே, கிருஷ்ணப்ப நாயக்கர் தனது மேன்மையை நிலைபெறச் செய்திருந்தார். 1546ஆம் ஆண்டின் கல்வெட்டு[18] ஒன்று, அவரது தகுதிக்குச் சான்று அளிக்கின்றது. 1550ஆம் ஆண்டின் சதாசிவ ராயரின் கல்வெட்டில்,[19] கிருஷ்ணப்ப நாயக்கரின் பெயர் காணப்படுகின்றது. 1553ஆம் ஆண்டின் கல்வெட்டொன்றில் அவர், கோவிலுக்கு நிலங்களைத் தானமளித்த சேதி இடம்பெற்றுள்ளது. 1555ஆம் ஆண்டின் கல்வெட்டு, அவரது முகவர் ஏகாம்பர முதலியார் நிலதானம் செய்ததை பெருமையுடன் பகர்கின்றது.[20] சதாசிவ ராயரின், 1567ஆம் ஆண்டின் கிருஷ்ணாபுரம் ஏடுகள் அவரை, 'காஞ்சிபுரக் கடவுள்'[21] என்று பண்பேற்றியுரைக்கின்றன. திருவடி ராஜ்ஜியத்தின் ஒருபகுதியை ஆண்டு, துடுக்குத்தனமாக நடந்துகொண்ட அரசனை[22] கிருஷ்ணப்ப நாயக்கர் பதவியிழக்கச் செய்ததால், ஐலவலிபுரா என்றும் மெச்சப்படுகின்றார். தவிர, பாண்டியகுல ஸ்தாபணாச் சாரியா என்ற பெயரும் அவருக்குண்டு. தென்கடலின் பிரபு என்று தெய்வத் தன்மையுடன் பூசித்து, பாராட்டவும்பட்டிருக்கின்றார். இந்தப் புகழாரங்கள் எல்லாமே, அச்சுத ராயர் காலத்திலும், பின்னர் ராமராஜ வித்தலா காலத்திலும், திருவாங்கூர் படையெடுப்பு மற்றும் பாண்டியர்களுக்கு எதிரானப் படையெடுப்பில், அவரது பங்களிப்பை தெளிவாகக் குறிப்பிடுகின்றன. போர்த்திறமைகளில், தந்தை விஸ்வநாத நாயக்கருக்கு இணையாகப் பேசப்பட்டு, பேரரசின் குறிப்பிடத்தகுந்த தளபதியாகவும் அவர் கருதப்படு கின்றார். அவரது மற்ற குணநலன்களாக மெய்யறிவு, கருணை, நேர்மை, மற்றும் பெருந்தன்மை கல்வெட்டு ஆவணங்களாக பெருமளவுப் பதியப்பட்டு, வரலாறு மதிப்பீட்டுப் பெருமை கொண்டுள்ளது. குடிமக்களின் நலத்தை எப்போதுமே சிந்தித்துக் கொண்டிருந்த தகுதியும், அறிவார்ந்த மெய்யுணர்வும்கொண்ட ஆட்சியாளராக கிருஷ்ணப்ப நாயக்கர் கருதப்படுகின்றார். அவரது

வளர்ச்சி தனித்தன்மையிலானது. அவருக்கிருந்த நற்பெயரில் அரிய நாத முதலியாரின் செல்வாக்கும் பங்குவகித்தது என்று சொல்வது, அத்தனை உசிதமில்லாதது. குழப்பமானக் காலகட்டத்திலும் வலுவான, பயனுள்ள ஆட்சியினால் நாட்டை வளர்ச்சிப் பாதையில் கொண்டு சென்றார். சில பாளையக்காரர்களின் துன்புறுத்தலால் அவர் பயங்கரமானப் பின்னடைவைச் சந்தித்தார். அதேவேளையில் நிலைத்த தன்மையாலும், பண்பான எண்ணங்களாலும் அவர் களையும் மதித்து நிலையான ஆட்சியைத் தந்தார்.

**கிருஷ்ணப்ப நாயக்கரின் மரணம்** - ஒன்பது ஆண்டுகள் மட்டுமே ஆட்சிசெய்த கிருஷ்ணப்ப நாயக்கர் ஆங்கிரஸ ஆண்டு, கார்த்திகை மாதம் 19ஆம் நாள் - 1572ஆம் ஆண்டு டிசம்பர் 3ஆம் தேதி- மரணமடைந்தார். நாயக்கர் ஆட்சியின் பொதுவான தகவல் களை பெருமளவு தந்து, கல்வெட்டுத் தேதிகளுடன் ஒத்துப்போகும் **மிருத்யுஞ்ஜய** எனும் கையெழுத்துப் பிரதியே இந்தத்தேதியைக் குறிப்பிடுகின்றது. ரங்காச்சாரி, பாண்டியர்களின் ஆண்டுகணிப்பின் படி, ஆங்கிரஸ ஆண்டின் மாசிமாதத்தை நிலைப்படுத்துகின்றார். கிருஷ்ணப்ப நாயக்கரையடுத்து பொறுப்புக்குவந்த வீரப்ப நாயக்கரின் தாராபுரம் கல்வெட்டு,[23] ஆங்கிரஸ ஆண்டின் மார்கழி, 9ஆம் தேதியை முன்னிறுத்துகின்றது. கிருஷ்ணப்ப நாயக்கர், 1572ஆம் ஆண்டு டிசம்பர் தொடக்கத்தில் இறந்திருக்கலாம்.

### அடிக்குறிப்புகள்

1. Appendix D, No.255
2. Ibid, No.12
3. Dertrand, ii, p.19
4. Taylor, C.R., iii, pp. 183-6
5. Appendix D, No.57
6. 19 of 1900 ; M.E.R., 1900 p.31, Sewell, i , p.200
7. P.105
8. I.A., 1916, p.88
9. Taylor, C.R., iii, p.186
10. I.A., 1916, p.83
11. Ibid., p.87
12. E.I., ix, pp.32-842; Appendix D, No. 61
13. Appendix D, Nos. 63 and 67
14. I.A., 1916, p.85
15. Appendix D, No.66
16. E.I., ix, p.328, vv.55-7
17. Appendix D, No.56
18. Ibid, p.87

19. Appendix D, No.25
20. Ibid., Nos, 42 and 43
21. Ibid., Nos. 53 and 55
22. Tiradikshmapa Saptangaharanaujasa
23. Appendix D, No.68

# 4

# வீரப்ப நாயக்கர் (1572-1595)

கிருஷ்ணப்ப நாயக்கரைத் தொடர்ந்து, வீரப்ப நாயக்கர் 1572ஆம் ஆண்டின் இறுதியில் தந்தையின் அரியணையில் அமர்ந்தார். நெல்சனை பின்தொடரும் ரங்காச்சாரி, இரட்டை அரச நிர்வாகத்தைப் பேசுகின்றார். 'இந்த ஆட்சியாளர்களின் குறிப்பிடத்தக்க ஆளுமையாக, சகோதரர்கள் கூட்டுஅதிகாரத்தைக் கைக்கொண்டிருந்தனர்[1] என்கின்றார். நெல்சனின்[2] கூற்றுப்படி, '(கிருஷ்ணப்ப நாயக்கரின்) இரண்டுபுதல்வர்களுக்கும்...... ஆர்யநாயக்கர் கூட்டுநிர்வாகத்தில் தேசத்தை ஆளுவதற்கு அனுமதிவழங்கியிருந்தார்' என்று தெரிகின்றது. இந்தப்பார்வை, தமிழ் கையெழுத்துப்படிகளை மொழிபெயர்த்த டெய்லரின் தரவுகளின் அடிப்படையைக் கொண்டிருக்கின்றது. அதில், 'இரண்டாவது அதிகாரம்' என்ற வாசகம் இடம்பெற்றிருக்கும். ஆனால் டெய்லர் அந்த வாசகத்தை, 'விஸ்வநாதனுக்கு இரண்டாவது அதிகாரமாக அரியநாதர் இருந்தார்' என்று குறிப்பிட்டிருப்பார். இந்தவரலாற்றுத் தரவுகள் சந்தேகமேயில்லாமல், அரசுடன் இணைந்து அசாதாரணமாகச் செயல்பட்ட 'சின்ன தொரை'யைப் பேசுகின்றன. அதேவேளையில் அவை பெரும்பாலும், 'ஒருவர் முடிசூடியவர். மற்றவர் சின்ன தொரை' என்றே பேசிவருகின்றன. ஆனாலும் நெல்சனும் ரங்காச்சாரியும் காலம்முழுதும் கூட்டுஆட்சி நடந்ததாகப் பேசவில்லை. அவர்கள் தங்களின் அந்தப்பார்வையை 1573 ஆம் ஆண்டுக்கும் 1600 ஆம் ஆண்டுக்கும் இடையில் மட்டுமே பொருத்துகின்றனர். நெல்சன், 1595 ஆம்ஆண்டில் வீரப்ப நாயக்கர் மரணமடைந்ததும் அவரது மகன்கள் பொறுப்புக்கு வந்தார்கள் என்று ஏற்றுக்கொள்கின்றார். ஆனால் அது யூகத்தின் அடிப்படையிலானது. வீரப்ப நாயக்கரைப் பொறுத்தமட்டில், அவருக்கு சக ஆட்சியாளர் இருந்தார் என்று வரலாற்றின் பக்கங்களில் குறிப்பிடப்படவில்லை. விஸ்வநாத நாயக்கரையும் வீரப்ப நாயக்கரையும் ஆட்சியாளர்களாகப் பேசும் பாண்டியர்களின் வரலாற்றை, நெல்சன் வழிகாட்டியாக எடுத்துக்கொண்டது, தெரியவருகின்றது. நாயக்க ஆட்சியாளர்களைப் பேசும் **மிருத்யுஞ்ஜய** எனும் கையெழுத்துப்

பிரதி, கூட்டுஆட்சியாளர்கள் பற்றி எங்கும் குறிப்பிடவில்லை. நெல்சன் செய்ததுபோல, டெய்லர் எதிர்எல்லைக்குச் செல்ல வில்லை. ஆனால் தனது கருத்தை மிகுந்த கட்டுப்பாட்டுடனும் எச்சரிக்கையுடனும் வெளிப்படுத்துகின்றார். 'இங்கு, அது நடைபெற்றதிலிருந்து தொடர்ந்துவருகின்ற வழக்கமாக, அரியணையிலிருப்பவனுக்கு சட்டரீதியான வழித்தோன்றல்கள் இல்லாதபட்சத்தில், அரியணைக்கு உரியவனாக இளையவனை, 'இரண்டாவது அதிகாரம்' என, அதை மெய்யெனக் கொள்ளலாம். அது, முதல்முறையாக இப்போது தொடங்கியிருக்கின்றது.'[3]

நேரடியாகவே, நெல்சனின் இந்தக்கருத்தியல் கோட்பாட்டுக்கு எதிராக, கல்வெட்டு ஆதாரங்கள் மிகுந்து இருக்கின்றன. இரண்டாம் வேங்கடனின் கூனியூர் ஏடுகள், வெள்ளங்குடி ஏடுகள் மற்றும் முதலாம்வேங்கடனின் தளவாய் அக்ரஹார ஏடுகள் அனைத்துமே தொடக்கக் கால நாயக்கர்களின் குடிவழிப் பட்டியலைக் கொண்டிருக்கின்றன. அவையனைத்துமே கூட்டு ஆட்சியாளர்கள் குறித்து, எந்தத்துரும்பையும் எடுத்துவைக்கவில்லை. நாயக்கர் ஆட்சிக்காலத்தில் கூட்டுஆட்சியிருந்ததாக, வேறு எந்தவொரு கல்வெட்டு ஆதாரமும் துணைபோகவுமில்லை. அநேகமாக சூழலைப்பொறுத்து, ஆட்சியிலிருப்பவருக்கு அடுத்திருக்கும் அரச குடும்பத்து உறுப்பினர், அதிகாரத்தில் துணைசெய்யும் வழக்கம் இருந்தேவந்துள்ளது. இதுபோலான வழக்கம் சோழர்கள் காலத்திலும் இருந்திருக்கின்றது. இன்றைய இந்திய அரசர்களில் நிறைய பேர், யுவராஜா அல்லது இளையராஜா என்று இருக்கின்றனர்.

இவ்வாறாக, ரங்காச்சாரி இரண்டாம் விஸ்வநாத நாயக்கரை, வீரப்ப நாயக்கரின் உடனுழைப்பாளர் என்று, அனைத்துப் பணிகளிடையேயும் குறிப்பிடுகின்றார். மாவலி வானாதிராயரின் கலகம் மட்டுமே நாட்டின் அமைதியைக் குலைக்கும் முக்கிய நிகழ்வாக, அப்போது இருந்து வந்தது. சுந்தரத்தோள் மாவலி வானாதிராயர் மற்றும் பாண்டிய அரசனின் திருமணம் மூலமாக அல்லாது பிறந்த அவர்கள், லக்கனா நாயக்கரால் முடிசூட்டப் பட்டவர்கள். பதினைந்தாம் நூற்றாண்டின் இரண்டாம்பகுதியில் ஆட்சிசெய்த அவர்களைப் பற்றி, வரலாற்றின் பக்கங்கள் அதிக அளவில் பேசுகின்றன.[4] வீரப்ப நாயக்கருக்கு எதிராகக் கலகம் செய்துவந்தவன், அநேகமாக அந்த மரபில்வந்த ஒருவனாக இருக்கவேண்டும். இந்த வானாதிராயர்களைப் பற்றியக் குறிப்புகள் ராம்நாட் மாவட்டத்தின்[5] திருப்புல்லாணி, காளையார்கோவில் மற்றும் தேவிபட்டிணம் ஆகிய இடங்களிலுள்ள பதினாறாம்

நூற்றாண்டின் எண்ணற்றக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. அவர்கள் உரிமைகேட்பவர்களாகவும், உயரதிகாரத்தை அடைய வேண்டுமென்ற பேரவாகொண்டவர்களாகவும் இருந்துவந்தது, தெரிகின்றது. விஸ்வநாத நாயக்கர், எல்லாவகைகளிலுமே அவர்களைச் சரிசெய்து, மரியாதையான இடம்கொடுத்து, பாளைய முறையில் தன்வயப்படுத்தி வைத் திருந்தார். எந்தச்சூழ்நிலையில் வீரப்ப நாயக்கர்மேல் அவர்களுக்கு எதிர்ப்புணர்ச்சி உருவானது என்பதும் தெளிவாக இல்லை. அதுபோல, உண்மையில் யார் அதற்குக் காரணம் என்பதும் தெரியவில்லை. மாவலிவனத்தை ஆண்டுகொண்டிருந்த அரசன் மானாமதுரை மற்றும் காளையார் கோவில் அரண்களை வலுப்படுத்தியும், அதைச்சுற்றியுள்ளப் பகுதிகளைக் கைப்பற்றியும் தன்பொறுப்பில் வைத்துக்கொண்டான் என்று வரலாற்றுத் தரவுகள் பகர்கின்றன. வீரப்ப நாயக்கரின் நடவடிக்கைகள் மாவலிவானாதிராயனுக்கு தன் அதிகாரத்தை நினைவூட்டவும், அது குறித்த முடிவுஎடுக்கவுமே இந்த நடவடிக்கையில் ஈடுபட்டதாக விவரிக்கப்படுகின்றது. அவனது பாளையத்தை பறிமுதல்செய்து, வீரப்ப நாயக்கர் கட்டுக்குள் கொண்டுவந்தார். ரங்காச்சாரி மிகுந்த ஆர்வத்துடன் *366/1901* எண்ணுள்ள ஆவணத்தை எடுத்து வைக்கின்றார். அந்தஆவணம், அவனது தோல்வியையும் பின்னர், அவன் விசுவாசமானவனாக மாறியதையும் ஆதாரத்துடன் குறிப்பிடுகின்றது.[6] பராபவா *(1606)*ஆம் ஆண்டின் இந்தக் கல்வெட்டு, தென்னாற்காடு மாவட்டம், திருக்கோவிலூர் தாலுகாவிலுள்ள தாயனூரில் கண்டெடுக்கப்பட்டது. அதேவேளையில் இதற்கான நடவடிக்கைகள், தற்போதைய ராம்நாட் மாவட்டத்தில் எடுக்கப்பட்டன. கிளர்ச்சியையடுத்து, வலுவான நடவடிக்கையை மேற்கொண்ட வீரப்ப நாயக்கர் பின்னர், அவனது விசுவாசத்தைக் கண்டு, நடவடிக்கையை விலக்கிவிட்டார்.[7]

நெல்சன் மற்றும் ரங்காச்சாரி இருவருமே வீரப்ப நாயக்கரை, ‘பொம்மை ராஜா’ என்றே கணக்கிடுகின்றனர். அவர் அரிய நாத முதலியாரின் கைப்பாவையாகச் செயல்பட்டார் என்றும், அரிய நாத முதலியாரிடமே ஆட்சித் தலைமையுரிமை இருந்தது என்றும் கூறுகின்றனர். முன்னமே குறிப்பிட்டதுபோல, அரியநாத முதலியார் தளவாயாகவும் பிரதானியாகவும் இருந்தபோதிலும், அவர் தனது செல்வாக்கை செலுத்திவந்தார் என்பதற்கான உண்மை ஆதாரங்கள் எங்கும் இல்லை. அரிய நாத முதலியாரைப் பற்றிய ஒருநிகழ்ச்சி விவரம்கூட, வீரப்ப நாயக்கரின் நீண்ட ஆட்சிகாலம் முழுவதிலும், எந்தவொரு கல்வெட்டிலும் காணப்படவில்லை. அதேவேளையில் வீரப்ப நாயக்கரின் பெயர் பெரும்பாலானவற்றில்

இடம்பெற்றிருக்கின்றது. 1594ஆம் ஆண்டின் ஆவணம் ஒன்று, 'எல்லாநாட்டிலிருந்தும் திறையைப் பெற்றான்'[8] என்று வீரப்ப நாயக்கரைக் குறிக்கின்றது. வீரப்ப நாயக்கரின் ஆட்சிக்கால வரலாற்றுத் தரவுகளில், அரிய நாத முதலியாரின் பதவி மற்றும் அதிகாரம் குறித்தும் எதுவும் சொல்லப்படவில்லை. நிலப்பண்ணை உரிமைமுறை பெற்றவர்கள், தென்காசிப் பாண்டியர்கள் மற்றும் திருவடி[9] ஆகியோரிடம் வீரப்ப நாயக்கர் கண்டிப்பை மேற்கொண்டார் என்று தெரிகிறது. விஜயநகரப் பேரரசர்களின் கல்வெட்டுகள், வீரப்ப நாயக்கரை ஓர் ஆட்சியாளராக, பலவாறு புகழ்கின்றன. அவரின் பல்வேறு கல்வெட்டுகள், பரந்த தனது ராஜ்ஜியத்தை வலுவானப் பிடியில் வைத்திருந்ததாகவும், நாட்டின் உண்மையான எஜமானர் அவரே என்றும் சுட்டுகின்றன.

**விஜயநகரப் பேரரசர்களிடம் வீரப்ப நாயக்கரின் அணுகுமுறைகள்** - தனது தந்தை மற்றும் தாத்தா கொண்டிருந்த வழிமுறைகளைப் பின்பற்றி, அவரும் விஜயநகரப் பேரரசர்களுக்கு கீழ்ப்படிந்தும், விசுவாசமாகவும் இருந்ததாகக் கல்வெட்டுகள் காட்டுகின்றன. விஜய நகரப் பேரரசர்களின் கல்வெட்டுகள், நாயக்கர்களின் ஆட்சிப்பரப்பெல்லைகளில் தென்படுகின்றன. 1586ஆம் ஆண்டின் முதலாம் வேங்கடனின் தளவாய் அக்ரஹார ஏடுகள்,[10] வீரப்ப நாயக்கரின் வாழ்த்துகளோடு ஒரு தானத்தைப் பதிவு செய்திருக்கின்றன. மற்ற சில ஏடுகள், முன்னவர்களைக் காட்டிலும் தெற்குப்பகுதியை தனது கட்டுக்குள் வைத்திருந்தார் என்று புகழ்கின்றன. அவற்றுள், 1588ஆம் ஆண்டின் பிரான்மலைக் கல்வெட்டும்[11] ஒன்று. மற்றொன்று, அதே ஆண்டின் ஈரோட்டுக் கல்வெட்டு.[12] 1590ஆம் ஆண்டின் கல்வெட்டொன்று கிருஷ்ணதாஸ் என்பவரது நிர்வாகத்தின் கீழிருந்த விஷ்ணுகோவிலுக்கு தின்னவேலியின் கிராமங்கள் சிலவற்றைக் கொடையாகக் கொடுத்த சேதியைச் சொல்கின்றது.[13] 1594ஆம் ஆண்டின் ஸ்ரீரங்காவின் சேர்மாதேவி கல்வெட்டு வீரப்ப நாயக்கரை, கீழ் உரிமைப்பட்டவர் என்று குறிப்பிடுகின்றது.[14] 1577ஆம் ஆண்டின் வீரப்ப நாயக்கரின் கல்வெட்டு, ஸ்ரீரங்காவைக் குறிப்பிடுகின்றது.[15] 1578ஆம் ஆண்டின் சேர்மாதேவி கல்வெட்டில் தன்னை வீரப்ப நாயக்கர், ஸ்ரீரங்காவின் முகவர் என்றே அழைத்துக் கொள்கின்றார்.[16] இந்தக்காலகட்டத்தில் பெனுகொண்டாவில் இருந்துகொண்டு அடுத்தடுத்து மூன்று பேரரசர்கள் ஆட்சிசெய்துள்ளனர். ஆயினும், வேங்கடனின் ஆட்சியில் கட்டுப்பாடு, சிறப்பு பெற்றிருந்திருக்கின்றது. திருமலை மற்றும் ஸ்ரீரங்கா உள்ளிட்டோரிடமும் வீரப்ப நாயக்கர் விசுவாசமாகவே இருந்திருக்கின்றார் என்பதில் சந்தேமில்லை. ஆயினும் மதுரை விவகாரத்தில், அவரவர் அதிகாரத்திற்கேற்ப

செல்வாக்கு செலுத்தியிருக்கின்றனர். முதலாம் வேங்கடனின் ஆட்சியின் இறுதிப்பகுதியில் பேரரசின் அதிகாரம் மெல்லமெல்ல இறுக்கப்பட்டிருக்கின்றது.[17]

இருபத்து மூன்றாண்டுகால நீண்ட ஆட்சி, வீரப்ப நாயக்கருடையது. அக்காலம் முழுவதும் அமைதியும் வளர்ச்சியும் நாட்டில் சீராக உருப்பெற்றிருந்ததை ஒப்பீடுமூலம் அறிந்து கொள்ளலாம். திருச்சினாப்பள்ளிக் கோட்டை மேம்பாடு, அருப்புக்கோட்டையில் கோட்டை நிர்மாணம், சிதம்பரம் கோவிலைச் சுற்றி பாதுகாப்புச் சுவர், பல அக்ரஹாரங்களுக்கு கொடைகள் வழங்கிய வீரப்ப நாயக்கரின் தாராள மனப்பான்மையை, வரலாற்றின் பக்கங்கள் வியந்தோதுகின்றன. அப்பக்கங்களில் மதுரையிலுள்ள சுந்தரேஸ்வரர் மற்றும் மீனாட்சிக்கோவில்களுக்கு அவர் நன்கொடை, மானியம், நிதிஏற்பாடு செய்ததாக எங்கும் குறிப்புகள் இல்லை. ஆயினும் திருப்பணிமாலையின் 52-54 வரையிலான செய்யுள் பாக்கள், அவர் செய்வித்த கட்டுமானங்களாக வெள்ளியம்பலம், வடக்குக் கோபுரம், சேர்வீஸ்வரம் மடப்பள்ளி, ஆயிரங்கால் மண்டபம், மூர்த்தியம்மன் மண்டபம், இரண்டாம் பிரகாரத்திலுள்ள சுற்றுமண்டபம், சிற்பத் தூண்களுடனான வீரப்ப மண்டபத்தைக் கணக்கிடுகின்றன. மீனாட்சிக்கோவிலின் மண்டபத் தூண்களுக்குத் தங்கத்தகடுகள் போர்த்தியது வீரப்ப நாயக்கர்தான் என்றும் அப் பாக்கள் செப்புகின்றன. 1586ஆம் ஆண்டின் முதலாம்வேங்கடனின் தளவாய் அக்ரஹார ஏடுகள், அவரது சேவைப் பணிகளை மேலும்விரித்து, சுந்தரேஸ்வரர் கோவிலுக்கு எதிரே அரிய சிற்பங்களால் ஆன மண்டபத்தை வீரப்ப (நாயக்கர்) பூபதி கட்டினார் என்றும், மீனாட்சிக்கு தங்கக்கவசம் வழங்கினார்[18] என்றும் உறுதிசெய்கின்றன. சுந்தரேஸ்வரர் கோவிலுக்குள் உள்ள கல்வெட்டு ஒன்று, புராணக் காட்சிகளைக்கொண்ட எண்ணற்ற சிற்பத்தூண்களால் ஆன கம்பத்தடி மண்டபத்தை அவர் கட்டுவித்தார் என்று ஆவணப்படுத்துகின்றது.[19] தனது செல்வத்தின் பெரும்பகுதியை ஆன்மிகப் பணிகளுக்கு வீரப்ப நாயக்கர் செலவிட்டுள்ளார்.

நிலையான நீதிநிர்வாகத்தில், அவர் சமரசமற்ற ஓர் ஆட்சியாளராகவே காணப்படுகின்றார். 1574ஆம் ஆண்டின் கோரிப்பாளையம் தர்ஹா கல்வெட்டு, முகம்மதியர்களுக்கு கூன் பாண்டியன் வழங்கிய நிலம்தொடர்பானச் சச்சரவைப் பேசுகின்றது.[20] கல்வெட்டின் அடிப்படையில் வீரப்ப நாயக்கர் விரிவான விசாரணையை மேற்கொண்டு, கொடை கொடுக்கப்பட்டப் பழைய விவகாரத்தை ஊர்ஜிதப்படுத்தி, பாண்டியர்களின் நற்செயல்களைப்

போற்றிய அவர், அந்த இடத்தை முகம்மதியர்களுக்கே திரும்ப வழங்க ஆணையிட்டார். 1583ஆம் ஆண்டின் புதுக்கோட்டையின் ஸ்ரீவல்லபா ஏடுகள், பாண்டியர்களுடன் அவர் கொண்டிருந்த உறவைத் தெளிவாகப் பேசுகின்றது.

**கிறிஸ்தவ மத அறிமுகம்** - 1592 ஆம் ஆண்டுவாக்கில், வீரப்ப நாயக்கரின் ஆட்சிமுடியும் தருவாயில், பரவாஸ் மக்களிடம் சேவைசெய்துகொண்டிருந்த இயேசு சபையினர், ஜீ.பெர் ணான்டஸ் எனும் போதகர் தலைமையில், மதுரையில் ஒரு சமயப் பரப்புக்குழு அமைப்பை நிறுவி, மக்களை மதமாற்றம் செய்ய முன்வந்தனர். குறிப்பாக, உயர்தர இந்துக்குடிகளை மதம் மாற்றுவது அவர்களின் நோக்கமாக இருந்தது. அதற்காக, திருக்கோவிலைக் கட்டுவதற்கும், சமயகுரு மன்றத்திற்குரிய எல்லைப்பரப்பை உருவாக்கிக் கொள்ளவும் அவர்கள், நாயக்க அரசரிடம் அனுமதிபெற்றனர். ஆனாலும் முழுமனதுடன், ஆரவாரமில்லாதவகையில் பெர்ணான்டஸ் செய்தப் பணிகள், பலன் அளிக்கவில்லை. பதினைந்து ஆண்டுகாலம் கடுமையாக உழைத்தும், அவரால் ஒருவரைக்கூட மதமாற்றம் செய்யமுடியவில்லை. அவரது தோல்விக்கானக் காரணங்களாக, பரங்கியர்கள் என்று அழைக்கப்பட்ட போர்த்துக்கீசியர்கள்[21] மாட்டுக்கறியை உண்டார்கள், தன்னிலைமீறி வெறியூட்டும் மதுவகைகளைக் குடித்தார்கள், அவர்கள் பறையர்கள் என்றழைக்கப்பட்ட மக்களுடன் பிணைந்திருந்தார்கள் என்பனவாக இருந்தன. 1909ஆம் ஆண்டு நவம்பர் 20 ஆம்தேதி, ஆல்பர்ட் லியர்ஜியோ எழுதியக் கடிதத்தில், 'போர்த்துக்கீசியர்களின் புனிதநோக்கங்களோ, அவர்களின் உச்சபட்ச அதிகாரமோ, மதிப்புமிகுந்த அவர்களின் சொத்தோ அல்லது அவர்கள் பெற்ற வெற்றிகளோ, மக்கள்மனதில் பதிந்து போய்விட்ட அருவருப்பான இந்தத்தடயங்களை எதனாலும் மாற்றமுடியவில்லை'[22] என்று குறிப்பிடுகின்றார். மேலும், பெர்ணான்டஸ் உண்மையானப் பிரச்சனைகளை சரியாக மதிப்பீடு செய்யவில்லை. அதுபோல, சூழ்நிலைக்கேற்ப தகவமைத்துக் கொண்டு செயல்படும் ஆற்றல் அல்லது தைரியம் அவருக்கு இருக்கவில்லை. அதனால் மதுரையின் உயர்குடி இந்துக்களை கிறிஸ்தவர்களாக மதம்மாற்றும் முதல்கட்ட முயற்சி முற்றிலும் தோல்வியையே சந்தித்தது.

**வீரப்ப நாயக்கரின் மரணம்:** இருபத்தியிரண்டு ஆண்டுகள் ஒன்பது மாதங்கள் என நீண்டகாலம் ஆட்சிசெய்த வீரப்ப நாயக்கர், மிருதியுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதியின்படி, 1595ஆம் ஆண்டு செப்டம்பர் துவக்கத்தில், அதாவது மன்மத ஆண்டு ஆவணிமாதத்தில் காலமானார். அவருக்குப்பின் பதவியேற்றவர்,

முன்னரே வெட்டிய அவரது கடைசி கல்வெட்டு,[23] ஜய ஆண்டில்-1596ஆம் ஆண்டு ஏப்ரலுக்கு முன்னர் இறந்திருக்க வேண்டும் என்று கூறுகின்றது.[24] வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ள அந்தத்தேதி சரியாக இருக்கலாம்.

### அடிக்குறிப்புகள்

1. I.A., 1916, p.81
2. p. 105
3. O.H.MSS., ii p. 144. Maduraitalavaralru; Taylor, O.H.MSS., I p.37
4. Maavali vaanaadaraayan was the title of chiefs of the Baana country in the basic of the Paalaar, The extent of whose territory changed according to the vicissitudes of history. It seems likely that some of them were transferred to this region as a result of the war that Kulottunga III had to carry on against the ruling Paandyas during the years 1261-72. When the Paandyas gained the ascendancy, the chieftains appointed to rule these territories had apparently borne these titles, if they did not belong to the family. Hence this region had been under a succession of chiefs to this title who held on to their strongholds even during the temporary occupation of Madura by a succession of Muhammadan Sultans from 1310-78. They are found mentioned in the early inscriptions of Vijayanagar under Harihara I, and Lakkana's recognition of their position under Deevaraaya II follows as a mater of course. - Ed.
5. Appendix D, No. 5, 6, 8, 9, 11
6. Appendix D, No. 103
7. I. A., 1916, p.91
8. Appendix D, No.88
9. Ibid., Nos 76 and 70
10. E.I., xii. pp.159-87
11. Appendix D, No.81
12. Ibid., No.84
13. Ibid., No.85
14. Ibid., No.87
15. Ibid., No.70
16. Ibid., No.72
17. When after the battle of Talikota, the capital changed to Penukonda, the authority of the jeadquarters over Madura paaarently intact. The Empire wes however, composed of three separate charges, over each of which was placed a prince under the soverign authority of the ruler for the time being. This arragement with

jeadquarters at Penukonda; his brother Rama, bacame similarly 'vice-regent' at Srirangapattanam and the last brother, venkata, became similarly victory of Madura. Sriranga dieed without issue; Rama predecesed him. and venkata became empror in the turn. It was at theis time that there was rebellion. Instead of doing so. be made common cause with enemy and went over to Srirangapattanam. Venkata had subsequently to carry on the war against Madua and brin it back to its allegiance, whilce Srirangapattanam remained practically independent – Ed.

18. E.I., xii, pp.159-87
19. Appendix D, No.77
20. Ibid., No.69
21. There is a graphic describtion of the Portuguese contingent as it appered in the battle of Toppur, which gives an idea of contemparay opeinion, in yagnanarayana Dikshita's Sahityaratanakaram See pp.273 and 282, Sources of Vijayanagar
22. Bertrand, ii p.2
23. Appendix D, No.68
24. Ibid, No. 91

# 5

# இரண்டாம் கிருஷ்ணப்ப நாயக்கர் (1595-1601)

**வீ**ரப்ப நாயக்கருக்கு மூன்றுபுதல்வர்கள். குமாரகிருஷ்ணப்பா, விஸ்வப்பா மற்றும் கஸ்தூரி ரங்கப்பா. தந்தைக்குப்பின், வீர கிருஷ்ணப்பா என்று அழைக்கப்பட்ட மூத்தமகன் குமார கிருஷ் ணப்பா, 1595 ஆம் ஆண்டு செப்டம்பரில் ஆட்சியிலமர்ந்தார். நெல்சன் இதனை, கிருஷ்ணப்பா மற்றும் விஸ்வப்பாவின் கூட்டுஆட்சி என்கிறார். ரங்காச்சாரியோ, பின்னவனை மூத்தசகோத ரர் என்று கருதுகின்றார். ஆனால் இருவரும் ஒன்றுசேர்ந்து, கூட்டுஆட்சியாளர்களை இயக்கும் பொம்மலாட்டக் கயிறு, அனுபவமிக்க அரிய நாத முதலியாரின் கையில் இருந்தது என்கின்ற னர். இந்தக்காலகட்டத்தில் நிகழ்ந்த மிகமுக்கிய நிகழ்வாக, அரியநாத முதலியாரின் மரணத்தை பொருள்பொதிந்தப் பார்வையுடன் அவர்கள் அணுகுகின்றனர். அரிய நாத முதலியாரின் செல்வாக்கிலிருந்து நாயக்கர்களின் மீளுதல் இது என்றும், முன்னேற்றத்துக்குத் தலையாய முட்டுக்கட்டையாக இருந்தநிலை அகன்றுவிட்டது என்றும், நெல்சன் இதனை வரவேற்கின்றார்.[1] ரங்காச்சாரியோ, ‘இது இழப்புமட்டுமல்ல, துன்பநிகழ்ச்சி’ என்று அனுசரிக்கின்றார். ‘அரிய நாத முதலியாருக்கு, நாயக்கர் பேரரசு அதன்பலத்தை, அதன்பாதுகாப்பை, அதன்நிர்வாகத்தை, அதன் வளமையைக் கொடுத்திருந்தது.[2] அவரும் அரசர்களுக்கு வழிகாட்டியதுடன், சாம்ராஜ்ஜியம் கூறுபடும் நிலைமைக்குப் போய்விடாமலும், ஆட்சிக்கு எதிராக, நிழலாக இயங்கியவர் களிடமிருந்தும், ஆட்சித்தொடர்பு அறுந்துப்போனவர்களிடமிருந்து உருவாகிவந்த ஆபத்துகளிலிருந்து கிருஷ்ணதேவ ராயரின் வழித்தோன்றல்களைப் பாதுகாக்க, தன்மீது பாரத்தைச் சுமத்திக்கொண்டார்’.[3] ஒற்றைவரியில், ‘தள்ளாடித் தளர்நிலையி லிருந்தபோதும், ஆட்டம்பெற்று சரிந்துவிழும் நிலை உருவானபோதும் தனது விசுவாசத்தால் அதன் ஒற்றுமையைப் பாதுகாத்தார்.[4]

அரிய நாத முதலியாரின் மரணம், 1600 ஆம்ஆண்டில் நேர்ந்ததாக, நெல்சன் கூறுகின்றார்.[5] ரங்காச்சாரியோ, அவர் அதிகாரத்திலிருந்த காலமும் அவர் மரணமடைந்த காலமும் ஒத்துப்போகவில்லை என்று மதிப்பிடுகின்றார். முதலில் அவர், 'விஸ்வநாதனின் மரணத்துக்குப்பின் அரைநூற்றாண்டு காலத்துக்கும்மேலாக (அவரது கணக்குப்படி 1563)...... அவர் (அரிய நாத முதலியார்) சாம்ராஜ்ஜியத்தை நடத்திச்செல்பவராக இருந்தார்'[6] என்கிறார். இந்தக்கூற்று, 1613 ஆம் ஆண்டுக்குப் பிறகு, அரிய நாத முதலியார் இறந்ததாகச் சொல்கின்றது. பின்னர் அவரே, 'விஸ்வநாதனின் தளபதியாகவும் அமைச்சராகவும் அரியநாதரின் பணிகள் முடிந்துவிடவில்லை. அதிகாரத்தை அடுத்த 40 ஆண்டுகளுக்குச் செலுத்தினார்'[7] என்கின்றார். இறுதியாக, '38 ஆண்டுகளுக்கும் மேலாக, இளையநாட்டின் உயிராக இருந்து, புகழையும் வெற்றியையும் தேடித்தந்தார்' என்றும் சொல்கின்றார். 1600 ஆம்ஆண்டில் வயதும், கடும்உழைப்பும் அவரை மரணத்தில் கொண்டுசேர்த்தது.[8] எந்தவகையிலும் ஒத்துவராத மேற்கூறியத் தரவுகளின் அடிப்படையில், ரங்காச்சாரி தனது இறுதிமுடிவுக்கு எப்படி வந்தார் என்பது புரிந்துகொள்வதற்குக் கடினமாக இருக்கின்றது.

அரிய நாத முதலியாரின் மரணத்தின்போது, அவர் வயதுகுறித்த மதிப்பீட்டில் ரங்காச்சாரி, முன்புபோலவே தனதுநிலையை மாற்றிக்கொள்கின்றார். ஆரம்பத்தில் அவர், 'அரியநாதர் 16 ஆம்நூற்றாண்டின் 2 ஆவது அல்லது 3 ஆவது பத்தாண்டுகளில் பிறந்திருக்கலாம். அதன்படி அவர், விஸ்வநாத நாயக்கரைக் காட்டிலும் 20 ஆண்டுகள் இளையவராக இருக்கலாம்' என்கின்றார்.[9] தொடர்ந்து அவர், '1595 ஆம்ஆண்டில் அவருக்கு வயது 80க்குமேல் இருக்கலாம்' என்கின்றார்.[10] ரங்காச்சாரியின் கூற்றுப்படி, 'விஸ்வநாத நாயக்கர் 16 ஆம்நூற்றாண்டின் தொடக்கத்திலோ அல்லது அதற்கு முந்தையப் பத்தாண்டுகளிலோ பிறந்திருக்கலாம்.[11] விஸ்வநாத நாயக்கரின் பிறப்பு, 1500 ஆம் ஆண்டு என்று எடுத்துக்கொண்டால், அரியநாதர் 1520 ஆம் ஆண்டுவாக்கில் பிறந்ததாகக் கருதமுடியும். 1595 ஆம் ஆண்டுவாக்கில் அவருக்கு எழுபத்தி ஐந்திலிருந்து 80க்கு மிகாமல் இருக்கமுடியும். ரங்காச்சாரி தனதுகருத்தை எல்லாவிஷயங்களிலும் செலுத்த முயலவில்லை. 1595 ஆம்ஆண்டில் அரியநாத முதலியாருக்கு வயது எண்பத்தைந்துக்கும் அதிகமாக இருக்கும் என்று மட்டுமே மதிப்பீடு செய்கின்றார். அந்தவகையில் அரியநாத முதலியாருக்கு மரணத்தின் போது குறைந்தபட்சம் வயது எண்பத்தைந்து இருக்கலாம்.

அரியநாத முதலியாரின் மரணம், 1600 ஆம் ஆண்டு நேர்ந்தது என்பது குறித்த ரங்காச்சாரியின் இறுதிமுடிவை ஏற்றுக்கொள்ள லாம். அந்தமுடிவு, **மிருத்யுஞ்ஜய**[12] எனும் கையெழுத்துப் பிரதியின் அடிப்படையில் செய்த டெய்லரின் மொழிபெயர்ப் புடனும் ஒத்துப்போகின்றது.[13] அடுத்தடுத்த நான்கு ஆட்சியாளர் களுடன், முப்பத்தெட்டு ஆண்டுகள் மற்றும் ஒன்பது மாதங்கள் அமைச்சராகவும், தளபதியாகவும் ஒருங்கிணைந்து செயல்பட்ட அரிய நாத முதலியார், சார்வாரி ஆண்டின் சித்திரை மாதம் 7ஆம்நாள் மரணமடைந்தார் என்கின்றது, **மிருத்யுஞ்ஜய** எனும் கையெழுத்துப் பிரதி. ஆனால் மூலத்தின் மொழிபெயர்ப்பு, சர்வதாரி ஆண்டின் சித்திரை 7ஆம்நாள், தோராயமாக 1588ஆம் ஆண்டின் ஏப்ரல், 19 ஆம்தேதியைக் குறிக்கின்றது. அரிய நாத முதலியாரைக் குறிப்பிடுகின்ற இரண்டுகல்வெட்டுகள் மட்டுமே இருக்கின்றன. ஒன்று, 1560 ஆம்ஆண்டைச் சேர்ந்தது.[14] மற்றொன்று, 1570 ஆம்ஆண்டைச் சேர்ந்தது. இக்கல்வெட்டுகள் விஸ்வநாத நாயக்கர், கிருஷ்ணப்ப நாயக்கர் மற்றும் வீரப்ப நாயக்கர் ஆகியோரின் முகவராக, அவர் செயல்பட்டதை விவரிக்கின்றன.[15] அவரது வயது மற்றும் மரணம்குறித்து ஒருதிடமான முடிவுக்குவர, போதுமான ஆவணங்கள் இல்லை. அதனால், 1600 ஆம்ஆண்டில் அந்தநிகழ்வு நேர்ந்ததாக, இருக்கும் தரவுகளின் அடிப்படையில் ஏற்கலாம். விஸ்வநாத நாயக்கரைக் காட்டிலும் இருபதுஆண்டுகள் இளையவர் என்பதற்கான தரவுகள் எதுவும் ஆதாரமாக இல்லை. மாறாக, அவர் விஸ்வநாத நாயக்கரைக் காட்டிலும் சற்றே மூத்தவர் என்றும் கருத இடமிருக்கின்றது. அவரது வாழ்க்கையைப் பற்றிக் குறிப்பிடும் மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி, விஸ்வநாத நாயக்கரை தன்னுடன் தெற்குக்கு அழைத்துவந்ததாகக் குறிப்பிடுகின்றது. அவரது பணிகளையும் அதிலுள்ள சிரமங்களையும் நோக்கும்போது, அநேகமாக அவர் மூத்த ஆலோச கராக இருந்ததற்கான சாத்தியங்கள் அதிகம்.

இந்தக் காலகட்டத்தின் கல்வெட்டுகளில் கிருஷ்ணப்ப நாயக்கர் முக்கியத்துவம் வாய்ந்தவராகக் காணப்படுகின்றார். 1596ஆம் ஆண்டின் ஆவணமொன்று,[16] ‘வல்லப நரேந்திரனின் சிங்க சிம்மாசனத்தில் அமர்ந்தவன்’ என்று கிருஷ்ணப்ப நாயக்கரைப் புகழ்ந்துள்ளது. அதுபோல, 1597ஆம் ஆண்டின் ஆவணம், பாண்டிய அரசனை வென்றதைக் குறிப்பிட்டு, ‘பாண்டிய பார்திவ கிருஷ்ண நிர்பதி’ என்கின்றது.[17] 1598ஆம் ஆண்டின் முதலாம் வேங்கடனின் வெள்ளங்குடி ஏடுகளுக்குக் காரணமாக, கிருஷ்ணப்ப நாயக்கர் இருந்திருக்கின்றார். அதுபோல, அதேஆண்டின் பத்மனேரி தாமிர ஏடுகளும் அவரைப் போற்றுகின்றன.[18] 1600ஆம் ஆண்டின்

கல்வெட்டொன்று அவரது முகவரையும் குறிப்பிடுகின்றது.[19] 1596க்கும் 1600க்கும் இடையிலானக் காலகட்டத்தில் பல்வேறு ஆவணங்களில் கிருஷ்ணப்ப நாயக்கரின் வாழ்நிலைக் குறிக்கப்பட்டிருப்பதைபோல, தனது ஆட்சிக்காலத்தில் அனைத்துமாக அவரே இருந்திருக்கின்றார். அவரது மூத்தசகோதர ரும் சக ஆட்சியாளருமான மூன்றாம்விஸ்வநாதனைப் பற்றி ஏதும் அறியமுடியவில்லை என்று ரங்காச்சாரி ஒத்துக்கொள்கின்றார்.

விஜயநகரப் பேரரசர் முதலாம்வேங்கடன் உச்சபட்ச இறையாண்மைக் கொண்டவராக கிருஷ்ணப்ப நாயக்கராலும்,[20] பாண்டியர்களாலும் மெச்சப்படுகின்றார்.[21] சில ஆவணங்கள் கிருஷ் ணப்ப நாயக்கரின் நிலைப்பாட்டைத் தெளிவாக்குகின்றன. கிருஷ்ணப்ப நாயக்கரின் வேண்டு கோளுக்கிணங்க அளிக்கப்பட்ட தானங்களை, 1597ஆம் ஆண்டின் தாமிர ஏடுகள்[22] மற்றும் 1598ஆம் ஆண்டின் வெள்ளங்குடி ஏடுகள் தெளிவுபடுத்துகின்றன. அந்தவகையில் முதலாம்வேங்கடன், நாயக்கர்களையும் தனக்குக் கீழ்ப்படிந்த பாண்டியர்களையும் தனது கட்டுக்குள் வைத்திருந்தார். அவர்கள், அவருக்கு விசுவாசமாகவும் இருந்துவந்தனர். பாண்டியர்களின் கல்வெட்டுகள், நாயக்கர்களின் ஆட்சியில் தங்களுக்கான அதிகாரம் மெல்லமெல்ல அதிகரித்துவந்ததைக் குறிப்பிடுகின்றன. மேலும், திருவடி ராஜ்ஜியத்தில்[23] வழங்கப்பட்ட தானங்கள் குறித்தும், அதில் குறிப்பிடப்பட்டுள்ளன. வெல்லப் பட்ட திருவாங்கூர் பகுதி இன்னும் முழுமைக் கெடாமல் இருக்கின்றது. திருவடியும் வலிய சண்டை முனைகின்ற நிலையில் இல்லை. பாண்டியர்கள் மற்றும் திருவடி பகுதியைச் சேர்ந்தவர்கள் நாயக்கருக்குக் கட்டுப்பட்டே இருந்தார்கள். ஆயினும் பேர ரசரிடத்தில் கிருஷ்ணப்ப நாயக்கரின் விசுவாசம் கேள்விகளுக்கு அப்பாற்பட்டதாக இருந்தது.

**கிருஷ்ணப்ப நாயக்கரின் மரணம்:-** ஐந்தாண்டுகள் மற்றும் ஒன்பதுமாதங்கள் மட்டுமே ஆட்சிசெய்த கிருஷ்ணப்ப நாயக்கர், பிளவ ஆண்டு வைகாசி மாதம் -1 601ஆம் ஆண்டு, மே-ஜூனில்- இறந்ததாக, மிருதியுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி கூறுகின்றது. பாண்டியர்களின் குறிப்பேடு ஒன்று, கிருஷ்ணப்ப நாயக்கரின் ஆட்சிக்காலம் ஏழுஆண்டுகள் என மார்கழி, மன்மத ஆண்டிலிருந்து சித்திரை, பிளவ ஆண்டுவரைக் குறிப்பிடுகின்றது. ஆனால் அதுவும் ஐந்து ஆண்டுகள் நான்குமாதங்கள் மட்டுமே வருகின்றது. ஆனால், முந்தைய ஆவணம் காலத்தோடு ஒத்துப்போவதாக இருக்கின்றது. அந்தவகையில் கல்வெட்டுகளுக்கும் கிருஷ்ணப்ப நாயக்கரின் ஆட்சிக்காலத்துக்குமிடையில் பேதமேதும் இருக்கவில்லை.

## அடிக்குறிப்புகள்

1. p.107
2. I.A., 1916, p.102
3. Ibid., p.101
4. Ibid., p. 102
5. O.H. MSS., ii, p.112
6. I.A., 1915, pp. 62.3.
7. Ibid., 1916, p.81
8. Ibid., p.102
9. Ibid., 1915, p.63
10. Ibid., 1986, p.101
11. Ibid., p.75
12. O.H. MSS., ii, p.119
13. Ibid., p.120
14. Appendix D, No.49
15. Ibid., No.66
16. Ibid., No. 92
17. Appendix D., No.94
18. Ibid, Nos. 96 and 97
19. Ibid., No.98
20. Ibid., No. 97
21. Ibid., No.90
22. Ibid., No.94
23. Vdllangudi plates and Padmaneaai Inscription of 1598

# 6
# முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர்
# (1601-1609)

இரண்டாம் கிருஷ்ணப்ப நாயக்கரின் மரணத்துக்குப்பின், அவரது இளைய சகோதரர் கஸ்தூரி ரங்கா அரியாசனத்தை அபகரித்துக் கொண்டார். கிருஷ்ணப்பாவின் மற்றொரு சகோதரர் விஸ்வப்பா, முன்னமே மரணமடைந்துவிட்டார். பதவியிலமர்ந்த ஒருவாரத்துக்குள்ளேயே அவரது நடவடிக்கைகளுக்கு எதிராக, பொதுமக்கள் பெரும்எதிர்ப்பு நடத்தினர். அதையடுத்து, சந்தியா மண்டபத்தில் அவர் கொலையுண்டு கிடந்தார். தொடர்ந்து, முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கருக்கு முடிசூட்டப்பட்டது. பின்னவரின் பெயர் பாண்டியர்களின் தொடர்வரலாற்றுக் குறிப்புகளில் இடம்பெறவில்லை. ஆயினும், மற்ற வரலாற்றுத் தரவுகள், கல்வெட்டுகள் மற்றும் சில நாணயங்களைக்கொண்டு பார்க்கும்போது, இரண்டாம்கிருஷ்ணப்ப நாயக்கரின் மரணத்துக்கு கொஞ்ச காலத்துக்குப் பின்பே, அரியணைக்கு வந்தார் என்பது தெளிவாகின்றது.[1]

நெல்சனும் ரங்காச்சாரியும் சில வரலாற்றுத் தரவுகளைக்கொண்டு முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர், இரண்டாம் கிருஷ்ணப்ப நாயக்கரின் மகன் என்ற முடிவுக்கு வருகின்றனர். ஆனால் மிருத்யுஞ்ஜய[2] எனும் கையெழுத்துப் பிரதியும் மதுரைத்தலவரலாறும் முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கரை இரண்டாம்கிருஷ்ணப்ப நாயக்கரின் இளையசகோதரன் விஸ்வப்பாவின் மகன் என்று கூறுகின்றன. இந்தப்பார்வையை இரண்டாம்வேங்கடனின் கூனியூர் ஏடுகள் உறுதிசெய்கின்றன. இந்தஏடுகள், நாயக்கர்வம்சத்தின் குடிவழி மரபுப்பட்டியலை திருமலை நாயக்கர் காலம்வரைத் தெரிவிக் கின்றன. இந்த முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர், வீரப்ப நாயக்கரின் இரண்டாவது மகனான விஸ்வப்ப நாயக்கரின் மகன் என்று எடுத்துக்கொள்ளப்பட்டது.

**மறவர்நாடு அமைப்பு:-** முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர் ஆட்சிக்காலத்தில் மிகமுக்கிய நிகழ்வாக, சேதுபதிகளின் தலைமையின்கீழ் வலுவான மறவர் நாடு உருவாக்கப்பட்டது. அது

சேதுபதிகளால் உருவாக்கப்பட்டதா அல்லது மீட்டெடுக்கப்பட்டதா என்பது தற்போதைய நிலையில் முக்கியமில்லை. ஆனால், பாண்டியர்களிடமிருந்து நிலஉரிமைப் பெற்றவர்களாக அவர்கள் இருந்துவந்தார்கள் என்பது உண்மையாக இருக்கக்கூடியது. நெல்சன் சொல்கிறார்: மதுரை ஆளுநரால்[3] நியமிக்கப்பட்ட இரண்டுஆணையாளர்களால் ராம்நாட் நாடு முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரின் ஆட்சிக்காலத்தில் நிர்வகிக்கப்பட்டது என்பதை நம்பக்கூடியதாகவே பார்க்கமுடிகின்றது. ரங்காச்சாரி இதனை, நாயக்கவம்சத்தின் நிறுவனரான விஸ்வநாத நாயக்கரால் ஏற்படுத் தப்பட்ட பரிசோதனை, இது. *1600* ஆம் ஆண்டுவரை அது வெற்றிகரமாக நீடித்துவந்திருக்கின்றது என்று மதிப்பீடு செய்கின்றார். அந்தஆண்டுக்குப் பின்பே, ராம்நாட் நாடு ஒழுங்கின்மை, அமைதிக்கேடு, குழப்பம் என மூழ்கியது. ரங்காச்சாரி தனது கதாநாயகர்களான விஸ்வநாத நாயக்கரையும் அரிய நாத முதலியாரையும் மறவர்நாடு புறக்கணிப்பு குறித்தக் குற்றச்சாட்டுகளிலிருந்து பாதுகாக்க முயற்சிக்கின்றார்.[4] ஆனால் நெல்சன், ஆணையத்தின் தகுதியின்மையே தோல்விக்குக் காரணம் என்றுபேசுகின்றார் அநேகமாக, முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரோ அல்லது அவருக்கு முன்னிருந்த உடனடி ஆட்சியாளரோ இத்திட்டத்தை முயற்சித்திருக்கலாம். எந்தவகையிலும், இறுதியில் நாடு அமைக்கப்பட்டது, முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரின் முயற்சி களால்தான் என்றாகிவிட்டது.

பொதுவாகவே, நாயக்க ஆட்சியாளர்கள் கடலோரப் பகுதிகளை வெளிநாட்டு வர்த்தக நிறுவனங்களுக்குத் திறந்துவிட்டுவிட்டதைப் பார்க்கமுடிகின்றது.[5] கதவுகளைத் திறந்துவிட்ட பதினாறாம் நூற்றாண்டின் கொள்கை, இன்னும் மாற்றியமைக்கப்படாமல் இருக்கின்றது. வெகு சுதந்திரமாக அந்தவெளிநாட்டு நிறுவனங்கள், தங்கள்தேசத்தின் பின்னணியில் மெல்லமெல்ல தங்களை நிலைப்படுத்திக்கொண்ட பின்பு, கேடு உண்டுபண்ணத்தக்க அளவில் அவர்கள் வளர்ந்துவிட்டார்கள் என்று நாயக்கர்கள் உணரத்தலைப்பட்டார்கள். ஆரம்பத்தில் நாயக்கர்கள் பின்பற்றியக் கடலோரப் பகுதிகள் தொடர்பானக் கொள்கையில் அக்கறையின்றி இருந்ததால் உருவான நிலைமைகளை பேராயர் கால்டுவெல்[6] இவ்வாறு சொல்கின்றார்: ‘சேவியர்.... பரவாஸ் (மீனவ) குறித்துப்பேசும்போது, அவர்கள் போர்த்துக்கீசிய குடிமக்கள் என்று குறிப்பிடுகின்றார். மீனவப்பகுதிகளின் ஒட்டுமொத்த பொதுத்துறை சார்ந்த நிர்வாகம் மற்றும் குற்றம் தொடர்பான சட்ட அதிகாரம் அனைத்தையும் போர்த்துக்கீசியம் வலிந்து கைக்கொண்டுவிட்டது. மேலும் தவணைகளும், வரிகளும் முத்துக்குளித்தலில் கிடைக்கும்

மதிப்புமிகு வருமானம் உள்ளிட்ட அனைத்தும் போர்த்துக்கீசிய அரசப் பிரதிநிதி நியமித்த ஆளுநர்களால் வசூலிக்கப்படுகின்றது. தங்களின் குடியுரிமையை அமைப்பதற்கு, மண்ணின் ஆளுமைக்குரியவர்களிடம் இசைவு எதையும் போர்த்துக்கீசிய அமைப்புகள் பெறவில்லை. மத ஊடுருவல் மற்றும் வர்த்தக எழுச்சியைத் தொடர்ந்து, அரசியல் தகர்வு மற்றும் நிதிச் சூறையாடல் உருவாகிப்போனது. கடலோரப் பகுதிகளில் அந்நியச் செல்வாக்கு அதிகரித்து வந்ததை எதிர்த்துத் தடுக்க, முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கர் வலுவான அரசை மறவர் நாட்டில் நிறுவினார்.

சேதுபதிகளின் மீட்டுயிர்ப்புக்கு அரசியல் மற்றும் நிதித் தொடர்பான நோக்கங்களே தலையாயக் காரணங்களாக அமைந்தன. சமய மதிப்பார்வமிக்க நோக்கங்கள் ஏதும் அதில் இருக்கவில்லை. மறவர் நாட்டுப் பகுதி மொத்தமும் ஒழுங்கின்றியும், பாதுகாப்பின்றியும் குழப்பத்தில் மூழ்கிக்கிடந்தது. ராமேஸ்வரம் செல்லும் அதிகஅளவிலான பக்தர்களின் பாதுகாப்பும் கேள்விக்குரியதாகவே இருந்தது. இந்தநிகழ்வு, 1605 ஆம்ஆண்டில் நடந்ததாக மெக்கன்ஸி[3] கையெழுத்துப் பிரதி[7] கூறுகின்றது. இது ஒருவகையில் சரியானதாகவே இருக்கலாம். சேதுபதியின் முதல் கல்வெட்டு, 1607 ஆம்ஆண்டைச் சேர்ந்ததாக இருக்கின்றது.

சேதுபதிகளின் மீட்டுயிர்ப்புக்குக் காரணங்களான உண்மைச் சூழல்களை வரலாற்றின் பக்கங்கள் அதற்கேயான வழிகளில் கூறிச்செல்கின்றன. ரங்காச்சாரி வழக்கம்போல இந்த விஷயத்திலும் தனது கற்பனைப் புனைவுகளால் வரலாற்றின் பக்கங்களுக்கு நெருக்கடிக் கொடுக்கத் தவறவில்லை. சந்தேகத்திற்கிடமானத் தன்மைக்கொண்ட செய்திகளையும், அது தொடர்பான பொருளற்ற, துல்லியமல்லாத சங்கதிகளையும் தவறவிட்டுவிடாமல் மிகக்கவன மாக அவர் கையாண்டிருக்கின்றார். அவரது நீண்டநெடிய விரிவுரைகளாலும் விளக்கங்களாலும் வாசகர்கள் முன்னறியப் படாத விஷயங்களைத் தெரிந்துகொள்வதற்கு ஆவலாக இருந்தனர். மறவர் நாட்டின் நிலைமையை சூதானமாகக் கையாளும் திறமையை சோதித்த பிறகு மட்டுமே முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர், சடைக்கத் தேவரை உடையான் சேதுபதியாக ஆக்கினார் என்று வரலாற்றின் பக்கங்கள் தெளிவுபடுத்துகின்றன. குறிப்பிட்டத் தொகையை திறையாகச் செலுத்த ஒப்புக்கொண்ட பின்பே உடையான் சேதுபதி சுதந்திரமாகச் செயல்படுவதற்கு அனுமதிக்கப் பட்டிருப்பது தெளிவாகின்றது. இதையடுத்து, முதல்கட்டமாக ராமேஸ்வரத்துக்குச் செல்லும்பாதையில் ராம்நாட் மற்றும்

போகலூர் ஆகிய இடங்களில் கோட்டைக் கொத்தளங்கள் எழுப்பி, பக்தர்களின் பாதுகாப்புக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. நாட்டைச்சுற்றி கிளர்ச்சி செய்து கொண்டிருந்தத் தலைவர்களை கட்டுப்படுத்தி, காளையார்கோவில், பட்டமங்கலம் மற்றும் பல இடங்களில் சடைக்கத் தேவர் அல்லது தளவாய் சேதுபதியால் வலுவான அரசுகள் உருவாக்கப்பட்டன. இருந்தபோதும் ஹிஸ்டரி ஆஃப் கர்நாடகா கவர்னர்ஸ் அந்தப்புகழை சடைக்கத் தேவரின் மகன் கூத்தன் சேதுபதிக்குக் கொண்டுசேர்க்கின்றது.

ராமேஸ்வரத்திலுள்ள தளவாய் சேதுபதியின் கல்வெட்டுகள், அவர் கோவிலுக்குக் கொடுத்தக் கொடைகள் குறித்து, ஆவணமாக ஆகியிருக்கின்றன. 1607 ஆம்ஆண்டில் ஐந்து கிராமங்களைக் கொடையாகவும், 1608 ஆம்ஆண்டில் எட்டுகிராமங்களை மற்றொரு கொடையாகவும் கொடுக்கப்பட்டதை அவை பேசுகின்றன. 1608ஆம் ஆண்டின் தாமிரப் பட்டயம் ஒன்று கோவில் பணியாளர்களுக்கு[8] வழங்கிய நிலதானத்தை பதிவுசெய்து கொண்டுள்ளன. காடுகளை அழித்து விவசாயத்தை ஊக்கப்படுத்தியும், அமைதியையும் வளர்ச்சியையும் நிலைநாட்டிய வெற்றிகரமான ஆட்சியாளராக அவர் தென்படுகின்றார். மெக்கன்ஸி கையெழுத்துப் பிரதிகளின்படி அவர், 1623 ஆம் ஆண்டுவரை ஆட்சிசெய்ததாகத் தெரிகின்றது. பின்னர் அவரது மகன் கூத்தன் சேதுபதி, அந்தஇடத்துக்கு வருகின்றார். கூத்தன் சேதுபதியின் முதலாவது கல்வெட்டு[5] ருத்ரோதகரி ஆண்டு மாசி, 21 ஆம்நாளை, -1624, மார்ச் மாதத்தொடக்கத்தை- குறிக்கின்றது.[9]

**கிறிஸ்தவமும் ராபர்ட் டி நோபிலியும்:-** வீரப்ப நாயக்கரின் ஆட்சிக்காலத்தின் இறுதிப் பகுதியில், மதுரையில் கிறிஸ்தவ அமைப்பு தொடங்கப்பட்ட முயற்சியையும், முதல்கட்ட மத மாற்ற முயற்சி, தாங்கொண்ணாத் துயரங்களை எதிர்கொள்ள முடியாது தோல்வி கண்டதையும் முன்னர் பார்த்தோம். பெர்ணான்டஸ் பாதிரியார் அந்த வீரியமற்றக் கொள்கைகளுடன், 1606 ஆம் ஆண்டுவரையில் விடாமுயற்சியுடன் போராடிக்கொண்டுதான் இருந்தார். சமயப்பரப்புக் கொள்கைகளில் புதியபோக்குகள் வந்து, அவரது பணிகளைக் காலாவதியாக்கின. முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரின் ஆட்சிக்காலத்தில் கிறிஸ்தவத்துக்கு மதம்மாற்றும் முயற்சித் திட்டங்கள் முழுஅளவில் ராபர்ட் டி நோபிலியால் செயல்படுத்தப்பட்டு, அறுவடை செய்யப்பட்டன. நோபிலியின் இவ்வரிய சோதனை முயற்சியும், அவருக்குப் பின்னால், அவரது இடத்துக்கு வந்த மதுரை சமயப் பரப்பாளர்களின் பணி, இந்தியாவில் கிறிஸ்தவ வரலாற்றின் முக்கிய அத்தியாயங்களாகும். ஆயினும், அவர்கள் மிகச்சிறந்த அறிஞர்களால் விரிவாக

எதிர்கொள்ளப்பட்டார்கள். விவாதங்களுக்கு ஆட்படுத்தப் பட்டார்கள். மதம் மற்றும் மதவரலாறு தொடர்பானக் கேள்விகளால் தவிர்க்கமுடியாத இக்கட்டுக்கும் உள்ளானார்கள். ஹிஸ்டரி ஆஃப் கிறிஸ்டியானிடி இன் இந்தியா எழுதிய ஜே. ஹஃக், கிறிஸ்டியானிடி இன் இந்தியா எழுதிய ஜே. டபிள்யூ. காயே ஆகியோர் தாங்கள் செய்தப் பணிகளுக்காக, அதிகவெறியுடனும் உணர்ச்சித் துடிப்புடனும் தாக்குதலுக்கு உள்ளாகினர். அப்பணிகள், அவர்களுக்கு குடிமக்களிடம் ஒத்துணர்வைப் பெற்றுத்தந்தது. அந்தவகையில் அவர்களின் பணி மதிப்புமிகுந்ததாக இருந்தது. மதுரையிலிருந்த இயேசு சபையின் பேராயர் ஜே.எஸ். சாண்ட்லர் குடிமக்களிடம் வரம்புமீறாத தன்னடக்கத்துடன் இறங்கிச் செயல்பட்டு வெற்றிகண்டார். இன்று அவர்களின் அரசியல் செல் வாக்கையும் சமயப்பரப்புக் கொள்கையின் செயல்பாட்டு முடிவுகளை மட்டுமே காண்பவர்களாக நாம் இருக்கின்றோம்.

ஐரோப்பாவிலிருந்து புறப்படுவதற்கு முன்பே, இந்தியாவில் தனது பணிகள் குறித்த பொதுத்திட்டத்தை டி நோபிலி திட்டவட்டமாக உருவாக்கியிருந்தார். ‘இந்தியர்களைக் காப்ப தற்காக, என்னை இந்தியனாக ஆக்கிக்கொள்வேன்’[10] என்று செயின்ட் பாலிடம் உறுதியளித்துவிட்டு வந்தாராம். தனது கொள்கையின் இந்த விதை மூலமாக, கிறிஸ்தவத்தை அவர் இந்திய மயமாக்கினார். பிறப்பால் ஓர் இத்தாலியரான அவர், ஐரோப்பிய மதகுருமார்களின் புரோகிதத்துடன் இணைந்தவர். மேன்மை வாய்ந்தத் தனியியல்புகளும் நுணுகிஆராயும் நல்நோக்கமும் கொண்டவர். 1606 ஆம் ஆண்டு அவர் மதுரைக்கு வந்துசேர்ந்தார். இடையறாத சமயப்பணி அவரது பரப்புரைத் திட்டத்தை வெகுவாக எடுத்துச்சென்றது. அவர் ஏற்கனவே, தனது முன்னவர்கள் மதுரையில் பரப்புரையை மேற்கொண்டு, தோல்வியைச் சந்தித்தக் காரணங்களை ஆராய்ந்திருந்தார். அதனால், எதிலும் யாரும் புண்படக்கூடாதென்று ‘பரங்கியர்’ எனும் அடை யாளத்தைத் துறப்பதில் மிகுந்த கவனமாக, தனது ஆடைகளிலும் உணவு முறைகளிலும் ஒழுங்குமுறையைக் கைக்கொண்டார். தன்னை, ரோமானிய பிராமணன் என்று வெளிப்படையாக அறிவித்து, பெர்னான்டஸிடமிருந்து விலகிக்கொண்டார். துணிவான அவரது மூலத் திட்டங்கள் முக்கியமான மூன்றுஅம்சங்களைக் கொண் டிருந்தன. சமயப்பரப்புப் பணி அமைப் பின் வாழ்க்கைமுறையை (பிராமண) மக்களுக்காக மாற்றிக்கொள்வது. தீங்கற்ற இந்துக் கலாச்சாரத்தைக் கைக்கொள்ளுதலுடன் அவற்றின் சடங்கு முறைகளை கிறிஸ்தவத்திலும் பயன்படுத்திக்கொள்வது. இந்துத்துவ புனிதநூல்களின் மொழியான சமஸ்கிருதம் மற்றும்

பொதுமக்களின் பேச்சுமொழியை முழுஅளவில் ஆற்றொழுக்காகப் பேசவும் எழுதவும் துல்லியமாக இலக்கியத்தை அறிந்துகொள் ளவும் செய்வது.[11] இம்மூன்று வகைப்பாடுகளின்வழியாக, பழைய வழிமுறைகள் தூக்கியெறியப்பட்டு, புதுக்கொள்கையை ஏற்கவைத்தார்.

தனது சமயப் பணியைத் தொடங்கிய டி நோபிலி, உயர்குடி மக்களிடம் சில உரையாடல்களை நிகழ்த்தினார். அவரது புகழ், நாடுமுழுவதும் பரவத்தொடங்கியிருந்தது. நாயக்கர்கூட டி நோபிலியைச் சந்தித்து, உரையாட வேண்டும் என்று விரும்பியதாகவும், அது எப்படியோ புத்திசாலித்தனமாகத் தவிர்க்கப்பட்டதாகவும் ஒருபேச்சு இருக்கின்றது. இவ்வாரம்ப கால வெற்றி, புறச்சமயம் சாராத, உறுதியான வட்டங்களிலும் கொஞ்சம் பரபரப்பை ஏற்படுத்தியது. ஆனால் பாளையக்காரரான எருமைக்கட்டியின் செல்வாக்கு இடையிட்டு, அதைத் தடுத்திருக் கின்றது. 1609 ஆம் ஆண்டு ஜனவரி, 15 ஆம்நாள் டி நோபிலி எழுதுகின்றார்: 'பிராமணியத்தின் புயல், மழைகலந்த நெருக்கடி கடந்துபோனது' (பெர்ட்ராண்ட், ii, பக்கம். 26). கிறிஸ்தவத்துக் கான டி நோபிலியின் ஆரம்பகால பெருமுயற்சிகள் முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கரின் ஆட்சிக் காலத்தில் இவ்வாறாக அமைந்திருந்தன.

**விஜயநகரப் பேரரசருடன் முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரின் தொடர்புகள்:-** விஜயநகரப் பேரரசர் முதலாம்வேங்கடனுடனானத் தொடர்பு குறித்த முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர் காலத்துக் கல்வெட்டுகள் அவர் ஆட்சியின்போது மிகச்சிலவே இருந்தன. 1602 மற்றும் 1604 ஆம் ஆண்டுகளின் இரண்டுஆவணங்கள், நாயக்கர் ஆட்சிப்பகுதியில் முதலாம்வேங்கடனின் ஆளுமையைக் குறிப்பனவாகக் காணப்பெறுகின்றன.[12] ஒட்டுமொத்த ஆட்சிக் காலத்திலும் முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர் குறித்த ஒரே ஒரு கல்வெட்டு மட்டுமே காணப்படுகின்றது.[13] அவர் வெளியிட்ட செப்பு நாணயங்கள் வெளிப்படையாகவே முதலாம்வேங்கடனிடம் கொண்டிருந்த விசுவாசத்தைக் காட்டுகின்றது. நாணயத்தின் ஒருபக்கத்தில் 'திருவேம்கா(லா) என்றும் மறுபக்கத்தில் 'முது-கிருஷ்ண' என்றும் பொறிக்கப்பட்டிருந்தது.[14] ஹூல்ட்ஸ் (எலியட்டின் சேகரிப்பு. எண். 177), 'நாயக்கர்களின் மற்ற நாணயங்களும் புழக்கத்தில் இருந்தன.[15] அவற்றில் 'வேம்கடபா' என்றும் பின்பக்கத்தில் மீன் சின்னமும் இருந்தன. மதுரை சந்தைகளில் பெருமளவிலான எண்ணிக்கையில் அந்த நாணயங்கள் புழங்கின' என்கிறார். ஆனால் அவை, முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரின் நாணயங்கள் என்பதற்கான தகுந்த ஆதாரங்கள்

ஏதுமில்லை. நடைமுறையிலிருந்த அவை உறுதியாக கிருஷ்ணப்ப நாயக்கருடைய நாணயங்கள்தான் என்று ரங்காச்சாரி கருதுகின்றார். அவை முன்னவர்களின் நாணயங்கள் போலவே இருந்தன.[16]

ஆட்சிக்காலம் முழுவதும் அமைதியாக நிர்வாகப் பணியில் தன்னை முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர் ஈடுபடுத்திக்கொண்டார். மறவர் நாடு உருவாக்கத்துக்கு அவர் ஏற்படுத்தித் தந்த முறைகள் சரியான பாதையில் பயணித்து, நீண்டகாலம் செயல்பட்டன. வலுவானத் தலைமை மதுரைக்கு அருகே இருந்தது. ஆயினும் அது, தனித்துவத்துடன் இயங்கியது. அவசரம் மற்றும் பிரச்சனைக் காலங்களில் சாம்ராஜ்ஜியத்துக்கு உதவுவதற்காக, அது பயணப் பட்டது. சமயம் பரப்பவந்த நிறுவனங்களிடம் சகிப்புத்தன்மை யுடனும் நடந்துகொண்ட முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர், நேர்மையான விஷயங்களுக்கு விசாலமான மனதுடனும் அனுமதி தந்தார். அதேவேளையில், அவை சாம்ராஜ்ஜியத்தின் நிலைத்தத் தன்மைக்கு எதிராகப் போய்விடாமல் பார்த் துக்கொண்டார். பலவீனமான, தனது நிலைகுறித்த பாதுகாப்பின்மையை உணர்ந்த நபர் இதுபோன்ற நடவடிக்கைகளுக்கு அனுமதியளிக்க வாய்ப்பில்லை. கடலோரப் பகுதிகளும் முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கரின் கட்டுப்பாட்டில் இருந்ததை, கால்டுவெல்லின் குறிப்புகள்[17] தெளிவுபடுத்துகின்றன. ஆல்பர்ட் லியாஜியோவின் 1609 ஆம் ஆண்டு, நவம்பர் 20 ஆம்தேதியின் கடிதப்படி, பரவாஸ் (மீனவ மக்கள்) மதுரை அரசருக்கு திறைசெலுத்துபவர்களாக இருந்தார்கள் என்றும், பின்னர் அவர்கள் போர்த்துக்கீசியர்களுடன் ஒன்றுகூடினர்[18] என்றும் விளக்குகின்றது. கன்னியாகுமரி பகவதி கோவிலுக்கு நிலங்கள் கொடை கொடுத்ததும், மற்ற ஆவணங்களும் மதுரை நாயக்கர்கள் கன்னியாகுமரிவரை முழுகட்டுப்பாட்டையும் தங்களிடம் கொண்டிருந்தனர் என்பதைக் காட்டுகின்றன.[19] இன்னும்மேலாக, முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரின் வளஆதாரங் களில் பெருமளவு பொதுமக்கள் நலனுக்கானத் திட்டங்களாக கோவில்கள், அக்ரஹாரக் கொடைகள் மற்றும் குளங்களுக்கு என்று செலவிடப்பட்டன. மதுரைக்கும் ஸ்கந்தமலைக்குமிடையில் கிருஷ்ணாபுரம் என்றொரு ஊரை நிர்மாணித்ததாகவும் சொல்லப்படுகின்றது. கயத்தாறில் ஒருசிவன் கோவிலையும் கட்டியுள்ளார்.

**கிருஷ்ணப்ப நாயக்கரின் மரணம்:-** முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரின் மரணம் குறித்தத் தரவு, அவருக்குப்பின் ஆட்சிப் பொறுப்பேற்ற முத்துவீரப்ப நாயக்கரின் கல்வெட்டில் மட்டுமே, உண்மையான வழிகாட்டுதலுடன், 1609ஆம் ஆண்டு ஏப்ரல் என்று இடம்பெற்றுள்ளது.[20] நெல்சனும் ரங்காச்சரியும்கூட அதே

ஆண்டையே குறிப்பிடுகின்றனர். ஆனால் அவர்கள் எந்த அடிப்படையில் அந்தத்தேதியைத் தீர்மானிக்கின்றனர் என்று குறிப்பிடப்படவில்லை. 1609ஆம் ஆண்டு நவம்பரில் எழுதப்பட்ட லியர்ஜியோவின் கடிதத்தில், முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரின் மரணம் குறித்து எதுவும் கூறப்படவில்லை. அந்தவகையில் அது மதிப்புவாய்ந்தக் குறிப்பாக இருக்கின்றது.

முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கருக்கு முத்துவீரப்பா, திருமலா மற்றும் குமாரமுத்து ஆகிய மூன்றுமகன்கள் என்று ஹிஸ்டரி ஆஃப் தி கர்நாடகா கவர்னர்ஸ் மற்றும் சில மெக்கன்ஸி கையெழுத்துப் பிரதிகள் கூறுகின்றன. ஆனால் மிருதியுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதிகளும் பாண்டியர் குடிவழிமரபுப் பட்டியலும் குமார முத்துவைக் குறிப்பிடவேயில்லை. இரண்டாம் வேங் கடனின் கூனியூர் ஏடுகள் முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கருக்கு முத்துவீரா மற்றும் திருமலா இரண்டுமகன்கள் என்றே பகர்கின்றது. திருமலைக்குப் பின்னர், இளைய சகோதரன் இருந்ததாக வேறு எந்தக் கல்வெட்டுகளிலும் காணப்படவில்லை. ஆனால் அவையெல்லாமே குமாரமுத்துத் திருமலா, திருமலை நாயக்கரின் மகன் என்று குறிப்பிடுகின்றன. ஆகையால், முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கருக்கு மூன்றுமகன்கள் என்பதை வேறு ஆதாரங்கள் ஏதுமில்லாததால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

### அடிக்குறிப்புகள்

1. Taylor, O.H. MSS., vol. ii, p.119
2. Ibid., p.260
3. p.109
4. I. A., 1916, p.105
5. The Position of the Nayaks in regard to foreigners trading alon the coast country was probably a mere continuation of the policy puseued by the Pandyas. There are good resons for believin that with the great Cholas the overseas enterprise of the Tamils came to an end and gradually gave place to Arab enterprise which ultimately superseded all Tamil effort in this direction both on the coast and in the Archipelago. Under the last great Pandya. Kulasekhera, the agent of the hores trading Jamal –ud-Din, Governor of Shiraz. held the chief place in this region. he occupied, acco0rdin to the Muhammadna historiand a high place evne in the councils of the Pandya. This positions of the agent of the Muhammadan trader of Kayal is in striking contrast to the position that the foreigners occupied under the great Cholas, as is exemplified in the case of the mere. bulding of a Buddhist Vihara and

making grants of land to it by the ruler of kadaram under the great Cholas. The rulers of Kadaram (Sri Bhoja ar Palambang) had to obtain permission in both cases by sending out sepcial missions and obtaining the requiste license through the intervention of the foreign secretaru of the Cholas. That state of things had completely vanished under the Pandyas. The conquest of the Pandya country by Vijayanagar does not appear to have provided for this immediatly, as in all probability this conquest did not involve the acquisition of all the coast territory by the new empire. It is in connection with the appintment of lakkana, the chief Dannayak at head quarters, as a 'Special Commissioner fo the south' that the first effort at bringing the coast region under the control of the provicial government comes into view. Lakkana had the combined title of vicoroy of Madura and Lord of the Southern Ocean' This Lordship of the Southern Ocean seems to imply control over the ports and to a certain extent, command of the overseas trade. In the period of usrupation an effort. was made to bring the Pandyas under control chiefly through the efforts of Narasa Nayaka the father of the great king Krishnadeva ray. That probably meant a more thorough connquest of the whole region and its reduction to a position of subordination to t he empire as a means of extending the imperial authority down to the coast, as it was about that time when the Portuguese made their first appearance on the west coast. The enterprise of foreigners on the coast assumed a more derinite shape and showed aggeressive features under Vasco da Gama and Albugqurque. The dissatisfaction expressed by the latter in regard to the reception given to his agent fra, Luiz immediately after the fall of Goa is evida=ence of the cautions imperial policy of Krishnadeva Ray. His subsequent transactions with the Portugues showed a spirit friendly to their commercial enterprise but he was equally clear in discountenacing the morre aggressive enterprise of the Portuguese against the coast power, as the case of Zamorin of Calicut. against whom Albuquerque sought an alliance with the Raya. Krishana gave no reply to this indicating clearly that he did not favour that kind of enterprise. The coming of Francis Xavier to the Parava coast, indicated the character of the peaceful penetration of the Portugues missionaries actively supported by the Prtuguese civil government, It was the advent of this new influence that called for mor drastic action on the part of the empire the socalled invasion of the Badages against which Portuguese writers bitterly complain.

It was more than a drastic effort made to assert imperial authority, and explains the contant vigilance and active period almost of ten years. The adoption of Christianity by the Paravas was held and to imply a change of fealty from the Indian government to the king of Portugal and that naturally would have provoked drastic measures for the assertion of Vijayanagar authority. Visvanatha's subordinate position during the period of Ramaraja Vitthala's activity in the south finds and explanation in this as also the immediately preceding effort to extend Travancore authority across the whole peninsula to the east coast. This reassertion of imperial authority seems to have been in the mail sucessful and help good so logn as the empire lasted. After the battle fo Talikota, the peaceful effort of the missionaries, chiefly Jesuits compained with the enlightned policy of toleration pursued by the emperors activity which involved the change of political allegiance. It is this undercurrent of political activity of the missionaries that brought the native powers down upon them in India, as in famous persections of Christians in the Roman empire during the early centuries of the christian era – Ed

6. History of Tinnevelly, p.71
7. Taylor, O.H. MSS, ii Appendix, p.49
8. Appendix D, No.105, 109 and 106
9. Ibid, No. 122
10. Bertrand, ii, p.3
11. J.S. Chandler, The Jesuit Mission in Madura, p.35
12. Appendix D, Nos. 99 and 101
13. Ibid, No.104
14. The obverse legend of this coin, Tiruvemga (la), may have no connection with the name of the king Venkata. It may stand for the patron god of the Madura Nayaks as the particular form of Vishnu to which they were deovted. It will be remembered thar Krishnappa Nayaka installed this form of god Vishnu in the temple he constructed in the new town Krishnapuram founded by him. If theat should trun out to be so, this would be something like an effort at independence, but it is hardly a necessary inferance in the face of the statement of Caesar Frederick, who says that each provincial governor issued copper coins of his own so that the travellar had to take fresh change almost every day that he travelled–Ed

    I.A., 1891, p.308, No.38
15. I.A., 1891, p.308. No.37

16. I.A., 1916, p.104
17. History of Tinnevelly, p.71-2
18. Bertrand, ii, p.2
19. V.Nagam Aiya, The Travancore state Manual, i, p.302, Appendix D, No.102
20. Appendix D, No. 110

# 7

# முதலாம் முத்துவீரப்ப நாயக்கர் (1609-1623)

**1609**ஆம் ஆண்டின் தொடக்கத்தில் முத்துவீரப்ப நாயக்கர், தந்தை அமர்ந்திருந்த அரியணையில் ஏறினார். முத்துவீரப்ப நாயக்கரது ஆட்சிக்காலத்தில் மிகப்பெரிய கேள்வியாகயிருந்தது, விஜயநகரப் பேரரசுடன் அவர்கொண்டிருந்த உறவுகுறித்துதான். ரங்காச்சாரி, முத்துவீரப்ப நாயக்கரின் விசுவாசத்தை, சந்தேகத்துக்கு அப்பாற்பட்டது என்று குறிப்பிடுகின்றார். தனது கருத்துக்கு ஆதரவாக, 1609ஆம் ஆண்டின் கொடைதொடர்பான ஒரு தாமிரப் பட்டயத்தை எடுத்துவைக்கின்றார்.[1] அது, முத்துவீரப்ப நாயக்கரின் விருப்பப்படி முதலாம்வேங்கடன் வெளியிட்டது. ஆட்சியின் தொடக்கத்தில் வழங்கப்பட்ட அந்தத் தாமிரப் பட்டயத்தில் குறிப்பிட்டுச் சொல்லும்படியான அம்சங்கள் ஏதுமில்லை. ரங்காச்சாரி குறிப்பிடும் மற்றொரு கல்வெட்டு, வேங்கட தேவ மகாராஜாவின் சிதைந்துபோன ஆவணம். 1617 ஆம் ஆண்டு வீரப்ப நாயக்கருக்கு வழங்கப்பட்ட தகுதிக்கான கொடை பற்றியது.[2] ஆனால், முதலாம்வேங்கடன் 1614 ஆம்ஆண்டில் மரணம் அடைந்துவிட்டார். 'பேரரசரின் குடும்பத்துக்கு உறவுக்காரராக முத்துவீரப்ப நாயக்கர் இருக்கும் பட்சத்தில் அந்தக்கல்வெட்டு, வீரப்பரின் குடியாண்மை முறைக்கு வழங்கப்பட்ட சான்றாதாரமாக இருக்கமுடியும்'[3] என்று ரங்காச்சாரி கருதுகிறார். அத்துடன் இந்தக்குறிப்பு, 1617 ஆம் ஆண்டுவரை, பேரரசுக் குடும்பத்தைச் சேர்ந்த வேங்கடதேவா உயிருடன் இருந்ததற்கானச் சான்றாகக் கொள்ளமுடியும் என்கிறார். மூன்றாவது கல்வெட்டு ஆவணமாக, தனது வாதத்துக்கு, 1620ஆம் ஆண்டின் தாமிரப் பட்டயமொன்றையும்[4] ரங்காச்சாரி சான்றாய் எடுத்துவைக்கின்றார். இந்தஆவணம், கோயமுத்தூர் மாவட்டத்திலிருந்து கிடைக்கப் பெற்றது. பெனுகொண்டாவைத் தலைமையகமாகக்கொண்டு ஆண்ட வீரராமதேவராயருக்கு திறைசெலுத்தியும், விஸ்வநாத - வீரப்ப நாயக்கர்களுக்கு முகவராகவும் இருந்த உறையூர் ஸ்ரீவேங்கட தேவ மகாராஜாவின் மகன், ரகுநாத மகாராஜா வழங்கியக் கொடை தொடர்பானது. தெரிந்துகொள்ள முடியாத உறையூர் மகாராஜா[1]க்களின் தெளிவில்லாதத் தரவுகளைக்கொண்டு

முத்துவீரப்ப நாயக்கரின் பேரரசு விசுவாசத்தைக் காட்ட, அந்த ஆவணம் முனைகின்றது.[5]

மற்றஆவணங்களின் வழியே கிடைக்கும் தரவுகள், பேரரசு மீதான இறையாண்மை யிலிருந்து தூரவிலகி, முத்துவீரப்ப நாயக்கர் நடந்துகொண்டதாகக் காட்டுகின்றன. ராஜகுடும்பத்தின் மேலாண்மைக்குக் கட்டுப்பட்டு, அதேவேளையில் சுதந்திரத்துடன் செயல்படும் நோக்கம், அவரிடம் இருந்திருக்கின்றது. 1611ஆம் ஆண்டின் ஆகஸ்ட், 30 தேதியிட்டக் கடிதத்தில் விக்கோ, 'அவர் முறையாகத் திறைசெலுத்துபவராக இருக்கவில்லை. செலுத்தியதையும் அவர் முழுமனதுடன் செய்யவில்லை'[6] என்கின்றார். 1659 ஆம்ஆண்டில், ப்ரோயன்ஸா எழுதியக் கடிதம், 'திருமலை நாயக்கர் மட்டுமே விஜயநகரப் பேரரசிலிருந்து விலகியிருக்கும் கொள்கையைத் தனக்கு முந்தையவரிடமிருந்துக் கடைப்பிடித்தார்'[7] என்கின்றது. மதுரை நாயக்கர்கள், பேரரசர் முதலாம்வேங்கடனின் மரணத்துக்குப்பின்பு, பழிபாவத்திற்கு அஞ்சாதக் கலகக்காரரான ஜக்க ராயர் ஆட்சியைக் கைப்பற்றுவதற்கு ஆதரவாக, பேரரசுக்கு எதிரானப் போரை நடத்தியதாகவும், மதுரை நாயக்கரின் உதவி, போராட்டத்தை நீண்டநாட்களுக்கு இழுத்துக் கொண்டு போனதாக, பர்ராதாஸ் எழுதியக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. தோல்வியடைந்த ஜக்க ராயருக்கு பேரரசின் உரிமை இருப்பதாகக் கருதி நம்பியிருக்கலாம் என்று, முத்துவீரப்ப நாயக்கருக்கு ஆதரவாக, ரங்காச்சாரி நிற்கின்றார். இதுபோன்ற தட்டையானத் தரவுகள் உண்மையைப்போலான புனைவுகளாக இருக்கின்றன. 1610ஆம் ஆண்டுமுதல் 1623 ஆம் ஆண்டுவரையிலான வீரப்ப நாயக்கரின் கல்வெட்டுகள்,[8] பேரரசுடனானத் தொடர்பில் அசட்டை மனப்பான்மைக் கொண்டிருப்பதை வலுவான ஆதாரங்களாகக் காட்டுகின்றன. அதில், விஜயநகரப் பேரரசர் குறித்து எதுவும் சொல்லப்படவில்லை என்று சொல்வோரும் இருக்கின்றனர். முதலாம்வேங்கடனின் மரணத்தைத்தொடர்ந்து ஏற்பட்ட குழப்ப நாட்களை, முத்துவீரப்ப நாயக்கர் தனக்கு அனுகூலமாக மாற்றிக்கொண்டார்.[9]

1610ஆம் ஆண்டின் ஜுன், 12ஆம் தேதியிட்ட இயேசு சபையினரின் கடிதமொன்று, 'தீரச்செயல்களால் தன்னைப் புகழடையச் செய்துகொண்ட பாளையக்காரர் 'எருமைக்கட்டி' நாயக்கர், பேரரசருக்கு ஆதரவாகப் போரில் கலந்துகொண்டு தாக்குதல்நடத்தி, சில கோட்டைகளைக் கைப்பற்றி, வெற்றியுடன் திரும்பிவந்தார் என்றும், அவருக்குப் பேரரசர் கௌரவத்தையும் புதியசலுகைகளையும் வழங்கினார்'[10] என்றும் கூறுகின்றது.

1611[5]ஆம் ஆண்டின் நவம்பர், 25ஆம் தேதியிட்ட மற்றொரு கடிதம்,[11] மதுரை நாயக்கர்களுக்கும் தஞ்சாவூர் நாயக்கர்களுக்கும் இடையிலானப் போர் பற்றிப் பேசுகின்றது. போருக்கானக் காரணம் என்னவென்றும், அது எப்படி முடிவுக்கு வந்ததென்றும் தரவுகள் ஏதும் காணப்படவில்லை. ஆனால் அது, 1616 ஆம்ஆண்டில் நடந்தப் போரிலிருந்து வேறுபட்டதாகத் தெரிகின்றது.

1614 ஆம்ஆண்டில் விஜயநகரப் பேரரசர் முதலாம்வேங்கடன் மரணமடைந்ததும், அரியணைக்கு சட்டரீதியான உரிமைக் கொண்டவர்களுடன், அவர்களின் ஆதரவாளர்கள் யச்சம நாயக்கர் தலைமையில் ஒருபுறமும், வேங்கடனின் காமக்கிழத்தி மகன் ஆதரவாளர்கள் ஜக்க ராயர் தலைமையிலும் மறுபுறமும் களமிறங்க, துயர்நிறைந்த உள்நாட்டுப்போர் மூண்டது. வடக்கை உரிமைக் கொண்டவர்களின் ஆதரவாளர்கள் வலுவாகக் கைப்பற்றிக் கொள்ள, ஜக்க ராயர் தென்புறமாகக் கிளம்பினார். பேரரசுக்கு எதிராக இருந்த மதுரை மற்றும் செஞ்சி நாயக்கர்களை, எதிர்தரப்புக்கு ஆதரவாகயிருந்த தஞ்சாவூர் நாயக்கருக்கு எதிராக ஒன்றுதிரட்டினார். மதுரையின் முத்துவீரப்ப நாயக்கரும், செஞ்சியின் நாயக்கரும் ஜக்க ராயரின் கருத்துக்கு உடன் பட்டவர்களாக இருந்தார்கள். தஞ்சாவூரின் ரகுநாத நாயக்கர், அரசகுடும்பத்தின் ஆதரவு தளபதி யச்சம நாயக்கருக்கு முக்கிய ஆதரவாளராக ஆகியிருந்தார். அவர்களுக்கிடையிலான 'முட்டல் மோதல்' போட்டி, திருச்சினாப்பள்ளியில் நடந்தது. அது, 1616ஆம் ஆண்டின் டிசம்பர் மாதம் வரையில் முடிவுக்கு வரவில்லை என்று பர்ராதாஸ் எழுதியிருக்கின்றார். சாகித்தியரத்னாகரம் மற்றும் ரகுநாதபியுதயம் ஆகியநூல்கள் இந்தப்போரைப் பற்றியும், தஞ்சாவூர் பெற்ற வெற்றியைப்பற்றியும் பேசுகின்றன. இரண்டாவது நூல் ஜக்க ராயர் மற்றும் மதுரை நாயக்கரின் தோல்வி குறித்துப்பேசுகின்றது. முந்தைய நூல், மதுரை நாயக்கர் காவிரியின் குறுக்கே கல்லணையை அழித்ததையும், ரகுநாத நாயக்கருக்கு தனது மகளை திருமணம் செய்துவைத்ததன் மூலம் போர் முடிவுக்கு வந்திருக்கின்றது.[6] இவ்வாறாக, அரசதிகாரம் வெற்றிவாகை சூடப்பட்டது.

1583ஆம் ஆண்டின் ஸ்ரீவல்லப மற்றும் வரதுங்க பாண்டியர்களின் ஏடுகள்[12] வல்லம்பரா (வல்லம்)வில் வேங்கட ராஜா (முதலாம் வேங்கடன்)வின் படைகளுக்கும் வீர ராஜா (வீரப்ப நாயக்கர்) படைகளுக்கும் இடையில் நடந்தப் போரைப்பற்றிப் பேசுகின்றன. முன்னவரின் படைகள் பெருத்த அழிவை ஏற்படுத்தின. அச்சுத ராஜா (அச்சுதப்ப நாயக்கர்) களத்திலிருந்து தப்பியோடிவிட்டார். போர் வெற்றிகுறித்தக் குறிப்புகளில், தெற்கே 1616ஆம் ஆண்டு

நடந்ததாகக் குறிக்கப்படுகின்றது. அந்தக்கல்வெட்டின் ஆண்டும் தேதியும் மறுஆய்வுக்கு உட்படுத்தவேண்டும். கல்வெட்டு குறிப்பிடும் 'அந்தக்காலத்தில்' முதலாம்வேங்கடன் உயிருடன் இல்லை. மற்றும் அச்சுதப்ப நாயக்கர் ஏற்கனவே உரிமை யிழந்திருந்தார். ஒருவேளை, 'வேங்கடராஜாவின் படைகள்' என்று சட்டரீதியான உரிமைக்கொண்டவர்களும், அவர்களின் ஆதரவாளர்களும் கட்டற்றுப் பெருகிய உணர்ச்சிவேகத்தில், ரகுநாத நாயக்கருக்கு ஆதரவாக அப்படிச் சொல்லியிருக்கலாம். இந்தத்தேதி சரியானதென்றால், 1583ஆம் ஆண்டிலோ அதற்குமுன்போ, அவர்களுக்குள் ஒருங்கிணைவு எப்படியிருந்தது என்று விளக்குவது கடினம். இந்தக்கல்வெட்டு, அதிவீரராம பாண்டியனின் இறப்புக்குப்பின்னால், அவனது சகோதரனால் வெட்டப்பட்டது என்று கருதப்படுகின்றது. கிருஷ்ணசாஸ்திரி இந்தக் கல்வெட்டின் வழியாக, ஸ்ரீவல்லபனையும் அதிவீரராம பாண்டியனையும் அடையாளம் காணுகின்றார். டாக்டர் பர்னல், கொடை கொடுக்கப்பட்ட ஒரு தாமிரப் பட்டயத்தின்வழியாக, அதிவீரராம பாண்டியன் 1610ஆம் ஆண்டு இறந்துவிட்டதாகக் கணிக்கின்றார். அந்தவகையில், அதிவீரராம பாண்டியன் கல்வெட்டில், 1616ஆம் ஆண்டின் நிகழ்வு எப்படி குறிப்பிடமுடியும் என்று புரிந்து கொள்வது கடினமான ஒன்று. மேலும், 1616ஆம் ஆண்டின் போரின் வெற்றியைக் கொண்டாடும் அக்கல்வெட்டின் மதிப்புகுறித்து, தெளிவாக எதுவும் சொல்ல முடியவில்லை.[13]

**தலைநகர் மாற்றம்** - தலைநகரை மதுரையிலிருந்து திருச்சினாப்பள்ளிக்கு முத்துவீரப்ப நாயக்கர் மாற்றியது தொடர்பானத் தரவுகள் எதுவும் வரலாற்றின் பக்கங்களில் காணப்படவில்லை. என்றபோதிலும், திருமலை நாயக்கர் தனது ஆட்சிக்காலத்தின் தொடக்கத்தை திருச்சினாப்பள்ளியிலிருந்து தொடங்கினார் என்று அவை பேசுகின்றன. ஸ்காண்டிநேவியாவைச் சேர்ந்த கெரியோவின் ரிலேஷனில், '1604ஆம்ஆண்டில், மதுரையில் நாயக்கரின் அரசவை இருந்தது'[14] என்று குறிப்பிடப்படுகின்றது. இயேசு சபையினரின் ஆவணங்களின் அடிப்படையில் லியோன் பெஸ்ஸி,[15] 'தஞ்சாவூர் ராஜாவுடன் போர் தொடுப்பதற்கு ஏதுவாக, மதுரை நாயக்கர் தன் அரசவையையும், ராணுவத்தையும் திருச்சினாப்பள்ளிக்கு மாற்றினார்' என்று சொல்கின்றார். இந்தமுடிவு, ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இருக்கின்றது.[16]

**பாண்டியர்களுடனான உறவு** - முத்துவீரப்ப நாயக்கரின் ஆட்சிக்காலத்து ஸ்ரீவல்லப மற்றும் வரதுங்க பாண்டியர்களின் புதுக்கோட்டை ஏடுகள், தஞ்சாவூர் போரில் பாண்டியர்கள் முத்து வீரப்ப நாயக்கருக்கு முழுஆதரவு நல்கியதைத் தெளிவுபடுத்து

கின்றன. கால்டுவெல்,[17] அதிவீரராம பாண்டியனை பிற்காலப் பாண்டியர்களில் கடைசி அரசனானக் கருதுகின்றார். மேலும், 1610 ஆம் ஆண்டுக்குப் பின்பே இறந்திருக்கக்கூடும் என்றும் மதிப்பிடு கின்றார். ஆனால் டாக்டர் பர்னல், அதிவீரராம பாண்டியனுக்குப் பின்னால் பதவியேற்ற சுந்தரபாண்டியனுக்கு, அவனது பதிமூன்றாவது ஆட்சி ஆண்டாக, 1622ஆம் ஆண்டின் ஆவண மொன்றைக் காட்டுகின்றார். முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சிக் காலத்தில் பாண்டியர்களின் கல்வெட்டு ஆவணங்கள் நடை முறையில் நம்பத்தகுந்ததாக இருக்கவாய்ப்பில்லை. டி.ஏ. கோபிநாத ராவ்[18] 1753 ஆம் ஆண்டு வரையிலானப் பாண்டியர்களின் பட்டியலைக் கொடுக்கின்றார். இயேசு சபையின் 1666ஆம் ஆண்டின் ஆவணம், வழக்கொழிந்துபோன தென்காசிப் பாண்டியர்[19]களின் பட்டியலை விவரிக்கின்றது. முத்துவீரப்ப நாயக்கரின் ஆட்சிக் காலத்துக்குப் பின்பு, 'உண்மையானப் பாண்டிய ஆட்சியாளர்கள் யாரும் இருந்தார்களா?' என்று தெளிவாக எதுவும் இல்லை.

ஆகமொத்தத்தில், பாண்டியர்கள் மதுரை நாயக்கர்களுக்கு விசுவாசமாகவே இருந்து வந்தது தெளிவாகின்றது. விஸ்வநாத நாயக்கர், முதலில் பாண்டியர்களை வெற்றிகொண்டதையே,[20] பின்னர்வந்த முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரும் முத்துவீரப்ப நாயக்கரும் தற்புகழ்ச்சிக்காக தாங்களும் வென்றதாகச் சொல்லிக் கொள்கின்றனர். விஸ்வநாத நாயக்கருக்குப் பின்பு, முற்கால நாயக்கர்கள் யாரும் பாண்டியர்களுக்கு எதிராக, ராணுவ நடவடிக்கை மேற்கொண்டதாக எங்கும்காணோம். பாண்டியர்களின் உள்நிர்வாகத்தில் நாயக்கர்கள் தலையீடு எதுவும் செய்யவுமில்லை. அதேவேளையில் திறைசெலுத்தச் சொல்லியும், தேவைப்படும்போது ராணுவ உதவியை மட்டுமே பெற்றுக் கொண்டுள்ளனர். திருவாங்கூரிலிருந்து படையெடுப்பு எதுவும் நடந்துவிடாமலிருக்க, பெயரளவுக்கான சுதந்திரம் பாண்டியர் களுக்கு வழங்கப்பட்டிருந்தது. மதுரையில் நாயக்கர்கள் ஆட்சி அமைந்தபின்பு, ஒருநூற்றாண்டு காலம் பாண்டியர்கள் தொடர்ந்து இருந்துவந்தது தெரிகின்றது.

**மைசூர் படையெடுப்பு** - தொடர்ச்சியாக நடந்த அதிகாரக் கைப்பற்றுதலில், மைசூரின் ராஜா உடையார் பெயரை, பர்ராதாஸ் குறிப்பிடாதது குறித்து, ரங்காச்சாரி ஆச்சரியப்படுகின்றார். அந்தக் காலச்சூழலில், அதிகாரத்தைக் கைப்பற்ற ராஜா உடையார் தனித்துப் போரிடவில்லை. அதேநேரத்தில், பேரரசு சார்பில் அவரது பங்களிப்பு இருந்திருக்கின்றது. ஆனால் ரங்காச்சாரியால் ஊதிப்பெருக்கப்படும் இந்த விவர அறிவிப்பு, மைசூர் ராஜா ஒரு சுயநலமி என்றும், வலியச்சண்டைக்குப் போகின்ற ஆட்சியாளர்

என்றும் நிரூபிக்க மட்டுமே பயன்படும்.[21] இந்தச்சம்பவத்தில் பர்ராதாஸ் உண்மைகளைச் சேர்க்காமல் புறக்கணித்தார் என்று குற்றம் சொல்வதற்கு எந்தவொரு ஆதாரமும் காணப்படவில்லை. தொடர்வெற்றிகளாலும், தனது நீண்டகால ஆட்சியில் நிலம்வென்று சேர்த்துக்கொள்ளும் யுக்தியாலும், ராஜா உடையாரின் ஆட்சிப்பரப்பெல்லை மதுரை நாயக்கர்களின் ஆட்சிப்பகுதிவரை நெருங்கிவந்திருந்தது. முத்து வீரப்ப நாயக்கர், தஞ்சாவூர் நாயக்கருடனானப் போரில் கவனம்செலுத்திக் கொண்டிருந்த போது, ராஜா உடையார் ‘முகிலன்’ என்பவன் தலைமையில், திண்டுக்கல் மாகாணத்தைக் கொள்ளையடிக்கப் படையை அனுப்பினார் என்று தெரிகின்றது.[22] ஆனால், விருப்பாட்சி மற்றும் கன்னிவாடி பாளையக்காரர்கள், ஊடுருவ முயன்றப் படையை மறித்து, துரத்தியடித்து, வரவிருந்த ஆபத்திலிருந்து நாட்டைக் காத்தனர். இந்த அரியசேவைக்காக, அவர்களில் விருப்பாட்சிப் பாளையக்காரருக்கு ‘பாதைக் காவல்’ பட்டத்தையும், கன்னிவாடி பாளையக்காரருக்கு ‘சின்ன மைசூரான்’ பட்டத்தையும்வழங்கி, கௌரவிக்கப்பட்டனர். இந்த ஊடுருவல்தொடர்பாக, நெல்சன் எந்தவொரு தேதியையும் குறிப்பிடவில்லை.[23] இது, 1620 ஆம்ஆண்டில் நடந்திருக்கலாம் என்று ரங்காச்சாரி சொல்கின்றார். அவரது கணிப்பின்படி, ராஜா உடையார் மரணமடைந்ததும் அதே ஆண்டுதான்.[24]

**சமயப்பரப்பு நடவடிக்கைகளில் முன்னேற்றம்** - தனது பணிகளால் ஊக்குவிக்கப்பட்ட டி நோபிலி முதல்முயற்சியாக, 1610ஆம் ஆண்டில் புதிய தேவாலயம் ஒன்றைக் கட்டினார். தனக்கு உதவியாக, சிலரை மதுரைக்கு வரவழைத்தார். அவர்களில் முக்கியமானவராக அண்டோனியோ விகோ இருந்தார். 1610 ஆம் ஆண்டு, நவம்பர் 22 ஆம்தேதியிட்டக் கடிதத்தில் விகோ,[25] ‘நாயக்கரின் அரசவையிலிருந்து துயரங்களாக, அட்டூழியங்கள் தொடர்ந்து செய்யப்பட்டன. அரண்மனையிலிருந்து மிரட்டல் வாசகங்கள் தொடர்ந்துவந்தன’ என்று குறிப்பிடுகின்றார். அதேஆண்டின் டிசம்பர், 8ஆம் தேதியக் கடிதத்தில் தலைமைப் பேராயர் லியார்ஜியோ, அந்த ஆண்டின் அட்டூழியங்கள் குறித்து எழுதியுள்ளார்.[26] நவம்பர், 25 ஆம்தேதியிட்ட மற்றொரு கடிதத்தில், புதியவகையிலான அட்டூழியங்கள் செய்யப்பட்டதைத் தொடர்ந்து, மதம்மாறுபவர்களின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்தது என்று குறிப்பிடப்பட்டுள்ளது.[27] பாளையக்காரர் எருமைகட்டியின் நடவடிக்கைகளால், டி நோபிலியின் செயல்பாடுகள் சற்றே முடங்கின. ஆயினும், அது சாதகமான அம்சமாக மாறியது. டி நோபிலியின் பணிகளுக்குத் தலையாயத் தடையாக இருந்தது,

உயர்அதிகாரத்துக்குத் தெரிவிக்கப்பட்ட பெர்ணான்டஸின் குற்றச்சாட்டுகள்தான். ‘கிறிஸ்தவத்தின் வேரை அறுக்கும், புறச்சமயச் சார்பைக் கிறிஸ்தவத்தில் கலந்து நேர்மைக் கேடான நடவடிக்கைகளை நோபிலி மேற்கொள்கின்றார்’ என்று, அவர் மீது குற்றச்சாட்டுகள் அடுக்கப்பட்டன. பின்னால்வந்த நோபிலியின் வெற்றி, தனக்கு ஏற்படுத்திய செல்வாக்கின்மை, கௌரவக் குறைச்சலுக்கு பழிவாங்க பெர்ணான்டஸ் அப்படி நடந்து கொண்டாரா என்பது தெளிவாக இல்லை. மலபார் மாகாணம் மற்றும் கிராங்கனூரின் தலைமைப் பேராயர் ஆதரவுடன் நோபிலி, தனது பணியைத் தொடர்ந்தார். பெர்ணான்டஸின் குற்றச்சாட்டு களையும் தாண்டி நோபிலிக்கு தலைமைப் பேராயர் லியார்ஜியோ வின் ஆதரவு கிடைத்துவந்தது. ஆனால் புதிய பேராயர் ஒருவர் மாறுதலாகி அந்தஇடத்துக்கு வந்தபோது, டி நோபிலுக்கு உண்மையானக் கஷ்டங்கள் வரத்தொடங்கின. பெர்ணான்டஸ் மறுபடியும் செயலூக்கம்பெற்று, இந்தமுறை அவர் வெற்றியாளர் ஆனார். டி நோபிலி சமயகுருமார்களின் முன்னே விசாரணைக்கு நிறுத்தப்பட்டார். அச்சபையின் முன்னே, தனது வலிமையான வாதங்களை அவர் எடுத்துவைத்தார். இருந்தும், அந்த சபையில் ஒருமித்தக்கருத்து எதுவும் உருவாகவில்லை. பிரச்சனை, ஐரோப் பிய அதிகாரத்துக்கு பரிந்துரைக்கப்பட்டது. 1613 ஆம்ஆண்டில், டி நோபிலியின் உறவினர் ஒருவர் பணியை நிறுத்திவிடச்சொல்லி கேட்டுக்கொண்டார். ஆயினும் அவர், 1611 ஆம்ஆண்டிலிருந்து பணியிலிருந்து விலக்கிவைப்பட்டிருந்தார். அவரது கடமைகளை அவரால் சரிவர செய்யமுடியாமலிருந்தது. பத்தாண்டுகளுக்கும் மேலான ஓயாதப் போராட்டத்தால் நல்லதொரு பதிலை அவரால் பெறமுடிந்தது. இறுதியில், 1623 ஆம் ஆண்டு ஜனவரி, 31 ஆம்தேதி 15 ஆம் போப் கிரிகோரி, அனைத்துக் குற்றச்சாட்டுகளிலிருந்தும் டி நோபிலியை விடுவித்து, அவரது வழிமுறையிலானப் பணிகளுக்கு அங்கீகாரமளித்தார். ‘சமயச்சடங்குகள் குறித்த வாதங்கள், புறச்சமய சடங்குகளின் அடக்குமுறை ஆகியவற்றையெல்லாம் தனது தன்னடக்கத்துடனான வழிமுறைகளில் டி நோபிலி வெற்றி கொண்டாலும், அவரதுபணிகள் பத்தாண்டு காலம் இல்லாமல் போய்விட்டது’ என்கிறார் பெர்ட்ராண்ட்.[28]

மதுரையைப் பொறுத்தமட்டிலும் வாதப்பிரதிவாதங்கள் மீட்டெடுக்கமுடியாத அளவுக்கு டி நோபிலியின் கௌரவத்தைப் பாதித்திருந்தது. அவர்பெற்றிருந்த அனுபவங்களின் வழியே, இத்துத்துவத்தின் தொன்மையான இடத்திலிருந்து கிறிஸ்தவத்துக்கு ஆள்திரட்ட முடியாது என்பதை உணர்ந்திருந்தார். 1624ஆம் ஆண்டின் கடிதத்தில் விகோ, ‘ஒருபோதும் யாராலும் மதுரையில்

எதிர்ப்பாற்றலுடன் செயல்பட முடியாது'[29] என்று ஒப்புக்கொள் கின்றார். அடக்குமுறை, அட்டூழியமெல்லாம் தலையாயப் பிரச்சனைகள் அல்ல. டி நோபிலியின் மதம்பரப்பும் வழிமுறை இருதரப்பிலும் சினமூட்டிவிட்டது. அவரது நடவடிக்கைகளில் இயல்பற்றநிலை நிறைந்து காணப்பட்டது. கவனமாகக் கண்காணிப்பவர்களின் பார்வையிலிருந்து அவை தப்ப வில்லை. அவரது பரிசோதனைகள் மதுரையில் தோல்வியைத் தந்ததும், தனது பார்வையை வடக்குநோக்கித் திருப்பிக்கொண்டார்.

முத்துவீரப்ப நாயக்கரின் ஆட்சிக்காலத்தில் மதம் மற்றும் பேரரசின் அரசியல் தொடர்பான புதியகொள்கை உருவாக்கப் பட்டது. அத்துடன், தவிர்க்கமுடியாத ஆபத்துகள் மைசூரிலிருந்து வருவதும் உறுதியாகியிருந்தது. இன்றுவரையிலும்கூட, அயல்நாடுகளிலிருந்து மதப் பிரச்சாரம் செய்யவருபவர்களின் நடவடிக்கைகள்தொடர்பாக, தங்களது செயல்பாடுகள் குறித்து நாயக்கர்கள் முடிவு எதுவும் செய்யவில்லை. இப்போதுதான் அந்தக்கேள்வியே ஒருவடிவம் பெற்றிருக்கின்றது. மதம்பரப்பும் சமயங்களின் நடவடிக்கைகளை முத்துவீரப்ப நாயக்கரும்கூட ஒருஅளவுக்குத்தான் சகித்துக்கொண்டார். அவர், தனது குடிமக்களின் மனநிலையைப் புரிந்துகொள்ள முயன்றவராகவோ அல்லது அவ்வட்டூழியம் தொடர்பாக நடவடிக்கை மேற்கொள்ள ஒரு கொள்கை வகுத்தவராகவோ இருக்கவில்லை. விஜயநகரப் பேரரசர் முதலாம்வேங்கடனின் மரணம், அதைத்தொடர்ந்து உருவானக் குழப்பமானக் காலகட்டம், அரச குடும்பத்தின் இறையாண்மை கலைந்துபோய்விடும் மாயத்தோற்றத்தை முத்துவீரப்ப நாயக்கருக்குக் கொடுத்திருக்கவேண்டும். அவரது முயற்சிகளில் அவர் எந்தளவுக்கு சாதித்தார் என்பதில் தெளிவு இல்லை. 1611ஆம் ஆண்டின் ஆகஸ்ட், 30ஆம் தேதியின் விகோ எழுதியக் கடிதம்,[30] திறைத் தொகையை ஒழுங்காகச் செலுத்தாமை, மதியாமல் மறுத்துப்பேசுதல், அந்தத்தொகையை வாள் முனையில் பேரரசர் வசூலித்தல் ஆகியவற்றைப் பேசுகின்றது. முடிவாக, 'தங்கள் ஆட்சியாளர்களின் தவறுகளுக்கு... மக்கள் விலை கொடுக்கிறார்கள். நாடு சூறையாடப்படுகின்றது. மக்கள் சுரண்டப்படுகிறார்கள் அல்லது கொல்லப்படுகிறார்கள்' என்று பேசுகின்றது. முன்கூட்டிய முடிவுகளைக்கொண்ட முத்துவீரப்ப நாயக்கரின் ஆட்சியின் மதிப்பீட்டை எடைபோடுவது கடினமான ஒன்றுதான். 1611ஆம் ஆண்டு, அவர் பதவியேற்று இரண்டு ஆண்டுகள் மட்டுமே ஆகியிருந்தது. முந்தைய நாயக்கர்கள் செய்ததைக் காட்டிலும் கூடுதலாக, அவர் தனது குடிமக்களிட மிருந்து வசூல் செய்திருந்தார். அதற்குக் காரணம், அவர் தனது

சுதந்திரத் திட்டத்தைக் கொண்டிருந்ததும், மைசூர் படையெடுப்புக்கு எதிராக, தன்னை தயார்படுத்திக்கொள்ள வேண்டிய அவசியமும் அவருக்கிருந்தது. ஆனால் முத்துவீரப்ப நாயக்கர் அதிகாரம் பெறுவதற்காகச் செய்த குறிப்பிடப்பட்ட தன்னார் வமானச் செயல்களைக்கொண்டு, அவர் நல்லதொரு ஆட்சியாளரென்று கருத, போதுமான தரவுகள் இல்லாமல் எடுத்துக்கொள்ள முடியாது.

**முத்துவீரப்ப நாயக்கரின் மரணம்** - இந்தக்கேள்வி, திருமலை நாயக்கரின் பதவியேற்புடன் தொடர்புபடுத்திப் பார்க்கப்படுகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. Appendix D, No. 111
2. Ibid, No. 119
3. I.A., 1916, p.133, n
4. Appendix D, No.120
5. The maharajas of Uriyur, mentioned in this record, may after all be a family of petty chiefs or jaghirdars whose jeadquarters had been at Uraiur. The mention of Vira Kamadeva as ruling at Penukonda is evidence of the donor;s loyalty to the empire, as, at the date 1620, the young prince Rama. who escaped masscare, was autually the ruler of Vijayangar. It will be remembered that it was in support of this prince that Raghunatha Nayaka of Tanjore fought the battle of Toppur against a coalitoin of other governors under the leadership of the Nayak of Madura – Ed.
6. Bertrand, ii, p, 124: vide Appendix A, Letter
7. Ibid, iii, 42, vide Ibid., Letter No. 1
8. Appendix D, Nos 112, 114, 115, 116, 118, 123, 124
9. On the questions of Virappa's hostillity to the empire there can be no doubt. Ever since the battle of Talkota and the consequent removal of the capital of the empire from Vijayanagar to Penukonda, the province of Madura had showed a tendancy to break off from the imperial connection, at any ra. te, to discharged it, as the empire was not conveniently placed to enforce its authority. After the first years extent, and Krishappa Nayaka I His Contemporary , seems to have maintained the form, at any rate, of loyalty. it is this doubtful allegiance of the distant province of Madurai and possibly a similar attitude on the part of the viceroys of Srirangapattanam, that led to the partcular arrangements in regard to the government of the empire on the death of tirumala, According to Tirumal Aiyangar, the minister of Chikkadeva Raya

of Mysore, the empire was put in commission. as it were. The three sons of Tirumala secceeded to the govrnment as a whole; the eldest surviving one, Sriranga, had the general control over the empire and occupaid the throne. The next younger brother, Rama was given the vice royalty of Srirangappattanam and made that his headquarters. Venktapati, the last of the brothers, had his headquarters in Chandragiri and was a sort of over governor of the provinces of what were the Tundira, Chola and Pandya Kingdomes that is all the Tmail country. Rather late in the reign of Virappa Nayaka an attempt seems to have been made to overthrow the imperial authority, as this same account says that when Sriranga died childless and probably predeceased by Rama, Venkatapati succeeded to the empire and almost the first act of his reign was the suppression of a rebellion in Madura, for which he deputed his first nephew, Tirumala, the eldest son of Rama, whose treason to the empire has already been refered to. It was subsquently that Venkatapati led and invasion himself and brought Virappa back to a sense of loyalty to the empire. In this cmapaign Tanjore seems to have stood loyally by Venkata and the battle of Vallamprakara, referred to in the Pudukottai Plates, has reference to this engagement. The Nayaks of Madura seem to have fogiven neither the emperor for this assertion of authority nor the Nayaks of Tanjore for the loyal support that made this assertion possible. This general hostility to the empire accounts for much that remains otherwise inexplicable in the foreign policy of the Madura Nayaks – Ed.

10. Bertrand, ii p.88
11. Ibid, p.108
§ S.K.A Sources pp.255, 260, 265, 270, 272-4, 289-90
12. T.A.S., I pp.61-88
13. The invasion of Madura , refered to in the previous note by Venkatapati Raya must have taken place soon after 1586. The war between Tanjore and Madura, referred to in the jesuit letters of 1610 and 1611. must be one in which the empire government had taken no part, probably because it was involved in one of those periodical stuggles against the aggressions of the Muhammadans from the north. It was in the year 1610 that Raja Udaiyar was able to lay siege to and take possession of, Srirangappattanam from viceroy Tirumala without imperial intervention. This action on the part of Raja Udaiyar recived imperial confirmation in 1612. This ratification of what might be construced as an act of war

against the empire was probably owing to the difficlties in which the empire was involved at the time and the same difficlties would explain any restivenses on the part of Madua about the same period. The actual difficulties of the empire are found clearly stated in the sahityaratnakaran and Raghunathabhyudyam, both of which relate to the history of the Nayaks of Tanjore, Particularly Raghunatha Nayaka. The empror Venkatapati who was not without a will to enforce his authty upon the provinces of the empire was then involved in a war caused by the invasion of the imperial territories by the Muhammadan of Golkonda and culmination in a siege of Penukonda. At the time, the emperor obtained the assistance of young Raghunatha from his father. Achyutappa Nayaka of Tanjore. Raghunatha is credited with havng beaten back the Muhammadans from siege of Penukonda and given the emperor much needed relief. He is said to have then obtained as a favour from the emperor the release from prison of Krishnappa Nayaka of Gingi, who had been thrown into it by Venkatapati as punishment for an act of treason. The same situation probably consistuted the influencing motive for venkatapati Raya. who not only looked on with equanimity at the overthrow of his nephew in Srirangappattanam by a feudatory of his, but actually accorede imperial sanction to the transfer of the viceroylty of Srirangapattanam from the recalcitrant nephew to a possibly loyal feudotory. The siege of Penukonda therefore may have taken placein 1611 or 1612. and Raghunatha must have returned to Tanjore in the same year or the year following. Venkatapati died two years after in 1614, and was secceeded by Sriranga Chikkaraya, the nephew of Venkatapati and younger brother of the late viceroy Tirumala of Srirangapattanam. It was this nomination by venkata of his nephew that broght about the war of succession. Jagga Raya setting up a putative son of his sister, one of the queens of Venkata Falling in his efforts to prevent the accession of sriranga Chikkaraya to the empire, Jagga Raya wreaked his vengeance by massacring the whole of the royal family. But a loyal chieftain, Yachama Nayaka, managed to save by a stratagem one of the young princes, Rama by name. Yachama cut through the enemy's lines and escaped with the prince of the protection of the loyal viceroy of Tanjore. Jagga Raya also moved southward rapidly to prevent the fugitive price and general form successfully effecting their escape into Tanjore. The Prince and his protector were met at Kumbakonam by Raghunatha and were taken

in safety to Tanjore. At the time that Jagga arrived near the island of Srirangam, the Nayak of Gingi and the Nayak of Madura with his accessory Portuguese contingent and evne troops from Travancore. his feudatory Pandyas, and in fact all the feudatories of the empire were ready to join him as the result of previously organized effort. Tanjore stood loyalL Mysore does not appear to have interfered for the obvious reason that the acquisition of Srirangapattanam was too recent, and Raja Udaiyar had reason to greateful to the lat emperor for the conferment of the viceroyalty upon him. In any case there was no reason whatsoever for Mysore to joinin this combination, and there was valid reason against Raja Udaiyar's doing so. All these transactions would have taken time, and the battle at Toppur. which was the result of the machinations of the feudatories, could not have taken place before 1616. A detailed account of his battle is embodied in a report submitted by one of the subordiantes of Raghunatha, and this report is dated the month of Ashadha in the cyclic year Naja: it would be some date in August –Septemer of 1615-17. This report is embodied in the Telugu work Raghumathabhyudayam by his son and successor, Vijayarahava of Tanjore. It is clear from this that the battle of Vallamprakara, referred to in the pudukottai plates (of date 1582-3), Cannot be taken to refer to the battle of Toppur of Tanjore. could none of them have taken part. The only difficulty in regared to this date (1582-3) is that at that date or before it Venkata was not the emperor but he was as good as that as the superior viceroy of the three governorships in the Tundira, Chola, and Pandya countries. He may have intervened in the war as regent of the emperor, Sriranga. and in his own name as superior viceroy. This is more than probable as his elder brother Sriranga was a prisner in the hands of the Golkonda general year 1579-80) –Ed

14. Caldwell, History of Tinnevelly, p.71
15. La Mission du Madure', p.3
16. The change of capital from Madura to Trichinopoly seems to have been the direct result of the combination that culminated in the battle of Toppur. Leon Besse's statement that this took place in 1616 seems to be founded on fact by 1616 the hostility between Madura and Tanjore had settled in to a habitual kind of relation between the two Nayakships. The aggressions of the Muhammadans made the difficulties of Venkata's last years of rule so great as to make him more or less acquiesce in the achivement of practical independence by Raja Udaiyar of Mysore.

This example must have made a similar effort on the part of the other viceroys of the empire quite normal. The massacre of the royal family and the consequent unequal division of the empire into two camps of loyallists and rebles of the latter of whom the Nayak of Madura was the acknowleged leader, made it necessary for him to take more vigorous and permanent steps to safagaurd himself against loyalist Tanjore. The great military object of the combination before the battle of Toppur was to prevent the fugitive prince from getting into Tanjore. Jagga seems to have placed himself along the road leading from Tiruvannamalai or Gingi in to Trichinopoly therefore would be the most desirable salient for the purpose of this combination. After the victory of Toppur aggressive, as she must have gained in prestige by being loyalist in her activities, by dislodging the portuguese from Negapatam, by destroying the den of the Solaga chieftain at Devikotta at the mouth of the Coleroon, and by defeating pristige and power. So far there were no signs of hostility from Mysore and Trichnopoly was from the point of view of the strategist no less than from political considarations, the better placed for the capital of the great viceroyalty of the South – Ed

17. History of Tinnevelly, pp.53-4
18. T.A.A., i p.60
19. Bertrand, iii, p.239
20. M.E.R., 1909, p.86
21. I.A.., 1916, pp.134-5
22. Taylor, O.H.MSS., ii, p.169
23. p.119
24. I.A., 1916, p.135

About the year 1616, the date of the battle of Toppur, the position of Raja Udaiyar in Mysore could not have been such as to enable him to take any active part in the engagement. It has already been stated that he actually took possessin of Srirangapattanam in 1610. He had to wait and perhaps to adopt a policy of loyalty to the empire designedly to justify this aggeressive act of his. He so far succeeded that he obtained a confimatory charter from Venkata in 1612. Even after the grant of this charter his position was insecure. There was the neighbouring viceroyalty of Channapattana as an effective barrier between his and the other portions of the empire. Theis viceroyalty included in it the Salem Baramahals and was under the powerful family of Jagadeva Rayal. the extent of territory occupied b him effectively almost at the end of his reign

does not appear to have comprise more than the present – day district of Mysore with just the borderland beyond the hills in Coimbatore and Salem. It seems clear that, while his territory may have been contermious with that of the Nayaks of Madura, he was in no such condition of security in his possession of the newly acquired viceroyalty, as to launch out into distant aggression against the territory of the powerful Nayak of Madura. If he took any part in the battle of Toppur, it must have been on the emperor. But such action on his would have been an invitation for the aggeressions of the Nayak of Madura who was by far the most powerful of the Nayaks. with the exception perhaps of Tanjore. This position of Raja Udaiyar is confirmed by what we Bomballi in the reign of Kanthirava Narasa. Unless the chronicles bring into the any part in the battle of Toppur. If Raja Udaiyar had exipited aggressiveness changing the capital to Trichnopoly. Ed.

25. Bertrand, ii, p.92
26. Ibid, p.64
27. Ibid, p.108
28. Ibid, p.197
29. Bertrand, ii, p.226
30. Ibid, P.124, Vide Appendix A, Letter No.10

# 8

# திருமலை நாயக்கர் (1623-1659)

**ப**தவியேற்பு- முத்துவீரப்ப நாயக்கருக்குப் பின்பு, அவரது இளைய சகோதரரான திருமலை நாயக்கர் ஆட்சிப்பொறுப்புக்கு வந்தார். இயேசு சபையின் ஆவணங்கள், திருமலை நாயக்கரை முத்துவீரப்ப நாயக்கரின் இளைய சகோதரர் என்றே சொல்கின்றன. அவர், மகன் இல்லை என்று மறுக்கின்றன. திருமலை நாயக்கர் பதவியேற்ற நாள் தொடர்பாக, வரலாற்றின் பக்கங்கள் அத்தனையுமே சொல்லிவைத்தாற்போல ஒரேமாதிரிப் பேசுகின்றன. மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப்பிரதி, மதுரைத் தலவரலாறு மற்றும் பாண்டியர்களின் வரலாற்றுக் குறிப்புகள் அத்தனையும் துந்துபி வருஷத்தின் மாசி மாதம், 7 ஆம்நாளை - 1623ஆம் ஆண்டின் பிப்ரவரி, 19 ஆம்தேதியைக்- குறிக்கின்றன. சப்ளிமெண்டரி மானுஸ்கிரிப்ட் என்ற துணைச்சேர்க்கை கையெழுத்துப் பிரதியும், துந்துபி வருஷத்தையே குறிக்கின்றது. தனது வரலாற்று ஆவணங்களைத் தவிர, வேறெதையும் ஏற்காத ஹிஸ்டரி ஆஃப் தி கர்நாடகா கவர்னர்ஸ் ஆவணம்கூட, குறிப்பிட்ட சம்பவத்துக்கு வெகுஅருகிலேயான தேதியைக் குறிப்பிடுகின்றது. அது, திருமலை நாயக்கரின் பதவியேற்பை, துர்மதி ஆண்டு என்று வரையறை செய்கின்றது. துர்மதி, துந்துபிக்கு முந்தைய ஆண்டு. வரலாற்றுப் போக்கில் குறிப்பிடத்தகுந்த இந்தத் தனிச்சிறப்பு முக்கியமான ஆதாரமாகும்.

ஆனால், கல்லில் செதுக்கப்பட்டிருக்கும் 'வெட்டு' ஆதாரங் களுடன், 'எழுத்தில்' வடிக்கப்பட்ட வரலாற்று ஆவணங்களிலுள்ள தேதிகள் ஒத்துப்போகவில்லை. சாகா சம்வதியின், 1547 ஆம் ஆண்டு மற்றும் கொல்லம் ஆண்டு அல்லது மலையாளம் ஆண்டின் 798 -ல் வெட்டப்பட்ட முத்துவீரப்ப நாயக்கரின் கல்வெட்டுகள், ருத்ரோத்கரி ஆண்டின் வைகாசி, 15[1] ஆம்நாளை பதவியேற்பு நாளாகச் சுட்டுகின்றன.[1] மெட்ராஸ் எபிகிராபிகல்'ஸ் ரிப்போர்ட்[2] ஆவணங்கள், சாகா சம்வதி குறிப்பிடும் தேதியை சரியானதென்று ஏற்றுக்கொண்டுள்ளன. மற்ற வரலாற்றுத் தரவுகளை அது புறந்தள்ளிவிட்டது. கொல்லம் ஆண்டும் காலவரன்முறை சுழற்சியிலுள்ள ஆண்டும் ஒத்துப்போகின்றன. கொல்லம் ஆண்டு

798 என்பது, ஆகஸ்ட் 1622 முதல், ஆகஸ்ட் 1623 வரையிலானது. காலவரன்முறைச் சுழற்சி ஆண்டான ருத்ரோத்கரி, 1623 ஏப்ரலில் தொடங்கி, 1624 ஆம் ஆண்டு ஏப்ரலில் முடிவதாக இருக்கின்றது. வைகாசி 15 என்பது, மே மாதம் 27 ஆம்தேதியாக இருக்கலாம். அந்தவகையில் கொல்லம் மற்றும் காலவரன்முறைச் சுழற்சி ஆண்டுகளின்படி கல்வெட்டுகளில் காணப்படும் அந்தத்தேதி, 1623ஆம் ஆண்டு மே மாதம் 27. சாகா சம்வதி ஆண்டின் தேதி மட்டும் இதனுடன் ஒத்துப்போகவில்லை. முன்னுரிமையின் அடிப்படையில் சாகா சம்வதியின் தேதியை நம்பிக்கையில் குறிப்பிடுவது, அத்தனை உசிதமானதல்ல. நம்பிக்கைத் தவறுதலில் இது ஒரு எடுத்துக்காட்டு. அந்தவகையில் சாகா சம்வதி கணிப்பைவிட, காலவரன்முறைச் சுழற்சி முறையில்வரும் கணிப்பு, சரியானதாக இருக்கின்றது. முத்துவீரப்ப நாயக்கரின் மற்றொரு கல்வெட்டு[3] சாகா சம்வதி 1545 ஆம் ஆண்டைக் குறிக்கின்றது. அதாவது, ஏப்ரல் 1623 முதல் ஏப்ரல் 1624 வரை. அவரது மூன்றாவது கல்வெட்டொன்று,[4] சாகா சம்வதி 1545ஆம்ஆண்டையும் கொல்லம் ஆண்டு 799-ன் ருத்ரோத்கரி வருஷம் கார்த்திகை, 16 ஆம்நாளையும் சுட்டுகின்றன. காலவரன்முறைச் சுழற்சி ஆண்டில் அது, தோராயமாக நவம்பர், 30. இக்கல்வெட்டுகள் எல்லாமே, 1623 ஆம் ஆண்டு பிப்ரவரி 19 ஆம்நாள், திருமலை நாயக்கர் பதவி யேற்றார் என்னும் வரலாற்றுத் தரவுகளிலிருந்து முரண்படுகின்றன. சாகா சம்வதி, 1545 ஆண்டின் கல்வெட்டு ஒன்று,[5] நாயக்கரின் அமைச்சர் ராமையாவைப் பற்றிப் பேசுகின்றது. அதில், திருமலை நாயக்கரின் பதவியேற்பு, 1623ஆம் ஆண்டின் ஏப்ரலுக்கு முந்திப்போகவில்லை என்று கூறுகின்றது. காலவரன்முறைச் சுழற்சியில் இது, 1633-34ஆம் ஆண்டின் ஸ்ரீமுகாவைக் குறிக்கின்றது. கூடுதலாக, 1633 ஆம் ஆண்டுவரை திருமலை நாயக்கர் குறித்து எந்தவொரு கல்வெட்டும் இல்லை. 1630ஆம் ஆண்டின் கல்வெட்டொன்று உறுதியற்று, பெரிய நாயக்கரையன்[6] என்று பகர்கின்றது. 1629ஆம் ஆண்டின் தாடிக்கொம்பு கல்வெட்டு, ரங்காச்சாரி குறிப்பிடுவதுபோல, திருமலை நாயக்கரைப் பற்றியது அல்ல.[7] 1634ஆம் ஆண்டில் எழுதப்பட்ட இரண்டாம்வேங்கடனின் கூனியூர் ஏடுகள்தான், திருமலை நாயக்கர் குறித்து, முதல்முதலாய் வெளியான ஆதாரமாகும். இந்தக் கல்வெட்டாதாரம் நடைமுறையில், ஒருமித்தக் கருத்துடன் வரலாற்று ஆவணங்களில் குறிக்கப்பட்டுள் ளத் தரவுகளுடன் இறுதிசெய்யப்படவில்லை.

திருமலை நாயக்கரின் பதவியேற்புத் தேதி குறித்த சில குறிப்புகளை, இயேசு சபையின் ஆவணங்கள் சுட்டுகின்றன. 1626 ஆம்ஆண்டில் அண்டோனியோ விகோ[8] எழுதியக் கடித மொன்று,

'நாட்டில் அதிகாரமிக்க இளவரசராக இருந்தாரென்று' வீரப்ப நாயக்கரை சிலாகிக்கின்றது. ப்ரோயன்ஸாவின் 1559[6]ஆம் ஆண்டின் கடிதம்,[9] 'முப்பதுஆண்டுகள் ஆட்சிசெய்த திருமலை நாயக்கர் இந்த ஆண்டில் இறந்ததாக' விளம்புகின்றது. அந்தவகையில் அந்தக்கடிதம், 'அவர், 1629 ஆம்ஆண்டில் பதவியேற்றதாகக் குறிப்பிடுகின்றது. 1628 ஆம்ஆண்டில் எழுதப்பட்ட **மஜ்லிஸ-ஸ்-சலாத்துன்**[10] எனும் தனது நூலில், முகம்மத் ஷரீப் ஹனபி, 'ஒருமுறை, தான் மதுரைக்கு வந்தபோது, நாட்டின் ஆட்சியாளர் இறந்து சிலநாட்கள் ஆகியிருந்தன' என்று குறிப்பிட்டிருக்கின்றார். இந்தக்குறிப்பை சீவெல்,[11] 1609ஆம் ஆண்டில் முத்துவீரப்ப நாயக்கர் இறந்ததை அவர் குறிப்பிடுவதாகக் கருதுகின்றார். அந்தச் சம்பவத்தைதான் முகம்மத் ஷரீப் ஹனபி குறிப்பிடுகிறார் என்றால், அவர் எதையோ குறிப்பாகச் சுட்டுகின்றார் என்று பொருள். அவர், தனது படைப்பைத் தொகுக்கும் பணிக்கு, நீண்டநாட்கள் மதுரையில் தங்கியிருக்கவில்லை என்பதும் உறுதியாகின்றது. அப்படி அவரதுபடைப்பில் பேசப்படும் மரணம், ஒருவேளை முத்து வீரப்ப நாயக்கருடையதாக இருக்கலாம். அது, 1627 அல்லது 1628ஆம் ஆண்டின் தொடக்கத்தில் நடந்திருக்கலாம்.

இந்த ஆராய்வுகளின் அடிப்படையில் திருமலை நாயக்கரின் பதவியேற்பு, சந்தேகங்களுக்கு அப்பாற்பட்டு நிரூபிக்கப்பட வில்லை. 1627 ஆம்ஆண்டில் முத்துவீரப்ப நாயக்கரின் இறப்புக்கு முன்பே அவர் ஆட்சியாளரானதும், நடந்திருக்க முடியாதக் காரியமும் அல்ல. திருமலை நாயக்கர் 1623 அல்லது 1624ஆம் ஆண்டிலேயே, மதுரையின் ஆட்சியாளராக ஆகி யிருக்கமுடியும். இயேசு சபையின் கடிதங்கள், 'அந்தநேரத்தை' எளிதில் புரிந்து கொள்ளும்படி விளக்குகின்றன. அதனாலேயே அவை, குத்துமதிப் பாக முப்பதுஆண்டுகாலம் என்று வரையறை செய்கின்றன. அதனை வரலாற்றின் பக்கங்கள், 'நிழல்அரசரின், மெய்யான ஆட்சியை'க் கணக்கில் எடுத்துக்கொள்கின்றன. மற்றொரு ஆய்வு, வரலாற்றுத் தரவுகளின் அடிப்படையில் கணித்து, முத்துவீரப்ப நாயக்கரின் ஆட்சிகாலம் 1609 முதல் 1629 வரையில், இருபத்தோரு ஆண்டுகள் என்று நயந்துகூறுகின்றது. இந்தச்சூழ்நிலைகளைக்கொண்டு பார்க்கும்போது, திருமலை நாயக்கர் தனக்கு முந்தையவரின் பெயரில் 1623-24ஆம் ஆண்டிலிருந்தே ஆட்சிசெய்து வந்திருக்கலாம் என்று அறியமுடிகின்றது. பின்னர், தனது சொந்த ஆட்சியுரிமையை அவர், 1627-28 ஆம்ஆண்டில் பெற்றிருக்கலாம். எந்தவகை யாயினும், நெல்சன் குறிப்பிடும் தேதியான 1623ஆம் ஆண்டின் ஜனவரியை, குறைந்தபட்சம் அதேஆண்டின் பிப்ரவரி, 19ஆம் தேதிக்கு மாற்றப்பட வேண்டியுள்ளது. அதற்கு அவர்,

பிரயோன்ஸாவின் 1659ஆம் ஆண்டின் கடிதத்தையும், பிரஞ்சு ஆவணங்களில் குறிக்கப்பட்டுள்ள வாசகங்களான முப்பது ஆண்டுகள் ஆட்சிசெய்தபின், திருமலை நாயக்கர் மரணம் அடைந்தார் என்ற தகவலையும் மேற்கோள் காட்டுகின்றார்.[12] வரலாற்றுத் தரவுகளில் இடம்பெற்றுள்ளத் தேதிகளை ஏற்பதற்கு அவர் மறுக்கின்றார். அவராவது, முரண்பாடுகளை குறைந்தபட்சம் வெளிப்படுத்துகின்றார். ரங்காச்சாரியோ 1623 ஆம்ஆண்டையும் தேதியையும் சரியெனக் கருதி, அமைதிகாக்கின்றார்.

**தலைநகர் மாற்றம்** - திருமலை நாயக்கர் அரியணை ஏறியபோது, திருச்சினாப்பள்ளி தலைநகரமாக இருந்துவந்தது. அதை அவர், மதுரைக்கு மாற்றினார் என்பதை வரலாற்றுத் தரவுகளும் இயேசு சபையின் கடிதங்களும் தெளிவாக்குகின்றன. இந்த மாற்றத்துக்குக் காரணமாக, அரசருக்கிருந்த நீர்கோர்வை நோயைக் குணப்படுத்தும் ஆற்றல் மதுரைக் கடவுள்களுக்கு மட்டுமே இருந்தது என்று, வரலாற்றுத் தரவுகள் கூறுகின்றன. அந்தக்கதையை நெல்சனும் ரங்காச்சாரியும் முழுநீள அளவில் விவரித்துள்ளனர். அவர்கள் வரலாற்றுத் தரவுகளோடு ஒத்துப் போகின்றனர். இருவருமே, தலைநகராக அல்லது நாயக்கர்களின் தனியாட்சிப் பகுதியாக திருச்சினாப்பள்ளியைக் கொண்டதற்கு, பாதுகாப்பு மற்றும் பருவநிலையை முக்கியக் காரணங்களாகப் பேசுகின்றனர். ஆனால் தலைநகர் தேர்ந்தெடுப்பில் அது, வரலாற்றுச் செல்வாக்கு மிக்கது என்பதை அவர்கள் ஏற்கவில்லை. பின்னாளில் இரண்டு இடங்களிலும் நிலவிய சங்கடங்களால் அலைக்கழிப்பும் இருந்தது.[13] பதினேழாம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதிவரை போராட்டங்களுக்கு இடையிலும் மதுரை எப்படி உயிர்ப்புடன் இருந்தது என்பதை இருவருமே விவரிக்க முயலவில்லை. போர் நடக்கும் பகுதிக்கு, திருச்சினாப்பள்ளி வெகுஅருகிலிருந்தது. தலைநகர் வீழ்ச்சியடைந்தால், எல்லாமே கைவிட்டுப் போய்விடும் என்ற முன்யோசனையும் இருந்தது. அதேவேளையில், ஒட்டுமொத்த நாட்டுக்கும் மத்தியில் அது, ஆட்சிசெய்வதற்கு ஏதுவாய் அமைந்திருக்கவில்லை. திருச்சினாப் பள்ளிக்குத் தலைநகரை மாற்றிய முந்திய ஆட்சியாளர்களின் மடமை, அனுபவமாக ஆகியிருந்தது. ஏராளமாகப் பொருட் செலவும் ஆகியிருந்தது. தலைக்கோட்டை போருக்குப் பின்பு விஜயநகரப் பேரரசு, தனது அதிகாரத்தையும் கௌரவத்தையும் இழந்துகொண்டே வந்தது. பேரரசின் வடபுறத்திலுள்ள சில பகுதிகள் மற்றவர்களால் கைப் பற்றப்பட்டுவிட்டன. விஜயநகரப் பேரரசின் பிரதிநிதித்துவம் வேலூரில் இருந்துவந்தது. பேரரசுடன் முரண்பட்டு நிற்கும்போது, எளிதில் திருச்சினாப்பள்ளியைக்

கைப்பற்றிவிடும் அபாயமும் இருந்தது. ஐரோப்பியப் போரின்போது, பிரான்சின் தலைநகர் மாற்றம் செய்யப்பட்டதன் விளைவாகத் தலைநகரின் அபாயம், தேசம் முழுவதுக்குமான பாதகமாக ஆனது. மதுரை, சமூக நாகரிகத்தின் மையமாகவும், எல்லாவகையிலும் தேசத்தின் இதயப்பகுதியாகவும் இருந்துவந்தது. இந்துவாழ்வுமுறையைப் போதிக்கும் சிறப்பையும் பெற்றிருந்தது. மதுரைக்கு எதிரான நிலையையே பேசிவந்த நெல்சனால், அதன் சமகால வளர்ச்சியைத் தாங்கிக்கொள்ள முடியாதிருந்தது.

திருமலை நாயக்கர், பெரும்தகுதிகளைக்கொண்ட அரசன் என்று நம்புவதற்கு சற்றே கடினமாக இருக்கின்றது. அரசின் தலைநகர் உள்ளிட்ட முக்கியமான விஷயங்களில், நிலையான முடிவெடுக்க முடியாது, தடுமாற்றம் நிறைந்தவராக இருந்தார். அனுபவ முதிர்ச்சி ஏதுமில்லாததால், பெரும்பாலும் தனக்குமுன்பு ஆட்சியிலிருந்த வர்களின் செயல்பாடுகளைத் தொடர்பவராகவே நடந்து கொண்டார். விஜயநகரப் பேரரசுடனான உறவு நடவடிக்கையில் தனது தலைநகரை திருச்சினாப்பள்ளியிலிருந்து இன்னும் உள்புறமாக மாற்றிக்கொண்டது மட்டுமே அவரது சொந்த நடவடிக்கை. உண்மையாகவே, அவர் ஆட்சிசெய்ய வாய்ப்பு அமைந்தபோது, மையமான ஓரிடத்திலிருந்துகொண்டு, தன்னைச்சுற்றி செல்வாக்கு வளர்ந்திருக்க வேண்டும் என்பதை உணர்ந்தவராக அவர் இருந்தார். அந்தக்காலத்தில் பயணம் என்பது மிகவும் கடினமான ஒன்றாக இருந்ததை ஒப்புக்கொண்டே ஆகவேண்டும். அவரது விருப்பமாக இருந்த இந்து மதத்தின் மீதான தணியாத பாசம் அவரை வழிநடத்தி, புராதன நகரத்தில் அமர்ந்திருக்கும் கடவுள் சுந்தர்ரேஸ்வரரை நோக்கி நகர்த்தியது. திருமலை நாயக்கரின் மதக்கட்டுமான அதீத ஆவல், அவர் மீது குற்றம்சாட்டும் எண்ணமுள்ளவர்களுக்கு புதியகதைகளை உருவாக்க வாய்ப்பாக அமைந்தது. இதுபோன்ற கட்டுக்கதைகள் வரலாற்றுத் தொடர்புடைய உந்துதல்களை திணறடித்து விடுகின்றன. இறைமை உறுதி மறுப்புக் கோட்பாட்டைக் காட்டிலும் ஏமாளித்தனம் குறைந்த ஆபத்தைத் தருவதாக இருக்கின்றது.

தலைநகரை மாற்றியது தொடர்பானத் தேதியை, மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி[14] அக்ஷய ஆண்டின் சித்திரை மாதத்தைக் குறிப்பிடுகின்றது. அது, 1626ஆம் ஆண்டின் ஏப்ரல் - மே மாதம். ரங்காச்சாரி வழக்கம்போல டெய்லரின் மொழிபெயர்ப்பைப் பின்பற்றுகின்றார். அதன்படி, அவர் கருத்து 1623ஆம் ஆண்டிலேயே[15] நிற்கின்றது. நெல்சன், ‘முடிசூட்டிக்கொள்வதற்கு திருமலை மதுரை வருவதற்குமுன்பு, அவரது அரசவை திருச்சினாப்பள்ளியில் பத்து அல்லது பன்னிரெண்டு ஆண்டுகள்

நடந்தது' என்று குறிப்பிடுகின்றார்.[16] அதன்படி, மதுரை தலைநகராக மாறியது, 1635ஆம் ஆண்டில்தான். இவையெவையுமே திருமலை நாயக்கரின் அதிகாரம் குறித்து குறிப்பிடவேயில்லை. 1624ஆம் ஆண்டின் இயேசு சபையின் கடிதமொன்று,[17] 'திருச்சினாப்பள்ளி எப்போதும்போல நாயக்கரின் ஊராக இருந்தது' என்கின்றது. 1640ஆம் ஆண்டின் மற்றொரு கடிதம்,[18] 'நாயக்கர் திருச்சினாப்பள்ளி யிலேயே வசித்தார்' என்கின்றது. மூன்றாவதாக, 1644ஆம் ஆண்டின் கடிதமொன்று, 'நாயக்கரின் குடியிருப்பாக மதுரை இருந்தது' என்கின்றது. இந்தக் குறிப்புகளைவைத்துப் பார்க்கும்போது, தலைநகர் மாற்றம் 1640ஆம் ஆண்டுக்கும் 1644ஆம் ஆண்டுக்கு மிடையில் நடந்திருக்கும் என்று தெரியவருகின்றது.[19] 1634 ஆம் ஆண்டுமுதல் 1644 ஆம் ஆண்டுவரையிலான திருமலை நாயக்கரின் கல்வெட்டுகள் கூனியூர், ஆலடியூர், கபிலமலை, மேலாம்பூர், வேம்பன்குடி, திருப்பலாத்துறை, திருமுருகன் பூண்டி மற்றும் புதூர் ஆகிய இடங்களிலிருந்து கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் பெரும்பாலானவை மதுரை, ராம்நாட் மற்றும் தின்னவேலி மாவட்டங்களிலிருந்து கிடைத்தவை. இவற்றிலிருந்து தலைநகர் மாற்றம் குறித்த யூகங்கள் அனுமதிக்கப்படுகின்றன. நெல்சனின் கருத்து கல்வெட்டு ஆதாரங்களுடன் ஒத்துப்போகின்றன.

**தொடக்கக் காலம்** - நெல்சனின் கூற்றுப்படி திருமலை நாயக்கர் பதவியேற்றதும் முதல் நடவடிக்கையாக, ராஜ்ஜியத்தின் பாதுகாப்பில் அதிக அக்கறை எடுத்துக்கொண்டார். அவரது நோக்கம் சுதந்திரமாகச் செயல்படுவதாக இருந்தது. இயேசு சபையின் கடிதங்களுக்கு ஆசிரியரான பெர்ட்ராண்டின் கணிப்புகளை, அப்படியே நெல்சன் ஆதாரங்களாக ஏற்றுக் கொள்கின்றார்.[20] 'நாயக்கர் இறந்ததும் அவரது மகன் (சகோதரர்) திருமலை நாயக்கர் ஆட்சிப்பொறுப்புக்கு வந்தார். மதுரையை ஆண்ட நாயக்க அரசர்களுள் அவர் புகழ்மிக்கவராகக் கருதப்படு கின்றார். பின்னவர், அப்படியே தனது தந்தையின் (சகோதரர்) திட்டவடிவங்களைச் செயல்படுத்தினார். கர்நாடிக்கின் தலைநகர் பிஸ்நகரின் அதிகாரத்தைப் புறந்தள்ளினார். அதனால் ஏற்படும் விளைவுகளைத் தடுக்க, தனது நிலையை வலுப்படுத்த வேண்டியிருந்தது. இதனடிப்படையில், தனது ஆட்சிப்பரப்பின் எல்லைப்புறத்தில் இரண்டுகோட்டைகளைக் கட்டினார். 30,000 வீரர் களைக்கொண்ட படையை வலுப்படுத்தினார். இந்தத் தயாரிப்புகள் பல்வேறு இயக்கங்களைக் கிளர்ந்தெழச் செய்தன. நாடெங்கும் அமைதியின்மை நிலவியது'. ஆயினும் இயேசு சபையின் கடிதத்தில் இடம்பெற்றுள்ள இந்த சங்கதிகளை முழுவதும் சரியென்று நெல்சன் சொல்லவில்லை. தொடர்ந்து அவர்,

'விஜயநகரப் பேரரசின் பிடரியை முதல்தடவையாக உலுக்கிய நபர், திருமலை'[21] என்று சிலாகிக்கின்றார். அதற்குள் பொதிந்துள்ள அர்த்தம் தெளிவுபடுத்தப்படவில்லை. மதுரை நாயக்கர்களில், முதல்முறையாக திருமலை நாயக்கர் சுதந்திரமானவராக தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டவர் என்று நெல்சன் குறிப்பிடுவாரே யானால், அவரது பார்வையை ஏற்றுக்கொள்ளலாம்தான். ஆனாலும் முத்துவீரப்ப நாயக்கர் அதேதிசையில் பயணப்பட்டது மறந்துவிடக்கூடியது அல்ல.[22] ஆனால் ரங்காச்சாரி, இன்னும் ஒருபடி மேலே போகின்றார். அவர் சொல்கின்றார், 'இதுவரையில் எந்தவொரு மாகாணத் தலைவரும் தனது மாகாணப் பரப்பை, அரசதிகாரமாக மாற்றிக் கொள்ளவில்லை' என்று. இந்தப் பார்வை அவரது முந்தையக் குறிப்பான, '1610 ஆண்டில் மைசூரின் ராஜா உடையார் ஸ்ரீரங்கப்பட்டிணத்தைக் கைப்பற்றினார். அந்தவகையில் பேரரசின் அரசப் பிரதிநிதித்துவத்தை முடிவுக்கு கொண்டு வந்தார்'[23] என்று அவரால் சொல்லப்பட்ட ஒன்றினாலேயே, மறுதலிக்கப் படுவதாக இருக்கின்றது. திருமலை நாயக்கர் பதவியேற்பதற்கு முன்புகூட ரங்கச்சாரி, 'வலிய சண்டைக்கு அழைக்கின்ற பேராவலுடைய மைசூர் அரசாங்கம்' என்று பேசுகின்றார். மைசூர் ஆட்சியாளர்களிடமிருந்து தற்காத்துக்கொள்ள, திருமலை நாயக்கர் அப்படி நடந்துகொண்டார் என்பதை அவரது சொற்கள் தெளிவு படுத்துகின்றன. எல்லாவற்றுக்கும் மேலாக, இயேசு சபையின் ஆதாரமொன்று, மதுரைக்கு வெகுமுன்பே விஜயநகரப் பேரரசிலிருந்து விலகி, மைசூர் சுதந்திரமாகச் செயல்பட்டது என்பதை, நிரூபணம் செய்கின்றது. 1659ஆம் ஆண்டின் பிரயோன்ஸா எழுதியக் கடிதம்,[24] 'விஜயநகரப் பேரரசிலிருந்து மைசூர் வெகுமுன்பே துணைநிலைமையிலிருந்து விலகிக்கொண் டது' என்றும், 'ஒருகட்டத்தில் தனது முடியாட்சிக்குக் கீழிலிருந்த மைசூரிடம் உதவிகேட்க வேண்டியநிலை பேரரசுக்கு எழுந்தது'[25] என்றும் பேசுகின்றது. திருமலை நாயக்கரின் முயற்சிக்கு முன்பே, மைசூர் சுதந்திரத்தைப் பெற்றுவிட்டது என்பது ஐயத்திற்கிட மில்லாமல் தெளிவாகிவிட்டது. முத்துவீரப்ப நாயக்கரின் கொள்கைகளை திருமலை நாயக்கர் அரசாட்சியில் கடைப்பிடிப்பதும்கூட, மைசூர் நடந்துகொண்ட விதத்தின் பிரதிபலிப்புதான்.

தனது ஆட்சியின் தொடக்கத்தில் திருமலை நாயக்கர், விஜயநகரப் பேரரசருடன் போருக்குத் தயாரானார் என்பதற்கான ஆதாரங்கள் எதுவுமில்லை. அவர் மிகக்கவனமாக தனது பாதுகாப்பைப் பலப்படுத்திக்கொண்டார். பின்னாளிலும்கூட, அவர் ஆட்சியில் ஒழுங்கில்லாதவராகவோ அல்லது வலியச்சென்று தாக்குதல்

நடத்தும் நபராகவோ இருக்கவில்லை. ஆட்சிக் காலத்தின் தொடக்கத்தில், திருமலை நாயக்கர் தஞ்சாவூர் மற்றும் செஞ்சியுடன் ஓர் இணைவைக் கொண்டிருந்தார் என்று ரங்காச்சாரி சொல்லி வைக்கின்றார். அது, இயேசு சபையின் மூலக்கடிதங்களை அவர் பயன்படுத்திக் கொள்ளவில்லை என்பதைக் காட்டுகின்றது. பிரயோன்ஸாவின் கடிதம், அப்படியொரு இணைவுக்குழு புதிய அரசராக - இரண்டாம் வேங்கடனின் மரணம் 1642ஆம் ஆண்டு நேர்ந்து, மூன்றாம் ஸ்ரீரங்கர் பதவியேற்றதும் உருவாகியது என்று குறிப்பாகப் பேசுகின்றது. மேலும் புதிய அரசர், தான் பதவியேற்றக் கையோடு திருமலை நாயக்கருக்கு எதிராகப் போர் தொடுத்தார் என்றும் கூறுகின்றது.[26] அதற்கானத் தகுந்தக் காரணங்கள் திருமலை நாயக்கருக்குச் சொல்லப்படவில்லை. திருமலை நாயக்கர் மைசூரிலிருந்து வலுவானப் படையெடுப்பையோ அல்லது விஜயநகரப் பேரரசிலிருந்து கடும் நடவடிக்கையையோ எதிர்பார்த்தார். தெளிவான நோக்கம் எதுவுமில்லாமலேயே அந்தக் கால கட்டம் ஒருபோருக்கான ஆயத்தத்தில் இருந்தது. விஜயநகரப் பேரரசு தொடர்பான திருமலை நாயக்கரின் கொள்கைகள், சூழலின் அழுத்தத்தால் உருவாக்கப்பட்டவை.[27] அவர் தனது மூல நோக்கமாக, திறைசெலுத்தாமல் அவ்வப்போது பரிசுகளை வழங்கி, பேரரசரை மகிழ்ச்சிப்படுத்துவது என்று எண்ணியிருந்தார். ஆனால், அவரால் இந்த உறுதியற்ற உறவை, நீண்டநாட்களுக்கு இழுத்துச்செல்ல முடியவில்லை.

**மைசூர் போர்** - திருமலை நாயக்கரின் ஆட்சிக் காலத் தொடக்கத்தில் மைசூர், மதுரை மீது படையெடுத்ததையும், பதிலடியாக மதுரை, மைசூர் மீது படையெடுத்ததையும் மெக்கன்ஸி கையெழுத்துப் பிரதிகள் பதிவு செய்திருக்கின்றன.[28] சேதுபதிகள் மீது திருமலை நாயக்கர் போர்த் தொடுப்பதற்கு முன்பு, இந்தநிகழ்வுகள் நடந்திருக்கலாம். நெல்சன் இதுகுறித்தக் காலத்தை ஏனோ பதிவிடவில்லை.[29] ரங்காச்சாரி, அதைக் குத்துமதிப்பாக, 1625ஆம் ஆண்டு என்று பதிவிடுகின்றார்.[30] அதுபோல, மைசூர் படையெடுப்புக்கானக் காரணமும் குறிப்பிடப்படவில்லை. ஆட்சிப் பரப்பை விரிவுபடுத்திக்கொள்ளும் பேராசையுடன் அலைந்த சாம்ராஜ் உடையாருக்கு போர்த் தொடுப்பதற்கான சாக்குப்போக்குகள் எதுவும் தேவைப்பட்டிருக்காது. அல்லது நெல்சன் குறிப்பிடுவதுபோல, முத்துவீரப்ப நாயக்கர் காலத்தில் மதுரை மீது படையெடுத்துத் தோல்விகண்ட தன் முன்னோருக்கு ஏற்பட்ட இழுக்கைத் துடைத்து, தன் ஆளுமையை நிலைநிறுத்திக் கொள் ளும் எண்ணமாகவும் இருக்கலாம். மைசூர் தளபதி ஹரகர (கரசூர?) நந்திராஜா தலைமையிலான படை திண்டுக்கல்லை

நோக்கி முன்னேறியது. அங்கே காத்துக்கொண்டிருந்த மதுரைத் தளவாய் ராமப்பையரும், கன்னிவாடி பாளையக்காரர் ரங்கப்ப நாயக்கரும் அப்படையை அடித்துத் துவைத்து விரட்டினர். மட்டுமல்லாமல், அவர்களைப் பின்தொடர்ந்துசென்று மைசூர் தலைநகரத்தை முற்றுகையிட்டனர். நெல்சனும் ரங்காச்சாரியும் வரலாற்றின் பக்கங்களில் ராமப்பையரைப் பற்றி குறிப்பாக, அவரது தீரம் மற்றும் கீழ்ப்படியாமையை விரிவாகப் பேசுகின்றனர். ஆனால் அவையெல்லாமே, முடிவில் அவருக்கு எதிரானவையாகத் திரும்ப வில்லை. வெற்றியுடன் நாடு திரும்பிய ராமப்பையரை, திருமலை நாயக்கரே முன்னின்று வரவேற்றார். 1633ஆம் ஆண்டின் ஸ்ரீமுகா கல்வெட்டு, கீழ்குளத்தூர் கோவிலுக்கு அவர் நில தானம் செய்தது தொடர்பான பதிவைக் கொண்டிருக்கின்றது. அதில், மைசூருக்கு எதிரான நடவடிக்கைகளில் வெற்றிபெற்றதும் விஸ்வநாத நாயக்கரின் அமைச்சராக (திருமலை நாயக்கர்) அவரைப் பற்றியத் தரவுகள் நிறையவே அறியக் கிடைக்கின்றன.[31]

**திருவாங்கூர் படையெடுப்பு** - விஜயநகர இளவரசர் இராமராஜ வித்தலாவின் திருவடிக்கு எதிரானப் படையெடுப்பி லிருந்து, அப்பேரரசுக்கு திறைசெலுத்தும்நாடாக திருவாங்கூர் மாறியதை, 1547ஆம் ஆண்டின் சுசீந்தரம் கல்வெட்டு பிரதிபலிக் கின்றது.[32] திருவாங்கூர், தனது முரட்டு நடவடிக்கைகளை கைவிட்டு, மதுரை நாயக்கர்களின் விசுவாசியாக மாறி, திறை செலுத்தி வந்ததையும் அது விவரிக்கின்றது. திருமலை நாயக்கரின் ஆட்சிக்காலத்தில், சுமூகமான அதன் உறவில் மீண்டும் குழப்பம் ஏற்பட்டது. வரலாற்றின் பக்கங்கள் இந்தக் குழப்ப விவகாரம் குறித்து எந்தப்பதிவையும் கொண்டிருக்கவில்லை. திருவாங்கூர் அரசர் உண்ணி கேரள வர்மாவின் கொல்லம் ஆண்டு 810, (மாசி) கும்பம் 22 ஆம்தேதியிட்ட ஆணை ஒன்று, (1635ஆம் ஆண்டின் மார்ச் மாதத் தொடக்கம்) அரசர் செய்த நிலவரிக் குறைப்பு ஒன்றை பதிவு செய்திருக்கின்றது. அவ்வரிக் குறைப்பு விவகாரமாகி, திருமலை நாயக்கர் படையெடுத்ததாகத் தெரிகின்றது.[33] 1631 ஆம்ஆண்டில் அரசப்பதவிக்கு வந்த திருவாங்கூர் அரசர் உண்ணி கேரள வர்மா,[34] முன்னோர்கள் மதுரை சாம்ராஜ்ஜியத்துக்கு செலுத்திவந்த வழக்கமானத் திறைகளைச் செலுத்த மறுத்து விட்டிருக்கின்றார். ஆயினும், படையெடுப்பின் உண்மையானக் காரணம், அப்போர் எவ்வாறு நடத்தப்பட்டது என்பதெல்லாம் பதிவாகவில்லை. மேற்குறித்த சம்பவங்கள் தொடர்பானக் குறிப்புகள் இப்படியாகத் தொடர்கின்றது: மங்களம் மற்றும் மணக்குடிக்கு இடையிலுள்ள ஊரைச்சேர்ந்த விவசாயிகள், கல்குளத்திலுள்ள எங்கள் இல்லத்துக்கு வந்துசெய்த முறையீடு.....

'நாட்டில் பேரிடர் ஏற்பட்டு பெருந்துன்பம் உருவாகியுள்ளது. 810ஆம் ஆண்டின் கன்னி மாதத்தில் பயிர்பச்சை ஏதும் நடவில்லை. திருமலை நாயக்கரின் படையெடுப்பால் பிசானம் காலத்து நடவையும் தொடங்க முடியவில்லை. வளர்ந்த பயிர்களும் வெக்கை நோயால் மடிந்துவிட்டன. புதிய நடவுக்குக் கையில் பணமில்லாமல் விவசாயிகள் துன்பத்தில் இருக்கின்றோம். அதனால் 810ஆம் ஆண்டு மாசிமாதம், 22 ஆம்நாளன்று விதிக்கப்பட்ட வரித் தொகையை தள்ளுபடிசெய்யக் கேட்டுக் கொண்டோம். அந்தத்தகவலை வடக்கு நாஞ்சில் நாட்டின் தெற்குப்பகுதியில் மேற்சொன்ன இடங்களிலுள்ள விவசாயிகளுக்கு முறையாகத் தெரிவிக்கப்பட்டது'. ஆகையால், திருமலை நாயக்கரின் படையெடுப்பு கொல்லம் ஆண்டு 810, கன்னி - கும்பம் (1634ஆம் ஆண்டின் அக்டோபருக்கும் 1635ஆம் ஆண்டின் மார்ச்சுக் கும்) மாதங்களுக்கிடையில் நடத்தப்பட்டது, தெளிவாகின்றது. இந்தத்தரவுகள் விஜயநகரப் பேரரசரின் உத்தரவுக்கிணங்க நடத்தப்பட்டது என்பதை, 1634 மே - ஜூனில் வெளியான இரண்டாம்வேங்கடனின் கூனியூர் ஏடுகள் உறுதிசெய்கின்றன.[35]

திருமலை நாயக்கரின் திருவாங்கூர் படையெடுப்பு வெற்றிகர மாக முடிந்திருக்கின்றது. அதனைக் கொண்டாடும்விதமாக, ஆலத்துரயூர் சிவன்கோவிலுக்கு நிலதானம் கொல்லம் ஆண்டு, 811 (1635) -ல் செய்திருக்கின்றார்.[36] இந்தத் தரவு உண்மையானதாக இருந்தால், நாஞ்சில் நாட்டு அரசன், சேதுபதிகளுக்கு எதிரானப் போரில் பங்கெடுத்திருப்பான். ராமப்பையர் அம்மானை எனும் செய்யுள் திரட்டு, திருவாங்கூர் போரில் திருமலை நாயக்கரின் வெற்றியைப் பற்றிப் பேசுகின்றது. இந்தச்செய்யுள் திரட்டில் மற்றொரு குறிப்பாக, மலையாள நாட்டை மதுரை வென்ற சேதியும் இருக்கின்றது. போருக்குப் பின்பான விளைவுகள் நீண்டகாலம் தொடர்ந்திருக்கின்றது. ஜான் நியோஹாப் என்னும் பயணி[37] 1664 ஆம்ஆண்டில் தனது குறிப்பாக, 'திருவாங்கூர் அரசன் பத்தாயிரம் நெக்ரோ (நாயர் வீரர்)களைக்கொண்ட காவல் படையொன்றை, பாதுகாப்புக்காக நிரந்தரமாக இங்கே வைத்திருந்தார். அந்தளவுக்கு மதுரை நாயக்கர்களின் அதிகாரம், மிரட்சியுடையதாக இருந்தது' என்கின்றார்.

**சேதுபதியினுடனான உறவு** - இராம்நாட்டின் தலைவராக கூத்தன் சேதுபதி, 1623 ஆம் ஆண்டில் பொறுப்பேற்றுக் கொண்டார். 1635 ஆம் ஆண்டுவரை அப்பொறுப்பிலிருந்தார். பின்னர் அவரது மகன் இரண்டாம் சடைக்கத் தேவர், அப்பொறுப்புக்கு வந்தார். இரண்டாண்டுகள் அமைதியாக கடந்துபோயின. இரண்டாம்

சடைக்கத் தேவரை, அவரது தந்தைக்கு சட்ட இசைவின்றிப் பிறந்த சகோதரனான 'தம்பி' என்பவன், சூழ்ச்சியான முறையில் மிரட்டத் தொடங்கினான். மதுரை நிர்வாகத்திடம் சென்ற தம்பி, தான் சேதுபதியாவதற்கான வகையில் அவர்களை நம்பவைக்க முயற்சித்தான். தளவாய், 'தம்பி' கொண்டுவந்த அந்த விவகாரத்தைக் கையில் எடுத்துக்கொண்டார். இரண்டாம் சடைக்கத் தேவருக்கு, மக்கள் செல்வாக்கும் அதிக அளவில் இருந்தது. திருமலை நாயக்கர் எதிர்நிலையிலிருந்தவனுக்கு ஆதரவளித்ததும், போர் தொடங்கிவிட்டது. சில வரலாற்றுத் தரவுகள், இரண்டாம் சடைக்கத் தேவர் தளவாய்க்குக் கீழ்ப்படியாததாலும், மதுரைக்கு செலுத்திவந்த திறையை நிறுத்திக்கொண்டதாலும் இப்போர் நடந்ததற்கானக் காரணங்களைக் கூறுகின்றன. இந்த விவகாரம் தொடர்பானக் கேள்விகள் அத்தனைத் தெளிவாக இல்லை. திருமலை நாயக்கரின் படையெடுப்பு நிகழ்வு, கட்டற்றக் கற்பனையின் வழியில் வெளிப்பட்டதாக இருக்கின்றது. ராமப்பையன் அம்மானையை ரங்காச்சாரி வெகு விமரிசையாகக் கவனப்படுத்துகின்றார்.[38] 'அந்த காலகட்டத்தின் வரலாற்று ஆவணங்களில் மிக முக்கியமான ஒன்று' என்று, அதை அறிமுகம் செய்கின்றார். அவர், அதிலுள்ளக் குப்பைக் கூளங்களை விலக்கி ஒழுங்குபடுத்தவில்லை. ஆனால் அதிலுள்ள கற்பிக்கப்பட்ட விஷயங்களைக் கொண்டாடுகின்றார். இவை, அதிக அளவிலானத் தரவுகளைக் கொண்டிருந்தாலும் அம்மானையுடன் ஒப்பிடும்போது, வரலாற்றுத் தரவுகள் ஆதாரம் நிறைந்தவையாக இருக்கின்றன. நெல்சன்[39] தனது ஆய்வுக்கு எதை ஆதாரமாகக் கொண்டார் என்பது தெரியவரவில்லை.

அந்தப்போரை நடத்துவதற்கு, தளவாய் ராமப்பையர் பொறுப்பேற்றுக் கொண்டார். அப்போருக்கு, ரங்கப்ப நாயக்கர் இரண்டாம்நிலைத் தளபதி. அவர்கள் பெரும்படையுடன் புறப் பட்டுவிட்டத் தகவல் கிடைத்ததும் சேதுபதி, இராமேஸ்வரம் தீவுக்குள் ஓடி ஒளிந்துகொண்டார். தலைமையற்ற அந்தப்பகுதியை சிலபல ஆட்டங்களுக்குப் பின்னால், தளவாய் ராமப்பையர் தனக்குக் கீழ்ப்படுத்தினார். ராணுவம் எளிதாக இராமேஸ்வரம் தீவுக்குள் சென்றுவருவதற்குத் தோதாக, பாம்பனில் ஒருபாலத்தைக் கட்டுவித்தார். அப்பாலத்திலேறிக் கடந்து, தீவுக்குள் அகதியாய் ஒளிந்துகிடந்த சேதுபதியைக் கைதுசெய்து, தலைநகருக்குக் கொண்டுவந்தார். இந்தப் படையெடுப்பில் மிகமுக்கியமானச் சம்பவமாக, போர்த்துக்கீசியர்களும் டச்சுக்காரர்களும் பங்கெடுத்துக்கொண்டது, போதுமான அளவுக்குத் தெளிவாக இருக்கின்றது. போர்த்துக்கீசியர்களின் ஆதரவை ஏற்று, திருமலை

நாயக்கர் அவர்களைப் படையில் சேர்த்துக்கொண்டார். ராமப்பையன் அம்மானையில் இடம்பெற்றுள்ள கடல்சண்டைக் குறித்தத் தரவுகள், போர்த்துக்கீசிய ஆவணங்களிலும் இயேசு சபையின் கடிதங்களிலும் உறுதிசெய்யப்பட்டுள்ளன. எப்.சி. தன்வாரின் குறிப்பொன்று,[40] தனித்தக் கருத்தாய் வெளிப்படு கின்றது: மறவர் நாட்டின் மீது படையெடுக்கும்போது தனக்கு உதவவேண்டும் என்ற கோரிக்கையை, போர்த்துக்கீசிய அரசரிடம் தெரிவித்து உதவிகோர, மதுரை நாயக்கர் தனது தூதுவராக ராமப்பையரை 1639ஆம் ஆண்டின் ஆகஸ்ட் 13 ஆம்தேதியன்று, போர்த்துக்கீசிய ஆளுநரிடம் அனுப்பிவைத்தார். உதவிக்குப் பிரதியாக, போர்த்துக்கீசிய அரசருக்கு பாம்பா(பாம்பன்)விலுள்ள உத்தியர் என்னும் கோட்டையைக் கொடுப்பதாக உறுதியளித்தார். அல்லது அரசர் விரும்பும் இடத்திலுள்ள ஒன்றைத் தருவதாகக் கூறினார். அவ்விடத்தில் ஒரு போர்த்துக்கீசிய தளபதி, 50 போர்த்துக்கீசிய வீரர்கள், 100 கப்பலோட்டிகள், 3000 பரதவர்கள், அவர்களைப் பேணுவதற்கு ஆகும் செலவையும் ஏற்பதாகக் கூறினார். மேலும், தனது செலவில் ராமநகரில் (ராம்நாட் அல்லது ராமேஸ்வரம்) ஒரு பேராலயமும், பாம்பன்-தொண்டிக்கு இடைப்பட்ட இடத்தில், ஏழு ஆலயங்கள் கட்டித்தருவதாகவும் உறுதிசெய்தார். நாட்டில், கிறிஸ்தவர்களாக மாறவிருப்பமுள்ள யாவரும் மதம் மாறிக்கொள்வதற்கு அனுமதி தருவதாகவும் சொன்ன திருமலை நாயக்கர், கைமாறு ஏதுமில்லாமல் இலங்கைக்குத் தேவையான ஆட்களையும் பொருட்களையும் போர்த்துக்கீசிய அரசருக்கு வழங்குவதாக உறுதியும் அளித்தார். டச்சுக்காரர்களுடனான உறவைத் துண்டித்தார். அவர்களைத் தனது எல்லைக்குள் அனுமதிக்கவில்லை. அதுபோல, தனது கப்பல்கள் டச்சு துறைமுகங்களுக்குள் போவதற்கு அனுமதிமறுத்திருந்தார்.[41] டச்சுக்காரர்களின் உதவியை சேதுபதிகள் பெற்றுக்கொண்டனர் என்று, ஏ. ரியா[42]வின் குறிப்பொன்று கூறுகின்றது.[43] 1659ஆம் ஆண்டின் பிரோயன்ஸாவின் கடிதம், போர்மீது ஆர்வம்கொண்ட மறவர்கள், நம்பிக்கையுடன் ஐரோப்பியர்களுக்கு எதிராகப் போரிட்டனர் என்கின்றது.[44]

மறவர் மீதானப் படையெடுப்பு முடிவுக்கு வருமுன்னமே ராமப்பையர் இறந்துவிட்டதாக, நெல்சன் கூறுகின்றார். தி ஹிஸ்டரி ஆஃப் கர்நாடகா கவர்னர்ஸ், மெக்கன்ஸி கையெழுத்துப் பிரதி[45] மற்றும் ராமப்பையன்அம்மானை ஆகிய இவையெவையுமே, நெல்சனின் கருத்துக்கு ஆதரவாக, எந்தவொரு வார்த்தையையும் பேசவில்லை. 1638ஆம் ஆண்டின், மே 27ஆம் தேதியக் கல்வெட் டொன்று, திருமலை நாயக்கருடன் சேர்த்து ராமப்பையரையும்

குறிப்பிடுகின்றது.[46] தன்வாரின் குறிப்புகளில் ஓரிடம், 'ராமப்பையர் 1639ஆம் ஆண்டின் ஆகஸ்ட், 13ஆம் தேதியன்று நல்லெண்ணத் தூதுவராக கோவாவுக்கு அனுப்பிவைக்கப்பட்டார்' என்று சுட்டுகின்றது. அந்தவகையில், சேதுபதிகளுக்கு எதிரானப் படையெடுப்பு வெற்றிகரமாக முடிந்த சில ஆண்டுகளுக்குப் பின்பே, அவர் இறந்தார் என்பது தெளிவாகின்றது. அவர் மரணமடைந்த நாள், துல்லியமாகத் தெரியவில்லை. ராமப்பையரின் பணிகுறித்து வெட்டுவித்தக் கல்வெட்டொன்று 1648ஆம் ஆண்டைக் குறிக்கின்றது.[47] அதைக்கணக்கிட்டால், அந்தக் குறிப்புக்கு சிலஆண்டுகளுக்கு முன்னர் அவர் இறந்திருக்கலாம் என்று தெரிகின்றது.

போர் வெற்றிகரமாக முடிந்திருந்தும், மறவர்களின் பிரச்சனை தீர்ந்தபாடில்லை. மக்கள், திருமலை நாயக்கரால் அமர்த்தப்பட்ட 'தம்பி'யின் ஆட்சியை ஏற்றுக்கொள்ள மறுத்தனர். தளவாய் சேதுபதியின் மைத்துனர்களான ரகுநாதத் தேவர் மற்றும் நாராயணத் தேவரின் வலுவான எதிர்ப்பை, 'தம்பி' எதிர்கொள்ள வேண்டியிருந்தது. நாட்டில் குழப்பங்களும் ஒழுங்கின்மையும் தொடர்ந்தன. ஆட்சிசெய்யும் தகுதியின்மையால், நாட்டுமக்களின் வெறுப்பிலிருந்து மீளவும் அமைதியை நிலைநாட்டவும் தெரியாமல், தம்பி தவித்துப்போனான். வேறுவழியில்லாமல், மீண்டும் திருமலை நாயக்கரின் உதவியை வேண்டி ஓடினான். ராம்நாட் தேசத்தின் உண்மை நிலவரத்தை அறியாமல், முதலில் உதவிசெய்திட்ட திருமலை நாயக்கர், தம்பியின் திட்டங்களுக்கு உடன்பட்டுப்போகும் மனநிலையில் இப்போது இருக்கவில்லை. தளவாய் சேதுபதியால் மட்டுமே துடிப்புமிக்க அந்த மக்களை, கட்டுப்பாட்டுடன் ஆட்சிசெய்ய முடியும் என்பதை திருமலை நாயக்கர் உணர்ந்திருந்தார். சிறையில் அடைக்கப்பட்டிருந்த அவரை விடுதலைசெய்து, சேதுபதியாக அங்கீகரித்து அனுப்பினார். குறுகிய காலத்திலேயே அமைதி திரும்பியது. இதுதொடர்பான 1641ஆம் ஆண்டின் வேம்பன்குடி கல்வெட்டு,[48] திருமலை நாயக்கருக்கு நன்றியைப் பகர்கின்றது. நிதானமாகவும் பெருந்தன்மையுடனும் சிலஆண்டுகள் ஆட்சி செய்த சேதுபதி, 1645 ஆம் ஆண்டு தம்பியால் கொல்லப்பட்டார். இதையடுத்து, உரிமைக் கோரும் அனைவரையும் திருப்திப்படுத்தும் யுக்தியில், திருமலை நாயக்கர் மறவர் நாட்டை மூன்றாகப் பிரித்து, ரகுநாதத் தேவர், அவரது சகோதரர் தனக்கத் தேவர் மற்றும் தம்பி ஆகிய மூவருக்கும் பிரித்துக்கொடுத்தார். அதில் தனக்கத் தேவர் இறந்ததும், தீர்வின் முடிவு மறுபடியும் கேள்விக்குறியானது. எதிர்பாராதவிதமாக, விரைவிலேயே தம்பியும் மரணமடைந்துவிட, நாட்டில்

அமைதிநிலவி, ரகுநாதத் தேவர் ஒட்டுமொத்த ராம்நாட் தேசத்தின் ஆட்சியாளர் ஆனார். காலம், சமீபத்திய சங்கதிகளின் காயங்களை மெல்லமெல்ல ஆற்றியது. அமைதியும், மக்களுக்கு பயனுள்ள நிலையான ஆட்சியும் கிடைத்தது. திருமலை நாயக்கரின் மிகச்சிறந்த விசுவாசியாகவும், வலுவான ஆதரவாளராகவும் ரகுநாதத் தேவர் மாறினார். பல தருணங்களில் நாயக்கரின் இசைவுக்கேற்ப தனது பணியினைச் செய்தார். முகம்மதியர்களின் திடீர்த்தாக்குதலை சமாளித்து, அவர்களைத் துரத்தியடித்தார்.[49] தின்னவேலியில், எட்டயபுர பாளையக்காரரின் தலைமையில் கலகம்செய்த பாளையக்காரர்களை நசுக்கினார். ரகுநாதத் தேவரின் இந்தச் சேவைகளை மெச்சிய திருமலை நாயக்கர், மன்னார்கோவில் அருகே நிலம்கொடுத்து மகிழ்வித்தார். முத்துக்குளித்தல் வருவாயில், ஒருபங்கையும் அவருக்கு அளித்தார். ராஜ்ஜியத்தின் பாதுகாவலர் என்ற பட்டத்தை வழங்கிய திருமலை நாயக்கர், ரகுநாதத் தேவர் தனது தலைநகரில், மதுரையைப்போலவே முழுஅளவில் தனிச்சிறப்புடைய நவராத்திரி விழாவைக் கொண் டாட அனுமதி வழங்கினார். ராமேஸ்வரத்தில் அவர்செய்த மேம்பாடுகள் ரகுநாதத் தேவருக்கு ‘ராமேஸ்வரத்தின் ஆயன்’ என்ற பெயரைப் பெற்றுத்தந்தது. அவரது அறிவார்ந்த செயல்பாடும், விசுவாசமும் அவரது அதிகாரத்தையும் கௌரவத்தையும் பன்மடங்கு உயர்த்தியது. அவருக்கு அளப்பரிய புகழைச்சேர்த்தது. அவையெல்லாமே மதுரை சாம்ராஜ்ஜியத்தின் பாதுகாப்புக்கு துணையாக அமைந்தன.

**பேரரசருடன் போர்** - பதவியேற்றதிலிருந்து 1634 ஆம் ஆண்டுவரையிலான நீண்டகாலம், விஜயநகரப் பேரரசரின் மேலுரிமை அரசை, திருமலை நாயக்கர் ஏற்றுக்கொண்டிருந்த தாகவே தெரிகின்றது. இதனை, இரண்டாம் வேங்கடனின் கூனியூர் ஏடுகள் தெளிவுபடுத்துகின்றன. கீழ்ப்படிதல், மிக இயல்பான தாகவும் இருந்துவந்துள்ளது. இயேசு சபையின் கடித ஆதாரங்களி லிருந்து, அவர் யதார்த்தமான சுதந்திரத்துடன் நடந்துகொள்ளும் நிலையைக் கைக்கொண்டிருந்தார். அதன்படி திறை செலுத்தவேண்டிய அவசியத்தைத் தவிர்த்தார். இந்த நோக்கம், அந்தநாட்களின் அரசியல் சூழலுக்கு ஏற்ப, நேரடியாக மேலோங்கிய ஒன்று. தொடக்கக் கால நாயக்கர் ஆட்சியில், பேரரசு மற்றும் அந்நியப் படையெடுப்பிலிருந்து பாதுகாக்கும் அம்சமாக இருந்தது. நாட்டின் பிறபகுதிகளிலிருந்து எழும்குழப்பங்களைத் தடுத்து, பாதுகாப்பையும் வழங்கிவந்தது. மைசூரின் நிலம் வெல்லும் பேராவல், பேரரசரால் கட்டுப்படுத்த முடியாதிருந்தது. பண்ணை நிலவுடமையாளர்களிடமிருந்து சாதகமான

அம்சங்களைப் பெறுவதற்கு வலுவற்றத் தன்மையும் பேரரசுக்கு உருவாகியிருந்தது. மதுரையிலிருந்து முறையாகத் திறைசெலுத்தப் படாதது, பேரரசுக்குத் தொந்தரவு தருவதாக அல்லது எரிச்சலூட்டு வதாக அமைந்துபோனது. தனது ஆட்சியையும் அதன் பரப்பெல்லையையும் பாதுகாக்க, தனது நாட்டின் வள ஆதாரத்தை மட்டுமே திருமலை நாயக்கர் நம்பியிருக்க வேண்டியதாக இருந்தது. திறைசெலுத்தும் எண்ணம் இல்லாதபோதும், இறையாண்மையை மதிக்கும் நாட்டம்கொண்டவராகவும், தனக்கு மேலிருந்த மேலாண்மையை ஏற்றுக்கொள்பவராகவுமே அவர் இருந்தார். ஒழுங்குமுறைத் தவறாத அளவில், கீழ்ப்படிதலுக்கு அவர் எந்தவொரு மறுப்பும் தெரிவிப்பவராக இருக்கவில்லை. அது குறித்து, 1655ஆம் ஆண்டின் கண்ணாடிபுத்தூர் கல்வெட்டு சான்றளிக்கின்றது.[50]

இரண்டாம்வேங்கடனின் கூனியூர் ஏடுகள்,[51] திருமலை நாயக்கரை மரியாதைக்குரிய சொற்களால் அபிஷேகிக்கின்றன. 'திருமலையின் பணிவான மற்றும் விசுவாசக் கோரிக்கையால், அந்த ஏடுகள் வெளியிடப்பட்டன' என்று, ரங்காச்சாரி அதனை எளிதாகக் கடந்துபோகின்றார். அந்த ஏட்டில், 'ஸ்ரீமத் திருமலேந்திரஸ்ய விக்ஞானாப்திமனுபாலையன்' என்று எழுதப்பட்டுள்ளது. அதன் உண்மைப்பொருள், 'தகுதிவாய்ந்த ஆட்சியாளர் திருமலாவுக்கு வளமான வாழ்த்துகளுடன்' என்று பொருந்திப் போகின்றது. இரண்டாம்வேங்கடனைப் பொறுத்த மட்டில் அவர் அறிவார்ந்த அனுபவமுள்ளவராகவும், சரியான முறையில் நடந்துகொள்பவராகவும் காணப்படுகின்றார். மேலும், விட்டுக்கொடுத்து நேரத்திற்கேற்றாற்போல அணுகுபவராகவும் இருந்திருக்கின்றார். அவரது மரணம், 1642 ஆம் ஆண்டு நேர்ந்தது. அவருக்குப்பின் பொறுப்பேற்ற மூன்றாம் ஸ்ரீரங்கர், முந்தைய வர்களின் கொள்கைகளுக்கு முடிவுகட்டினார். கண்டிப்பானவ ராகவும் உறவுமுறைகளில் பிடிப்பற்றவருமாக இருந்தார். முந்தையக் கொள்கைகளையெல்லாம் மூட்டைக் கட்டியவர், திருமலை நாயக்கர் மீது போர்த்தொடுத்தார். புதிய பேரரசர் தனக்கேயான உரிமைகளை முன்னிருத்தி, கடுவேகமாக தெற்குப் பகுதியை நோக்கி, பெரும்படையுடன் பீடுநடை போடத் துவங்கினார். அதற்குள் திருமலை நாயக்கர், தெற்குநோக்கி வரும் மூன்றாம் ஸ்ரீரங்கருக்கு எதிராக, தஞ்சாவூர் மற்றும் செஞ்சி நாயக்கர்களுடன் இணைவு செய்துகொண்டு, தயாராக இருந்தார். தஞ்சாவூர் நாயக்கரோ, நேச இணைவுப்படையின் திட்டங்களை வெளிப்படுத்தியதோடு, நம்பிக்கைக்கேடு செய்து, எதிராளியுடன் ஒட்டிக்கொண்டார். உடனே திருமலை நாயக்கர், தன்னைப்

பாதுகாத்துக்கொள்ளும் புதியமுடிவுகள் பற்றி, தீவிரமாக யோசித்தார். இந்த இக்கட்டான நிலையில், பேரரசரின் கருணையைக் கோருவதற்கு தன்னைத் தயார்படுத்திக்கொள்ள வேண்டும். அப்போது, தனது சுதந்திரத் திட்டங்களை புறந்தள்ள வேண்டும். அல்லது தனது சுதந்திரத்தைப் பாதுகாக்க, அத்தனைவிதமான சக்தியையும் பயன்படுத்த வேண்டும். திருமலை நாயக்கர் இதில் இரண்டாவதைக் கைக்கொண்டார். அவரது கொள்கைக் குறித்த இந்த அணுகுமுறையை சரியாகப் புரிந்துகொள்ள, அந்தநேரத்து தென்னிந்திய அரசியல் போக்கை அறிவது கொஞ்சம் அவசியமானது.[52] தென்னிந்தியாவைப் பொறுத்தவரை, இந்துக்களுக்கும் முகம்மதியர்களுக்குமிடையில் பிரிவினைச் சுவர், அத்தனை இறுக்கமாக இருக்கவில்லை. பலநேரங்களில், தக்காணத்திலிருந்த முகம்மதிய அரசுகள் விஜயநகரப் பேரரசுக்கு எதிரானப் போராட்டங்களில், ஒருங்கிணைந்து செயல்படவில்லை. சிலவேளைகளில், முகம்மதிய அரசுகளில் சில, தங்கள் சொந்த மதத்தினருக்கு எதிராக, பேரரசின் உதவியையும் நாடியுள்ளன. விஜயநகரப் பேரரசின் முக்கிய அமைச்சர் ராம ராஜா, முகம்மதியர்களின் உள்விவகாரங் களைத் தீர்க்க உதவிசெய்திருக்கின்றார். அந்த நாட்களின் சூழ்நிலைப்படி, அரசியல்நேர்மைக்கு எதிரானதாகக் கருதப் படாமல், முகம்மதியர்கள் இந்துக்களின் உதவியைப் பெற்றிருக் கின்றார்கள். அதுபோலவே இந்துக்களும் முகம்மதியர்களின் உதவியைப் பெற்றுவந்திருக்கின்றார்கள்.

பேரரசுக்கு எதிராக, நாயக்கர்களின் முதல்கூட்டிணைவு முயற்சி தோல்வியைத் தழுவிய நிலையில் திருமலை நாயக்கர், தெற்குநோக்கி முன்னேறிவரும் விஜயநகரப் பேரரசுப் படைகளின் வேகத்தை மட்டுப்படுத்த, வேலூர் அரசு மீது தாக்குதல் தொடங்கச் சொல்லி, கோல்கொண்டா சுல்தானை புத்திசாலித்தனமாகத் தூண்டிவிட்டார். அவரது அரசியல் சூழ்ச்சித் திறம் பலன் தந்தது. பேரரசின் படைகள் பின்வாங்கி, தங்களது சொந்த பூமியைக் காப்பாற்றிக் கொள்ள ஓடோடின. முதல்கட்டமாய் பேரரசர், தனது எதிரியை வெற்றிகொண்டார். ஆனால், மிக விரைவிலேயே அவர் எதையும் எதிர்கொள்ள முடியாதவராகிவிட்டார். செஞ்சி, தஞ்சாவூர் மற்றும் மதுரை நாயக்கர்களின் முழுமனதுடனான ஒத்துழைத்தல் மட்டுமே வெற்றியைச் சாத்தியமாக்கும் என்பதை அவர் உணர்ந்துகொண்டார். அதன்விளைவாக, சடுதியில் தெற்கு நோக்கிவிரைந்து, கோல்கொண்டாவுக்கு எதிராக அவர்களை ஒன்றுதிரட்டினார். ஆயினும் அவசர அவசரமான நல்லிணக்க முயற்சி ஏற்பாடு, அப்படியெதுவும் பலனைத் தரவில்லை. பேர

ரச முயற்சிகள் வெற்றிக்குப் பதிலாக, மனக்கசப்பையும் சோர்வையும் தந்திருந்தன. இதையடுத்து அவர், தஞ்சாவூருக்கு வடக்குப்புறத்தில் படர்ந்திருந்த அடர்காடுகளுக்குள் ஓடி ஒளிந்து கொண்டார். சிலமாதங்களுக்குப்பின் அவர், நம்பிக்கையிழந்தவராக மைசூரில் புகலிடம் தேடிக் கொண்டார். அவரதுநிலை தொடர்பாக, டிராவல்ஸ் எனும் பயணக்குறிப்பை எழுதிய தேவநாட்[53] கொடுக்கும் குறிப்புகள் முற்றிலும் வேறானதாக இருக்கின்றன. 'ஔரங்கசீப்பின் படைகள் தாக்குதலைத் தொடர்ந்தபோது, விஜயநகரப் பேரரசர் மூன்றாம்ஸ்ரீரங்கரின் நடவடிக்கைகள் பிஜப்பூர் சுல்தானை மிகவும் சினமூட்டுவதாக இருந்தன. உடனே அவர், 1650 ஆம் ஆண்டு முகலாயர்களிடம் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டார். ஆனாலும் பிஸ்னூர் அரசருக்கு எதிராக, கோல்கொண்டா சுல்தானுடன் இணைவுசெய்துகொண்டு, அவர்கள் போர் தொடங்கிவிட்டனர். போரில், பிஸ்னூர் அரசர் கடுமையான பாதிப்புக்கு உள்ளானார். நீண்டகாலம் நடந்த இப்போரில் எல்லாவற்றையும் இழந்துவிட்டு.... அதனால் முடியரசு ஏதுமின்றி மலைகளுக்குள் ஓடிவிட்டார். அங்கு அவர் இன்னும் உயிரோடு இருக்கின்றார்'.

வேலூர் அரசை வெற்றிகரமாகக் கைப்பற்றி முடித்ததும், கோல்கொண்டா தூரத்தெற்குப் பகுதிகளையும் தனக்குக் கீழ்ப்படுத்தும் எண்ணத்தை உருவாக்கிக் கொண்டதுடன், முதல்கட்ட மாக செஞ்சியை சுற்றிவளைத்தது. அதைக்கண்ட தஞ்சாவூர் நாயக்கர் பீதிக்குள்ளானார். தொடர்ந்து, எதிரியிடம் தன்னை முழுநிறைத் தன்னொப்படைப்பு செய்துகொண்டார். ஆனால் திருமலை நாயக்கர், அப்படியெல்லாம் செய்துவிட வில்லை. தைரியத்தை இழக்காமல், பிஜப்பூர் அரசுடன் புதிதாய்க் கூட்டணி ஏற்படுத்திக் கொண்டார். பயனாக, பிஜப்பூர் அரசு 17,000 குதிரைப் படையினரைக் கொடுத்து உதவியது. அவற்றுடன் தனது 30,000 காலாட்படைகளையும் திரட்டிக்கொண்டு, செஞ்சியை முற்றுகையிலிருந்து மீட்கப் புறப்பட்டார். செஞ்சியிலிருந்த நாயக்கர் படையுடன் சேர்த்து வலுப்பெற்ற திருமலை நாயக்கரின் படைகள், கோல்கொண்டாவை வலுவிழக்கச் செய்தன. உடனே கோல்கொண்டா, கூடுதல் நுட்பத்துடன் பிஜப்பூர் படையுடன் ஓர்ஒப்பந்தம் செய்துகொண்டது. இதையடுத்து செஞ்சிக்கோட்டையைப் பாதுகாக்கும் பொறுப்பை பிஜப்பூரிடம் கொடுத்துவிட்டு, சமீபத்தில் வடக்கே தான்வென்ற பகுதிகளை ஒருங்கிணைக்க, அது கிளம்பிவிட்டது. பிஜப்பூர் மேற்கொண்ட அரசியல் குட்டிக் கரணத்தால், கோட்டையை முற்றுகையிட்டிருந்த வேறுபட்டக் கருத்துகளை அடிப்படையாகக்கொண்ட ராணுவங்களுக்குள் சச்சரவு

மூண்டது. அவர்கள் போட்டுவைத்திருந்தக் கணக்குள் எல்லாமே தலைகீழ் ஆயின. முகம்மதியப் படை செஞ்சியை எளிதாகக் கைப்பற்றிக்கொண்டது.

செஞ்சியைக் கைப்பற்றிய முகம்மதியப் படைகள் அடுத்ததாக, தஞ்சாவூர் மற்றும் மதுரை நாயக்கர்களின் ஆட்சிப்பகுதிகளுக்குள் நுழைந்தன. இதுதொடர்பாக, இயேசு சபையின் குறிப்புகள் இப்படியாகத் தெரிவிக்கின்றன. 'தஞ்சாவூர் மற்றும் மதுரை நாயக்கர்களின் ஆட்சிப் பகுதிகளுக்குள் நுழைந்த முகம்மதியப் படைகள், மதிப்பிடமுடியாத அளவில் அங்கே பெரும் அழிவு களைச் செய்தன. தொடர்ந்து, அவர்களின் சொந்த சட்ட திட்டங்களை நாயக்கர்களின் மீது திணித்தன. டெய்லர் தனது 'நல்ல' எண்ணத்துடன், ஐரோப்பியக் கொள்கைக்கு ஏற்ப, நடைமுறையிலிருக்கும் நிலைமைகள் எதையும் உறுதிப்படுத்தாமல், பொதுமையாக வரலாற்றை எழுதுகின்றார். ஆனால் வரலாற்றுத் தரவுகளில், 'திருமலை நாயக்கர் கள்ளர் (கொள்ளிடத்தில் குடியிருந்தவர்கள்- கொள்ளாரிஸ்)களின் உதவியுடன் முகம்மதியப் படைகளை,[54] செஞ்சியிலிருந்து துரத்தித் துரத்தி, விரட்டியடித்தார் என்கின்றன. பின்னர் அறியப்பட்ட மற்ற ஆதாரங்கள்கூட, திருமலை நாயக்கர் கோழையல்ல என்பதைத் தெளிவாக்குகின்றன.

முகம்மதியர்கள் திரும்பிவிட்டதையடுத்து, மூன்றாம்ஸ்ரீரங்கர் மைசூரின் உதவியுடன் தனது சாம்ராஜ்ஜியத்தை மீண்டும் கட்டியமைக்க முயற்சி செய்தார். இதுதொடர்பாக, இயேசு சபை நிர்வாகத்தினர், திருமலை நாயக்கர் அந்தச் சூழ்நிலையில் எடுத்த முடிவுகள் குறித்த குறிப்பொன்றை வேண்டாப்பொருளாக விட்டெறிவது, கவனிக்கப்பட வேண்டிய ஒன்றாகும். மைசூர் அரசருடன் திருமலை நாயக்கர் நட்பு கொண்டிருந்தார். மைசூர் அரசருடன் கூட்டணியமைத்து, இழந்துவிட்ட வேலூர் அரசை மறுநிர்மாணம் செய்வதற்கு மூன்றாம்ஸ்ரீரங்கருக்கு உதவும் திட்டமும் அவருக்கிருந்தது. தொடர்ந்து மைசூர், மதுரை மீது படையெடுப்பு செய்து பாதிப்பு ஏற்பட்டுவிடக்கூடாது என்பதற்காக, திருமலை நாயக்கர் எதிர்பாராத இந்த அரசியல் முடிவை எடுக்க வேண்டியிருந்தது.[55]

இயேசு சபையினரின் இந்தவரிகளை வாசிக்கும்போது, பேரரசர் மற்றும் மைசூர் அரசரிடம் அவர் கொண்டிருந்த புதிய உறவுகளால், மதுரை மிரட்டலுக்கு உள்ளாகின்றது என்பது வெளிப்படையாகத் தெரிகின்றது. மூன்றாம்ஸ்ரீரங்கர் முகம்மதியர்களுக்கு எதிராகப் போரிட்ட போது, திருமலை நாயக்கர் உதவிக்கு வராததால், இந்தச் சூழல் உருவானது தெளிவாகின்றது. இதையடுத்து, திருமலை

நாயக்கர் பிஜப்பூரிடம் மறுபடியும் உதவிகேட்டார். இயேசு சபையினரின் ஆதாரத்திலும், மேலும் நெல்சனின் குறிப்பேடுகளிலும் உள்ளார்ந்த முரண்பாடுகள் மலிந்துகிடக்கின்றன. திருமலை நாயக்கரின் ஆட்சிப்பரப்பெல்லை பிஜப்பூர் ராணுவத்தினரால் மேலாண்மை செய்யப்பட்டிருந்தால், அவர் அவமதிப்புக்கு உள்ளாகியிருப்பார். அவர்களால் நன்றிகொன்றவிதமாய் ஏதாவது ஒன்று நடந்திருக்கும். திருமலை நாயக்கர், இந்துமதத்தின் மீது ஆழமானப் பற்றுகொண்டவர். இருந்தும் ஏன் அவர் இந்து அணிக்குள், முகம்மதியர்களை இழுத்துவைத்துக்கொள்ள வேண்டும் எனும் திட்டம் கொண்டிருந்தார் என்பது வியப்பான தொரு கேள்வியாகவே இருக்கின்றது. முகம்மதியர்களின் உதவிக்குப் பிரதியாக, அவர் ஆதரவுத் தொகையைக் கட்டவேண்டியிருந்தது என்று கூறப்படுவது, அநேகமாக மிரட்டலின் அடிப்படையிலானதாக இருக்கும். தஞ்சாவூர் நாயக்கர் விஜயராகவன், பலவீனமானவராகவும் எதிர்ந்து நிற்கும் துணிச்சல் இல்லாதவராக இருந்ததால், முகம்மதியர்கள் அவரிடமிருந்து விடாமல் கறந்திருக்கலாம். பிஜப்பூர் தளபதி கானிகான், தற்செருக்குடனும் முனைப்புடனும் அகம்பாவம் கொண்டு, மதுரை நாயக்கரின் உதவியுடன் மூன்றாம்ஸ்ரீரங்கரின் புகழை அழிப்பதிலேயே கவனம் செலுத்தினான். இவ்வாறாக, திருமலை நாயக்கர் அதிக விலைகொடுத்து, தனது எண்ணங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் வழியாக, தனது ராஜ்ஜியத்தையும் அருகிலுள்ள ராஜ்ஜியங்களையும் பாதுகாத்தார். இந்தக்கொள்கைகள், எவ்வாறாயினும், மூன்றாம் ஸ்ரீரங்கரின் முன்பின் ஆய்ந்தமையாத, எச்சரிக்கையுணர்வற்ற நடவடிக்கைகளால் திருமலை நாயக்கர்[56]

இந்த முடிவை எடுக்கவேண்டியதாகிப் போனது என்பது மட்டும் உண்மை.

இருதரப்பிலும் செய்துகொண்ட பரிவர்த்தனைகளால், விஜயநகரப் பேரரசின் முக்கியப் பிரதிநிதியாக இருந்த வேலூர் அரசின் உயிர்ப்பழிந்து, வழக்கொழிந்துபோனது. மூன்றாம் ஸ்ரீரங்கரைப் பற்றி வில்க்ஸ்,[57] '1646ஆம் ஆண்டில் ஸ்ரீரங்கராயா 'திராவேடா'விலிருந்து பெத்னூருக்குத் தப்பியோடினார்' என்று குறிப்பிடுகின்றார்.[58] ஆகையால், அவர் மைசூரில் இருந்த காலத்தை கணக்கில் கொண்டிருக்க முடியாது. கந்திருவ நரச ராஜா, சிலகாலம் தனது விருந்தாளியாக மூன்றாம்ஸ்ரீரங்கரை வைத்துப் பாதுகாத்தார். அதன்மூலமாக, கந்திருவ நரச ராஜா வுக்கு ஏகப்பட்ட தொந்தரவுகள் வந்துசேர்ந்தன. அதனால், 1653ஆம் ஆண்டுவாக்கில் அவரை கும்பிட்டு வெளியேற்றி வைத்துவிட்டார். இயேசு சபையினரின் சான்றுகளின்படி, மூன்றாம் ஸ்ரீரங்கர் தனது சாம்ராஜ்ஜிய

எல்லைக்குள்ளேயே பேரரசில்லாதப் பேரரசராக, மகிழ்ச்சியற்ற வாழ்க்கையை நடத்திச்சென்றார் என்பது உறுதியாகின்றது. கந்திருவ நரச ராஜா வெளியேற்றி வைத்த மூன்றாம்ஸ்ரீரங்கருக்கு பெத்னூரின் அரசர் புகலிடம் தந்து, தன்னுடன் வைத்துக்கொண்டார். அத்துடன் மூன்றாம்ஸ்ரீரங்கரின் பெயரிலேயே, அவரது குறிக்கோள்களை, மேற்கொண்டு செயல்படுத்தும் திட்டம் பெத்னூரின் அரசருக்கு இருந்தது. பேரரசர் மூன்றாம்ஸ்ரீரங்கருக்கு விசுவாசமாக நடந்துகொள்ளும் இந்நடத்தை வேறொன்றையும் சுட்டவில்லை. இவை தற்பெருக்குத் திட்டங்கள், ஆயினும் அவை, பெரிய அளவிலான செயல்திட்டங்களாக அமையவில்லை. 1663ஆம் ஆண்டின் மூன்றாம்ஸ்ரீரங்கரின் பெல்லாரி கல்வெட்டொன்று,[59] கிராம நன்கொடையைப் பற்றிப் பேசுகின்றது. இருந்தபோதும், அப்போதைய வேறுசில கல்வெட்டுகள், மற்ற விஜயநகரப் பேரரசர்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றன. சான்றளிக்கும் ஆதாரங்கள் ஏதுமில்லாமல், உண்மைநிலையை அறிந்துகொள்வது சிரமமானதாகத் தெரிகின்றது.[60] 1792 மற்றும் 1793ஆம் ஆண்டுகளின் கல்வெட்டுகள், ரெட்டிகுலத் தலைவர் வேங்கடபதி மகாராஜா[18]வின் கொடைகள் பற்றிக் குறிப்பிடுகின்றன.[61] பிஜப்பூர் மற்றும் கோல்கொண்டா அரசுகளின் விரிவாக்கம், தெற்குநோக்கி நகரத்தொடங்கியதும் விஜயநகரப்பேரரசு மறைந்துவிட்டது. கோல்கொண்டா சுல்தான் கோரமண்டலக் கடற்கரைப் பகுதியில், தனக்கு ஏதுவாக இருந்ததையெல்லாம் கைப்பற்றிக்கொண்டான் என்று டிராவல்ஸ் எனும் பயணக்குறிப்பு நூலில் தேவ்நாட்[62] எனும் பயணி தெரிவிக்கின்றார். பிஜப்பூர் சுல்தானோ, முன்னவன் விட்டுவைத்த மற்ற இடங்களையெல்லாம் அள்ளிக்கொண்டான். அவனது வேட்டையாடல் நாகப்பட்டிணம் முனைவரைத் தொடர்ந்தது. இதனை தேவ்நாட், ‘பிஜப்பூர் அரசின் பரப்பெல்லை, தெற்கே மதுரை நாயக்கர்களின் நாடுமுடிய, கன்னியாகுமரிவரைப் பரவியிருந்தது’ என்கின்றார்.[63] பிஜப்பூர் சுல்தானிடம், திருமலை நாயக்கர் கொண்டிருந்ததாகக் கூறப்படும் குடியாண்மை நிலையை தவறென்று, தேவ்நாட்டின் கீழ்க்கண்ட அவதானிப்பு நிரூபணம் செய்கின்றது. ‘செயிண்ட். தாமஸுக்குத் தெற்கே நாயக்கர்கள் நிறையப் பேர் ஆட்சி செய்து வந்தனர்.[64] அவர்களில் மதுரை நாயக்கரும் ஒருவர். தாஞ்சியூர் நாயக்கர் தற்போது, பிஜப்பூர் சுல்தானுக்கு குடியாண்மை நிலையினராக இருக்கின்றார். ஆர்.ஓர்மே[65] என்னும் ஆய்வாளர், ‘1652ஆம் ஆண்டில் கர்நாட்டிக் பகுதியில் விஜியப்பூர் மற்றும் கோல்கொண்டா படைகள் ஊடுருவின. அப்படையெடுப்பு தனித்தனியாக இருந்தது. ஆனால், வென்ற பகுதிகளையும் கைப்பற்றியப் பொருட்களையும் 1656 ஆம்ஆண்டில் நிறைவாகப் பிரித்துக் கொண்டனர்’ என்கின்றார்.

**மூக்கறுப்புப் போர்** - பிஜப்பூர் சுல்தானுடன் சேர்ந்துகொண்டு தன்மீது படையெடுத்து, பெருந்துன்பத்தைத் தந்த திருமலை நாயக்கரை பழிவாங்கும் எண்ணம், மைசூர் அரசர் கந்திருவ நரச ராஜாவுக்குள் புகைந்துகொண்டே இருந்தது. அதைச் சும்மாவிட்டுவிட மனம் ஒப்பாமலிருந்தார். மைசூரிலிருந்து பிஜப்பூர் வீரர்கள் திரும்பிவிட்டது, அவருக்கு ஒரு சந்தர்ப்பத்தை வலிய வந்து கொடுத்தது. அதை பயனுள்ளதாக்கிக் கொண்டு, மதுரை மீது வலிந்து சண்டைக்குப் போனார். 1656 ஆம்ஆண்டில் சத்தியமங்கலம் மாகாணத்துக்குள் ஊடுருவலை நடத்த உத்தரவிட்டார். அவரது படைகள் குடிமக்களிடம் அத்துமீறி நடந்து, பெருத்த அழிவை உண்டாக்கும் குற்றங்களை வகைதொகையில்லாமல் செய்தன. சேலம் மாகாணத்திலிருந்த வளம்நிறைந்த சத்தியமங்கலம், திருமலை நாயக்கரின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதி என, 1652ஆம் ஆண்டின் 'எருமைப்பட்டி'க் கல்வெட்டு[66] தெளிவுறச் சுட்டுகின்றது. 1655-56ஆம் ஆண்டின் கந்திருவ நரச ராஜாவின் ஈரோடு கல்வெட்டொன்று,[67] அவரது தளபதி கெம்பையா மதுரையின் தொடர்பிலிருந்ததாகக் கூறுகின்றது. அநேகமாக அது, மதுரை மீது படையெடுக்கும் பொறுப்பை கெம்பையாவிடம் கந்திருவ நரச ராஜா ஒப்படைத்தது தொடர்பானதாக இருக்கலாம். அரசரால் ஊக்குவிக்கப்பட்ட மைசூர் தளபதி, மதுரையைக் கைப்பற்றும் நோக்கில், அந்த ஊரை நெருங்கிவிட்டான். அப்படி அவன் போகுமிடமெல்லாம், தனது எஜமானனின் காட்டுமிராண்டித்தனமான உத்தரவை நிறைவேற்றிக்கொண்டே போனான். கையில் சிக்கியவர்கள் ஆணோ, பெண்ணோ, குழந்தைகளோ, பெரியவர்களோ யாராகயிருந்தாலும், அவர்களது மூக்கை அறுத்துவிடச்சொல்லி கந்திருவ நரச ராஜா உத்தரவிட்டிருந்தார். அறுபட்ட மூக்குகளை மைசூருக்கு அனுப்பியும் வைத்தான். காட்டுமிராண்டித்தனமான இந்தச்செய்கை, மைசூர் படையினரின் போர் செயல் பாட்டு முறைகளில் ஒன்றாக இருந்தது. எ வாயேஜ் டு தி ஈஸ்ட் இந்தியா எனும்நூலை எழுதிய ஜே.எச். க்ரோஸ்,[68] 'மைசூர் படையினரின் தனித்துவமான செய்கையாக அது இருந்தது. அவர்கள் மிகச்சாமர்த்தியமாகவும் எளிதாகவும் மூக்குகளை அறுத்து சேகரித்தனர்' என்கின்றார். செயிண்ட். ஜார்ஜ் கோட்டையின் 1679ஆம்[69] ஆண்டின் ஜனவரி மாதத்திய தீர்மானமொன்றில், மூக்கறுக்கும் செயல்பாடு குறித்த குறிப்பொன்றும் இடம்பெற்றுள்ளது.

திருமலை நாயக்கர் உடல்நலம் குன்றி, படுத்தப் படுக்கையாக இருந்தார். படையெடுப்பைத்தாண்டி, இயற்கையிலேயே அவருக்குள் குழப்பம் மண்டிக்கிடந்தது. ஒருகட்டத்தில் தெளிவு

பெற்ற அவர், தனது நம்பிக்கைக்குரிய ஆதரவாளரான ரகுநாத சேதுபதிக்கு தகவல் அனுப்பி, உதவி கோரினார். அவரும் காலத்தே செய்யும் உதவியாகக் கோரிக்கையை தலைமேல் ஏற்று, உடனடியாக 25,000 மறவவீரர்களுடன் திரண்டுவந்து, மதுரையை ஆபத்திலிருந்து மீட்டார். அவருக்குத் துணையாக திருமலை நாயக்கரின் மற்ற படைகளைச் சேர்ந்த 35,000 வீரர்கள் இருந்தனர்.[70] மிகக்குறுகிய காலத்திலேயே மைசூர் படை திண்டுக்கல் எல்லையிலிருந்து விரட்டியடிக்கப்பட்டது. விரைந்து முடிவெடுப்பதில் சற்றே திணறிப்போன மைசூர் படைத் தளபதி கெம்பையா இறுதிமுடிவை பழமாக்க முடியாமல் தோற்றுப் போனான். ஆயினும், இருதரப்பும் மூர்க்கமாகப் பொருதிக்கொண்ட அப்போரில் ஒவ்வொரு பக்கமும் 12,000க்கு அதிகமானோர் கொல்லப்பட்டார்கள். போரில் ரகுநாத சேதுபதியின் துணிச்சலே மதுரைக்கு வெற்றியைக் கோரித்தந்தது. மைசூர் படை தோற்று தலைதெறிக்க ஓடியது. மதுரைக்கு அவ்வெற்றியைத் தேடித்தந்த ரகுநாத சேதுபதியை கௌரவப் படுத்தும் நோக்கில், திருமலை நாயக்கர் அவருக்கு, 'திருமலை சேதுபதி' என்ற பட்டத்தைச் சூட்டினார். பெருமதிப்பிலானப் பரிசுப் பொருட்களை வழங்கினார். அவர் செலுத்திவந்த திறைகளுக்கு முற்றிலுமான விலக்கு அளித்தார்.

மைசூர் படையெடுப்பிலிருந்து மதுரையைக் காத்தது, சேதுபதிதான் என்று தி ஹிஸ்டரி ஆஃப் தி கர்நாடகா கவர்னர்ஸ் எனும்நூல் அவருக்கு முழுநன்மதிப்பையும் கொண்டுசேர்க்கின்றது. இதனை, இயேசு சபையினரின் கடிதங்கள் உறுதிபடுத்துகின்றன.[71] தொடர்ந்து, மைசூர் மீது எதிர்த்தாக்குதலை மதுரை நடத்தியது குறித்தும் பேசப்படுகின்றது. வலியச்சென்று தாக்கும் அந்தப் படையெடுப்புக்கு யார் தலைமை ஏற்றது என்று குறிப்பிடப்பட வில்லை. மெக்கன்ஸி மானுஸ்கிரிப்ட்[72] எனும் கையெழுத்துப் பிரதிகளில், திருமலை நாயக்கரின் ஆட்சிக்கால இறுதியில் மைசூர் மீதானப் படையெடுப்பை மதுரை நடத்தியது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அப்படையெடுப்புக்குத் தளபதியாக, தனது தம்பி குமாரமுத்து நாயக்கரை திருமலை நாயக்கர் நியமித்தார். அவருக்கு உதவியாக, ரங்கண்ண நாயக்கர். மதுரைமீது மைசூர் படையெடுப்பு நடத்தியதற்கு பழிக்குப்பழியாக, அவர்கள் வெறிகொண்டு இயங்கினர். மைசூர் படையினர் தங்கள் தலைநகரைக் காப்பாற்றிக்கொள்ள வெகுவாகப் போராடினர். ஆயினும், பெருத்த சேதத்தை அவர்கள் சந்தித்தனர். மதுரைமீது மைசூர் படையினரால் நடத்தப்பட்ட விசித்திரமான நடவடிக்கைகளை, மதுரைப் படை மைசூரில் திருப்பி நடத்தியது. இச்செய்கைகளால், 'மைசூர் அரசன் மூக்கை இழந்தான்'[73] என்று

வர்ணிப்போரும் உண்டு. மதுரைப் படையினர் நஞ்சனாக்குடி என்கின்ற நஞ்சன்கூடுவரை, தங்கள் ஊடுருவலை நடத்தினர். இந்த அதிரடி முடிவுக்கு வருமுன்பே, திருமலை நாயக்கர் காலமானார்.

முன்னர் குறிப்பிட்டதுபோல, திருமலை நாயக்கரின் இளைய சகோதரன் குமார முத்து நாயக்கரைப் பற்றிய முழுமையானத் தரவுகள், போதுமான அளவுக்குக் காணப்படவில்லை. தி ஹிஸ்டரி ஆஃப் தி கர்நாடகா கவர்னர்ஸ் வகைப்படுத்தியக் குடிவழி மரபுப் பட்டியலில் அப்பெயரைக் குறிப்பிட்டிருந்தாலும், மைசூர் போரில் மட்டும் கலந்துகொண்டதாகத் தெரிகின்றது. அங்கும் உச்சிமுகர்ந்து சொல்லும் அளவுக்கு பங்களிப்பு எதுவும் இல்லை. ஆனால் சேதுபதியின் பெயர், வரலாற்றுத் தரவுகளிலும் சரி, இயேசு சபையினரின் ஆவணங்களிலும் சரி, பிரதானமாக உச்சரிக்கப்படு கின்றது. கல்வெட்டுகள் மட்டுமே குமாரமுத்து திருமலா, திருமலை நாயக்கரின் மகன் என்று குறிக்கின்றன. திருமலை நாயக்கரின், 1659ஆம் ஆண்டின் திருச்செங்கோடு கொடை குறித்தக் கல்வெட்டும்,[74] அதேஆண்டில் தந்தை மகனுக்கு வழங்கிய தகுதிச்சான்றும் மைசூர் போரில் பங்கெடுத்துக் கொண்டதற்கு ஆதரவான ஆதாரங்களாக இருக்கின்றன.

**போர்த்துக்கீசியர்கள் மற்றும் டச்சுக்காரர்கள்** - கடற்கரைப் பகுதிகளில் தங்களின் ராஜாங்கத்தைச் செலுத்திக் கொண்டிருந்த ஐரோப்பியர்களுடன், திருமலை நாயக்கரின் உறவு வரையறுக்க முடியாததாக இருக்கின்றது. அநேகமாக, மூர்க்கமான வணிகப்போட்டியில் இறங்கியிருந்த போர்த்துக்கீசியர்களையும், டச்சுக்காரர்களையும் அவர் ஒரே அளவீட்டில் கணக்கிட வில்லை. தன்னை வித்தியாசப் படுத்திக்கொண்டார். சேதுபதிகளுடன் போர் நடத்தியபோது, போர்த்துக்கீசியர்களின் உதவியைக் கேட்டுப் பெற்றார். அவர்களின் சேவையைப் பாராட்டினார். தனது சாம்ராஜ்ஜியத்தில் அவர்களுக்கு பல சலுகைகள் வழங்கி, அங்கீகரித்தார். இலங்கை செல்லவிருந்த அவர்களுக்கு, உதவிகள் செய்வதாக உறுதியளித்தார். அதேவேளையில் டச்சுக்காரர்களை அவர் விரோதியாகப் பாவித்தார். 1646 ஆம் ஆண்டு போர்த்துக்கீசிய அரசர், தனது இந்தியப் பிரதிநிதிக்கு அனுப்பிய வழிகாட்டுதலில், சொந்த ஆட்சியாளர்களை டச்சுக்கு எதிராகப் போரிடத் தூண்டுமாறு உத்தரவிட்டிருந்தார். அதைக்கேட்டு, திருமலை நாயக்கர் டச்சுக்காரர்களை 1648ஆம் ஆண்டில் பட்டணத்திலிருந்து துரத்தினார். அந்த அவமதிப்புக்கு பழிதீர்க்க, டச்சுக்காரர்கள் 1649ஆம் ஆண்டின் பிப்ரவரி, 10 ஆம்தேதி, பத்து கப்பல்களில் வந்து, போர் நடவடிக்கைகளைத் துவக்கிவிட்டனர். அவர்களிடம்

திருச்செந்தூர் கோட்டை அடைக்கலமானது. அதனை அவர்கள் வலுப்படுத்திக் கொண்டனர். பின்னர் அவர்கள், தூத்துக்குடி நோக்கி முன்னேறினர். கடலோரப் பரவாஸ்கள் மதுரை நாயக்கருடன் சேர்ந்துகொண்டு, கபடசூழ்ச்சிகளில் ஈடுபட்டு பட்டணத்திலிருந்து தங்களை விரட்டியடித்ததாக குற்றம்சாட்டி, அபராதம் கட்டச்சொல்லி வலியுறுத்தினர். அவர்களின் கோரிக்கைக்கு எதிர்தரப்பில் செவிசாய்க்கப்படவில்லை. அதனால் தூத்துக்குடி நகரத்தைச் சூறையாடினர். நகரின் ஒருபகுதிக்கு தீ வைத்தனர். பரவாஸ்களிடமிருந்து கையில் கிடைத்தப் பொருட்களையெல்லாம் சுருட்டிக்கொண்டனர். போதாததற்கு அவர்களிடமிருந்து குறிப்பிட்டத் தொகைக்கு உறுதிப்பத்திரங்களையும் எழுதி வாங்கிக்கொண்டனர். நான்குநாட்கள்வரை நகரை வேட்டையாடிய டச்சுக்காரர்கள், பிப்ரவரி 13ஆம் தேதி கிளம்பிப் போனார்கள். போகும்போது கரையில் இருந்த மீன்பிடி படகுகள் அத்தனையையும் இழுத்துக்கொண்டு போனார்கள். 1658ஆம் ஆண்டு டச்சுக்காரர்கள், தூத்துக்குடியை போர்த்துக்கீசியர்களிடமிருந்து கைப்பற்றினர். அதற்குமுன்பு, தோராயமாக இருபத்தைந்தாண்டு களுக்கு முன்பே, போர்த்துக்கீசியப் படை மதுரை நாயக்கர்களைத் தாக்குவதற்கு தூத்துக்குடி வந்திறங்கி, அங்கே யானைகளை விற்று, வெடியுப்பு வாங்கிய சேதியும் நடந்திருக்கின்றது.[75] முன்னவர் களைப் போலவே, திருமலை நாயக்கரும் கடலோரப் பகுதிகளை ஐரோப்பியர்களிடம் விட்டுக்கொடுத்துவிட்டு, அவர்கள் செலுத்திய சொற்பத் திறையில் மனம் மகிழ்ந்துபோனார்.[76]

**சமயப்பணி நடவடிக்கைகள்** - மதுரை சமயப் பணிக்குழு, 1624 ஆம் ஆண்டுவாக்கில் அடுத்தத் தளம்நோக்கி முன்னேறியது. ராபர்ட் டி நோபிலி, மதுரை அனுபவங்களிலிருந்து நிறையவே பாடங்களைக் கற்றிருந்தார். ஆயினும் அவரது செயல்பாடுகள் நகரத்துடனோ அல்லது மதுரையைச் சுற்றியோ நின்றுவிடவில்லை. விரிவாக்கமாய் வடக்குநோக்கி நகரத் தொடங்கியிருந்தது. மதுரையில் மதமாற்றத்துக்கு நேர்ந்த தடைகள், மலைமீது ஏறிக் கடக்க முடியாதனவாக இருந்ததும், வடக்குநோக்கி நகர்ந்ததற்கு முக்கியக் காரணம். மேலும், நற்செய்தி வெளிச்சத்தின் பரப்பு, புதியமையங்களின் வழியே விரிவாக்குவதற்கான தேவைகள் அதிகமாக இருந்ததும் வடக்குநோக்கி நகரவைத்தது. எல்லாவற் றுக்கும் மேலே, அரசியல் சூழல் நெருக்கடி மிகுந்து காணப்பட்டது. விடாதத் துயரளிப்பும் தொடர்ந்தது. தொந்தரவு மிகுந்த அந்த நேரத்திலும் புதிய பகுதிகளைச் சேர்ந்தவர்கள், கிறிஸ்தவர்களுக்கு அடைக்கலம் கொடுப்பார்கள் என்ற நம்பிக்கை நோபிலிக்கு இருந்தது. இப்பெரும் குறிக்கோளோடு அவர்,

மதுரையிலிருந்து 1623ஆம் ஆண்டு ஜூன் மாதம் கிளம்பிவிட்டார். கண்மூடித்தனமான ஆட்சேபணைகள், அவருக்கு கவலை அளிப்பதாக இருந்தன. பிராமணர்களும் மற்ற மக்களும் எப்படி நடந்துகொள்வார்களோ என்றிருந்த அச்சம் படிப்படியாக அகன்றது. வடக்குநோக்கி நகர்ந்தபோது, முதலில் சென்றடைந்த திருச்சினாப்பள்ளியில், அப்போது கிளர்ச்சி நடந்துகொண்டிருந்தது. நகரெங்கும் குழப்பமும் கலக்கமுமாக இருந்தது. அப்படியே அவர் அங்கிருந்து சேந்தமங்கலத்துக்குப் பயணப்பட்டுவிட்டார். அங்கே, மதுரை நாயக்கருக்குத் திறை செலுத்தும் அரசனாக இருந்துவந்த ராமச்சந்திர நாயக்கர், நோபிலியை பகட்டாரவாரத்துடன் வரவேற்றார். கொஞ்ச காலத்தில் மறுபடியும் இங்கே திரும்பிவரும் எண்ணத்தில், அங்கிருந்து மதுரைக்குக் கட்டுப்பட்டு உபஆட்சியாள ராக இருந்த சலபதி நாயக்கரின் தலைநகரான சேலம் நோக்கிப் போனார். எதிர்பார்த்த அத்தனைக்கும் மாறாக, கொடூரமும் விருந்தோம்பாத நிலைமையே அங்கே இருந்தது. ஆயினும், சேலத்து நாயக்கரின் சகோதரன் நோபிலிக்கு சீடர் ஆனார். நிலைமை நோபிலிக்கு ஆதரவாக மேம்படத் தொடங்கியது. நோபிலியின் செயல்களால் கவரப்பட்ட சீடர் அவரிடம் மதிப்பு மரியாதையும் கொண்டிருந்தார். நோபிலி ஒரு பரங்கியர் என்பதாலேயே அவரை மதுரையிலிருந்து துரத்தினார்கள் என்று குறைகூறுபவர்கள் உண்டு. ஆனால் சேலம் நாயக்கர் அவருக்குப் பாதுகாப்பும், சமயம் பரப்புவதற்கு அனைத்து வசதிகளையும் செய்து கொடுத்தார். இந்நிலையில் நோபிலி தன் சொந்த ஆதாயத்துக்காக, மதத்தைப் பயன்படுத்துகின்றார் என்ற குற்றச்சாட்டின்கீழ், விசாரணைக்கு கொச்சிக்கு அழைக்கப்பட்டு, மீண்டும் சேலத்துக்கு அவர் வந்தபோது, அரசியல் சூழ்நிலை சேலத்தின் ஆட்சியாளருக்கும் அருகிலுள்ள மற்ற ஆட்சியாளர்களுக்கும் அரசியல் கருத்து வேற்றுமையை உருவாகியிருந்தது. ஆனால் இந்த உட்கிளர்ச்சிகள் பெருமளவில் வெளியில் தெரியவில்லை.[77] இதனிடையே, நோபிலியுடன் பணியிலிருந்த அண்டோனியோ விகோவுக்கு உடல்நலக் குறைவு ஏற்படவே, அவர் தெற்கே திரும்ப அழைக்கப்பட்டார். மார்ட்டின்ஜ் என்பவரிடம் நம்பிக்கையுடன் பணியை ஒப்படைத்துவிட்டு, மற்ற பணியாளர்களுடன் நோபிலி 1627ஆம் ஆண்டு மதுரைக்குப் புறப்பட்டார். வழியில் திருச்சினாப்பள்ளியை அடைந்ததும், தன்னுடன் இருக்கும் விகோ, தன்னை நிலைப்படுத்திக் கொண்டிருக்கிறார் என்று சான்றுரைத்தார். மேலும், திருச்சினாப்பள்ளியில் தங்கி கிறிஸ்தவத்தை நிறுவ விரும்பினார்.[30] மதுரையின் சமயப் பரப்புக் குழுவின் பணி நோபிலியால் மிக நேர்த்தியாக, வடக்கில் எடுத்துச் செல்லப்

பட்டது. தெற்கில் அப்பணியை, அண்டோனியோ விகோ மேற்கொண்டார். 1626ஆம்[78] ஆண்டின் அண்டோனியோ விகோவின் கடிதம், மதுரையின் சுற்றப்புறங்களில் கிறிஸ்தவம் மக்கள் மனதை வென்றதைப் பகர்கின்றது.[79]

திருச்சினாப்பள்ளியில் தனது சமயப்பணியை நோபிலி, 1627 ஆம்ஆண்டில் தொடங்கியபோது, பல்வேறு மிரட்டல்களுக்கு உள்ளானார். மட்டுமல்லாமல், நாயக்கரின் உத்தரவின் பேரால் நாடு கடத்தப்பட்டு, சிறைத்தண்டனைக்கும் ஆளானாதை அவரே எழுதி யுள்ளார். 1627-38ஆம் ஆண்டு காலகட்டத்தில் அவர் எழுதியக் கடிதங்களில் பெரும்பாலானவை தொலைந்து போய்விட்டன. அதிலிருந்த விவரங்கள் எதுவுமே தெரியவரவில்லை. 1632 ஆம்ஆண்டில் ஆண்டோனியோ விகோ எழுதியக் கடிதம்,[80] பல ஆண்டுகளாக வழங்கப்பட்டு வந்த கடும்தண்டனைக் குறித்துப் பேசுகின்றது. அதிலும் குறிப்பாக, 1630 ஆம்ஆண்டை அதிகமாகவே பேசுகின்றது. அநேகமாக இந்த நிகழ்வுகளெல்லாமே, மைசூருடன் திருமலை நாயக்கர் நடத்திய முதல் போர்க்காலத்தைச் சேர்ந்த்ததாக இருக்கின்றன. திருவாங்கூர் மற்றும் சேதுபதிகளுடன் நடத்திய மூர்க்கமானத் தாக்குதல்கள், திரும்பிவராத பொன்னானக் காலத்தின் பெரும்பகுதியை அபகரித்துக் கொண்டிருக்கின்றன. 1638 ஆம் ஆண்டு, நோபிலி மதுரைக்குத் திரும்பியிருக்கின்றார். அக்டோபர் வாக்கில் அவரது நம்பிக்கைக்குரிய, அவரால் பாராட்டப்பட்ட அண்டோனியோ விகோ மரணமடைந்துவிட்டார். அதையடுத்து, அந்த இடத்தில் ஒரு வெற்றிடம் உருவானது. அதைத்தொடர்ந்து, சமயப் பணிக் கடமையாற்ற, புதிய பணியாளர்களைத் தேடி நோபிலி கொச்சிக்குச் சென்றார். நோக்கமெடுத்துச் சென்ற அப்பணியை அங்கே முடித்துவிட்டு நோபிலி மதுரைக்குத் திரும்பியபோது, மதுரையிலும் திருச்சினாப்பள்ளியிலும் சமயப்பணி செய்த நோபிலி உள்ளிட்ட அத்தனை பேரையும் கைதுசெய்து சிறையில் பூட்டியது, நாயக்கர் அரசு. இந்தநிலை நீண்டகாலம் தொடரவில்லை. ஓராண்டுக்குள் நோபிலின் நம்பிக்கைக்கு உரியவரான மார்ட்டின்ஜ் எழுதுகின்றார்: தொடரப்பட்டக் குற்றச்சாட்டுகளெல்லாம் தெய்வத் தன்மை அருளால், கட்டப்பட்டுவிட்டன. பலநூறு குடும்பங்கள் மொத்த மொத்தமாக கிறிஸ்தவத்தைத் தழுவின திருமலை நாயக்கர், போர்த்துக்கீசிய அரசப்பிரதிநிதிக்கு, 1639ஆம் ஆண்டின் ஆகஸ்ட் 13 ஆம்நாள் கொடுத்த, கிறிஸ்தவத்தை தழுவவிரும்பும் யாவருக்கும் அதை மேற்கொள்ள சுதந்திரம் அளிக்கப்படுகின்றது'[81] என்ற வாக்குறுதியால் இந்தமாற்றம் சாத்தியப்பட்டது. 1640ஆம் ஆண்டு மறுபடியும் மதம் மாற்றியக் குற்றச்சாட்டுகளும் அதற்கான

தண்டனைகளும் தொடர்ந்தன. 1644 ஆம் ஆண்டு திருச்சினாப்பள்ளி ஆளுநர் இதேமாதிரியான தண்டனை உத்தரவுகளைப் பிறப்பித்தார்.[82] இதையடுத்து நோபிலி, திருமலை நாயக்கரைச் சந்தித்து, தனது எண்ணங்களை அவரிடம் பகிர்ந்துகொள்ள எண்ணினார். அந்தமுயற்சியில் அவருக்கு வெற்றி கிடைத்தது. திருமலை நாயக்கர் அவரை வெகுவாக கௌரவித்தார். தொடர்ந்து, அனைத்து சமயப் பரப்புக் குழுக்களுக்கும் தங்கள் பணியைத் தொடர்ந்துகொள்ள அனுமதியளித்தார்.[83] அத்துடன், அவர்களிட மிருந்து கைப்பற்றிய உடமைகளை, அவர்களிடமே திருப்பியளிக்க பொது உத்தரவு ஒன்றையும் வெளியிட்டார்.[84] கிறிஸ்தவம் தழைக்க நோபிலி ஆற்றிய நேரியப் பணியாக, இது கருதப்படுகின்றது. 1648 ஆம் ஆண்டு அவருக்கு ஏற்பட்ட உடல்நலக் குறைவையடுத்து, அவர் இலங்கையின் ஜாபனா பட்டிணத்துக்கு ஓய்வெடுக்க அனுப்பிவைக்கப்பட்டார். பின்னர் அங்கிருந்து அவர், மைலாப்பூர் திரும்பினார். பணியிலிருந்து ஓய்வுபெற்ற நிலையிலும்கூட, அவரது எண்ணங்கள் முடங்கிப்போய்விடவில்லை. தனது இலக்கியப் பணிகளையும் அவர், மரணம் தழுவிய 1660 ஆம் ஆண்டுவரை விட்டுக்கொடுக்கவேயில்லை.

சகிப்புத்தன்மையைக் கடைப்பிடிக்க, 1644ஆம் ஆண்டில் முக்கியமானதோர் உத்தரவை திருமலை நாயக்கர் பிறப்பித்தும், அடக்குமுறையும் அட்டூழியங்களும் விடாத்துயரளிப்பை தந்தவண்ணமே இருந்தன. 1653ஆம் ஆண்டில் கிறிஸ்தவ சமயப் பணியாளர் பல்தாஸர் டா கோஸ்டா எழுதியக் கடிதம்[85] இப்படியாகப் பேசுகின்றது: 'எதிரிகள் பெருத்த எண்ணிக்கையில் இருந்தனர். எளிதில் மசியக்கூடியவர்களாக அவர்கள் இல்லை. திருமலை நாயக்கர் எடுத்துக்கொண்ட நல்லெண்ண முயற்சியால், எங்களுக்குக் கிடைத்துவந்தப் பாதுகாப்பைத் தாண்டியும் பல்வேறுவகைகளில் நாங்கள் பலாத்காரத்துக்கு உள்ளானோம். இதையடுத்து, மதரீதியாக இடர்படுத்தும் இந்தநிலைகளின்போது அல்லது அரசியல் போர் நடவடிக்கைகளின்போது, அதிலிருந்துக் காத்துக்கொள்வதற்காக, ஓர் இருப்பிடத்தை கிறிஸ்தவக் குருமார் குழு திருச்சபையாகத் தயார்படுத்தினோம். அதற்கு, பெருமைமிகு இந்துசாதிகளிடமிருந்து தூரவிலகியிருந்தப் பறையர்கள் வழங்கியப் பாதுகாப்பும், சுதந்திரமும் அளப்பரியது'. ஆயினும், 1653 ஆம்ஆண்டில் மாகாண ஆளுநரொருவரின் உத்தரவின்பேரில், கிறிஸ்தவர்கள் கைது நடவடிக்கைக்கு உள்ளாகி சித்ரவதைப் படுத்தப்பட்டார்கள். பொறுமையைக் காத்த கிறிஸ்வர்கள், ஒருகட்டத்தில் அதற்கு எதிர்ப்பு தெரிவித்தநிலையில், தனது ஆளுகைக்கு உட்பட்ட அனைத்து கிராமங்களிலுமுள்ள

கிறிஸ்தவர்களையும் துன்புறுத்தச் சொல்லி, பொது உத்தரவு ஒன்றை அந்த ஆளுநர் வெளியிட்டார். அது, வன்முறையாக உருவெடுத்தது. அதுதொடர்பான முதல்தகவல் வந்ததுமே, பங்குத் தந்தை அல்வாரிஸ், திருச்சினாப்பள்ளியிலிருந்த கவர்னர் ஜெனரலைச் சந்தித்து, கடும் கண்டனத்தைப் பதிவுசெய்து, ஆளுநரைக் கண்டிக்கும்படி கேட்டுக்கொண்டார். அப்போது மதுரையிலிருந்த பல்தாஸர் டா கோஸ்டா, திருமலை நாயக்கரைச் சந்தித்து, நிலைமைகளை எடுத்துரைத்தார். அதைக்கேட்டு அதிர்ந்த நாயக்கர், வந்தவரை ஆற்றுப்படுத்தி, தனது உத்தரவுகளை மீறி நடக்கும் அதிகாரிகளுக்கு கடும்தண்டனைக் காத்திருப்பதாக கோபத்தை வெளிப்படுத்திக் கடிதம் எழுதினார். அக்கடிதத்தைக் கண்டதும் கிறிஸ்தவர்களுக்கு எதிராக நடந்துகொண்டவர்கள் அத்தனை பேருமே அச்சத்தில் ஆழ்ந்தார்கள்.[86] 1659 ஆம்ஆண்டில் பிரோயன்ஸா எழுதியக் கடிதமொன்று, இடர்ப்பாடுகள் திரும்பவும் தரப்பட்டதைப் பேசுகின்றது.[87] இடர்ப்பாடுகளின்போது, பொதுமக்களுக்கும் ஏற்பட்ட அழிவுகள், புதியவழிகளைத் திறந்துவிட்டது. அது, ஆளுநர்களிடம் குற்றச்சாட்டுகளையும் விவாதங்களையும் கொண்டுசெலுத்தின. ஆல்வாரிஸ் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். பொதுமக்களின் எழுச்சியையொட்டி அவர் திருச்சினாப்பள்ளியிலிருந்த கவர்னர் ஜெனரலின் உத்தரவின்பேரில் விடுதலை செய்யப்பட்டார். மதம் பரப்பிய சமய குருமார்கள் அத்தனை பேருமே திருச்சினாப்பள்ளி யிலிருந்து நாடு கடத்தப்பட்டார்கள். டா கோஸ்டா, மறுபடியும் திருமலை நாயக்கரை பல்வேறு நேரிடல்களுக்குப் பின்பே, அவருக்கு திருமலை நாயக்கரின் தரிசனம் கிட்டியது. ஆயினும் அவர், டா கோஸ்டாவை இன்முகத்துடன் வரவேற்றார். சமய குருமார்களின் பணி தொடர்ந்து நடப்பதற்கும், இழந்தப் பொருட்கள் அவர்களை மீண்டும் வந்தடைவதற்கும் ஏதுவான உத்தரவுகளை வெளியிட்டார். மேலும், அவர்கள் கட்டுவித்தப் பேராலயங்களில் சுதந்திரமாகச் செயல்பட்டுக் கொள்ளவும் விரும்பிய இடத்தில் அவர்கள் குடியமரவும், தேவையான அளவில் உத்தரவுகளைப் புதுப்பித்தார். டா கோஸ்டா கொண்டு வந்த விலையுயர்ந்த பரிசுப்பொருட்களை பெற்றுக்கொள்ள, திருமலை நாயக்கர் தயவுடன் மறுத்துவிட்டார். இந்த உத்தரவுகள் திருச்சினாப்பள்ளியிலிருந்த ஆளுநரால் செயல்பாட்டுக்குக் கொண்டுவரப்பட்டன.[88] இந்த நிகழ்வுகள் எல்லாமே, 1650 ஆம் ஆண்டுக்கும் 1659ஆம் ஆண்டுக்குமிடையில் நடந்தேறியவை. திருமலை நாயக்கர் எப்போதும், குடிமக்களின் பிரதிநிதித்துவத்தை ஆதரிப்பவராகவே இருந்தார். அதைத் தனது நிர்வாகிகள்

செயல்படுத்தவேண்டும் என்று வற்புறுத்துவார். மதம்பரப்பும் சமய குருமார்களுக்கு ஆதரவாக, அவரது வலுவான தலையீடு இருந்தே வந்தது. சிலநேரங்களில் அவரது அதிகாரிகளின் கொடுவெறிச் சீற்றம் தாங்க முடியாமலாகியிருக்கின்றது. அந்த நடவடிக்கைகளைக் கண்டும்காணாமலும் போயிருக்கின்றார். எவ்வகையாயினும், திருமலை நாயக்கர் ஒரு வலுவான ஆட்சியாளராகத்தான் இருந்துவந்தார். ஒருபோதும் அவர், இகழ்ச்சிக்கு இடமளிப்பவராக இருக்கவில்லை.

ஒட்டுமொத்தத்தில், கிறிஸ்தவ மதம் தொடர்பான நடவடிக்கை களில் திருமலை நாயக்கரின் அணுகுமுறை, பரிவிரக்கம் சார்ந்ததாகவே இருந்தது. பிரயோன்ஸா மேலும் சொல்கின்றார்,[89] 'திருமலை நாயக்கர் கிறிஸ்தவ மதத்தை நேசித்தார். பாதுகாப்பு அளித்தார்'. அதேவேளையில் அவர், உள்நாட்டுக் குழப்பங்களின் போதும், வெளிநாட்டுப் போர்களின்போதும், மதம் பரப்பும் குழுக்களின் நடவடிக்கைகளுக்கு வலுவான அடக்குமுறையையும் கையாண்டார். அதுபோலவே, தனது குடிமக்களின் விசுவாசத்தை யும் அவர் விட்டுத்தராமல் பேணினார். கிறிஸ்தவ மதத்துக்கு திருமலை நாயக்கர் மாறிவிட்டார் என்று சொல்லப்பட்டவை யெல்லாம் அடிப்படையில்லாதக் கட்டுக்கதைகளாகும். கிறிஸ்தவர்களுடனான அவரது நடவடிக்கைகளுக்குத் தூண்டுகோலாக இருந்தது, அவர் உள்ளார்ந்துகொண்டிருந்த சுதந்திரக் கொள்கையின் வெளிச்சம் மட்டுமே.

**குணங்களும் பணிகளும்** - திருமலை நாயக்கரின் குணநலச் சிறப்பம்சங்களாக இருப்பவை, அவரது துணிவும், இறுதிவரையில் ஒருவீரனாக நிலைபேறு பெற்றதும்தான். தனது தளபதிகள் மீது, அவர் பெருத்த நம்பிக்கை வைத்திருந்தார். அது, நிச்சயமான நம்பிக்கை. அதற்கு அவர்கள், தகுதியானவர்களாகவும் இருந்தார்கள். போர்களை நடத்தும் பொறுப்பை அவர்களிடமே, நம்பிக்கையுடன் கொடுத்திருந்தார். ராமப்பையர், தனது முதல் போரை மைசூருடன் மேற்கொண்டார். சேதுபதிகளுக்கு எதிராக ஒருபடையெடுப்பையும் நடத்தினார். அவரது சொந்த நலனுக்காக, ராணுவப் பெருமிதத்தை ஏற்றுக்கொள்பவராக இருக்கவில்லை. ராமப்பையரின் இறப்புக்குப்பின், அவரே நேரடியாகப் பேரரசருக்கு எதிரானப் போரில் பங்கெடுத்துக் கொண்டதையும் காண முடிகின்றது. தஞ்சாவூர் நாயக்கர் விஜயராகவன் போர்த் திட்டங்களைக் காட்டிக்கொடுத்துவிட்ட நிலையில் சற்றும் மனந்தளராமல், அந்த இக்கட்டானச் சூழலில் பிஜப்பூர் சுல்தானை புத்திசாலித்தனமாகத் தூண்டி, தெற்குநோக்கி படையெடுக்கச் செய்துவிட்டு, செஞ்சியைக் காப்பாற்ற, விரைந்தோடிய தீரம்

அவருக்கிருந்தது. தனது நோக்கங்களுக்கு மற்ற வர்கள் துரோக மிழைத்துவிட்ட நிலையிலும், அவர் கடைசிவரை ஆண்மையோடு போரிட்டார். பெரும்எண்ணிக்கையிலானப் படைகளைக்கொண்டு, வென்று பொருள்கொள்ளும் ஆசையில் வந்துசேர்ந்த முகம்மதியர்களைத் தோற்றோடச் செய்து, செஞ்சியிலிருந்தும் விரட்டினார். வெற்றியடைந்தாலும், தோல்வியடைந்தாலும் அவர் தன்னிலையை விட்டுக்கொடுத்தவராக இல்லை. அதுபோல, தனக்குள் வடிவமைந்துவிட்ட, கருத்தூன்றிய தனது எண்ணங்களை யும் திட்டங்களையும் அவர் கைவிடவும் இல்லை. இரண்டாம் வேங்கடனின் கூனியூர் ஏடுகள், திருமலை நாயக்கரின் வீரத் தகுதிகளை இப்படியாக விவரிக்கின்றன: அவரது போர்த்திறம் எதிர்ப்பதற்கு கடினமாக இருந்தது. எதிரிகள் முழுபலத்துடன் ஒருமலையில் ஏறுமுன்னே, அவர் பலங்கொண்ட ஒருயானையாக அவர்கள்முன் நிற்பார். கடல்வழியே வந்து, நகரத்தைத் தாக்க முயன்ற எதிரிகளுக்கு, அவர் செயல்களில் விஞ்சிக்காட்டினார்.[90] இந்த விவரிப்புகளில் சில மிகைப்படுத்திக் காட்டக்கூடியதாகவும் உள்ளன. ஆயினும் அவை முழுவதுமானப் பொய்யும் இல்லை.

திருமலை நாயக்கர் மதப்பற்றில் தீவிரமாக இருந்தார். அவரது கட்டுக்கோப்பான அத்தனை நடவடிக்கைகளுமே அதனுள் வேர்கொண்டவையாக இருந்தன. கல்வெட்டுகளிலும் மற்ற ஆவணங்களிலும் காணப்படும் எண்ணற்ற தான, தருமங்களும், அருளிரக்கத்துடன் கூடிய தாராள மனப்பான்மையும் அவரது பெருந்தன்மையையும் சுயநலமின்மையையும் நிரூபணம் செய்கின்றன. நாட்டின் அத்தனை வளமும், நாட்டின் தேவைக்கும் முன்னேற்றத்துக்குமே பயன்படுத்தப்பட்டுள்ளது. குடிமக்களின் எண்ணங்களில் இடம்புகுந்திருக்கும் அளவுக்கு மக்கள் நலத்தில் அக்கறைக்கொண்ட சிறந்த ஆட்சியாளராக இருந்துவந்துள்ளார். அவரது சிந்தனையும் பயணமும் நாட்டைப் பற்றியதாகவே இருந்திருப்பதை, கல்வெட்டுகள் பதிவுசெய்துள்ளன.[91] அவர் நடத்தியக் கூலிப்போர்கள்கூட நாட்டின் மீதான அக்கறையில் நடத்தப்பட்டவையாக இருக்கின்றன. தனது குடிமக்களுக்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபட்டவர்களை அவர் பொறுத்துக் கொண்டதில்லை. விஜயநகரப் பேரரசுக்கு எதிராக, அவர் செய்த கலகம் நமது மாகாணத்துக்கு வெளியே ஒழுக்கவியல் நன்னெறிக் கோட்பாட்டு விவாதமாக ஆகியிருக்கின்றது. அவர் பெயரளவுக்கு பேரரசருடன் போர் புரிந்தார் என்று சொல்லப்படுவது உண்மையுமல்ல. ஏற்புடையதுமல்ல. பேரரசருக்குத் தலைவணங்கி இருக்க அவர் விரும்பியதுண்டு. தேசத்தின் மூன்றில் ஒருபங்கு வருவாய் பேரரசுக்குத் திறையாகச் செலுத்தப்பட்டும், அதனால்

திறைசெலுத்தும் மாகாணங்களுக்கு எந்தவொரு பயனும் இருக்கவில்லை. நாயக்க ஆட்சியின் ஆரம்பகாலத்தில் கீழ்ப்படிதல், திறைசெலுத்துதல் என்பது அந்நியப்படையெடுப்பிலிருந்து பாதுகாப்பதும், எல்லைப் பாதுகாப்புக்கான சிறுசெலவுகளுக்கு மானதாக இருந்தது. தற்போது பேரரசர் தனது எண்ணங்களை செயல்படுத்துமளவுக்கான அதிகாரத்தில் இல்லை. மதுரை நாடு தனது பாதுகாப்புக்கான அத்தனையையும் அதுவே பார்த்துக் கொள்கின்றது. மேலும், சுதந்திரம் பாவம் என்றால் அதில் விருப்பங்கொள்வதை, தீங்குவிளைவிக்கும் ஆன்மாவாகத் தன்னை திருமலை நாயக்கர் ஒப்புக்கொண்டவராக இருக்கின்றார். அந்தவகையில் போர்களுக்கான நியாயத்தை அறநெறியின் அடிப்படையிலானது, என்று அவர் கருதினார். எண்ணற்றக் கொடைகளும் அளவிறந்த தானங்களும் வழங்கியதன் பின்னணியில், அவர் கொள்கையாகக் கொண்டிருந்த சுதந்திரம் உண்மையாகவே இருந்தது. போர்களையும் அதனால் விளைய விருந்த தீங்குகளையும் அவர் எப்படி தவிர்த்தார் என்பதைக் கண்டறிவது, அத்தனை எளிதானதல்ல. திருமலை நாயக்கருக்குப் புகழ் சேர்ப்பதாக இருக்கும் அம்சம், ஆரம்பத்திலிருந்தே தன்னை அவர் தற்காப்பு நடவடிக்கை களிலேயே ஈடுபடுத்திக்கொண்டார். தனது ஆட்சிக்காலத்தின் இறுதியில் அவர் மைசூர்மீது படையெடுக்கச் சொன்னதுகூட, காட்டுமிராண்டித்தனமான நடவடிக்கைகளில் ஈடுபட்டு, கொடுமைபுரிந்தவர்களை தண்டிக்கும் நோக்கத்தினால் மட்டுமே. ஒருபோதும் அவர், அடுத்திருக்கும் நாட்டின் எல்லைகளை இணைத்துக்கொள்ள விரும்பியவர் இல்லை. தனது நாடு, வெளியிலிருந்து தலையீடுகள் எதுவுமின்றி, தன் கட்டுப்பாட்டுக்குள் இருக்கவேண்டும் என்ற எண்ணம் மட்டுமே அவருக்கு இருந்தது.

மதுரையை சுதந்திர நாடாக ஆக்கவேண்டும் என்பதே திருமலை நாயக்கர் அடைய விரும்பிய ஒற்றைக் குறிக்கோளாக இருந்தது. அதனாலேயே அவர், பாதுகாப்பை தனது முதல்குறியாக எடுத்துக்கொண்டார். வரலாற்றின் பக்கங்களில் கூறப்படும் எல்லைக் கோட்டைகளில் பெரும்பாலானவை, அவரால் கட்டப்பட்டவையே. எந்த அவசர நிலையையும் சமாளிக்கும் வகையில், அவர் போதுமான அளவில் ராணுவத்தைக் கைக்கொண்டிருந்தார். தனது திட்டங்களைச் செயல்படுத்துவதற்கு அவர் ஒருபோதும் தயங்கியது இல்லை. ஒருவேளை அவர் தவறுசெய்ததை உணர்ந்துகொண்டாரேயானால், உடனடியாக அந்தத் தவறை சரிசெய்துவிடும் மனப்போக்கும் அவரிடம் இருந்தது. ராம்நாட் விவகாரத்தில் முன்னர்செய்தத் தவறை திருத்திக்

கொண்டார். தனது பணிகளுக்கு தகுதியான நபர்களையே தேர்ந்து எடுத்தார். அதேவேளையில் அவர்கள் சுதந்திரமாகச் செயல்பட அனுமதியளித்தார். அவர்களின் பணியைத் தொடர்ந்து அனுமதிக்கும் அறிவுக்கூர்மை அவரிடம் இருந்தது. இடைவிடாமல் அவர்களை கவனித்து, அவர்களின் தகுதி மற்றும் அதிகாரத்துக் கேற்ப தன்னுடன் கேளிக்கைகளில் பங்கேற்கச்செய்து மகிழ்ச்சியில் ஆழ்த்துவார். அவரதுகாலத்தில் சேதுபதியின் விசுவாசம் குறிப்பிடத் தகுந்தது. அது, சாதாரணமானதல்ல. சேதுபதியைத் தொடர்ந்து, தனது செயல்களால் ஊக்கப்படுத்தி வந்தார். விசுவாசத்தையும் பணிவான சேவைகளைக் காணும்போது அவற்றை உடனடியாக அங்கீகரிக்கும் பெரிய மனது அவருக்கிருந்தது. தனது இறுதி காலத்தில் நாட்டில் ஒருமைப்பாட்டை வளர்க்க அவர் பெரும்போராட்டத்தை நடத்தினார். அதேவேளையில் அவரிடம் தவறுகள் இல்லாமல் இல்லை. தான் பொறுப்பேற்ற பணிகளுக்கு அவர் செலவுக் கணக்கு பார்த்ததில்லை. எதிர்ப்பைக் கடந்து முன்னேறுகின்ற அவரது மனப்போக்குக்கு, குடிமக்கள் பெருத்த விலையைக் கொடுக்க வேண்டியிருந்தது. அவர் நடத்தியப் போர்கள் நாட்டின் வளத்தை பலவீனம் செய்பவையாகவே அமைந்தன. அவரது திட்டங்கள் அவருக்குப் பின்னால் வருபவர்களால் ஒத்தக்கருத்தில் காக்கப்பட வேண்டியவையாக இருந்தன. தென்னிந்திய அரசியலில் தனது உதவிக்கு முகம்மதியர்களை வரவழைத்தார். ஆனால் முகம்மதியர்கள், திருமலை நாயக்கருக்குப் பின்னால் ஆட்சிக்கு வந்தவர்களை பலவீனப்படுத்தி, நாட்டுக்கு பெரும் தீங்கைத் தான் விதைத்துவிட்டுப் போனார்கள்.

நீடித்த நினைவுச் சின்னங்களாக, திருமலை நாயக்கரின் பெருமைகளை எடுத்துச் சொல்பவை கலைக்கும் கட்டிடக் கலைக்கும் அவர் கொடுத்துவந்த ஆதரவுதான். இதுகுறித்து, ஹிஸ்டரி ஆஃப் இந்தியன் அன்ட் ஈஸ்டர்ன் ஆர்க்கிடெக்சர் என்றநூலை எழுதிய வல்லுநர் ஜேம்ஸ் பெர்குசன்ஸ் போன்றவர்கள், மிகவிரிவாகப் பேசியிருக்கின்றார்கள். இந்தக் கலையார்வம், நிச்சயமாக அரசியல் வரலாற்றைச் சார்ந்தது அல்ல என்று அவர் கூறியிருக்கின்றார். திருமலை நாயக்கரின் கவனம், மதுரை மற்றும் அதன் சுற்றுப்புறத்துடன் நின்றுவிடவில்லை. அவர் அதையும் தாண்டிய கலையில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டவர். அரசின் உபரிவருவாய் முழுவதையும் அவர், இதுபோன்றப் பணிகளுக்குத் திருப்பிவிட்டார். இடைவிடாத கவனத்தையும் அதன்மீது கொண்டிருந்தார். அவர் எடுத்துக்கொண்ட பொதுப் பணிகள் பெரிய அளவிலானவை. ஆயினும், நடைமுறையில்

அவருக்கு தொழிலாளர் பிரச்சனைக்கூட வந்ததில்லை. எண்ணற்றக் கோட்டைகள், கோபுரங்களைத்தாண்டி கலைமேதமையுடன் அவர் கட்டிய சத்திரங்களும், அரண்மனைகளும் அற்புதமான உருவாக்கங்கள். இயேசு சபையின் கருத்துரையாளர்கள் ஆச்சரியமுற்று, இதனை புராதன கிரீஸ்தேசத்து, தீபிஸ்நகரத்தின் நினைவுச்சின்னங்களுக்கு இணையானவை என்று அறுதிசெய்கின்றனர்.

திருமலை நாயக்கரின் பெருமையும் மேன்மையும் வரலாற்று மரபில் பெரிதாக எழுதப்பட்டுள்ள ஒன்று. அது, காலம்கடந்து இந்நாளிலும் கட்டிடக் கலையின் எச்சமாக பிழைத்து நிற்கின்றது. இயேசு சபையின் ஆவணங்கள், அவரவர் காலத்திய நிலையில் திருமலை நாயக்கர் மற்றும் அக்பர் ஆகியோரின் கருத்துப் பண்புருவம் பெருமளவு ஒத்திருப்பதாக எடுத்துரைக்கின்றன. இதில், காய்த்தல் உவத்தலாக தகுதிவிருப்பமற்றத் தன்மை தெரிகின்றது. அநேகமாக, கிறிஸ்துவத்தை நோக்கிய மந்தமான அணுகுமுறைக் காரணமாக, அப்படி எழுதப்பட்டிருக்கலாம். இவர்களில் முன்னவர், தனித்த தன்மைகள் பலவற்றை தனது குணங்களாகக் கொண்டிருந்தார். ஆனால் அவரது இறுதிகாலத்தின் போது, அவையெல்லாம் மெல்லமெல்லத் தொலைந்து போயிருந்தன. அவரது கடைசிப் போரில் தொடுக்கப்பட்டத் தாக்குதல் அது. மாசு மருவற்ற, களங்கப்படாத வெற்றி, எப்போதாவதுதான் பெருமையுடனும் மேன்மையுடனும் சேர்ந்துபோகின்றது. ஐரோப்பாவின் சக்ரவர்த்திகளில் ஒருவரான பதினான்காம் லூயியைப்போல, குறைந்தபட்சமான நுண்ணுணர்வில் திருமலை நாயக்கரையும் இணைத்துப்பார்க்க முடிகின்றது. அந்தவகையில், அவர் பெருமைக்குரியவர். அவரது ஆட்சி, மக்கள் நினைவில்கொள்ளக்கூடிய ஆட்சிதான். 1709ஆம்[92] ஆண்டின் ஜனவரி மாதத்திய இயேசு சபையின் கடிதம், 'திருமலை நாயக்கரின் மரணத்தையடுத்து, அவருக்கு ஒருகோவில் கட்டப்பட்டது. அவர் மக்களால் வணங்கப்பட்டார்' என்று தெரிவிக்கின்றது. தனது குடிமக்களின் மனதிலும், அவர் வாழ்ந்தகாலத்து மற்ற மனிதர்களின் எண்ணங்களிலும், திருமலை நாயக்கர் தன்னை ஆழமாகப் பதிப்பித்துச் சென்றிருக்கின்றார் என்பதில், எந்தவொரு சந்தேகமும் இல்லை. 'அக்பர், திருமலை நாயக்கர் மீது குறைகாண்பது, சூரியனிலிருக்கும் கறுப்புப் புள்ளிகளை ஒத்தது' என்கின்றார், டாக்டர் வின்சென்ட் ஏ. ஸ்மித்.

திருமலை நாயக்கரின் ஆட்சிக்காலத்தைக் கணக்கில்கொள்ளும் ரங்காச்சாரி, ஏறத்தாழ அவரது குணநலன்கள் மற்றும் பணிகள் முழுவதையுமே கண்டனத்துக்கு உள்ளாக்குகின்றார்.[93] அவற்றின்

மீதான தனது கருத்தை வெளிப்படுத்த, வன்முறைமிகுந்த சிலசொற்றொடர்களைத் தேடிப்பிடித்து, வாக்கியங்களை உருவாக்குகின்றார். வம்சத்தின் மிகப்பெரிய பண்பிலிருந்து விலகிய, 'கறுப்புச்சாயம் பூசிய துரோகி' என்று திருமலை நாயக்கரைநோக்கி விரல்சுட்டுகின்றார். ஒருவீரனாக, ராஜதந்திரியாக அல்லது ஒரு அரசியல்வாதியாக முற்றிலும் பயனற்று தற்கொலை துரோகத்தை மேற்கொண்டதாகக் குற்றம்சாட்டும் ரங்காச்சாரி, இன்னும்ஒருபடி மேலேபோய், 'அறிவாழம்மிக்க தீயவன்' என்றும் 'அரசியல் அறநெறி தவறியவன்' என்றும் 'அரசியல் வன்முறையாளன்'... 'மரியாதை அல்லது தேசப்பற்று அறியாதவன், சூழலுக்கு ஏற்ற வாறு தன்னை மாற்றிக்கொண்டு வழிபாடுசெய்பவன், தனித்த சுயநலம் மிக்கவன். புகழுக்காக மனசாட்சியை விற்று, தேசத்தையும் மதத்தையும் காட்டிக்கொடுத்தவன்.[94] அவன் தான்மட்டும் அடிமையாகவில்லை. தென்னிந்தியாவின் மற்ற இந்து அரசர்களையும் வெறுக்கப்படும் இந்து அல்லாத காட்டுமிராண்டி சாம்ராஜ்ஜியத்துக்கு அடிமைப்படுத்திவிட்டவன்'[95] என்று பதறுகின்றார். இந்தக் குறிப்புகளெல்லாமே, நிதானமான விமர்சனம் என்ற வகைமைக்குள் அடைபடாதவை. திருமலை நாயக்கரின் கணக்கில், இதுவரைக் கொடுக்கப்பட்ட பதில்கள் பொதிந்துள்ளன. ரங்காச்சாரி, தான்சொன்ன வார்த்தைகளின் பொருள் அறியாதவர் அல்ல. ஆயினும் கீழ்க்கண்ட பத்திகள், 'வரலாற்றுப் பக்கங்களின் புகழ்ச்சியை ரங்க, கிருஷ்ண, முத்துவீரப்பா போன்ற அரசர்களின் அருஞ்செயல்களை, திருமலை நாயக்கர் மற்றும் ராணி மங்கம்மாளின் பணிகள், இன்னமும் வளமான அரசின், மகிழ்வான மக்களின் எடுத்துக்காட்டுகளாக இருக்கின்றன.[96] மதுரையை எத்தனையோ வம்சங்கள் ஆண்டிருந்தாலும், முதலாம் விஸ்வநாதன் மற்றும் திருமலை நாயக்கர் (மங்கம்மாள்) போல, என்றும் மக்கள் மனதில் மங்காதப் புகழைக்கொண்டவர்கள் யாருமில்லை என்பது நிதர்சனம்.[97] தனது தந்தை ஏற்படுத்திய இழப்புகளை, தளராத தனது முயற்சிகளால் மீட்டு, பழைய நிலைக்குக் கொண்டுவந்து மறுநிர்மாணமாய் அரசு அமைத்தது. திருமலை நாயக்கர் காலத்தில் இருந்தபெயரை, மீட்டெடுத்து, நிலைநாட்டியது'[98] எனப் பேசுகின்றன. பிஜப்பூர் சுல்தானின் அடிமை திருமலை நாயக்கர் என்ற ரங்காச்சாரியின் வாதம் முரண்பாடானது. முன்னர், அவர் எழுதியக்குறிப்பு ஒன்று, 'மதுரையில் பிஜப்பூர் சுல்தான்களின் மேலாண்மை ஆட்சி முந்தைய முப்பது (1660-89) ஆண்டுகள் நடந்தது' என்ற முரண்பாட்டைக் கலைக்கின்றது.[99] மதுரை அரசு குறித்து ஆண்ட்ரே பிரைரே, 1678ஆம் ஆண்டில் எழுதியக் குறிப்பில், 'மதுரை அரசு இருபதாண்டுகளுக்கு முன்பே, அதிகாரமிக்கதாக இருந்தது'[100] என்கின்றார்.

**திருமலை நாயக்கரின் மரணம்** - நெல்சன், 1659ஆம் ஆண்டின் பிரோயன்ஸாவின் கடிதத்தை எடுத்துவைத்துக்கொண்டு, அது 'திடீர் மரணம்' என்பதுபோல, ஒருகுறிப்பைச் சுட்டுகின்றார்.[101] அந்தவாக்கியம், இவ்வாறாகக் குறிக்கப்பட்டுள்ளது: திருமலை நாயக்கருக்கு வெற்றியை அனுபவிப்பதற்கான நேரம்கூட கிட்டவில்லை.[102] ஆனால், இதனை யூகம் என்னும் அளவுக்கு விட்டுவிடமுடியாது. திருமலை நாயக்கரின் மரணம்குறித்து, பலவிதமானப் புனை, சுருட்டுக் கதைகள் நெல்சனால் தொகுக்கப்பட்டன.[103] அதனை விரிவாக விவாதித்தவர், ரங்காச்சாரி. பின்னவரின் முடிவு கல்விச்செருக்குடன் வெளியிடப்பட்டது. அது ஏற்றுக்கொள்ளக் கூடியதுதான்: மதகுருமார் கொடிய குணக்கோட்பாடு மற்றும் கிறிஸ்தவர் தியாகத் தூய்மைக் கட்டுக் கதை எல்லாம் வரலாறு ஆகிவிடாது. ஒருகற்பனைப் படைப்பு, கணிசமான உண்மை ஆகிவிடாது. சமயக்கோட்பாடு மற்றும் துவேஷம் நம்பமுடியாது. அன்பும்சூழ்ச்சியும் அதற்கு சமமானதுதான். ஆனால் ரங்காச்சாரி, திருமலை நாயக்கர் திடீர்மரணம் அடைந்தார் என்ற வாசகத்தை எதிர்க்கவோ, மறுக்கவோ இல்லை. ஆனால், அசௌகரியத்தினால் அம்மரணம் நிகழ்ந்திருக்கும் என்று, மரணத்தின் தன்மையை அவர் யூகிக்கவே செய்தார்.[104]

திருமலை நாயக்கர் திடீர்மரணம் அடைந்தார் என்பதை மெய்ப்பிக்க, உண்மையான ஆதாரங்கள் எதுவும் இல்லை. அவர் கடைசியாக உச்சரித்த வார்த்தைகள் என்று, மெக்கன்ஸி மானுஸ்கிரிப்ட் என்ற கையெழுத்துப் பிரதி,[105] பின்வரும் வார்த்தைகளைச் சுட்டுகின்றது. 'நாம் உடல் நலிவுற்று பலவீனமாக இருப்பதை அறிந்துகொண்ட மைசூர்க்காரன், தனக்கு சாதகமாக ஆக்கிக்கொண்டு, நமது தேசத்தின் மீது படையெடுத்து வருகின்றான்'. இந்தச்சம்பவத்தின் மீது லியோன் பெஸ்ஸி[106] என்பவரது கணிப்பு, வெளிச்சம் பாய்ச்சுவதாக இருக்கின்றது. 1655 ஆம் ஆண்டு காலகட்டத்தில், திருமலை நாயக்கரைக் கொல்வதற்கு, பெண் வேடமிட்டக் கொலையாளி குறுவாளுடன் மூன்று நாட்களாக அரண்மனைக்குள்ளேயே ஒளிந்திருந்திருக்கின்றான். கொஞ்சநாட்கள் கழித்து, தலைக்குள் பிடித்திருந்த சீழ், அவர் உயிருக்கு ஆபத்தை விதைத்திருந்தது.' அவரது மரணத்தை வெவ்வேறு தளங்களில் இட்டுச்செல்வதற்கு இதுபோன்றச் சம்பவங்கள் இடமளிக்கவே செய்கின்றன. மரணமடைவதற்கு முன்பு அவர், பலகாலமாகவே உடல்நலக் குறைவால் அவதிப்பட்டார் என்பது வரலாற்றுத் தரவுகளின்வழியே தெளிவாகத் தெரிகின்றது. இந்தச்சூழ்நிலையில், வெற்றிபெற்ற ராணுவம் மைசூரிலிருந்து

திரும்பிவருவதற்கு முன்பு, திருமலை நாயக்கரின் மரணம்நேர்ந்தது என்ற பிரோயன்ஸாவின் கூற்று ஏற்றுக்கொள்ளும் வகையில் இருக்கின்றது.

மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி, மதுரைத்தல வரலாறு, பாண்டியன் வரலாற்றுத் தரவு ஆகியவை, திருமலை நாயக்கர் மரணமடைந்த நாள் என்று, விளம்பி ஆண்டின் மாசி மாதம், 4 ஆம்தேதியைக் குறிக்கின்றன. தி ஹிஸ்டரி ஆஃப் கர்நாடகா கவர்னர்ஸ் மற்றும் சப்ளிமென்டரி மானுஸ்கிரிப்ட் எனும் கையெழுத்துப் பிரதி, அதனை பிளவ ஆண்டுக்கு இட்டுச் செல்கின்றன. அதாவது, 1661-62. பின்னைத்தகவல், இயேசு சபையின் ஆதாரங்களோடும் சில கல்வெட்டுகளோடும் முரண்படு கின்றது. பிரோயன்ஸாவின் கடிதம், 1659 ஆம்ஆண்டை குறிப்பிடுகின்றது. அதிலிருந்து திருமலை நாயக்கர் மரண மடைந்தது, அந்தஆண்டின் முற்பகுதியில் என்று தெரிகின்றது. நிச்சயமாக, அது 1659 ஆம் ஆண்டு மார்ச், 19ஆம்நாள் நடந்திருக்கும். அதே நாளை தஞ்சாவூரில் தாக்குதல் நடத்த, முகம்மதியர்கள் நாள் குறித்திருந்தார்கள். அந்தப்படை அங்கே வந்துசேருவதற்குமுன்பு, போருக்கு உரிய தயாரிப்புகளை மேற்கொள்ளச் சொல்லி, தனக்குப் பின்னால் பொறுப்புக்குவந்த முத்துவீரப்ப நாயக்கருக்குக் குறிப்பு அனுப்புகின்றார்[107] திருமலை நாயக்கர். திருமலை நாயக்கரின் 1658-59ஆம் ஆண்டின் -விளம்பி- கடைசிக் கல்வெட்டு திருச்செங் கோட்டில் இருக்கின்றது. அங்கேயே அவருக்குப்பின்வந்த சொக்கநாத நாயக்கர், முத்துவீரப்ப நாயக்கர் ஆகியவர்களின் 1661ஆம் ஆண்டின் கல்வெட்டுகளும் இருக்கின்றன. திருமலை நாயக்கரின் மரணம், வரலாற்றுத் தரவுகளின் முதல்படிவத்தில் உள்ளதுபோல, அதாவது 1659ஆம் ஆண்டு பிப்ரவரி 16ஆம் நாள், சரியென்று ஏற்கப்படுகின்றது.[108]

பெரும்பான்மையான வரலாற்றுத் தரவுகளின்படி, திருமலை நாயக்கரின் மொத்த ஆட்சிக்காலம் முப்பத்தாறு ஆண்டுகள். பிரோயன்ஸா அவருக்கு முப்பது ஆண்டுகளை மட்டுமே வழங்குகின்றார்.[109] இந்தக்கேள்வி, அவருடைய பதவியேற்பு நாளுடன் உள்ளார்ந்தத் தொடர்புடையது. இதைத் தெளிவு படுத்துவது அத்தனை சுலபமல்ல. இதுகுறித்து, விரிவாகப் பேசப்பட்டுள்ளது. அதே இயேசு சபையின் கடிதமொன்று, திருமலை நாயக்கர் தனது எழுபத்தைந்தாவது வயதில் மரண மடைந்தார் என்கின்றது. நெல்சனின் நோக்கம் தெளிவற்றதாகவும் முரண்பட்டும் இருக்கின்றது. 1623ஆம் ஆண்டில்[110] திருமலை நாயக்கர் பதவியேற்றபோது அவருக்கு வயது, முப்பதிலிருந்து நாற்பது இருக்கும் என்று குறிப்பிடுகின்றார்.[111] 1659ஆம் ஆண்டு

அவர் மரணமடையும்போது அவருக்கு வயது, அறுபதுக்கும் எழுபதுக்கும் இடையில் இருக்கும் என்கின்றார். ஆனால் இந்தவிளக்கத்துக்கு அவர், எந்த ஆதாரத்தையும் கொடுக்கவில்லை.

அடிக்குறிப்புகள்

1. Appendix D, No.125
2. 1917, pp.131 and 134
3. Appendix D, No.123
4. Ibid, No. 124
5. Ibid, No.121
6. Ibid, No.126
7. Sewell, i, p.289
8. Bertrand, ii, p.254
9. Ibid, iii, p.50 Vide Appendix A, Letter No.1
10. Sir H.Elliot, History of India, vii, d.139
11. ii, p.201
12. p.142
13. These considarations are acutely analyzed with reference to Rome by viscount Bryce (Holy Roman Empire, 7th ed. p.311) He refers to the enthusiasm for a famous name as a powerful factor in politics and remarks that Itlay's passion for Thrill with a strong and steady pulsation till the anciant capital has become the nation's heart'
14. Taylor, O.H.MSS., ii, p.148
15. I.A., 1915, p.71; 1916, p.149
16. P.122
17. Bertrand, ii, p.226
18. Ibid., p.309
19. Ibid., p.346
20. Ibid., ii, p.198
21. p.124
22. I.A., 1916, p.166
23. Ibid., p. 134-5
24. Bertrand, ii, p.42, Vide Appendix A, Letter No.1
25. Ibid., p.44
Tirumala Nayaka's effort at independence can be regarded as neither new nor unprecedeted. The first feudatory to make himself indepentent in all but name was undoubtedly Raja Udaiyar of Mysore. That he should have undertaken a war againist Srirangapattanam, his direct superior in the empire, was an aggressive act, which, while it may have received the countenace

of the empire in its peculiar circumstances of difficulty, must have been regarded with suspicion even by the very emperor of the policy. Raja Udiyar conducted himself to all appearace as a loyal feudatory of the empire while Venkatapati was alive. In the revolutions that follwed his death he was too much occupied nearer home in securin his position to make any decisive intervention. When his grandson Chamaraja Udaiyar secceeded his, his Dalavaya took advantage of the confution in the empire to aggrandize the rising new state by annexing as much of the Channapattana viceroylty to its territoriw as they possibly a could this must have been regarded both by Mysoreans and by the imperialists as an act of pure aggression. During th period Mysore had to pay attention to a new danger in the aggressive activity of the sultansof Bijapur, and Bigapur invasaions seem to have become a normal item calling for the attention of the forign department of Mysore, Though most, if not all of Chamaraja's inscriptions preserce the form of allegiance to the empire the acts of Chamaraja throughout his reign show a disregrad for the empire that would warrant the assumption that the allegiance indicated was only nominal. We have not come upon any record of Mysore's having paind tribute to the empire: the aggressions of Bijapure would be a justification for not paying it, if off the mask at a time he could do so without being called teraitor to the empire, butthat was only formal act. The Nayaks of Madura, the predecessror of Tirmala, were inno better case, The disloylty of Madura can be said to have begun almost with the accession of Venkatapati to the throne, and it is this disloyalty that infected the viceroy nephew of Venkatapati himself who played an equally treacherous part against his uncle and retired to his own viceroyalty of Srirangapattanam. It is thus clear that the very last years of the emperor Sriranga and the early years of Venkatapati were the years when Madura projected a movement towards independence, and the almost regular hositlity to Tanjore may be a direct results of this. It will thus be clear that it was the province of Madura thatset the example regard to this disloyal movement. the viceroy of Srirangapattanam only following the bad example. Raja Udaiyar's effort of course comes later. This positoin of Madura is intelligible. It was several respects the premier viceroyalty and carrled with it the responsibility of keeping the coast clear of forign enterprise of a disintegrating charcter: It had also to keep Tracancore under its thumb. It had facilities for coming into communication with the Portu-

guese who grew in the early years of the seventeenth century hostile both to Tanjore and Ceylon, and got dislodged from the coast of the former. These circumstances would place Madura in a position to acquire power among the Nayaks easily. This Pre-eminent position of Madura was the result of Ramaraja Vitthala's operations in the south and the maintenance of the high position by the Nayaks following. Virappa I cherished this ambition of independence as against the empire, wihich was growing weaker as Madura was growing stronger – Ed.

26. Bertrand, iii, pp.42-3 Vide Appendix A Letter No. 1
27. Tirumala's attitude towards the emperor depended upon the conditions of the empire for the time being. The aggressions of Bijapure and Golkonda which had lasted a little more than the half century since battle of Talikota, had been drewing to a close, after a period of very considarable activity, in the years of the reign of Venkata II. It was about that time the Moghuls appeard in the Dakhan and adopted a vigorous policy of subjeguting the Dakhan kingdoms. It was no doubt true that in the first years the kingdom of Ahmadnagar had to bear the brunt of it, did not go forward actively to help their nieghbour and form a combination against the commen enemy (and this would have been theiw clearest line of action in their own intrest), their attention must certanly have been diverted in the direction of the north. That period synchronises with the active movement of Tirumala towards independenace in the south. Soon after the battle of Talikota the northern ot the Bhamani kingdoms had to turn north against the first movements of Moghuls towards the Dakhan under Akbar; the two southern kingdoms were left to manage between them the empire of Vijayanar badly crippled by the battle. They had come to an understanding in regard to the division of the territories of this Hindu empire. Bijapure was to pursue her aggressions in the territory above the Ghats and Golkonda was allowed for her share the country below the Ghats. The first efforts of the emperors and their loyal feudatories in the north as well las of the new born state of Mysore were in this direction, to meet the Muhammadan invassions whenever they should come as they did come very often. The emperor at Penukonda and the new ruler of Mysore being thus occupied, the southern viceroys had a free hand to manage their own affairs. It was open to them to have realized the danger which certainly was imminent and urgent for the northern parts, but was also a real danger, even in regard to the south-

ern viceroylties, though comparatively remove. Sound and far seeing policy required that these viceroys should hold's togather and give their support without stint, as their duty an loyalty alike demanded. to the empire in this position of jeodardy. Madura generally, since the commencement of the new country at any rate. cannot be regarded as having taken into calculation the actual political conditions of the times. The empire was struggling for existence during the first forty years of the century. and had barely succeeded in maintaining its existence by being driven successivly out from one capital on to another Penukonda had to be vacated be had because of the constant harrying of the Muhammadan invasions, Chandragiri had similarly to be abandoned, and early in the reign of Sriranga III , Vellore was being laid siege to. These changes did not happen in a short campaign or two, but by persistent effort of no less than three decades. The absorption of the Channpattana viceroyalty by Mysore enabled her to make a stand aginst the aggressions of Bijapur which were now under the guidance of a man of realized Shahiji the Maharatta. The whole brunt of the efforts of Golkonda had to be borne by the empire practically single handed. If Tirumala had only realized the situation and had the foresight to see the political consequences of the disintegrating movement of which he had made himself the sponsor, if not the author, he would certainly have adopted a policy of co-operation with the empire. The question of Tirumala's loyalty or disloyalty therefore depends upon the question whether, in the political conditions of his time, he could have foreseen the diret results of his action. The action of his predecessors and their, take an imperial view of the situation at the time. The intrests of Mysore and the empire ran togather a great way. It was the goverments behind these two that were for the time saved from the attacks of the Muhammandans. It cannot but have been clear to thes chief among them Tirumala, that what befell the empire would befell them soon after. If Mysore saved herself by sustained effort, the joint efforts of the emperor and his greater feudatories should have been equally successful. That Tirumala and his his frinds did not adopt this course of action argues either disloyalty or want of political forsight, either of the alternatives not redounding to the credit of the great Nayak of Madura. Sriranga's abortive effort exhibits a political prevision and a partriotism under trying circumstances, which shines in lurid contrast with the selfishness of the greater viceroyw who had

everything to gain by a united effort, and who had, without fully realizing the consequences thrown away the glorious chance in their selfich shorsightedness – Ed.

28. Taylor, O.H.MSS, ii, pp.169-75
29. pp. 125-6
30. I.A., 1916, p.166
31. Appendix D, No.121
32. Ibid, No.26
33. V.Nagam Aiya The Travancore State Manual, i, pp.302-3, Appendix D, 129
34. V.Nagam Aiya The Travancore State Manual i, p.275
35. Archeological Survey of India Report, 1911-2, p.195
36. Appendix D, No.130
37. p.265, Vide Appendix C.
38. I.A., 1916, pp.170-1, 178-84
39. pp..128-30
40. Report, pp.43-44
41. See also F.C., Danvers, The Portuguese in India, ii, p.268
42. Monumental Remains of the Dutch East Company, p.8
43. The Position of the Portuguese had in it elements that contributed to the disintegration of the Hindu states in the Peninsula. This did not become so clear until through the effort of Francis Xavier on the Parava coast, a large number of these fisherfolk had been converted to Christianity. These conversations were held to imply ipso facto a change of political loyalty from the Indian rular to the king of Portugal, and called for drastic intervention on the part of the empire of Vijayanagar. Ramaraja Vitthala, with his brother Timma, was deputed on this important mission, and after that the portuguese had to face the hostility of the empire of Vijayanagar more or less; but the empire was not alone in its opposition to this particular aspect of missionary effort. Later on as the sixteeth century was drawing to a close the activities of the Portuguese grew greater and contributed very largly to the fall of native rulers in Inida as well as in Ceylon. This aggeressive effort made them no obnoxious that the orthodox Tanjore Nayak, Achuta, had to turn them out of Nagapatam by main force, as he is made to declare that even by their summary dislodment from Nagapatam they had not learnt wisdom. They transferred their political activity therefore on the Tanjore coast to Devikotta at the mouth of the coleroon, and were declared by Govinda Dikshita. the minister to be the power behind the chieftain wo harried the country round

and assume an attitue of deiance against his leige lord, the Nayak of Tanjore, When Raghunatha Nayaka secceeded to the throne, he had to dislodge the Portuguese from Devikotta and restore the Raja of Jaffna who had been dispossed by them; and he had to fight the battle of Toppur with a considarable Portuguese contigent in the Pandyn army. we find the Portuguese again in allience with the Nayak of Madura in his campaign against his feudetory of the Marava country. In this position of affairs the Indian powers hostile to the Portuguese finding themselves probably unequal to them on the sea, had recours necessarily to the other European power, the Dutch. Thus we see the Madura Nayak actively in alliance with the Portuguese, and Tanjore and even Ramnad in alliance with the Dutch. The treaty referred to by Danvers is in keeping with the conditions of political division in t he country – Ed.

44. Bertrand, iii, p.48, Vide Appendix A, Letter No.1
45. Taylor O.H. MSS. ii, p.175
46. Appendix D, No.132
47. Ibid, No.140
48. Appendix D, No.133
49. p.138
50. Appendix D, No.147
51. I.A., 1916, p.185
52. About the Middle of Tirumala's when Sriranga, the last emperor of Vijayanagar, made an active effort to bring the empire togather for a common effort against the Muhammadans the political condition of South India was somewhat as follows – Shah Jahan's efforts in the Dakhan were becoming more and more successful and began to occupy in a rising degree the attention of Bijapur, and even to a certain degree of Golkonda. So the attention of the Muhammadan powers was being seriously diverted at the beginning of te stuggle, which ultimately cost them heir existence. The Emperor, who had recently succeeded to the throne, apparently found this a suitable opportunity to make one serious effort to bring the empire togather again and organiz the imperial resoures for a final stand along what had been the third line of defence of the great empire of Vijayanagar in the centuries preceding. The Nayak of Ikkeri was so hemmed in by Bijapur on the one side and Mysore on the other that he found it safe to throw in his lot whith the empire. Chamaraja Udaiyar of Mysore had just managed to absord into his terirtory the disinterating viceroyalty of Channapatana and thus prevented a greater part of it with the

Baramahals from falling into the hands of Bijapure. The emperor was in vellore with the central salient definitely loyal. Southward of these lay the viceroyalties of Gingi, of Tanjore, and of Madura, occupayaing the block of territory south of the Palar. Of these Tanjore remained traditionally loyal. Iw was Gingi and Madura that were the cause of trouble. In the early years of Sriranga's reign a siege of vellore, where sriranga was besieged by the Golkonda forces was raised by the efforets of Sivappa Nayaka of Ikkeri and the chieftains of second rank in the southern viceroylties could be brogt to thieir allegiance and if the resoruces of all thse could be put togethaer, an effective stand against the Muhammandans was possible, and with the Moghul diversion in the north it must have seemed to him that the chances therefore could not in the circumstances of the time be regarded as foolish, the responsibility for not co-operating in this effort must rest with the southern viceroys, chiefly the Nayak of Madura, and there was nothing in the situtation except perhaps selfihness to justify his attitude, not merely of aloofness, but even of active hostility – Ed.

53. Travals, part iii, p.91
54. C.R., iii, p.40
55. About the time when Sriranga made this effort, the aggeressions of Mysore on the Madura country could not have been so real as to make an alliance between Madura and Mysore impossible if a common loyalty to the empire still operated. The aggressions of Mysore against Madura were yet to begin. While it is barely possible that in the reign of Chamaraja an aggeression or two of a very temporary character may have taken place on the northern borders of the Madura viceroyalty the Mysore ruler was fully engaged in keeping Bijapur out and in occupaying the territory of the Channapattana viceroyalty above the Ghats and moving forward to take possession of such of Jagadevaraya's territories as were below the Ghats. This last stage of operations could be carried to completion only in the reign of Kanthirava Narasa. So far Then the operation of Mysore could have been only to extend their frontiers to the foothills that separated the Mysore plateau from the plain country below. This probably had the countenance even of the emperor Venkata II, as the only alternative was the occupation of this disintergrating viceroyalty by the Sultan of Hijapur, which would drive a Muhammaadan wedge betwwn the territory of Mysore and the dominions of the emperor. That prob-

ably explains why Sriranga appelaed first of all to Mysore for assistance and obtained the asylum which he found denied him in the southern viceroyalties – Ed

56. The alliance between Sriranga and Mysore, if Tirumala had understood the signs of the times would not have shown itself to be a combination which boded ill to him. This combination just succeeded in keeping Bijapur out on the side of the Mysore territory and keeping Mysore in touch with the territories of the emperor so that between Ikkeri, Mysore, and the emperor at vellore there was front line of defence without overthrowing which Bijapur could not advance against him or Gingi, or, for the matter of that, Tanjore. When once Bijapur had been invited by Madura. and if Gingi co-operated in this invitation actively or passively, there was no reson why the Bijapur army should sapre Tanjore. It would be difficult to understand how Tirumala Nayaka safegaurded his interests by trustin them into the hands of the Sultans of Bijapur, who from the point of view of Tirumala, must sooner or later over throw the emperor, as they in fact did, and his ally of Tanjore, who was even then perhaps actively assisting his. The turn of Mysore and Ikkeri would follow nezt. Tirumala would then be dependent entirely upon the good faith of Bijapur for his independence. Tirumala must have had the wit to understand that such independence would be worse than subordination to an emperor like sriranga and his descenandts. If thse consequences were averted, it was through the advance of the Moghul arms in the Dakhan and the danger that thretened both Bijapur and Golkonda. While therefore Tirumala's policy can be justified as a continuation of that of his predecessors towards the emperor, neither political foresight nor even enlightened self interest could be urged is support of the particular attitude that he took up as aginst Sriranga – Ed.
57. i, p.36
58. But R.Orme (Historical Fragment, p.62) remarks that the Muhammandan invasion of the Carnatic took place about 1652.
59. Appendix D, No.160
60. The trend of the transactions connected with final disappearance of Sriranga III is wrapped up in obscurity. It used tobe tkane hitherto that 1644 or 1646 was the last date ascribable to Sriranga, without any satisfactory authority as it would seem. After the open berayal of his imperial claims by the southern Nayaks when they declined to co-operate with him, his position in Vellore must

have become precarious and the invasions by Golkonda of the cenral regions of the empire must have become more persistent and regquent. It is in the course of these recurring invasion that the fort of Vellore must have been occupied by the Muhammadans, and according to the account given in the Sivatatvaratnakaram, Sivappa Nayaka's siege of Vellore and its recovery for Sri ranga must have taken place. It is not necessary that Sivappa should have been the ruler at the time. this may have taken place in the reign of his predecssor, Virabhadra in whose reign the older Sivappa, the younger Sivappa and his brother, Venkata are all thre of them said to have carried on the administration on behalf of Virabhadra. This period corresponds to the reign of Kanthirava Narasa, who was the first to show himself aggeressive on the southern frontier, and his aggeressions were so far successful that the occupied practically all the kongu country of Salem and Coimbatore districts even threatened Trichnipoly itself. It is probable that in this enterprise he had the countenance of the emperor in the first years of his reign It is an inscription of his reign, dated 1646, that omits mention of the imperial rular. a sure sign of assumption of independace. It was also Kanthirava Narasa that instituted a systematic and uniform coinage throwout his territory of both higher and lower denominations. He is said to have done it by abolishing the right to coinage that his feudatories hitherto enjoyed. This yet again is another indication of his assumption of independace. Something therefore must have taken place in 1646 or just a little before to have brought about this open disavowal of imperial authority. Tha event may have been the fall of Vellore rendering the emperor Sriranga practically a fugitive without a capital of his own. Kanthirava Narasa's rule entended till 1659. During his reign there is no mention, so far as is known at presen, on the Mysore side, of any asulum that Kanthirana Narasa offered to the emperor. It is probable that the emperor was allowed to live in his terriotory, but tha acts of assumption of dependant power detailed above would go against the supposition. The fact seems in to be that Mysore ruler kept Sriranga in good jumour by the apperacne of loyalty as cover to his aggrressions in the early years, and threw off the mask soom after. Thus the emperor was a wanderer without a home, as the jusuit records put it, seems to have been true during the remaining perod of the reign of Kanthirava Narasa. It attempted to maintain upon her conquests progressing rapidly towards Trichopoly

brought about a change in the situtaion generally, and in the attitude of the southern viceroys towards the emperor. The battle that was fought at Erode must have taken place about a change in the situation generally, and in the attitude of southern viceroys towards the meperor. The battle that was fought at Erode must have taken palce about the end of Devaraya's reign, as the Mysore accounts satate theat chikka deva while yet a prince, offered, when negotiations failed. to lead the army to voctory. This battle may be dated somewhere about 1670 and was undertaken astensibly in the interests of the emperor. It may be as a preliminary to this and in view of the aggerrsive attitude of Mysore that Chokkanatha changed his capital from Madura to trichinopoly in 1665. Sriranga must have sought asylum with Sivappa Nayaka only after this. According to the Sivatatvaratnakaram, Sivappa recived him and gave him the districts of Velur, Hassan and Sakkarpttana and maintained him in his territory. According to the Chikkadevaraya Vamsavali, Sivappa came to occupy the throne of Ikkeri when Chikkadevaraja Udaiyar had been ruling some years already. The date of Chikkadevarajas's accession is 1672, and Sivappa;s may be put down a couple of years later at the most. Sivappa's empassy to chikkadevaraja Udaiyar must have come in that year's dasara or the year following and therefore 1675 would be about the date when Sriranga ceased to be aforce in South and his forces were overwhelmed in the battle of Hassan, as the Ramarajiyamu has it some years later. If the coronation of Sivaji had any connection with the disappearace of the empire of Vijayanagar, Sriranga's death must have taken place earlier than the coronation. At any rate Sivaji must have felt the empire extinct when he undertook his southern invasion which had in it an idea of reviving the Hindu empire of the south. A recently discovered coin of Sivaji imitaion of the Vijayanagar pagada seems to lend colour to such a view – Ed.

61. Sewell, ii, pp.6-7, Nos.45 and 46
62. Travels, part iii, p.91
63. Ibid., p.92
64. Ibid, p.105
65. Historical Fragments p.62
66. Appendix D, No.143
67. Ibid, No.146
68. A voyage to the East Indies, p.247
69. J.T. Wheeler, Madras in the olden Time, i.p, 104

70. Mr.Rangachari accepts the statement of the Hisroty of the Carnataca Governors that he came with 60000 troops but this number is the total of the Madura army including the Setupati's
71. Bertrand, iii, pp.48-50, Vide Appendix A, Letter No.1
72. Taylor, O.H. MSS., ii, pp.175 and 182-3
73. The war of the noses' obiviously took place in the last year of the reign of Kanthirava Narasa and of Tirumala Nayaka of Madura. The reature of the cutting off of the noses is not mentioned in connection with any other Mysore war, either with the Pandyas or with other power. what exactly was the motive for this barbarit it is not possible to make out now. It would be difficult to throw doubt upon it in face of the combined evidence of several of the foreign authorities. There seems to have been a special reason for this particular form of barbarity, which used to be inflicted as a punishment in individual cases, where a partcularly disgraceful method of punishment was called for not on the field of battle, however, the improbablity of the story is heightened by the statement of one of the authorites that the king of Mysore himself suffered this mutilation. This is itself is very unlikely, and, if such a thing had happended there would have been some mention of it on the Mysore side as well. The trugh appears to be that this peculiar from of punishment was meted out by the Mysore army. to a certain number of people for some act of treachery by the enemies of Mysore either in the fighting line or among the civil population. There may have been a rebellion as well, but neither this nor the punishment can have been on the scale that the accountsd lead us to infer, as we have come upon nothing peculier in the Mysore troops either before or after to justify our ascribing this particular form of barbarity as a habitual feature to the Mysore army as a whole. Ferishta mentions an instance of similar barbasity when the Golkonda troops laid siege to Bidar – Ed.
74. Appendix D, Nos. 152 and 151
75. Danvers Report, pp.52-3, The Portuguese in India , ii, p.250
76. Danvers Report, pp.48-50 the Portuguese in India, ii, pp.253-4
77. Lettersd of Vico dated 1624 and 1625 Bertrand, ii, pp.225-51
78. Nobili's letter of 1627; Ibid, pp.261-71
79. Ibid., pp.251-61
80. Bertrand, ii, pp.271-80
81. Ante, p.123
82. Bertrand, ii, p.309
83. Ibid, p.346
84. Ibid, p.351

85. Bertrand, iii, pp.9-10
86. Ibid., pp.15-7
87. Ibid, p.55
88. Bertrand, iii, pp.56-60
89. Ibid, p.50 Vide Appendix A, Letter No.1
90. E.I., iii, pp., 236-58
91. Appendix D, No. 144
92. lockman, ii, p.379
93. I.A. 1916. p.149, et, seq. passim
94. Ibid, p.186
95. Ibid, p.199
96. I.A., 1916, p.54
97. Ibid, 1971, p.156
98. Ibid, p.158
99. Ibid, p.158
100. Bertrand, iii, p.273
101. p.141
102. Bertrand, iii, p.50, Vide Appendix A, Letter No.1
103. I.A., 1917, p.28
104. Ibid, p.36
105. Taylor, O.H.MSS, ii, p.182
106. La Mission du Madurai, p.205
107. Bertrand, iii, p.51, Vide Appendix A, Letter No.1
108. Appendix D, No.151
109. Ibid, No.156
110. p.121
111. p.139

# 9

# இரண்டாம் முத்துவீரப்ப நாயக்கர் (1659)

**மி**ருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதியின்படி, இரண்டாம்முத்துவீரப்ப நாயக்கர், விளம்பி ஆண்டின் மாசி, 5ஆம் நாளிலிருந்து, விகாரி ஆண்டின் வைகாசிவரை, தோராயமாக, 1659ஆம் ஆண்டின் பிப்ரவரி, 17 முதல் ஜுன்வரையில் ஆட்சி செய்திருக்கின்றார். அதாவது, ஒரு நான்குமாதங்கள். பாண்டியர்கள் வரலாறு மற்றும் மதுரைத்தலவரலாறு ஆகிய பதிவுகள் விளம்பி ஆண்டின் பங்குனிமுதல், விகாரி ஆண்டின் வைகாசிவரை அவரது ஆட்சியின் காலகட்டத்தைச் சுருக்குகின்றன. அதாவது, ஆட்சிக்காலம் மூன்றுமாதங்கள்தான் என்கின்றன. இந்த வரலாற்றுத் தரவுகள் எல்லாமே, அவரது ஆட்சி முடிவடைந்த மாதத்தில் ஒருமித்தக்கருத்து கொண்டிருக்கின்றன. ஆட்சியின் துவக்க நாளிலும்கூட அந்த அளவுக்கு அவை வித்தியாசத்தைப் பார்க்கவில்லை. அநேகமாக, கடைசி இரண்டுதரவுகளில் கொடுக்கப்பட்டிருக்கும் முடிசூட்டுவிழா தேதி, திருமலை நாயக்கரின் இறப்புக்கும், இரண்டாம்முத்துவீரப்ப நாயக்கரின் முடிசூட்டு விழாவுக்கும் இடையிலிருந்த ஒருமாதகாலத்தை இடைவெளியாக்கியிருக்கின்றன. மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி, மரணத்தையொட்டிய நாட்களிலேயே முடிசூட்டுவிழா நடந்ததாகத் தெரிவிக்கின்றது. ஆனால் இயேசு சபையின் கடிதங்கள், இரண்டாம்முத்துவீரப்ப நாயக்கரின் தேதிகளை குறிப்பிட்டுப் பேசவேயில்லை. அவை, மிகக் குறைந்தகாலமே அவர் ஆட்சி செய்தார் என்று, ஒருபோக்காய் சொல்லிவிட்டுச் செல்கின்றன. கல்வெட்டுகள் மட்டுமே, அவர் திருமலை நாயக்கரின் மகன் என்றும் சொக்கநாத நாயக்கரின் தந்தை என்றும் தகவல்கள் தெரிவிக்கின்றன. தி ஹிஸ்டரி ஆஃப் கர்நாடகா கவர்னர்ஸ் மற்றும் சப்ளிமெண்டரி மானுஸ்கிரிப்ட் என்ற கையெழுத்துப் பிரதியும் அவரது ஆட்சிக்காலம் பத்தாண்டுகள் என்று பகர்ந்து, கல்வெட்டுகள் மற்றும் இயேசு சபையின் கடித ஆதாரங்களுக்கு எதிராக இருக்கின்றன. நெல்சன் குறிப்பிட்டுச் சொல்வதைப்போல, இரண்டாம்முத்துவீரப்ப நாயக்கர் முறையற்ற முறையில் திருமலை நாயக்கருக்குப் பிறந்த மகன் என்பதற்கு,

எந்தவொரு ஆதாரமும் காணப்படவில்லை.[1] வரலாற்றின் பக்கங்களிலும் முறைதவறிப் பிறந்த மகன் பற்றி, எங்கேயும் பதியப்படவில்லை. அவையெல்லாமே திருமலை நாயக்கரின் மகன்தான்,[2] அவர் என்று பேசுகின்றன. இயேசு சபையின் கடிதமொன்று, ஆட்சியின் இறுதிக்கட்டத்தில், பிறப்புகுறித்த சந்தேகங்களால், அவரது குணநலன்கள் மிகமோசமாக மாறிவிட்டன. ஆயினும் அவர், திருமலை நாயக்கரின் மதிப்பு மிகுந்த மகனாக[3] நடந்துகொண்டார் என்று பேசுகின்றது. திருமலை நாயக்கரின் முறையான மகன் குறித்த இருப்பு, கல்வெட்டுகளால் நிரூபணம் செய்யப்பட்டுள்ளன.[4]

திருமலை நாயக்கரின் மரணத்துக்கும் இரண்டாம்முத்துவீரப்ப நாயக்கரின் பதவியேற்புக்கும் இடையில் ஒருஇடைவேளையை பாண்டியர்களின் வரலாற்றுக் குறிப்பு வரலாறு அனுமதிக்கின்றது. பதவியேற்பு தொடர்பானச் சச்சரவுகள், இந்த காலஇடைவெளியை ஏற்படுத்தின என்கின்றது,[5] அது. இக்கருத்துக்கு மறைமுகமாக இணக்கம் தெரிவிக்கின்றது, மெக்கன்ஸி மானுஸ்கிரிப்ட் எனும் கையெழுத்துப் பிரதி. முன்னமே குறிப்பிட்டதுபோல, திருமலை நாயக்கருடனான குமார முத்து நாயக்கரின் உறவுநிலைகுறித்து, தெளிவற்றநிலையும்[6] நீடிக்கின்றது. குமார முத்து நாயக்கரும் தன்பங்குக்கு அரியணை உரிமையைக் கோரினார். ஆனால் அவரது கோரிக்கைகள் மக்களாலும் அமைச்சர்களாலும் புறக்கணிக்கப் பட்டன. அதனால் அவர் மிகவும் எரிச்சலுற்றுப் போனார். மைசூர்போரை வெற்றிகரமாக நடத்திமுடித்துவிட்டுத் திரும்பிய அவர், மதுரைக்கு அருகில் முகாமிட்டார். பேச்சுவார்த்தைகள் தொடர்ந்தன. வரலாற்றுத்தரவுகளின்படி, அமைதியானமுறையில் புரிந்துகொள்ளல் ஒப்பந்தமொன்று, ரங்கண்ண நாயக்கரின் சமரசத்தால் உருவாக்கப்பட்டது. குமாரமுத்து நாயக்கருக்கு சுதந்திரமானப் பொறுப்பாக சிவகாசியும், தின்னவேலியில் சிலபகுதிகளும் கொடுக்கப்பட்டன. படைக்கானப் பொறுப்புகளும் அவரிடமே ஒப்படைக்கப்பட்டன. தனதுபகுதியை அவர் ஆட்சிசெய்துவந்தார். ஒருதளபதியாக பங்கெடுத்து, வெற்றிகரமாகப் போரை நடத்திவிட்டுத் திரும்பிய உடனேயே, சுய அழிப்பை தன்னார்வத்துடன் அல்லது மனமார்ந்துசெய்துகொண்ட நடவடிக்கையிலிருந்து, திருமலை நாயக்கரின் சட்டபூர்வமான மகன்தான் இரண்டாம்முத்துவீரப்ப நாயக்கர் என்பது உறுதியாகின்றது. குமாரமுத்து நாயக்கர், திருமலை நாயக்கரின் சகோதரராக இல்லாதபட்சத்தில், அவரது சட்டபூர்வமற்ற மகனாக இருப்பதற்கும் வாய்ப்பு இருக்கின்றது. இல்லாதுபோனால், விவேகம் நிறைந்த அமைச்சர் குழு, குமாரமுத்து நாயக்கரின்

இலட்சியத்தை நிறைவேற்றி, நாட்டை பாகம்போட்டுக் கொடுத்திருக்காது.

பொறுப்பேற்ற உடனேயே முத்துவீரப்ப நாயக்கர், தனது ஆட்சிப்பரப்பெல்லையின் வடக்குப்பகுதியான திருச்சினாப்பள்ளிக் கோட்டையை வலுப்படுத்தினார். வீரர்களையும் ஆயுதங்களையும் அங்கு கொண்டுசேர்த்தார். தளபதி லிங்கம நாயக்கரின் பொறுப்பில் அதை ஒப்படைத்தார். ஒருவேளை, முகம்மதியப் படைகள் தன் நாட்டுக்குள் படையெடுத்தால், வடக்கே பலமானப் பாதுகாப்பு இருப்பதாகக் காட்டிக்கொள்ளும், தயாரிப்புப் பணியது. தொடர்ந்து, தஞ்சாவூர் நாயக்கரைத் தன்னுடன் சேர்ந்து கொள்ளும்படி வீணாக வற்புறுத்தவும் செய்தார். தஞ்சாவூர் நாயக்கரோ, பிஜப்பூர் சுல்தானுடன் பேச்சுவார்த்தையைத் தொடங்கியிருந்தார். ஆனால் அதை, வெளிக்காட்டிக் கொள்ள வில்லை. ஆதில்ஷா என்ற இடல்கான் விரைவிலேயே மிகப்பெரிய படையொன்றை சகோசி மற்றும் மூலா ஆகியோரின் தலைமையில், நாயக்கர்களின் நாடுகளை வெல்லுமாறு அனுப்பிவைத்தார். முத்துவீரப்ப நாயக்கரின் முன்தயாரிப்புகளைக் கண்டு அதிர்ந்து, பயந்த தளபதிகள், திருச்சினாப்பள்ளியிலிருந்து விலகி, எதிர்பாராத் திருப்பமாய்த் தஞ்சாவூர் மீது, 1659ஆம் ஆண்டின் மார்ச், 19 ஆம்தேதி தாக்குதலைத் தொடங்கிவிட்டார்கள். கோட்டையில் போதுமான பாதுகாப்பும், வீரர்கள் வழங்கப்படாமையாலும், தளபதியின் கோழைத்தனத்தாலும், வெறியுடன் வந்தவர்களுக்கு மிகஎளிதாகக் கோட்டை வசமாகியது. தஞ்சாவூரின் வீழ்ச்சியைத் தொடர்ந்து, மற்ற முக்கிய நகரங்களான மன்னார்கோவிலும், வல்லமும் கொஞ்சம் எதிர்ப்புக்குப்பின்னால் சரணடைந்தன. அங்கிருந்து முகம்மதியர்கள் ஏராளமானப் பொருட்களைக் கொள்ளையடித்தார்கள். ஆயினும், அவற்றில் பெரும்பாலானவற்றை கள்ளர்கள் தூக்கிச் சென்றுவிட்டதால், அதிருப்திக்கு உள்ளானார்கள். வல்லத்தில் காவல்படையை நிறுத்திவிட்டு, அப்படியே நாடு முழுவதும் பரவினார்கள்.[7] நெல்சன் குறிப்பிடுவதுபோல, முகம்மதியப் படை மதுரையை நோக்கி வந்ததற்கான ஆதாரங்கள், எங்கும் காணப்படவில்லை.[8] முகம்மதியப் படையெடுப்பால் நாட்டில் பெரும்பஞ்சம் ஏற்பட்டு, மக்கள் மதுரைக்கும் சத்தியமங்கலத்துக் கும் அகதிகளாகப் போனார்கள். பஞ்சத்துக்கு முகம்மதியர்களைத் தெரியவில்லை. அவர்களும் அதற்கு இலக்கானார்கள். அதனால், ஏராளமான வீரர்களையும் குதிரைகளையும் இழந்தார்கள். இறந்த உடல்களை புதைக்காமல் அப்படியப்படியே போட்டுவிட்டதால், அவை அழுகி, கொள்ளைநோய்க்குக் காரணமாகிவிட்டது. கொள்ளைநோயால் இறந்தவர்களின் எண்ணிக்கை பன்மடங்காக

உயர்ந்தது. இதற்கெல்லாம் கிரீடம் சூட்டியதுபோல, முகம்மதியப் படைத்தளபதிகள் தங்களுக்குள் அடித்துக்கொண்டார்கள். மூலா, இந்தப்பேரழிவு நிலையைக் குறைக்கமுற்பட்டார். மதுரை மற்றும் தஞ்சாவூர் நாயக்கர்களுடன் அவர் பேச்சுவார்த்தை நடத்தினார். மதுரை நாயக்கர் தனது படைபலத்தின் மீது நம்பிக்கைக் கொண்டிருந்தார். தஞ்சாவூர் நாயக்கரிடம் இழப்பதற்கு எதுவுமில்லை. முகம்மதியர்கள் போக்கிடம் இல்லாமல் இங்கேயே தங்கிவிட்டால், அதனால் உருவாகும் பின்விளைவுகளை இருவரும் அறிந்தவர்களாக இருந்தார்கள். ஆயினும், மூலாவின் நேசத்தொடர்பு முயற்சி அல்லது தனிமுறைக் கோரிக்கை எதுவும் பயன்தருவதாக இல்லை. தஞ்சாவூர் பஞ்சத்தாலும், தொற்று நோயாலும் நிரம்பிவடிந்தது. அதனால் அங்கிருந்து புறப்பட வேண்டிய இக்கட்டு ஏற்பட்டதும், அவர் திருச்சி னாப்பள்ளியை தன்னிடமிருந்தப் படைகளைக்கொண்டு முற்றுகையிட்டார். தன்னிடமிருக்கும் வலிமைக்கு இது அதிகமானச் செயல் என்று, அவருக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. தனது சூழ்ச்சித் திட்டத்தாலோ அல்லது படைபலத்தாலோ வலுவான திருச்சினாப்பள்ளிக் கோட்டையை முகர்ந்துபார்க்கக்கூட முடியாது என்று கணிக்கவும் செய்திருந்தார். நாட்டுக்குள் கொள்ளையில் இறங்கினால் ஏதும் லாபம் இருக்கப்போவதில்லை என்பதையும் அவர் உணர்ந்திருந்தார். கள்ளர்கள் குழுவினர் கணிசமான அளவில் முகம்மதிய முகாம்களில் நுழைந்து, பாழ்படுத்தி விட்டுப் போய்விட்டார்கள். நழுவித்தப்பித்துக்கொள்ளும் மழுப்பலான எதிரியுடன் பேரமோ, ஒப்பந்தமோ செய்துகொள்ள அவரால் முடியவில்லை. இயேசு சபையின் எழுத்தாளர் ஒருவர், தனது பார்வையை இப்படியாகப் பகிர்கின்றார்: போர்க்காலங்களில், துணிச்சலான இந்த மனிதர்களின் படை, ஒருராணுவத்துக்கு இணையாகச் செயல்படும். முகம்மதியப் படைகள் போர் தொடுக்கும்போது அரசர்களைக் காட்டிலும் கள்ளர்கள் என்று விளிக்கப்படும் இந்த மனிதர்களுக்குத்தான் அதிகமாக அஞ்சுவார்கள்.[9] சதிசெய்வதில் அவர்களுக்கு இணையானவர்கள், யாருமில்லை. மூலாவின் கெட்டகாலம், அவரதுமுயற்சிகள் எதுவுமே பலன்தருவதாக இல்லை. மதுரைநாயக்கரிடமிருந்து கணிசமானத் தொகையைக் கறந்துவிடலாம் என்று காத்திருந்த மூலா, அந்த எண்ணத்தைக் கைவிட்டார்.

முத்துவீரப்ப நாயக்கரின் துணிவும் துன்பம் தாங்கும் பொறுமையும் கடைசியில் பலனற்றுப் போய்விட்டது. முகம்மதியர்களின் எந்த 'முயற்சி'யும் அவரிடம் பலிக்கவில்லை. அமைதியை அவர் கூடுதல் செலவில்லாமல், மலிவு விலையில்

வாங்கினார். ஆனால் வெற்றிபெற்றக் கொஞ்சநாட்களிலேயே அவர் மரணத்தைத் தழுவினார். அவரது ஆட்சி குறுகியகாலமே நடந்திருந் திருந்தாலும், அக்காலம் முழுவதுமே அவர், முகம்மதியர்களுடன் போராட்டத்திலேயே கழிக்க வேண்டியிருந்தது. அவரது குணநலன் குறித்தப் பார்வையில் இயேசு சபையின் அணுகுமுறையை நடுநிலையாக அறிய முடியவில்லை.[10] அவரது ஆட்சி தொடங்கும் போது அச்சபை, 'தந்தையின் உயர்ந்த குணநலத்தைக் கொண் டிருந்தார்' என்று ஒத்துக்கொள்கின்றது. பின்னர், 'அவர் பரத்தை மகன்' என்று நிறுவமுயலுகின்றது. முடிவில், 'அவரது ஊழ்வினை யால் நிதானமான ஆட்சி தந்தார்' என்று விலகி நிற்கின்றது.[11] வரலாற்றுத் தரவுகள் அவர் தான, தருமங்களை பரந்த மனதுடன் செய்தார் என்றும், அண்டைநாட்டு அரசர்களுக்கு சிம்ம சொப்பனமாக விளங்கினார்[12] என்றும் சொல்கின்றன. முகம்மதியர்களிடம் அவர் நடந்துகொண்ட போர்த்திட்ட முறைகள், அவ்வாறு சொல்ல வைத்திருக்கலாம்.

## அடிக்குறிப்புகள்

1. pp.178 and 253
2. Taylor, O.H.MSS, ii, pp.33 and 183
3. Bertrand, iii, p.121, Vide Appendix A, Letter No.2
4. Appendix D, Nos. 151 and 152
5. Taylor, O.H.MSS., ii pp.177 and 183-4
6. Ante p.71
7. Bertrand, iii, pp, 50-3 Vide Appendix A, Letter No.1
8. p.180
9. Bertrand, iii, p.184-5
10. Ibid, pp.119-20 Vide Appendix A, Letter No.2
11. Ibid, p.121
12. Taylor, O.H.MSS., ii, p.190

# 10

# சொக்கநாத நாயக்கர் (1659-1682)

**பதவியேற்பு** - **மி**ருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப்பிரதி, சொக்கநாத நாயக்கர் விகாரி ஆண்டின் ஆனிமாதத்திலிருந்து, ஜுலை, 1659, துந்துபி ஆண்டின் ஆனிமாதம்வரை, ஜுலை, 1682 வரை ஆட்சிசெய்ததாகக் குறிப்பிடுகின்றது. பாண்டியர் வரலாறும் துல்லியமாக அதே ஆண்டையும் மாதத்தையும் குறிப்பிடுகின்றது. ஆனால் மொத்த ஆட்சிக்காலமான இருபத்தி மூன்று ஆண்டுகளை, சற்றே தூக்கலாக இருபத்திநான்கு ஆண்டுகள் என்கின்றது. இந்தஆட்சிக் காலத்தை, உறுதிபடுத்தவில்லையாயினும், இயேசு சபையின் கடிதங்களோடும் கல்வெட்டுகளோடும் முரண்பட வில்லை. இதுதொடர்பாக, ரங்காச்சாரியும் அதேகாலகட்டத்தைக் குறிப்பிடுகின்றார். சொக்கநாத நாயக்கரின் தொடக்கக் காலத்தை உறுதிப்படுத்த, அவர்கொண்ட கல்வெட்டு ஆதார முயற்சிகள் அத்தனை திருப்திகரமாக இல்லை. திருச்சினாப்பள்ளி ஜெயந்தீஸ்வரா கோவிலிலுள்ள பரபாவ ஆண்டின் ஆனி மாதம், 27ஆம் நாளின் கல்வெட்டொன்றை அவர் குறிப் பிடுகின்றார். அந்தக்கல்வெட்டு, 1659ஆம் ஆண்டைச் சேர்ந்தது என்கின்றார். ஆனால் அதற்கு மேற்கோள் எதுவும்காட்டவில்லை. 1919ஆம் ஆண்டில், அவர் பதிப்பித்த இன்ஸ்கிரிப்ஷன்ஸ் ஆஃப் தி மெட்ராஸ் பிரசிடென்ஸி நூலில், அதுகுறித்து சேர்க்கவேயில்லை. ஒருவேளை அது, அவரது சொந்தக் கண்டுபிடிப்பாக இருக்கலாம். அப்போதும்கூட, காலவரன்முறைச் சுழற்சியில் பரபாவ ஆண்டு, 1666-67ஆம் ஆண்டை ஒத்திருக்கின்றது.[1] அவர் வெளியிட்ட பிந்தையப் பதிப்புகளில், சொக்கநாத நாயக்கரின் ஆட்சிக்காலம் குறித்து, பல்வேறு தரவுகளையே பயன்படுத்தியிருக்கின்றார். ஓரிடத்தில் அவர், 1660ஆம் ஆண்டிலிருந்து 1682ஆம் ஆண்டு வரை ஆட்சிசெய்தார் என்று குறிப்பிடுகின்றார். அதனை அச்சகத்தின் பிழை என்றுகூடக் கொள்ளலாம். பிறிதொரு இடத்திலும் ரங்காச்சாரி, 'சொக்கநாதனின் ஆட்சிக்காலம் 1660ஆம் ஆண்டிலிருந்து 1682 வரை' என்கின்றார்.[2] தனது கருத்துகளை மாற்றிமாற்றிப் பேசுவது, அத்தனை விருப்பத்திற்குரியது அல்ல. அதையும் அவர், வெளிப்படையாகச் சொல்லவில்லை.[3] நெல்சன்,

சொக்கநாத நாயக்கரின் பதவியேற்பு தேதி குறித்து, எதுவும் சொல்ல வில்லை. மதுரை நாயக்கர்கள் குறித்த அத்தனைத்தரவுகளையும் பெரும்பாலும் பதிவுசெய்திருக்கும் சீவெல், 1660ஆம் ஆண்டையே ஏற்றிச் சொல்கின்றார்.[4]

**சொக்கநாத நாயக்கரின் இளமைப் பருவம்** - சொக்கநாத நாயக்கர் அரியணை ஏறியபோது, அவருக்கு வயது பதினாறு மட்டுமே. இயல்பாகவே, முதன்மை அதிகாரிகள் உண்மையான அதிகாரத்தைக் கையில் வைத்திருந்தார்கள். அவர்கள்தான் சொக்கநாத நாயக்கரின் பெயரில் ஆட்சிசெய்துவந்தார்கள். பிரதானி, ராயஸம் மற்றும் தளவாய் ஆகியமூவரும் வெளிப்படையாகவே சதிச்செயலில் ஈடுபட்டு, தங்கள் சுயலாபத்திற்காக எதையும் செய்பவர்களாக இருந்தார்கள். அது கண்டுபிடிக்கப்பட்டு, நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டார்கள். அல்லது சிறைதண்டனை பெற்றார்கள். பொதுமீளாய்விலிருந்து தங்கள் அபகரிப்பு நாடகத்தைத் தவிர்க்க, உண்மையான விஷயங்களைக் கண்டும் காணாதவர்களாக இருந்துகொண்டனர். பழைய அரசியல் ஒழுங்குகளை நாட்டில் கொண்டுவருவது, தங்கள் லட்சியத் திட்டம் எனச் சொல்லி, முகம்மதியர்களுக்கு எதிராகத் தாக்குதல் போரை நடத்தும் சதித்திட்டத்தை, அவர்கள் மூவருமாக உருவாக்கினார்கள். அந்தத்திட்டத்தைச் செயல்படுத்த மூவருள் ஒருவரான தளவாய் லிங்கம நாயக்கரிடம் அப்பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. இந்த சாத்தியமற்றத் திட்டங்களில் சொக்கநாத நாயக்கரின் பங்களிப்பு ஏதும் இருந்ததுபோலத் தெரியவில்லை. தளவாய் லிங்கம நாயக்கர் போர்த்திறம் மிக்கவர் என்பதால், அவர் உருவாக்கியிருக்கும் அமைச்சர்களுடனான மூவர் சதிக்கூட்டணி மீது, யாருக்கும் சந்தேகம் எழவில்லை. செஞ்சியைக் கைப்பற்றியிருக்கும் முகம்மதியத் தளபதி சாகோஸியை அடித்துவிரட்டி, கோட்டையைக் கைப்பற்றுவதற்காக, 40,000 போர்வீரர்களுடன் பீடுநடையுடன் கிளம்பினார். ஆனால் அவர்களின் உண்மையானத் திட்டம், தளவாய் லிங்கம நாயக்கர் போரை நீட்டித்துக்கொண்டே யிருந்து, முகம்மதியத் தளபதியிடமிருந்து கையூட்டுப்பெற்று, தன்னை வளப்படுத்திக்கொள்வதாக இருந்தது. இவ்வாறாக, சதியாளர் கூட்டணி, முழுஅதிகாரத்துடன் அனுபவித்து, தங்கள் பணப்பெட்டிகளை நிரம்பி, மக்களை ஒடுக்கியது. சொக்கநாத நாயக்கர் ஒருவேளை பலத்த நடவடிக்கை எதுவும் எடுத்து விடுவாரோ என்று எண்ணி, மிகக்கடுமையான உழைப்பைச் செலுத்தி, அவரது இடத்தைக் காப் பாற்றிவருவதுபோலக் காட்டிக்கொண்டவர்கள், நாயின்கழுத்தில் பெருமையாக மாட்டப்படும் தோல்வார்போலான மரியாதையையும் அவருக்குச்

செலுத்திவந்தனர். நாடு வளமையாக இருக்கின்றது என்று நம்பிக்கொண்டு சொக்கநாத நாயக்கர் வளையவந்தபோது, அவரைப் பதவியிலிருந்து தூக்கிவீசிவிட்டு, அவரது இளைய சகோதரனை அந்த இடத்தில் அமர்த்தும் திட்டத்தை மூவர் கூட்டணி வகுத்திருந்தது. லிங்கம நாயக்கரின் அனுமதியுடன் இடர்நிறைந்த இந்த விஷயத்தை இளவரசரின் விசுவாசமிக்க ஆதரவாளர்களிடமும் பேசி, அவர்களைத் தங்கள் வழிக்குக் கொண்டுவந்துவிட்டிருந்தனர். சொக்கநாத நாயக்கருக்கு இந்தரகசியம் அரசவையிலுள்ள ஒரு பெண்மூலம் வந்தடைந்தது. அவர், தனது துணிவையும் மனிதவளத்தையும் வயதுக்கு மீறி வெளிப்படுத்தினார். மூவர் சதிக்கூட்டணியால் நாடுகடத்தப்பட்ட, தனக்கு நம்பகமான இரண்டு தளபதிகளிடம், சொக்கநாத நாயக்கர் ரகசியமாகத் தொடர்புகொண்டார். தனக்கு எதிரான சதித்திட்டத்தை முளையிலேயே கிள்ளியெறியச்சொல்லி, அவர்களுக்கு அதிகாரத்தைக் கொடுத்தார். அதிகாரம்பெற்ற அவர்களின் தொடக்கப் பணியே அதிரடியாக இருந்தது. ராயஸம் கொல்லப் பட்டார். பிராமணப் பிரதானி கண்கள் குருடாக்கப்பட்டார். சொக்கநாத நாயக்கர், தான் சுதந்திரமானவராக உணர்ந்தார். தன்னைச் சுற்றியிருக்கும் கிளர்ச்சியாளர்களை அடக்கி ஒடுக்கினார். தனக்கு எதிராக, வெளிப்படையாகவே நடந்துகொண்ட விசுவாச மின்மைக்கு தளவாய் லிங்கம நாயக்கரைத் தண்டிக்கப் போதுமான பலம் இருப்பதை அவர் உணர்ந்தவராக இல்லை. தனது கோபத்தை மறைத்து, நட்போடு இருப்பதாகக் காட்டிக்கொண்டார். ஒருகட்டத்தில், லிங்கம நாயக்கரைக் கடுமையாக நடத்த முடிவெடுத்தபோது, சொக்கநாத நாயக்கரின் திட்டங்களை மோப்பம் பிடித்துவிட்ட அனுபவமிக்க தளவாய், கண்ணிமைக்கும் நேரத்தில் தப்பியோடிவிட்டார். தப்பியோடிய லிங்கம நாயக்கர், முகம்மதியப் படைகளின் தளபதி சாகோஸியிடம் பணிக்குச் சேர்ந்துவிட்டார். மட்டுமல்லாமல், திருச்சினாப்பள்ளியை முற்றுகையிடச் சொல்லி அவரிடம் வற்புறுத்தினார். அதையடுத்து, 12,000 காலாட்படையினர் மற்றும் 7,000 குதிரைப் படையினர், தஞ்சாவூர் நாயக்கரின் உதவிக்கான உத்தரவாதம் ஆகியவற்றுடன், மிகுந்த நம்பிக்கையுடன் 50,000 வீரர்களைக்கொண்ட சொக்கநாத நாயக்கரின் படைகளைச் சந்திக்க முயற்சித்தார்கள். இளம்அரசரான சொக்கநாத நாயக்கர், தனது ஏற்பாடுகளில் குறைகள் இருப்பதை அறியவில்லை. புதிய பிரதானி, தனது முந்தையத் தலைவரின் நடவடிக்கைகளைப் பின்பற்றுபவராக நடந்துகொண்டார். தனது எஜமானரின் திட்டங்களைச் செயல்படுத்துபவராக அல்லாமல், மனசாட்சியின்றி நடந்துகொண்டார். தளவாயின் பரிவு எல்லாமே,

எதிரியின் பக்கம் இருந்தது. அரசருக்கு நம்பகமானத் தலைவர்கள் உயிர்ப்பலி ஆவதுபோலவோ அல்லது எதிரியின் கைகளில் சிக்குவதுபோலவோ சாமர்த்தியமாக, தனது களப்பணியை அமைத்துக் காவு வாங்கினார். இந்தத்துரோகத்தை சாமர்த்தியமாகப் பயன்படுத்திக்கொண்ட லிங்கம நாயக் கர், சொக்கநாத நாயக்கரை கைதுசெய்து பதவியிலிருந்து அகற்றமுயற்சித்தார். இறுதியில் தனது மடத்தனத்தை உணர்ந்த சொக்கநாத நாயக்கர் விரைந்துசெயல்பட்டு, இழைக்கப்பட்ட தீங்குகளை சரிசெய்ய முயன்றார். மீதமுள்ள தனதுபடைகளை ஒருங்கிணைத்து, முன்னிலும் வேகமாகச் செயல்பட்டார். அவரதுகுணமும் சக்தியும் அவரை வலுப்படுத்தி யது. அவரது எண்ணத்துக்கேற்ப எண்ணற்ற வீரர்கள் திரண்டார்கள். அடுத்தடுத்த நிகழ்வுகளால் எதிரிகள் முகாமைவிட்டுப் பறந்தோடினர். லிங்கம நாயக்கரும், முகம்மதியப் படைத் தளபதியும் மனமுடைந்து போனார்கள். அந்தவருத்தத்துடனே தஞ்சாவூரைநோக்கிப் பயணப்பட்டார்கள். படிப்படியாக, சொக்கநாத நாயக்கரின் தன்னம்பிக்கை அதிகரித்தது. 70,000க்கும் அதிகமான வீரர்களைத் திரட்டிக்கொண்டு, தஞ்சாவூரைநோக்கி அவரும் நடைபோட்டார். அங்கிருந்த இரண்டு தளபதிகளும் மிரண்டு, செஞ்சியைநோக்கி ஓடிவிட்டனர். தஞ்சாவூர் நாயக்கர் பரிதாபகரமாக சொக்கநாத நாயக்கரிடம் சரணடைந்தார்.[5]

சொக்கநாத நாயக்கரும் அவரது தந்தையும் முகம்மதியப் பெருவெள்ளத்தை தீரத்துடன் எதிர்த்து முன்னேறியவர்கள். அதனால் தேசத்தின் நரம்புமண்டலமாகத் திகழ்ந்த திருச்சினாப் பள்ளியை அவர்கள் இழந்துவிடாமல் காத்துக்கொண்டனர். ஆனாலும் தேசம், சொல்லவொண்ணாத் துயரத்தில் மூன்று அல்லது நான்குஆண்டுகள் சிக்கித்தவித்தது. தஞ்சாவூர், மதுரையைக் காட்டிலும் அதிகபாதிப்புக்கு உள்ளாகியிருந்தது. கொத்துகொத்தாக மக்கள் வீடுகளைவிட்டு வெளியேறி, அகதிகளாக மதுரையிலும், செயிண்ட். தோமிலும் அடைக்கலம் புகுந்தார்கள். மிகுதியும் அபாயகரமுமான விஜயராகவனின் வைராக்கியம், தனது குடிமக்களின் துன்பத்தையும் வேதனையையும் கண்டுகொள்ளாமல் குற்றமிழைக்கச் செய்துவிட்டது. முகம்மதியர்களின் படையெடுப் பும், பஞ்சமும் ஒன்றுகூடி இந்தசதிராட்டத்தை நடத்தியது. அந்தச்சூழ்நிலையை சாதகமாக்கிக்கொண்ட டச்சுக்காரர்கள், மனிதத் தன்மையற்றவகையில் கூலிப்படைகளை ஏவிவிட்டு மக்களைச் சுரண்டத் தொடங்கினார்கள். இயேசு சபையின் எழுத்தாளர் ஒருவர், அவர்கள் செய்த கொடுமைகளை பரிதாபகரமாக விவரிக்கின்றார்:[6] ‘அவமானம், இந்தியர்கள் மீது கொடுமையாகத் துயரத்தைச் சுமத்திய டச்சுக்காரர்களுக்கு, நித்திய

அவமானம். அவர்களுக்குத் தாராளமாக உணவளித்துத் தூண்டில்போட்டு, கடலோரப்பகுதிகளுக்கு அழைத்துவந்து தங்கள் வலைகளில் சிக்கவைத்தார்கள். பிறகு, அவர்களின் எண்ணிக்கைப் பெருகியதும், அவர்களை அடிமைப்படுத்தி, தங்களின் கப்பல்களில் நிரப்பி, மற்ற நாடுகளுக்கு அடிமைகளாக விற்று, அனுப்பி வைத்தார்கள்!'. பட்டினியில் வாடித்துயருற்ற மக்களுக்கு, சற்றே உணவளித்து சொக்கநாத நாயக்கர் நிவாரணமளித்தார். எங்கிருந்து வந்தவர்களாக இருந்தாலும் அவர்களுக்கு உணவளிக்க பாரபட்ச மில்லாத ஏற்பாடுகளைச் செய்திருந்தார். அப்பணியை மேற்பார்வையிட மதுரையிலிருந்து திருச்சினாப்பள்ளிக்கு தானேசென்று கவனம் எடுத்துக்கொண்டார்.[7] ஆயினும், பேரழிவு, பொதுவாகவே அளவுக்கதிமாகவே இருந்தது. மனிதஆற்றலால் அதனைக் கட்டுப்படுத்தக் கடுமையான முயற்சிதேவைப்பட்டது. அசாதாரணமான நிகழ்வுகளெல்லாம், 1662 ஆம் ஆண்டில் மதுரையில் நடந்ததாக விவரிக்கப்பட்டுள்ளன.[8] கொடுமையான உயிரழிவுகள் ஏற்பட்டன. கிராமங்கள் ஒட்டுமொத்தமாக அழிந்தன. பிறக்கும்போதே குழந்தைகள் பற்களுடன் பிறந்தன. பல குழந்தைகள் உதட்டுப் பிளவையுடன் பிறந்தன. விசித்திரமான பூச்சிகள் சூழலில் அலைந்து திரிந்து, இயல்பு வாழ்க்கையில் அச்சமூட்டின. நோயின் அறிகுறியே காணப்படாமல், பெரும் எண்ணிக்கையில் மக்கள் கொத்துகொத்தாகச் செத்துமடிந்தனர். இந்தச் சம்பவங்கள் யாவுமே அநேகமாக, போராலும் பஞ்சத்தாலும் ஏற்பட்டவைதான். ஆனால் மக்கள் மனதுக்குள் தேங்கிக்கிடந்த மூடநம்பிக்கையும், கற்பனையும் தங்களின் துரதிருஷ்டத்தால்தான் நடந்தது என்று கருதினார்கள்.

இடையில், நாட்டில் அமைதி நீண்டகாலத்துக்கு இருக்க வில்லை. மரம் அமைதியாக இருந்தாலும் கிளைகள் அசைவது போல, இடல்கான் என்ற ஆதில்ஷாவிடம் அதிக புகழுடன் திகழ்ந்த தளபதி வனமியான் தலைமையின் கீழ், பிஜப்பூர் படை 1663 ஆம் ஆண்டு திருச்சினாப்பள்ளிக்கு வந்துசேர்ந்தது. எங்குபார்த்தாலும் பீதி நிலவியது. அந்தநிலைமையிலும் நம்பிக்கைத் தரும் அம்சமாக இருந்தது, சொக்கநாத நாயக்கரின் துணிவு மற்றும் ஞானத்தின் மீது மக்கள் கொண்டிருந்த நம்பிக்கைதான். முகம்மதியத் தளபதி, தன்னிடமிருந்தப் படைகளை நடைபயில விட்டு, நாயக்க அரசரை அதிர்ச்சியடைய வைக்க முயற்சித்தார். ஆனால் அது, அவருக்கு ஏமாற்றத்தையே தந்தது. கோட்டைக்குள் இருந்த பீரங்கிப்படைகள் அமைதி காக்கவில்லை. அதனால், கோட்டையைத் தகர்க்க முகம்மதியத் தளபதி எடுத்தமுயற்சிகளும் பலனைக் கொடுக் கவில்லை. இழப்புகளும் அதிகஅளவில் ஏற்பட்டிருந்தன. அதனால் முற்றுகையை உயர்த்த வேண்டிய அவசியமும் உருவாகியிருந்தது.

அதனால் அவர், நகரத்தின் சுற்றுப்புறத்தை முற்றிலுமாக அழித்தொழித்தார். வளர்ந்து முதிர்ந்திருந்தப் பயிர்களை வெட்டி வீழ்த்தி நாசமாக்கினார். கிராமங்களைத் தீவைத்து அழித்தார். அப்பாவி குடிமக்களைத் துன்புறுத்தினார். அவர்களை அடிமை களாக நடத்தினார். எதிராளியிடம் சிக்கிக் கொடுமையை அனுபவிப்பதைத் தவிர்க்க முடிவெடுத்த சிலர், ஒருவீட்டுக்குள் ஒன்றுதிரண்டு பூட்டிக்கொண்டு, வேறுவழியில்லாமல் தங்களுக்குத் தாங்களே தீவைத்து, ஒட்டுமொத்தமாக அழிந்தும்போயினர். ஏறத்தாழ நாடு முழுவதையும் சூறையாடி முடித்த பின்பு, நாட்டை விட்டுப் போக வேண்டுமென்றால் கணிசமானத் தொகையைத் தரவேண்டும்[1] என்று சொக்கநாத நாயக்கரை முகம்மதியத் தளபதி வனமியான் வற்புறுத்தினார்.[9]

முகம்மதியர்களை இவ்வாறு விலைகொடுத்து வாங்கியதன் மூலம், முகம்மதியர்களுக்குத் திட்டங்களைக் காட்டிக்கொடுத்து, அந்த எதிரிகளுக்கு ஒத்துழைப்பு நல்கிய தஞ்சாவூர் நாயக்கர் விஜயராகவனைத் தண்டிக்க, இதுவொரு சந்தர்ப்பம் என்று சொக்கநாத நாயக்கர் கருதினார். வலுவானதொரு படையுடன் தஞ்சாவூர்நோக்கி பீடுநடை போட்டு, வல்லத்தைக் கைப்பற்றி னார்.[10] விரைவிலேயே, தனது எதிரிகளுக்குக் கட்டளையிடும் தகுதியை வளர்த்துக் கொண்டார். வல்லத்தில் வலுவானக் காவல் படையை நிறுத்திவிட்டு, தலைநகருக்குத் திரும்பினார். 1664ஆம் ஆண்டின் நிகழ்வுகளைக் குறிப்பிட்டு, நியூஹாப்[11] இவ்வாறு பேசுகின்றார்: ‘தஞ்சாவூர் நாயக்கருடன் கணிசமான காலஅளவு மதுரை நாயக்கர் போர் நடத்தினார். அவரிடமிருந்து பல இடங்களைக் கைப்பற்றிக்கொண்டார். எனது பார்வையில் பல நேரங்களில் முன்னெப்போதும் இல்லாதஅளவில், போர் வீரியமாக நடந்தது. தஞ்சாவூர் நாயக்கர் படைகளைத் திரட்டி, வீராவேசமாகப் போரிட்டார். சிலநாட்களிலேயே மதுரை நாயக்கர் தன்னிடமிருந்து வென்ற இடங்களில் பலவற்றைத் திரும்பவும் மீட்டுக்கொண்டார். எதிரிகள் அடைந்துவிட்ட திடீர் வெற்றியால், மதுரை நாயக்கர் மனம்தளர்ந்துபோனார். மதுரை, தனது தலைமை ஆளுநரை கோய்லாங்குக்கு அனுப்பி, கம்பெனியின் உதவியைக் கோரியது. எந்த ஒருபக்கத்துக்கும் உதவுவது, எங்களின் விருப்பம் இல்லை. அதனால் கௌரவமாக மறுத்து, அனுப்பிவிட்டேன்‘. ஒருவேளை சொக்கநாத நாயக்கரின், வல்லம் ஆக்கிரமிப்பு குறைந்தகாலம் மட்டும் இருந்திருக்கலாம். 1665ஆம் ஆண்டின் பிரோயன்ஸாவின் கடிதம்,[12] ‘பயங்கரமாகக் காட்டிக்கொடுத்த தஞ்சாவூர் நாயக்கர், சொக்கலிங்காவால் தோற்கடிக்கப்பட்டு, கடுமையாக உறிஞ்சப்பட்டான்’ என்று பேசுகின்றது.

சொக்கநாத நாயக்கரின் அடுத்தப்படையெடுப்பு, சேதுபதிக்கு எதிரானதாக இருந்தது. முகம்மதியப் படைகள் மதுரைமீது படையெடுத்தபோது, சேதுபதி தனக்கு உதவமறுத்தக் கோபம், சொக்கநாத நாயக்கருக்கு இருந்தது. திருமலை நாயக்கரால் திறைசெலுத்தவேண்டியதில்லை என்று அனுமதிக்கப்பட்ட, பெரிய அளவில் கௌரவிக்கப்பட்ட திருமலை சேதுபதி, இளம் அரசனுக்குக் கீழே, விசுவாசமிக்கவனாக... கீழ்ப்படிந்தவனாக இருப்பது, தனதுநிலைக்கு இழுக்கு என்று கருதினார். அதனால், மதுரை நாயக்கரின் நடவடிக்கைகளுக்கு ஒத்துழைக்க மறுத்தார். அதிருப்தியடைந்திருந்த சொக்கநாத நாயக்கர், சேதுபதியை தண்டிக்க விரும்பினார். விருப்பத்துக்கும் செயல்பாட்டுக்கும் அவர் இடைவெளி கொடுக்கவில்லை. அதுபோல தொடர்ந்து வெற்றிகளைக் குவித்துக்கொண்டிருக்கும் தனதுபடைகளையும் ஆறப்போடவில்லை. தாமதம்செய்யாமல், மறவர் நாட்டுக்குள் புகுந்து, முக்கியக்கோட்டைகளான திருப்பத்தூர், புதுக்கோட்டை, மானாமதுரை மற்றும் காளையார்கோவில் ஆகியவற்றைக் கைப்பற்றினார். பிறரால் உட்புகமுடியாதக் காடுகளுக்குள் புகுந்து தனது தாக்குதல்களைத் தொடர்ந்தார். இத்தனை இழப்புகள் ஏற்பட்டிருந்தபோதிலும் அஞ்சாது, எதிராளியுடனான நேரடித் தாக்குதலை சேதுபதி தவிர்த்தார். இந்தப் போர்முறையினால் ஏற்பட்ட தாமதத்தால், சொக்கநாத நாயக்கர் வெறுப்படைந்தார். தலைநகரில் மதத்திருவிழா ஒன்று கொண்டாட வேண்டியிருந்தது. அதனால் தனது தளபதிகளிடம், மேற்கொண்டு செயல்படுமாறு ஒப்புவித்துவிட்டு, தலைநகர் மதுரைக்குத் திரும்பினார். கொஞ்ச நாட்களிலேயே நிலைமை தலைகீழாக மாறியது. ராம்நாட்டின் உள்ளூர் அறிவு, போரிடும் திறமை மறவர்களுக்கு புதுசாத்தியங் களைக் கொடுத்தது. 'சொக்கநாத நாயக்கரின் தளபதிகள் தங்கியிருந்த இடங்களைவிட்டு வெளியில் எங்கும்செல்லாமல் படுத்துக்கொண்டதால், அவமானகரமானத் தோல்வியை மறவர்நாடு கொடுத்தது'[13] என்ற செய்திதான், மதுரைக்கு வந்துசேர்ந்தது. தோல்வியைக் கொண்டுவந்த தனதுபடைகளை தண்டித்துத் திருத்தும் நோக்கத்தை தயக்கத்துடன் கைவிட்டுவிட்டு, மறவர்நாட்டின் சில முக்கியக் கோட்டைகளை சொக்கநாத நாயக்கர் தன்னுடன் வைத்துக்கொண்டார்.[14]

**தலைநகர் மாற்றம்** - அரியணையேறியதும் சொக்கநாத நாயக்கரின் முதல்நடவடிக்கை, அமைச்சரவையை மதுரையிலிருந்து திருச்சினாப்பள்ளிக்கு மாற்றியதுதான் என்கின்றார்,[15] நெல்சன். ஆனால் அப்படியானத் தகவல் எதுவும், இயேசு சபையினரின் கடிதங்களிலோ அல்லது மற்ற நடப்பிலுள்ள எந்த ஆதாரங்கள்

மூலமோ பரவியதாகத் தெரியவில்லை. 1662ஆம் ஆண்டின் பிரோயன்ஸாவின் கடிதம், 'பஞ்சமேற்பட்டபோது நிவாரணப் பணிகளை மேற்பார்வையிடத்தான் மதுரையிலிருந்து திருச்சினாப்ப ள்ளிக்கு சொக்கநாத நாயக்கரின் பயணம் அமைந்தது' என்று வகுத்துச்சொல்கின்றது.[16] 1665ஆம் ஆண்டின் அவரது மற்றொரு கடிதம், 'மன்னர் நாயக்கருடன் ஒருபொதுநிகழ்வில் கலந்துகொள்வ தற்காக அழைக்கப்பட்டதன்பேரில் மதுரைக்குச் சென்றேன்' எனக்கூறுகின்றது. மேலும் அது, 'அவ்வாண்டின் முடிவில் (1665) மன்னர், தனது அமைச்சரவையை திருச்சினாப்பள்ளியில் நிர்மாணித்தார்' என்கின்றது.[17] நியூ ஹாப், '1664ஆம் ஆண்டில் தலைநகரமும் மன்னரின் சாதாரணக் குடியிருப் பும் மதுரையாக இருந்தது' என்கின்றார்.[18] இந்தத்தரவுகளின் அடிப்படையில், பதவியேற்று ஆறாண்டுகளுக்குப் பின்பு, சொக்கநாத நாயக்கர் தனது தலைநகரை மதுரையிலிருந்து திருச்சினாப்பள்ளிக்கு மாற்றினார் என்பது தெரிகின்றது.[19]

மதுரையிலிருந்து திருச்சினாப்பள்ளிக்கு தலைநகர் மாறியதற்கு மிகமுக்கியக் காரணமாக இருந்தது, தற்காப்பான பாதுகாப்பு மட்டும்தான். கடந்த ஆறாண்டுகால அனுபவத்திலிருந்து சொக்கநாத நாயக்கர் அதன்மதிப்பை அறிந்திருந்தார். தனது நடவடிக்கைகளை மேற்கொள்ளும் ஆபத்துகளின்போது, பெருமளவு அலட்சியம் செய்யப்பட்டிருந்தார்[20] அல்லது பாராட்டப்பட்டிருந்தார். திருச்சினாப்பள்ளியில் நிரந்தரமாகத் தனது அரச சபையை நிர்மாணிக்க முடிவுசெய்ததும், தலைநகருக்கு உரிய அனைத்து மூட்டைமுடிச்சு வசதிகளையும் அங்கேயே உருவாக்கினார். 1666 ஆம் ஆண்டுவாக்கில், அங்கே அழகிய, சிறப்புவாய்ந்தக் குடியிருப்பைக் கட்டுவதற்கானத் திட்டங்களை வகுத்தார். அதற்காக, திருமலை நாயக்கர் பார்த்துப்பார்த்துக் கட்டிய அற்புதம் வாய்ந்த மதுரை அரண்மனையில் தன் கையை வைத்தார். விலையுயர்ந்த உபகரணங்களை அங்கிருந்து அகற்றிவருமாறு உத்தரவிட்டார். பொருள் எடுத்துச்செல்லும் அவரதுநோக்கத்தில் எந்தளவுக்கு அரண்மனைக்கு அழிவுஏற்பட்டது என்பது தெளிவாக இல்லை. திருச்சினாப்பள்ளியில் எழும் கட்டிடப்பணிக்காக, புதிதாகச் செலவுசெய்ய அவர் தயங்கினார். தனது குடிமக்களை மிகவும் பாதிப்புக்கு உள்ளாக்கிய பிரதானிமீது அதிருப்தி அடைந்திருந்த சொக்கநாத நாயக்கர், அவரையும் அத்துமீறல்களைச் செய்த அதிகாரிகளைத் தண்டிக்கவும் இவ்வாறு நடந்துகொண்டார் என்று தெரிகின்றது.[21] இந்த நடவடிக்கைகளின் மூலம் அவர்தரப்பில் நியாயம் இருக்கின்றதோ இல்லையோ, நிச்சயமாக கலைஉலகை அழித்துச்சேதப்படுத்திய அவர்மீது, கண்டனங்கள் காலத்துக்கும் நிற்கின்றன.

**மைசூர் போர்** - வில்கிஸின் அதிகாரப் பின்னணியைக் கொண்டு ரங்காச்சாரி, 'சொக்க நாதர் தனது ஆட்சியின் முதல்பத்தாண்டுகளில் மைசூருடன் போரில் ஈடுபட்டார்'[22] என்று குறிப்பிடுகின்றார். வில்க்ஸ், 'மதுரை நாயக்கர் சொக்கப்பா, ஒட்டு மொத்த மைசூரையும் வெற்றிகொள்ள ஆர்வம்கொண்டிருந்தார். ஆனால் போரின்தன்மை அவரது எதிர்பார்ப்பைத் தலைகீழாய் மாற்றிவிட்டது. தேவராஜ உடையாரின் காலத்தில் கைப்பற்றிய ஈரோடையும் தாராபுரத்தையும் விட்டுவிட்டு, திருச்சினாப்பள்ளி மற்றும் முக்கிய இடங்களை மட்டுமே கவனம் செலுத்தவைத்தது. அதனால் அவர், 1667ஆம் ஆண்டு இழந்தது, கோயமுத்தூர் மற்றும் சேலம் மாவட்டங்கள்.[23]

1667 மற்றும் 1675ஆம் ஆண்டுகளுக்கு இடையில், இயேசு சபையின் கடிதங்கள் கிடைக்கப்பெறாததால், மேற்கூறிய அறிக்கைக்குத் தீர்க்கமான ஆதாரங்களாக போதிய ஆவணங்கள் இல்லை. ஆண்ட்ரே பிரைரேயின் 1666ஆம் ஆண்டின் கடித மொன்று, 'மதுரை, நிகழ்வுகள் ஏதுமின்றி வறண்டு கிடக்கின்றது' எனச்சுட்டுகின்றது. அடுத்த ஆண்டில் பெரும்பேரழிவு ஒன்று நடந்ததென்று வில்க்ஸ் தெரிவிப்பதுபோல நடந்திருந்தால், குறைந்தபட்சம் அக்கடிதத்தில் அந்நிலைமைகுறித்த மறைபொரு ளாகவாவது ஏதாவது குறிப்பிடப்பட்டிருக்கும். ஆட்சிப் பொறுப்புக்கு வந்து ஆறாண்டுகாலத்தில் சொக்கநாத நாயக்கர், ஒட்டுமொத்த மைசூரையும் கைப்பற்றும் நோக்கத்தில் ஆழ்ந்து சிந்தித்து, பெருவிருப்பம் கொண்டிருந்தார் என்பதை நம்புவதற்குக் கடினமாக இருக்கின்றது. 1667ஆம் ஆண்டின், பிளவங்க மற்றும் 1668ஆம் ஆண்டின், கீழக கல்வெட்டுகள் குமாரலிங்கம் மற்றும் திருச்செங்கோட்டுப் பகுதிகளில் கண்டெடுக்கப்பட்டன.[24] 1670ஆம் ஆண்டின் தேவராஜ உடையாரின் கல்வெட்டுகள் சத்தியமங்கலத் திலும் அதற்கு அருகிலும் கண்டெடுக்கப்பட்டன.[25] அக்கல் வெட்டுகள் படையெடுப்பில், சொக்கநாத நாயக்கரின் கடினமான முயற்சிகளை சாதகமாக எடுத்துக்கொண்டு, மைசூர் அரசரின் பங்களிப்பை மறைமுகமாகக் குறிப்பிடுவதாக இருக்கலாம். ஆனால் 1667 ஆம்ஆண்டில் மைசூர் படைகளின் இருப்பு, திருச்சினாப்பள்ளி மற்றும் முக்கியமான இடங்களில் காணப்பட்டதை உறுதிசெய்யும் ஆவணங்கள் எங்கும்காணப்படவில்லை. வில்க்ஸ், வெளிப்படை யாகவே முன்தேதியிட்டு, அந்த நிகழ்வுகளை வர்ணிக்கின்றார். 1676ஆம் ஆண்டின் இயேசு சபையின் கடிதமொன்றுகூட,[26] மதுரையின் வடக்குஎல்லைப்புறத்திலிருந்து கைப்பற்றப்பட்டக் கோட்டைகளை மைசூர் புனரமைப்பு செய்ததை மட்டுமே பேசுகின்றது. மைசூர்படையினரால் கோயமுத்தூர் மற்றும் சேலம்

மாவட்டங்கள் கையகப்படுத்தப்பட்டது தொடர்பான ஆதாரங்கள் அல்லது குறிப்புகள்கூட காணப்படவில்லை. அந்தவெற்றிகள், தேவராஜ உடையாரின் கடைசிகால ஆட்சியில் சிக்கதேவரால் பெறப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. வில்க்ஸால் குறிப்பிடப்பட்ட மேலேயுள்ளத் தகவல்களை அத்தனை முக்கியத்துவம் என்று எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. அவர் குறிப்பிடும் தரவுகள், அதன்காலம், யாவும் மதுரைத் தொடர்பானக் கேள்விகளுக்கு உட்பட்டதல்ல. 1653ஆம் ஆண்டில் அவர், 'வெங்கடாதிரி நாயக்கர் என்று ஒருவரை, மதுரை ராஜாவின் சகோதரர் என்றும் வீரப்பா, மதுரை நாயக்கர் என்றும்' பேசுகின்றார்.[27] ஆனால், அதற்கான ஆதாரங்கள் எதையும் அவர் காட்டவில்லை. அதனால், அவரது தரவுகள் மற்ற ஆதாரங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்க முடியாததால், அவற்றை ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

சொக்கநாத நாயக்கர் ஆட்சியின் வரலாறு, 1667ஆம் ஆண்டி லிருந்து 1672ஆம் ஆண்டுவரை பதிவுகள் ஏதுமில்லாமல், கடந்துபோகின்றது. அந்தக்காலகட்டத்தில் இயேசு சபையால் கடிதங்கள் எழுதப்பட்டிருந்தாலும், அவை தொலைந்த கடிதங்கள் ஆகிவிட்டன. எவ்வாறாயினும் 1673ஆம் ஆண்டின் ஆண்ட்ரே பிரைரே எழுதிய சொக்கநாத நாயக்கரின் போர்க்குறித்தக் கடிதமும் இந்தவிதியை அடைந்துவிட்டது.[28]

**தஞ்சாவூர் போர் 1673** - இந்தப்போரை நெல்சன், 1674ஆம் ஆண்டுக்கு தள்ளிவைக்கின்றார். அதேவேளையில், 1676ஆம் ஆண்டின் ஆண்ட்ரே பிரைரேயின் கடிதம், அப்போரை 1673ஆம் ஆண்டில் நடந்ததாகவே குறிப்பிடுகின்றது. சொக்கநாத நாயக்கரின் தஞ்சாவூர் போர்க் குறித்தத் தரவுகளுக்கு உள்ளூர் வரலாற்றுத் தரவுகளையே சார்ந்து இருக்கவேண்டியுள்ளது.[29] இந்த விவரணை களில், 'முன்னே... பின்னே' என முரண்பாடுகள் இருந்தாலும், போர் நடந்ததை அனைவருமே ஏற்றுக்கொள் கின்றார்கள்.

இந்தப்போருக்கானத் துல்லியக்காரணம் தெளிவாக இல்லை. வரலாற்றுத் தரவுகளின் அடிப்படையில் ஆய்ந்தால், சொக்கநாத நாயக்கருக்கு தனதுமகளை மணமுடித்துத்தர விஜயராகவன் மறுத்ததால், போர் நடத்தப்பட்டதாகத் தெரிகின்றது. 'தஞ்சாவூரில் அவர் அடைந்த தோல்வி, அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தது' என்று, நியூஹாப் குறிப்பிடுகின்றார்.[30] தஞ்சாவூர் இளவரசியை திருமணம் செய்துவைக்காமல், சாக்குப்போக்குச்சொல்லி நழுவியதால் நடந்தப் போரைப் பற்றி நெல்சன், 'திருமணம் செய்துகொள்ள ஒருமன்னர் விரும்பும்போது, கோரிக்கை

மகிழ்ச்சியோடு ஏற்கப்படுவது, இயற்கையானது. அதுவும் இரண்டும் மன்னர்குடும்பங்கள் எனும்போது, இன்னும்மகிழ்ச்சியாக ஏற்கப்படும்.[31] அதிலும், அவர்கள் இருவரும் நாயக்கர்கள். இதில் சரிவுஎன்பது, யாரோ பொதுவான நபர்களால் உருவாக்கப்பட்டதாக இருக்கலாம்' என்கின்றார். இந்த விவகாரத்தை இப்போதிருந்து, காலத்தை சற்றுமுன்னதாகப் பார்க்கவேண்டும். திருமலை நாயக்கரின் மூதாதையரில் ஒருவர், செவப்ப நாயக்கர். விஜயநகர அரச குடும்பத்தில் திருமணம் செய்ததன்மூலம் தஞ்சாவூர் நாயக்கருக்கு உறவானவர்.[32] திருமலை நாயக்கரின் மூதாதையராக இருந்தும், அவர் தனது உறவில் பெருமைபெற முடியவில்லை. பேரரசரின் தாழ்மையானப் பணியாளனாக மட்டுமே இருக்க முடிந்தது. அவர், தனது நிலையைப் படிப்படியாக உயர்த்திக் கொண்டு உச்சத்துக்குவந்திருந்தார். தகுதிநிலை வித்தியாசம் சில முன்னோர்களால் கண்டுகொள்ளப்படவில்லை. ஆனால் விஜயராகவன் இந்தவிஷயத்தில், வித்தியாசத்தைப் பார்த்தார். திருமலை நாயக்கர் தனது மனைவிகளில் ஒருவரான தஞ்சாவூர் இளவரசி, 'மதுரையின் புதிய அரண்மனைக்குறித்துப் பேச்சுவந்த போது, தஞ்சாவூரிலிருக்கும் தனது தந்தையின் அரண்மனையோடு ஒப்பிட்டு, கணவரின் கனவு அரண்மனையை தரக்குறைவாகப் பேசியதால், கத்தியால் குத்தினார்' என்று வரலாற்றின் பக்கங்களைப் பதறவைத்திருக்கும் சங்கதிகளை உறுதிப்படுத்த, ஆதாரங்கள் எதுவும் இல்லை. சொக்கநாத நாயக்கரின் மண்ணை வெல்லும் லட்சியத்தால்தான், தனக்கு அத்தனை இன்னல்களும் என்று விஜயராகவன் நினைத்துக்கொண்டதும் இதற்கு ஒருகாரணம். இரண்டுதரப்பிலும் நல்லெண்ணம் இருக்கவில்லை என்பது மற்றொருகாரணம்.

திருமண உத்தேசம்தொடர்பான முன்மொழிதல் சங்கதியைக் கொண்டுசென்ற சொக்கநாத நாயக்கரின் முகவரைத் துச்சமாகநடத்தி, தஞ்சாவூரில் அவமானப்படுத்தியதாகத் தெரிகின்றது.[33] தனது முகவரை அவமானப்படுத்தியதால் சினமடைந்த சொக்கநாத நாயக்கர், உடனடியாக பெரும்படையைத் திரட்டி, தனது தளவாய் வெங்கட கிருஷ்ணப்ப நாயக்கர் மற்றும் வருவாய் அதிகாரி பேஷ்கார் சின்னத்தம்பி முதலியார்[34] ஆகியோர் தலைமையில், தஞ்சாவூர் மீது படையெடுக்கத் துரிதப்படுத்தினார். கன்னிவாடியின் சின்னக்காத்திர நாயக்கர் தனது படைகளுடன் சேர்ந்துகொண்டார். தஞ்சாவூரைநோக்கிப் படையெடுத்த அவர்கள், தஞ்சாவூர் படையைத் தோற்கடித்து, முதலில் வல்லத்தைக் கைப்பற்றினர். இந்தத்தகவல் விஜயராகவனை வந்தடைந்ததும் வெகுவிரைவி லேயே, பெரும்படையைத்திரட்டி, மதுரையைச் சந்திக்க

உத்தரவிட்டார். அப்படை கணவேகத்தில் புறப்பட்டு, தலைநகர் மீது தாக்குதல் நடத்தியது. இருதரப்பிலும் பலம்கொண்டமட்டிலும் பொருதி, கடும்போராக மாறியது. ஆயினும் இறுதியில், மதுரை வெற்றிபெற்றுவிட்டது. உடனே, தளவாய் வெங்கட கிருஷ்ணப்ப நாயக்கர் ஒரு தகவலாள் மூலம், எதிர்வரும் பிரச்சனைகளைத் தவிர்க்க, திருமண உடன்படிக்கைக்கு ஒப்புக்கொள்ளுமாறு வற்புறுத்தினார். தஞ்சாவூர் நாயக்கர் அந்தமுதல்கோரிக்கையை மறுத்து, அமைதிப்பேச்சுக்கு உடன்படவில்லை. பின்னர், முறையான முற்றுகை தஞ்சாவூர் மீது நடத்தப்பட்டது. கோட்டை அடித்துநொறுக்கி, துவம்சம்செய்யப்பட்டது. பின்பு மதுரைப்படை நகரத்துக்குள் புகுந்தது. இரண்டாவதுமுறையும் அமைதிக்கானத் தகவல் அனுப்பப்பட்டது. அதற்கும் விஜய ராகவன் செவிசாய்க்க வில்லை. கைவிட்டுவிட்டு ஓடிவிடும் வாய்ப்புகளிருந்தும், இறுதிவரைக்கும் போராடும் முடிவு அவரிடமிருந்தது. அந்தப்புரத்தை வெடிவைத்துத் தகர்க்கும் ஏற்பாடுகள், அவரது கண்ணசைவில் நடந்துகொண்டிருந்தது. என்ன நினைத்தாரோ சிறையிலிருக்கும் தன் மகனை நினைத்து, சமாதானப்படுத்திக் கொண்டார். பின்புதைரியமாக, வெளியில்வந்து எதிரியுடன் பொருதினார். மதுரைத் தளபதியிடமிருந்து வந்த சமாதானச் செய்தியை கோபாவேசத்தோடு மறுத்தார். அதேவேளையில், ஒட்டுமொத்த அரசகுடும்பப் பிடிமானங்களை இடித்துத் தள்ளும்படி ஓர் உத்தரவைப் பிறப்பித்தார். ஒருவருக்கொருவர் நிகழ்த்தும் பரஸ்பர படுகொலை, வதைகளை நிறைவேற்றிவிட்டு, சுரங்கங்களுக்குத் தீவைத்து அனைத்தையும் அழித்தனர். விஜயராகவனும் அவர் மகனும் தொடர் போராட்டத்தில் இறந்துபோனார்கள். வெற்றி வாகைச் சூடிய மதுரைத்தளவாய் தஞ்சாவூருக்குப் பாதுகாப்பு போட்டுவிட்டு, திருச்சினாப்பள்ளிக்குத் திரும்பினார். விஜயராகவனின் ஒட்டுமொத்த ராஜ்ஜியமும் சொக்கநாத நாயக்கரின் கைகளில் வந்துசேர்ந்தது. தனது வளர்ப்புச் சகோதரன் அழகிரி நாயக்கரை, அதன் ஆளுநராக நியமித்தார். போரில்வென்ற மூன்றுதளபதிகளும் பரிசுகளும் பட்டங்களும் அளித்துக் கௌரவிக்கப்பட்டனர்.[35]

**மராத்திய வெற்றியும் தஞ்சாவூர் ஆக்கிரமிப்பும்** - *1674*ஆம் ஆண்டு அழகிரி நாயக்கர் தஞ்சாவூரின் ஆட்சியாளரானார். நாட்டில் அமைதியும் ஒழுங்கும் நிலவியது. அரச விவகாரங்கள் இயல்பாக நடைபெற்றுவந்தன. நாட்டின் உபரிவருவாயை சொக்கநாத நாயக்கருக்கு அனுப்பி வைத்தார். ஆயினும், அவரது துணைமை நிலை நீண்டகாலத்துக்குத் தாக்குப்பிடிக்கவில்லை. தனக்கான அதிகாரத்தை அதிகரித்துக்கொள்ளும் அவா, அவருக்குள்

ஊற்றெடுத்தது. திருச்சினாப்பள்ளிக்குச் செலுத்திவந்த வழக்கமானத் திறைத்தொகையை அனுப்புவதை நிறுத்தினார். தலைநகருடனானத் தொடர்பையும் படிப்படியாகக் குறைத்துக்கொண்டார். சிலவேளைகளில் அவர் அனுப்பியக் கடிதங்களின்போக்கு, அவரை தஞ்சாவூரின் சுதந்திர அரசராகக் காட்சிப்படுத்தின. அழகிரி நாயக்கரின் நடவடிக்கைகளால் எரிச்சலுக்குள்ளான சொக்கநாத நாயக்கர், முன்னவருக்கு அறிவுரைக்கூறி ஒருகுறிப்பை அனுப்பினார். அழகிரி நாயக்கரோ மறுகடிதத்தில், தனது அந்தஸ்து, சமுதாய நிலையைச் சுட்டிக்காட்டி, முந்தையக் கடிதத்தை நியாயப்படுத்தி, தஞ்சாவூர் அரசசபையின் வழக்கங்களில் அதுவும் ஒன்று என்று பதிலிறுத்தியிருந்தார். அந்த பதிலில் வெகுண்டெழுந்த சொக்கநாத நாயக்கரை அவரது அமைச்சர்கள் சாந்தப்படுத்தி, தண்டனை நடவடிக்கையைக் கைவிட அறிவுரை தந்தனர். தொடர்ந்து, அழகிரி நாயக்கரின் நடவடிக்கைகள் கண்காணிக்கப் பட்டன. ஒருகட்டத்தில் சொக்கநாத நாயக்கரின் ஆதரவை அழகிரி நாயக்கர் இழந்துவிட்டார். தஞ்சாவூரின் நிலை மேன்மை யடையவில்லை.

முந்தைய அரசரின் அதிகாரிகளில் சிலரை, அழகிரி நாயக்கர் தனது ஆட்சியிலும் பணி தொடர அனுமதித்திருந்தார்.[36] அவர்களில் ஒருவராக, ராயஸம் வெங்கண்ணா பணியில் நீடித்தார். சொக்கநாத நாயக்கருக்கும் அழகிரி நாயக்கருக்குமிடையில் நிலவும் பனி மூட்டத்தை அவர் கூர்ந்து கவனித்துவந்தார். இருவருக்குமிடையில், கூடுதலான இடைவெளியை அதிகரிக் கச்செய்யும் நடவடிக்கைகளை அழகாகத் தொடுத்தார். தனது அந்தஸ்தின் போதாமையில் அதிருப்தியுற்றிருந்த அவர், புதிய சாம்ராஜ்ஜியத்தை உருவாக்குவதில் செல்வாக்கு செலுத்த எண்ணினார். அதற்கேற்ப அவரிடம், ‘தஞ்சாவூர் நாயக்கரின் குடும்பம் முற்றிலுமாக அழிந்து விடவில்லை. பேரழிவின்போது, அக்குடும்பத்தைச் சேர்ந்த சிறுவ னொருவன் காப்பாற்றப்பட்டு, கமுக்கமாக நாகப்பட்டிணத்திலுள்ள ஒரு செல்வந்த வணிகனிடம்[37] வளர்ந்து வருவதாக’ தகவல் பரிமாறப்பட்டது. அந்தத் தகவலைக் கேட்டுக்கொண்ட வெங்கண்ணா, சரியானமுறையில் பயன்படுத்திக்கொள்ள முடிவெடுத்து, அதற்கானத் திட்டப்பணிகளை மேற்கொண்டு, அழகிரி நாயக்கரை அசைத்துக்கவிழ்த்து, முந்தைய சாம்ராஜ்ஜியத்தை நிறுவி, தனது நிலையை மேம்படுத்திக்கொள்ள ஆயத்தமானார். அரசசபையில் தனக்கிருக்கும் மிதமிஞ்சிய செல்வாக்கைப் பயன்படுத்தி, அழகிரி நாயக்கருக்கும் சொக்கநாத நாயக்கருக்குமிடையில் பிளவை உண்டாக்கிவிட்டார். அதேவேளையில், சதிசெய்து ஆட்சியைக் கைப்பற்ற அனைத்து

விதமான ஏற்பாடுகளையும் செய்துவிட்டு, முக்கிய ஆதாரமான சிறுவன் செங்கமலதாஸைக் கைப்பற்ற, நாகப் பட்டிணத்துக்கு விரைந்தார்,[38] வெங்கண்ணா. நாகப்பட்டிணம் வணிகர்வீட்டில் அச்சிறுவனுக்கு பத்து அல்லது பனிரெண்டு வயதாகும் வரை வசித்தார் என்றும் கூறப்படுகின்றது. அதாவது எட்டாண்டு காலம். ஆனால், இயேசு சபையின் 1676ஆம் ஆண்டின் கடிதம், 'தஞ்சாவூரில் அழகிரியின் அதிகாரம், 1675ஆம் ஆண்டிலேயே முடிவுக்கு வந்திருந்தது' என்று தெளிவாகக் குறிப்பிடுகின்றது.[39] எல்லாவற்றுக்கும் மேலாக, வெங்கண்ணா மிகப்பெரிய அரசியல் சாணக்கியராக இருந்தும், தாமதமாகும் ஒவ்வொருநொடியும், திட்டம் வெற்றியடைவதற்கு ஆபத்தை விளைவிக்கும் என்பதை உணரவில்லை. சிறுவனையும் அவனைப் பராமரிக்கும் பெண்ணையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு, தஞ்சாவூர் அரியணையில் சிறுவன் செங்கமலதாஸை[5] அமர்த் துவதற்கு உதவிகேட்டு, பிஜப்பூர் சுல்தானை சந்திக்கப்போனார். அவரது ராஜதந்திரம் பலித்தது. தளபதி ஈகோஜி என்ற வெங்காஜியிடம் தஞ்சாவூர் அரியணையிலிருந்து அழகிரியைக் கவிழ்த்துவிட்டு, அந்தஇடத்தில் சிறுவனை அமர்த்துமாறு இடல்கான் என்ற ஆதில்ஷா உத்தரவிட்டார்.[40]

மிரட்டல் ஆபத்தை எதிர்கொண்டிருந்த அழகிரி நாயக்கர், ஈகோஜி என்ற வெங்காஜியை எதிர்கொள்ள மிகவும் கவனமாக, தயாரிப்புகளைச் செய்துகொண்டிருந்தார். இதனால் வெங் கண்ணாவின் முன்னேற்றம் சற்று மட்டுப்பட்டது. அதேவேளையில், நாட்டுக்குள் அவரிருந்து செய்யவேண்டிய வேலைகளுக்கு, தனது செல்வாக்கால் பலரை நியமனம்செய்து காரியத்தை நகர்த்திக்கொண்டே இருந்தார். தோதான சந்தர்ப்பத்துக்காக, ஓராண்டு காலத்துக்கும்மேலாக, சாம்ராஜ்ஜியத்தின் எல்லைப்புறத்திலேயே காத்துக்கிடந்தார். அதேவேளையில் வெங்கண்ணாவின் ஆதரவாளர்கள், திட்டம்வெற்றியடைய நம்பிக்கையுடன் செயல்பட்டுக் கொண்டிருந்தனர். அழகிரி நாயக்கர், சொக்கநாத நாயக்கரிடமிருந்து முழுவதுமாக விலகியிருந்தார். சாதகமான சூழல் அமைந்ததும் ஈகோஜி என்ற வெங்காஜி, தஞ்சாவூருக்குவந்து அதை, எளிதாக முற்றுகையிட்டார். அழகிரி நாயக்கர், தனது சோதனைமிக்க வேளையில் வேதனையை உணர்ந்தார். சொக்கநாத நாயக்கரிடம் உதவிகேட்டு, பௌவியத்துடன்வேண்டுகோள் வைத்தார். ஆனால் அழகிரி நாயக்கரின் பழைய நடவடிக்கைகள் எதையும் சொக்கநாத நாயக்கர் மறப்பவராக இல்லை. மூர்க்கமாக மறுத்துவிட்டார். முதல்தாக்குதலிலேயே ஈகோஜி என்ற வெங்காஜி, கோட்டையைக் கைப்பற்றிவிட்டார். அழகிரி நாயக்கர் மைசூருக்குத் தப்பி ஓடி[7]விட்டதாகச் சொல்லப்படுகின்றது.[41] ஒட்டுமொத்தத் தஞ்சாவூர்

சாம்ராஜ்ஜியமும் இப்போது, ஈகோஜி என்ற வெங்காஜியின் கையில் அடைக்கலமாகியிருந்தது.

ஆதில்ஷா உத்தரவின்படி, கொண்டாட்டமும் கோலாகலமுமாய் சிறுவன் செங்கமல தாஸுக்கு முடிசூட்டினார், ஈகோஜி. நாட்டை நிர்வகிக்கும் பொறுப்பை வெங்கண்ணாவிடம் ஒப்படைத்தார். அரசரின் செவிலித் தாயார், விஜயராகவன் அரண்மனைக்குள் பொக்கிஷத்தைப் புதைத்துவைத்திருந்த இடத்தைக் காட்டினாள். அந்தஇடத்திலிருந்து நகைகளும் இருபத்தாறு லட்சத்துக்கு தங்கநாணயங்களும் கிடைத்தன. போர்ச்செலவுகளுக்காக கும்பகோணம், மன்னார் கோவில் மற்றும் பாபநாசம் ஆகிய மாவட்டங்களின் வருவாய் ஈகோஜியிடம் கொடுக்கப்பட்டது.[42] அத்துடன் அவருக்கும், அவருடன்சேர்ந்து போரில் இயங்கியவர்களுக்கும் பரிசுப் பொருட்கள் வழங்கப்பட்டன.[8] இதையடுத்து, ஈகோஜி தனது படைகளுடன் கும்பகோணத்துக்கு வந்து தங்கினார் என்று கூறப்படுகின்றது.

தஞ்சாவூர் வெற்றிக்குப் பிறகு, திருச்சினாப்பள்ளியை ஈகோஜி மிரட்டியதாகவும், சமீபத்திய வெற்றி, அதன்மீது தாக்குதல்நடத்தப் போதுமான அளவுக்கு தைரியமளிக்கவில்லை என்றும், நெல்சன் குறிப்பிடுகின்றார்.[43] அதனுடன் இயேசு சபையின் கடிதம் ஒத்துப்போகின்றது. ஆனால் நெல்சனின் குறிப்பு மேலும், ‘மிகக்குறுகிய காலத்திலேயே ஈகோஜி, மதுரை சாம்ராஜ்ஜியத்தின் பெரும்பகுதிக்கு எஜமானனாக தன்னை ஆக்கிகொண்டான். சத்தியமங்கலத்தைத் தவிர, மிக முக்கியமானப் பகுதிகள் எல்லாம் அவனிடம் வந்துசேர்ந்தன. சொக்கநாதருக்கு எதுவுமே விட்டுவைக்கவில்லை, திருச்சினாப்பள்ளிக் கோட்டையைத்தவிர’ என்று, கூறிக்கொண்டே செல்கின்றது. நெல்சன், 1676ஆம் ஆண்டின் ஆண்ட்ரே பிரைரேயின் கடிதத்திலுள்ள வாசகங்களை தவறாக யூகித்துக்கொண்டிருக்க வேண்டும். அக்கடிதம், ‘ஒருவேளை தைரியமாக அவன் போரிட்டிருந்தால் கோட்டைகளும் ஆட்சியும் அவன் கைகளுக்குவரும் சாத்தியங்களும் எதிர்காலமும் சமஅளவில் இருந்தன’ என்கின்றது. அதுமேலும், ‘நாளுக்குநாள் ஒரு பக்கத்தில் ஈகோஜியும் மறுபக்கத்தில் மைசூர் அரசனும் ஒருகாலத்தில் வளமையுடன் செழித்திருந்த சாம்ராஜ்ஜியத்தின் கடைசிக் குப்பைவரை உறிஞ்சி, அள்ளிக்கொண்டுசென்றனர். அதை வெற்றிபெறுவது வெகு எளிதாக இருந்தது’ என்கின்றது.[44]

மேலும் நெல்சன், ‘செங்கமலதாஸ் நாயக்கரை பதவியில் அமர்த்தும் இடல்கானின் -ஆதில்ஷாவின்- உத்தரவை, ஈகோஜி புறந்தள்ளிவிட்டான்’ என்று கூறுகின்றார்.[45] இது, இயேசு சபையின்

கடிதங்கள்மீது, அவர்கொண்டிருந்த எல்லையற்ற நம்பிக்கையின் முடிவில் உருவான ஒருபகுதிக் கருத்தாகும். மற்ற ஆவணங்கள் எத்தனை மதிப்புமிக்கதாக இருந்தாலும் அதனை தள்ளுபடி செய்துவிடுவது, நெல்சனின் வழக்கமாக இருந்துவந்தது. கீழ்க்காணும் தரவு, நெல்சனின் அதிகாரத்தைச் சுட்டுகின்றது. 'இது தஞ்சாவூரில் நடந்த சம்பவமாகும். இடல்கானின் உத்தரவின்பேரில், மறைந்த நாயக்கரின் மகனை ஆட்சிக்கட்டிலில் அமர்த்தாமல், பட்டத்தை தானே வைத்துக்கொண்டு, சுதந்திர அரசனாக தன்னை ஆக்கிக்கொள்ள விரும்பினான்'.[46] இயேசு சபையின் கடிதத்திலுள்ள அந்தவாசகங்கள், தஞ்சாவூரை வென்றெடுத்த ஈகோஜியின் விவரணங்களோடு ஒத்துப்போவதாகஇல்லை. அப்படியே இருந்தாலும், தானே அபகரித்துக் கொண்ட ஈகோஜியின் செய்கை வெற்றிபெற்று, கொஞ்ச காலத்துக்குப்பின்பே நடந்தது. மேலாக, எல்லா வரலாற்றுத் தரவுகளும் செங்கமலதாஸ் தஞ்சாவூர் அரசராக ஆக்கப்பட்டார். பின்பு, ஈகோஜியின் அபகரிப்பு நடந்தது என்று ஒத்துப்போகின்றன.

செங்கமலதாஸின் ஆட்சி, மகிழ்ச்சியானத் துவக்கத்துடன் இருக்கவில்லை. முதல் நடவடிக்கையே அவரது அழிவுக்கான அறிகுறியின் உச்சத்தைக் காட்டியது. நாட்டிலிருந்து வெளியேறி அடைக்கலம்கொண்ட நாகப்பட்டிணம் வணிகரை, அவரை வளர்த்த செவிலித் தாயின் வற்புறுத்தலால், தளவாயாகவும் பிரதானியாகவும் அமர்த்தினார். அந்த உயர்பதவியைப் பிடிப்பதற்கான நம்பிக்கையுடனும் வைராக்கியத்துடனும், செங்கமலதாஸை ஆட்சியில் அமர்த்த வெகுவாகப் பாடுபட்ட ராயஸம் வெங்கண்ணா, இச்செய்கையால் ஆத்திரமாகிப் போனார். தனது இலட்சியப் பதவி, சுளுவாக வேறொருவனுக்குப் போய்விட்டது என்றானதும், எஜமானனை அழிக்க, அடுத்தத் திட்டத்தில் இறங்கிவிட்டார். தஞ்சாவூரைவிட்டுக் கிளம்பி, கும்பகோணத்திலிருந்த ஈகோஜியின் முகாமுக்குள் புகுந்தார். 'அரசபதவியை நீதான் ஏற்க வேண்டும்' என்று அவரை வற்புறுத்தத் தொடங்கினார். அவரது விடாத்தொந்தரவாலும், தனது எஜமான் ஆதில்ஷா குறித்த பயத்தினாலும் ஈகோஜி, எதையும் காதில் வாங்கிக்கொள்ளாமல் செவிடாகிவிட்டார். இடல்கானின் மரணத்தகவல் வந்தடைந்ததும், ஈகோஜிக்குத் துளிர்த்துவிட்டது. மிகுந்தத் துணிச்சல்காரர் ஆகிவிட்டார். வெங்கண்ணா, அவருக்கு முழுஒத்துழைப்பு தருவதாகவும், எந்தவொரு போராட்டமும் இல்லாமல், அரசும் ராஜ்ஜியமும் அவருடையதாகின்றது என்று உறுதிகொடுத்தார். உடனே தஞ்சாவூருக்கு விரைந்தார்கள். ஈகோஜியின் மிகைப்படுத்தபட்டத் திட்டங்களால் செங்கமலதாஸ்

நடுநடுங்கிப்போனார். முடிவில், இளம்அரசனும் அவரது ஆதரவாளர்களும் தஞ்சாவூரிலிருந்துக் கிளம்பி, அரியலூரில் தஞ்சம்கொண்டார்கள். எந்தவொரு சிரமமும் இல்லாமல் தஞ்சாவூர், ஈகோஜியின் கைகளில் விழுந்தது. வெங்கண்ணா, சுதந்திரமாக விடப்பட்டார். மிகக்குறுகிய காலத்திலேயே நாட்டில் அமைதியும் ஒழுங்கும் சீரடைந்தது. ஆனால் அழகிரி நாயக்கர், செங்கமலதாஸ் நாயக்கர் ஆகிய இரண்டு எஜமானர்களைக் காட்டிக்கொடுத்த வெங்கண்ணாவின் விசுவாசத்தின் மீது ஈகோஜிக்கு, அத்தனை நம்பிக்கையிருக்கவில்லை. அரசர்களை உருவாக்கிய, நேர்மையற்ற வெங்கண்ணா, வரவிருக்கும் தனதுவிதியை எண்ணிநொந்து, நட்சத்திரங்களைச் சபித்துவிட்டு, ஓசையில்லாமல் தஞ்சாவூரிலிருந்து தப்பிவிட்டார். வரலாறு சுட்டும் தரவு, இது.[47]

ஈகோஜியின் பதவி அபகரிப்பை மட்டுமே பேசும் இயேசு சபையின் ஆவணங்கள், அபகரிக்கப்பட்ட விதத்தை, விரிவாகக் குறிப்பிடவில்லை. 1676ஆம் ஆண்டின் கடிதமொன்று[48] சில குடியேற்ற முறைகளை விவரிக்கின்றது. தான் பதவியைக் கைப்பற்றிய விதம்குறித்த பேச்சுகளை, குடிமக்களுக்கான நல்வாழ்வுத் திட்டங்களை அதிகரித்ததன் மூலம் மாற்றியமைக்க ஈகோஜி முயற்சித்தார். குறிப்பாக, விவசாயத்தில் கூடுதல் கவனம் செலுத்தினார். கால்வாய்கள், குளங்கள் வெட்டியும் சீரமைத்தும் நீர்ப்பாசன வசதிகளை மேம்படுத்தினார். களர்நிலங்களைச் சீரமைத்து, விவசாய நிலங்களாக்கினார். 1675-76 ஆம் ஆண்டுகளில் முன்னெப்போதும் இல்லாத அளவுக்கு சாகுபடி அதிகரித்திருந்தது. இது, பல ஆண்டுகள் தொடர்ந்தது.[49]

**சொக்கநாத நாயக்கரும் மைசூரும்** - சொக்கநாத நாயக்கரின் அதிகாரம் கோயமுத்தூர் மற்றும் சேலம் ஆகிய மாவட்டங்களில் 1669 ஆம் ஆண்டுவரையில் இருந்தது. அதனை அவரது 1663ஆம் ஆண்டின் திருச்செங்கோடு கல்வெட்டு,[50] 1665ஆம் ஆண்டின் கண்ணாடிபுத்தூர் கல்வெட்டு,[51] 1667ஆம் ஆண்டின் குமாரலிங்கம் கல்வெட்டு மற்றும் 1668-69ஆம் ஆண்டின் திருச்செங்கோடு கல்வெட்டுகள்[52] உறுதிப்படுத்துகின்றன. அக்கல்வெட்டுகளில் மூன்றிலும், 1662ஆம் ஆண்டின் ஸ்ரீரங்கம் கல்வெட்டிலும்[53] அவர், மூன்றாம் ஸ்ரீரங்க ராயரை தனது பேரரசர் என்று குறிப்பிடுகின்றார். ஆனால், 1670ஆம் ஆண்டுகளையொட்டிய மைசூர் ஆட்சியாளர் களின் ஆவணங்களில், மதுரை சாம்ராஜ்ஜியத்தின் பெரும்பகுதியை, அவர்கள் ஆண்டதாக பதிவுபெற்றுள்ளது. 1669-70 ஆம் ஆண்டுகளின் செங்காளரை மற்றும் 1671ஆம் ஆண்டின் வின்னப்பள்ளி கல்வெட்டுகள்[54] அப்பகுதிகளின் அதிபதியாக தேவராஜ உடையாரைச் சுட்டுகின்றன. 1673ஆம் ஆண்டின் தொட்டபேளூர்

மற்றும் 1676ஆம் ஆண்டின் குமாரபாளையம், சத்தியமங்கலம் ஆவணங்கள் சிக்கதேவராயரை உடையவராகக் காட்டுகின்றன.[55] தேவராஜ உடையாரின் கடைசி காலத்தில், மதுரை பிராந்தியத்தின் பெரும்பகுதி ஆக்கிரமிப்புக்கு உள்ளானது, இதன் மூலமாகத் தெளிவாகத் தெரிகின்றது. முன்னவர்களின் அபகரிக்கும்போக்கை, தனது கொள்கையாக சிக்க தேவராயரும் தொடர்ந்து வந்திருக்கின்றார்.

மைசூர் சாம்ராஜ்ஜிய விரிவாக்கத்தில், மதுரை இழந்த எல்லைகள் தொடர்பான உண்மை நிகழ்வுகள், தெளிவற்ற நிலையில் குழப்பமாகத்தான் இருக்கின்றன. 1666 ஆம் ஆண்டுவரை யிலும் சொக்கநாத நாயக்கர், உள்ளூரில் தனக்கிருந்த ஆபத்துகளை சமாளிப்பதற்கே, ஓய்வில்லாமல் ஓடியாட வேண்டியிருந்தது. அதுபோல, உள்ளாட்சி நிர்வாக விவகாரங்களும் அவரது நேரடி கவனத்தைக் கோருபவைகளாக இருந்தன. மதுரை சாம்ராஜ்ஜியத் தின் இந்தக்காலகட்ட பலவீனத்தை தேவராஜ உடையார், தனக்கு சாதகமான அம்சமாக, பெரிய அளவில் பயன்படுத்திக்கொண்டார். சிக்கதேவராயரின் அபகரிப்புக்கு எதிராக, 1672-1674 காலகட்டத்தில் பலநிகழ்வுகள் கடும்சீற்றத்துடன் நடந்திருப்பது தெரிகின்றது. அந்தக்காலகட்டத்தில் மதுரையின் சொக்க நாத நாயக்கர், தஞ்சாவூர் ஆட்சியாளரின் தளபதிகளில் ஒருவரான தாமர்லா அய்பேந்திரா மற்றும் பிஜப்பூர் சுல்தானின் அதிகாரி ஒருவர், மைசூரின் சிக்கதேவ ராயருக்கு எதிராக, மூன்றாம்ஸ்ரீரங்கரின் வேண்டுகோளுக்கிணங்க, ஈரோட்டில் போரிட்டிருக்கிறார்கள். அம்மூவரையுமே சிக்கதேவ ராயர் தோற்கடித்திருக்கிறார். விஜயநகரப் பேரரசர் இக்கேரிக்கு ஓடிவிட்டார்.[56]

தனது மூத்த சகோதரனைக் கொன்று, பெத்னூரின் ஆட்சிக்குவந்த செவப்ப நாயக்கர், கூட்டணி அமைத்துக்கொள்ளும் நோக்கோடு சிக்கதேவ ராயரை அணுகினார். அதற்கு சிக்க தேவ ராயர் மறுத்ததும், பேரரசு இல்லாத பேரரசராக இருக்கும் மூன்றாம்ஸ்ரீரங்கருக்கு ஆதரவாக, அக்கம்பக்கத்திலுள்ள வேறுசில ஆட்சியாளர்களுடன் கூட்டுவைத்து, மைசூரை போருக்கு அழைத்தார்,[57] செவப்ப நாயக்கர். வந்தவேகத்திலேயே அவரையும், அவருடன் கூட்டு வைத்திருந்த மற்றவர்களையும் தோற்கடித்த சிக்கதேவ ராயர் ஹாசன், சக்கரபட்ணா ஆகிய இடங்களை மைசூருடன் சேர்த்துக்கொண்டார்.

1679ஆம் ஆண்டின் சிக்கதேவராயரின் கல்வெட்டொன்று, ‘பாண்டியமன்னன் சொக்கனை போரில் வென்ற‘தாகக் குறிப்பிடுகின்றது.[58] சிக்கதேவராயரின் 1686ஆம்ஆண்டின் மற்றொரு

கல்வெட்டு, 'மதுரை பிரபுவின் ராணுவத்தை ஈரோடு நாட்டில் வைத்து, சிக்கதேவன் தோற்கடித்ததாகவும், திருபுரா- திருசிரபுரா- திருச்சினாப்பள்ளி- மற்றும் அனந்தபுரியை கைப்பற்றிய தாகவும், தாமர்லா அய்பேந்திரா திடீரென்று எதிர்நிலைக்கு மாறி விட்டதையும், அனந்தோஜி தப்பியோடிவிட்டதாகவும் சாம்பள்ளி, ஓமலூர் மற்றும் தாராபுரம் கைப்பற்றப்பட்டதாகவும்' விலாவாரியாகப் பகர்கின்றது.[59] இது, 1667 ஆம்ஆண்டில் நடந்திருக்கலாம் என்று வில்க்ஸ் குறிப்பிடுகின்றார்.[60]

இந்தப்போரின் முடிவையொட்டி, சொக்கநாத நாயக்கருக்கும் தஞ்சாவூர் ஆட்சியாளருக்கும் இடையில் கருத்துவேறுபாடுகள் தொடங்கின. அது, பின்னவரின்மீது முன்னவரின் போரைத் துரிதப் படுத்தியது. 1676ஆம் ஆண்டின் இயேசு சபைக் கடிதமொன்றின் இக்கருத்து, மிகமுக்கியத்துவம் வாய்ந்தது. மதுரை நாயக்கர், 1673 ஆம்ஆண்டில் பேரழிவுப் போரில் மும்முரம் காட்டினார் என்பதாக, அது இருக்கின்றது.[61]

மேலே குறிப்பிடப்பட்ட 1670ஆம் ஆண்டின் சிக்கதேவ ராயருக்கு எதிராக சொக்கநாத நாயக்கர் நடத்திய மைசூர் போரில், மூன்றாம்ஸ்ரீரங்கருக்காக பலர் சொக்கநாத நாயக்கருடன் கூட்டுவைத்தனர். இக்கேரியை ஆட்சிசெய்தவர் மீண்டும் ஒருமுறை, மூன்றாம்ஸ்ரீரங்கருக்காகப் போரிட்டும் தோல்விதான் கண்டார். அதன்பின்பு, மூன்றாம்ஸ்ரீரங்கர் காணப்படவில்லை. விஜயநகரப் பேரரசின் கடைசி சக்கரவர்த்தியாக அறியப்படும் அவரது மைத்துனர் கோதண்டராமன், மைசூர் நாட்டின் தளவாய் குமாரய்யாவை ஆசனாவில் (ஹாசன்) தோற்கடித்தார்.[62]

மூன்றாம்ஸ்ரீரங்கர் மற்றும் கோதண்டராமனின் விதிகுறித்து, முடிவாக எதுவுமே தெரியவில்லை. முன்னவரின் கைம்பெண் மனைவிக்கும் அவரது இரண்டுமகன்களுக்கும் கொடை கொடுத்ததாக, சிவாஜியின் வெள்ளி ஏட்டு ஆவணங்கள் தெரிவிக் கின்றன. மூன்றாம்ஸ்ரீரங்கர் மேற்கு நாட்டுக்குத்[63] தப்பியோடி, அங்கே மரித்துவிட்டதாகச் சொல்லப்படுகின்றது. அதுகொண்டு பார்க்கும்போது, அவர் 1677 ஆம் ஆண்டுக்கு முன்னர் மறைந் திருக்கலாம்.

1676ஆம் ஆண்டில் சத்தியமங்கலத்தை ஆக்கிரமித்த சிக்கதேவ ராயர், அடுத்தடுத்து மதுரை ராஜ்ஜியத்தின் வடமேற்குப் பகுதியி லிருந்த முக்கியமானக் கோட்டைகளைக் கைப்பற்றினார். மதுரைப் பகுதியிலிருந்து, தொடர்ந்து ஆக்கிரமிப்பை மேற்கொள்ளும் நோக்கத்துடன் அவற்றை பலப்படுத்தவும் செய்தார். அந்தவகையில் முகம்மதியர்களிடமிருந்து தன்னைப் பாது காத்துக்கொள்வதும்

நோக்கமாக இருந்தது. ஈகோஜியுடன் சொக்கநாத நாயக்கர் போர்தொடுக்கும் நேரத்தின்போது, மதுரைக்கு எதிரானத் திட்டங்களைச் செயல்படுத்துவதற்குத் தோதான நேரத்தை சிக்கதேவ ராயர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். 1676 ஆம்ஆண்டில் அரசியல் சூழ்நிலை கருமேகங்களாகத் திரண்டிருந்தது. மதுரை, மைசூர் மற்றும் தஞ்சாவூர் ஆட்சியாளர்கள் போருக்கான ஆயத்தங்களில் மும்முரமாக இருந்தார்கள். ஈகோஜியின் அபகரிப்புக்கு எதிரான தண்டனையும் எதிர்பார்க்கப்பட்டது.[64]

**கர்நாட்டிக்கில் சிவாஜியின் படையெடுப்பு (1676-77)** - 1677ஆம் ஆண்டின் முக்கிய நிகழ்வாக இருப்பதும், தென்னிந்திய அரசியலில் அதிகசெல்வாக்கைச் செலுத்தியதும், சிவாஜியின் படையெடுப்புதான்.[65] தொடக்கத்தில் அது, திடீர்நடவடிக்கையாகத் தெரிந்தாலும், அதற்கான சாத்தியங்கள் திட்டமாய், சிலகாலமாகச் செய்யப்பட்டுவந்தது. அதனுடைய மையக்குறியாக, தஞ்சாவூரை தனது ஆளுகைக்குள் கொண்டுவருவதும்; முடிந்தால், தெற்கு சாம்ராஜ்ஜியங்கள் அத்தனையையும் வென்றுசேர்ப்பதுமாக இருந்தது. ரகுநாத்பாண்ட்-ரகுநாத் நாரயன் ஹன்மந்தே -திறமையும் நம்பிக்கையுமான அமைச்சராக ஷாஜியிடம் இருந்தார். அவர் ஒருகட்டத்தில், ஈகோஜியின் பாரம்பரிய வழியில் நிர்வாகியாகினார். ஈகோஜியின் தொடர்தலையீடுகளால் அவரது அதிகாரமும் செல்வாக்கும் குறைக்கப்பட்டது. தனது சகோதரரின் சீர்கேடான ஆட்சி குறித்து ரகுநாத்பாண்ட், சிவாஜிக்கு கடிதம் எழுதினார். அதன்பேரில், சிவாஜியிடமிருந்து ஒரு அறிவுரைக் கடிதம் ஈகோஜிக்கு வந்துசேர்ந்தது. ஆனால் அதை, ஈகோஜி கண்டுகொள்ளவேயில்லை. இதையடுத்து ரகுநாத்பாண்ட், ஈகோஜி மீது வெறுப்பை வளர்த்தார். சிவாஜிக்கு இந்த நாட்டைக் கைப்பற்றிக் கொடுப்பதற்கானத் திட்டங்களை வகுக்க ஆரம்பித்தார். சிவாஜியைச் சந்தித்து தெற்குப்பக்கத்தில் படையெடுப்பு எப்போது நடத்தலாம் என்பதுபோன்ற கேள்விகளைக் கேட்டு, பதில்பெற்று, ஆலோசனை செய்துவிட்டுவருவதற்கு முன்பே, கர்நாட்டிக் பகுதி யிலிருந்த ஆட்சியாளர்களுடன் நட்பை வளர்க்கத் தொடங்கினார். குறிப்பாக, செஞ்சியிலிருந்த பிஜப்பூர் சுல்தானின் ஆளுநரிடம். சதாராவுக்கு வரும்வழியிலே, தனது இந்துஅமைச்சர்களான அக்கண்ணா மற்றும் மாதண்ணா ஆகியோரைக்கொண்டு, கோல்கொண்டா சுல்தானுடன் கூட்டணியையும் அமைத்துவிட் டிருந்தார். சிவாஜியை சந்தித்து, எல்லாத்திட்டங்களையும் விரிவாக விளக்கினார். இதை, முறையாகச் செயல்படுத்தினால், எளிதில் இலக்கை அடைந்து விடலாம் என்று நம்பவைத்தார். ரகுநாத்பாண்ட்டின் திட்டங்களால் கவரப்பட்ட சிவாஜி, முகலாயப்

பேரரசருடன் ஓர் உடன்பாடு செய்துகொண்டார். முகலாயத் தளபதிக்கு பெரும் கையூட்டு பகட்டாகக் கொடுக்கப்பட்டது. பேரரசருக்குத் திறைசெலுத்த ஒப்புதலும் தரப்பட்டது. 1676ஆம் ஆண்டின் இறுதியில், வெற்றிக்கான தனதுபயணத்தை சிவாஜி தெற்குநோக்கி துவங்கினார். அவருடன் 40,000 காலாட்படையினரும் 30,000 குதிரைப்படையினரும் இருந்தார்கள். போர் தயாரிப்புகளை முழுமைப்படுத்த, வழியில் தக்காணத்தில் ஹைதராபாத்திலுள்ள பாக் நகரில் சிவாஜி ஒருமாதகாலம்வரை தங்கினார். கோல்கொண்டா சுல்தான் உதவியுடன் தயாரிப்புகள் வெகுவாக நடந்தன. வென்றுநிலம்கொள்ளுதலில் பாதிப்பாதியாகப் பங்கிட்டுக் கொள்வதாக, அவர்களுக்குள் உறுதிசெய்யப்பட்டிருந்தது. இதனை, பம்பாயிலுள்ள கிழக்கிந்தியக் கம்பெனியின் முகவர், சூரத்துக்கு எழுதிய 1677ஆம் ஆண்டின் ஜுன் 27ஆம் தேதியிட்டக் கடிதம், உறுதிசெய்கின்றது. அக்கடிதம், கார்வாரேயிலுள்ள தலைமை அதிகாரி மிஸ்டர் சைல்ட் என்பவரால் எழுதப்பட்டுள்ளது. அதில், 'கோல்கொண்டா கோட்டைக்குள் சிவாஜி தங்கியிருக்கின்றார். மழைக்காலம் கழிந்ததும், கர்நாட்டிக்கிற்கு எதிராகப் புறப்படும் நோக்கம் இருக்கின்றது. தக்காணத்தைச் சேர்ந்த சிறு, குறுந்தலைவர்கள் எல்லோரும் சிவாஜியுடன் சேர்ந்துகொண்டுள்ளனர். அவர்களுக்கும் பங்கு தருவதாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது' என்று எழுதப்பட்டுள்ளது. 1677ஆம் ஆண்டின் ஜுலை, 11ஆம் தேதியிட்ட பிறிதொரு கடிதம், 'தற்போது சிவாஜி, கர்நாட்டிக்கை நோக்கி வெற்றிகரமாகச் சென்றுகொண்டிருக்கிறார்' என்று, அன்றன்றைய நாட்குறிப்புபோல பதிவுசெய்கின்றது. அதேஆண்டின் ஆகஸ்ட், 24ஆம் தேதியக் கடிதம், 'சிவாஜி கர்நாட்டிக்கின் மேல்பகுதியில் இருக்கின்றார். செஞ்சி, சிங்கவோர், பில்குண்டா உள்ளிட்ட வலுவானக் கோட்டைகளையும் மற்றும் பல இடங்களையும் கைப்பற்றினார். மூர்களை - பிஜப்பூர் படையைச் சேர்ந்தவர்களை- வெட்கப்படும் படியாக, தடமின்றி ஓடஓட விரட்டினார். சிவாஜி, ஸ்ரீரங்கப் பட்டிணத்தைக் கொள்ளையடித்து, அங்கிருந்து பெரும் செல்வத்தைக் கடத்திக்கொண்டு சென்றதாக நம்பப்படுகின்றது. பின்னர் அவர், அங்கிருந்து திரும்பி, பிரித்ரூர் (பெத்னூர்) செல்லத் திட்டமிட்டார். அதனால் படையின் மற்றொரு பிரிவினரால் கைப்பற்றப்பட்ட கனராவைச் சென்றடைந்தார்' என்று விரிவாகப் பேசுகின்றது. 1677ஆம் ஆண்டின் செப்டம்பர், 1ஆம் தேதியிட்ட ஒருகடிதம், மெட்ராஸ் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு, 'சிவாஜியின் அருகாமையைக் குறிப்பிட்டு, தற்காப்பு மேற்கொள்ளும்படி எச்சரிக்கை செய்கின்றது. மேலும் அது, சிவாஜியின் படையை,

அதன்வெற்றியைத் தகவலாகப் பகிர்ந்துகொள்கின்றது. கூடுதலாக, கடிதங்களுடன் மூன்று தகவலாளர்கள் வந்திருக்கும் செய்தியையும் அது வெளிப்படுத்துகின்றது.[66]

தன்னை வலுவாக நிலைப்படுத்திக்கொண்டு, வடக்கே தனது தகவல்தொடர்பையும் கவனமாகப் பாதுகாத்தபடி, செஞ்சியை நோக்கி விரைந்த சிவாஜி, எந்த சிரத்தையும் எதிர்கொள் ளாமல் எளிதில், வலுவான அக்கோட்டையைக் கைப்பற்றினார். இத்தனை எளிதாக அவ்வெற்றியைச் சாத்தியப்படுத்தியது, தளபதி ரகுநாத்பாண்ட்டின் ஆளுமைதான். கைக்கூலித்தனமும் நன்றிகொல்லும் சகவாசமும்கொண்ட பிஜப்பூர் அதிகாரிகளால் அவமானப்படுத்தப்பட்ட அவர், தந்திரமும் நுண்ணோக்கும் கொண்டவராக இருந்தார். 1677ஆம் ஆண்டின் ஜூலையில் செஞ்சிக் கோட்டை ரகுநாத்பாண்ட்டின் யுக்தியால் சிவாஜி வசம்[67] மாறியது. அங்கே அவர், தனக்கே உரித்தான ராணுவநிர்வாக நடைமுறையைக் கைக்கொண்டார். கொஞ்சநாட்களிலேயே, அதுவரை ஈகோஜியிடம் பணிபுரிந்த சிவாஜியின் சகோதரர் சந்தாஜி, இங்கே வந்துவிட்டார். தனதுபடையில், பெரும்பகுதியை வேலூர் கோட்டையை முற்றுகையிட அனுப்பிவிட்டு, அவர் தஞ்சாவூர்நோக்கிப் பயணப்பட்டார்.[68] வழியில் சகோதரர் ஈகோஜியை சந்திக்க, கொள்ளிடம் கரையில் தங்கினார்.

இந்தச்சந்திப்பு நிகழ்வுத்தொடர்பாக, இருவேறுவிதமான விளக்கங்கள் தெளிவுறுத்தப்படுகின்றன. பாக்ஹர்ஸ் என்று விளிக்கப்படும் மராத்திய வரலாற்றுக் குறிப்புகளை அடிப்படையாகக்கொண்டு எழுதப்பட்ட லைப் ஆஃப் சிவாஜி எனும் நூல்,[69] சிவாஜியின் நோக்கம், நடவடிக்கைகள் உள்ளிட்ட முழு விவரங் களைக் கொண்டிருக்கின்றது. அதேவேளையில் இயேசு சபையின் குறிப்பு மிகச்சுருக்கமாகவும், அங்கொன்றும் இங்கொன்றுமான உடைந்தத் தகவல்களாகவும் சிவாஜியின் பெயரைக் கறைப்படுத்துவதாகவும் இருக்கின்றது.[70] முந்தையத் தரவுகளின் படி, 'தங்களுக்குள் இருக்கும் பிரச்சனைகளை சுமுகமாகக் களைந்து கொள்ள, மூன்று பிரதிநிதிகளை தன் முகாமுக்கு அனுப்பிவைக்க' ஈகோஜியிடம் சிவாஜி கேட்டுக்கொண்டார். அப்படிவந்தவர்களை வரவேற்று, தனிச்சிறப்போடு தனது நியாயமான, இயல்பானக் கோரிக்கைகளை அவர்கள் மனதில்பதியும்படி பேசினார். அதாவது, தனது தந்தையின் ஜாகிரில் பாதி கொடுக்கவேண்டும் என்று வலியுறுத்தினார். மேலும், தந்தையின் வழிவழிச் சொத்தில் தனக்கானப் பங்கையும் கடந்த பதிமூன்றுஆண்டுகளாக எந்தவொரு தொந்தரவும் கொடுக்காமல் ஈகோஜியை அனுபவிக்க விட்டதையும் எடுத்துரைத்தார். பிரதிநிதிகள் மூவரும் தஞ்சாவூர்

திரும்பினர். ஈகோஜியின் முகம்மதிய ஆலோசகர்கள், ‘சகோதரன் விதித்திருக்கும் தீர்வையை ஏற்றுக்கொண்டால், அது புகழுக்கு இழுக்கு’ என்று, அவரை மனங்குழப்பிவிட்டனர். மேலும், மதுரை நாயக்கரும், மைசூர் ராஜாவும் ஆபத்துக்காலங்களில் தங்களின் கரம் ஈகோஜியை நோக்கி உதவநீளும் என்று உறுதி கொடுத்திருந் தார்கள்.[71] ஆனால் ரகுநாத்பாண்ட், ராஜதந்திரத்துடன் ஈகோஜியின் உறவைத் துண்டிக்கச்சொல்லி சிவாஜியை வற்புறுத்தியதோடு, ஆண்டுக்கு ஆறுலட்சம் ஹன்களை பங்குத்தொகையாகக்[72] கேட்கச்சொன்னார். தனது பலவீனத்தை உணர்ந்த ஈகோஜி, சிவாஜியை சந்திக்கச் சென்றார். சிவாஜி, அவரை மிகவும் கௌரவமாக வரவேற்றார். அந்தமுகாமில் ஈகோஜி, சிவாஜியுடன் ஏறத்தாழ இருபதுநாட்கள் தங்கியிருந்தார். ஆயினும் உறுதியான முடிவு எதையும், ஈகோஜி பதிலாகச்சொல்ல முடிவெடுத்திருப்பது போலத் தெரியவில்லை. முடிவில், வன்முறை ஏதும் நேர்ந்து விடுமோ என்று பயந்த ஈகோஜி, சொல்லிக்கொள்ளாமல், திருட்டுத்தனமாக தஞ்சாவூருக்குத் திரும்பிவிட்டார். தனது புகழுக்கும் மதிப்புக்கும் ஈகோஜியின் இச்செய்கை களங்கம் உண்டாக்கிவிட்டதால், கடுஞ்சினத்துக்கு உள்ளான சிவாஜி, ஆனாலும் கட்டுப்படுத்திக் கொண்டார். மறுபடியும் தனது நியாயமான கோரிக்கைகளை பேச்சுவார்த்தையின் மூலம் தீர்த்துக் கொள்ள முயற்சித்தார். ஆனால் ஈகோஜி, ஷாஹிஜீயின் அசையும் சொத்துகளில் பாதியை மட்டும் கொடுப்பதற்குத் தயாரானார். ஈகோஜியின் முரட்டுப் பிடிவாதத் தால் சிவாஜி வேதனைக் குள்ளானார். இதனைக் காரணம்காட்டி, சகோதரனுடன் போர் புரிவது, தனது மதிப்பையும் நிலைபேறையும் முரண்பாட்டுக் குள்ளாக்கிவிடும் என்று கருதினார். அதனால், சுற்றியுள்ள நாடுகளை வென்று, அதன்மூலம் மனநிறைவு பெற எண்ணி, வேலூருக்குப் புறப்பட்டுவிட்டார். கிளர்ச்சிகள் செய்து அடங்காதிருந்த பாளையக்காரர்களை ஒடுக்கினார்.[73] வென்று நிலம்கொண்ட பகுதிகளில் பாதுகாப்பை பலப்படுத்தினார். ஸ்ரீரங்கப்பட்டிணம் சென்ற அவர், திறைவசூலித்தார். வடக்கிலிருந்து முகலாயச் சக்கரவர்த்தி ஔரங்கசீப், தெற்குநோக்கி படையெடுத்து வருவதாகக் கிடைத்தத் தகவலையடுத்து, குறிப்பாக தன்நாட்டின் மீது குறி வைத்திருப்பதை அறிந்தவர், செஞ்சியின் ஆளுநராக சந்தாஜியை உறுதிப்படுத்தினார். எதிர்பாராத பின்னிகழ்வுக்குத் தேவைப்படும் அளவில், படையின் ஒருபிரிவை ரகுநாத்பாண்ட் தலைமையிலும், அவருக்கு உதவியாக தலைமைத்தளபதி ஹமிர்ராவை (அநேகமாக, ஓர்மே யின் ஹார்ஜி ராஜாவாக இருக்கலாம்) நியமனம்செய்தார். மீதமிருந்த தனது படைகளுடன்,

1677ஆம் ஆண்டின் நவம்பர் தொடக்கத்தில், வடக்குநோக்கி விரைந்தார்.[74]

1678ஆம் ஆண்டின் ஆண்ட்ரே பிரைரேயின் கடிதம், ‘சகோதரப் பாசத்தின் அடிப்படையில், தன்னை சந்திக்கவந்த ஈகோஜியைத் தந்திரமாக வளைத்துசிறையில் அடைத்த சிவாஜி, முறையற்ற வகையில் தேற்றிய செல்வங்கள் எல்லாவற்றையும் திரும்பப்பெற முயற்சித்தார். ஈகோஜியும் தந்திரமாக எப்படியோ சிறையிலிருந்து தப்பித்துவிட, கொள்ளிடத்துக்கு வடக்கேயுள்ள அத்தனைப் பகுதிகளையும் சிவாஜி தனதாக இணைத்துக்கொண்டார். வென்று நிலம் கொண்ட அத்தனைக்கும் பொறுப்பாக சந்தாஜியை நியமித்து, அவருக்கு ஆலோசனை சொல்ல ஒரு பிராமணனை (அநேகமாக அது, ரகுநாத்பாண்ட்டாக இருக்கலாம்) யும் ஏற்பாடுசெய்து விட்டு, தன்மீது படையெடுக்க வந்துகொண்டிருக்கும் முகலாயப் படைகளைத் தடுப்பதற்கு வடக்கே சென்றார். இருவருக்கும் இடையிலான செயல்பாடுகள் குறித்த இத்தரவுகள், முழுமையற்ற ஒருபகுதியேயான, கருத்தினைப் புரட்டுசெய்யும் வகையைச்சேர்ந்தத் தகவலாக இருக்கின்றது. இதில் சிவாஜி, பேராசைக்கொண்ட ஒரு அரக்கன்போலவும், தனது ஆசைகளை நிவர்த்தித்துக்கொள்ள படையையும் பலத்தையும் பயன்படுத்தியவராக சித்திரிக்கப் படுகின்றார்.

**சந்தாஜியுடன் ஈகோஜி நடத்தியப் போர்** - தெற்கிலிருந்து சிவாஜி புறப்பட்டுப்போனது, சந்தாஜி மீது போர்த்தொடுப்ப தற்கான சந்தர்ப்பத்தை ஈகோஜிக்கு உருவாக்கிக் கொடுத்தது. ஈகோஜி பாதுகாப்பிலிருந்து தப்பியோடியவர். சந்தாஜி செஞ்சியின் பாதுகாவலராக இருப்பவர். சகோதரன் சிவாஜியுடன் தனக்கு ஏற்பட்ட பிணக்குகளுக்கெல்லாம் காரணமாக முன்பு தன்னிடம் பணிபுரிந்து, தற்போது செஞ்சியின் ஆளுநருக்கு தலைமை ஆலோசகராக இருக்கும் ரகுநாத்பாண்ட்தான் என்பதை, ஈகோஜி உணர்ந்திருந்தார். தனக்கும் சகோதரனுக்குமிடையேயான உறவைப் பிளந்து, தனது நிலையைத்தக்கவைத்துக் கொண்டிருப்பதாகக் கருதினார். இதையடுத்து, 1667ஆம் ஆண்டின் நவம்பர், 25 ஆம்தேதியன்று கொள்ளிடத்தைக் கடந்து, சந்தாஜிக்கு எதிரான வலுவானப் போரைத் தொடுத்தார், ஈகோஜி.

சந்தாஜி, தனது ஒன்றுபட்ட வளத்தைத் திரட்டிக்கொண்டு ஈகோஜியின் படையை எதிர்கொள்ள தெற்குநோக்கிப் புறப்பட்டார். நீண்டகாலத்தை எடுத்துக்கொண்ட அப்போர், கடுமையாக வும் நடந்தது. தஞ்சாவூர் படை மூர்க்கமாகவும் மனவலிமையுடனும் போரிட்டது. எதிரிப்படையைத் துண்டாடியது. கவனம்சிதறாமல்

முறியடித்துக்கொண்டிருந்த படை, ஒளிந்துமறைந்திருந்த எதிரிப் படையின் பொறியில் விழுந்தது. இந்தப்போராட்டம் வாலிகண்ட புரத்தில் மும்முரமாக நடந்துகொண்டிருந்தது. ஈகோஜி குழம்பிப் போனார். தனதுபடையில் ஒருபகுதியைத் திரும்ப அழைத்துக் கொண்டு தஞ்சாவூர் வந்தடைந்தார். போரின் துவக்கத்தில் கிடைத்த வெற்றி, போரின் சாதாரண எச்சரிக்கைகளைக் கூட அவரைப் புறக்கணிக்கச் செய்துவிட்டது பேரார்வத்துடன் அவர் கொண் டிருந்த திட்டங்கள், திடீர் குழப்பத்தால் சேதமடைந்து போயின.

தனது செஞ்சித் தளபதிக்கு எதிராக, ஈகோஜி நடந்துகொண்ட எதிர்பாராத முறையினால், தாய்மண்ணைநோக்கி விரைந்து கொண்டிருந்த சிவாஜியின் முன்னேற்றம் தடைபட்டது. பயணத்தை தோர்கால் என்னுமிடத்தில் நிறுத்திக்கொண்டார். அங்கிருந்தே, ரகுநாத்பாண்டிடம் தொடர்பு கொண்டு நிலைமையைக் கேட்டறிந்தார். ஈகோஜியின் திட்டங்கள், சிவாஜியைத் திடுக்கிடச் செய்பவையாக இருந்தன. அதையடுத்து, பத்தொன்பது விதிகளைக்கொண்ட உடன்படிக்கையொன்றைத் தயாரித்து, அதை ஈகோஜியின் ஒப்புதலுக்கு அனுப்பிவைத்தார்.[75] தஞ்சாவூர் நிர்வாகத்தை மேம்படுத்தும்விதமாக உடன்படிக்கையின் விதிகள் அமையப்பெற்றிருந்தன. அதன் ஒவ்வொரு வார்த்தையிலும் சிவாஜியின் மனிதநேய விருப்பமும் நிர்வாக அனுபவங்களும் மிளிர்ந்தன. பிஜப்பூர் சுல்தானிடம் பண்ணை அடிமைபோலிருக்கும் ஷாஹியின் வாரிசை மீட்டெடுக்கும் வகை அதிலிருந்தது. ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்ட ஈகோஜி, தஞ்சாவூ ரின் ஆட்சியாள ராகத் தொடரவிரும்பினார். இதையடுத்து, தனது ஆளுகையை மீட்டெடுக்க பெருந்தொகையை ஈகோஜி கொடுத்ததாகக் கூறப்படுகின்றது. அதாவது, மூன்றுலட்சம் ஹன்கள் பணமாகக் கொடுக்கப்பட்டது.[76]

சிவாஜியின் வழிகாட்டுதலுக்கேற்ப அத்தனை விவகாரங்களை யும் நெறிப்படுத்திய சந்தாஜி, வேலூர் முற்றுகையை இறுதிக்குக் கொண்டுவர அங்கே விரைந்துசென்றார்.[77] ஓராண்டுக்கும்மேலாக மராத்தியப்படை கோட்டையை முற்றுகையிட்டிருந்தது. சிவாஜி தெற்கே இல்லாதது, முற்றுகையை நீட்டித்துக்கொண்டே போக ஒருகாரணமாக இருந்தது. ஒருவழியாக, பதினான்கு மாதங்களுக்கு பின், 1678ஆம் ஆண்டின் ஆகஸ்ட் மத்தியில் ரகுநாத்பாண்ட் கோட்டையைக் கைப்பற்றினார்.[78] வேலூர் கோட்டையை வென்றெடுத்தபின், சிவாஜியின் பிரதிநிதியாக அவரது தெற்கு சாம்ராஜ்ஜியம் சிலஆண்டுகளை அமைதியாகவே கழிந்தது. எதிர்காலத்தில் முகலாயப் பெரும்படையின் ஊடுருவலைத் தடுக்கும் தேவையையொட்டி, கோட்டைகளை பெரும்

எண்ணிக்கையிலானத் தொழிலாளர்களை ஈடுபடுத்தி, வலுப்படுத்த வேண்டியது அவசியமாகியது.

ஈகோஜியுடன் அழகிரி நாயக்கர் போராட்டம் நடத்திக் கொண்டிருந்தபோது, வளர்ப்புச் சகோதரனாகிய அவரை ஆளுநராக்கிய மதுரை சொக்கநாத நாயக்கர், நடுநிலை எடுத்துக்கொண்டார். ஈகோஜியுடன் அவருக்கு நட்பு எதுவும் இருக்கவில்லை. ஈகோஜி சந்தாஜியுடனானப் போரில் ஈடுபட்டுக் கொண்டிருந்தபோது, சொக்கநாத நாயக்கர் தனது படையுடன் தஞ்சாவூருக்குள் நுழைந்தார். செய்திக் கேள்விப்பட்டதும் ஈகோஜி, தலைதெறிக்க தலைநகருக்கு ஓடிவந் தார். பெரும்அழிவை உண்டாக்கிய அந்தப்போருக்கு முன்னே, சொக்கநாத நாயக்கருக்கு இத்தனைநாளும் எதிர்பார்த்துக் காத்திருந்த வாய்ப்புகூடித்தான் வந்தது. ஈகோஜியின் படை திரும்ப வருவதற்குள் தலைநகர் தஞ்சாவூரைக் கைப்பற்றியிருக்கலாம். இந்நிலையில், ஈகோஜி ராஜதந்திரமாக நடந்துகொண்டு, சந்தாஜியிடம் பெருந்தொகையைக் கொடுத்து, முற்றுகையிட்டு வென்று கோட்டையை தன்னிடம் ஒப்படைக்க ஓர்உடன்பாடு செய்துகொண்டார். ஈகோஜிக்கும் சந்தாஜிக்கும் இடையிலான இந்த ஒப்பந்தம், அனைத்துவிதமானப் பிரச்சனைகளுக்கும் ஒரு முடிவைத் தந்ததுடன், கூட்டணி உறுதியையும் நிறுவனப்படுத்தியது. பழிபாவத்துக்கு அஞ்சாது செய்துகொள்ளப்பட்ட இவ்வொப்பந்தத்தால் ஏமாற்றப்பட்ட சொக்கநாத நாயக்கர் வெறுத்துப்போய் திருச்சினாப்பள்ளிக்குத் திரும்பினார்.[79]

## சொக்கநாத நாயக்கரின் பதவி நீக்கமும் மீள்பதவியும் - ருஸ்தும்கானின் அபகரிப்பு

சொக்கநாத நாயக்கரின் பலவீனமும் ஊசலாட்டமுமான வெளியுறவுக் கொள்கைகள் குடிமக்களுக்குக் கூடுதலானத் துயரங்களைக் கொண்டுவந்து சேர்த்தது. தஞ்சாவூர் மீது சொக்கநாத நாயக்கர் படையெடுத்துச் சென்றது, அவரது கருவூலத்தையும் கௌரவத்தையும் காலிசெய்திருந்தது. மைசூர், தனது வீரஞ்செறிந்த நிலைமையிலிருந்து மடமையைநோக்கி மெதுமெதுவாகப் போய்க்கொண்டிருக்கத் தயாராக இல்லை. மதுரையின் வடக்குஎல்லையில் மிச்சமிருந்த இரண்டுகோட்டைகளை அது கைப்பற்றிக்கொண்டுவிட்டது. இந்தச்சூழ்நிலையில், பொதுவான உணர்வுகள் ஒருமுடிவுக்கு வந்தன. சொக்கநாத நாயக்கர் மனநிலை பிறழ்ந்தவர் என்ற திட்டத்தின்படி பதவிநீக்கம் செய்யப்பட்டது மன்றி, சிறையிலும் அடைக்கப்பட்டார். அவரது இளைய சகோதரர் முத்துலிங்க நாயக்கர் (முத்து அழகாத்ரி என்றும் அழைக்கப்பட்டார்)

1678ஆம் ஆண்டு அரசராக்கப்பட்டார்.[80] அவரது புதியநிர்வாகம், அரசியல் சீர்கேட்டை மாற்றியமைக்கவில்லை. மாறாக, அதிகரிக்கவே செய்தன. மனிதர்களின் தவறான நிர்வாகத்தின் தீங்குகளையும் மடத்தனத்தையும் முடிவுக்குக்கொண்டுவந்தது, வெள்ளம். ஆமாம் வெள்ளம்தான். எப்போதுமில்லாத அளவுக்கு மேற்குமலைகளில் பெய்த மழையின்விளைவாக, கரைபுரண்ட புதுவெள்ளம் நாட்டின் ஒட்டுமொத்த கிராமங்களையும் அடியோடு அழி(டி)த்துக்கொண்டு போய்விட்டது. 1678ஆம் ஆண்டின் கடிதமொன்றில் ஆண்ட்ரே பிரைரே,[81] மதுரை வெள்ள அழிப்பை, மனதை நெகிழச்செய்யும் சித்திரமாக தன் எழுத்தின் வழியே தீட்டியிருக்கின்றார். இதுபோலானதொரு சித்திரத்தை, தலைக்கோட்டைப் போருக்குப் பின்பான விஜயநகரத்தை சீசர் பிரடெரிக் தன் எழுத்தின்வழியே வரைந்திருந்தார். தொடர்ந்து, மதுரைக்கு மற்றொரு சீற்றமும் வந்துசேர்ந்தது. அரசியல் பதற்றம், மக்கள்படும் துயரம் இவற்றையெல்லாம் சாதகமாக எடுத்துக்கொண்ட முகம்மதியப் படைகளின் தனித்திறமை சாதனையாளர் ருஸ்தும்கான்,[82] மதுரையின் அரியணையை அழகாக அபகரித்துக்கொண்டார். குதிரைப்படை அதிகாரியாக, மிக்க செல்வாக்கு பெற்றவர், அவர். புதிய அரசராக பதவியேற்றிருந்த முத்துலிங்க நாயக்கர் திருச்சினாப்பள்ளிக் கோட்டையிலிருந்து வெளியே சென்றிருந்தபோது, கோட்டையின் கதவை இழுத்துப் பூட்டி, அரியணையை அபகரித்துக்கொண்ட அசகாயன், ருஸ்தும்கான். தனது அபகரிப்பை நற்பொருளாக்க, சிறையிலிருந்த சொக்கநாத நாயக்கரை விடுவித்து, அரசனாக முடிசூட்டி வைத்தார். ஆயினும், தனக்கு உரிமையில்லாததைத் தனதாக ஆக்கிக்கொண்டதுடன், உண்மையாக அதிகாரமும் செலுத்திவந்தார். இரண்டு அரசர்களின் அந்தப்புரத்தையும் அவர் மதித்ததாகத் தெரியவில்லை. ஒட்டுமொத்த தேசமும் ருஸ்தும்கானின் இரண்டாண்டுகால ஆட்சியில் சீரழிந்துபோனது. புதிய அரசியல் துரதிர்ஷ்டம், ருஸ்தும்கானின் வீழ்ச்சியைத் துரிதப்படுத்தியது. வலுவான, நேர்மையான ஆட்சியைக்கொடுக்கத் தவறியதுடன், அவரது நீதிக்குப்புறம்பான நடவடிக்கைகளே, நிலைமையின் மையமாக அமைந்துவிட்டன.

1680ஆம் ஆண்டு மைசூர்ப்படை திருச்சினாப்பள்ளியை முற்றுகையிட்டது. வலுவான பாதுகாப்பை உருவாக்கியிராத ருஸ்தும்கானின் அலட்சியமே, ஆட்சியைத் தூக்கியெறிவதற்கானக் களமாக அமைந்துவிட்டது. தொடர்ந்து, தளவாய் கோவிந்தப்பையா, சேதுபதி ஆகியோர் கன்னிவாடி பாளையத்தின் சின்ன கத்தீரி நாயக்கர் தலைமையில் சில பாளையக்காரர்களைத்

திரட்டி, அவர்களின் உதவியையும் சேர்த்து, சொக்கநாத நாயக்கரின் ஆதரவாளர்களுக்கு ஆதரவுதந்து, மிகவும் புத்திசாலித்தனமாகப் பெரும்படையை உருவாக்கினர். அப்படை ருஸ்தும்கானை கொன்றுதீர்த்தது. இவ்வாறாக, ருஸ்தும்கானின் செயல் அடக்கு முறை[83]யிலிருந்து சொக்கநாத நாயக்கர் சுதந்திரமானார்.

**சொக்கநாத நாயக்கரின் இறுதிஆண்டுகள்** - வராதுமீண்டுவந்த சுதந்திரத்தை சொக்கநாத நாயக்கரால் அனுபவிக்க முடியவில்லை. நாட்டின் பெரும்பகுதியை இழந்துவிட்டபின்பு, அவரது தலைமையிடமான திருச்சினாப்பள்ளியை மைசூர் படைத்தளபதி குமரைய்யா, தனது பெரும்படையுடன் முற்றுகையிட்டார். தடுமாற்றமடைந்த சொக்கநாத நாயக்கர், உதவிக்கு ஈகோஜியையும் செஞ்சியை ஆளும் மராத்திய சாம்பாஜியின் தளபதி அரசுமலையை யும் அழைத்தார். சேதுபதியும் தனது விசுவாசத்தைக் காட்டிக் கொள்வதற்கு, படையைத் திருச்சினாப்பள்ளிக்கு அனுப்பினார். தனது அசந்தர்ப்பங்களை அவர்கள், தங்களுக்கான காரிய சித்தியாக மாற்றும் தருணத்துக்குக் காத்திருக்கிறார்கள் என்பதை, சொக்கநாத நாயக்கர் உணர்ந்தே இருந்தார். ஆனாலும், தனது கூட்டணி யினரிடம் நம்பிக்கைக் கொண்டிருந்தார். எல்லாவற்றுக்கும்மேலாக, அவர்கள் மைசூர் படையெடுப்பை, தங்கள் பாதுகாப்புக்கு விடப்பட்ட மிரட்டல் என்றும் கருதினார்கள். ஆயினும் மதுரைப் பகுதிகளை விட்டுக்கொடுக்க, அவர்கள் தயாராக இல்லை.

தனக்கு எதிராகத் திரண்டுவிட்ட எதிர்பாராத முரண்கூட்டணி கண்டு, மைசூர் படைத் தளபதி குமரைய்யா ஆச்சரியமும் அதிர்ச்சியுமானார். அவர்களுடன் போர்புரிவதற்கான வளம் தன்னிடம் போதுமான அளவுக்கு இல்லை என்பதையும் அவர் உணர்ந்திருந்தார். அதனால், சொக்கநாத நாயக்கரிடம் நுட்பமாக அவர், ஒரு பேச்சுவார்த்தையைத் தொடங்கினார். அப்பேச்சு வார்த்தையில் தற்போது சொக்கநாத நாயக்கர் கொண்டிருக்கும் கூட்டணியிலுள்ள ஈகோஜியையும் சாம்பாஜியையும் கழற்றிவிட்டு விட்டால், மீண்டும் தஞ்சையிலும் செஞ்சியிலும் நாயக்கர் ஆட்சியைப் புதுப்பித்துக் கொள்ளலாம் என்று, ஒரு ஆசை வார்த்தையை அப்படியே உருட்டிவிட்டார். அத்துடன், மதுரையின் ஒருமைப்பாட்டையும் கடைப்பிடித்துக் கொள்ளலாம் என்று உறுதியும் அளித்தார். ஆனால், மனதைக் குளிரூட்டும் இந்நம்பிக்கை யளிப்புகளால், சொக்கநாத நாயக்கர் உருகிவிடவில்லை. எந்தவொரு முகபாவத்தையும் அவரிடமிருந்து பெறமுடிய வில்லை. ஆனால் தளபதி குமரைய்யாவின் வார்த்தைகளில், சந்தேகத்தை மட்டும் அவர் கொண்டிருந்தார். மேலும் கூட்டணியைத் தாண்டி, இப்புதுவடிவக் கொள்கைகளை

எடுத்துச்செய்யுமளவுக்கு, தனக்கு உள்ளூக்கம் கிடையாதென்பதை யும் அவர் அறிந்தேயிருந்தார். தன்னுட னிருக்கும் கூட்டணியின் உறுப்புகளை கழற்றிவிட்டுவிட்டுச் செல்வது ஒன்றும், தன் மனசாட்சிக்கு அதிர்ச்சிதரக் கூடியதாக இருக்காதபோதும், தனது கூட்டணியிலிருப்பவர்களின் என்ன மாதிரியாக நடந்து கொள்வார்க ளென்ற உண்மை மதிப்பை அவரால் கண்டறிய முடியவில்லை என்பதும் முக்கியமானது. இப்படியாக, குமரைய்யாவின் தீர்மானத்தின்மீது அல்லது முன்மொழிவின்மீது முடிவெடுக்க முடியாத இருமனநிலை சொக்கநாத நாயக்கரிடம் இருந்தது. அதுவே, பிரச்சனையாகவும் இருந்தது. சொக்கநாத நாயக்கரிட மிருந்து வலுவானதொரு முடிவை எதிர்பார்த்திருந்து, நம்பிக்கை இழந்துவிட்ட மைசூர்ப்படைத் தளபதி குமரைய்யா, தன் பாதுகாப்புக்கும், எதிர்கொள்ளவிருக்கும் நடவடிக்கைகளுக்கும் மைசூரிலிருந்து படைகளை வரவழைக்கும் பணிகளை விரைவாகத் தொடங்கிவிட்டார். அவர் கேட்டுக்கொண்ட படைப்பிரிவுகள் மைசூரிலிருந்து அனுப்பிவைக்கப்பட்டும், எதிரிப்படைகளின் சூழ்ச்சித்திறத்தால், அவை குறிப்பிட்ட எல்லையை, குறிப்பிட்ட நேரத்தில் வந்தடைய முடியவில்லை. இந்த இடைப்பட்ட நேரத்தில், தளபதி குமரைய்யா சாம்பாஜியின் தளபதி அரசுமலை யுடன், நேசமாகப் பெருந்தொகையொன்றைக் கொடுத்து, ‘அப்படியே திரும்பிப் பார்க்காமல் செஞ்சிக்குக் கிளம்பிப்போய் விடு. மற்றதை நான் பார்த்துக்கொள்கிறேன்’ என்று ஒரு உடன்படிக்கையைச் செய்துகொள்ள முயன்றார். அவர் கண்முன்னே ஆட்டியாட்டிக் காட்டியத் தொகை, அரசுமலையை அசைக்க வில்லை. இந்தச் சூழ்நிலையில் தளபதி குமரைய்யாவுக்கு, தான் இக்கட்டான சூழ்நிலையில் சிக்கிகொண்டிருக்கின்றோம் என்ற உள்ளுணர்வு உறுத்தியது. நிச்சயமற்ற நிலையிலிருந்து பின்வாங்குவது உசிதமென்று, அவர் முடிவெடுத்தார். ஆயினும், சத்தமில்லாமல் பின்வாங்கி, மைசூருக்குத் தலைதெறிக்க ஓடுவதற்கு, சூதானமாக சூதுவாதுத் திட்டங்களைப் போட்டார். தனது நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டிருக்கும் ஈகோஜியையும் அரசுமலையையும் திசைதிருப்புவதற்கு, தனது குதிரைப் படையை அவர்களைநோக்கி முன்னேறுவதுபோல பாசாங்கு காட்ட வைத்தார். பின்பு, அப்படியே பாதுகாப்பாக ஓடிவந்துவிடச்சொல்லி உத்தரவும் போட்டிருந்தார். அந்த உத்தரவு தனது படைகளுக்குப் போய்ச்சேருமுன்பே, அவர் காலாட்படையை வழிநடத்திக்கொண்டு மைசூருக்குப் புறப்பட்டுவிட்டிருந்தார். ஆயினும் அவரால், தனது எதிரிகளை ஏமாற்ற முடியவில்லை. அவர்களின் பார்வை முழுவதும் மைசூர்ப் படை மீதே இருந்தது.

அப்படைகள் திடீர்த்தாக்குதல் நடத்தியதில், தளபதி குமரைய்யாவின் படை சிதறுண்டு ஓடியது. தளபதி குமரைய்யா கைதி குமரைய்யாவாகிப் போனார். மைசூர் படையைத் தோற்கடித்த தீரம், சாம்பாஜியின் தளபதி அரசமலையை மட்டுமே சேரும். மதுரை சாம்ராஜ்ஜியத்திலிருந்து அவர்களை துரத்தித்துரத்தியடித்தார். அப்படியே, மைசூர் படைகளின் உடமைகள் அனைத்தையும் கைப்பற்றியவர், தனது அடுத்த நடவடிக்கையாக கூச்சமேயில்லாமல் திருச்சினாப்பள்ளியை முற்றுகையிட்டார். சொக்கநாத நாயக்கரின் உணர்வுகளையோ அல்லது அரியணையை மீண்டும் வழங்குவேன் என்று அவருக்குக் கொடுத்த வாக்குறுதியையோ பற்றி, அவர் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. இழிநிலையிலான இந்த அபகரிப்பு சொக்கநாத நாயக்கரை மேலும் சோகத்தில் ஆழ்த்தியது. அவரது துன்பங்கள் அவரை மூழ்கடித்தன. அந்த அதிர்ச்சியை அவரால் செரிக்க முடியவில்லை.[84]

**சேதுபதியுடனான உறவு** - சொக்கநாத நாயக்கரின் தொடக்கக் கால ஆட்சியில் அவர், திருமலை சேதுபதி மீது படையெடுத்து, ராம்நாட்டின் முக்கியக் கோட்டைகளைக் கைப்பற்றியதும், சேதுபதி அடர்காடுகளுக்குள் மறைந்திருந்து, கெரில்லா முறையில் தாக்குதல் தொடுத்ததையும் இவ்வத்தியாயத்தின் துவக்கத்தில் கண்டோம். தனது விசுவாசமிக்க ஆதரவாளராக சேதுபதியை மாற்ற, முயற்சியெடுத்துக்கொண்ட சொக்கநாத நாயக்கரால் முடிய வில்லை. திருமலை சேதுபதியின் இறப்புவரையிலும் உறுதியற்ற ஐயப்பாடானநிலை நீடித்துக்கொண்டேயிருந்தது. திருமலை சேதுபதியின் மரணம், அழகிரி நாயக்கர் தஞ்சாவூரை ஆண்ட காலகட்டத் தில் நடந்தது என்கின்றார், நெல்சன். அதாவது, 1674ஆம் ஆண்டு. இந்தத்தேதி அநேகமாக, சரியாக இருக்க வாய்ப்புண்டு.[85] 1673-74ஆம் ஆண்டின் ஹனுமந்தங்குடி கல்வெட்டு, திருமலை சேதுபதியின் கடைசிக் கல்வெட்டாகக் கருதப்படுகின்றது.[86] அதில், முகம்மதியர்களுக்கு அவர் நிலம் கொடை கொடுத்தது பதிவாகியிருக்கின்றது. திருமலை சேதுபதியின் மரணத்தையடுத்து அவரிடத்துக்கு வந்தது, அவரது மைத்துனர் ராஜ சூர்யா. சொக்கநாத நாயக்கர் செங்கமல தாஸ் மீது படையெடுத்தபோது, தஞ்சாவூருக்கு ஆதரவாகக் களமிறங்கியவர். தனக்குமுன்னால் ஆட்சி செய்தவருக்கும் சொக்கநாத நாயக்கருக்கும் இடையில் நிலவிய அன்பற்றத் தன்மை அப்படியே கபடமும் சூழ்ச்சியுமாக இப்போதும் தொடர்ந்தது. தஞ்சாவூருக்கு எதிரானப் போரின்போது தளபதியாக இருந்த மதுரையின் தளவாய் வெங்கட கிருஷ்ணப்பா, சேதுபதி நாட்டுக்கு அதிபராகிப்போன ராஜசூர்யாவைப் பிடித்துச்

சிறையிலடைத்தார். அங்கு அவர் கொல்லப்பட்டதாகச் சொல்லப்படுகின்றது. மறைந்த சேதுபதிக்கு சட்டரீதியான வாரிசுகள் இல்லாததால், நாடு தலைவனில்லாமல் தத்தளித்தது. மறவர்கள் தங்களுக்கான ஆட்சியாளரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய அவசியத்துக்கு உள்ளானார்கள். அவர்களுக்கிடையில் உருவான சில வாக்குவாதங்கள் மறுப்புகள் எல்லாம் களைந்து, தெளிவான ஒரு முடிவுக்குவந்து, மறைந்த சேதுபதியின் சட்டபூர்வமில்லாத மகன் ரகுநாத தேவரை ஒருவழியாக தேர்வுசெய்தனர். அவர் கிழவன் எனும்பெயரில் பிரபலமாக இருந்தார்.

ராம்நாட்டில் கிழவன் சேதுபதியின் ஆட்சி, பலவகைகளிலும் அவர் நினைவைப் போற்றுவதாக இருக்கின்றது. தேவையான போது, கடும்நடவடிக்கைகளை மேற்கொள்வது அவரது துணிவாக இருந்தது. முதல்கட்டமாக, அதிக அளவு செல்வாக்குப் பெற்று தனக்கு வெகுவாக ஆதரவளித்துவந்த இரண்டுபேரை, அவர்களால் தனக்கு எந்நேரமும் ஆபத்துவரும் என்று உணர்ந்து, கொன்றுவிட உத்தரவிட்டார். அதனை முன்கூட்டியே உணர்ந்துகொண்ட ஒரு ஆதரவாளரான புதுக்கோட்டை தளபதி பல்லவராயன் தொண்டைமான், தனது ஆதரவை அப்படியே தஞ்சாவூர் மன்னருக்குத் திருப்பிவிட்டார். இந்நிலையில் கிழவன் சேதுபதி, அவரை பதவிநீக்கம் செய்துவிட்டு, அந்த இடத்தில் தனது மனைவின் சகோதரன் ரகுநாதாவை (இவர் பெயரும் அதுதான்) அமர்த்தினார். அப்படி அமர்த்தப்பட்ட ரகுநாதன், நவீன புதுக்கோட்டையை நிர்மாணம் செய்தவராக மாறினார். கிழவன் சேதுபதி, நிர்வாகியாக இருந்து மறவர் நாட்டின் செல்வாக்கையும் அதிகாரத்தையும் மேம்படுத்தியவர். ருஸ்தும்கானிடம் அடிமையாக இருந்த சொக்கநாத நாயக்கரை மீட்டெடுத்ததில், கிழவனின் பங்களிப்பு அளப்பரியது. மதிப்பிட முடியாத அந்த உதவியைச் செய்ததற்கு, பரராஜகேசரி என்ற பட்டம் வழங்கப்பட்டது. குமார பிள்ளை அவரது உதவியாளராக ஆக்கப்பட்டார். பின்னாளில் அக்குமார பிள்ளை, கிழவன் சேதுபதியின் தளவாயாக ஆனார்.

**கிறிஸ்தவத்தின் நிலை** - 1656ஆம் ஆண்டு ஆகஸ்ட், 22ஆம் நாளன்று, மார்டின்ஜ் காலமானார். மதுரை திருச்சபையில், முப்பத்தோரு ஆண்டுகள் சேவைசெய்த அவர், அறுபத்து மூன்று வயதில் உயிர் நீத்தார்.[87] கிறிஸ்தவர்களிடம் மிகவும் இணக்கமாக இருந்த அவரது மறைவை, மக்கள் பேரிழப்பாக உணர்ந்தனர். பேராயர் ஜே.எஸ். சாண்ட்லர், 'இந்த மண்ணில் நோபிலி கிறிஸ்தவத்தை நட்டார். அதற்கு மார்டின்ஜ் நீர் வார்த்தார்' என்கின்றார்.[88] சொக்கநாத நாயக்கரின் ஆட்சிக்காலத் தொடக்கத்தில், முகம்மதியப் படையெடுப்பின்போது, திருச்சபைகளுக்கு

அதிகளவில் துயரங்கள் கொடுக்கப்பட்டன. அரசர் என்று ஒருவர் இருந்தும், பொதுவில், துன்பங்கள் அவர்களை நோக்கித் துரத்தப் பட்டன. முகம்மதியர்கள் நடத்திய கொடுஞ் சூறையாட்டத்தால் நாட்டில் பஞ்சமும் கொள்ளைநோயும் தலைவிரித்தாடியது.[89] இடையே கள்ளர்கள் நடத்தியக் கொள்ளைச் சம்பவங்கள், கிறிஸ்தவர்களைக் கூட்டங்கூட்டமாக திருச்சினாப்பள்ளியை நோக்கியும், சத்தியமங்கலம் போன்ற பகுதிகளை நோக்கியும் தள்ளியது. அந்த இடங்கள், அவர்களுக்கு அமைதியையும் மகிழ்ச்சியையும் மட்டுமன்றி, போர் மற்றும் பஞ்சத்தின் சூறையாட்டத்திலிருந்து அவர்களைப் பாதுகாத்தன. முகம்மதியர்களின் புறப்பாட்டுக்கு அப்புறம், திருச்சினாப்பள்ளி கிறிஸ்தவர்கள் விவகாரத்தை, ஆண்ட்ரே பிரைரே மிக நன்றாக நிர்வகித்தார். பின்னர், மற்ற இடங்களும் முறையாகப் பராமரிக்கப்பட்டன. தேசத்தைப் பீடிக்கும் அத்தனைத் துயரநோய்மைகளும் அப்படியே திருச்சபைகளையும் பாதித்தன. ஆனால் சொக்கநாத நாயக்கர், கிறிஸ்தவத் திருச்சபைகளுக்கு ஆதரவாகவும் நற்செயலாற்றும் விருப்பமுள்ளவராகவும் பரந்த உள்ளங்கொண்டவராகவும் இருந்தார். 1662ஆம் ஆண்டின் கடிதமொன்றில் பிரயோன்ஸா, ‘நீதியின் கருணையாலும் இளம்அரசரின் நிர்வாகத்தாலும் நாங்கள் எங்கள் பணியை சுதந்திரமாகவும் அமைதியாகவும் தொடர்ந்தோம்’[90] என்று குறிப்பிட்டிருக்கின்றார். நடமாடும் கிறிஸ்தவப் பிரச்சாரக் குழுவுக்குப் பொறுப்பாளராக இருந்த ஆல்வாரேஜ் தனது குழுவினருடன் சென்று ‘கங்கோவ்பட்டியில்’ (கங்குவார்பட்டி) தங்கி, அங்கே ஒரு ஆலயத்தையும் குருமார்களின் சபையையும் உருவாக்கினார். அமைச்சர்களின் ஆதரவைப் பெற்றிருந்த இந்துமக்கள், பேராலய உருவாக்கத்துக்கும் மதகுருமார்களின் பிரசங்கத்துக்கும் கடும் எதிர்ப்பைத் தெரிவித்தனர். வன்முறையைத் தூண்டுவதாகவும் அதிர்ச்சிதரக்கூடிய வாசகங்களைக் கொண்ட தாகவும் இருப்பதாக எழுப்பப்பட்டக் குற்றச்சாட்டுகளின் அடிப்படையில், அரசர் அவர்களை அங்கிருந்து வெளியேற்ற உத்தரவிட்டார். ஆல்வாரேஜ், அரசர் சொக்கநாத நாயக்கரைச் சந்தித்து அவரிடம் கிறிஸ்தவத்தின் உண்மை மற்றும் செயல்பாடுகளையும், திருச்சபைகளின் வாழ்வியல் முறைகளையும் எடுத்துச்சொன்னார். அதில் ஈர்க்கப்பட்ட அரசர், ஆல்வாரேஜுடன் பிராமணர்களை விவாதிக்க அனுப்பினார். அதில் வெற்றிபெற்ற ஆல்வாரேஜுக்கு வாழ்த்துச்சொன்ன சொக்க நாத நாயக்கர், பேராலயம் தொடர்ந்து இயங்க அனுமதித்தார். அதன் பாதுகாப்புக்கும் உத்தரவாதம் கொடுத்தார்.[91]

பிரயோன்ஸா எழுதிய 1665ஆம் ஆண்டின் கடிதமொன்று, 'திருச்சினாப்பள்ளி எந்நேர மும் விடாத்துயரளிப்பின் இருப்பிடமாக இருந்தது' என்கின்றார்.[92] ஆனாலும், அரசர் இல்லாதபோதிலும் கிறிஸ்தவர்களின் பாதுகாப்புக்கு உத்தரவாதம் செய்யப்பட்டிருந்தது. அரசரின் நெருங்கிய உறவினரான தளபதி ஆதியப்ப நாயக்கர், அப்பணியை மிகத்திறமையாகச் செய்துவந்தார். அது, எங்களுக்கு பெருத்த ஆறுதலாக இருந்தது' என்கின்றது.[93] அதே பிரயோன்ஸா, தனக்கு எதிராக 'வலையன்' (மீனவர்) ஒருவரால் கொண்டு வரப்பட்ட குற்றச்சாட்டு, நீதிவிசாரணைக்கு உள்ளானதும், அதில் குற்றம் சாட்டப்பட்டவரான தான் விடுவிக்கப்பட்டதையும், தனக்கு எதிராகக் குற்றம் சாட்டிய நபருக்கும், அவரது வகையறாவுக்கும் சில ஆயிரம் ஈக்கஸ்கள் தண்டத்தொகை விதிப்பட்டதையும் குறிப்பிட்டுள்ளார்.[94] நீதி விசாரணையில் தோல்வியைக் கண்ட வலையன் அவர்மீது வன்மம் கொண்டு, பல்வேறு இடையூறு களைக் கொடுத்து வந்தான். அவனது திட்டங்களையெல்லாம் எதிர்கொண்டு தவிடுபொடியாக்கிய பிரயோன்ஸா, மதுரைக்குச் சென்று அரசரைச் சந்திக்க முயன்றார். அரசரின் படைகள் மறவர் நாட்டுடன் பொருதிக் கொண்டிருந்தன. அதனால் அரசரை நேரில் சந்தித்து, தனது குறைகளைச் சொல்லித் தீர்வுபெற, பிரயோன்ஸாவுக்கு பலதடைகள் ஏற்பட்டன. ஆனால் அங்கிருந்த திருச்சபை, அரசரிடமிருந்து பாதுகாப்பு நடவடிக்கைகளுக்கான உத்தரவைப் பெற்றுக்கொடுத்தது. இதுபோலவே, திருமலை நாயக்கர் காலத்திலும் நடந்திருக்கின்றது. அந்த உத்தரவுடன் திருச்சினாப்பள்ளிக்குத் திரும்பிய பிரயோன்ஸா, ஆளுநரைச் சந்தித்து பாதுகாப்பு கோரினார். ஆளுநர் அந்த உத்தரவை பலரறியச் செய்தார்.[95]

திருச்சினாப்பள்ளிக்குத் தலைநகரை மாற்றியது, அங்கே நிலவிவந்தப் பிரச்சனைகள், பெரும்எண்ணிக்கையில் அங்கிருந்த பிரபுக்கள், அமைச்சர் பெருமக்கள் ஆகிய காரணிகள் எல்லாம் ஒன்றுசேர்ந்து, கிறிஸ்தவர்களின் பாதுகாவலாராக இருந்த ஆதியப்ப நாயக்கரின் அதிகாரத்தையும் செல்வாக்கையும் குறைத்துவிட்டனர். அந்த 'வலையன்', மீண்டும் ஒரு சதித்திட்டத்துடன் ஆளுநரைச் சந்தித்து, கிறிஸ்தவத்தை அழிப்பதற்கானத் துயரத்தைக் கூட்டினான். பிரயோன்ஸா கூறுகின்றார்: ஒருநாள் எங்களுக்கு எதிராக, வெம்மைநிறைந்த வார்த்தைகளால் அவதூறு பேசுகின்றவர்கள் அத்தனை பேரும் சீற்றங்கொண்ட இளவரசரால் கண்டிக்கப் பட்டனர். அந்தவார்த்தைகள் அத்தனை தெளிவற்றதாகவே இருந்தன. ஆனால் அந்தவலையனுடன் ஒரு பிராமணனும் ஆயுதந்தாங்கிய ஒருபடையுடன் எங்கள் பேராலயத்துக்கு வந்தனர்.[96]

நான் மகிழ்வுடன் பீடத்திலிருந்து இறங்கி, புகலிடம்போனேன். எளிதில் மசியச்செய்துவிட முடியாத அந்த வலையன் ஒருநொடி அதிர்ந்து, புதியதொரு சதித்திட்டத்தை உருவாக்க ஆரம்பித்தான். அவனது கெட்ட நடவடிக்கைகள் குறித்து, நாயக்கருக்குத் தகவல்கள் தெரிவிக்கப்பட்டன. அவனுக்குக் கடுமையான தண்டனை வழங்கப்பட்டு, அது நிறைவேற்றப்பட்டது. பல்தாஸர் டா கோஸ்டா, மதுரை அரசரின் மாமனாரான லிங்கம நாயக்கரைச் சந்தித்து, பாதுகாப்புத் தொடர்பாக இரண்டுகடிதங்களைப் பெற்றார். அதிலொன்று, லிங்கம நாயக்கரே கையெழுத்திட் டிருந்தார். மற்றொன்று அரசின் கவர்னர் ஜெனரலான சின்னத்தம்பி முதலியார் கையொப்பமிட்டிருந்தார். அதில், திருச்சினாப்பள்ளியை ஆளும்சமூகத்துக்கு, திருச்சபைகளை நன்முறையில் நடத்த ஒத்துழைப்பும், அவர்களுக்குத் தேவையான உதவிகளையும் செய்துகொடுக்க, குறிப்புகள் எழுதப்பட்டிருந்தன.[97]

1666ஆம் ஆண்டின் ஆண்ட்டிரே பிரைரேயின் கடிதம், மறவர் தளபதி ஒருவர் மதம்மாறியதைக் குறிப்பிடுகின்றது.[98] அநேகமாக, அது 1669 ஆம்ஆண்டில் நடந்த விடாத்துயரழிப்பையொட்டி நடந்திருக்கலாம். அதற்குமுன்பு பதினேழு ஆண்டுகளாக, மறவர் நாட்டுக்குள் திருச்சபையின் பணிகள் முன்னெடுக்கமுடியாத இறுக்கநிலை இருந்துவந்தது.[99] 1676ஆம் ஆண்டின் கடிதமொன்று, அதற்குமுந்தைய எட்டுஆண்டுகள் தஞ்சாவூரில் திருச்சபைப் பணிகள் நடக்கவிடாமல் துயரளிக்கப்பட்டது என்று கூறுகின்றது. அதன்விளைவாக, (மதம் மாவட்டம்) நந்திவனத்துக்கு மாற்றப் பட்டதாகவும் அது விவரிக்கின்றது.[100] மதுரைக்கும் மைசூர் படைகளுக்குமிடையில் நடந்தப் போர்கள் கூலிப்போராகவே இருந்ததால், அதற்கிடையே கிறிஸ்தவர்களால் பணிசெய்ய முடியாமல் தொட்டியம், காங்கோவ்பட்டி (கங்குவார்ப்பட்டி) ஆகியவை கைவிடப்பட்டன.[101] நாட்டின் அரசியல் சூழ்நிலை, திருச்சபைப் பணிகளை தூர வடக்குப் பகுதிகளுக்கு விரிவாக்கம் செய்யவைத்தது. அதாவது வேலூர், கோல்கொண்டா ஆகியப் பகுதிகளுக்கு கொண்டுசென்றது.[102] 1678ஆம் ஆண்டின் கடிதம், 'கடந்த இருபதுஆண்டுகளாக தஞ்சாவூரில் கிறிஸ்தவத்துக்கு எதிரான அட்டூழியம் தொடர்கிறது' என்று குற்றம் சாட்டுகின்றது.[103]

சொக்கநாத நாயக்கரின் ஆட்சிக்காலத்தில் கிறிஸ்தவத்தை அடக்குவதற்கான உள்ளடி வேலைகள் நிறையவே நடந்தன. இத்தனைக்கும் அரசர் சகிப்புத்தன்மைக் கொள்கையை முதன் மையாகக் கொண்டிருந்தார். அவதூறுகளால் அவ்வப்போது மக்களின் உணர்வுகள் தூண்டிவிடப்பட்டு, ஆங்காங்கே கிறிஸ்தவத்துக்கு எதிரான தொடர்ச்சியற்ற திடீர்எழுச்சிகள் எழவே

செய்தன. போர்களும் கொள்ளை நோய்களும் திருச்சபைப் பணிகளுக்கு அதிகஅளவில் கொடுந்துன்பத்தையும் இன்னல்களையும் கொடுத்தன.

**சொக்கநாத நாயக்கர் - ஒரு பொது மதிப்பீடு** - சொக்கநாத நாயக்கரின் ஆட்சிக்காலத்தின் முதல் சிலஆண்டுகள், ஒருவீரனாகவும் ஒருதளபதியாகவும் அவரைப்பற்றிய அறிவார்ந்தத் தரவுகளைக் கொண்டிருக்கின்றன. ஒருசக்திவாய்ந்த மனிதனாகவும் தகுதியான அரசனாகவும் அவர் இருந்திருக்கின்றார். அந்தக்கால கட்டத்துக்கு திடமான உயிரோட்டமுள்ள ராணுவக் கொள்கையின் தேவையை அவர் உணர்ந்திருந்தார். அவரது பெயரைச் சொல்லி அமைச்சர்கள் செய்துவந்த தவறுகளையும் குற்றச்செயல்களையும் அவர் பொறுத்துக்கொள்ளவில்லை. அவரது ஆட்சியைக்கவிழ்க்கத் திட்டமிட்ட எதிரிகளின் எண்ணங்களையெல்லாம் தவிடுபொடியாக்கினார். தனது சொந்தமுயற்சியினால் சாம்ராஜ்ஜியத்தின் உண்மையான அதிபதியாக, அவர் இருந்தார். முகம்மதியர்களின் படையெடுப்பின்போது அவர்களைத் துரத்தியடிக்கும் திட்டத்தில் அவர் தோல்விகண்டார். அது அவருக்கு உண்மைப்பாடத்தைப் போதித்தது. அதன்பின்பு அவரே படைகளை நடத்திச்சென்றார். அவரது தீரமும் உறுதியானத் தன்மையும் அவருக்கு பலமாக இருந்தன. அந்தத்தீரமே முகம்மதியர்களை வளைத்துநிறுத்த உதவிகரமாக இருந்தது. கடைசியில் எதிரி பெரும்இழப்புடன் பின்வாங்க நேர்ந்தது.

சொக்கநாத நாயக்கரின் ஆரம்பகால வெற்றி, அவரது தகுதியைப் பறைசாற்றுவதாகவும் குடிமக்களுக்கு நம்பிக்கையையும் சந்தோஷத்தையும் தருவதாக இருந்தது. ஆனால் அதுவே அவரது மனதைக் கலைத்து, அவரது குணாதிசியத்தில் அழிகேடாக்கும் அளவுக்கும் கொண்டுசென்றது. அவரது குணாதிசியம் பற்றி, இயேசு சபையின் ஆவணங்கள் முதல்சில ஆண்டுகள் தட்டையானச் சித்திரங்களையே கொடுக்கின்றன. பேரார்வமும் வெறிஉணர்ச்சியும் அவர்மீது கூடுதலாகச் செல்வாக்கு செலுத்திவந்தது. அப்பேரார்வமும் வெறிஉணர்ச்சியும் அவரது கொள்கை முக்கியத்துவத்தைக் காற்றில் பறக்கவிட வைத்தது. முகம்மதியர்களுடனானப் போராட்டத்தின்போது, சேதுபதியும் தஞ்சாவூர் நாயக்கரும் உதவிக்கு வரமறுத்ததையடுத்து, அவர்கள்மீது வன்மம்கொண்டார். அவர்களிருவரையும் தண்டிக்கப் புறப்பட்டார். அதனால் உருவாகும் விளைவுகளைப் பற்றி அவர் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவரது செயல்பாடுகள் தகுதிக்கும் வளமைக்கும் ஏற்புடையதாக இருக்கவில்லை. ஆதரவாளர்களைத் தன்வயப் படுத்திக்கொள்ளும் நற்பண்பை அவர் கைவிட்டார். அதுபோலவே

அவர்களின் நல்லாதரவையும் ஒத்துழைப்பையும் புறந்தள்ளினார். மராத்தியர்கள் தஞ்சாவூரைக் கைப்பற்றியதும், அதைத்தொடர்ந்து ஏற்படவிருக்கும் விளைவுகளைப் பற்றி, அவர் முன்கூட்டியே எதையும் உணர்ந்துகொள்பவராக இருக்கவில்லை. அழகிரி நாயக்கரை பழிவாங்குவதாக எண்ணி, அவருக்கு ஒத்துழைக்க மறுத்ததுடன் நிறுத்திக்கொண்டார். அவசியமான நேரங்களில் தனது முடிவுகளை வலுவானதான எடுக்கும் ஆற்றலற்றவராகவும் அவர் தன்னை நிரூபித்திருக்கின்றார். ஈகோஜியுடனானப் போரை மிகவும் தாமதப்படுத்தினார். மட்டுமல்லாமல், தீவிரத்துடன் அப்போரை அவர் நடத்தவுமில்லை. அவரது பலவீனமான எண்ணங்களால் சொந்தநாட்டின் அமைச்சர்களாலும் அந்நிய அரசர்களாலும் முடிந்தமட்டும் ஏமாற்றப்பட்டார். அவரது ஆட்சி குறித்தப் பதிவுகள் பெரும்பாலும், முட்டாள்தனங்களாலும் தோல்விகளாலும் நிரம்புமளவுக்கு நடந்துகொண்டிருக்கின்றார். அவரது அதிகாரங்கள் பிஞ்சில் பழுத்தவைபோல, திடீரென்று முடிவுக்கு வந்துவிட்டன. மதம்தொடர்பான அவரது அதீத ஆர்வம், கடமைக்கு எதிரானக் குற்றவாளியாக அவரை நிறுத்தியது. தனது செயல்களால் அவர் தன்னை, தஞ்சாவூரின் விஜயராகவனின் பிரதிபோல ஆக்கிக்கொண்டார்.[104]

சொக்கநாத நாயக்கரின் நிர்வாகத் திறமை, பலவீனமான ஒன்றாகவே இருந்தது. அதேவேளையில் போரின் வெற்றிச் சின்னங்களில் அவர் பெருவிருப்பம் கொண்டவராக இருந்தார். அவரைப்பற்றிப் பேசும் வரலாற்றுத் தரவுகளில் பெரும்பாலானவை, அவர்செய்த தான, தருமங்களையும் அதற்கிணையாக அவர் நடத்திப் போர்களையும் காட்சிப்படுத்துபவையாகவே இருக்கின்றன.[105] அவர் கொண்டிருந்த நாடுவென்று நிலம் கொள்ளும் பேரார்வமும் வெறிஉணர்ச்சியும் அமைதி நடவடிக்கை பணிகளையும், நாட்டின் முன்னேற்ற வேர்களையும் அழிக்கும் காரணிகளாக மாறின.[106] அவரது திட்டங்களைச் செயல்படுத்த, பெரிய அளவிலான நிதி தேவைப்பட்டது. அதைத் திரட்டுவதற்கு தனது பிரதானி, குடிமக்களை இரக்கமற்றுக் கசக்கிப்பிழிவதை அவர் சகித்துக்கொள்பவராக இருந்தார். மக்களிடமிருந்து கசக்கிப்பிழித்து வசூலிக்கத் தவறிய அதிகாரிகளுக்கு, தண்டம் விதித்ததாகவும் தெரிகின்றது. அதனால் மேலும்மேலும் மக்களைக் கசக்கிப் பிழிந்து, அதிலொரு தொகையை அதிகாரிகள் அபகரித்துக் கொள்வதும் நடந்தது.

சொக்கநாத நாயக்கரின் ஆட்சிக்காலம், குடிமக்களைக் குழப்பங்களிலும் கவலை, ஏக்கத்திலும் மூழ்கச்செய்திருந்தது. துயரங்கள் மேலும்மேலும் அதிகரித்து, முடிவற்றநிலையை நோக்கி நாடு,

நகர்ந்துகொண்டிருந்தது. சாம்ராஜ்ஜியத்தின் சிதைவுக்கான அறிகுறியாக மக்கள் படும் துயரங்கள் காட்சிப்படுத்தின. விளைவுகள் அனைத்தும், தவிர்க்கவியலாத முடிவை முன்கூட்டி அறிவிப்பவையாக இருந்தன. ஒருமிகப்பெரிய மரபை அழிக்கப் போகும் அபாயமறிந்தும் அதைக்கட்டுப்படுத்த சொக்கநாத நாயக்கர் தவறிவிட்டார். அவரது மரணத்தின்போது, ஒட்டு மொத்த சாம்ராஜ்ஜியமும் வலிமையிழந்து, வளமிழந்துபோயிருந்தது. எதிரிகள் வாசலில் நின்று மிரட்டிக்கொண்டிருந்தார்கள். அவருக்குப்பின்னால் பதவியேற்ற இரண்டுஆட்சியாளர்களின் தற்காலிக மீட்பும், குறைந்த அளவிலான மறுசீரமைப்புப் பணிகளும் மண்ணின் உள்ளுரத்தை, அதன் நீடிப்பாற்றலை, உயிர்வாழும் திறத்தை இழந்துவிடவில்லை என்றே நிரூபித்தன. சொக்கநாத நாயக்கரின் ஆட்சிக்காலம் மகிழ்வற்றதாக இருந்தாலும் அரசியல் புயல்களால் அவர், சாரமற்றுப் போய்விடவில்லை என்பதே உண்மை. அவரது இடத்துக்கு மிகச்சிறந்த ராஜதந்திரி தேவையாக இருக்கின்றார். எல்லாவற்றுக்கும்மேலாக, அவரதுசமகாலத்தில் ஆண்ட தஞ்சாவூர் மற்றும் செஞ்சி ஆட்சியாளர்களைக் காட்டிலும் சொக்கநாத நாயக்கர் மிகவும் உயர்ந்தவராகவே வரலாற்றில் தென்படுகின்றார். அந்த ராஜ்ஜியங்களைக் காட்டிலும் மதுரை குறைந்த அளவே பாதிப்புக்கு உள்ளாகியிருந்தது என்று இயேசு சபையின் எண்ணற்றக் கடிதங்கள் சான்றளிக்கின்றன.[107]

**சொக்கநாத நாயக்கரின் மரணம்** - அவப்பெயர், இன்னல், இடையூறுகளுக்கிடையிலும் தன்னை நிலைநிறுத்திக்கொண்ட சொக்கநாத நாயக்கர், மாரடைப்பால் மரணமடைந்தார் என்று சொல்லப்படுகின்றது. ஆண்ட்ரே பிரைரேயின் கடிதம், சொக்கநாத நாயக்கரின் மரணத்தைப் பற்றிப் பேசுகின்றது. மதுரைத்தலவரலாறு மற்றும் பாண்டியர்கள் வரலாறு ஆகியவை, துந்துபி ஆண்டின் ஆனி, 5ஆம் தேதி - 1682, ஜுன்மாதம் 16ஆம் நாளை - அவர் மரணமடைந்ததாகச் சுட்டுகின்றன. மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி, அதேஆண்டின் அதேமாதத்தைக் குறிப்பிட்டாலும் தேதியைக் குறிப்பிடவில்லை. ஆதலால், மேலே குறிப்பிடப்பட்ட அந்தநாள், சரியானதாக இருக்க வாய்ப்பிருக்கின்றது. அது, எந்தக் கல்வெட்டு தேதியிலிருந்தும் முரண்படவில்லை.

## அடிக்குறிப்புகள்

1. I.A., 1917, p.40, n.
2. I.M.P. i, p.562
3. Ibid., ii, p.1010

4. ii, pp.200 and 202
5. Bertrand, iii, pp.121-3. Vide Appendix A, Letter No.2
6. Bertrand, iii, pp.124-5
7. Ibid, pp.129-30
8. Ibid, pp.155-6
9. Bertrand, iii, pp.156-9. Vide Appendix A, Letter No.3
10. Ibid, pp. 159-60, Vide Ibid
11. p.297, vide Appendix C.
12. Bertrand iii, pp.164-5
13. Bertrand. iii, p.182
14. Ibid, p.160, Vide Appendix A, Letter No.3
15. p.182
16. Bertrand iii, p.129
17. Ibid, pp.181-2
18. Ibid., pp.182
19. p.296. Vide Appendix C
20. Ante, pp. 83-84
21. Bertrand, iii, p.202, Vide appendix A, Letter No.4
22. I.A., 1917, p.44
23. i, p.36
24. Appendix D, Nos.163 and 167
25. Ibid.,Nos. 171, 172 and 174
26. Bertrand, iii, p.249. Vide Appendix A, Letter No.5
27. i, p.34, Mr. Rangachari's treatment of Wilks in this respect is very confused. Even though he tires to reconcile his opinion with that of Wheelaer he does not say how far he agrees with him. He seems to accept his date i.e., 1667 for Chokkanatha's alleged war with Mysore, but certain other statements of his go against this seeming approval. His referance to the Tanjore, Mysore, and Ramnad campaingns seems to indicate that, in his opinion, the second preceded the third. He speaks of the next ten years of Chokkanatha's reign as a period of profund tranquality but doesnot specify the period (I.A., 1917, p.44) Later on he observes that, in 1674 the interval of peace ended and Chokkanatha entered into a series of wars (Ibid., p.57) Accoridingly, the interval of peace refers to the period, 1684-74, and therefore the Mysore war must have taken place in 1664 or before. This means the rejection of whilk's date, viz, 1667. Further, Mr.Rangachari does not say whether the agrees with his facts. He seems to belive that a Mysore invasion took place in the early years of Chokkanatha's reign. He does not attempt to prover it, but rest content with the referance

to an inscription of 1669-70. In another connextion he refers to the consequests of Doddadeva in 1667 in the kingdom of Madura (I.A., 1917, p.122).

28. Bertrand, iii, p.247 and n, Vide Appendix A, Letter No.5
29. Taylor, O.H.MSS ii, pp.185 and 191-9 C.R., iii, p.177; S.K., Sources, p.324 et seq
30. Ante, p.119
31. p.191
32. Ante p.37
33. The relations between Madura and Tanjore had been strained from the very beginning and this strain was aggravated as the two viceroyalties gradually hardenedin their particular attitude towards the empire. The difference of status due to the closer connextion of Tanjore with the fuling family of Vijayanagar. could not have been a bar to the proposal marriage alliance, as Raghunatha is said to have married a Pandya princess and a daughter of the Nayak of Gingi. There is also nothing improbable in Tirumala having married the Tanjore princess, whether she was actually stabbed to death in the manner described or not. In view therefore or these previous alliances it is extremly likely that Chokkanatha sought an alliance by marriage with Tanjore. The request for the alliance and the refusal to comply must both be considered solely from the point of view of political relationship between the two families. It is very likely that Chokkanatha sought an among other reasons, to gain the support of Tanjore against his own troblesome feudatories and officers. Vijayaraghava's reluctance may have been based similarly on the past failiure of such alliance to brin about frindship between the families or a common policy between both. It is not unlikely that there was some kind of illtreatment of a Tanjore princess and Vijayaraghava was reluctant on that groung to send another princess ino the family of Maudra. However that may be, the fact that the sole cause of the war between the two. The habitual opposition of policy and the tradistional hostility of years would be quiet enough to justify the view of Tanjore that there was nothing to be gained by a marriage alliance. The provoking cause at the time must have been something in the internal trobles of Chokkanatha and his doubt as to the attitude of Tanjore with regard to the aggresions of Mysore. If Madura suspected the neutrality of Tanjore, the rejection of the marriage proposals would have been sufficient cause to go to war. The proposal of marriage must therefore have been made as the change of capital

must have been to prevent any understanding between advancin Mysore and Tanjore on the flank – Ed.

34. He is also described as the Dalavay and Paradhani for seven years. Taylor, O.H.MSS., ii, p.120, Tamil passage
35. Mr. Rangachari's account of this war (I.A., 1917, pp.58-62) best illustrates his conception and treatment of history and gives point to the well known statement of polyhius that to admit the possoilbility of a miracle is to annihilate the possiblity of history He characterised the Tanjore war as romance and gives it a treatment accordingly. He describes not only the battle between the two armies, but also the war of magic, with numerous parallel references perhaps to prove its reality. He does not given an account of the war collated from the various chronicles, but heaps version unpon version. Sometimes he breaks the progress of his narrative by drawin pointed attention to amazing improbalities, inconsistencies, and anarchormisms. Though be says that the accounts ginven by wheeler and Maducci are inaccurate positively wrong etc. he gives them fully, but thinks it unnecessary to enter into a criticism of these fables' Finally he enters into a philosophical lament on what may be termed the blind and inexorable law of consequences, and completes his history of the war with a reference to ghostly manifestations.
36. S.K.A., Sources, p.327
37. Ibid., pp.325-6, He is described as a petty merchat in another chronical Taylor, O.H.MSS, ii, p.200
38. He is said to have been the son of Vijayaraghava some chronicles, and in others the son of Mannar Das, the son of Vijyaraghava. As Vijayaraghava is described as a man of eighty at the time of his death, it is more probably that he was the som of Mannar Das and grandson of Vijayaraghava. There is a difference of opinion about his age also whether he was two or four years old when he was taken to Nagapatnam
39. Bertrand, iii, pp.247-8, Vide Appendix A, Letter No.5
40. Nelson (p.194) gives a slightly different account, but does not state his authority. He says that Chengamala Das escaped from the Palace during the confusion which ensued upon its destruction, and fled for refuge to the court of Idal Khan who recived him kindly and promissed to assist him
41. Tanjavuri Andhra Rajula Charitra and Tanjavuri vari Charitra say that Ekoji marched straight off in to the kingdom of Tanjore, captured the fort of Aiyampet, and completely Alagiri in a pitched

battle. The latter hurriedly withdrew to Tanjore, Reciving no help form Chokkanatha, Suspecting trechery from his own men and finding Ekoji attack the fort of Tanjore, he lost courage and fled with his family and faithful followers by night to Mysore, by way of Ariyalur. But this account is not supported by the jesuit latter. Bertrand, iii, pp.247-8. Vide Appendix A Letter No.5

42. Another Chronicle says that the revenue from the Kumbakonam district was given to Ekoji for the maintenance of his army. Taylor, O.H.MSS., ii, p.201
43. p.196
44. Bertrand, iii, p.248, Vide Appendix A, Letter No.5
45. p.196
46. Bertrand, iii, p.249. Vide Appendix A, Letter No.5
47. S.K.A. Sources, pp.326-7, Taylor C.R., iii, pp.178-9; O.H.MSS., ii, pp.201-2
48. Bertrand, iii, p.249 Vide Appendix A, Letter No.5
49. Mr. Rangachari speaks of Ekoji's march to Trichinopoly and the failure of his attempting to capture it. owing to the vigilance of Chokkanatha, after his usurpation and pacification of Tanjore. (I.A., 1917, p.76) He gives a referance to Nelson Moreover, he says that, for all the information contained in the Jesuit letters, his authority in Nelson. But the latter puts this event's few days after the conquest of Tanjore by Ekoji. Further he attributed his failure no to the vigilance of Chokkanatha but to Ekoji want of boldness and unwillingness to take risk and thereby compromise his recent success. Ekoji's usurpation. or disregard of the instructions of his master, came after his appearace before. Trichinopoly. Nelson (p.196) gives the jesuit version correctly Mr.Rangachari, however, rightly differs from him in speaking of the crowing of Chengamala Das and in placing Ekoji's usurpation after this event.
50. Appendix D, No.158
51. Ibid, Nos. 165 and 166
52. Ibid, Nos.168 and 167
53. Ibid, No.157
54. Ibid, Nos.172 and 174
55. Ibid, Nos. 176, 181 and 182
56. S.K.A., Sources, p.21
57. Ibid, p.309
58. Appendix D, No.186
59. Ibid. No.194
60. Ante p.161. The seiries of events that ultimately led to the results embodied in this inscription are detailed in the Introduction. Early

in the reign of Sriranga Mysore gave clear indications of her feeling of independace and thus became the object of attack by the emperor and in his name, the Nayak of Madura and others for their own purpose. Two or three wars can be discerned in this effort and this last under Chikkadeva Raya was the culmination of the Successful effort of Mysore to hold her own against this adverse combination – Ed.

61. Bertrand, iii, p.247, Vide appendix A, Letter No.5
62. S.K.A., Sources pp.22 and 312
63. Ibid, p.322
64. Bertrand, iii, p.249, Vide Appendix A, Letter No.5
65. A detailed account is given in the lif of Shivaji by N.S.Takahav and K.A.Keluskar (pp.421-65); Shivaji and his times by Nadunath Sarkar (pp.363-99); the History of the Maratha people, by C.A. Kincaid and D.B Parasins (i, pp.249-60) and Grant Duff's History of the Marathas (i, pp.219-30)
66. Orme, Historical Fragments, p.233
67. Orme, Historical Fragments, p.64
68. Wilks, i, p.52, J.Sarkar, Shivaji and his times p.391
69. Takakhav and Keluskar, Life of Shivaji, pp.440-5
70. Bertrand, iii, pp.269-70. Vide Appendix, Letter, No.6
71. The Transactions of Sivaji in the Carnatic and his dealings with his hals brother Vekhji (or Ekoji) seem capable of an interpretation. once it is realized that Shivaji may have cherished the ambition to stand before his great enemy, the Moghul, as the acknowledged representative of the empire of Vijanagar recently become extinct. The existence of the grant of Sivaji to the two sons of Sriranga, though the documents is not quiet above suspicion and the issue of coinage, of which one specimen, at any rate on the model of Vijayanagar. has been recently discovered are indication in support of what some of the Maharatta documents do record in respect of this particular idea of Sivaji had acquired as his jaghir in the Carnatic territory which could favourably compare with that of any south Indian viceroy under Hindu rule. After the acquistions of Tanjore Venkhaji was actually in occupation of the territory of the Nayakas of Tanjore and of Gingi with a considarable portion of Mysore in addition. Madura was already decrepit and must have seemed to Sivaji capable of being brought under his imperial protection. Ikkeri was probably inclined to support him against Mysore. Mysore was perhaps the one state that was likely to prove troblesome. If Sivaji cherished such an idea, it cannot

have been regarded impracticable in 1677, and all his efforts to bring his brother to reason need not necessarily have been the result of greed. All the details of the transaction taken togather seem to indicate a clearly higher motive and that may well have been the ambition to stand before Aurangazib as the acknowledged successor of the emperors of Vijayanagar – Ed

72. J.Srkar; Shivaji and His Times, pp.389-90
73. Bertrand, iii, p.271, Vide Appendix A, Letter No.6
74. J.Sarkar, Shivaji and His Times p.397, Wilks (i, p.53) ascribes this war to the month of December of the same year.
75. Takakhav and Keluskar, Life of Shivaji pp.459-62
76. J.Sarkar, Shivaji and His Times p.398; Bertrand, iii, p.272, Vide Appendix A, Letter No.6
77. The Statement in a Jesuit letter (Bertrand, iii, p.271, Vide Appendix A, Letter No.6) that he joined his brother, Sivaji who was engaged in the siege of Vellore, is not correct. Sivaji had gone to the north by this time. This error is retained by Nelson (p.200)
78. Takakhav and Keluskar, Life of Shivaji, pp.439-40, n.2 A Jesuit letter says that the siege of Vellore lasted for more than a year, Bertrand, iii, p.271. Vide Appendix A, Letter No.6
79. Bertrand iii, pp.270-1. Vide Appendix A, Letter No.6
80. An inscription of his in 1678-9, records the grant of a village by him at Krishnapuram, Appendix D, No.183
81. Bertrand, iii, p.273. Vide Appendix A, Letter No.6
82. He is represented as the favorite of Chokkanatha by the History of the Carnataka Governors (Taylor, O.H.MSS. ii.p.35) an dby a Mackenzie Manuscript (Ibid., p.185) but as the confident of Muttulinga by another Macknizie Manuscript (Ibid.p.203) and a Jesuit writer (Bertrand, p.302, Vide Appendix A, Letter No.7) It is more probable that he was the favorite of Chokkanatha, as otherwise this bold venture is difficult to explain.
83. Taylor, O.H.MSS., ii, p.185-9, 203-4; Bertrand, iii, pp.302-3. Vide Appendix A, Letter No.7
84. Bertrand, iii, pp.303-6 Vide Appendix A, Letter, No.7
85. pp.205-6
86. Appendix D, No.175
87. Bertrand, iii, p.109
88. The Jesuit Mission in Madura, p.51
89. Bertrand, iii, p.146
90. Ibid, p.135
91. Bertrand, iii, p.141-2
92. Ibid., p.171

93. Ibid, pp.175-6
94. Ibid, p.181
95. Ibid., p.182
96. Bertrand, iii, pp.182-3
97. Ibid., pp.209-10
98. Ibid., p.229
99. Ibid., pp.260, 388-9
100. Ibid., p.258
101. Bertrand, iii, pp.262 and 265
102. Ibid, p.268
103. Ibid., p.287
104. He is described as devoting allhis time to the study of the sacred books as the Ramayana the Bhagavatam, etc. Taylor, O.H.MSS, ii, p.203
105. Ibid, p.204
106. Bertrand, iii, p.202, Vide Appendix A, Letter No.4
107. The difference noted may be due merely to the relative geographical possition of these powers with reference to their common enemy. The more apt. parallel for Chokkanatha certainly is Chikkadeva Raya of Mysore. The advantage of the Comparision is all the side of the Mysore ruler of the day – Ed

# 11

# மூன்றாம் முத்துவீரப்ப நாயக்கர் (1682-89)

**பதவியேற்பு** - **சொ**க்கநாத நாயக்கரையடுத்து, அவரதுமகன் ரங்ககிருஷ்ண முத்துவீரப்பநாயக்கர் அரியணைக்குவந்தார். சொக்கநாத நாயக்கரின் மகனான அவரை, மங்கம்மாள் மூலமாகப் பிறந்தவர் என்பதற்கும், எப்போது மங்கம்மாளின் திருமணம் நடந்தது என்பதற்குமான செய்திக் கூறுகளை நெல்சனும் ரங்காச்சாரியும் தெளிவாக்கவில்லை. எனினும், அவ்விருவரும் ரங்க கிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கரை, சொக்கநாத நாயக்கர்-மங்கம்மாள் இணையின் மைந்தன் என்றே சொல்கின்றனர். அதிலும்முன்னவர், இயேசு சபையின் ஆதாரங்களைக்கொண்டு, பதவியேற்கும்போது ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கருக்கு வயது பதினைந்து என்று கணக்கிடுகின்றார். பின்னவர், வீலரின் குறிப்புகளை அடிப்படையாகக்கொண்டு, அந்தநேரத்தில் அவருக்கு வயது பதினாறு எனக்குறிப்பிடுகின்றார். மங்கம்மாளின் திருமணம்குறித்து நெல்சன் குறிப்பிடுவதுபோல,[1] வேறெங்கும் குறிப்புகள் காணோம். வரலாற்றுக்குறிப்பு ஆவணங்களின்படி, தஞ்சாவூர் ஆளுநராக அழகிரி நாயக்கர் இருந்தகாலகட்டத்தில், அதாவது 1674 ஆம்ஆண்டில் மங்கம்மாளை சொக்கநாத நாயக்கர் மணமுடித்ததாக முன்னவர் குறிப்பிடுகின்றார். 1674 ஆம் ஆண்டில் மங்கம்மாளை அவர் மணமுடித்து, உடனடியாக மங்கம்மாள் கருவுற்றிருந்தாலும் ரங்க கிருஷ்ணாவின் பிறப்பு, 1675 ஆம் ஆண்டுக்குமுன்பு இருந்திருக்க வாய்ப்பில்லை. அப்படிப் பார்த்தால், ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கராக அவர் 1682 ஆம் ஆண்டில் பதவியேற்கும்போது ஏழு அல்லது எட்டு வயதுதான் ஆகியிருக்கும். பிறப்புசார்ந்த மிகமுக்கியமான அடிப்படையை நெல்சன் கவனிக்கத் தவறிவிட்டார். அவ்வாறு ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர், சொக்கநாத நாயக்கர்-மங்கம்மாள் இணையின் மைந்தனாக இருந்தால், நெல்சன் சுட்டும் மங்கம்மாளின் திருமணம், குறிப்பிடப்பட்ட அந்தத்தேதிக்கு முன்னதாக நடந்திருக்கவேண்டும்.[2] மெக்கன்ஸி மானுஸ்கிரிப்ட் குறிப்பொன்று, சந்திரகிரி - தூபாகுல்லைச்சேர்ந்த லிங்கம நாயக்கரின் மகள் மங்கம்மாளை சொக்கநாத நாயக்கர் மணமுடித்தார் என்று குறிப்பிடுகின்றது. 1666ஆம் ஆண்டின் இயேசு சபைக் கடிதமொன்று,

மதுரை அரசருக்குப் பெண்கொடுத்த மாமனார் தளவாய் லிங்கம நாயக்கர் என்று பகர்கின்றது. வரலாற்றுக்குறிப்பில் காணப்படும் லிங்கமா, இந்த லிங்கம நாயக்கராக இருக்கும்பட்சத்தில், சொக்கநாத நாயக்கருக்கு மங்கம்மாளுடனானத் திருமணம் 1665 ஆம்ஆண்டில் நடந்திருக்கலாம். இந்தவிஷயத்தைப் பொறுத்த மட்டில், அநேகமாக ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் 1666-67 ஆம்ஆண்டில் பிறந்திருக்கலாம். 1682ஆம் ஆண்டில் பதவியேற் கும்போது, அவருக்கு வயது பதினைந்தாக இருக்கலாம். என்றபோதும், சந்திரகிரி - தூபாகுல்குறித்து திருப்தியளிக்கும் வகையில் எங்கும் விளக்கப்படவில்லை.[3] இது தொடர்பாக, மற்றொரு சர்ச்சையும் உள்ளது. 1713ஆம் ஆண்டில் மார்டின் எழுதியக் கடிதம் இவ்வாறு பேசுகின்றது:[4] 'சொக்கநாத நாயக்கரின் சிதையில் மங்கம்மாள், உடன் ஏகவில்லை. அப்போது அவர் கருவுற்றிருந்தார். குழந்தைப்பிறப்புக்குப் பின்பு, சூழ்நிலைக்கேற்ப அவர் தீயிலிருந்துத் தப்பித்துக்கொண்டார். இளவரசரை வளர்த்து, வயதுக்குவரும்வரை ஆட்சிப்பொறுப்பை நடத்துவதைத்தவிர, அவர் வேறுதிட்டங்கள் எதையும் கொண்டிருக்கவில்லை.'[5] அது உண்மையாக இருக்கும்பட்சத்தில், அந்தக்குழந்தை மங்கம்மாளின் இரண்டாவது மகனாக இருக்கவேண்டும். முதல்குழந்தை பிறந்தவுடன் இறந்துவிட்டது. அந்தவிவரம் எதுவும் குறிப்பிடப்பட வில்லை. அது, ரங்ககிருஷ்ணவாக இருக்கமுடியாது. இந்த உத்தேச நம்பிக்கை முரணிலிருந்து இயேசு சபை முற்றிலுமாக விலகி யுள்ளது. மங்கம்மாள் ஒருவேளை தளவாய் லிங்கம நாயக்கரின் மகளாக இருக்கும்பட்சத்தில், தஞ்சாவூர் போர் முடிந்தகையுடன் அவர், ராணியாகத் தகுதி உயர்த்தப்பட்டிருப்பார்.

ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கரின் இரண்டுகல்வெட்டுகள், பதவியேற்பின்போது அவருக்குக் குறைந்தபட்சம் இருபத்தைந்து வயது என்றுசுட்டுகின்றன. திருமலா சமுத்திரம் மற்றும் புதுக்குளம் கல்வெட்டுகள், 'சொக்கநாத நாயக்கரின் மகன் ஸ்ரீரங்ககிருஷ்ண முத்து வீரப்ப நாயக்கர், மேற்கண்ட கிராமங்களில் நிலக்கொடை கொடுத்ததைச்' சுட்டுகின்றன.[6] அக்கல்வெட்டில் கொடுக்கப்பட் டுள்ள சாகா ஆண்டின் அதாவது, 1579ஆம் ஆண்டில் ரங்க கிருஷ்ணா பிறந்திருக்க வேண்டும். 1656-57 தேதியிட்ட துர்முகி ஆண்டின் கல்வெட்டிலுள்ள,[7] வன்னிகுடம் கிராம விற்பனைப் பத்திரம் ரங்ககிருஷ்ணாவின் தகுதியைக் குறிப்பிட்டிருக்கின்றது. ஆனால் சீவெல், பிந்தையக் கல்வெட்டுகளின் நம்பகத்தை அதன் கற்காலத் தன்மையைக் கொண்டு சந்தேகிக்கின்றார்.

என்றபோதும் ரங்க கிருஷ்ணாவின் பதவியேற்பின்போது, அவர் வயதுகுறித்த சந்தேகங்கள் இருந்தவண்ணம்தான் உள்ளன.

அந்நிகழ்வு, 1682ஆம் ஆண்டில் நடந்திருக்க வேண்டும். இக் கேள்வி தொடர்பான சான்றுகள், சொக்கநாத நாயக்கரின் மரணதேதியுடன் ஒத்துப்போகவில்லை. மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி, ரங்க கிருஷ்ணாவின் பதவியேற்பு துந்துபி ஆண்டு, ஆடிமாதத்தில் (ஜூலை, 1682) நடந்ததாகக் குறிப்பிடுகின்றது.[8]

**அரசின் நிலை** - *(1682-86).* மதுரை அரசாங்கத்தின் பரப்பெல்லையைப் பழுதுபடாமல் பாதுகாப்பதில் சொக்கநாத நாயக்கர் தவறிவிட்டார். அதன்விளைவாக, ரங்ககிருஷ்ண முத்து வீரப்ப நாயக்கர் தனது மூதாதையர்கள் விட்டுச்சென்ற மைசூர் ராஜா, தஞ்சாவூர் அரசர் சாம்பாஜி மற்றும் சேதுபதிகள் பிடித்துவைத்திருந்த சிலபகுதிகளையே மரபுரிமையாகப் பெற்றிருந்தார்.[9] அவர் பதவியேற்றபோது சூழ்நிலை, அவ்வளவு திருப்திகரமாக இருக்கவில்லை. குழப்பங்கள் மிகுந்திருந்தன. மதுரை நகரம் அப்போது எதிரிகளின் கையில் வீழ்ந்திருந்தது. ஆனால் அவர்களில் யார் அதைத் தக்கவைத்துக்கொள்வது எனும் சச்சரவில் மூழ்கிக்கிடந்தனர். இந்த இருள் சூழ்ந்தநிலை படிப்படியாக வளர்ந்து கொண்டே போனது. ரங்ககிருஷ்ணா இந்தச்சூழ்நிலையைத் தனக்குச் சாதகமாக ஆக்கிக்கொண்டார். எதிரிகளிடையே இல்லாத ஒற்றுமையை பயன்படுத்திக் கொள்ள முயன்றார். சாம்பாஜியின் படைகள் சாம்ராஜ்ஜியத்தை சூறையாடிவிட்டு, நீண்டநாட்களாக மதுரைக்கோட்டையை முற்றுகையிட்டிருந்த மைசூர்படையை மேற்கொண்டு முன்னேறவிடாமல் தடுத்தது.[10] பின்னர், மைசூர் மாகாணத்தை மற்ற இடங்களிலிருந்து தொடர்பில்லாமல் துண்டித்தன. இதையடுத்து, மதுரைக்கும் மைசூருக்கும் இடையிலானப் போர் முடிவுக்குவந்தது. ஆயினும், மராத்தியர்களின் நோக்கம் மதுரையை தங்கள் ராஜ்ஜியத்துடன் சேர்த்துக்கொள்வதாக இருந்தது. அதனாலேயே மதுரையிலிருந்து மைசூர் படையைத் துரத்தியடித்தது. மதுரையில் மாட்டிக்கொண்டு திண்டாடிய படையை மீட்க, புதுப்படையை மைசூர் மன்னர் அனுப்பவில்லை. என்றபோதும், மைசூர் மன்னர் சில சந்நியாசிகள் மூலம் ரகசியமாகப் பத்தாயிரம் பகோடாக்களை அனுப்பி, போலியாக பக்திப்பயணத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டதாகச் சொல்லப்படுகின்றது.[11] மறவர்கள் மைசூர் படைக்கு உதவியதால், முற்றுகை ஓராண்டுக்கும் மேலாக நீடித்தது. இயேசு சபை எழுத்தாளர் ஒருவரின் கடிதம் இவ்வாறு பேசுகின்றது: 'மைசூர் மன்னருக்கும் சாம்பாஜிக்கும் இடையிலானப் போர் மிகக் கடுமையானதாக இருந்தது'.[12] பெத்னூர் படைகளின் பேராதரவுடன் சாம்பாஜி நடத்திய கருணையற்றத் தாக்குதல், மைசூர் படைகள் வென்றுவைத்திருந்த இடங்களையும் விட்டுவிட்டு, மதுரையி

லிருந்து ஓடவைத்தது. மேலாக, மைசூரின் மிகமுக்கியமான பகுதிகளிலும் சாம்பாஜியால் தாக்குதல் தொடுக்கப்பட்டது. இதையடுத்து, நாட்டின் பொருளாதார நிலையைச் சீர்படுத்த, கடுமையான வரிகள் விதிக்கப்பட்டன. இதில் அதிருப்தியடைந்த மைசூர் மக்கள், இயலாமையில் பொங்கி, வலுவான எதிர்ப்புக் குரலை பதிவுசெய்தனர். இயேசு சபையின் மற்றொரு குறிப்பொன்று இவ்வாறு கூறுகின்றது: 'மக்கள் போராட்டத்தால் சினந்த மைசூர் மன்னர், குடிமக்களுக்கு எதிராக தனது படைகளை ஏவிவிட்டார். அப்படை தீ வைத்து அழித்தது. வாளால் வெட்டிவீழ்த்தியது. வயது, பாலினம் பாராமல் வாள்முனையில் கலவரக்காரர்களை தடயமின்றி அழித்தது. குரூரமான உத்தரவுகள் செயல்படுத்தப் பட்டன. விஷ்ணு, சிவன் கோவில்கள் அழித்தொழிக்கப்பட்டன.[13] அங்கிருந்த பெரும்பொக்கிஷங்கள், அரசகுடும்பத்தின் கருவூலத்துக்குப் போய்ச்சேர்ந்தது. தீயிலிருந்தும் வாளிலிருந்தும் தப்பியவர்கள், சுற்றிலுமுள்ள மலைப்பகுதிகளுக்கும் காடுகளுக்கும் தஞ்சம் புக ஓடினர். அங்கே அவர்களின் பரிதாப வாழ்க்கை நீண்டது'[14] இவ்வாறாக, மைசூர் படைகளால் ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கருக்கு இருந்துவந்த நெருக்கடிகள் களையப்பட்டன.

ஈகோஜி தன்னைப் பாதுகாத்துக்கொள்வதிலேயே கவனம் செலுத்த வேண்டியிருந்தது. அவரது கொடுங்கோன்மையும் வெறியாட்டமும் மக்களை அவருக்கு எதிராகத் திருப்பிவிட்டிருந்தது. அவரது ஆளுமைக்குள்ளிருந்த பல இடங்களை, மறவர்கள் ஆக்கிரமித்துக்கொண்டு விட்டதில் அவர் மனச்சோர்வுற்றிருந்தார். மதுரையைப் பொறுத்தவரையில் அவர் ஏதும்செய்ய முடியாத செயலற்றவராகவே இருந்தார். சேதுபதியும், தனது தளவாயின் கிளர்ச்சியால் மதுரை மீது கவனம்செலுத்த முடியாத நிலையில் இருந்தார். சாம்பாஜியும்கூட மைசூர் படையெடுப்பில் முழுகவனம்செலுத்த வேண்டியிருந்ததால் எல்லாப் பக்கத்திலிருந்த நெருக்கடிகளும் ரங்க கிருஷ்ணாவிட மிருந்து விலகியே இருந்தன.

இப்படியாகவிருந்த அரசியல் சூழ்நிலையை, தனக்கான சாத்தியமாக ஆக்கிக்கொண்ட ரங்க கிருஷ்ணா, ராஜ்ஜியத்தை சூதானமாக ஒழுங்குபடுத்திக்கொண்டார். அப்படியே முந்தைய எல்லைகளையும் தன்வசப்படுத்தினார். பதவியேற்ற நான்கைந்து ஆண்டுகளிலேயே முன்பு இழந்தப் பகுதிகள் அனைத்தையும் மீட்டெடுத்தார். 1686ஆம் ஆண்டின் இயேசு சபையின் கடிதம், 'மைசூர் படை வெளியேறியதால், மதுரை நகரம் திரும்பக் கிடைத்து விட்டது. குடியாளுமைப் பெற்ற பண்ணை

உடமையாளர்களின் ஆதரவைப்பெற அவர் கொடுங்கோன்மையாக நடந்துகொண்டார்' என்கின்றது.[15] 1608 சாகா சம்வத் ஆண்டின் அரும்பாவூர் கல்வெட்டொன்று,[16] ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் மதகுகளைச் சீரமைத்ததாகப் பேசுகின்றது. ஆகவே, 1686 ஆம் ஆண்டுவாக்கில் அவரது கவனம் உள்ளாட்சி நிர்வாகத்தில் பதிந்திருந்தது தெளிவாகின்றது. வெளிப்படையாக, அவர் ஆற்றல் மிக்க ஒர்ஆளுமையாகவும், மனிதத்தன்மை கொண்டவராகவும் இருந்திருக்கின்றார். அசந்தர்ப்பங்கள் மற்றும் எதிரிகளின் செயல்பாடுகளையும் தாண்டி, அவரது தனிப்பட்டக் குணநலன் களால் தேச எல்லை முழுவதும் அவரது புகழ்பரவியிருந்தது.

**முகம்மதியர்களுடன் ரங்ககிருஷ்ணாவின் தொடர்புகள்** - மறுசீரமைப்பை வலுவாக அமைத்துக்கொண்டதில் ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கரின் தனித்திறமை முக்கியமானது. மதுரையின் சுதந்திரத்தையும் கௌரவத்தையும் அவர் வெற்றிகரமாக நிலைநாட்டிக்கொண்டார். முகலாயப் பேரரசரிடம் ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் நடந்துகொண்டதாகக் கூறப்படும் வேடிக்கை கதை ஒன்று, வரலாற்றின் பக்கங்களில் பதிவுசெய்யப்பட் டிருக்கின்றது.[17] தனது குடிமையாள்மைப் பெற்ற பிரதிநிதிகளிட மும், சுதந்திரமாகச் செயல்படும் சிற்றரசர்களிடம் தனக்கானத் திறைத்தொகையை வசூலிக்க, தனது செருப்புகளில் ஒன்றை அலங்கரிக்கப்பட்ட யானை மீதேற்றி அனுப்புவதை வழக்கமாக வைத்திருந்திருக்கின்றார், முகலாயப் பேரரசர். காலாட்படை, குதிரைப்படையுடன் பயணிக்கும் அந்த ஒற்றைச்செருப்பு ஒருநாட்டின் எல்லைக்குச் சென்றதும் அந்நாட்டின் அரசருக்குத் தகவல் அனுப்பப்படுமாம். அரசர், அதை எதிர்கொண் டழைத்து, தலைநகருக்கு இட்டுச்சென்று, அச்செருப்பை சிம்மாசனத்தில் இருத்தி, அதற்கான பணிவிடைசெய்து, திறையை அச்செருப்பிடம் செலுத்துவார்களாம். நாடுமுழுவதும் பயணித்து, வசூல்செய்த பெருஞ்செல்வ மூட்டைமுடிச்சுகளுடன் அச்செருப்பு தலைநகர் திரும்புமாம். மதுரையின் அரசராக ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் இருந்தபோது, முறைமைக்கான அழைப்பு செருப்பிட மிருந்து வந்திருக்கின்றது. வரவேற்பளிப்பது வழக்கத்திற்கு வந்திருந்தாலும், ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கருக்கு உடல்நிலை சரியில்லாத காரணத்தால், முகலாய அதிகாரிகள் செருப்புடன் எல்லைக்குள் நுழையும்போது, அவர் வரவேற்கப் போகவில்லை. அதனால் அரசர், முகலாய அதிகாரிகளைக் கொள்ளிடக்கரையிலுள்ள சமயவரத்தில் சந்திக்க வேண்டும் என்று தாக்கீது அனுப்பப்பட்டது. தாக்கீதுபெற்றும் அவர் போகவில்லை. முகலாய அதிகாரிகள் திருச்சினாப்பள்ளிக்குள் வந்துவிட்டனர்.

அப்போதும் ஒற்றைச்செருப்பை வரவேற்க அவர் ஆர்வம் காட்டவில்லை. மறுபடியும் உடல்நிலை சரியில்லை என்று போக்குக் காட்டினார். தகவல்கொண்டுசென்ற செய்தியாளன் ஆத்திரமாகிப் போனான். ஆனாலும் ஏதும்நடப்பதாகத் தெரியவில்லை. கோட்டைக்குள் நுழைந்துவிட்டான். கடைசியில் பாதுஷாவின் ஒற்றைச் செருப்பை அரசசபைக்கே முகலாய அதிகாரிகள் கொண்டுவந்துவிட்டனர். நாட்டின் அரியாசனத்துக்கு உரியவரான ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர், பேரரசரின் பிரதிநிதிகளைக் கண்டுகொள்ளவில்லை. ஆத்திரத்தில் சிவந்த முகலாயப் பிரதிநிதிகள் ஒற்றைச்செருப்பை அரசரின் முன்னே கொண்டுபோய் வைத்து, மரியாதை செய்யச்சொன்னார்கள். வரம்புமீறி நடந்துகொண்ட அவர்களை உயிர்க்காயம் ஏற்படும்படி அடித்துநொறுக்கிய அரசர், செருப்பை விட்டெறிந்தார். முகலாய அதிகாரிகளின் உத்தரவுக்கு அவர் கீழ்ப்படிந்திருந்தால், வழமையி லிருந்த அந்த முறைமைக்கு உடன்பட்டுப்போனதாக ஆகியிருக்கும். ஆத்திரமடைந்திருந்த அரசர் ரங்க கிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர், ‘உங்கள் பேரரசருக்கு மூளைக்கோளாறா? ஒற்றைச்செருப்பை அனுப்பிருக்கின்றாரே! இரண்டுகால்களிலும் செருப்பை அணியவேண்டுமென்ற அடிப்படைக்கூட அவருக்குத் தெரியாதா?’ என்று கொந்தளித்திருக்கின்றார். முகலாயப் பேரரசரின் அதிகாரிகளும் கொதித்துப்போய் சச்சரவில் ஈடுபட, அவர்களை நாடுகடத்தியிருக்கின்றார். ஆனால் கோட்டையிலிருந்து வெளியேறிய அவர்கள், படையெடுப்புக்கான ஆயத்தத்தில் ஈடுபட்டிருக்கின்றார்கள். உடனே, ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் படைகளை அனுப்பி, அவர்களில் பெரும்பாலானோரை கொன்றுவிட்டார். உயிர்ப்பிழைத்துத் தப்பியோடியவர்கள் தங்களுக்குநேர்ந்த கதியை பேரரசரிடம் சொன்னதாகவும், அதனால் பாடம்கற்றுக்கொண்ட பேரரசர் அந்நிய ஆட்சியாளர்களிடம் திறைவசூலிக்கக் கையாண்ட முறையை கைவிட்டதாக அறியமுடிகின்றது.

மேலே காணப்பட்ட முறையை முகலாயப் பேரரசர்கள் வழக்கமாகக் கையாண்டார்கள் என்று, வரலாற்றின் பக்கங்களில் அதிகஅளவில் காணப்படுகின்றது. பெர்ஷிய மன்னர்கள் கடைப்பிடித்த ‘பூமியும் தண்ணீரும் மக்கள் உட்பட அனைத்தும் அரசருக்கே’ என்ற வழிமுறையில், மற்றஅரசர்களை கீழ்மைப் படுத்துவதற்கும் அவர்களிடமிருந்து திறைபெறுவதற்குமான செய்தியைச் சொல்வதற்கு, ஒருவேளை இந்தவழிமுறையை அம் முகலாயப் பேரரசர் கையாண் டிருக்கலாம். சுருக்கமாகச்சொன்னால், இதுபோன்ற நடைமுறைகள் பொருத்தமற்ற ஒன்றுதான். ஆனால்,

ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சிக்காலத்தில் இதுபோன்ற ஒன்று நடைபெற்றிருக்க வாய்ப்பில்லை. இங்கே குறிப்பிடப்படும் முகலாயப் பேரரசர் ஔரங்கசீப். ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சியின் இறுதியின்போது, அவர் பிஜப்பூர் அரசையும் கோல்கொண்டா அரசையும் மட்டுப்படுத்துவதில் மும்முரமாக இருந்தார். பிஜப்பூரை 1686ஆம் ஆண்டின் செப்டம்பர், 12 ஆம்தேதியும், கோல்கொண்டாவை 1687ஆம் ஆண்டின் செப்டம்பர், 21 ஆம்தேதியும் நிறைவேற்றம் செய்தார்.[18] இதையடுத்து அவர் தனது முழுகவனத்தையும் தனக்குப் பெரும்சவாலாக இருந்த மராத்தியர்களைநோக்கித் திருப்பிவிட்டார். சாம்பாஜியை 1689ஆம் ஆண்டின் ஜனவரியில் சிறைபிடித்தார். அதேஆண்டின் மார்ச், 11 ஆம் தேதி தண்டனை நிறைவேற்றம் செய்தார். ஆயினும் மராத்தியப்போர் தொடர்ந்துகொண்டிருந்தது. அக்டோபர், 19ஆம் தேதிதான் ராய்கார் வீழ்ந்தது. ராய்காரை வீழ்த்துவதில் அவர் மிகக்கவனமாக, 1689 ஆம் ஆண்டுவரை தீவிரமாக இருந்தார்.[19] இச்சூழலில், வரலாற்றின் பக்கங்களில் சொல்லப்பட்டிருக்கும் இக்கதையின் உண்மைத்தன்மை, பெரும்கேள்விக்கு இடமளிப்ப தாக உள்ளது. அதுவேறில்லாமல் ஔரங்கசீப் இதுபோன்ற சம்பிரதாயங்களைக் கைக்கொள்ளக் கூடியவர் அல்ல.[20] அவரை அடிப்படைவாதியாகக் காட்சிப்படுத்துகிறார்கள். மேலும், ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் முகலாயப் பேரரசருக்குப் பாடம்கற்பித்தார் எனக்கற்பிக்கப்படுவது, ஔரங்கசீப்பின் குணாதிசியத்துக்கு எதிரானது. நம்பஇயலாதது. வரலாற்றின் பக்கங்களில் சிறப்பு விருப்பம்கொண்டு இதுபோன்ற கதைகள் பதிவுசெய்யப்படும் வழக்கம் இருக்கின்றது. அது, இதில் நடந்திருக்கின்றது.

'தொடர்புடையச்செய்திகள் யாவுமே, காலஇடச்சூழலுடன் பொருந்திப்போவதாக இல்லை' என்று ரங்காச்சாரி குறிப்பிடுகின்றார்.[21] ஆனால் பொருந்தாததாக அவர்கருதும் கால இடச்சூழலை எங்கும் குறிப்பிடவில்லை. டெய்லரின் நம்பிக்கை களுக்கு வால்பிடிப்பவராக மட்டுமே அவர் இருக்கின்றார். டெய்லர், 'ஒற்றைச்செருப்பை அனுப்பும் முகலாயரின் இந்தச் செய்கை ஆச்சரியம் தருவதாக இருக்கின்றது. அச்செய்கை உண்மையா அல்லது பெருமைக்குரிய வீண்பேச்சா என்று அறிய முடியவில்லை' என்கின்றார். 'அக்கதைக் கூற்றை அந்நேரத்திலும் சூழலிலும் வைத்துப்பார்க்கும்போது, உண்மைக்குப்பக்கத்தில் இருப்பதாகத்தெரிகின்றது' என்றும் சொல்கின்றார்.[22] நெல்சன், 'சொல்லப்படும் கதையின் தற்செயல்தன்மையும் அதன்நிலையும் நம்பகத்திற்கு உகந்ததாக இல்லை' என்று தீர்வுசெய்கின்றார்.[23]

ஆனால் அதற்கெனக்கூறப்படும் சான்றுகள் ஏற்பதற்கு உகந்ததாக இல்லை என்பதுமட்டும் உறுதி. அது, ஔரங்கசீப் மீதே ஆதிக்கம் செலுத்துமளவுக்கு உறவு இருந்ததாகக் காட்டப்படுவதற்கான முயற்சியாக மட்டுமே தெரிகின்றது.[24]

சேதுபதியுடனான உறவு- தனதுசொந்த எல்லைக்குள் பல்வேறு குழப்பங்களை கிழவன் சேதுபதி சந்தித்துவந்தாலும், ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கருடன் பெரிய அளவில் முரண் ஏதும் கொண் டிருக்கவில்லை. ருஸ்தும்கானின் கொடுங்கோன்மையிலிருந்து சொக்கநாத நாயக்கரை விடுவிக்க உதவிய கிழவன் சேதுபதியின் காலமறிந்த செயல், மறக்கக்கூடியதல்ல. ஆயினும் படிப்படியாக அவர், தன்னை சுதந்திர நிலைக்கு உயர்த்திக்கொண்டார். 1686 ஆம் ஆண்டுவாக்கில், மதுரையின் முன்னாள் தளவாயான வெங்கட கிருஷ்ணப்பா மற்றும் தஞ்சாவூரிலிருந்து ஈகோஜியால் விரட்டி யடிக்கப்பட்ட செங்கமலதாஸ் ஆகியோருடன் கூட்டுசேர்ந்து, மதுரைமீது தாக்குதல்நடத்த ஏற்பாடுகள் செய்துகொண்டிருந்தார். தஞ்சாவூருக்குப் படைகளை அனுப்பி உதவியவகையில் அவர் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கும் மேலாக, பாம்பார்-புதுக்கோட் டைக்கு இடையிலானப் பகுதிகளையும் சுதந்திரமாக அனுபவித்துவந்தார். ரங்ககிருஷ்ணா மீதான அந்தப்படையெடுப்பு செயல்பாட்டுக்கு வரவில்லை. சொக்கநாத நாயக்கரால் ராம்நாட் தளவாயாக தாரைவார்க்கப்பட்ட குமாரபிள்ளை, தன் எஜமான் கிழவன்சேதுபதியின் திட்டத்திற்கு ஒத்துழைக்கவில்லை. மாறாக, சேதுபதியையும் வெங்கடகிருஷ்ணப்பாவையும் கலக்காரர்களாகக் கைதுசெய்து, ரங்ககிருஷ்ணாவிடம் ஒப்படைக்க எண்ணினார். அத்திட்டத்தை மோப்பம் பிடித்துவிட்ட சேதுபதி, தளவாயைக் கொடூரமாகச் சித்ரவதைசெய்து கொன்றுவிட்டார். தளவாயின் குடும்பத்தையும் சேதுபதி விட்டுவைக்கவில்லை.

இந்த நடவடிக்கைகளால் அதிருப்தியுற்ற ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர், மறவர் நாட்டின்மீது படையெடுத்தார். தஞ்சாவூர் அரசர், சேதுபதியின் உதவிக்கு தனது தளபதியை அனுப்பிவைத்தார். போர்க்களம் கடுமையானதாக இருந்தது. ஒருகட்டத்தில் மதுரைப் படைகள் அடித்துத் துரத்தப்பட்டன. அதுபற்றிய செருக்குரையை, 1686ஆம் ஆண்டின் கல்வெட்டொன்று பகர்கின்றது. 'கள்ளர்களின் குடியிருப்பாக இருந்த புதுக்கோட்டை நாடுமுழுவதையுமே வென்ற ஷாஜி, தெற்கே பாம்பனாறுவரையில் அதை விஸ்தரித்தார்'[25] என்றும், மேற்சொன்ன அந்தப் பகுதியை, போரில் சிறப்பாகச் சேவைசெய்ததை சேதுபதி அங்கீகரித்து, ஷாஜிக்கு பரிசளித்து விட்டதாகவும் கூறுகின்றது.

**கிறிஸ்தவம்** - ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சியின் போது, கிறிஸ்தவத்தின் முன்னேற்றம், மதுரை திருச்சபையைச் சேர்ந்த ஜான் டி பிரிட்டோவின் உள்ளார்ந்த செயல்பாடுகளால் மேன்மையடைந்தது. 1647ஆம் ஆண்டில் லிஸ்பனில் பிறந்த அவர், மேட்டுக்குடியினத்தைச் சேர்ந்தவர். புகழ்பெற்ற அரசியலாளராக ஆக்கவேண்டுமென்று உயர்வட்டங்களுக்குள் வளர்க்கப்பட்டவர். ஆனால் அவரது கவனம்முழுவதும் திருச்சபை வாழ்க்கையின் மீதே இருந்தது. அதற்கு அவர் தாயின் அறிவுறுத்தலும் தூண்டுதலும் காரணமாக இருந்தது. போர்த்துக்கீசிய அரசாங்கமும் ஊக்குவிப்பு செய்தது. அதைத்தொடர்ந்து, 1662ஆம் ஆண்டில் அவர் சமயத் துறைக்கானப் புதுப்பயிற்சியை மேற்கொண்டார். அவரதுஅறிவும், சேவைமனப்பான்மையும் மெல்லமெல்ல உயர்ந்தது. இந்தியாவில் கிறிஸ்தவத்தை வளர்ப்பதற்காக, தன்னை ஆயத்தப்படுத்திக் கொண்டார். 1672ஆம் ஆண்டில் இந்தியாவுக்குப் பயணத்தை மேற்கொண்ட அவர், மூன்றாண்டுகள்வரையிலும் கோவாவில் தங்கியிருந்தார். 1680ஆம் ஆண்டு மார்ச்மாதத்தில் ஆண்ட்ரே பிரைரேயுடன் மதுரை வந்துசேர்ந்தார். 1669ஆம் ஆண்டில் நடந்த பயங்கர அழித்தொழிப்புக்குப்பின், மறவர்நாட்டுக்குள் மதம்பரப்புவதை யாரும் துணிந்துசெய்யவில்லை. அங்கே தனது பணியாளர்களுடன் பணிகளைத் தொடங்கினார். மிகுந்தப் பிரயாசையுடன் தொடர்ந்த பணிகளால் அவருக்கு, மதுரை திருச்சபையின் உயர்பொறுப்பு 1683 ஆம் ஆண்டு வந்துசேர்ந்தது. ஐந்தேஆண்டுகளில் தலைமையகத்தின் சட்டவழக்கறிஞராக நியமிக்கப்பட்டார். அதையடுத்து அவர், இந்தியாவிலிருந்து புறப்பட்டுச் சென்றார்.[26]

அன்புக்கானப் பணியை திருச்சபை மேற்கொண்டிருந்த போதிலும், அதன் செயல்பாடுகளுக்கு ஒழுங்குவரையற்றிருந்த நாட்டின் நிலைமை, பல்வேறுவிதமான இடர்களைத் தந்து வந்தது. 1683 ஆம்ஆண்டில் பிரிட்டோ எழுதியக் கடிதமொன்று திருச்சபைக் கொண்டிருந்த ஆர்வத்தையும், அதுபெற்ற வெற்றிகளையும் பகிர்கின்றது. மதுரை நாயக்கரின் கீழ் பாளையக்காரராக இருந்தவர், லிங்கரெட்டி. தனக்குக் கீழே பெரியஎண்ணிக்கையில் கிறிஸ்தவர் களைக் கொண்டிருந்தார். அதனால் வடுகர்பட்டி, பெரியதொரு கிறிஸ்தவ மையமாகியிருந்தது. தீவிரமான லிங்காயத்தாக அவர் இருந்தபோதும், கிறிஸ்தவத்தின் மீது நம்பிக்கைக்கொண்டு, எல்லா விதமான வசதிகளையும் செய்துகொடுத்தார். 1683 ஆம்ஆண்டில் நடந்த ஒருசம்பவம், கிறிஸ்தவத்தைப் பின்தொடர்பவர்களிடையே பீதியை உருவாக்கியது. ஒருநாள் லிங்கரெட்டி, தனது மதகுருவைச் சந்தித்து ஆசிபெறப் போனார். அந்த மதகுரு, மற்ற சமயங்களுக்கு

எதிரானவர். மற்ற சமயங்களைக் குறைத்து மதிப்பிட்டு, அவர் பேசியதாவது: 'உனது மாட்சிமையைக் கண்டு ஆச்சரியமடைகின்றேன். கீர்த்திமிக்க உனது செய்கைகளால் ஒருமைப்பாடு, நாணயம், நேர்மை மற்றும் நீதியை நிலைநாட்டுவதில் ஆழ்ந்ததன்மை கொண்டிருக்கின்றாய். உன் அரசாங்கம் நீதியின் அரசாங்கமாக இருக்கின்றது. உனது எல்லைக்குள் பரங்கியர்களும், பறையர்களும் நம்பிக் கைக்கொள்ளும் மதப்பிரசாரத்தை மேற்கொள்ள நீ அனுமதித்திருக்கின்றாய். அந்த நம்பிக்கையைக் கொண்ட குரு, வடுகர்பட்டியில் ஒருவீடும், பேராலயமும் வைத்திருக்கின்றார். இடைவிடாது திரும்பத்திரும்ப வருகின்ற பெரும்மக்கள்திரள் அங்கே கூடுகின்றது. மடத்தனமான துணிச்சல் கொண்ட அந்தப்பிரசங்கியை கடுமையாக நீ தண்டிக்கவேண்டும் என்று நான் விரும்புகின்றேன். அந்தப்பிரசங்கி தனது ஆதரவாளர்களைத் தூண்டிவிட்டு, லிங்கத்தை உடைத்தெறிய உத்தரவிட்டிருக்கின்றார்' என்று வெறுப்பை உமிழ்ந்திருக்கின்றார். குருவின் இந்தவார்த்தைகள் கேட்டு லிங்கரெட்டி அதிர்ந்துபோனார். உண்மையானத் தகவலைப் பெறுவதாக உறுதியளித்துவிட்டு, அரண்மனைக்குத் திரும்பினார். முதன்மை அமைச்சரை அழைத்து, இதுகுறித்து விசாரிக்க உத்தரவிட்டார். தனது ஆளுகைக்குட்பட்டப் பகுதியில், 'மொத்தமாக எத்தனை கிறிஸ்தவர்கள் இருப்பார்கள்?' என்று கேட்டிருந்தார். அதற்கான பதில் அளிக்கப்பட்டது: 'அவர்களின் எண்ணிக்கை! யார் எண்ணுவது? அவர்கள் இல்லாத கிராமமென்று எதுவும் இல்லை'.[27]

மறவர்நாட்டில் கிறிஸ்தவ மதம்பரப்ப, விடாது துயரளிக்கப் பட்டது. சமயத்தைப் பரப்பும் திருச்சபையின் உள்ளூர் ஆசிரியர் களுடன் மங்கலம் என்னும் கிராமத்துக்கு அருகில் சென்ற போது, மறவ அரசரின் தளபதியும் முதல்அமைச்சருமான குமாரபிள்ளையின் உத்தரவின்பேரில் பிரிட்டோ கைதுசெய்யப்பட்டார். அவரையும் அவரது சபையைச் சேர்ந்தவர்களையும் சிவனைக் கும்பிடச்சொல்லி வற்புறுத்தியிருக்கின்றார்கள். அவர்கள் மறுத்துவிட்டார்கள். இதையடுத்து சினமுற்ற மறவர்கள், அவர்களைச் சங்கிலியால்பிணைத்து அட்டூழியம்செய்து அப்படியே விட்டுவிட்டுப் போய்விட்டார்கள். அந்தநிலையிலேயே அவர்கள் அன்றிரவு முழுவதும் அங்கே இருந்தார்கள். ராஜதுரோகத்துக்கு எதிராக அவர்களைக் கழுவில் ஏற்றும் திட்டமும் அவர்களுக்கிருந்தது. விஷயம்கேள்விப்பட்ட சேதுபதி, அவர்களை மரணவிதியிலிருந்து மீட்டார். மறுவாரம் அவர்கள், அங்கிருந்து தலைநகர் ராம்நாட்டுக்கு அனுப்பப்பட்டனர். இறுதியில், மறவ நாட்டுக்குள் கிறிஸ்தவத்தைப் பரப்பினால் மரணதண்டனைதான் என்று எச்சரிக்கப்பட்டு, விடுவிக்கப்பட்

டார்கள். சுதந்திரக்காற்றைச் சுவாசித்த பிரிட்டோ, உள்ளுணர்வின் தூண்டுதலால் மாகாணத்திலிருந்து ஆர்வமற்ற மனநிலையுடன், தயக்கமாக 1688ஆம் ஆண்டில் போர்த்துக் கீசியத்துக்குப் பயணமானார்.[28]

**முத்து வீரப்பாவின் சாதனைகள்** - ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் தீராத ஆர்வமும் சாகச விரும்பியாகவும் இருந்துவந்தார். அரசராக இருந்தபோதிலும் குடிமக்களின் தரத்துக்கு இறங்கி, அவர்களின் பிரச்சனைகளைக் கூர்ந்துகவனிப்பவராகவும், அவர்களின் தேவைகளைப் பூர்த்திசெய்பவராகவும் இருந்தார். மாறுவேடம் பூண்டு நாடுமுழுவதும் துரிதப்பயணம் மேற்கொண்டு எங்கும் தனது புகழைப் பரவச்செய்தார் என்று வரலாற்றுக் குறிப்புகள் விவரிக்கின்றன. அவரது சிறப்புப் பயணங்களால் தஞ்சாவூர், அரியலூர் மற்றும் தின்னவேலி ஆகிய பகுதிகளில் பெருமளவு நிவாரணப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன.[29] அவரது இணக்கமானப் பண்பாலும், குறிப்பிடத்தகுந்த தனித்தன்மைக ளாலும் நாட்டின் பலபகுதிகளில் புணர்நிர்மாணப் பணிகள் செய்யப்பட்டதாக வரலாற்றுத்தரவுகள் கூறுவதை நம்பலாம். இளமைக்களிப்பும் வீரியமிக்க நபராகவும் ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் இருந்திருக்கின்றார். ஆயினும், ‘ஆல்பர்ட்டும் எரிந்தரொட்டிகளும்’ கதையைப்போல நாயக்கரைப் பற்றிப் பேசப்படுவதுண்டு. அவரது அளவுக்கு அதிகமான சுறுசுறுப்பும் உற்சாகமும் மற்ற அரசர்களைப் போலில்லாமல், சாதாரண வேலைகளைக்கூட மறந்துவிடாமல் செய்யவைத்தது. அவர் மேற்கொண்ட திடீர்ப்பயணங்கள் நிர்வாகத்தில் மேற்பார்வை முறையை திட்டமிட்டமுறையில் அறிமுகப்படுத்தியது. ரங்ககிருஷ்ணா பலநேரங்களில் சமரசம்செய்துகொள்பவராகவும் இருந்திருக்கின்றார். அதேவேளையில் தனது அதிகாரிகளின் தவறுகளைச் சகித்துக்கொள்ளாதவராகவும் அவர்களின் ஆடம்பரத்தை வெறுப்பவராகவும் இருந்துவந்துள்ளார். வெளி விவகாரங்களைப் போலவே ஆட்சியின் உள்விவகாரங்களிலும் கருத்தூன்றி செயல்பட்டிருக்கின்றார். சூழ்நிலைகள் அவரது திட்டங்களை ஒப்புயர்வற்று செயல்படுத்த உதவியிருக்கின்றன. அவரதுசெயல்பாடுகள் திருச்சபையைக் கவர்ந்திருக்கின்றது. ஆயினும் அவரது நிர்வாகம் தொடர்பாக, திருச்சபை அடர்சித்திரமொன்றை வழங்குகின்றது. ‘தன்னிடம் நிலஉரிமை பெற்றிருந்த மவுலிபாடி பாளையக்காரர் விசுவாசம் மீது சந்தேகம் கொண்ட அரசர், அநீதியாக நடந்துகொண்டார். பாளையக்காரர் கைது செய்யப்பட்டு நிலவறையில் அடைக்கப்பட்டார். அதேவேளையில் துரதிர்ஷ்டம்நிறைந்த அந்தப் பாளையக்காரரின்

ஆட்சிப்பகுதியை அரசரின்படைகள் சூறையாடின. அவரது மனைவிகள் பிடிபட்டு, பொக்கிஷம் ஒளித்துவைத்திருக்கும் இடத்தைக் காட்டச்சொல்லி சித்ரவதை செய்ததாக'க் குறிப்பிடுகின்றது.[30]

ரங்ககிருஷ்ணா தனக்குள் வலுவான நீதி உணர்வைக் கொண்டவராகவே இருந்தார். அநீதி இழைக்கப்பட்ட இடங்களில், அதனால் உருவான துயரத்தைப்போக்க முன்வந்தார். வித்தியாசமில்லாமல் பிறமதங்களின் மீது, அக்கறைகாட்டினார். திருச்சினாப்பள்ளியில் கிறிஸ்தவர்களுக்குச் சொந்தமான ஓரிடத்தை இந்துக்கள் தங்கள்வசம் எடுத்துக்கொண்டனர். சொக்க நாத நாயக்கர் நடத்திய போரின்போது ஏற்பட்ட பேரழிவையொட்டி அந்த கிறிஸ்தவக் குடும்பம் ஊரைவிட்டுப் போயிருந்தது. அந்த இடத்தில் இந்துக்கள் ஒருகோவிலையும் கட்டிவிட்டனர். சில ஆண்டுகள் கழித்து, திருச்சபையினர் அந்த இடம் கேட்டு கோரிக்கை விடுத்தனர். அப்போது சச்சரவு உருவானது. ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் கிறிஸ்தவர்களுக்கு ஆதரவாக இருந்தார். அரசரின்மதத்தைச் சேர்ந்த ஒருவர், 'சிலையை அங்கிருந்து அப்புறப்படுத்தினால் அதைவைக்க வேறுஇடம் இல்லையே!' என்று குற்றம்சாட்டியிருக்கின்றார். அதைக்கேட்டு கோபமுற்ற அரசர், 'அவற்றை ஆற்றில் வீசியெறியுங்கள்' என்று பதிலிறுத்திருக்கின்றார்.[31] முந்தைய ஆட்சியாளர்களைப்போலவே அவரும் பலகோவில்களையும் சத்திரங்களையும் கட்டியிருக்கின் றார். அக்ரஹாரங்களுக்கு பலகொடைகள் வழங்கியிருக்கின்றார். நாயக்க ஆட்சியாளர்களில் அறநெறி தவறாத ஒருவராக இருந்திருக்கின்றார். ஒருவனுக்குஒருத்தி என்ற நெறிமுறை பிறழாதவராக இருந்து, பலகாலமாகத் தொடர்ந்துவந்த அந்தப்புரத்தை இழுத்துமூடியவர்.

ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கரின் ஆட்சிக்காலம் மிகவும் சிறியதுதான். ஆனால் அவர் எடுத்த முயற்சிகளுக்கெல்லாம் சூழ்நிலைகள் பெரிதும் உதவின. அவரது பெருந்தன்மைக்கும் உயர்வுக்கும் பெருமைக்கும் அக்காலம் போதுமானதாக இருக்கவில்லை. வழக்கம்போலவே ரங்காச்சாரி, இருவேறு முனைகளிலான எண்ணங்களையே கொண்டிருக்கின்றார். அவர் இப்போது ரங்காவை, ஒருகனவுநாயகன் அந்தஸ்துக்கு உயர்த்துகின்றார். வரலாறு பல மாயங்களை செய்யவல்லது. அவர் கூறுகின்றார். 'ரங்கா இன்னும் சிலஆண்டுகள் உயிர் வாழ்ந்திருந் தால், முகலாயர்கள் நாட்டை அடிமைப்படுத்தியது அநேகமாக தள்ளிப்போயிருக்கும்.'[32] ரங்ககிருஷ்ணா, சொக்கநாதரைப் போலல்லாது, மிகச்சிறந்த ஆட்சியாளராக இருந்திருக்கின்றார்.

***ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கரின் மரணம்*** - சின்ன அம்மைநோயால் அரசர் மரணமுற்றதாக இயேசு சபையின் கடிதம் கூறுகின்றது.[33] *(1689)* சுக்ல ஆண்டில் அவர் இறந்ததாக மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி சொல்கின்றது. பாண்டியர்கள் வரலாறு மற்றும் மதுரைத்தலவரலாறு *(1690)* பிரமோதுத ஆண்டில் இறந்ததாகக் கூறுகின்றன. *1700* ஆம் ஆண்டு டிசம்பர், *11* ஆம்தேதியிட்ட இயேசு சபையின் கடிதம், ‘மங்கம்மாளின் பதினான்கு அல்லது பதினைந்து வயதுள்ள பேரனுக்கு அந்தராஜ்ஜியம் வந்துசேர்ந்தது’ என்று கூறுகின்றது.[34] ஏழு ஆண்டுகள் மட்டுமே ஆட்சிசெய்த ரங்ககிருஷ்ணா, *1689*ஆம் ஆண்டு இறந்தபின்பே மகன் பிறந்திருக்கவேண்டும். பதிலாளாக ஆட்சிசெய்வதற்கு முன்பே, மங்கம்மாள் தொடர்பானக் கல் வெட்டு, *1687* ஆம்ஆண்டிலேயே காணப்படுகின்றது.[35]

**அடிக்குறிப்புகள்**

1. p.198
2. Some doubt is cast on this by an inscription of 1687, where one Annamuttmaaml is referred to as the mother of Ranga Krishna Muttu Virappa Nayaka. Appendix D, No.196
3. Taylor, O.H.MSS, ii, p.199
4. Bertrand, iii, p.200, ante p.187
5. Bertrand, iv, p.206, Vide Appendix A, Letter No.12
6. Appendix D, No.149
7. Appendix D, No.190
8. Mr. Rangachari attempts precision without sufficient data. He says (I.A., 1927, p.104n) The correct date is about 1682-1689, and is proved epigraphy. by the epigraphical evidences in regrad to this reign, however, are very mearge, To Substantiate the former statement, he refers to an inscrition of Ranga krishna in 1686, and another of 1657 (sic)
9. Bertrand, iii, p.357. Vide Appendix A, Letter No.8
10. Ibid, p.305
11. Ibid, iii, pp.360-1
12. Ibid, p.375
13. Ibid, p.377-8, Vide Appendix A, Letter No.9
14. Ibid, pp.380-1
15. Bertrand, iii, pp.399-400
16. Appendix D, No.192
17. Taylor, O.H.MSS, ii, pp.205-8
18. J.Sarkar, History of Aurangazib, iv, pp.324, 382
19. Ibid, p.403

20. Ibid, p.406
21. I.A., 1917, p. 123
22. O.H.MSS, ii, p.218
23. p.212
24. Ther is nothing impossible in the story, as Aurangazib had succeeded in his cherished ambition of bringing both Bijapur and Golkonda under his authority Mysore had made a timley submission, from the point of view Aurangazib by sending an empassy to the great Moghul who received it kindly if with comparatively scant respect, and dismissed it graciously. It is said that the empire spent Rs.2000 unpon this glorious mission from the Zamindar of Mysore. It was only Madura that remained recalitant, and this exihibition of his authority, though it may have seemed insulting in Hindu eyes, must appeared proper to the great emperor in the full flush of his victorian career, the Maharattas alone had to subduced; and Aurangazib never cherished any doubt about his ultimate success – Ed.
25. Appendix D, No.183
26. Bertrand, iii, pp. 405-23 Nelson pp.221-1
27. Bertrand, iii, p. 317
28. Bertrand, iii, pp.389-93
29. Taylor, O.H.MSS, ii, pp. 208-15
30. Bertrand, iii, p.400
31. Ibid., iv, pp.112-3; Lockman, i, p.477 Nelson p.210
32. I.A, 1917, p.124
33. Lockman, I, p.460, Vide Appendix B, Letter, No.3
34. Bertrand, iv, p.74; Lockman, i, p.461. Vide Appendix B, Letter No.3
35. Appendix D, No.195

# 12

# பதிலாள் மங்கம்மாள் ஆட்சி (1689-1706)

ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கரின் மரணத்தின்போது, அவர் மனைவி முத்தம்மாள் கருவுற்றிருந்தார். கணவரின் இறப்பால் மிகவும்துயருற்றிருந்த அவர், குழந்தைபிறப்புக்குமுன்பே தன்னை கணவனின் சிதையுடன் மாய்த்துக்கொள்ள முனைந்தார். கருசுமப்பதைக் காரணங்காட்டி, அவரதுசெயல்பாட்டை தவிர்க்கும்முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. மாமியார் மங்கம் மாள் பல்வேறுவகைகளில் பலமாகத்தடுத்துரைத்தும், ஆண்குழந்தையைப் பெற்றெடுத்த முத்தம்மாள் தற்கொலை செய்துகொண்டார். ரங்ககிருஷ்ணாவின் மகனுக்கு, விஜயரங்க சொக்கநாதர் என்று பெயரிடப்பட்டது. மேலும், குழந்தைக்கு மூன்றுமாதங்களே வயதாக ஆகியிருக்கும்போது, மன்னராக முடிசூட்டப்பட்டார். இதையடுத்து, குழந்தையின் பாட்டி மங்கம் மாள், அரசருக்குப் பதிலாளாக ஆட்சிசெய்தார். அவரது கணவர் சொக்கநாதர் இறந்தபோது, புழக்கத்திலிருந்த பழமைவாத மூடநம்பிக்கைச் சதிபோன்ற மடச்செய்கைகளில், அரசியல் சிந்தனைகொண்டிருந்த மங்கம்மாள் ஈடுபடவில்லை.[1]

அரச விவகாரங்களில், வாரிசுகள்செயல்படுத்த வேண்டியச் செயல்பாடுகளை மிகக்கவனமாக, மங்கம்மாள் பதிலாளாக இருந்துசெயல்படுத்தியது, குறிப்பிடத்தக்கது. பலதருணங்களில் அவர் போருக்குப் போயிருந்தாலும், அமைதியை வெற்றிகொள்வதிலேயே பெருவிருப்பமுடையவராக இருந்தார். அவரதுவெற்றிகள் அடிப்படையில் முகலாய மேலாதிக்கத்துடன் அரசியல் ரீதியாகப் பணிந்துபோவதிலேயே இருந்தது. முகலாயப் பேரரசர் ஔரங்கசீப், தனது படைகளை தூரத்தெற்கு தக்காணம் வரையிலும் நிலைநிறுத்தியிருந்தார். அந்தக்காலகட்டமே, பதிலாளாக ஆட்சிசெய்த மங்கம்மாளின் காலமுமாக இருந்தது. தனதுபலவீனத்தையும், எதிரியின் பலத் தையும் அவர் தெளிவாகவே உணர்ந்தவராக இருந்தார். அதனால், புத்திசாலித்தனமாக முகலாய ஆதிக்கத்துக்கு தலைவணங்குபவராக நடந்துகொண்டார். அச்செயல்பாடு, மதுரை அரசாங்கத்தின் மூச்சை, மேலும் சிலகாலத்துக்கு நீட்டிக்க வழிசெய்தது.

1693ஆம் ஆண்டில் செஞ்சியை முற்றுகையிட்டுக் கைப்பற்றிய ஜுல்பிகர் கான், தனது படையைத் தெற்குநோக்கி அனுப்பினார். திருச்சினாப்பள்ளி மற்றும் தஞ்சாவூர் ஆட்சியாளர்களிடமிருந்து கட்டாயமாக திறைவசூலிக்கத் துணிந்தார்.[2] முகலாய ஆதிக்கத்துக்கு தலைவணங்குபவராக மங்கம்மாள் தன்னை மாற்றிக்கொண்டதற்கு, அண்டையிலுள்ள மைசூர் மற்றும் தஞ்சாவூர் ஆட்சியாளர்களின் நடவடிக்கைகளும் காரணங்களாக அமைந்தன. 1687ஆம் ஆண்டில் ஈகோஜியிடமிருந்து பெங்களூரை விலைகொடுத்துவாங்கி, தனது பரப்பெல்லையுடன் இணைத்துக்கொண்ட அதிகாரமிக்க சிக்கதேவ ராயர்கூட, முகலாய ஆட்சியாளருடன் சமரசம் செய்துகொண்டு, ஏகாதிபத்தியத்தின் பாதுகாப்புக்குள் போய்விட்டதுடன், தனது அரசின் எல்லைகளையும் விரிவுபடுத்திக்கொண்டார். தஞ்சாவூரை ஆண்ட ஷாஜி, முகலாயப் படைகளின் முன்னேற்றத்துக்குத் தடையேதும் சொல்லவில்லை. சத்தமின்றி, பேரரசருக்குக் கப்பம்கட்டும் பிரஜையாக ஆகிப்போனார். மங்கம்மாள் இவ்வாறெல்லாம் விவேகமில்லாமல் நடந்துகொள்ளவில்லை. அதேவேளையில், முகலாயப் பேரரசுடன் சிறந்தநட்பைப் பேணுவதற்கு முயற்சிசெய்தார். 1697 ஆம்ஆண்டில் ஜுல்பிகர் கான் மறுபடியும் தெற்குநோக்கி வந்தபோது, மங்கம்மாள் அவருக்கு விலையுயர்ந்தப் பரிசுகளை அனுப்பினார். அப்படியே அவருடைய உதவியுடன் தஞ்சாவூர் ஆட்சியாளர்கள் அபகரித்துக்கொண்ட சில பகுதிகளை சுளுவாக மீட்டுக்கொண்டார். முகலாயப் பேரரசருடன் மங்கம்மாள்கொண்டிருந்த செயல்பாட்டுத் தொடர்புகளை மானுச்சியின் சில தகவல்கள் உறுதிப்படுத்துகின்றன: ‘1702 ஆம் ஆண்டு ஏப்ரல் 20ஆம் தேதி, முகலாயப் பேரரசருக்குத் திறை செலுத்தும் தெர்செனேபளி (திருச்சினாப்பள்ளி) அரசியிடமிருந்து ஒருகடிதம் தாவூத்கானை வந்தடைந்தது. முகலாயப் பேரரசருக்குத் திறைசெலுத்தும் மற்றொருவரான ஆர்பாலியம் (உடையார் பாளையம்) இளவரசருக்கு எதிராக, தான்தொடுக்கும் போரில், தனக்கு தனிப்பட்ட முறையில் உதவவேண்டும் என்று மனமுருகி வேண்டியிருந்தார். உடையார் பாளையத்தார், மங்கம்மாளின் சிலநகரங்களை அபகரித்திருந்தார். இளவரசரின் அநீதியான செயல்பாடுகள் அக்கடிதத்தில் சற்றே மிகைப்படுத்தியே எழுதப்பட்டிருந்தது. ஆனால் உதவி கேட்டு பணிவான வார்த்தைகளைக் கொண்டிருந்தது. அந்தவார்த்தைகளால் உந்தப்பட்டு, முகலாயத் தளபதி தனக்கு உதவவரவேண்டிய நோக்கத்தை அக்கடிதம் தெளிவாகக் கொண் டிருந்தது. அக்கடிதத்துடன் அழகான சில பரிசுப் பொருட்கள் பேரரசர் ஔரங்கசீப்புக்கும், சில தாவூத்கானுக்கும் இன்னும்சில, திவானுக்கும் அனுப்பப்பட்டிருந்தன. அவற்றுள்,

அரசருக்கு விலையுயர்ந்த அணிகலன்களும் ஆபரணங்களும் எண்ணற்று இருந்தன. 20,000 ரூபாய் மதிப்பிலான வெள்ளி நாணயங்கள் தளபதிக்கு அனுப்பப்பட்டிருந்தன. 10,000 ரூபாய் மதிப்பிலானப் பொருள் திவானுக்கு என பகுக்கப்பட்டிருந்தன'.[3] தன்னால் வரமுடியாது என்று விசனப்பட்ட தாவூத் கான், தனது படைகளை மங்கம்மாளின் உதவிக்கு அனுப்பிவைத்தார். இவ்வாறாக, மங்கம்மாள் முகலாயர்களிடம் தனது பணிவைக் காட்டி, அவர்களிடமிருந்து பெற்ற படையுதவியைக்கொண்டு, எதிரிகளுடனான நடவடிக்கைகளை விரிவுபடுத்திக்கொண்டார். அந்த காலகட்டத்திலிருந்த அரசியல்சூழலையும், ஒழுங்கற்ற நிலைமையையும் நன்குபுரிந்து வைத்திருந்த மங்கம்மாள், நாட்டின் நன்மைகருதி, தனதுகொள்கைகளை விட்டுக்கொடுக்கும் தன்மைக்குத் தகவமைத்துக்கொண்டார். புயலில்சிக்குண்டு கப்பல்போல உடைபடுவதைக்காட்டிலும் சற்றே பணிந்துசென்று நாட்டை ஆபத்திலிருந்து தற்காத்துக்கொண்டார். வெற்றிபெறுவதற்கான யுக்தி அது. தனது சக்திமுழுவதையும் எதிரிகளைக் குறைத்துக் கொண்டு, நாட்டில் அதிகாரத்தை நிலைநிறுத்தவும், அதன் கௌரவத்தைக் காக்கவும் அருமையாகப் பயன்படுத்திக்கொண்டார். மிகப்பெரிய அதிகாரத்துடன் மோதி, தனதுபலத்தை பரிட்சித்துப் பார்க்கும் மடத்தனத்தை அவர் ஒருபோதும் செய்ததில்லை. ஔரங்கசீப்பின் திட்டங்களை ஒருவாறாகப் புரிந்துகொண்டு, அதற்கேற்பத் தகவமைந்து நடந்துகொண்டதால், முகலாயப் பேரரசு மதுரையின் வேர்களை வெட்டாமல் விட்டுவிட்டது. மானுச்சி இப்படிக் குறிப்பிடுகின்றார்: 'ஔரங்கசீப்பின் தந்திரமான நடவடிக்கை அது. முதலில் அவர்களின் (தென்னகத்தின் அரசுகளின்) செல்வத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக இல்லாமல் ஆக்குவது. பின்னர், அவர்களின் ஆட்சிப்பரப்பு. இறுதியாக, அவர்களின் உயிரை எடுத்துவிடுவார்.[4] ஏகாதிபத்தியத்தின் செயல்திட்டங்கள் செயல்படவாய்ப்பில்லாத அளவில், மங்கம்மாள் வெகுசிரத்தையான வழிகளில் தன்னை செலுத்திக்கொண்டார். அது, மங்கம்மாளின் உணர்வாற்றலைச் சார்ந்தது'. முகலாயத் தளபதிகளுக்குக் கையூட்டுக்கொடுக்க, மங்கம்மாள் ஒருபோதும் தயங்கவில்லை. தன்னாட்டின் வளமைக்கும் தகுதிக்கும் ஏற்ப, அவர் அத்தளபதிகளை ஏமாற்றவில்லை. அவரது இந்தத்தகவமைப்புக் கொள்கைகளால், மங்கம்மாள் தனதுகாலத்தில் அழிவிலிருந்து மதுரையை மீட்டுக்கொண்டார். இவ்வாறாக அவர், முகலாயர்களுடன் சமரசம்செய்துகொண்டிருந்தும், அந்தக்கூட்டணியால் அவரது எதிரிகளிடமிருந்து நாட்டைக் காப்பாற்றமுடியவில்லை என்பதும் கண்டறியப்படவேண்டும். மங்கம்மாளுக்கு உதவும்

மனநிலை ஔரங்கசீப்புக்கு இருந்தாலும், மதுரைக்கு சோதனைகள் வந்தநேரத்தில், வெகுதூரத்திலிருந்து அவரால் படைகளை அனுப்பி உதவமுடியவில்லை. மராத்தியர்களிடமிருந்து மதுரைக்கு இருந்தத் துயர், ஒருபோதும் முடிவுக்குவரவில்லை. மராத்தியர்களுக்குக் கட்டாயமாகத் திறைசெலுத்தவேண்டிய அவசியம் ஏற்பட்டிருந்தது. நாட்டைக் காப்பதற்காக, மங்கம்மாள் அடிக்கடி கஜானாக் கதவுகளைத் திறக்கவேண்டியிருந்தது.

**மைசூர் படையெடுப்பு** - முகலாயப் பேரரசுடன் தனது கொள்கைகளைச் சமரசப்படுத்திக்கொண்டு மங்கம்மாள் செயல்பட்டபோது, சிக்கதேவராயர் தனது ஆட்சிப் பரப்பெல்லையை விரிவாக்கம் செய்யும்வேட்டையில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். 1690ஆம் ஆண்டில் சிக்க தேவ ராயரின் பரப்பெல்லை, பாராமஹால் மற்றும் சேலத்தின் சிலபகுதிகள் உள்ளிட்டு, காவிரிக் கரைவரையில் விரிந்திருந்தது. 1690 மற்றும் 1694ஆம் ஆண்டுகளுக்கிடையில் அவர், பெத்னூரின் பெரும் பகுதியையும் கைப்பற்றியிருந்தார். வெற்றிபெற்ற அப்பகுதிகளை உடன்பாடுகளின்மூலம், தனதாகவும் உறுதிப்படுத்திவிட்டிருந்தார். மிகவிரைவிலேயே அவரது கரங்கள், மதுரையைநோக்கி நீண்டன. மராத்தியர்கள் மீது ஔரங்கசீப் கொண்டிருந்த ஒருவிதக் கலக்கம் மட்டுமே, தற்போதைக்கு மைசூருடனான நட்புறவை ஏற்படுத்தி யிருந்தது. இந்நிலையில், சிக்க தேவராயர் சேலம் மற்றும் கோயமுத்தூர் பகுதிகளில் தனது மூக்கை நுழைத்து, அங்கிருந்த உள்ளூர்த் தலைவர்களை, அப்பகுதிகளின் பொறுப்பாளர்களாக நியமனம்செய்துவிட்டார். 1695-96 ஆம் ஆண்டுகளின் அவினாசி கல்வெட்டொன்று, அவரது பிரதம அமைச்சரால் வழங்கப்பட்டக் கொடையைப் பேசுகின்றது.[5] திருச்சினாப்பள்ளியை முற்றுகை யிட்டுக் கைப்பற்ற, தளவாய் குமரைய்யா அனுப்பிவைக்கப் பட்டார். திருச்சினாப்பள்ளியைக் கைப்பற்றாமல் மைசூர் திரும்பி விட வேண்டாம் என்று எச்சரிக்கையும் அவருக்குக் கொடுக்கப்பட் டிருந்தது. ஆனால் மராத்தியர்கள் நடத்திய திடீர்த்தாக்குதலால் அவர் உடனடியாகத் தலைநகர் திருப்பி அழைக்கப்பட்டார். மங்கம்மாள் மீது சுமத்தப்பட்டிருந்த சுமை, இவ்வாறு இறக்கி வைக்கப்பட்டு, மைசூர் ராணுவத்தின் தாக்குதலை எளிமையாகத் தவிர்க்கச் செய்தது.[6]

**திருவாங்கூருடனான உறவு** - திருவாங்கூர்மீது திருமலை நாயக்கர் தொடுத்த போரும், நாட்டின் மிகமுக்கியமான அரசர் என்று அவர் ஏற்படுத்தியிருந்த தடயங்கள் குறித்தும் முன்பே பார்த்தோம். 1664ஆம் ஆண்டுவரையிலும்கூட நாயக்க ஆட்சியாளர் களின் நிலையான அதிகாரத்தை, நாட்டின் பாதுகாப்புக்காக அங்கே

ஒருவலுவான அரணும் நிறுத்தப்பட்டிருந்தது. சொக்க நாத நாயக்கரின் ஆட்சிக் காலத்தில் அவரது மேதமைமிக்க நடவடிக்கை களால் உருவான அரசி யல் ஏற்றஇறக்கங்கள் மற்றும் பலவீனம் ஆகியவை, மதுரையின் நிலைமையை மாற்றி அமைத்துவிட்டது. திருவாங்கூர் ஆட்சியாளர் தின்னவேலிக்கு[7] பல அரிய பரிசுப் பொருட்களுடன் வந்து ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கரைச் சந்தித்து, மரியாதை செய்துவிட்டுப் போனதாகக் கூறப்படுகின்றது.[8] வரலாற்றுக் குறிப்புகளில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. அதேவேளை யில் மங்கம்மாள் ஆட்சியின்போது, மலையாளக் கரையைச் சேர்ந்த ஆட்சியாளர்கள் முறையாக திறைசெலுத்தவில்லை என்பதும் பதிவாகியிருக்கின்றது.[9] அதையடுத்து மங்கம்மாள், திருவாங்கூர்மீது போர் அறிவித்தார். இதுதொடர்பாக, இயேசு சபையின் பதிவொன்று மிகவிரிவானத் தகவலைக் கொண்டிருக்கின்றது.[10] 1697ஆம் ஆண்டின் வடசேரி கல்வெட்டு நாயக்கர்களின் ஊடுருவலையடுத்து உருவான பேரழிவையொட்டிப் போடப்பட்ட வரிகள், பதிமூன்று ஆண்டுகள் கழித்துத் தள்ளுபடி செய்யப் பட்டதைக் கூறுகின்றது.[11]

மங்கம்மாளின் பதிலாள் ஆட்சியின் தொடக்கத்தில் மதுரையில் ஏற்பட்டக் குழப்பங்களைத் தனக்குச் சாதகமாக ஆக்கிக்கொண்ட அரசர் ரவிவர்மா, வழக்கமாகச் செலுத்தப்பட்டுவந்த திறையைச் செலுத்துவதிலிருந்து விலகிப்போனார். அதனால் ஒவ்வொரு ஆண்டும் படையை அனுப்பி, வல்லாந்திரத்துடன் வசூல் நடத்தப்பட்டது. திருவாங்கூர் அரசரின் பலவீனம், அரசரின் அதிகாரங்களை அபகரித்து, அவரது அமைச்சர்களின் உள்ளடிக் கலகங்கள், ஒருங்கிணைந்த செயல்களைச் செய்யவிடாமல் முட்டுக்கட்டையாக இருந்தன. இதைச் சாக்காக வைத்து நாயக்க ராணுவம், அந்நாட்டைச் சூறையாடி, வாரியெடுத்தப் பொருட்களுடன் நாடுதிரும்பும். ஆண்டுதோறும் நடக்கும் இத்'திருப்பலி'யை ஆரம்போலிக் கணவாய் அருகே, வலுவானப் பாதுகாப்பு அமைப்பை ஏற்படுத்தி, அழகாகத் தடுத்துநிறுத்தியிருக்க முடியும். ஆனால் திருவாங்கூரில் சிதறிக்கிடந்த உள்நாட்டுப் பிரிவுகள் எதிர்த்து நிற்கவிரும்பாமல் உடன்பட்டுப்போயின. மதுரைப் படையின் திடீர்த் தாக்குதல்களால், திருவாங்கூர் மிகவும் பாதிப்புக்கு உள்ளாகிப்போனது. 1696ஆம் ஆண்டுவாக்கில் இரண்டுபுறத்திலிருந்தும் தாக்கித் துன்பம்தந்துகொண்டிருக்கும் தனது சொந்த நாட்டின் அமைச்சர்களையும், வெளியிலிருந்து தாக்குதல் நடத்தி சீர்குலைத்துக் கொண்டிருக்கும் மதுரைப் படையையும் ஓரேதிட்டத்தின்மூலம் காலிசெய்துவிட்டு, தன்னை மீண்டெடுக்கும் துணிச்சலான முடிவுக்கு ரவிவர்மா வந்திருந்தார்.

படகாஸ் என்று அழைக்கப்பட்ட மதுரைப் படை வழக்கம்போலத் திறையை வசூலிக்க திருவாங்கூருக்குள் வந்துசேர்ந்தது. நாட்டின் தலைநகரும் துறைமுக நகரமுமான கொற்குளம் வரையிலும் யாரும்தடை செய்யவில்லை.[4] பீடுநடையுடன் மதுரைப்படை முன்னேறியது. அந்தநேரத்தில் அரசர் ரவிவர்மா படுபயங்கரமானத் திட்டமொன்றை, ரகசியமாக மதுரைப்படையிடம் உடன்பாடு செய்துகொண்டார். அதாவது, தன்னுடன் இருந்துகொண்டே தனக்குத் தொல்லை கொடுக்கும் எட்டுவிட்டல் பிள்ளைமார் என்ற எட்டுஅமைச்சர்களையும் அடக்குவதற்கு உதவினால், தனது சாம்ராஜ்ஜியத்தில் ஒருபகுதியையும் கோட்டைத் தலைநகரான கொற்குளத்தையும் விட்டுத்தருவதாக ஒப்புக்கொண்டார்.[12] அவர்கள் தங்குவதற்கு அருமையான அரண் ஒன்றையும் வழங்கினார். மதுரைப் படையின் உதவியைக்கொண்டு சிலஅமைச்சர்களைக் கொன்றுகுவித்தார். அதைப்பார்த்து சில அமைச்சர்கள், 'சிட்டாக'ப்பறந்து தப்பியோடி விட்டனர். மேலும்சிலர், பெருந்தொகையைக் கொடுத்து தங்கள் உயிரைத் தற்காத்துக்கொண்டனர். தொல்லை கொடுத்த அமைச்சர்களின் சிறுகுழுவைக் கொன்றும், ஓடவிட்டும், அடக்கியும் ஒருபுறத்தைத் தற்காத்துக்கொண்ட ரவி வர்மா, மறுபுறம் பூதாகரமாகக் கொடுத்தவாக்கின்படி, தலைநகரைக் கேட்டுக்கொண்டு நின்றிருக்கும் பலமுள்ள எதிரியை மிகநுட்பமாகக் கையாண்டார். சற்றும் தளராத ரவிவர்மா, தனக்கு உதவிய மதுரைப்படைக்கு எதிராகத்திரும்பி, பெருந்தாக்குதல் நடத்தி, கோட்டையை முற்றுகையிட்டார். குழப்பத்தில் ஆழ்ந்த படகாஸ் என்ற மதுரைப்படையினரில் பலர் கொல்லப்பட்டனர். முற்றிலுமாக அழிந்துபோன மதுரைப்படையில் மீதமிருந்த சிலர், கதைகதையாகச் சொல்ல தங்கள் தலைநகர்நோக்கி, தலைதெறிக்க ஓடிப்போனார்கள்.

மங்கம்மாள் படைகள் 1697ஆம் ஆண்டில் திருவாங்கூர்மீது படையெடுத்தது எல்லாமே, சூழ்நிலைத் தகவல்களால் விரிவாக எழுதப்பட்டவை. திறைசெலுத்தாததற்கு தண்டனை கொடுக்கப்பட்டதெல்லாம் வரலாற்றின் பக்கங்களில் சுருக்கமான அளவிலேயே காணப்படுகின்றன.[13] பெரும்படையொன்று தளவாய் நரசப்பையா தலைமையின்கீழ், திருவாங்கூருக்கு அனுப்பப்பட்டது. பெரும்போராட்டத்துக்குப்பின், வெற்றிபெற்ற நரசப்பையா, தனதுவிதிமுறைகளை அங்கே நிலைநாட்டி, செலுத்தப்படவேண்டிய பழையதொகை எல்லாவற்றையும் வசூல்செய்தார். விலைமதிப்பிடமுடியாத அளவில், நகைகளைப் பரிசாகப் பெற்றுக்கொண்டு வந்தார். அங்கிருந்து மிகமுக்கியமாக,

விலைமதிக்கமுடியாத சிலபீரங்கிகளையும் தளவாய் கொண்டு வந்தார். அவை, மிகக்கவனமாக எண்கள் இடப்பட்டு, மதுரை மற்றும் திருச்சினாப்பள்ளி கோட்டைகளில் பாது காக்கப்பட்டன. ஆனால் நெல்சன், இதுகுறித்து எந்தத் தடயத்தையும் தேடக்காணோம்.

**தஞ்சாவூர் போர்** - பதிலாள் ஆட்சியைத் தொடங்கிய நாளிலிருந்தே மங்கம்மாளுக்கு தஞ்சாவூர் அரசர் ஷாஜியுடன் பல்வேறுசிக்கல்கள் தொடர்ந்தபடியே இருந்தன. அதனால் மராத்தியர்களின் படையெடுப்பைத்தவிர்க்க, தனக்கு உதவுமாறு முகலாயப் பேரரசரிடம் அவர் உதவி கேட்டிருந்தார். ஆனால் காலம் அவருக்கு, புதிய ஞானத்தைத் தந்திருந்தது. தனது ஆட்சியையும் எல்லைகளையும் எத்தனைக்காலத்துக்குத்தான் உடைந்த கோலின்மீது சாய்ந்துகொண்டு பாதுகாப்பதுபோல, முகலாயர்களின் உதவியுடன் காத்துக்கொள்ள முடியும் என்று உணர்ந்தார். ஷாஜியும் தனது அபகரிக்கும் கொள்கையைத் தொடர்ந்தபடியே இருந்தார். மதுரை நகரத்தின் சில முக்கியமான பகுதிகளை அவர் கைப்பற்றி யிருந்தார். நகருக்குள்புகுந்து அபகரிக்கும் ஷாஜியின் நடவடிக்கை களால் சீற்றங்கொண்ட மங்கம்மாள், 1700ஆம் ஆண்டில் அவருக்கு எதிரானப் போரைத் தொடுத்தார். தஞ்சாவூருக்கு எதிரானப்போரை நடத்த, தளவாய் நரசப்பையாவுக்குப் பொறுப்பளிக்கப்பட்டது. கொள்ளிடக்கரையின் வடக்குப்புறத்தில் வலுவாக நிலைநின்ற தளவாய் நரசப்பையா, தஞ்சாவூர் படைகள் உட்புகுந்து சூறையாடி விட முடியாதஅளவில், பாதுகாப்பாக வைத்துக்கொண்டார். ஆனால் எதிராளியின் திறமைமிக்க குதிரைப்படையின் சாகசங்களை விஞ்சி, தன்னாற்றலை அவரால் காட்டமுடியவில்லை. தடுப்பு ஆட்டத்தைவிட, தொடுப்பு ஆட்டமே பாதுகாப்புக்கு உகந்தது என்பதை உணர்ந்த நரசப்பையா, கொள்ளிடம் ஆற்றை ரகசியமாய்க் கடந்தார். பாதுகாப்பாக முன்னேறி, தஞ்சாவூருக்குள் புகுந்து சூறையாடத் தொடங்கினார். தஞ்சாவூர் படை அதிர்ந்துபோனது. தலைநகரைப் பாதுகாப்பதை விட்டுவிட்டு, மதுரை தளவாயின் நடவடிக்கைகளுக்கு எதிர்நடவடிக்கை மேற்கொள்ள, ஆற்றைக்கடக்க முயற்சிசெய்தது. ஆனால் தவறான இடத்தைத் தேர்வுசெய்தது மட்டுமல்ல, வெள்ள அபாயத்தைக் கண்டறியாமல் கடந்தபோது, பெருவெள்ளம் ஆற்றில்வந்துவிட்டது. வெள்ளம் பல நூறு வீரர்களையும் பல நூறு குதிரைகளையும் அடித்துச் சென்றது. இந்தத் திடீர் சூழ்நிலையால், தஞ்சாவூர் பீதிக்குள் ஆட்பட்டுப்போனது. இந்தச் சந்தர்ப்பத்தை சாதகமாக்கிகொண்ட மதுரைத் தளவாய், தஞ்சாவூர் படைகளைச் சுற்றிவளைத்து முற்றிலுமாக அழித்தார். நாடு அழிந்துகொண்டிருக்கும் சேதியும்

மதுரைப்படைகளின் வெற்றிச்சேதியும் நீளஅகலமாகப் பரவத் தொடங்கியது. மனமுடைந்த ஷாஜி, ஆத்திரத்தில் பதறினார். தனது முதல்அமைச்சர் பாலோஜி என்கிற வாகோஜி பண்டிட், தனது பக்கத்தில் தவறான ஆட்டம் ஆடியிருப்பதாகச் சந்தேகப்பட்டார். அரசரின் பெருங்கோபத்துக்கு பாலோஜி ஆளானார். ஆனால் தனது அரசரை சந்தித்த பாலோஜி, தஞ்சாவூருக்குப் பாதகம் ஏதும் ஏற்படாத வகையில், ஒருவாரத்துக்குள் எதிராளியைச் சமாதானப்படுத்தி, கௌரவமான ஒப்பந்தத்தையும் அமைதியையும் ஏற்படுத்தித் தருவதாக உறுதியளித்தார். அதற்கான அவகாசம் அளிக்கப்பட்டது. நகரத்திலும் மற்றும் சுற்றுப்புறத்திலுள்ள முக்கியமான வணிகர்கள் அனைவரிடமும் பெருந்தொகையைக் கடனாகப்பெற, பாலோஜி தனது உதவியாளர்களை அனுப்பிவைத் தார். பணம்வருவதற்குச் சாத்தியமுள்ள அத்தனைக் குழாய்களையும் திறந்துவைத்தார். எதையும் விட்டுவைக்கவில்லை. மூன்று அல்லது நான்கு நாட்களில் அவர், 5,00,000 கிரவுன்களை சேகரித்துவிட்டார். அதை மதுரையின் முக்கிய அமைச்சர்கள் அத்தனைபேருக்கும் இறைத்துவிட்டார். முக்கியமாக, பேராசை பிடித்த தளவாயின் தந்தைக்கு. ‘திறமைமிக்க’ இந்த ராஜதந்திரத்தால், மதுரைக்கும் தஞ்சாவூருக்கும் இடையில் அமைதி உடன்பாட்டை அவர் உருவாக்கினார். பின்னர்பெருமகிழ்ச்சியுடன் தனது எஜமானரைச் சந்தித்தார். அதிர்ச்சியை ஏற்படுத்தும் வெற்றியை ஈட்டிய அவரது தகுதி, தஞ்சாவூரில் வலுப்பெற்றது. அதைக்கொண்டே அவர், தனது உள்நாட்டு எதிரிகளை செயலிழக்கச் செய்துவிட்டார்.[14]

இதுநடந்து கொஞ்சகால அவகாசத்திலேயே, வேறொருசம்பவம் புதியகூட்டணிக்கு வழி வகுத்தது. மைசூர் அரசர் சிக்கதேவராயர், காவிரிக்கு குறுக்கே மிகப்பெரிய அணையைக் கட்டி, ஆற்றில் பாயும் நீர்முழுவதையும் தனது ராஜ்ஜியத்துக்குள்ளேயே பயன்படும்படித் திட்டமிட்டிருந்தார். இதன்மூலம் தனது ராஜ்ஜியம் வளம்பெறுவதுடன், மதுரை மற்றும் தஞ்சாவூர் ராஜ்ஜியங்களை தண்ணீர் இல்லாமல் பேரழிவுக்கு உள்ளாக்கும் திட்டத்தையும் அவர் கொண்டிருந்தார். அந்தஆண்டு, வழக்கத்துக்கு முன்பாகவே மழைபொழிந்தது. ஆயினும் காவிரி வறண்டு கிடந்தது. தண்ணீர் வராத காரணத்துக்கானக் காரணங்களை மதுரை மற்றும் தஞ்சாவூர் ஆட்சியாளர்கள் அறியமுற்பட்டபோது, மைசூர் அரசரின் குயுக்தி தெரியவந்தது. தங்கள் நாட்டில் வறட்சியையும் பஞ்சத்தையும் ஏற்படுத்த முயன்ற மைசூர் அரசர் மீது, அவர்களுக்கு ஆத்திரம் மூண்டது. தூங்கிக்கொண்டிருந்த சிங்கங்களைத் தட்டியெழுப்பி விட்டதாக அவர்கள் இருவரும் ஒன்றுசேர்ந்து, சிக்கதேவ ராயரின் குறும்புத்தனத்துக்கு பாடம்புகட்ட முயன்றனர். அதற்கான

தயாரிப்புகள் முடிவடையும்தருணத்தில், ஆச்சரியப்படும்வகையில் வெள்ளம் கரைபுரண்டு ஓடி வந்தது. மைசூர் அரசரால் கட்டப்பட்ட அந்தஅணை, வழக்கமான மழைக்குத் தாங்கக்கூடியதாக மட்டுமே இருந்தது. அந்த ஆண்டு பெய்தப் பெருமழைக்கு அது உடைந்துசிதறி, ஒன்றுமில்லா மல்போனதுடன், அரசரின் திட்டங்கள் அத்தனையையும் அழித்தொழித்துவிட்டது.[15] அதுதோல்வியாக இருந்தாலும்கூட, சிக்கதேவராயரின் புத்திசாலித்தனமான நீர்ப்பாசனத் திட்டம் நவீன யுகத்தின் குறிப்பிடத்தக்க, மிகப்பெரிய தொழிற்நுட்பமாகும். ஆயினும், அவரது அம்முயற்சி, மதுரை - தஞ்சாவூர் நாடுகளுக்கு இடையில் புதிய உறவு வலுபெற, காரணமாக அமைந்தது.

**மறவர்களுடனான நடவடிக்கைகள்** - மதுரை ராஜ்ஜியத்துக்குக் கட்டுப்பட்டிருந்தாலும், நாளொருவண்ணம் பொழுதொரு வளர்ச்சியுமாக கிழவன் ரகுநாதசேதுபதியின் எதிர்நடவடிக்கைகள் பெருகிக்கொண்டே இருந்தன. அடங்காமல் ஆர்ப்பரிக்கும் அவரது செயல்பாடுகளை ரங்க கிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் கட்டுக்குள் கொண்டுவருபவராக இருக்கவில்லை. தனது நிர்வாகத்தில் ரகுநாத சேதுபதி சுதந்திரக் கொள்கையைக் கடைப்பிடிப்பவராக ஆகியிருந்தார். கிறிஸ்தவத்துக்கு எதிரான அட்டூழிய நடவடிக்கைகளில் ஈடுபட்டு, உச்சமாய் ஜான் டி பிரிட்டோவைக் கொல்லத் துணியுமளவுக்கு, மறவர் ராஜ்ஜியம் வளர்ந்திருந்தது. பிரிட்டோ அடைந்த துன்பங் களும் துயரங்களும் அவரை மதுரையின் கட்டுப்பாட்டிலிருந்து விலகும் சந்தர்ப்பத்தை உருவாக்கிக் கொடுத்தது. 1700ஆம் ஆண்டின் மார்டின் கடிதம், மறவர்கள் சுதந்திரமாகச் செயல்படுத்தும் நடைமுறைகளையும் விரும்பும்போது, மதுரைக்குத் திறை செலுத்தும் நடவடிக்கைகள் குறித்துப் பேசுகின்றது.[16] மேலும் அது, '1698ஆம் ஆண்டில் மறவர்படை மதுரையை முற்றுகையிட்ட தாகவும், பின்னர் கைப்பற்றியதாகவும், அதை சிலகாலம் தனது கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்ததாகவும் பேசுகின்றது. அவர்களை மதுரையிலிருந்து நரசப்பையா விரட்டிவிட்டதாக'க் குறிப்பிடுகின்றது.

1700ஆம் ஆண்டில் தஞ்சாவூரின் ஷாஜியுடன் மதுரை ஆட்சியாளர் மங்கம்மாள் போர் தொடுத்தார். அப்போது சேதுபதி, ஷாஜிக்கு ஒத்துழைப்புக் கொடுத்தார். அதை மனதில்வைத்துக் கொண்டு, 1702ஆம் ஆண்டில் மங்கம்மாள், சேதுபதிக்கு எதிராகப் போரைத் தொடர்ந்தார். இப்போது தளவாய் நரசப்பையா, தஞ்சாவூரின் உதவியைப் பெற்றிருந்தார். வலுவான மதுரைப் படை மறவர் நாட்டுக்குள் புகுந்தது. சேதுபதி தானும், களம்புகும் ஆர்வத்தில்

தயாராகவே இருந்தார். அப்போரில் தளவாய் நரசப்பையா எதிர்பாராது தன்னுயிரை இழந்தார். தொடர்ந்து பல ஆண்டுகளாகப் போரில்ஈடுபட்டிருந்த மதுரைப்படை தோல்வியைத் தொட்டது. மேலாக, சேதுபதியின் படை ஒத்திசைவும், ஆற்றலுமாகப் பலங்கொண்டிருந்தது. போருக்காகவே தயாரிக்கப்பட்டவர்களைக் கொண்டதாக மறவர் படை இருந்தது. ஒட்டுமொத்த நாடும் கட்டுக்கோப்புடன் இருந்தது. ஒரே வாரத்துக்குள் 30,000 அல்லது 40,000 வீரர்களைத் திரட்டிவிடும் செல்வாக்கு மிக்கவராய் சேதுபதி திகழ்ந்தார். இந்த எண்ணிக்கையும் அவர்களின் உள்ளார்ந்த மேன்மையும் மிகமுக்கியக் காரணமாக இருந்து, மதுரையிடமிருந்து சுதந்திரத்தை மீட்டெடுத்தது. மங்கம்மாள், தனது படைபலத்தை பல்வேறு நடவடிக்கைகளில் ஈடுபடுத்தி, ஆற்றலை வீணாக்கி யிருந்தார். மற்றும் பலதரப்பட்ட விருப்பங்களைக்கொண்ட மக்களை உள்ளடக்கியக் கலவையான படையாக அது இருந்தது. 1702 ஆம்ஆண்டில், மதுரைமீது கடுமையான கண்ணோட்டத்தைக் கொண்டிருந்த கிழவன் சேதுபதி, தன்னை சுதந்திரமான ஆட்சியாளராக அறிவித்துக்கொண்டார்.[17] விரைவிலேயே ராம்நாட்டின் அரண்களையும் பலப்படுத்திக் கொண்டார். 1709ஆம் ஆண்டில் பஞ்சத்தாலும் புயல்வெள்ளத்தாலும் தனிமைப்படுத்தப் பட்டிருந்த நிலையிலும், தனது எல்லைக்குள் புகுந்த தஞ்சாவூர்ப் படையைத் தோற்கடித்தார்.[18] தஞ்சாவூர்ப் படை அமைதி உடன்படிக்கைக்குக் கெஞ்சி முறையிட்டது. தஞ்சாவூருக்குச் சொந்தமாகயிருந்த வலுவானக் கோட்டையான அறந்தாங்கியையும் சேதுபதி கைப்பற்றினார்.[19] தன்னிடம் நில உரிமைப் பெற்று, பின்னர் கிளர்ச்சியில் ஈடுபட்டுக்கொண்டிருக்கும் சேதுபதியை அடக்கி யாளும் முயற்சியில் மங்கம்மாள் தோற்றுப்போனார். மங்கம்மாளின் மரணத்துக்கு முன்பே ராம்நாட், தனி நாடாக ஆகியிருந்தது.

**கிறிஸ்தவம்** - இந்தக்காலகட்டத்தில் கிறிஸ்தவம் வரையறுக்க வியலாத ஒரு கயமை நிலையை அனுபவித்தது. அக்காலகட்டத்தில் மிகவும் குறிப்பிடத்தக்கப் பணியாக பிரிட்டோ வின் வலிமையானப் பிரச்சாரம் தொடர்ந்தது. ஆனால், சோகமானத் தோல்வியில் முடிந்தது. மறவர் நாட்டில் கிறிஸ்தவத்தைப் பரப்பிய டி பிரிட்டோ, ரகுநாத சேதுபதியின் மிரட்டலால் வேறுவழி யில்லாமல் பின்வாங்கியிருந்தார். ஆனால், அவர் பயந்துவிட வில்லை. எதிராளியின் அட்டூழியங்களுக்கு இடையிலும், அவரதுபணி தொடர்ந்துகொண்டுதான் இருந்தது. எதிரிகள், கொள்ளைக்காரர்கள் மற்றும் விலங்குகள் ஆகியவற்றிடமிருந்து தொல்லைகள் அவருக்கு வந்துகொண்டேயிருந்தன. பணியாற்றியக் காலம்முழுவதும், அவர் ஏதோ ஒன்றை சந்தித்துக்கொண்டே

இருந்தார். கொள்ளைநோய், கடும்புயல், வெள்ளம் மற்றும் சீற்றம்கொண்ட விலங்குகள் ஆகியவற்றிற்கிடையிலும் உயிர் பயமில்லாமல் பணியாற்றினார். வணக்கத்திற்குரிய இடம் அல்லது பலிபீடத்தில் தனது இன்னுயிரைக்கொடுக்கத் தயாராக இருந்தாரே யொழிய, ஒருபோதும் பின்வாங்கியவராக இருக்கவில்லை. பெரும்எண்ணிக்கையிலான மக்களை அவர் மதம்மாற்றினார். ராம்நாட் அரியணைக்கு வாரிசு எனக்கூறப்பட்ட இளவரசர் தடியத்தேவரை, கிழவன் சேதுபதியின் கண்காணிப்பையும்மீறி மதம் மாற்றுவதில் வெற்றிகண்டார். தடியத்தேவரின் இளையமனைவி கிழவன் சேதுபதியின் கொழுந்தியாள். மதம்மாறியதும் இளையமனைவியை தடியத்தேவர் கைவிட்டுவிட்டார். கணவனால் கைவிடப்பட்ட நிலைகண்டு வெகுண்ட அப்பெண், பிரிட்டோவை மன்னிப்பவளாக இல்லை. தனது அக்காள் கணவன், தனது மூத்த மச்சான் கிழவன் சேதுபதியின் அரசசபைக்கு ஓடினாள். தனக்கு விதியாய் நேர்ந்துவிட்ட சங்கடத்தை அழுதுதீர்த்தாள். உடனே கிறிஸ்தவத்துக்கு எதிரானவர்கள் எல்லாம் ஒன்றுகூடினார்கள். கிழவனின் மனதை மாற்றினார்கள். பிரிட்டோவுக்குக் கடும்தண்டனை வழங்கவேண்டு மென்று உசுப்பேற்றினார்கள். கிறிஸ்தவர்களின் நடவடிக்கைகளால் நாடு அழிந்து கொண்டிருப்பதாகவும் பெருமளவில் மக்கள் கிறிஸ்தவத்தைத் தழுவுவதால் அவர்களின் எண்ணிக்கைப் பெருகி, கிழவனின் அரசநிலையில்கூட ஒருநாள் இடர்ஏற்பட்டு, தடியத்தேவரை அவர்கள் அரசனாக்கிவிடுவார்கள் என்று குறிப்பிட்டுப் பேசினார்கள். அதில் பெரும்உத்வேகம் பெற்ற கிழவன் சேதுபதி, மதச்சார்புநோக்கியப் பற்றை விட்டுவிடும் அளவுக்கு, பிரிட்டோவுக்கு கடும் துன்பங்களைக் கொடுக்க முயற்சித்தார். அதற்கெல்லாம் கிஞ்சிற்றும் அசைபவராக பிரிட்டோ இருக்கவில்லை. மாறாக, மதம்மாற்றும் புகழொளியில் அவர் மீண்டும்மீண்டும் ஈடுபட்டார். எதிராளியாக இருந்த தடியத் தேவரின் செல்வாக்கால், தனது பட்டம் பறிபோய்விடுமோ என்ற அச்சமும் அலைக்கழித்து, முன்னேற்றத்தை நோக்கிய இடத்தி லிருந்து நழுவிக்கொண்டேயிருந்தார். அதனால், தனது கோபம், பழி, ஆங்காரம் அனைத்தையும் பிரிட்டோமீது திருப்பினார். தனது சாம்ராஜ்ஜியத்துக்குள்ளிருக்கும் அத்தனைப் பேராலயங்களையும் இடித்துநொறுக்கும்படியும் பிரிட்டோவைக் கைதுசெய்யும்படியும் உத்தரவிட்டார். 1693ஆம் ஆண்டு ஜனவரி, 8 ஆம் தேதி கைது செய்யப்பட்ட பிரிட்டோ, 11ஆம் தேதி ராம்நாட்டுக்கு கொண்டு வரப்பட்டு, சிறையில் அடைக்கப்பட்டார். அந்தநேரத்தில் தடியத்தேவர் மறவநாட்டுத் தலைநகரில் தங்கியிருந்தார். அவரது

செல்வாக்கு, பிரிட்டோவுக்கு உறுதிசெய்யப்பட்ட தண்டனையை நிறைவேற்றுவதில் தாமதத்தை ஏற்படுத்தியது. சேதுபதி, தனது முடிவை செயல்படுத்தமுடியாமல் அல்லாடினார். பெரிய அளவிலான மதம்மாறியிருந்த கிறிஸ்தவ மக்கள் எண்ணிக்கையும், பிரிட்டோவின் விதியை நிர்ணயிப்பதில் மிகமுக்கியப்பங்கு வகித்தது. அதனால் சமயோசிதமாக சேதுபதி, பிரிட்டோவை சாதாரணமாக நாடுகடத்துவதுபோல, தனது சகோதரனின் நாட்டுக்குக் கடத்திவிட்டார். ஆனால் ரகசியமாக தனது சகோதரனிடம், பிரிட்டோவைக் கொன்றுவிட உத்தரவிட்டிருந்தார். மறவநாட்டு எல்லைக்குள், பாம்பாற்றின் கரையில் அமைந்திருந்த ஓரியூருக்கு, அனுப்பி வைக்கப்பட்டார். அந்தஇடத்துக்கு, ஜனவரி, 31 ஆம்தேதி பிரிட்டோ வந்துசேர்ந்தார். அவருக்கு விதிக்கப்பட்ட தண்டனை நிகழ்வுகள் குறித்து, 1693 ஆம் ஆண்டு பிப்ரவரி, 3 ஆம்தேதியிட்டு சிறையிலிருந்து அவர் எழுதியக் கடிதம், 'ஜனவரி, 28ஆம் நாள், எனக்குத் தீர்ப்பளிக்கப்பட்டு, ரங்கநாத தேவன் முன்னிலையில் தூக்கிலிட அனுப்பிவைக்கப்பட்டுள்ளேன். .....நான் கிறிஸ்தவர்களிடமிருந்து பிரிக்கப்பட்டிருக்கின்றேன். சேதுபதியின் சகோதரன் ஓரியூர் தேவனுக்கு, 'தாமதமில்லாமல் என்னைக்கொன்றுவிட' ரகசிய உத்தரவு கொடுக்கப்பட்டுள்ளது. ஜனவரி, 31ஆம் தேதி இங்கு கொண்டுவரப்பட்டேன்...... எனதுமரணத்தை எதிர்நோக்கிக் காத்திருக்கின்றேன். அதைத்தான் எனது பெருவிருப்பமாகக் கொண்டிருக்கின்றேன். எனது பணிக்கும், தியாகத்துக்கும் அதுதான் மிகச்சிறந்த ஈடுசெய்யும் உழைப்பூதியம். உண்மைக் கடவுளின் அன்பைப் போதித்ததற்கு, என்மீது எல்லாக் குற்றங்களும் சுமத்தப்பட்டிருக்கின்றன. காவலர்கள் என்னைக் கண் காணித்துக்கொண்டே இருக்கின்றார்கள். என்னால் அதிகமாக எழுத முடியாது......' என்று தெளிவுபடுத்துகின்றது.[20] உத்தரவை நிறைவேற்றுவதில் சிலதடைகள் இருக்கத்தான் செய்தன. ஓரியூர் தேவனின் மனைவி ஒருகிறிஸ்தவப் பெண்ணாக இருந்தார். அவர் தன்னால் முடிந்தமட்டுக்கும் பிரிட்டோவை மீட்கப் போராடினார். ஆனால், முதன்மை அமைச்சராக இருந்த முருகப்பப்பிள்ளை, கண்மூடித்தனமான கிறிஸ்தவ எதிர்ப்பாளர். 1693ஆம் ஆண்டு பிப்ரவரி, 4ஆம் தேதி தண்டனையை நிறைவேற்ற அவர் 'சாடை' காட்டிவிட்டார். அப்போது முதன்மை அமைச்சர் வெளியிட்ட உத்தரவு. 'இந்த மதகுரு (பிரிட்டோ), நமது கடவுள்களைக் கும்பிடுவதைத் தடுக்கின்றார். நாடுமுழுவதும் மக்கள் திரள்முன் பிரசங்கம்செய்து, அவர்கள் மனதை மாற்றி, மதம் மாற்றிவிடு கின்றார். மன்னரின் பெயரால், இவரது தலையை வெட்ட உத்தரவிடுகின்றேன்'.[21] பிரிட்டோ கொல்லப்பட்டார். அவரது

உடல்கொடூரமாகச் சிதைக்கப்பட்டு, வல்லூறுகளுக்கு இரையாக்கப் பட்டது.[22]

ஜான் டி பிரிட்டோவின் மரணத்தை நெல்சன், 'கணிசமாக முன்னேறிச் சென்றதால், கிறிஸ்தவத்துக்கு ஏற்பட்டக் காயம்' என்று உண்மையைப் பதிவுசெய்கின்றார். அதேவேளையில் கிழவன் சேதுபதியின் நேர்மை மற்றும் வாய்மையைக் கணக்கில் கொண்டால், கிறிஸ்தவத்தை வேரறுக்கும் செய்கையில் அவர் ஈடுபட்டது தொடர்பாகக் கேள்வி எழுப்புவது, கடினமான ஒன்றாக இருக்கின்றது. தனது கிரீடத்தைப் பாதுகாத்துக் கொள்ளவும், அரசின்பேரிலான விருப்பத்திலும் இதுபோன்ற கடினமானக் கொள்கைகளை எடுக்கவேண்டியது அவசியம் என்று சேதுபதி நம்பியதும் கவனிக்கப்பட வேண்டியதாக உள்ளது. என்ற போதிலும், சேதுபதியின் கணக்குகள் எல்லாமே தவறாகிப்போயின. பிரிட்டோவின் மரணத்துக்குப் பின்பு, மறவர் நாட்டில் கிறிஸ்தவம் முன்னெப்போதுமில்லாத அளவில் தழைத்தோங்கியது.

1700ஆம் ஆண்டு ஜுன், 1ஆம் தேதியிட்ட மார்டினின் கடிதம்,[23] 'கிறிஸ்தவர்கள் மீதான தாக்குதல், சிலவேளைகளில் தனிப்பட்டத் தாக்குதலாக நடத்தப்பட்டதை' விவரிக்கின்றது. பாதிரியார் பெர்னார்ட், கடுமையாக அடித்துநொறுக்கப்பட்டுள்ளார். அவருக்கு பற்கள்கூட, உடைந்துபோயின. அவரது உதவியாளர்கள் கருணை யற்று சித்ரவதைக்கு ஆளானார்கள். கசையடிகளைப் பெற்றார்கள். அந்தநேரத்தில் மக்களின் உணர்ச்சிநிலை, கிறிஸ்தவத்துக்கு எதிரானதாக இருந்தது என்று, அது கூறுகின்றது. 1700 ஆம் ஆண்டுவரையில் அதாவது, பிரிட்டோ கொல்லப்பட்டு ஏழெட்டு ஆண்டுகள் ஆன பின்பும், தனது சாம்ராஜ்ஜியத்துக்குள் கிறிஸ்தவத்தை வேரோடு பிடுங்கியெறியும் கொள்கையிலிருந்து சேதுபதி மாறவேயில்லை. படிப்படியாக நிலை மாறியது. கொல்லப்பட்ட பிரிட்டோவின் எஞ்சிய ஆவி, பலகற்பிதமான அற்புதங்களை நடத்தியதாகப் பேசப்பட்டது. ஓரியூர் தேவனும், அவரது அமைச்சரும், பிரிட்டோ கொலைசெய்யப்பட்ட சிலநாட்களிலேயே இறந்துபோனது, அந்தக்கற்பனைக்கு மிகவும் துணையாக இருந்தது. இதையடுத்து கிறிஸ்தவத்தின்மீது மக்களுக்கு ஒருவிதப்பரிவு உண்டானது. இதுவரை அட்டூழியம் செய்துவந்தவர்களை இந்தச்செயல்கள் முடக்கிப்போட்டன. அந்தநிலையில் சேதுபதியின் மூத்தமகன் வடுகநாதத் தேவரின் நட்பான அணுகுமுறை, கிறிஸ்தவத்தை மீண்டும் அங்கே துளிரச்செய்தது. திருச்சபை அமைப்புகள் மனதைரியம் பெற்று, மறவர் நாட்டுக்குள் நுழைந்தன. பதினெட்டாம் நூற்றாண்டின்

முதல்பத்தாண்டுகளில் கிறிஸ்தவத்துக்கு ஆள்பிடிப்பது படிப்படியாக உயர்ந்தது.

ராம்நாட் நாட்டுக்குள் கிறிஸ்தவம் பலதரப்பட்ட அனுபவ முறைகளைக் கொண்டிருந்தாலும், மதுரையில் அதுபெரிய அளவிலான சுதந்திரத்தைப் பெற்றிருந்தது. மங்கம்மாள் கிறிஸ்தவப் பிரசங்கிகளிடம் சகிப்புத்தன்மையைக் காட்டினார். கிறிஸ்தவ மக்களிடம் தயாள சிந்தை உள்ளவராக நடந்துகொண்டார். 1691ஆம் ஆண்டின் துவக்கத்தில், மறவர் நாட்டுச் சிறையில் மரண தண்டனைக்காகக் காத்துக்கொண்டிருந்த பங்குத்தந்தை மெல்லோவை, விடுதலைசெய்யச் சொல்லி உத்தரவிட்டிருந்தார். மதுரைத் திருச்சபைகளிலும்கூட அவரவர்க்கேற்ப சச்சரவுகள் இருந்துவந்தன. பாதிரியார் பௌச்சட் தார்மீகக் கடமை தவறிய கிறிஸ்தவ அந்தணர்கள் மூன்றுபேரை, சபையிலிருந்து வெளியேற்றியிருந்தார். வெளியேற்றப்பட்டவர்கள் கிறிஸ்தவத்துக்கு எதிரானவர்களுடன் சேர்ந்துகொண்டனர். அப்படியே திருச்சபைகளுக்கு கெட்டபெயர் உருவாக்கும் வகையில், எதிரான நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். திருச்சபை மீது பல்வேறு குற்றச்சாட்டுகளும் அடுக்கப்பட்டன. அவற்றில் முக்கியமான சில: (1) அவர்கள் பரங்கியர்கள். (2) அவர்கள் அரசாங்கத்துக்குச் சுமையானவர்கள். அவர்களால் அரசாங்கத்துக்கு எந்தவொரு வருமானமும் இல்லை. இத்தனைக்கும் அவர்களுக்கு அதிகஅளவிலான வருமானம் இருக்கின்றது. (3) அவர்கள் சமயத் துறவியொருவரைக் கொன்றவர்கள். இந்தக் குற்றச்சாட்டுக்களால் பாதிரியார் பௌச்சட் மிகுந்த கவலைக்குள்ளானார். ஆயினும் துணிந்து, தளவாய் நரசப்பையாவைச் சந்திக்கச் சென்றார். நரசப்பையாவுக்கு ஐரோப்பியர்கள் என்றாலே ஆகாது. அவரிடம் பணியிலிருந்த மிகச்சிறந்த தகுதியும், திறமையும்கொண்ட பீரங்கி வீரர்களை, அவர்கள் ஐரோப்பியர்கள் என்ற ஒரு காரணத்தால், போர் நடந்துகொண்டிருக்கும்போதே பணியிலிருந்து நீக்கியவர். பௌச்சட் தனித்திறம் கொண்ட வேலைப்பாடுகளால் ஆனப் பரிசுப் பொருட்களை தன்னுடன் எடுத்துச்சென்றார். மதுரையை ஆண்ட அமைச்சர்களில் முன்னெப்போதுமில்லாத அளவில் புகழ் பெற்றிருந்த தளவாய், அவரை எதிர்கொண்டு முக்கியத்துவம் கொடுத்து அழைத்துப்போனார். அரசவை சடங்குமுறைமைகள் முடிந்த நிமிடத்திலேயே, தன்மீது எழுப்பப்பட்ட பழிபாவம் குறித்த சந்தேகங்களுக்கு இடமளிக்காதவகையில், பௌச்சட் தன்னை வெளிப்படுத்திக்கொண்டார். அப்படியே, தளவாய்க்குத் தன்னைப் பிடிக்குமளவில் தேர்ச்சித்திறத்துக்கு உகந்தவராய் ஆக்கிக்கொண்டு, நரசப்பையாவின் வீரதீரங்களையும்,

வெற்றிகளையும் குறிப்பிட்டுப் புகழ்பாடினார். கிறிஸ்தவச் சட்டங்கள் குறித்த சிறப்புகள், முக்கியத்துவங்களை எடுத்துக்கூறி, குடிமக்கள் எல்லோரும் தங்கள் இறையாண்மையின்கீழ் நிழலாடுகின்றனர் என்று பாராட்டு மழையில் நனைத்தார். ஈரம் சொட்டச்சொட்ட நனைந்த தளவாய், இப்போது பௌச்சட்டைப் பாராட்டத் தொடங்கினார். அப்படியே அவரது வருகை குறித்து, அரசிக்குத் தெரியப்படுத்தினார். மங்கம்மாள், தனது நன்றியைத் தெரிவிக்குமாறு அமைச்சரிடம் சொல்லி அனுப்பினார். அவரதுகோரிக்கைகள் அத்தனை யும் நிறைவேற்றிக்கொடுக்கும்படி உத்தரவிட்டார். அரசியின் வாழ்த்துகளை தளவாய், அரசசபை யிலேயே வெளிப்படையாக அறிவித்தார். பௌச்சட், தளவாய்க்குக் கடமைப்பட்டிருப்பதாகத் தெரிவித்து, மீண்டும் ஒருமுறை கிறிஸ்தவ மதத்துக்கு அரச பாதுகாப்பு கேட்டுக்கொண்டு புறப் பட்டார். சந்திப்பு முடிந்ததும், தளவாயின் உத்தரவின்பேரில் பாதிரியார் பௌச்சட், ஊர்வலமாக பெரும்ஆடம்பரத்துடன் நகர்முழுவதும் நான்கு கல்தொலைவுக்கும் அதிகமான தூரம் அழைத்துச்செல்லப்பட்டு, பின்னர் அவரது இருப்பிடம் சேர்க்கப்பட்டார். வெற்றிகரமாக முடிந்த இந்தச் சந்திப்பு தந்த உத்வேகம், பௌச்சட்டின் அடுத்த நடவடிக்கைகளுக்குப் பலமாக இருந்தது. தனக்கெதிராக சமயத்துக்குள்ளே செயல்பட்ட பகைவர்களை எளிதில் கையாண்டார். சமயப்பகைவர்கள் குறித்தச் சுற்றறிக்கையொன்றை அவர் உத்தரவாக வெளியிட்டார். ஒருவர் மட்டும் பாதிரியாருக்கு எதிரான நடவடிக்கைகளில் தொடர்ந்து ஈடுபட்டுக்கொண்டிருக்க, இருவர் மீண்டும் கிறிஸ்தவ மதத்துக்குள் வந்துவிட்டனர். கிறிஸ்தவத்துக்கு எதிராக வீசிக்கொண்டிருந்த அச்சுறுத்தல்கள், பௌச்சட்டின் திட்டமிட்ட சமயோசித முயற்சிகளால் தவிர்க்கப்பட்டன.[24]

பாதிரியார் பௌச்சட்டுக்கும் தளவாய் நரசப்பையாவுக்கும் இடையிலான இந்தச் சந்திப்பின் வெற்றி, அதனால் அரசசபையில் எதிரொலித்த மரியாதை ஆகியவற்றை, மார்டின் ஒளிரும் சித்திரமாகக் குறிப்பிடுகின்றார். ஆனால் டெய்லர்[25] அதனை, 'ஒருதலைப்பட்சமான அறிக்கை. அந்தக்கடிதம் பெருமளவு உண்மையை வெளிப்படுத்தவில்லை; அக்கடிதத்தின் வேறு பலபகுதிகள் கேள்விக்குரியனவாகவும்; வேறுபல வேறு தரத்திலானதுமாக இருக்கும்' என்று மதிப்பிடுகின்றார். என்ற போதும், மங்கம்மாள் கிறிஸ்தவ திருச்சபையிடமும் அம்மக்களிட மும் கருணையுடன் நடந்துகொண்டார் என்பதுமட்டும் தெளிவாகத் தெரிகின்றது. அதை மானுச்சியின் கடிதங்களும் உறுதிசெய்கின்றன. தஞ்சாவூர் அரசரோ, தனது எல்லைக்குள் வசித்த கிறிஸ்தவர்களுக்கு

எதிராக, தான் எடுத்த நடவடிக்கைகளில் திருப்திகொள்ளாதவராக இருந்தார். இன்னும்இன்னும் அவர்களைத் துன்புறுத்தச்சொல்லி, தனது இளவரசர்களுக்கு உத்தரவிட்டார். மதுரை அரசி கிறிஸ்தவர்களுக்கு ஆதரவுகொடுத்ததுபோல, உடையார்பாளையம் அரசர் பெரிய அளவில் சாதகமாகவோ, பாதுகாப்பாகவோ இருக்க வில்லை. அதேவேளையில் தஞ்சாவூர் அரசர் கிறிஸ்தவர்களை நடத்தியதுபோல, கடுமையாகவோ, தீவிரமாகவோ நடத்த வில்லை. அப்போது தன் எல்லைக்குள்ளிருந்த இயேசு சபையைச் சேர்ந்த நான்கு மதப்பரப்புரையாளர்களை கைதுசெய்ய உத்தரவிட்டார். அத்துடன் அவரது ஆதரவாளர்களை எச்சரித்தார். கைது செய்யவில்லை. அவர்களின் பொருட்களெல்லாமே, அவரவர் இல்லங்களிலேயே பொருட்படுத்தப்படாமல் அப்படியேகிடந்தன. கிறிஸ்தவ மக்கள் பாதிப்பின்றி வசித்தனர்.[26]

அண்டை ஆட்சியாளர்கள் மற்றும் சேதுபதி ஆகியோர் கிறிஸ்தவத்துக்கு எதிராக நடந்துகொண்டதைப் போலல்லாமல், மதக்கொள்கையில் தைரியமாக, தெளிவாக இருந்தார் என்பது உறுதியாகின்றது.

**மங்கம்மாளின் குணாதிசியங்கள் மற்றும் பணிகள்** - மங்கம்மாள் ஒரு பெண் அரசியல்வாதி (femme politique). அவரது பன்மைத்திறம்கொண்ட ஆற்றலும், அரசியல் செயலாண்மைத் திறமும் நாயக்கவம்ச ஆட்சியின் ஆயுள்காலத்தை, அது கொண்டிருந்ததைக் காட்டிலும் அதிகமாகவே நீட்டிக்கச்செய்தது. பேரனுக்காக அவர் பொறுப்பேற்றபோது, அரசு பலவீனமாகவும், சிதைந்துபோயும் இருந்தது. எல்லாப்பக்கங்களிலும் ஆபத்து சூழ்ந்திருந்தது. முகலாயத் தலைமையை ஏற்றுக்கொண்டு, தனது ஆற்றலை வீணடிக்காமலும், வளமையும் செல்வமும் அவர்களிடம் போய்விடாமலும் நுட்பமாகத் தக்கவைத்துச் செயல்பட்டார். அதனால், சக்திமிக்க எதிரிகளை குறைந்த அளவிலேயே கொண்டிருந்தார். தவறிழைக்காத நீதியைக் கடைப்பிடித்து, அதைச்செயலாற்றுவதில் முனைப்பு காட்டினார். என்றபோதும் அவரை சேதுபதியின் அளவுக்கு ஒப்பிடமுடியாது என்பதை ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். அவர் பல போர்களை திறமையுடன் நடத்தி வெற்றிகளைக் குவித்திருந்தாலும், அவரிடம் குறிப்பிடத்தக்க சக்தியாக இருந்து செயல்பட்டவர் தளவாய், நரசப்பையா. அவரே மூலஆதாரம். திசைநடத்தும் கருவி. அந்தக் கால கட்டத்தில் இருந்த புயலார்ந்த நெருக்கடிகளைச் சமாளித்து, முன்னெடுத்துச்சென்ற மங்கம்மாளின் விவேகமான செயல்பாடுகள், அவரதுபெயருக்கு நன்மதிப்பைப் பெற்றுத்தருவனவாக அமைந்தன.

மங்கம்மாள் குறிப்பிட்டுச் சொல்லும்படியாக கிறிஸ்தவ மதத்துக்கு நிறைய காரியங்களை ஆற்றியிருக்கின்றார். அவர் எல்லாமதங்களையும் சமமாகவே பாவித்தார். முகம்மதியக் குடிமக்களை அவர் அந்நியராகப் பார்க்கவில்லை. 1692ஆம் ஆண்டின் தாமிரப்பட்டயமொன்று, முகம்மதிய மக்களின் பள்ளிவாசலொன்றை நிர்வகிக்க, பேரன் பெயரில் மங்கம்மாள் கொடை அளித்ததைக் குறிப்பிடுகின்றது.[27] 1701 ஆம்ஆண்டில் திருச்சினாப்பள்ளி அருகில் முகம்மதியர்களின் தர்ஹாவுக்கு, சிலகிராமங்களைக் கொடையளித்துள்ளார்.[28] இந்துக்களுக்கு எண்ணற்ற கொடைகளையும் தானங்களையும் வழங்கியுள்ளார். ஒரு தூயபக்தையாக, மற்றவர்களின் மத உணர்வுகளை அவர் பெரிதும்மதித்தார்.

கை தாராளத்துக்கும் மங்கம்மாளின் பெயர், பிரபலமான ஒன்று. பல கல்வெட்டுகள், கோவில்களுக்கும் பொது அறக்கட்டளை களுக்கும் அவர் வழங்கிய நன்கொடைகளைப் பேசுகின்றன. சாலைகள் அமைப்பதில் அவர் புகழ்பெற்றவராகவும் இருந்தார். கலையம்சமும் கம்பீரமுமான பல மாளிகைகளை பொதுப்பயன் பாட்டுக்காக அவர் கட்டினார். அவையெல்லாம் பிற் காலத்தில் அவர் பெயராலேயே அழைக்கப்பட்டன. அவற்றிலொன்று கோடை இல்லமாகக் கட்டுவிக்கப்பட்ட தமுக்கம் ஆகும். பாதசாரிகளின் பயன்பாட்டுக்காக, சாலைகள் ஓரங்களில் மரங்களை நட்டார். இளைப்பாறுதலுக்கு தங்குமிடங்கள் ஏற்படுத்தினார். வழியெங்கும் தண்ணீர் கிடைக்க ஏற்பாடுகள் செய்தார். 1701ஆம் ஆண்டின் கல்வெட்டு, இலவச உணவு வழங்கும் நிலையங்களுக்கு தானமாக நிலம்கொடுக்கப்பட்டதைக் குறிப்பிடுகின்றது.[29] அக்ரகாரங்களுக்கு அவர் அளித்த நன்கொடைகள், ஏராளம். நீர்ப்பாசனத்தின்மீது அவர் செலுத்திய அக்கறை மேலானது. 1687 மற்றும் 1704ஆம் ஆண்டின் உய்யகொண்டான் கால்வாய்க்கரையி லுள்ள கல்வெட்டுகள் பகர்கின்றன.[30] அவரது பெருந்தன்மையும் புகழ்பெற்ற ஒன்று. மைசூர் அரசர் சிக்கதேவராயர் போல அவர் கருமியாக இருக்கவில்லை[31] என்பது ஒப்புநோக்கத்தக்கது. அறக்கட்டளைகளை நிர்வகிப்பதில் பல்வேறுவிதமானக் கதைகள் பெருமளவில் மங்கம்மாளின் நோக்கத்தைக் குறைகூறும்வகையில் உலவுகின்றன. அவற்றைக் கருத்தில்கொள்ள வேண்டியதில்லை.[32]

**மங்கம்மாளின் மரணம்** - மங்கம்மாளின் மரணம் துயரம்நிறைந்த சூழலில்நேர்ந்தது என்று நெல்சன் குறிப்பிடுகின்றார். கடைசி இரண்டுமூன்று ஆண்டுகள் அவர் மக்களால் வெறுக்கப்பட்டவராக ஆகிப்போனார். அதற்குக் காரணமாக, தனது அமைச்சர் அச்சய்யாவுடன் முறையற்ற உறவு வைத்துக் கொண்

டிருந்தார் என்று கூறப்படுகின்றது. பேரன், பட்டத்துக்குரிய வயதை அடைந்தபின்னும், அவர் நிர்வாகத்தை விட்டுக்கொடுக்காதது, மேலும் அவரது செல்வாக்கைச் சரியச்செய்தது. அதன்விளைவாக, அவர் கைதுசெய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். கிரேக்க போர்வீரன் தண்டாலஸ்க்கு கொடுக்கப்பட்ட தண்டனைபோல, பட்டினிப் போடப்பட்டதாகவும், அதனால் அவர் உயிரிழந்த தாகவும் வாய்மொழிக் கதையாகச் சொல்லப்படுகின்றது.[33] ‘சொல்லப்படும் கதைகள் யாவும் பொருந்தக்கூடிய முகாந்தரம் கொண்டதாக இல்லை. கிடைக்கும் ஆதாரங்களைவைத்து எதையும் உறுதிப்படுத்திவிட முடியாது’ என்கின்றார், நெல்சன்.[34] இந்த ஆதாரத் தகவலை உறுதிப்படுத்த, அச்சய்யாவுக்கு வைக்கப் பட்ட சிலையும், மங்கம்மாள் அந்த ரகசிய நபருடன் மரபுக்குப் பொருந்தாத உடைகளுடன், நகைகள் அணிந்த பதுமையாக இருக்கும் முழுஅளவிலானச் சித்திரத்தை மறைமுகமாகப் பயன்படுத்துகின்றனர். சிலையையும் சித்திரத்தையும் வலுவான ஆதாரங்களாகக் கொள்ளமுடியாது. இந்த விவகாரத்தில், அவை அற்பமானதும் சந்தேகத்துக்கிடமான தகவல்களாக மட்டுமே கொள்ள முடியும். இந்தக்கதையின் மிகப்பொருந்தாத விஷயமாக, மங்கம்மாளை காதல்சூழ்ச்சிக்குள் இக்கதைகள் வீழ்த்தும்போது, அவர் ஐம்பத்தைந்து வயதைத் தாண்டியிருந்தார்.[35] இயேசு சபை நிர்வாகம், மங்கம்மாளின் இயற்கையல்லாத மரணத்தைப் பற்றிச்சொல்வதற்கில்லை என்று குறிப்பிடுகின்றது. ஆதாரங்களாகக் கிடைக்கப் பெற்றவையெல்லாம், மங்கம்மாள் துயரம்நிறைந்த சூழலில் இறந்தார் என்பதற்குப் போதுமானவையாக இல்லை.

பேரனுக்குப்பதிலாளாக மங்கம்மாள் பதினெட்டுஆண்டுகள் ஆட்சிசெய்ததாக, திஹிஸ்டரி ஆஃப் தி கர்நாடகா கவர்னர்ஸ், சப்ளிமென்ட்ரி மானுஸ்கிரிப்ட் மற்றும் மெக்கன்ஸி மானுஸ்கிரிப்ட் ஆகியவை குறிப்பிடுகின்றன.[36] மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி பத்தொன்பது ஆண்டுகள் என்கின்றது. பாண்டியர்கள் வரலாறு வெறுமனே பன்னிரெண்டு ஆண்டுகள்தான் என்கின்றது. அதைக்கணக்கிடும்போது, பதிலாளாக மங்கம்மாள் ஆட்சிசெய்தது, 1700 ஆம் ஆண்டில் முடிவுக்கு வந்திருக்கும். இந்தப்பார்வை, கல்வெட்டு மற்றும் இயேசு சபையின் ஆதாரங்களுக்கு எதிரானதாக இருக்கின்றது. என்றபோதும், அவரது மரணம், மைசூர் அரசர் சிக்கதேவ ராயரின் மரணத்துக்குப் பின்பே நேர்ந்திருக்கிறது என்பது தெளிவாகின்றது.[37] மங்கம்மாளின் கல்வெட்டொன்று 1706-07 ஆம் ஆண்டுகளைச் சேர்ந்ததாக இருக்கின்றது.[38] 1700ஆம் ஆண்டில் மங்கம்மாள் ஆட்சியாளராக இருந்தார் என்பது சந்தேகத்துக்கு இடமளிக்கவில்லை.[39] அதன்படி, 1706ஆம் ஆண்டில் மங்கம்மாள்

இறந்ததாக வரலாற்று ஆவணங்களின் அடிப்படையில் உறுதியாகின்றது.[40] அந்தவகையில் அவரது பதிலாள் ஆட்சி, பதினெட்டு ஆண்டுகள் நீடித்திருந்தது.[41]

## அடிக்குறிப்புகள்

1. No doubt popular sentiment was the ruling motive in the performance of sati but it was not obligatory on any except young childless widow without a legitimate protector to go to. Mangammal could hardly be brought under the category in respect of any of the conditions involved – Ed
   Taylor, O.H.MSS, ii, pp.216-7; Bertrand, iv, pp.206-7, Vide Appendix A, Letter No.12
2. Scott;s Fershta, ii, p.81; Wilks, i, p.59
3. Storia do Mogar, iii, p.411
4. Ibid., ii, p.444
5. Appendix D, No.202
6. Wilks, i, pp.58-60
7. This may be Umayamma Rani The Queen Regent (1677-84)
8. Taylor, O.H.MSS., ii, p.215
9. This referactory attitude may have commenced with the accession of Ravi Varma (1684-1718)
10. Bertrand, iv, pp.18-20 Lockman, i, pp.367-70. Tide Appendix B, Letter No.2
11. Appendix D, No.204
12. Nelson (p.225) identifies this plafe with quilon. But from the Jesuit letters it is clear that it was not far from the borders of the kingdom of Travancore. Nieuhoff the Kingdom of Madura, and it may be the same as Korkulam. The proper from was probably Kalkulam.
13. Taylor, O.H.MSS, ii, p.224
14. Bertrand, iv, pp.120-2; Lockman, ii, pp.285-7. Vide Appendix B, Letter No.4
15. Bertrand, iv, pp.182-3; Lockman, ii, pp.300-301, Vide Appendix B, Letter No.4 Chikkadevaraja Udaiyar of Mysor was essentially a great constructive administrator. This Magnificant effort at irrigation was concentrated upon the irrigation canal, which even now goes by the name Chikkadeva raja Sagara and is and exceeding by fruitful undertaking as it is the source of the fertility of a considerable position of the district of Mysore. The canal takes off from the Kaveri where the level of the river is high; it is then carried over the side of a hill. where it rises to some height and

after proceeding a certain distance is led in to the Kaveri again at a point where the river runs a great deal below the level of the ground. It is acknowledged generally that the idea of controlling the floods of river at the head of the detla and making use of the water for purposes of irrigation was probably originated by the Hindus and the Kaveri anicut is noe of the earliest known instances. Chikkadevaraj's canal was only a further development of the idea and need not be considered impossible even for eighteenth century India. It was no doubt an anticipation of the great project at Kannambadi now; there is nothing original in the idea of the Kannambadi dam. Its magnitude no doubt is great and the benefit derived thereform may be far greater, but the underlying principle is the same – Ed

16. Lockman, i, p.453, Vide Appendix B, Letter No.3
17. Bertrand, iv, pp.186 and 200
18. Ibid, pp.200-201
19. Ibid, p.228
20. Bertrand, iii, p.447
21. Ibid, p.448
22. For a complete life of Britto, sec Ibid., pp.405-55; Nelson pp.217-25
23. Bertrand, iv, pp.64-5 , Lockman, i, pp.387-8, Vide Appendix B, Letter No.2
24. Bertrand, iv, pp.72-81; Lockman i, pp. 459-69, Vide Appendix B, Letter No.3
25. O.H.MSS, ii, p.227
26. Storia do Mogor, iii, pp.332-3
27. Appendix D, No.198
28. Ibid, No.210
29. Ibid, No.209
30. Ibid, Nos, 195 and 211
31. Taylor, O.H.MSS, ii, pp.224-6
32. Ibid, p.224; Nelson, p.216
33. Taylor, O.H.MSS, ii, p.226
34. p.237
35. In 1682 Ranga Krishna Muttu Virappa was accoriding to the Jesuit letters, fifteen years old, and therfore Mangammal must have been at least past thirty then and hence in 1705 she would be about fifty or fifty five
36. Taylor, O.H.MSS., ii, p.229
37. Ibid, pp.225-6

38. i, p.131
39. Appendix D, No.212
40. Appendix D, No.214
41. Mr.Rangachari's account of Mangammal is not without errors common to his history. With regard to her administration, he makes the following statements Mangammal carried on the affairs of state with a remarkable capacity for fifteen years after his (Ranga Krishna Muttu Virappa's) death, 'she could hardly fill his place. The 18th century was not an age for the rule of women India... (for) the mild sceptre of a women. Mangammal was one among a million women she failed to secure the independence of her state from Mughal domination' (I.A., 1917, p.124). later on Mr.Rangachari remarks that endowed, with many masculine virutes, she proved a politician og no mean talents. For a space of seventeen years (1689-1705) she conducted the affairs of state in such excellent spirit that her regency became if not a model of good government, at least strong enough to secure order within the state and victory aboard. She ahd a certain vigour and independence of character which ensured the security of her reign and the discomfiture of her enemies.. The real work of consolidation... devoted on Mangammal. And she proved not unequal to the task. Her remarkable vigour made her regency, when compared with that (sic) og her predecessors one of tranquality and progress. During the period of 15 years during which she swayed the destinies of Madura... (Ibid., pp.157-8) Thus Mr.Rangachari's estimate of Mangammal's achivements, and the period he ascribes to her rule have varying connotation and denotation. Further, he places the commencement of Vijayaranga Chokkanatha's rule in 1706 (Ibid. p.186). Therefore Mangammal is said to have charecteristic of Mr.Rangachari's work is his attempt to express final judgements on historical questions, as is attested by his statement that the true cause and excuse of Mangammal's death, therfore, is, and is ever llikely to be, a mystery' (Ibid., p.185) Moreover, he does not avoid exhibiting the views in his own language, of a historian whose views are of a most unreliabel nature. (Ibid.,p.184) Mr.Rangachari seems to be an inveterate lover of romance and does not try to exricate history from its clutches.

## 13

## விஜயரங்க சொக்கநாத நாயக்கர் (1706-1732)

விஜயரங்க சொக்கநாத நாயக்கர், 1706 ஆம்ஆண்டில் மதுரை நாட்டின் ஆட்சிக்கடிவாளத்தைப் பிடித்தார். அப்போது நாடு, துயரங்களாலும் துன்பங்களாலும் தத்தளித்துக் கொண்டிருந்தது. பல்வேறு நெருக்கடிகளும் அழிவுகளும், அதுவரை மதுரை சேகரித்து வைத்திருந்தப் புகழை, இழிவுநிலைநோக்கி நகர்த்திச்சென்றது. நாட்டு விவகாரங்களில் அக்கறையற்றுப்போன அரசரின் எழுச்சியற்ற நிலை, வேறுவேலைகளில் அவர் காட்டிய ஈடுபாடு, அமைச்சர்கள் தன்னிச்சையாகச் செயல்பட அனைத்துவழிகளையும் திறந்துவிட்டது. சீர்கேடான அவ்வாளுகை நாடு சீர்கெட்டுப்போவதை கண்முன்னே நிகழ்த்தியது. மத்திய நிர்வாகத்தின் பலவீனம், அதன் கட்டுப்பாட்டிலிருந்து விலகும்போக்குக்கு வலுவாக ஊக்கமளித்தது. உயர்அதிகாரிகள் பேராசைக் கொண்டவர்களாகவும் அரசு இயந்திரத்தை நிர்வகிக்கும் திராணியற்றவர்களாகவும் ஆகிப்போனார்கள். அநீதியும், அட்டூழியமும், கொடுமையும், அடக்குமுறையுமாக, மக்களைப் பெருந்துயரத்துக்கு உள்ளாக்குவதையே அமைச்சர்களின் தலையாயப் பணியாக இருந்தது. 1712 ஆம் ஆண்டு மார்ச், 8 ஆம்தேதியக் கல்வெட்டொன்று,[1] கஸ்தூரி ரங்கையா தளவாய் என்றும் வெங்கடகிருஷ்ணய்யா பிரதானி என்றும் குறிப்பிடுகின்றது. நிர்வாகம் அனுமதித்திராத பல்வேறு வரிகள், கடுமையான முறையில் மக்களிடமிருந்து பிடுங்கப்பட்டன. 1710ஆம் ஆண்டின் கல்வெட்டொன்று,[2] வரிவிலக்கு அளிக்கப்பட்ட கிராமங்களிலும்கூட, தேவையற்று வரிகேட்டு நடந்துகொண்ட கொடூரத்துக்கு எதிர்ப்பு தெரிவித்து, கோவில் பணியாளர் ஒருவர் கோபுரத்தின் உச்சியிலிருந்துக் குதித்து, தற்கொலை செய்து கொண்டதைக் குறிப்பிடுகின்றது. இந்தத் தற்கொலை விவகாரம், அரசு அதிகாரிகளின் செயல்பாடுகளுக்கு எதிராக அமைந்தது. ஆயினும், மிக விரைவிலேயே ஆட்சியின் இறுதிக்காலம் உச்சநிலைக்கு வந்துசேர்ந்தது. அரசரின் கவனமெல்லாம் முக்கியமாக, மதரீதியான சடங்குகளிலும் தானம்கொடுப்பதிலுமே குவிந்துநின்றது. கடவுள் காப்பாற்றுவார் என்று, மக்கள்நலனில்

அக்கறைக்காட்டாமல் விட்டுவிட்டார். தேவஸ்தான நிர்வாகத்தை தன் கையில் எடுத்துக்கொண்டார். திருமலை நாயக்கர் கோவில்கள் மீது காட்டிய அக்கறைக்குப் போட்டியாக, விஜயரங்க சொக்கநாத நாயக்கர் கோவில் விவகாரங்களில் அதிகமாக அக்கறைக் காட்டினார்.[3] திருக்கழுக்குன்றம் போன்ற தூர தேசங்களிலுள்ள மடங்களுக்கு பல்வேறு மானியங்களை அளித்தார்.[4] குறைந்த இடைவெளிகளில் பக்தி யாத்திரைகளை, முக்கியமானப் புனிதத்தலங்களுக்கு மேற்கொண்டார். அரசின், அதிகாரிகளின் தவறான நிர்வாகத்துடன் 1710 ஆண்டுக்கும் 1720 ஆம் ஆண்டுக்கும் இடையிலானக் காலத்தில், மக்களை பஞ்சம் பெருந்துயரத்தில் தள்ளியது.

சேலம் மற்றும் கோயமுத்தூர் ஆகிய இடங்களில் காணப்படும் மைசூர் ஆட்சியாளர்களின் கல்வெட்டுக் குறிப்புகளிலிருந்து மதுரை அரசு மீட்டெடுக்கமுடியாத அளவில் பலஇழப்புகளை அடைந்துள்ளதைக் காணமுடிகின்றது.[5] விஜயரங்க சொக்கநாத நாயக்கர், தனது ஆட்சியின் இறுதிக்காலத்தை மிகவும் அமைதியாகக் கழித்ததாகத் தெரிகின்றது. 1726ஆம் ஆண்டில் திருவாங்கூர் அரசர் உள்நாட்டுக் கலவரத்தை அடக்க உதவிகேட்டு விண்ணப்பித்ததும் அவர் ஆட்சியின்போது நடந்தது.[6]

**மறவர் முடியரசு** - 1710ஆம் ஆண்டில் கிழவன் சேதுபதி மரணமடைந்ததாக, இயேசு சபை நிர்வாகத்தின் குறிப்பு கூறுகின்றது.[7] சேதுபதியின் ஆட்சிகாலம் குறித்து, ரங்காச்சாரி முழு அளவிலானத் தகவல்களைச் சுட்டிக்காட்டவில்லை.[8] மட்டுமன்றி, முன்னுக்குப்பின் முரணான பல தகவல்களும் அதில் இடம்பெற்றுள்ளன. முதலில் அவர், 1673 ஆம்ஆண்டிலிருந்து 1708 ஆம் ஆண்டுவரையிலான முப்பத்தைந்து ஆண்டுகளை, கிழவன் சேதுபதியின் ஆட்சிக்காலமாக அனுமானிக்கின்றார்.[9] பின்னர் அவரே, இருபத்தைந்து ஆண்டுகால ஆட்சிக்குப்பிறகு கிழவன் சேதுபதியின் மரணம், 1709 ஆம் ஆண்டு நேர்ந்தது என்று பதிவு செய்கின்றார்.[10] இதுபோல பல சான்றுகள் முன்னரே எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இண்டியன் ஆண்டிகுயரியில் இதுபோன்ற கவனக்குறைவானத் தரவுகள் பலவற்றை ரங்காச்சாரி இடம்பெற வைத்துள்ளார். கிழவன் சேதுபதி குறித்த இந்தக்குறிப்பிட்ட விஷயத்திலும், முன்னுக்குப்பின்னான தேதி மற்றும் ஆட்சிக்காலம் இடம்பெற்றுள்ளது. வெளிப்படையாக, நெல்சனை கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றியதால் ஏற்பட்ட தவறுகள் இவை. நெல்சன், தனது குறிப்புகளில் ஆட்சிதொடங்கிய திலிருந்து முப்பத்தாறு ஆண்டுகளுக்குக் குறைவில்லாமல் அவர் அதிகாரம் செலுத்தினார் என்றும், ஆட்சியிலிருந்து விலகி,

கால்நூற்றாண்டுக்குப் பின்பே அவர், எண்பது வயதில் காலமானார் என்றும் வகைப்படுத்துகின்றார்.[11]

முப்பத்தாறு ஆண்டுகாலம் நீடித்தப் பெரும்ஆட்சியைக் கொடுத்த கிழவன் சேதுபதி, நாட்டின் நிர்வாகத்தை பெரும்உத்வேகத்தோடும் ஞானத்தோடும் நடத்திய தகுதிவாய்ந்த ஓர் அரசனாகக் கருதப்படுகின்றார். சுதந்திரமாக ஆட்சிசெலுத்தி, குடிமக்களின் நன்மதிப்பைப் பெற்றவராகவும் அவர் இருந்தார். ஆயினும், வளமும் அதிகாரமும் நிறைந்த கிழவன் சேதுபதியின் முன்னே, ஒருகேள்வி நிரந்தரமாக விழுந்துகிடக்கின்றது. 'மதப்பரப்பாளரை இழிவுபடுத்திக் கொன்ற ஒருவர், எப்படி மதிநுட்பம் வாய்ந்தவராகவும் பெருமைக்குரியவராகவும் இருக்கமுடியும்?'[12] கிறிஸ்தவத்துக்கு எதிராக சேதுபதி நடத்தியக் கொடூரமான நடவடிக்கைகள் வரலாற்றில் மிகமுக்கியமான ஒன்றாகப் பார்க்கப்படுகின்றது. ஆனால் சேதுபதி, முற்றிலும் தன்னை நாட்டுக்கும் மக்களுக்காகவும் ஈடுபாட்டுடன் அர்ப்பணித்துக் கொண்டவராக இருந்தார். அவரது ஆட்சியின் கடைசிக்காலத்தில், இயற்கைப் பேரழிவுகளால் நாட்டுமக்கள் துயருரும் நிலையைக் கண்ட சாட்சியாக அவர் இருந்தார். பேரழிவாலும் போர்களாலும் சகிக்கவொண்ணா பஞ்சமும் பேரழிவும் தாண்டவமாடின. வாரிச்சுருட்டியடித்த புயற்காற்றும் துயரங்களை விட்டுவிட்டுச் சென்றது. அவரது மரணத்துக்குப்பின்பு, பத்தாண்டுகள்வரையில் இந்தநிலை நீடித்தது.

மரணத்துக்குமுன்பே கிழவன் சேதுபதி, தனது ஆட்சியின் வாரிசாக, தன் காமக்கிழத்தியின் மகன் பவானி சங்கரத்தேவனை நியமனம்செய்திருந்தார். ஆனால் அவரது குடிமக்கள் அதை ஏற்காமல், தங்களின் பிரதிநிதியாக விஜயரகுநாதனை முன்னிலைப்படுத்தினர். ஒரு கட்டத்தில் அவர்களின் கோரிக்கையை ஏற்றுக்கொண்ட சேதுபதி, தனக்குப்பின் விஜயரகு நாதனுக்கு முடிசூட்டினார். ஆனால் 1713ஆம் ஆண்டின் மார்டின் கடிதமொன்று, கிழவன் சேதுபதியின் இரண்டாவது மகன்தான் விஜயரகுநாதன் என்று குறிப்பிடுகின்றது. மறவர் நாட்டை ஆட்சி செய்யுமளவுக்கு அனைத்துத்திறன்களும் கொண்டவர் வடுகநாதத் தேவர். மூத்த மகன் எனும் அடிப்படையில் அவருக்கு ஆட்சியாளும் உரிமை அனைத்தும் அவருக்கிருந்தது. மிகவும் சகிப்புத்தன்மையும் பொறுப்புணர்வும் மிக்கவரான அவர், தனது இளைய சகோதரனுக்கு இறையாண்மையை விட்டுக்கொடுத்தார்.[13] வடுகநாத தேவரின் கைமாறு கருதாத இந்தத் தன்னலத் துறப்பு, அவர் கிறிஸ்தவத்தை விரும்பியதன் கொடையாக அமைந்தது. இவர்கள்

இருவரும் சேதுபதியின் மகன்களாக இருக்கும்போது, காமக்கிழத்தியின் மகன் பவானி சங்கரத்தேவனை சேதுபதி முன்மொழியக் காரணம் என்ன என்பது, விளக்கமுடியாத ஒன்றாக இருக்கின்றது. ஒருவருக்குப்பின் ஆட்சிப்பொறுப்புக்கு வருபவரை முந்தையவரின் மகன் என்று உருவகித்துக் கொள்ளும் தவறை இயேசு சபையின் சில எழுத்தாளர்கள் செய்திருக்கின்றார்கள்.[14] விஜயரகு நாதத் தேவன் இவ்வாறாக, தனது ஆட்சிப்பொறுப்பை ஏற்றிருக்கின்றார்.

மக்கள் ஆதரவு வலுவாக, விஜயரகுநாதத் தேவனுக்கு இருந்த போதிலும், பதவி எட்ட முடியாமல் மக்களால் புறந்தள்ளப்பட்ட எதிராளி, பவானி சங்கரத் தேவனின் குழப்பக் கைங்கர்யங்கள் தொடர்ந்துகொண்டே இருந்தன. குழப்பங்களுக்கிடையேயான ஆட்சியைக் கைப்பற்றிய விஜயரகுநாதத் தேவனை, முறையாக நிர்வாகம் செய்யவிடவில்லை. அறந்தாங்கிக் கோட்டையில் தங்கியிருந்த அவர், எந்நேரமும் நடவடிக்கை மேற்கொள்ளத் தயாரான நிலையில் படைகளை வைத்திருந்தார். பக்தியில் பழுத்த பழமாகவும் இருந்தார். ராமேஸ்வரத்துக்கு அடிக்கடி பக்திப் பயணங்கள் மேற்கொண்டார். பல கோவில்களைக் கட்டியிருக்கின்றார்.

கிறிஸ்தவம் தொடர்பான அவரதுசெயல்பாடுகள், ஆரம்பத்தில் மிகவும் சாதகமாக இருந்தன. அவர் பதவியேற்ற உடனேயே, தன்னைச் சந்திக்க வந்த திருச்சபை மதப்பரப்பாளர்களை வரவேற்று, தனது நாட்டின் இதயப்பகுதிகளில் பேராலயங்கள் கட்டிக்கொள்ள அனுமதி கொடுத்ததுடன், அதன் கட்டுமானத்துக்குத் தேவையான இடங்களையும் பொருட்களையும் கொடுத்து அனுப்பினார். அதைக்கொண்டு 1711ஆம் ஆண்டு கட்டிமுடிக்கப்பட்ட பேராலயம், மதுரை நாட்டிலேயே மிக அழகியப் பேராலயம் என்று வர்ணிக்கப்படுகின்றது.[15] ஆனால் சேதுபதி தனது கொள்கைளை மிகவிரைவிலேயே மாற்றிக்கொண்டார். இயேசு சபையினர் மோசமான நடவடிக்கைகளுக்கு உள்ளாயினர். திடீரென அவர் காட்டிய மாற்றுப்போக்குக்கு எதிராக, கிறிஸ்தவர்கள் அரசரின் மூத்தசகோதரர் வடுகநாதத் தேவருக்கு ஆதரவு அளிக்கத் தொடங்கினர். மார்டின் எழுதியக் குறிப்பொன்று, ‘இந்த இளவரசர் என்னை மகிழ்ந்து வரவேற்றார். கௌரவமாக நடத்தினார். சுமுகமாகப் பேசினார். தனது சகோதரனால் எனக்கு இழைக்கப் பட்ட தவறான நடத்துதல்களுக்கு இவர் மன்னிப்புக் கோரினார்’ என்று சொல்கின்றது.[16] அரசரால் கிறிஸ்தவத்துக்கு எதிரான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டபோதிலும் 1714-15ஆம் ஆண்டுகளில் மறவர் நாட்டில், கிறிஸ்தவம் தழைத்தோங்கியே

இருந்தது. நாளுக்குநாள் வளர்ந்துகொண்டிருந்தது. அரசர் ராமேஸ்வரத்துக்கு பக்திப்பயணம் மேற்கொள்ளும்போதெல்லாம் கடமைக்கும் ஒழுக்கத்துக்கும் நம்பிக்கைக்குரிய தனது மைத்துனர் திருவளவனத்தான் என்பவரிடம் ஆட்சியை ஒப்படைத்து விட்டுப்போவார்.[17] அரசர் ஊருக்குவெளியில் போனதுதான் தாமதம், கடமைக்கும் ஒழுக்கத்துக்கும் நம்பிக்கைக்குரிய அந்த மைத்துனர் பேராலயத்துக்கு ஓடிவந்துவிடுவார். அங்குநடக்கும் அத்தனை விழாக்களிலும் பங்குகொள்வார். இந்தச்சம்பவம் அரசரின் அறிவுக்கு எட்டவைக்கப்பட்டது. அதைக்கேட்டு சீற்றங்கொண்ட அரசர், தலைநகருக்கு விரைந்தோடிவந்தார். வந்தகையுடன் தனது நாட்டின் எந்தவொரு இடத்திலும் கிறிஸ்தவ வாசம் இருக்கக் கூடாது என்று பூண்டோடு அழிக்க முயற்சிசெய்தார். அதற்காக, தனது படைகளை ஏவி, கிறிஸ்தவர்களின் வீடுகளுக்குள் புகுந்து, அவர்களின் நம்பிக்கைத் தடயங்களை ஒன்றுவிடாமல் அழித்தொழியுங்கள்' என்று உத்தரவிட்டார்.[18]

1720ஆம் ஆண்டுவாக்கில், நாட்டை பல்லாண்டுகளாகப் பீடித்திருந்தப் பஞ்சமும்வறுமையும் விட்டுவிலகியது. பருவமோசங்களைத் தடமற்றுப்போக்க, கொட்டித்தீர்த்தப் பெருமழை மக்களுக்கு நன்நம்பிக்கையை அளித்தது. பயிரிட்டு மகிழ்ந்தார்கள்.[19] ஆனால் எதிர்பாராது, மறவர் நாட்டுக்கு வந்த சோதனையாக, பவானி சங்கரத்தேவரின் சூழ்ச்சி, போரை வரவழைத்துவிட்டது. அவர், புதுக்கோட்டை அரசரிடமும் தஞ்சாவூர் அரசரிடமிருந்தும் உதவிபெற்றிருந்தார். அந்தக் கூட்டுப்படை அறந்தாங்கி மீது தாக்குதல் தொடுத்தது. பலமானப் பாதுகாப்பு அங்கே இருந்தா லும் பயங்கரமானக் கொடியநோய்க்கு முன்னால், விஜயரகுநாதத் தேவரால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. அவரை உடனடியாக ராம்நாட்டுக்குக் கொண்டுவந்தார்கள். ஆயினும் அவர், சிகிச்சை பலன்தராது 1720 ஆம்ஆண்டில் இறந்துபோனார். அவரது மரணம் மறவர் நாட்டுக்குப் பேரழிவாக அமைந்தது. அவர் சிலபல தகுதிகளைக்கொண்ட சிறந்த ஆட்சியாளராக இருந்தார். அடுத்து யார் அரியணையைக் கைப்பற்றுவது என்பதற்கு அவரது மரணம் வழிகோலியது. முடிவில் அது சாம்ராஜ்ஜியத்தையே காவுகொண்டது. நாட்டுக்கு ஏற்பட்டிருந்த இன்னலை இயேசு சபையின் ஒரு எழுத்தாளர், இந்த அவலச்சூழலைக் கண்டு மகிழ்வுகொண்டு, 'தெய்வீக ஆற்றலால் நமக்குக் கிடைத்த அனுகூலம்' என்று குறிப்பிட்டிருக்கின்றார்.[20]

விஜயரகுநாதத் தேவர் இறப்பதற்கு முன்னால், கிழவன் சேதுபதியின் தந்தைக்குக் கொள்ளுப் பேரனான தண்டத்தேவரை, தனது ஆட்சிக்கு வாரிசாக அறிவித்தார். அதேவேளையில் கிழவன்

சேதுபதியால் அரியணைக்கு அறிவிக்கப்பட்ட பவானி சங்கரத் தேவர், அந்த அடிப்படையில் தனக்கான உரிமையைக் கோரினார். தேர்ச்சிபெற்ற ராஜதந்திரம் எதிரியை வெல்ல பயன்பட்டது. கிழவன் சேதுபதியின் முதன்மைத் துணைவி (மனைவி?)யின் ஆதரவு, மாமியார் எனும் வகைமையில் பவானி சங்கரத் தேவருக்குக் கிடைத்தது. அவருக்குத் தனித்திருந்த செல்வாக்குடன் அதுவும் சேர, மறவர் நாட்டின் சேதுபதியாகிப் போனார். ஆனால் தண்டத் தேவர், தனக்கான உரிமையை விட்டுக்கொடுப்பவராக இல்லை. அவர் மதுரை அரசரின் உதவியையும் புதுக்கோட்டை அரசரின் உதவியையும் ஒருசேரப் பெற்றார். பகரமாக, வெல்லும் இடங்களை அவரவர்களே வைத்துக்கொள்ளலாம் என்று ஒப்பந்தமும் போட்டுக்கொள்ளப்பட்டது. மிகக்குறைந்த காலஅவகாசத்திலேயே அறந்தாங்கியை தண்டத்தேவர் முற்றுகையிட்டார். தன்னுடன் போரிட வந்திருக்கும் மூன்று ராஜ்ஜியங்களின் படையை ஒருசேரக் கண்ணுற்ற பவானி சங்கரத் தேவர், மலைத்துப் போனார். யாருக்கும் தெரியாமல் தஞ்சாவூருக்குப் பறந்துவிட்டார். அங்கிருந்தபோது, தஞ்சாவூர் அரசருடன் ஒருஒப்பந்தத்துக்கு வந்தார். அதன்படி எதிரிகளை வெல்லஉதவினால், பாம்பாறுக்கு வடக்கேயுள்ள பகுதிகளை வைத்துக்கொள்ளலாம் என்று முடிவானது. இரண்டு, மூன்றுமாதகால இடைவெளியில், பவானி சங்கரத் தேவரும் தஞ்சாவூர் தளபதியும் ராம்நாட் மீது படையெடுத்தனர். தண்டத்தேவர் தனது முக்கூட்டுப் படையை உதவிக்கு அழைத்தார். மதுரை சில வீரர்களை அனுப்பிவைத்தது. புதுக்கோட்டை அருகே கூட்டுப்படைகள் முகாமிட்டிருந்தன. புதுக்கோட்டைப் படையை தஞ்சாவூர் தளபதி எளிதில் ஓடவைத்தார். மதுரைப்படை மீது தாக்குதல்நடத்தினார். புதுக்கோட்டை அரசரின் இரண்டுமகன்களை எளிதாகப்பிடித்து சிறையிலடைத்தார். உடனே பின்னவர் பேச்சுவார்த்தைக்கு விரைந்தோடிவந்தார். இந்நிகழ்வுக்குப் பிறகு, ராம்நாட் முற்றுகையிடப்பட்டு கைப்பற்றப்பட்டது. தண்டத்தேவரும் அவரது ஆதரவாளர்களும் கொல்லப்பட்டனர். இவ்வாறு பெரும் போராட்டத்துக்குப் பிறகு, பவானி சங்கரத்தேவர் இரண்டாம்முறையாக சேதுபதியானார்.

புதிய சேதுபதியின் நிர்வாகம் அவரது வீழ்ச்சிக்கே வழி வகுத்தது. தனக்குக் கீழிருந்து திறைசெலுத்தியவர்களிடம் அவர் அன்பு பாராட்டவோ அல்லது அவர்களின் விசுவாசத்தைப் பேணவோ, தக்கவைத்துக் கொள்ளவோ இல்லை. அதிகாரம் நிறைந்த மற்றும் செல்வாக்குள்ளத் தலைவர்களுடன் சச்சரவில் ஈடுபட்டு, அவர்களிடமிருந்து ஆட்சி உரிமையைப்

பறித்துக்கொண்டார். அதேவேளையில் தஞ்சாவூர் அரசருடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தின்படி பாம்பாறுக்கு வடக்கே வென்ற பகுதிகளை, பவானி சங்கரத் தேவர் விட்டுக்கொடுக்கவில்லை. இந்நிலையில் பவானி சங்கரத் தேவரால் பாதிப்புக்கு உள்ளான சிறுகுறு தலைவர்கள், தஞ்சாவூர் அரசரிடம் அபயம்கேட்டனர். வாக்குறுதியளித்தபடி செயல்படாத பவானி சங்கரத் தேவர் மீது படையெடுக்கத் தூண்டினர். அது செயல்பாட்டுக்கு வந்தது. அதன்படி ராம்நாட் மீது தஞ்சாவூர் போர் தொடுத்தது. பவானி சங்கரத் தேவர் தோற்கடிக்கப்பட்டு, தஞ்சாவூருக்குக் கைதியாகக் கொண்டு செல்லப்பட்டார். இதையடுத்து அவரது ஆட்சி, 1729ஆம் ஆண்டு முடிவுக்குவந்தது.[21]

பவானி சங்கரத் தேவருக்கு எதிராகத் தொடுக்கப்பட்டப் போரில் தஞ்சாவூர்ப் படையின் வெற்றி, மறவர் நாட்டை பலகூறுகளாகப் போட வைத்துவிட்டது. பாம்பாறுக்கு வடக்கேயிருந்த பகுதிகள் எல்லாம் சமீபத்திய ராம்நாட் படையெடுப்பின்போது செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தின்படி, தஞ்சாவூர் எடுத்துக்கொண்டது. நாட்டின் சொச்சப் பகுதி ஐந்துதுண்டுகளாகக் கூறுபோடப்பட்டன. அவற்றுள் மூன்று, பவானி சங்கரத் தேவரால் பாதிப்புக்கு உள்ளான குறுந்தலைவரும், தஞ்சாவூர் அரசரைப் போருக்குத் தூண்டிய வருமான கட்டயத் தேவருக்கு விடப்பட்டன. அவர், குமாரமுத்து விஜயரகுநாத சேதுபதி எனும் பட்டத்துடன் அரியணை ஏறினார். மீதமுள்ள இரண்டுபாகங்கள் ராம்நாட்டிலிருந்து பவானி சங்கரத் தேவரால் விரட்டியடிக்கப்பட்டு, தஞ்சாவூருக்கு அகதியாக வந்து போரில்ஈடுபட்ட கட்டயத்தேவரின் கூட்டாளியானப் பாளையக் காரருக்கு வழங்கப்பட்டன. அவர், சிவகங்கை ராஜாவாக ஆனார். இவ்வாறாக, ஒன்றுபட்ட ராம்நாட் தேசம், மூன்றுநபர்களால் ஆளப்பட்டது. அரசியல் செல்வாக்குநிறைந்த சேதுபதியின் புகழ், புதியஆட்சியாளரால் இருட்டடிப்பு செய்யப்பட்டது. மறவர் நாட்டின் புகழை மீட்புறச் செய்யவோ, அதன் சுதந்திரத்தைப் பேணவோ முடியாமல்போய்விட்டது.[22]

**விஜயரங்க சொக்கநாதரின் குணங்களும் ஆட்சிமுறையும்** - விஜயரங்க சொக்கநாதரின் மிகையாகக் கிளர்ச்சியுற்ற மதப்பற்று, ஓர் அரசராக அவரைச் செயல்படவிடவில்லை. முறையாகச் செய்யவேண்டிய அரசின் நடவடிக்கைகளைப் புறக்கணித்த அவர், அரசாங்கத்தின் மதிப்பிட முடியாத வளத்தை ஆடம்பரமான நன்கொடைகளிலும், முக்கியத் தளங்களுக்கு அரசு முறைப் பயணமாக சென்றும், பெருமளவு வீணடித்தார். 1708, 1715, 1716, 1721, 1724, 1727 மற்றும் 1728 ஆம் ஆண்டுகளின் கல்வெட்டுகள்,[23] அவர் கோவில்களுக்கும் தருமசாலைகளுக்கும் கிராமங்களைக்

கொடையாகக் கொடுத்தவற்றை விதந்தோதிப் பேசுகின்றன.[24] இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பெரும்படையுடன் ஸ்ரீரங்கம், ஜம்புகேஸ்வரம், மதுரா, தின்னவேலி, ஆழ்வார் திருநகரி மற்றும் ஸ்ரீவைகுண்டம் ஆகிய இடங்களுக்கு பக்திப்பயணம் மேற்கொள்ப வராக அவர், இருந்தார். அப்போது அந்தக்கோவில்களுக்கும் அதனுள் உறைந்திருக்கும் கடவுள்களுக்கும் தாராளமாகப் பரிசுகள் வழங்கினார்.[25] ஒருமுறை அவர் கோவிலுக்குச் சென்றபோது, முன்னர் அவர் கொடுத்த நகைகள் காணாமல்போனது பற்றி புகார் கூறப்பட்டும், அதை அவர் கண்டுகொள்ளாமல், பொறுப்புக் கேடான நடைமுறைக்கு எதிராக, எந்தவொரு விசாரணைக்கும் உத்தரவிடாமல் இருந்துகொண்டதுடன், அக்கோவில்களுக்கு அதேஅளவில் மீண்டும் பரிசுகள் வழங்கி, மனம்குளிர்ந்தார்.[26] மக்கள் பணத்தை வீணடிப்பதுகுறித்து, அவர் கிஞ்சிற்றும் கவலைப்படவில்லை. அவரது அமைச்சர்கள் நரசப்பையா மற்றும் வெங்கட ராகவாச்சார்யா ஆகியோர் அரசரின் பலவீனத்தை சாதகமாக்கிக்கொண்டு, பழிபாவங்களுக்கு அஞ்சாமல் மக்களின் பொதுப் பணத்தைக் கொள்ளையடித்தனர்.[27]

விஜயரங்க சொக்கநாதர் விரோகிரித் வருடம் மாசி மாதம் 3ஆம் நாள் (1732, 15 பிப்ரவரி) சிவராத்திரி அன்று மரணமடைந்ததாக **மிருத்யுஞ்சய** தெரிவிக்கிறது. ஆனால், கிடைக்கப் பெற்ற செப்புப் பட்டயம் முன்னதாகவே மரணம் நிகழ்ந்திருப்பதாக கூறுகிறது. 1731 ஆகஸ்ட் - செப்டம்பரில் இறந்திருக்கலாம் என்று நெல்சன் கூறுகிறார். மீனாட்சியின் காலம் முரண்படுவதாக இந்த ஐயம் ஏற்படுகிறது என்கிறார். இருந்தாலும், 1732-ல் பிப்ரவரியில் இறந்திருக்க வாய்ப்புண்டு என்கிறார் வில்க்ஸ்.

### அடிக்குறிப்புகள்

1. Appendix D, No.218
2. Ibid., No.216
3. Madurai tala varalaru. Vide Appendix E.
4. Appendix D, Nos.225 and 215
5. A sale deed of Dod da Krishna Udaiyar in 1714 Etappur (Ibid., No.221) An inscription of 1722 recalls the achivements of Chikkadeva Raya who is said to have emulated the sports of Krishna in conquering the lord of Madura' (Ibid., No.220) There are numerous other inscriptions of Krishna Raja Udaiyar.
6. Caldwell, History of Tinnevelly, pp.253-5
7. Bertrand, iv, p.203, Vide Appendix A, Letter No.12
8. Appendix D, No.220
9. I.A., 1917, p.45

10. Ibid, p.209
11. Nelson, pp.206 and 244
12. Bertrand, iii, p.453
13. Bertrand, iv, p.228
14. Tirumala Nayaka is said to be the son of Muttu Virappa Nayaka I, Ante pp.110 and 115
15. Bertrand, iv, p.208
16. Ibid., p.228
17. Bertrand, iv, p.233
18. Ibid, p.235
19. Ibid, p.262
20. Ibid, pp.262
21. Mr. Rangachari has not carefully examined the dates he gives. Accordin to him. Vijayaraghunatha ruled from 1709 to 1723 (I.A., 1917, p.209) The inaccuracy of this initial date has been pointed out already. The final date is opposed to the Jesuit records which give the year as 1720. Mr. Rangachari does not note to that his dates differ from reliable authorities nor does he indicate how he has arrived at them whatever may be his opinion, whether backed by satisfactory evidence or not, he should at least have taken care that his dates were not mutually conflicting. He allows a period of nine years for Bhavani Shankara's rule; and therefore it must have been between 1723 and 1732; but he puts close of it in 1729. (Ibid., pp.212-3)
22. Nelson, pp.247-50
23. Appendix D, Nos. 214, 222, 224, 225, 230, 231 and 232
24. Taylor, O.H.MSS., ii, pp.229 and 37
25. Ibid., p.230
26. Ibid., pp.230-1
27. Taylor, O.H.MSS., ii, Appendix, pp.46-7

# 14

# மீனாட்சி (1732-36)

**மீ**னாட்சி ஆட்சிசெய்தது, மிகக்குறுகிய காலம்தான். அவரது ஐந்தாண்டுகால ஆட்சிமுழுவதுமே உட்பூசல்கள் நிறைந்ததாக இருந்தது. அதைத் தொடர்ந்துவந்த அந்நியர்கள் ஆக்கிரமிப்பு, எழுச்சியுற்றிருந்த நாயக்க வம்சத்தின் மரபை முற்றிலும் அழித்தொழித்தது. மரபுரிமைக் குழப்பங்கள் அவர்களுக்குள் தன்னாலேயே வலிந்துகொண்டுவரப்பட்டது. அக்குழப்பங்களின் நீட்சியாக முகம்மதியர்களின் தலையீட்டுக்கு வரவேற்பளிக்கப் பட்டது. மீனாட்சி பேராவலும் ஆர்வமும் துணிச் சலுமானப் பெண்ணாக இருந்தபோதிலும், சிக்கல்வாய்ந்த மற்றும் ஆபத்தான சூழ்நிலைகளில் எதிர்த்துநின்று சமாளிக்கும் அளவிலான நுட்பம் அவரிடமிருக்கவில்லை. பலவீனப்பட்டுப் போயிருந்தார். சாகசத் தீர்வுகள் நாட்டைக் காப்பாற்ற முடியாதபோதில், மிகச்சராசரியான தகுதிகளை மட்டுமே கொண்டிருந்த அப்பெண்ணின் ஆட்சியால், பேரிடர்களைச் சமாளித்து முடிவுக்குக் கொண்டுவர முடியவில்லை.

விஜயரங்க சொக்கநாத நாயக்கர், தனக்கொரு ஆண்வாரிசு இல்லாமல் மரணமடைந்ததும் அவரது மனைவி ஆட்சியின் கடிவாளத்தைக் கையில் பிடித்தார். அரசகுடும்பத்தின் மற்றொரு கிளையான குமாரமுத்துவின் வழியில்வந்த பங்காரு திருமலாவின் மகன் விஜயகுமாராவைத் தத்துஎடுத்துக்கொண்டார். குமாரமுத்து, திருமலை நாயக்கரின் இளைய சகோதரர் ஆவார். மீனாட்சிக்கு அவரது சகோதரர் வெங்கட பெருமாள் நாயக்கர் ஆதரவு அளித்தார். தனது ஆட்சிக்கு மக்கள் ஆதரவைத்திரட்ட மீனாட்சி வெகுவாகவும், வேகமாகவும் நடவடிக்கைகளை மேற்கொண்டார். ஆனால் அதற்கும் முன்னால், தத்துபுத்திரனின் தந்தை பங்காரு திருமலாவும் தளவாய் வெங்கடாச்சார்யாவும் கூட்டணி அமைத்து, மீனாட்சியின் ஆட்சியைக் கவிழ்ப்பதற்கான நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். ஆட்சியிலிருந்து அகற்றுவதற்காக, அவர்கள் நடத்திய முதல்முயற்சியான திருச்சினாப்பள்ளி கோட்டைக்குள் புகும்நிகழ்ச்சி, தோல்வியில் முடிந்து போனது. இரண்டுதரப்புக்கு மிடையில் நடந்தப் போராட்டம், நாட்டைக்காக்கும் கவனத்தைச் சிதறடித்தது. அந்தக்காலகட்டத்தில், ஆற்காடு நவாப் தனது மகன்

சப்தர் அலியையும், தனது மருமகன் சந்தா சாகிப்பையும் பெரும்படையுடன் தெற்குநோக்கி அனுப்பி, மதுரை மற்றும் தஞ்சாவூர் ஆட்சியாளர்கள் திறைசெலுத்த மறுத்தால், அவர்களின் ஆட்சியைக் கைப்பற்ற உத்தர விட்டிருந்தார். மதுரைக்கு வந்திருந்த அந்நியப்படையை, மீனாட்சிக்கு எதிராக பங்காரு திருமலா பயன்படுத்திக்கொண்டார். அதற்காக அவர், ஆற்காடு நவாபின் மகன் சப்தர் அலிக்கு பெரும்கையூட்டு கொடுத்திருந்தார். ஆனால் சப்தர் அலி, மீனாட்சியின் கண்காணிப்பிலிருந்த வலுவான திருச்சினாப்பள்ளிக் கோட்டையை, அவர் அடித்துநொறுக்கி, துவம்சம் செய்யவில்லை. மாறாக, தன்னை இரண்டுதரப்பினருக்கும் பொதுவானவராகக் காட்டிக்கொண்டு, இரண்டுதரப்பும் தங்கள் புள்ளிவிவரங்களுடன் வந்து, தான்நடத்தும் மத்தியஸ்தத்தில் கலந்து கொள்ள உத்தரவிட்டார்.[1] சந்தேகத்திற்கு இடமளிக்கும் இந்தத் திட்டத்துக்கு மீனாட்சி செவிமடுக்கவில்லை. அதனால் தனது ஆதரவை பங்காரு திருமலாவுக்கு அளித்து, அதைச் செயல் படுத்தும் பொறுப்பை சந்தா சாகிப்புக்கு வழங்கிவிட்டு, காட்சியிலிருந்து விலகிக்கொண்டார். பங்காரு திருமலாவுக்கு உதவிசெய்யாது, அந்த ஏற்பாடுகளை நீர்க்கச் செய்ய சந்தா சாகிபுடன் மீனாட்சி ஒப்பந்த நோக்குடன் கலந்துரையாடினார். அதற்குப் பிரதியாக ஒரு கோடிரூபாய் தரப்பட்டதாகச் சொல்லப்படுகின்றது. சந்தா சாகிப், மீனாட்சியின் கோரிக்கைக்கு உடன்பட்டார். எந்த வகையிலாவது மீனாட்சியைக் காப்பாற்றிவிடுவதாக குரான் மீது சத்தியம் செய்ததாகச் சொல்லப்படுகின்றது. இதையடுத்து, சந்தா சாகிப் மீனாட்சியின் அரண்மனைக்கு வரவேற்கப்பட்டார். வரலாற்றுத் தரவுகளில் காணப்படும் இதுதொடர்பானக் குறிப்புகள் குழப்பமானவையாகவும் முன்னுக்குப்பின் முரணானவையாகவும் இருக்கின்றன. அதேவேளையில் இந்தத்தருணத்தில் மீனாட்சி, பங்காரு திருமலாவுடன் சமரசமாகிப் போனதாகவும் கூறப்படுகின்றது. சமரசமான மீனாட்சி, பங்காரு திருமலாவுடன் தனது தத்துபுத்திரன் விஜயகுமாராவை அனுப்பி, சந்தா சாகிபிடமிருந்து மதுரையைக் காப்பாற்ற உத்தரவிட்டார்.

இரண்டு எதிரிகளும் சமாதானமாகிப் போய்விட்டதை சந்தா சாகிப் உணர்ந்துகொண்டார். ஒருவரையொருவர் மூட்டிவிட்டுக் குளிர்காயும் சந்தர்ப்பங்கள் இனி அமையாது என்பதையும் அறிந்துகொண்டார். அத்துடன் வலுவான மதுரைக் கோட்டையை அத்தனை எளிதில் வெல்ல முடியாது என்பதையும் அவர் உணர்வுபூர்வமாகக் கண்டறிந்தார். மீனாட்சியின் புத்திக்கூர்மை யானச் செயல்பாடுகளால் அதிருப்தியடைந்த சந்தா சாகிப், ஆற்காட்டுக்குத் திரும்பிவிட்டார். மிகவிரைவிலேயே அவர், 1736

ஆம் ஆண்டு மீண்டும் திருச்சினாப்பள்ளிக்கு வந்துவிட்டார். இந்தமுறை அரசியின் நிலையை அபகரித்துவிடும் முறையானத் திட்டங்கள் அவரிடமிருந்தன. கோட்டைக்குள் புகுந்த அவர், ஒட்டுமொத்த சாம்ராஜ்ஜியத்தையும் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரும் திட்டங்களையும் வைத்திருந்தார். எதிர்பாராத கைம்மயக்கம் அல்லது செயலற்ற நிலை, அரசியிடம் இருந்தது. சந்தா சாகிப்பின் நடவடிக்கைகளை ஒருபார்வையாளரைப் போல கவனித்துக்கொண்டிருந்தார். அரசியின் ஆட்சிப்பகுதி முழுவதையும் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்த சந்தா சாகிப் குறிப்பாக, அரசிக்கு நம்பகமான ஆட்களைத் தன்வயப்படுத்திக்கொண்டார். அதன்மூலம் திருச்சினாப்பள்ளியில் தனதுநிலையை வலுப்படுத்திக் கொண்டார். அரசியின் ஆதரவாளர்களான கோவிந்தையா மற்றும் ராவணய்யா ஆகியோரின் தலைமையில், 80,000 குதிரைவீரர்களையும் கொஞ்சம் காலாட்படையையும் தெற்குநோக்கி அனுப்பி, பங்காரு திருமலாவின் கையிலிருக்கும் திண்டுக்கல்லைக் கைப்பற்ற உத்தரவிட்டார். மிகக்குறைந்த அவகாசத்திலேயே திண்டுக்கல் அடித்துநொறுக்கப்பட்டது. திண்டுக்கல் கைவசமானதும் சந்தா சாகிப்பின் படை, மதுரையைநோக்கி நடைபோட்டது. நம்பிக்கையிழந்த நிலையிலும் பங்காரு திருமலா, படையினர் சிலரைத் திரட்டி எதிராளிகளைத் தடுத்தார். அம்மையநாயக்கனூரில் சில பாளையக்காரர்களின் ஆதரவும்சேர்ந்து படை வலுப்பெற்றது.[2] இருதரப்பினரும் வளமாகக் களமாடினார்கள். ஆனாலும் அரசிதரப்பின் முயற்சிகள் வீணானது. பங்காரு திருமலா அகதியாக, சிவகங்கையில் தஞ்சம்புகுந்தார். சிவகங்கை ராஜா, வெள்ளிக்குறிச்சிக் கோட்டையை பயன்படுத்திக்கொள்ள அனுமதி கொடுத்தார். முகம்மதியப் படை மதுரை சாம்ராஜ்ஜியத்தின் எஜமானன் ஆனது. விரைவிலேயே, தீதுசெய்யத் தயங்காத சந்தா சாகிப், மீனாட்சியை அவரது அரண்மனையிலேயே சிறைவைத்தார்.[3] அவர் கொடுத்தத் துயரங்கள் ஒருகட்டத்தில் அதிகமாகவே, மீனாட்சி விஷமருந்தி தன் உயிரை மாய்த்துக்கொண்டார்.[4] மீனாட்சியின் மரணம், மதுரை நாயக்கர்களின் ஆட்சியை நடைமுறையிலிருந்து உயிர்ப்படக்கம் செய்துவிட்டது.[5] பங்காரு திருமலா, இந்தச்சந்தர்ப்பத்தை பயன்படுத்தி, முகம்மதியப் படையை விரட்டியடித்து, மதுரையின் ஆட்சியைக் கைப்பற்றும் திராணியற்றவராக இருந்தார். மராத்தியர்களின் உதவியை அவர் கோரியதிலிருந்து, நாயக்க ஆட்சியை மீட்டெடுக்கும் அனைத்து சந்தர்ப்பங்களையும் விட்டுக் கொடுத்துவிட்டார். பங்காரு திருமலாவை அன்வாருத்தீன் கொன்றதையடுத்து, மீனாட்சியின் தத்து புத்திரனும் பங்காரு

திருமலாவின் மகனுமான விஜயகுமாரா தலைதெறிக்க சிவகங்கைக்குத் தப்பியோடினார்.[6] அவரது சந்ததியினர் தலைமறைவு வாழ்க்கை நடத்தினர்.[7]

### அடிக்குறிப்புகள்

1. Wilks i, p.155; Taylor, O.H.MSS, ii, po.233
2. Taylor, O.H.MSS, ii, 234
3. S.C.Hill, Yusuf Khan, p.12
4. Taylor, O.H.MSS, ii, p.235
5. The date of this event is rightly ascribed to 1736 by S.C. Hill (Yusuf Khan p.26) on a carefull examination of contemporary and other reliable recoreds. Mr.Rangachari, however puts, it in 1737 (I.A., 1917, p.213)
6. p.261 et.seq
7. I.A., 1917, pp.241-7 and 272-5

# 15

# நாயக்கர் ஆட்சியின் சிறப்பம்சங்கள்

## 1. நிர்வாகம்

***மையஅரசு: அரசரும்அமைச்சர்களும்* - *பா*ளையமுறைகள்,** உள்ளூர்அரசமைப்பின் தேவைகளையும் அரசாங்கத்துக்கு தேவைப்படும்போது வழங்கியப் படை உதவிகளையும் வழிநெடுகி லும் பார்த்தோம். நாயக்கர் ஆட்சியின் தொடக்கத்திலிருந்தே அதிகாரங்கள் மத்தியில் குவிக்கப்படுவது, தவிர்க்கப்பட்டுவிட்டது. மையஅரசு, முறையாக மரபுவழியில் கட்டமைக்கப்பட்டிருந்தது. ஆனாலும், காலத்தின் தேவைக்கேற்ப சிற்சில மாற்றங்கள் அறிமுகம்செய்யப்பட்டன. கோட்பாட்டளவில், அமைச்சரவைக் குழுவின் உதவியுடன் அரசர் ஆட்சிசெய்தார்.

அரசாங்கத்தின் முதன்மை அலுவலராக, தளவாய் இருந்தார். சமூகப் பொதுத்துறை மற்றும் ராணுவ நிர்வாகம் ஆகியவிரண்டின் ஒருங்கிணைத்த அலுவல்களை அவர் பார்த்துக்கொண்டார். பழைய இந்துத்துவ அமைப்புமுறை, முதன்மை அமைச்சரை மந்திரி என்பதாகவும், தளபதியை சேனாபதியாகவும் கொண்டிருந்தது. அம்முறை நாயக்க நிர்வாகத்தில் கடைப் பிடிக்கப்படவில்லை. இவ்விரண்டு அலுவலர்களின் பணிகளும்கலந்து, முற்றிலும் ஒன்றுபட்டதாக, தளவாயின் கைகளில் இருந்தது. சமூகப் பொதுத்துறையிலும் ராணுவத்தின் செயலாற்றல் எப்போதுமிருக்க வேண்டும் என்ற மதிநுட்பமுடைய நாயக்க ஆட்சியாளர்களின் நோக்கம் இதில் நிரூபணம் ஆகின்றது. படிப்படியானப் பரிணாம வளர்ச்சிக்குப்பின், உருவான மாற்றங்களின் அடிப்படையில், அவரவர் நிலையைத் தக்கவைக்கக் கொந்தளிக்கும் தலைவர்கள், மக்கள் ஏற்படுத்தும் போராட்டங்களையும், அதுவிளைவிக்கும் குழப்பங்களையும் கட்டுப்படுத்த வலுவானக் கரமொன்றுக்கு அவசியம் ஏற்பட்டது. பலவகைப்பட்ட மக்களுக்கிடையில் உருவான இனத்தொடர்புடைய அல்லது குலமரபுக்குரிய சர்ச்சைகள், பொதுத்துறை மற்றும் ராணுவ நிர்வாகம் ஆகியவிரண்டின் ஒருங்கிணைத்த சேவைகளைக் கோரின. இதுபோலவே, பிரிட்டிஷ் நிர்வாகத்தின் கட்டுப்பாட்டுக்குள் வராத இந்திய மாகாணங்களிலும் இம்முறை அமலபடுத்தப்பட்டது.

நடைமுறையில் தளவாய் என்பவர், ராஜ்ஜியத்தை அடக்கியாளும் எஜமான். ஆனால், அவரது அதிகாரங்கள் அரசியலமைப்பு அங்கீகாரத்தைப் பெற்றவை, அல்ல. வலிமையும் திறமையுமான அரசர்கள் தளவாயின் அதிகாரத்தைக் குறைத்துக் கட்டுக்குள் ளாகவே வைத்திருந்தார்கள். பொதுவில், தளவாயே நாட்டின் உச்சபட்ச அதிகாரம்கொண்டவராக இருந்தார். வலுவற்ற ஆட்சியாளர்களின் நிர்வாகத்தில், தளவாயின் செல்வாக்கு நிகரற்றது. வானளாவியது. யாரும் தலையிட முடியாததுமாகும். இயேசு சபையின் எழுத்தாளர்களும் ஜான் நியூஹாப்பும் தளவாய்களை அரசாங்கத்தின் கவர்னர்-ஜெனரல் என்றே விளிக்கின்றனர்.

இயல்பான நடைமுறையில் ஒரு தளவாயின் செயல்பாடுகள், நாட்டில் அமைதியை நிலைநிறுத்தும் ஒரு பொறுப்புமிக்க அலுவலரின் பணியாகத்தான் காணப்படுகின்றது. அத்துடன் உள்நாட்டில் உத்தரவுகளை நிறைவேற்றும் அலுவலராகவும், வெளிநாட்டுக் கொள்கைகளை சீரியமுறையில் கையாள்பவராகவும் இருக்கின்றார். நாட்டின் பல்வேறு துறைகளையும் கட்டுப்படுத்தும் முக்கிய அலுவலராக, அவர் இருக்கின்றார். தளவாயின் அதிகாரத்தின் முக்கியத்துவத்தைக் குறைத்து, 'தளவாயின் பணிகள் வெறுமனே ஆலோசனைகள் சொல்வது மட்டுந்தான்' என்று மதிப்பீடு செய்கின்றார். ஆனால் நியூஹாப், 'நாட்டின் முக்கிய விவகாரங்களைக் கைக்கொள்ளும் உண்மையான அதிகாரம் அவரிடமிருந்தது' என்கின்றார். இயேசு சபையின் பல்வேறு குறிப்புகள், தளவாயின் உச்சபட்ச அதிகாரத்தை எடுத்தியம்பு கின்றன. குறிப்பாக, திருமலை நாயக்கர் காலத்திய தளவாயின் அதிகாரங்களையும் அவை பேசுகின்றன. மேலும் அக்குறிப்புகள், 'ராணி மங்கம்மாளின் ராஜ்ஜியத்தில், தளவாயே முழுமுற்றிலுமான எஜமானராக இருந்தார். தன்விருப்பம்போல, எல்லாவற்றையும் அவரே பார்த்துக்கொண்டார்'[1] என்பதுடன், ஓர்இளவரசரின் அதிகாரத்துடன் 'பதிலாள் இளவரசராக'[2] அவர் செயல்பட்டார் என்றும் உறுதிசெய்கின்றது. நாட்டின் நிர்வாகத்தில் தளவாய் பதவி முக்கியத்துவம் வாய்ந்தது என்பது தெளிவாகின்றது.

நாயக்க ஆட்சியின் முதல்தளவாயாகச் செயல்பட்டவர், அரிய நாத முதலியார். அவர், பிரதானியாகவும் இருந்தார். ஒருசேர அவர் கையாண்ட இருவேறுதுறைகளின் அலுவல்கள், பின்னாட்களில் அப்பதவியை, உறுதிப்பாடானவர்களும் வேறுபட்டப் பண்புகளைக் கொண்டவர்களும் ஏற்றிருந்தாலும், முன்மாதிரியானச் சித்திரத்தைப் பின்தொடர்பவர்களாக உருவாகவில்லை.[3] அரிய நாத முதலியாருக்குப் பின், அப்பதவிக்குச் சிறப்புவாய்ந்த மற்றும்

மதிப்பார்ந்த நபராகப் பொருந்தியவர், திருமலை நாயக்கரின் ஆட்சியில் தளவாயாக இருந்த, ராமப்பையர் ஒருவர்தான். லிங்கம நாயக்கர், வெங்கட கிருஷ்ணப்பா, கோவிந்தப்பையா போன்றவர்கள் 'தளவாயாக' மட்டுமே பதவிவகித்தவர்கள். மங்கம்மாளின் ஆட்சியில் தளவாயாகப் 'புகழ்பெற்ற' நரசப்பையா, இயேசு சபையின் தடங்கலற்றச் செயல்பாடுகளுக்கு அச்சுறுத்தலாக இருந்தார். ஐரோப்பியர்களை கண்மூடித்தனமாக அவர் வெறுத்தார்.[4] தளவாய் அச்சய்யா, 'மதிப்பற்ற'வராக இருந்தார். கஸ்தூரி ரங்கையா, நரசப்பையா மற்றும் வெங்கடராகவாச்சார்யா ஆகிய விஜயரங்க சொக்கநாத நாயக்கரின் தளவாய்கள், மூவரும் பழிபாவத்துக்கு அஞ்சாத கபடக்காரர்களாகச் செயல்பட்டு, தங்கள் மதிப்பை தாங்களே குறைத்துக்கொண்டவர்கள். நாயக்க ஆட்சியில் தளவாயாகச் செயல்பட்டவர்களில் பலர், பிராமணர்களாக இருந்தனர். பிராமணர்கள், தளவாயாக ஆதிக்கம்செலுத்தத் தொடங்கியது, சொக்கநாத நாயக்கரின் ஆட்சிக்காலத்திலிருந்துதான்.

அரசருக்கு அடுத்து முக்கிய அலுவலராக, பிரதானி இருந்தார். அவர்தான் நிதி அமைச்சர். நாட்டின் வருமானம் மற்றும் செலவீனங்கள் அவரது நேரடிக் கட்டுப்பாட்டில் நடந்தன. அவர், மற்ற அமைச்சர்களைக் காட்டிலும் உயர்அதிகாரமும், ஒட்டுமொத்த உள்நிர்வாகத்தில் அதிகச்செல்வாக்குப் பெற்றவராக இருந்தார். 1665ஆம் ஆண்டின் பிரயோன்ஸாவின் கடிதம்,[5] 'பிரதானி, அரசரின் முதன்மை அமைச்சர் என்ற பட்டத்துடன் செயல்படுபவர், அவரே நாட்டின் ஆளுநர். இன்னும் சரியாகச் சொல்வதென்றால், ஒட்டுமொத்த ராஜ்ஜியத்தின் வல்லாட்சியாளர்' என்று குறிப்பிடுகின்றார். போர்க்காலத்தின்போது மற்றும் வெளிநாட்டுப் பயணங்களின்போது, தளவாய் தலைநகரில் இல்லாதவேளைகளில், அவருக்குப் பிரதியாகப் பொறுப்பு வழங்கப்படுவதிலிருந்து, அப்பதவியின் முக்கியத்துவம் வெளிப்படும். குழப்பமான நேரங்களில் பிரதானியின் செயல்பாடுகள் மிகமுக்கியமானவை. அவ்வதிகாரத்தின் தன்மை, சாதாரணமாக பலநேரங்களில் வெளிப்பட்டுவிடுவதும் உண்டு.

அமைச்சர்களில் மிகமுக்கியப் பொறுப்பு ராயஸம் எனப்பட்ட செயலாளர்களுக்கு இருந்தது. நிர்வாகத்தின் முக்கியப்புள்ளியாகக் கருதப்பட்ட அவர், தலைமை நிர்வாக அதிகாரி ஆவார். ஆனால், தளவாய்க்கும் பிரதானிக்கும் வழங்கப்பட்டிருந்ததைக் காட்டிலும் சற்றுக்குறைவான சுதந்திரத்தை, அவர் கொண்டிருந்தார். ஆனால், நடைமுறையிலான நிர்வாக இயந்திரத்தைக் கையில் வைத்திருப்பவராக இருந்தார். மறுபக்கம், அவருக்கும் ஆட்சியாளருக்கும் நிலையானத் தொடர்பு இருந்துகொண்டே இருந்தது. அதிகாரத்தைச்

செயல்படுத்துபவராக இருந்தார். தளவாய், பிரதானி, ராயஸம் என்ற இவ்வலுவலர்கள், அரசருக்கு ஆலோசனைகள் தரும் முக்கூட்டு அணியாக இருந்தனர். மற்றத் தலைமை அலுவலர்களாக, கணக்குவழக்குகளைக் கவனித்து தணிக்கைசெய்யும் கணக்கன், அந்நிய ஆட்சியாளர்களின் விவகாரங்களைக் கவனிக்கும் வெளியுறவுச் செயலராக ஸ்தானாபதி ஆகியோர் செயல்பட்டனர்.

***அரசாங்கத்தின் நடைமுறைகள்*** - அமைச்சகங்கள் நாயக்க ஆட்சியில் உருவாக்கப்பட் டிருந்தாலும், அரசாங்கம் தன்னிச்சையாய் நடந்தது. அரசாங்கக் கொள்கைகளை வடிவமைப்பவராக, அரசரே அதிகாரம் பெற்றிருந்தார். நிர்வாகத்தில் அரசர்களின் செல்வாக்கே ஓங்கியிருந்தது. அரச சபை கூட்டுதல், தனிச்சிறப்புப் பேரவை ஆகியவை எல்லாமே அரசரின் இசைவுடன் நடந்தன. அதேவேளையில் அரசியலமைப்புச் சட்டங்கள் அரசரைக் கட்டுப்படுத்தாது. ஒரு அமைச்சரையே, அவரது பணி மேம்படுத்த வேண்டுமென்று, பொறுப்பிலிருந்து அரசர் விலக்குவதை யாராலும் தடுக்கமுடியாது. திருமலை நாயக்கரும் விஜயரங்க சொக்கநாத நாயக்கரும் தேவஸ்தானம் துறையை தங்களுக்கு மாற்றிக் கொண்டனர். அரசியலமைப்பு முறைகளுக்கு அவ்வளவு மதிப்பு அளிக்கப்படாதபோதிலும், ஒருநல்ல அரசாங்கத்துக்குத் தேவையான அனைத்தையும் சரியாக மதிப்பிட்டு செயல்படுத்தினர். அரசஅதிகாரத்தின் மனப்போக்கான செயல்பாடுகளை, குடிமக்களின் நலனுக்கு அவை ஏதோ ஒருவகையில் பயனுள்ளதாக இருப்பதால், சகித்துக்கொள்ள வேண்டியிருந்தது. அமைச்சர்கள் குழு, மரபுரீதியான நடைமுறைகள் மற்றும் பொதுமக்களின் கருத்துக்கணிப்பு ஆகியவற்றுக்கு, அரசரின் அதிகாரத்தை கட்டுப்படுத்தும் மேலதிகாரம் நடைமுறையில் இருந்தது. நாட்டுமக்களின் குரலுக்கு திருமலை நாயக்கர் செவிசாய்த்த நிகழ்ச்சியும் நடந்திருக்கின்றது. மேலைநாட்டைய அமைப்புமுறை, இந்துமத அரசியல் கலாச்சாரத்துக்கு அந்நியமாக இருந்தது. அவ்வந்நியத்தின் அவநம்பிக்கை மற்றும் பெருவிருப்பம் ஆகியமனநிலைகள், முக்கியமான முடிவுகளுக்குப்பின் ஏற்கப்பட்டன. மதம் மக்களின் வாழ்விலும் அரசிலும் ஊடுருவிப் பரவிக் கரைந்து தெவிட்டும் நிலையை அடைந்துவிட்டிருந்தது. ஒழுக்கத்துவச் சட்டங்கள், மனிதனால் உருவாக்கப்பட்டச் சட்டங்களைக் காட்டிலும் கூடுதல்மதிப்புடையதாக இருந்தன. இந்துத்துவ சூழ்நிலை, இயற்கையிலிருந்து புறத்தே வேறுபட்ட, தாராள அரசியல் வளர்ச்சியை ஊக்கமுட்டுவதாக இல்லை. மேலைநாடுகளின் அரசியல் கலாச்சாரத்துக்கு மக்களை அடிமைப்படுத்தும் முறைக்கு, அது ஆதரவு அளிக்கவில்லை.

அரசியல் நிர்வாக விரிவை குறைவாகக் கொண்டிருக்கும் அரசாங்கம் நல்லதென்று உணரப்பட்டது. நவீன அரசாங்கங்கள் பொருள்வகைத் தேவைகளை மட்டுமே கொண்டிருந்தவேளையில், இந்துமத அரசாங்கங்கள், மக்களுக்கானப் பொருள்வகை மற்றும் ஆன்மீகத் தேவைகளை நிர்வகிக்கும் அமைப்புகளாக இருப்பதாகக் கருதப்பட்டது. பொதுவாகவே, நாயக்க அரசாங்கங்கள் மரபு ரீதியான மற்றும் அரசியல் சட்டத்தொகுப்புகளைக் கொண்டிருக்க வில்லை. அவை மக்களின் பொதுக்கருத்துக் கணிப்புக்கு மதிப்பளிப்பவையாக இருந்தன. பெரும்பாலான நேரங்களில் அதிகாரம் கருத்துக்கணிப்பின்வழியே செலுத்தப்பட்டது. 'பலநேரங்களில் அவர்கள், சில பல காரியங்களைச் செய்வதற்கு அஞ்சினார்கள்' என்று நெல்சன் குறிப்பிடுகின்றார்.[6] நாயக்க ஆட்சி அமைப்பு முறையில் இருந்த மிகப்பெரிய குறைபாடு, எல்லா இந்துத்துவ அரசாங்கங்களிலும் இருந்ததுபோல, மக்கள்நல மென்பது பெரும்பாலும் அரசர்களின் குணநலத்தின் அடிப்படை யைச் சார்ந்ததாக இருந்தது. நல்ல மற்றும் தகுதியான ஆட்சி யாளர்கள் அடுத்தடுத்து அமையப்பெறாதபோதில், சில வேளைகளில் இடைவெளி ஏற்பட்டு, தவறான ஆட்சி யைப்பெறும் அவலம் அம்மண்ணுக்கு நேர்ந்துவிடுவதுண்டு. இதுபோன்றகாலங்களில் மேலைத்தேய எழுத்தாளர்கள், மேலெழுந்தவாரியாக தங்கள் எண்ணங்களைக்கொண்டு, 'கீழைத்தேயக் கொடுங்கோன்மை' மற்றும் 'அடக்குமுறை ஆட்சி' என்றும் ஓரவஞ்சகத்துடன் எழுதிவிடுவதால், பழைய இந்திய அரசாங்கங்கள் குறித்த ஆய்வில், பல்வேறுதடைகள் உருவா கின்றன. இதுகுறித்து பேராசிரியர் ப்யூரி எச்சரிக்கைக் குரல் விடுத்ததை, யாரும் கவனத்தில் கொள்ள வில்லை. மேற்கத்திய ஆட்சிக்கலையில் ஆழமாய்ப் புதைந்திருக்கும் நவீன எழுத்தாளர்கள், 'கடந்தகாலத்தில் காணப்பட்ட ஆட்சித்தன்மையை வரலாற்றாளர்கள் எவ்வாறு பார்த்தார்கள். அக்காலத்தின் நிலை என்ன?' என்பதை போதுமான அளவில் உணர்ந்துகொள்ளும் பக்குவமில்லாதவர்களாக இருக்கின்றார்கள். அரசாட்சி நிர்வாகத்தின் உத்வேகம் மற்றும் அதுதரும் முடிவுகள், நிர்வாக செயலாண்மைத் திட்டத்தைவிட, சிறந்த அரசாங்கமாகக் கருதப்படுகின்றது.

**மாகாண அரசாங்கங்கள்** - மைய அரசாங்கத்துக்கும் உள்ளூர் நிர்வாகத்துக்கும் அதாவது பாளையங்களுக்கு பிணைப்பாக இருந்தவர்கள், மாகாணங்களின் ஆளுநர்கள் என்று அழைக்கப் பட்டார்கள். அவர்களிடம் ஏராளமானச் செயல்அதிகாரங்கள் ஒப்படைக்கப்பட்டிருந்தன. தலைநகரிலிருந்து அம்மாகாணம்

அமையப்பட்டிருக்கும் தொலைவைப் பொறுத்து, பல்வகைப்பட்ட முக்கியத்துவத்துடன் அவ்வாளுநர்களின் அதிகாரம் வேறுபட்ட அளவில் இருந்தது. அரசாங்கத்தின் நிலப்பரப்பெல்லை, சில பெரிய மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. திருச்சினாப்பள்ளி, தின்னவேலி மற்றும் சத்தியமங்கலத்துக்கு ஆளுநர்கள் அரசநிர்வாகத்தால் நியமிக்கப்பட்டிருந்தனர். 1644ஆம் ஆண்டின் கடிதமொன்று,[7] 'திருச்சினாப்பள்ளியின் ஆளுநர், மதுரையில் வசித்த நாயக்கரைக் காட்டிலும் அதிகஅதிகாரம் கொண்டவராக இருந்தார்' என்கின்றது. வரலாற்றுக் குறிப்புகள் தின்னவேலியின் ஆளுநருக்கிருந்த உயர்மதிப்பு, அவரால் கைக்கொள்ளப்பட்ட அதிகாரம் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றன.[8] ஆளுநர்கள், கவர்னர்-ஜெனரல் என்றழைக்கப்பட்ட தளவாய்களின் கீழிருந்து இயங்கினார்கள். 1653ஆம் ஆண்டின் இயேசு சபையின் கடிதமொன்று, 'திருச்சினாப்பள்ளியின் கவர்னர்-ஜெனரல் கடுமையான முறையில், தனக்குக்கீழ் பணிபுரிந்த ஆளுநர்களிடம் பணிமுறைக் கண்டனங்களைத் தெரிவித்தார்' என்கின்றது.[9] ஜான் நியூஹாப், 'மதுரை நாயக்கரின் ஆட்சிப்பரப்பெல்லை, பல்வேறு சிறுநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒட்டுமொத்தத் தேசத்தின் நிர்வாகத்தைக் கவனித்த கவர்னர்-ஜெனரலைத் தாண்டி, சிறப்புத் தனியுரிமைகொண்ட ஆளுநர்கள் ஒவ்வொரு நாட்டையும் ஆண்டு வந்தார்கள்'[10] என்கின்றார். ஆளுநர்களுக்கு கீழே பாளையக்காரர்கள் அதிகாரம் நிறைந்தவர்களாக இருந்தார்கள். அவர்கள் சிறுதலைவர்களைக் கட்டுப்படுத்தும் ஆற்றலைக் கொண்டிருந்தார்கள். மானாமதுரை, சேந்தமங்கலம், மாறமங்கலம் மற்றும் சேலத்து அரசர்களும், தாராபுரம் மற்றும் பல்வேறு இடங்களைச் சேர்ந்த பண்ணைத்தலைமைகளும் இவ்வாறு இயங்கினார்கள் என்று, இயேசு சபை எழுத்தாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். வரலாற்றின் பக்கங்களில் கன்னிவாடி பாளையக்காரர், மிகச்சிறப்பாக, திண்டுக்கல்லைச்சேர்ந்த பதினெட்டு பாளையக்காரர்களுக்குத் தலைவர் என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றார்.

**உள்ளாட்சி நிர்வாகம்** - நிர்வாகத்தின் ஓர் அலகாக, கிராமங்கள் இருந்தன. பலகிராமங்கள் ஒன்றிணைந்து, பெரிய வட்டாரமாக இயங்கின. அதை நாடு என்றழைத்தார்கள். அது, மாகாணத்தின் ஒருபகுதியாக இருந்தது. அந்த 'நாடு'வை ராஜ்யா, தேசம், மண்டலம் அல்லது ராஷ்டிரா என்று பல்வேறு பெயர்களில் அழைத்தார்கள். மாகாணங்கள் நாடு, சீமை அல்லது மாகாணா என்று விளித்தார்கள். கிராமங்கள் கிராமம், மங்கலம், சமுத்திரம், குடி, ஊர், புரம், குளம், குறிச்சி, பட்டி மற்றும் பலபெயர்களில் அழைக்கப்பட்டன.[11] நிர்வாக வசதிகளுக்கு பல பெயர்களிட்டு

அழைக்கப்பட்டாலும், மாகாணம் பல நாடுகளால் ஆனது என்பது தெளிவாகின்றது. நாடு எனும்பெயர், நாட்டின் பல்வேறு பாகங்களில் பொதுவாக அழைக்கப்படும் ஒன்றாக இருந்தது. கிராமங்கள், பெருமளவு தன்னாட்சி உரிமையைப்பெற்றுத் திகழ்ந்தன. ஜான் நியூ ஹாப், 'ஒவ்வொரு கிராமமும் இரண்டு நீதிபதிகளைக் கொண்டிருந்தது. அவர்கள் குடிமக்களால் பெரிதும் மதிக்கப்பட்டனர்' என்று பதிவிடுகின்றார்.[12]

**மைய அரசின் நிர்வாகம்** - மைய அரசின் தலைமை அதிகாரிகள், தங்களுக்குக் கீழ் பணிபுரியும் பணியாளர்களைக் கொண்டு, தங்கள் துறைகளின் பணிகளை நிறைவேற்றுவார்கள். துறையின் உதவியாளர்களை, குமாஸ்தாக்களைப் பணியமர்த்தவும், பணியிலிருந்து நீக்கவும் சுதந்திர அதிகாரம்பெற்றவர்களாகவும் இருந்தார்கள். இவ்வாறானப் பொறுப்பு, நிர்வாகம் மேலோங்கு வதற்கு உத்வேகமளித்தது. 'சந்தேகமே இல்லை.... துறைத் தலைவர்கள் தங்கள் பணிக்காக, குறிப்பிட்ட அளவிலாக சம்பளம் என்று எதையும் பெறவில்லை. ஆனால், அவர்கள் பணியை உணர்ந்து, அரசர் அவ்வப்போது நிலங்களைக் கொடையாகவும் பணத்தை அன்பளிப்பாகவும் அளித்துவந்தார்' என்று நெல்சன் கூறுகின்றார்.[13] சிறப்புதருணங்களில் அரசரால் அலுவலர்களுக்கு வழங்கப்பட்ட வெகுமானங்களை நெல்சன், 'பணியாளர்களுக்கு வழங்கப்பட்ட ஊதியம்' என்று கருதுகிறார். அது அவசியமற்ற அனுமானமாகத்தான் இருக்கின்றது. விதி களுக்குப் புறம்பான வகையில், நாயக்க ஆட்சியில் சம்பளமுறை நடப்பிலிருந்தால், இயேசு சபையின் எழுத்தாளர்களின் பார்வையிலிருந்து அது தப்பித்திருக்க முடியாது. அதைக்கொண்டு, நாயக்க நிர்வாக முறையை அவர்கள், தங்கள் கண்டனத்தை பதிவுசெய்வதற்கான ஆயுதமாகக் கொண்டிருப்பார்கள்.

**நீதி** - நாயக்க ஆட்சியில் மைய அரசு, நீதித்துறையின் அமைப்பு முறையை விரிவாகக் கொண்டிருக்கவில்லை. நீதிபெரும்பாலும் உள்நாட்டிலேயே, அதாவது கிராம அளவிலேயே கிராம அலுவலர்களாலேயே நிர்வகிக்கப்பட்டது. மத்தியஸ்தம் பெருமளவில் வழக்கிலிருந்தது. சகோதரர்களிடையே, பிறப்பில் யார் மூத்தவர் எனும்கேள்விகள் உள்ளிட்ட, சர்ச்சைக்குரிய சொத்தை யார் அனுபவிப்பது போன்ற சம்பவங்கள் மத்தியஸ்தர்களால் தீர்வுகாணப்பட்டன.[14] சமூக மற்றும் மத உரிமைகள் உள்ளிட்ட பொது இயல்பான விவகாரங்கள், அரசராலும் அவரது அலுவலர்களாலும் விசாரிக்கப்பட்டன. இயேசு சபையின் பல கடிதங்கள், 'யாரிடத்தில் கேள்வி கேட்பது?' என்று, அரசருக்கு புகார்களைக் கொண்டுசென்றுள்ளன. நீதி பரிபாலன முறையை

பதிவு செய்திருக்கும் பிரயோன்ஸாவின் ஆதாரமொன்று, அத்துறையின் மீது சற்று வெளிச்சம் பாய்ச்சுகின்றது. 1665ஆம் ஆண்டில் அவர் எழுதியக் கடிதமொன்று, அவரது அவதானிப்பை இப்படிப் பகிர்கின்றது: 'பிரதானி போட்டிக் குற்றச்சாட்டை அல்லது முறையீட்டை பெரிதாகக் கண்டுகொள்வதில்லை.... விவாதங்கள் பகிரங்கமாக, எல்லோர் முன்னிலையிலும் நடக்கும்.... ஆளுநர், நீதிபதி மற்றும் அனைத்துப் பிரமுகர்களுக்கும் தகவல் அனுப்புவார். அவர்கள் உடனடியாக, வந்துசேருவார்கள். அவரும் ஆடம்பரமாக வந்துசேருவார். ஆளுநர், சாட்சிகளை மிரட்டலாக விசாரிப்பார். தான் கேட்டுக்கொண்டதற்கேற்ப, வாக்குமூலம் தரச்சொல்லி அவர்களைக் கட்டாயப்படுத்துவார்...... அனைத்து நடவடிக்கைகளும் மதுரைக்கு அனுப்பிவைக்கப்படும். அங்கிருந்து விரைவில் நீதிவரும்'.[15] இந்தக்குறிப்புகளை பொதுவிசாரணை முறைக்குப் போதுமான ஆதாரமாக எடுத்துக்கொள்ளலாம்.

***கடலோர அரசு*** - கடலோரப் பகுதிகளின் நிர்வாகம் போர்த்துக்கீசியர்கள் மற்றும் டச்சுக் காரர்களின் கைகளில் இருந்தது. தங்களின் கடற்துறைமுகங்களிலிருந்து வரும் வருமானத்தில் மட்டுமே நாயக்கர்களின் கவனம் குவிந்திருந்தது. ஜான் நியூஹாப்,[16] '1664ஆம் ஆண்டில் மதுரையின் ஏழு கடற்துறைமுகங்கள் உள்ளூர் நீதிபதிகளால் நிர்வகிக்கப்பட்டன. அவர்களின் ஆயுட்காலம் ஓராண்டு ஆகும். ஒவ்வொரு கிராமமும் நான்குநபர்களைத் தெரிவுசெய்யும். அவர்களில் இருவரை, டச்சு கிழக்கிந்தியக் கம்பெனியின் தலைமை இயக்குநர் தேர்ந்தெடுப்பார். அவர்கள், அவருக்குக் கடமைப்பட்டவர்களாக இருப்பார்கள். சமூக வழக்குகள் கிராம நீதிமன்றங்களில் விசாரணை செய்யப்பட்டன. அதேவேளையில், குற்றவழக்குகள் டச்சு இயக்குநரின் தலைமையிலான ஒன்பதுபேர்கொண்ட குழுவால், தூத்துக்குடியில் நடத்தப்பட்டன. கடலோரப் பகுதிகளில் போர்த்துக்கீசியர்கள் எஜமானர்களாகத் திகழ்ந்ததால், அவர்கள் சுயமான நிர்வாக முறையை மேற்கொண்டனர்.[17]

## 2. நிதி

***நிதி நிர்வாகம்*** - சிக்கல்கள் ஏதுமின்றி, குறிப்பிட்டக் காலவரைவுக்குள், விரைந்து வருமான வகைகளை வசூலிக்கும் நோக்கில், இந்நிர்வாக அமைப்பு உருவாக்கப்பட்டது. கிராம வருவாய் அலுவலர் மணியக்காரன் அல்லது அம்பலக்காரன் என்றழைக்கப்பட்டார்கள். கிராமங்களில் வசூலிக்கப்பட்டவை, தங்களுக்கு நேர்மேலதிகாரியான மாகாணத்தின் தலைவருக்கு

அனுப்பி வைக்கப்படும். அங்கிருந்து அவ்வசூல்தொகை தொடர்முறைநிகழ்வாக, பிரதானியின் கட்டுப்பாட்டுக்குள் இருக்கும் அரசரின் கருவூலத்துக்குக் கொண்டுசேர்க்கப்படும். நிலவரி, விளைச்சலில் பாதியாக வசூலிக்கப்பட்டது என, இயேசு சபையின் எழுத்தாளர்கள் குறிப்பிடுகின்றார்கள்.[18] நெல்சன், 'நிலவரியை மொத்த விளைச்சலில் பாதி' என்று கணக்கிடுகின்றார். அது, ஏற்றுக்கொள்ளக்கூடியதுதான். ஆனால், கழிவுகள் நீங்கியதுபோக, பாதியாகத்தான் பொதுவாக வசூலிக்கப்பட்டது' என்கின்றார். வரிவசூல் பெரும்பாலும் பணமாகவே வசூலிக்கப் பட்டது என்று இயேசு சபை சான்றளிக்கின்றது.[19] 1683ஆம் ஆண்டின் கடிதம், ஈகோஜி வருமானத்தைப் பணமாகத்தான் பெற்றார் எனக் கூறுகின்றது. நெல் விற்பனையில் அந்தளவுக்குப் பணப்புழக்கம் இருந்ததைக் காண முடிகின்றது. தஞ்சாவூரில் நிலவிய இந்தமுறை, மதுரையிலும் பரவியிருக்க வாய்ப்பிருக் கின்றது. மேலாக, பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே விஜயநகரப் பேரரசர்கள், வருமானத்தை பணங்கொடுப்பாகவே பெற்றார்கள். நாயக்கர்களின் வருவாய் வசூலிக்கும் செயல் முறைகளை, முழுஅளவில் விவரிக்கப் போதுமானத்தரவுகள் இல்லை என்பது வருத்தத்திற் குரியது.

**வருவாய் ஆதாரங்கள்** - தொடக்கக் காலத்தில் அரசுக்குப் பொதுவருமானம் தந்துவந்தது, நிலவரியே ஆகும். எல்லா நிலங்களையும் பாளையக்காரர்களிடம் ஒப்படைக்கவில்லை. அரசரின் தனியுரிமை நிலங்கள், பாளையக்காரர்களின் சிறிய அளவிலான நிலங்கள் ஒன்றுசேர்ந்து, அதிகவிளைச்சலைக் கொடுத்ததாக, நெல்சன் கருதுகின்றார். குறைவு ஏற்படாத அல்லது தவறாமல் வருமானம் அளிக்கக்கூடிய வளம்நிறைந்த சிறந்த நிலங்களை, அரசின் உபயோகத்திற்காக, நாயக்க வம்சத்தின் முதல்ஆட்சியாளர் பாதுகாத்துக்கொண்டதாகக் கருதப்படுகின்றது. தூரத்திலுள்ள மற்றும் உற்பத்திக்கு உகந்ததாக அல்லாதப் பெருநிலங்கள் பாளையக்காரர்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்தன. மேலும், அரசருக்குரிய நிலங்கள் நாட்டிலுள்ள மற்ற நிலங்களைக் காட்டிலும் கூடுதல் கவனத்துடன் பராமரிக்கப்பட்டன. அதனால் அரசாங்கத்தின் வளமை அதிகமாகவே இருந்தது. நிலமேம்பாட்டில் தனியார் நிலங்களைக் காட்டிலும் அரசு நிலங்களில் வேறுபாடு காணப்பட்டது. அரசாங்கத்துக்கு இரண்டாவது பெருவருமானத்தை அளித்தது, பாளையக்காரர்களிடமிருந்துப் பெறப்பட்ட திறைதான். விவசாயிகளிடமிருந்து வரியாகப் பெறப்பட்டதில் மூன்றில் ஒருபங்கை, பாளையக்காரர்கள் அரசாங்கத்துத் திறையாகச் செலுத்தினார்கள். காலசூழ்நிலைகளுக்கேற்ப வருமானத்தில்

மாற்றம் ஏற்பட்டது. நாயக்க ஆட்சியின் தொடக்கக் காலத்தில் பாளையக்காரர்களால் உற்பத்தியில் ஈடுபடமுடியவில்லை. விவசாயம்செய்வதற்குப் பல தடைகள் இருந்தன. பாளையக்காரர்கள் மெல்லமெல்லத் தடைகளை வென்றெடுத்து, மேம்பாடடைந்தார்கள். பல தருணங்களில் சேதுபதிகள், கன்னிவாடி பாளையக்காரர் மற்றும் பலர், தாங்கள்செய்த பொதுச்சேவைகளுக்கான வெகுமதிகளாக அவர்கள் செலுத்தவேண்டிய ஒட்டுமொத்தத் திறையும் தள்ளுபடிசெய்யப்பட்டன. பாளையக்காரர்களின் மனநிலையும், பருவகாலச் சூழ்நிலையும் முறையானத் திறை வருமானத்தை நிர்ணயித்தன. கிளர்ச்சி மற்றும் கொந்தளிப்பானக் காலங்களில் அவர்கள் திறைசெலுத்துவதற்கு அவதிப்பட்டார்கள். வலிமையில்லாத அரசரால் முழுஅளவிலானத் திறைத்தொகையை அவ்வளவு எளிதில் பெற முடிந்ததில்லை. அந்தவகையில் அதுவொரு நிரந்தரமில்லாத, நிச்சயமற்ற வருமானமாக இருந்தது. முத்துக்குளித்தலும் சங்குகுளித்தலும் ஓரளவு வருமானத்தைத் தந்துவந்தன. ஆனால் அதை நம்பிக்கொண்டிருக்க முடியாது. முத்துக்குளித்தலும் சங்கு குளித்தலும் தொடர்ந்து நடைபெறாது, மனம்போனபடி நடந்தது. பலநேரங்களில் அந்நடவடிக்கைகளும் வருமானமும் உவப்பானதாக இருந்ததில்லை. மேலும், மதுரை அரசருக்கு கடலோரங்கள் ஓரளவு வருமானத்தைத்தான் தந்துவந்தன. மறவர் நாட்டின் அரசர், கடலோரப் பகுதிகளிலிருந்து கிடைக்கும் வருமானத்தை தன்வகையில் எடுத்துக்கொண்டார். முத்துகளுக்கும் சங்குகளுக்கும் சொற்ப விலையை நிர்ணயித்து, லாபத்தின் பெரும்பகுதியை டச்சு நிர்வாகம் எடுத்துக்கொண்டது. நிலவரி, பாளையக்காரர்கள் செலுத்தியத் திறை மற்றும் முத்துக் குளித்தல் ஆகியன வருவாய்க்கான முக்கிய ஆதாரங்களாக இருந்தன.

எண்ணற்றவகையில், பல்வேறுவிதமான வரிகள் வசூலிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுகளில் காணப்படும் அவ்வரிகள் குறித்த விவரணைகளுக்கும், சம்பவங்களுக்கும் ஆதாரங்கள் அறியக் கிடைக்கவில்லை. அக்கல்வெட்டுகள், உழவு மற்றும் பண்டார வாடை,[20] ஜோடி மற்றும் விராடா[21] என்று குறிப்பிடுகின்றன. நெசவுத் தறிகளுக்கும்[22] நெசவாளர்களுக்கும்[23] அதுதொடர்பான ஏற்றுமதி, இறக்குமதிக்கும் வரிகள்[24] விதிக்கப்பட்டுள்ளன. நிலம் மற்றும் அதனுடனானத் தண்ணீர் இணைப்புக்கு, சிறுவரிகளும் சுங்கவரியும் வசூலிக்கப்பட்டன. நவீன நிலைப்பாட்டிலிருந்து பொருளாதார முறையல்லாதவகையில், பல்லடுக்கு முறையில் வசூலிக்கப்பட்ட அவ்வருமானத்தை அரசாங்கம் எவ்வாறு மதிப்பிட்டது என்பதை அறியமுடியவில்லை. குறிப்பாக, வரிகளும்

அதன்தன்மைகளும், ஆய்வுக்குப்போதுமானத் தரவுகள் கிடைக்கப்பெற்றும் பரிசீலிக்கப்படவில்லை. வரிவிதிப்பு முறையில் மக்கள்மீது சுமத்தப்பட்டப் பளுவை, அதனை அவர்கள் செலுத்திய விதம் குறித்த ஆய்வுக்குப் போதுமான தரவுகள் இல்லை. நெல்சனும் ரங்காச்சாரியும், குறிப்பாக பின்னவர், அனைத்துவித மான வரிகளும் விஜயநகரப் பேரரசர்களாலும் மைசூர் அரசர் களாலும் விதிக்கப்பட்டவை என்று கருதுகின்றார். அதனை நாயக்க அரசர்கள் குடிமக்களிடமிருந்து வசூல்செய்யும் பணியைச் செய்தார்கள் என்று கூறுகின்றார். அந்தவகையில் இருவரிடமும் பெரிய பட்டியலொன்று இருக்கின்றது. ஆனால் அந்தநடைமுறை மதுரைக்குப் பொருந்துவதற்கு எந்தவொரு நேரடி ஆதாரமும் இல்லை. இதுபோன்ற சில வரிகள், கோவில்களுக்கும் அற நிலையங்களுக்கும் செலுத்தப்பட்டன. பல்வேறு கல்வெட்டு ஆதாரங்கள், எண்ணற்றவகையான வரிகுறைப்புகளைப் பற்றியும் பேசுகின்றன. மெச்சத்தக்க சில பணிகளைப் பாராட்டி, தனிநபர் களுக்கும், கோவில்களுக்கும் அரசுநிலங்களின் ஒருபகுதி வழங்கப் பட்டத் தகவல்களையும் அவை பேசுகின்றன. அரசு அலுவலர் களுக்கும் அறநிலையங்களுக்கும் அவ்வப்போது, வரியில்லாத சர்வமான்யங்களாக கிராமங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன.

**மொத்த வருமானம்** - ஆய்வுப்பணியை மேற்கொண்ட டெய்லரும் நெல்சனும்,[25] திருமலை நாயக்கரின் வருமானம்குறித்த ஒரு மதிப்பீட்டை தெரிவிக்கின்றார்கள். மெக்கன்ஸி மானுஸ்கிரிப்ட் குறிப்பு, 'பொதுவருவாயிலிருந்து திருமலை நாயக்கர் ஒவ்வொரு லட்சத்துக்கும் ஓராயிரம் பொன்களை, வழக்கமான மற்றும் சிறப்புநிகழ்ச்சிகளுக்கும், கோவில் திருவிழாக்களுக்கும் என ஒதுக்கினார். இந்த ஒதுக்கீட்டை முறையாக நிறைவேற்ற, ஆண்டுக்கு நாற்பத்து நான்காயிரம் பொன்களை வருமானம் தரக்கூடிய அளவில், கோவில்களுக்கு நிலங்களை வழங்கினார்' என்கின்றது. டெய்லர், 'திருமலையின் ஒட்டுமொத்த வருமானம் நாற்பத்து நான்கு லட்சம் பொன்கள்.[26] அதிலிருந்து பெறப்பட் டிருக்கலாம்' என்று கருதுகின்றார். சுந்தரேஸ்வரக் கடவுளுக்கும் மீனாட்சிக்கும் நாற்பத்து நான்கு ஆயிரம் பொன்களைத் தரக்கூடிய அளவிலான நிலங்களை வழங்கினார்' என்கின்றன, மதுரைத் தலவரலாறு ஆவணங்கள். வரலாற்றுத் தரவுகளில் காணப்படும் இக்குறிப்புகள், மதிப்பிட முடியாத உண்மை ஆவணங்களாகக் கருதுவதற்கு சற்றே கடினமாக இருக்கின்றது. எனினும், இவற்றைக் குத்துமதிப்புக் கணக்காகக் கொள்ளலாம்.

நாயக்கர்களின் மொத்த வருமானம் குறித்தத் தகவல்கள் இயேசு சபையின் எழுத்தாளர்கள் விகோ மற்றும் பர்ராதாஸ் ஆகியோரின்

எழுத்துகளில் நிரம்பிக்கிடக்கின்றன. முன்னவரின் 1611ஆம் ஆண்டின் ஆகஸ்ட், 30ஆம்தேதியிட்ட கடிதம், 'மகா அரசரான மதுரை நாயக்கர் மற்றும் தஞ்சாவூர், செஞ்சி அரசர்கள் ஒவ்வொருவரும் பிஸ்நகருக்கு ஆண்டுக்கு ஆறுமுதல் பத்து மில்லியன்வரை செலுத்தினார்கள்.[27] அல்லது செலுத்த வேண்டி யிருந்தது' என்கின்றது. 'திறை என்பது பொதுவாக, வருமானத்தில் மூன்றில் ஒருபங்கு. அந்தவகையில் நாயக்கர்களின் மொத்த வருமானம் பதினெட்டு முதல் முப்பதுமில்லியன் பிராங்க்குகளாக இருக்கலாம்' என்கின்றார், விகோ. 1616ஆம் ஆண்டில் பர்ராதாஸ், 'மதுரையின் மகா அரசர் நாயக்கர், ஒவ்வொரு ஆண்டும் அறுநூறு ஆயிரம் பகோடாக்களைச் செலுத்தினார்'[28] என்று குறிப்பிடுகின்றார். இதன்மூலம் நாயக்கரின் ஆண்டு வருமானம் பதினெட்டு லட்சம் பகோடாக்கள் என்று கணக்கிட முடிகின்றது. பதினான்கு பகோடாக்கள் எண்பது பிராங்குகள் என்று இயேசு சபையின் எழுத்தாளர் கணக்கிடுகின்றார்.[29] ஒரு பிராங்க், 9.6 பென்ஸ்கள். அந்தவகையில் பதினெட்டு லட்சம் பகோடாக்கள், 411,428 பவுண்ட்டுகள். வில்க்ஸின், ஐந்தாயிரம் பகோடாக்கள் 1,840 பவுண்ட்டுகளுக்கு சமமானது' என்று மதிப்பீடு செய்கின்றார்.[30] வில்க்ஸின் மதிப்பீடு சரியாக இருக்கலாம். விகோ மற்றும் பர்ராதாஸின் மதிப்பீடுகள் குறைவாகத் தெரிகின்றன. நாற்பத்து நான்கு லட்சம் பொன்கள் 880,000 பவுண்ட்டுகளுக்கு இணையானது என்கின்றார், நெல்சன். ரங்காச்சாரி, அதனை 825,000 பவுண்ட்டுகள் என்கின்றார். ரங்காச்சாரி ஒரு பொன்னின் மதிப்பை அரை பகோடா என்று கணக்கிடுகின்றார்.

நெல்சனின் இந்த மதிப்பீடு மனம்போனபடியானதாகவும் செயற்கையானதாகவும் படுகின்றது. இயேசு சபையின் எழுத்தாளர்களின் மனதில் ஊன்றிப்போனக் கருத்தையே அவரும் கையாண்டிருக்கின்றார். அந்தவகையில் அதிகபட்ச வருமானத்தைக் காட்டிய விகோவின் தாக்கலை எடுத்துக்கொண்டிருக்கின்றார். ஆனால், விகோவின் உச்சபட்சத்தொகை மதிப்பீட்டை கையாளு வதற்கானக் காரணத்தை போதுமான அளவில், அவர் தெளிவுபடுத்த வில்லை. 'மதுரையின் அரசர் பெருந்தொகையைச் செலுத்தினார்'[31] என்று தற்செருக்குடன் ஆராயாது யூகம் செய் கின்றார். தஞ்சாவூர் மற்றும் செஞ்சியைக் காட்டிலும் மதுரை தூரத்தில் இருந்தாலும், வளத்துடன் இருக்கவில்லை. நிலம் பெருமளவில் களராகவும், காடுகளாகவும் இருந்தது. நாயக்கர் களின் ஆட்சியின்போதுதான் மதுரையின் பெரும்பகுதி நிலங்களில் பயிரிடப்பட்டன. காட்டு விலங்குகளும் கொள்ளைக்காரர்களும் விவசாய முன்னேற்றத் துக்குப் பெருந்தடையாக இருந்தனர். அந்தவகையில் நெல்சனின்

அவதானிப்பு நிரூபிக்கப்பட வேண்டியுள்ளது. பர்ராதாஸின் அறிக்கை, நெல்சனுக்கானதாக இருக்கவில்லை. அவர் செய்தத் தவறுகளில் மிகப்பெரியதாக, நாற்பத்து நான்கு லட்சம் பொன்கள் என்பதை யூகக் கருத்தாகக் கொள்ளவேண்டியிருக்கின்றது. வரலாற்று ஆவணங்களில் குறிக்கப்பட்டுள்ள அத்தொகை, நிலவருவாய் மட்டுமே. ஒட்டுமொத்த வருவாய் அல்ல. அரச நிலங்களிலிருந்து பெறும் வருவாயான நாற்பதுநான்கு ஆயிரம் பொன்களைத்தவிர, மொத்த வருவாயில் ஒருசதவீதத்தைக் கணக்கிட்டுத் தேவையான தொகைக்கேற்ப திருமலை நாயக்கர் நிலங்களை வழங்கியிருக்கலாம். அவர் அளித்த குறிப்பிடப்பட்ட அந்த அரசநிலங்கள், மொத்தவருவாய்க்குள் கணக்கிடப்பட்டிருக்க வேண்டும். திருமலை நாயக்கர், பொதுவருவாயிலிருந்து தானங்கள் அளித்தார் என்பது, வரலாற்று ஆவணங்கள் மூலம் தெளிவாகின்றது. அதேவேளையில், நெல்சனின் யூகங்களைத் தள்ளுபடி செய்கின்றன.

நெல்சன் மதிப்பீடு செய்வதுபோல, திருமலை நாயக்கரின் வருமானம் பெரிய அளவில் 1,200,000 பவுண்ட்களான இருக்கமுடியாது. அதிகபட்சமாக ஏழுலட்சம் பவுண்ட்டுகளைத் திரட்டியிருக்க முடியும். இந்தமதிப்பீடு பர்ராதாஸ், விகோ மற்றும் வரலாற்றின் பக்கங்களோடு ஒத்துப்போகின்றன. அத்தொகை, ஒட்டுமொத்த வரவு-செலவுத் திட்டத்துக்கானதாக இருக்கலாம். அது, வருமானம் மட்டுமே அல்ல. அவரது காலகட்டத்தில் வரிக்குறைப்பு, அரசு நிலங்களைத் தானம்கொடுத்தல் அடிக்கடி செய்யப்பட்டது. அந்தவகையில், அந்த வருமானத்தைக் கணக்கில்கொள்ள முடியாது. மேலுமங்கே நிரந்தரமற்ற வருவாய் ஆதாரங்களும் இருக்கவே செய்தன.

தனது ஆய்வைத் தொடர்ந்து, நெல்சன் மேலும் சொல்கின்றார். ‘திருமலை நாயக்கரின் மொத்த வருமானம் 1,200,000 பவுண்ட்டுகள். அது, தற்போதைய தேதியில் (1868), ஐம்பது லட்சம் பவுண்ட்டுகளுக்கு இணையானது. ஏனென்றால், பணத்தின் மதிப்பு நாற்பது மடங்குக்கும் மேல் அதிகரித்திருக்கின்றது’.[32] 1713ஆம் ஆண்டின் அரிசிவிலையுடன் அவர், 1863-66ஆம் ஆண்டுகளின் விலையை ஒப்பிடுகின்றார். ஒண்ணரை நூற்றாண்டில் அது, நாற்பது மடங்கு அதிகரித்திருந்தது. 1713ஆம் ஆண்டின் மார்டினின் குறிப்புகளைக் கையாண்டு, அவர் இந்த முடிவுக்கு வந்திருக்கின்றார். அந்தக்குறிப்பில், ‘ஒரு பணத்துக்கு, எட்டு மரக்கால் நயமான அரிசியைப் பெறமுடிந்தது.[33] அது ஒருமனிதனுக்கு, பதினைந்து நாட்களுக்குப் போதுமானதாக இருந்தது. ஆனால் மழைப் பொய்த்துப்போன காலங்களில் அதன்விலை, பன்மடங்கு உயர்ந்தது. அப்போது அதேஅளவு நயமான அரிசிவிலை, நான்கு

பணமாக இருந்தது' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. நெல்சன் மேலும், 'எட்டு மரக்கால் என்பது, தொண்ணூத்து ஆறுபவுண்ட்டு களுக்கு இணையான எடையைக் கொண்டது. அது ஒரு பணம் அல்லது இரண்டேகால் பென்ஸ்க்குக் கிடைத்தது. அதனால் நெல்சன், ஒருபொருளின்விலை நாற்பதுமடங்கு அதிகரித்திருப் பதாக, திகைப்பூட்டும் முடிவுக்கு வந்துசேருகின்றார்.[34] ஆனால் அவர் முன்வைக்கும் தரவுகள், வெளிப்படையாகக் கேள்விக் குரியனவாக இருக்கின்றன. இயேசு சபையின் எழுத்தாளர், மேற்குறித்தத் தரவுகளை மறவநாட்டின் நிலைமையைக் கணக்கில்கொண்டு எழுதியிருக்கின்றார். அவ்வெழுத்தாளர், சிலவேளைகளில் அங்கே அரிசியின் விலை, பெரும்ஊசலாட்டத்தி லிருந்து, முப்பத்தியிரண்டு மடங்குவரை அதிகரித்திருந்ததையும் குறிப்பிட்டிருக்கின்றார்.[35] அவர் குறிப்பிட்டிருந்ததில் மிகக்குறைந்த விலையை நெல்சன் கணக்கில் எடுத்துக்கொண்டிருக்கின்றார். அதே மார்டின், 'வேறெங்கும் இதுபோலானதொரு வழிமுறை இல்லாத படிக்கு, மறவர் நாட்டில் மழை பொழிந்துதரும் நீரில் ஒருசொட்டுத் தண்ணீரைக்கூட வீணாக்காமல் ஓடை, நீரோட்டங்கள் .....ஆம் ஆண்டின்வழியே ஒன்றுபடுத்திப் பாதுகாக்கும் முன்னெச்சரிக்கை யுடனான ஏற்பாடுகள் அங்கே இருந்தன' என்கின்றார். மறவர் நாட்டின் நீர்ப்பாசன வசதிகளைக் கண்டு அவர் வியந்தோதுகின்றார். ஆனால் இந்தநிலைமைகளையெல்லாம் நெல்சன் கணக்கிலெடுக்க வில்லை. அரிசியின் குறைந்த விலையை மட்டும் பதிவுக்கு எடுத்துக்கொண்டு, அதனை மதுரைக்குப் பொருத்திப் பார்க்கின்றார். மேலும் அவர், பணம் மற்றும் பென்சுக்கு இணையான மதிப்பீட்டைச் சரியாகச் செய்யவில்லை. லியோன் பெஸ்ஸி, 'பணம்' என்பது தங்கக்காசு. 120 ரெய்ஸ் மதிப்புடையது. அதாவது, ஐம்பது சென்டைம்ஸ். அந்தவகையில் ஒரு பணம் என்பது 4.8 பென்சுக்கு இணையானது.[36] அதன்படி, இரண்டுபங்கு மதிப்பீட்டை அவர் பொருத்துகின்றார். திவான் பகதூர் ஸ்ரீனிவாச ராகவையங்கார்,[37] மார்டினின் கடிதத்தை மேற்கோளாய் வைத்து, 'ஒருமனிதனுக்கு பதினைந்து நாட்களுக்கு நாற்பத்தைந்து பவுண்ட் அரிசி தேவையெனில், நெல்சனின் மதிப்பீடான பணம் இரண்டரை பென்சுக்கு இணையாக, 1713ஆம் ஆண்டின் கணக்கீட்டின்படி, 1893ஆம் ஆண்டில் பன்னிரெண்டு மடங்குதான் அதிகரித்திருக்கும். பணத்தின் மதிப்பீடு மிகச்சரியாக செய்யப்பட்டிருந்தால், நெல்சன் குறிப்பிடுவதுபோல அது, நாற்பதுமடங்கு அதிகரித்திருக்க வாய்ப்பில்லை. ஆறுமடங்கு மட்டுமே அதிகரித்திருக்கும். இதனை டாக்டர். வின்சென்ட் ஏ. ஸ்மித் உறுதிசெய்கின்றார்.[38] அக்பரின் வருமானமான நாற்பது மில்லியன் பவுண்ட்ஸ், சமகாலத்தில்

இருநூறுமில்லியன் பவுண்டாக மட்டுமே கணக்கிடப்பட்டது. அந்தவகையில், விலை யுயர்வு ஐந்துமடங்கு மதிப்பிடப்பட்டது.

**செலவீனம்** - நாயக்கர்களின் சாதாரணச் செலவீனங்கள் வருமானத்திற்கேற்ற விகிதாச்சாரத்தின்படியாக, ஒருபோதும் இருந்ததில்லை. கருவூலத்திலிருந்து செலவுகளுக்காக வழங்கப் படும் வழக்கமான பணவழங்கீடுகள் மிகவும் குறைவுதான். அந்தத்தொகை பெரிய அளவிலானதும் இல்லை. நாயக்கர்களின் ராணுவப் பராமரிப்புக்குப் பெருந்தொகை தேவையாக இருக்க வில்லை. பாளையக்காரர்கள் நாயக்கர்களுடன் செய்துகொண்ட மூல ஒப்பந்தத்தின்படியிலான எண்ணிக்கையில், துருப்புகளை அனுப்புவதற்குக் கடமைப்பட்டவர்களாக இருந்தார்கள். எப்போ தாவது தொழில்முறை போர்வீரர்களும் கூலிப்படையினரும் பணியமர்த்தப்படுவது உண்டு. அவர்களுக்கு அப்போதே, சம்பளமோ கூலியோ விநியோகிக்கப்பட்டுவிடும். நிர்வாகம் உச்சபட்சமாக நிர்வகிக்கப்படவில்லை. பெரும்பாலும் மரபுரீதியான வகைமையில் நடத்தப்பட்டது. அரசாங்கத்தின் சாதாரணச் செலவீனங்களான அலுவலர்கள், ராணுவம், காவல்துறை மற்றும் நீதித்துறை அலுவலர்களுக்கானச் சம்பளம் மட்டுமே இருந்துவந்தது. அது, பொதுவருவாயை பெரிய அளவில் பாதித்துவிடவில்லை.

செலவீனங்களில் முக்கியத்துவமுடையதாக இருந்தது, மேலே குறிப்பிடப்பட்டதைத் தவிர்த்து, பொதுப்பணிகளும் தாராளமாக வழங்கப்பட்டக் கொடைகளும்தான். குடிமக்களின் ஆன்மீக விருப்பங்களைப் பூர்த்திசெய்ய, தேவையானதாகக் கட்டப்பட்டக் கோவில்களுக்கும், அவற்றைப் பராமரிக்க ஆகும் செலவே, பிரதானமாக இருந்தது. இந்தச்செலவீனத்தை, மக்களிடம் செல்வாக்கு பெறவிரும்பும் ஒரு இந்து அரசரால், தவிர்க்க முடிவதில்லை. அதுபோலவே, நாட்டில் நிகழ்வுகளை நடத்த, பொது அறநிலையங்கள் தேவையாக இருந்தன. அவற்றை நிர்வகிக்க வேண்டியும் இருந்தது. மேலும், புனிதநூல்களில் சொல்லப்பட்டதற்கேற்ப நடத்தப்படும் விழாக்கள் முக்கியச் செலவீனங்களாக இருந்தன. அரசின் மீதித்தொகையில் பெரும் பகுதியை நீர்ப்பாசனப் பணிகள் வாரிக்கொண்டன. இவ்வாறாக, முறையானச் செலவீனங்கள் பெரிய அளவில் இருக்கவில்லை. திரும்பத்திரும்பச் செய்யவேண்டியச் செலவீனங்களும் இருக் கவில்லை. அவை நாயக்க நிதியின் முக்கிய அம்சங்களாக இருந்தன. ஒவ்வொரு ஆண்டும் பெருமளவில் உபரியாக வருமானம் சேர்ந்து குவிந்துகொண்டிருந்தது. பதுங்கிக்கிடந்த உபரி வருமானத்தி லிருந்து பெரியஅளவிலான செலவீனங்கள் செய்யப்பட்டன. உபரித்தொகைக் கொண்டு போர் செலவுகளுக்கும், மோசமானப்

பருவ சூழ்நிலைகளிலிருந்து மீளவும், குடிமக்கள் நலனுக்கான ஆன்மீக மற்றும் பயன்பாட்டுக்கானத் தேவைகளுக்கு ஆதார நோக்கத்துடன் செலாவணியாகும் பணிகள் மேற்கொள்ளப்பட்டன. நவீன வரவு-செலவின் தலையாயச் சிறப்புப் பண்புகளை பாதுகாக்கும் நோக்கம் அக்காலகட்டத்தில் இருக்கவில்லை. நமதுகாலத்தின் ஒரு சிறந்த நிதியாளரின் பணி, லாபமோ அல்லது நட்டத்தையோ கொண்ட வரவுசெலவுத் திட்டத்தை உருவாக்குவதுதான். அந்த வரவு-செலவுத் திட்டம் உபரியையோ அல்லது பற்றாக்குறையையோ கொண்டிருந்தால், அவர் முன்னோக்கி அறியும் திறனில் குறைந்தவராகவோ அல்லது குறைந்தத் தகுதிகளைக் கொண்டவர் என்று பழிக்கப்படுதலுக்கோ அல்லது கைவிடப்படுதலுக்கோ உள்ளாவார். இன்றையக் காலகட்டத்தில் நிதி மேலாண் உலகம் பெருமளவு வளர்ந்துள்ளது. மிகையான மற்றும் எதிர்பாராதச் செலவீனங்களைச் சமாளிக்கும் சாத்தியங்கள் எந்தவொரு பொருளும் கையிருப்புமில்லாமலேயே அதிகளவில் உள்ளன. ஆனால் முற்காலத்தில், எதிர்பாராத செலவீனங்களுக்காக, விலையுயர்ந்த உலோகங்களை முக்கியப் பொருளாக பாதுகாப்புடன் குவித்துவைத்திருப்பார்கள். அந்தவகையில் நாயக்கர்கள் வழமைக்குமாறாக, உபரி வருமானத்தைக் குவித்துவைத்திருக்கவில்லை. நாட்டின் சாதாரணத் தேவைகளுக்கும் குடிமக்களின் நல்வாழ்வுக்கும் வகைதொகையின்றி உபரிநிதி செலவிடப்பட்டது.

நாயக்க நிதி நிர்வாக முறைக்கு, இயேசு சபை அதற்கான அங்கீகாரத்தை அல்லது உரிய தகுதியைத் தராமல், தரமற்றக் கண்டனங்களைத் தெரிவிக்கின்றது. பிற்சேர்க்கை 'அ'வில் மொழிபெயர்த்து இணைக்கப்பட்டுள்ளவற்றின் சாறு, கற்பிதங்கள் கூட நம்பக்கூடியதாக, நாயக்கர்கள்மேல் முடிந்தளவுக்கு, மோசமான வெளிச்சத்தையே பாய்ச்சுகின்றது. 'அநீதி, அட்டூழியம், கொடுமை, அடக்குமுறை, மக்களை வறுமைக்குள் தள்ளியிருந்தது. அது, வழக்கமானதாகவும் ஆகியிருந்தது' என்கின்றது. ஆனால் விவரங்களைக் கண்ணுறும்போது, ஓர் அரசு, கொடுங்கோன்மை மற்றும் அநீதிகளின் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டிருக்கும் என்பதை நம்புவதற்குக் கடினமாக இருக்கின்றது. நாட்டின் முன்னேற்றத்திற்குப் பங்களிப்புச் செய்யாமல் இருக்க முடியாது. அதுபோல, எதிரிகளின்மீதுகூட குறைந்தகாலத்துக்குத்தான் பகைமையை காட்டமுடியும். அப்படியானநிலையில் இக்கூற்றுகள் நம்புவதற்குச் சிரமம்தருவதாக இருக்கின்றன. மிகைப்படுத்தப்பட்ட அந்தச்சித்திரங்களை இயேசு சபை மெய்ப்பித்துக் காட்டவில்லை. அவை சர்வதேச அளவிலானத் தவறான வாசிப்புக்கும்

உண்மைகளைத் திரிப்பவைகளுமாக, மொன்னையாக உடன்பட்டுப்போகின்றன. நாயக்க ஆட்சியாளர்களால் நாட்டுக்கு அளிக்கப்பட்ட நல்லபல விஷயங்கள் நிறைய இருக்கவே செய்கின்றன. அதை இயேசு சபையின் பல குறிப்புகள் நேரடியாக வாதிட்டு மறுக்கின்றன. மோசமான ஆட்சிக்கு இந்துமக்களின் வலுவான உணர்வு எதிராக இருந்தது. வரலாற்று ஆவணங்களில் நாயக்க ஆட்சியாளர்கள் புகழப்பட்டதெல்லாம் பொதுவாக, அவர்களின் பதவியிலிருந்து இறங்கியபின்புதான். ஆயினும், நாயக்க ஆட்சியாளர்களில் சிலர் கொடூரமான ஆட்சியை மேற்கொண்டார்கள் என்பதை ஒத்துக்கொள்ளத் தான்வேண்டும். தவறான நிர்வாகத்தால் சீரழித்தனர். நாட்டின் வளத்தையும் செழிப்பையும் பலவீனப்படுத்திய அது, இறுதியில் ஒன்றுமில்லா மலேயே ஆக்கிவிட்டது. ஆயினும், இயேசு சபை எழுத்தாளர்களின் கருத்து, 'மதுரை நாயக்கர்கள், தஞ்சாவூர் மற்றும் செஞ்சி ஆட்சியாளர்களைக் காட்டிலும், அவர்களுக்குப் பின்வந்த மராத்தியர்கள் மற்றும் முகம்மதியர்களின் ஆட்சியைக் காட்டிலும் நல்ல ஆட்சியையே வழங்கினார்கள்' என்பதாக இருக்கின்றது. அவர்கள் ஆட்சிசெய்தக் காலத்தில், மற்ற ஆட்சியாளர்களைக் காட்டிலும் நன்நிர்வாகத்தில் மேலானவர்களாகவே இருந்தார்கள். நாயக்கர்களின் ஆட்சியின் உடனடித்தொடர்ச்சியாக முகம்மதியர்கள் நடத்திய ஆட்சி, மிக மோசமானதொன்றாகும். கால்டுவெல், 'சமகால ஆட்சியில் கூலிக்கு ஆட்சி செய்தவர்களின் சகிக்க முடியாதக் கொடூரத்தை' தனது குறிப்புகளில் பதிவு செய்கின்றார்.[39] 'நாயக்கர்களின் நிலசீர்திருத்தம், கர்நாடக நவாபுகளின் சீர்திருத்தத்துடன் ஒப்பிடும்போது ஒளிபொருந்தியதாக இருக்கின்றது' என்கின்றார், ஏ.ஜே.ஸ்டூவர்ட்.[40] தென்னிந்தியாவில், சமகாலத்தின் ஆட்சியாளர்களாக நாயக்கர்கள், தகுதிவாய்ந்த மிக உயர்ந்த இடத்தை ஆக்கிரமித்துக் கொள்கின்றார்கள். அதுபோல, தங்களுக்குப் பின்வந்த ஆட்சியாளர்களைக்காட்டிலும் உயர்ந்தவர் களாகவே இருக்கின்றார்கள். இன்றைய மதுரையுடன் ஒப்பிடும்போது, நிர்வாக மற்றும் நிதிமுறைகள் அவர்களுக்குப் புகழ்சேர்க்கவில்லை. உலகளவில், மாறிவரும் தொழில் நுட்பங் கள் எல்லா இடங்களிலும் புகுவது இயற்கையான ஒன்று. இந்நிலையில் எல்லா இடங்களில் தனது ஆக்டோபஸ் கரங்களை விரித்துவிட்ட ஆங்கிலேய நிர்வாகம், நாயக்கர்களின் ஆட்சியின் மேன்மையை அங்கீகரிக்கப்பவர்களாக இல்லை.

## 3. சமூகவாழ்வு

அமைதியும் ஒழுங்கும்- வலுவான அரசாங்கத்தை நிறுவுவதற்காக, நாயக்க ஆட்சியாளர்கள் பல்வேறு முயற்சிகளை

மேற்கொண்டார்கள். அரசுக்குக் கட்டுப்படாத சக்திகளைக் களையெடுத்தார்கள். முரண்டுபிடித்தப் பாளையக்காரர்களின் கொட்டத்தை ஒடுக்கினார்கள். நாடோடிக் கொள்ளைக் கும்பலை தண்டனையளித்து மட்டுப்படுத்தினார்கள். நாயக்க ஆட்சியின் பிந்தையக் காலத்தில் மற்றும் நாட்டில் குழப்பம் நிறைந்தத் தருணங்களில், உள்ளூர் ஆட்சியாளர்களின் நிலையற்ற மனப்போக்கினால் கடும்பாதிப்புக்கு உள்ளாகினர். மனிதர்கள் இழைக்கும் கொடூர செயல்பாடுகளைத் தவிர்த்து பஞ்சம், கொள்ளை நோய் மற்றும் வெள்ளப் பெருக்கு உள்ளிட்டவை சமூகத்தின் - வாழ்வின் - பாதுகாப்பின்மைக்குக் காரணிகளாக அமைந்தன. இந்த அழிவு சக்திகள் எப்போதுமே தொல்லை கொடுத்துக்கொண்டிருப்பவை அல்ல. ஆயினும், அவ்வப்போது ஏற்படும் இவ்வலுவான அழிவை, மனித ஆற்றலால் கட்டுப்படுத்த முடியாது போய்விடுவதுண்டு. அடர்காடுகளின் பெரும்பகுதி அழிக்கப்பட்டு, மக்கள்வாழ்வுக்கு ஏற்றபடி மாற்றியமைக் கப்பட்டன. விவசாய வளத்துக்காக அந்நிலங்கள் மேம்படுத்தப் பட்டன. ஆயினும் மேம்படுத்தப்படாமல் விடப்பட்ட நிலங்கள் பெருமளவு இருந்தன. அவை உயிர்களுக்கும் உடமைகளுக்கும் துன்ப நெருக்கடியைக் கொடுப்பவையாக அமைந்தன. அங்கே, காட்டுவிலங்குகளும் கொள்ளையர்களும் தஞ்சம்கொண்டிருந்தனர். அழிவுவேலைகளில் ஈடுபடும் இவையெல்லாம் முற்றிலுமாக அழிக்கப்படவில்லை. திருமலை நாயக்கரின் கல்வெட்டொன்று,[41] புலியை வேட்டையாடிக் கொன்றவருக்கு வெகுமதி அளிக்கப்பட்டதைப் புகழ்ந்து பேசுகின்றது. 1662ஆம் ஆண்டின் இயேசு சபையின் கடிதம்,[42] மதுரையை ஒட்டியுள்ளப் பகுதிகளில் ஓநாய்கள், கரடிகள் மற்றும் புலிகள் உலவியதைக் குறிப்பிடு கின்றது. அதே கடிதங்கள் மக்கள் பயத்துடன் வாழ்ந்ததையும் அம்பலப்படுத்துகின்றன. பயணங்கள் மற்றும் விரைவுப் போக்குவரத்து என்பது பாதுகாப்பாகவும் எளிமையானதாகவும் இருக்கவில்லை.

**வர்த்தகமும் தொழில்களும்** - நாயக்க ஆட்சியாளர்கள் வர்த்தகத்துக்குப் போதியளவில் ஊக்கமளிக்கவில்லை. கடல்குறித்த ஞானம் அவர்களுக்கு அதிகமாக இல்லாததால், வெளிநாட்டு வர்த்தகத்துக்கு அதுபெருந்தடையாக இருந்தது. அதுதொடர்பாகச் செயல்பட முனைந்தபோது, அவர்களின் செயல்பாடு, போர்த்துக்கீசியர்கள் மற்றும் டச்சுக்காரர்களைவிட குறைந்த அளவிலேயே இருந்தது. மக்களும் பெரிய ஆசைகளைக் கொண்டவர்களாக இருக்கவில்லை. நாட்டில் கிடைக்கக்கூடியப் பொதுவானப் பொருட்களிலேயே அவர்கள் திருப்திப்பட்டுக்

கொண்டார்கள். தலைநகரிலும் அதைச்சுற்றிலும் சில இடங்களில் உள்நாட்டு வர்த்தகம் மும்முரமாகச் செயல்பட்டது. அவற்றை இந்துக்குடிமக்கள் செய்துவந்தனர். ஆனால், வெளிநாட்டு வர்த்தகம் குறிப்பாக, அந்நியர்களின் கைகளில் இருந்தது. 1699ஆம் ஆண்டின் ஜனவரி, 30 ஆம்தேதிய மார்டினின் கடிதம், 'மதுரைக்காரர்கள் சமநிலையாக, உணர்ச்சிவசப்படாதவர்களாக, அமைதியானக் கட்டுச்செட்டான வாழ்க்கையில் காலத்தைக் கழித்தார்கள். நாட்டுக்குள் உற்பத்தியாகும் அல்லது நாடு வழங்கும் உணவிலும் ஆடைகளிலும் மனநிறைவு கொண்டவர்களாக இருந்தார்கள்' என்று குறிப்பிடுகின்றது.[43] விரும்பிய வெளிநாட்டுப் பொருட்களை அவர்களுக்கு போர்த்துக்கீசியத்திலிருந்தும், டச்சுவிலிருந்தும் கொண்டுவரப்பட்டு, விற்பனை செய்யப்பட்டன. ஜப்பானியத் தோல்பொருட்கள், மொலுக்கஸிலிருந்து கொண்டுவரப்பட்ட நறுமணப் பொருட்கள், மதுரையின் நார்த்துணிகளுக்குப் பரிமாற்றம் செய்துகொள்ளப்பட்டன.[44] முத்து மற்றும் சங்கு உள்ளிட்ட வர்த்தகத்தை முதன்மைத் தொழிலாகவும், பிரத்தியேகமாகவும் ஐரோப்பியர்கள் செய்துவந்தனர். போர்த்துக்கீசிய முகவர் ஒருவர், யானைகளுடன் தூத்துக்குடிக்கு வந்து, அதனை விற்றுவிட்டு, அதற்குப் பதிலாக வெடியுப்பு வாங்கிக்கொண்டு போனதாகக் குறிப்பிடப்படுகின்றது.[45] மேலே குறிப்பிடப்பட்ட ஏற்றுமதி மற்றும் இறக்குமதிகள் குறித்து, கல்வெட்டுகளில் அந்நிய வர்த்தகம் என்று பதிவுசெய்யப்பட்டுள்ளது. இதனை அந்நிய நிறுவனங்களே செய்துவந்துள்ளன. அவற்றை மண்ணின் மைந்தர்கள் செய்யவில்லை. அவர்கள் உள்ளூர் வர்த்தகத்தில் மட்டுமே கவனம் செலுத்தினார்கள். ஏற்றுமதிக்காக மதுரையில் சில உற்பத்தி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. குறிப்பாக, ஆடைகள் தொடர்பானத் தொழில்கள் முக்கியமானதாக இருந்தன.[46] இத் தொழிலை நாயக்கர்கள் ஊக்கப்படுத்தினார்கள். விசையூக்கத்துடன் அது, பலமடங்கு பெருக்கப்பட்டது. அந்நிய வர்த்தகத்துக்கும் மதுரையின் தொழில்களுக்கும் கப்பல்கள் தேவைகள், பெருந் தடைகளாக இருந்தன. நாட்டுக்குத் தேவையான பெரும்பாலானக் குடிமைப்பொருட்கள் உள்ளூரிலேயே விளைவிக்கப்பட்டன. ஆடம்பரமான ஒருசில பொருட்கள் இறக்குமதி செய்யப்பட்டன.

**மதமும் வாழ்வும்** - மரபார்ந்த இந்துத்துவ வாழ்வியல் முறையையே, நாயக்க ஆட்சியாளர்கள் மத சகிப்புத்தன்மை எனும்பெயரில் கடைப்பிடித்துவந்தனர். அவர்கள் தங்கள் மதங் களைக் காட்டிலும் மற்ற மதத்தவர்களை ஆதரித்தே வந்தனர். கிறிஸ்தவர்களுடனான அவர்களின் நடைமுறைகளை முன்னமே பார்த்தாகிவிட்டது. ஆட்சியின்போது, முகம்மதியர்களின்

மசூதிகளுக்கும், தனிநபர்களுக்கும் பெருமளவுக் கொடைகள் வழங்கப்பட்டிருக்கின்றன. ஆக்கிரமிப்பு செய்த ரூஸ்தும்கான் போன்றவர்களிடமும் நாயக்கர்கள் சாதகமாகவே நடந்து கொண்டது, சான்றாக மெய்ப்பிக்கப்படுகின்றது. இந்துத்துவ நடைமுறைகளை மேற்கொண்டாலும் எல்லோரையும் சமமாகவே நடத்தினார்கள். சிறுசிறு சச்சரவுகள், குடிமக்களைப் பாதிக்கா வண்ணம் கவனமாகப் பார்த்துக்கொண்டனர்.[47] 1731ஆம் ஆண்டின் கல்வெட்டொன்று, தின்னவேலி சிவன் கோவிலின் வணக்க முறையில், வைணவ அலங்காரத்தை மேற்கொண்ட ஒரு பணியாளுக்கு தனிப்பட்ட முறையில் வழங்கப்பட்ட பராமரிப்புக்கானக் கொடையைப் பற்றிப் பேசுகின்றது.[48] இதுபோன்ற சச்சரவுகள் இருக்கவே செய்தன. என்றாலும், சமூக உறவின் ஒற்றுமைக்கும் கூட்டுறவுக்கும் பாதிப்பைக் கொடுக்க வில்லை. ஒருநாட்டின் பாதுகாப்புக் கடமையாக, நடைமுறையில் நாயக்கர்களால் மதம் உற்சாகமாக ஊக்குவிக்கப்பட்டது. அது, குடிமக்களின் ஆன்மீகத்தையும் நலத்தையும் வளர்த்தெடுப்பதாகக் கருதப்பட்டது.

**சமூக நிறுவனங்கள்** - மரபார்ந்த சமூகக்கட்டுமானம், நாயக்க ஆட்சியாளர்களால் உலைவுக்கு ஆளாகவில்லை. பிராமணர்கள் சிறப்புச் சலுகைகளை அனுபவித்தார்கள். உயர்ந்த மரியாதைக்கும் போற்றுதலுக்கும் உரியவர்களாகக் கருதப்பட்டார்கள். அவர்களின் சேவைகள் நாட்டின் நலனுக்காகப் பயன்படுத்திக் கொள்ளப் பட்டது. ஆலோசனைகள் கவனமுடன் பெறப்பட்டு, செயல் படுத்தப்பட்டன. அவர்களின் மரியாதைக்கும் கௌரவத்துக்கும் பங்கம்வராமல் பார்த்துக் கொள்ளப்பட்டனர். பொதுவாகவே நாயக்க ஆட்சியாளர்கள், சமூகக்கொள்கைகளில் பழமைவிரும்பி களாகவும் மாறுதல்களை விரும்பாதவர்களாகவுமே இருந்தனர். சாதிய அடுக்குமுறை, சட்டபூர்வமாக தெய்வீக ஆணையாதர வுடையதாகக் கருதப்பட்டது. அதில் பிளவு அல்லது குழப்ப மேற்படும் நிலையில், அரசரின் தலையீடு அவ்வப்போது இருந்தது. 1623ஆம் ஆண்டின் கல்வெட்டிலிருக்கும் அரசரின் ஆணையென்று,[49] 'கம்மாளர் -கைத்திறத் தொழிலாளர்- கூட்டிணைவு வாழ்வுநடத்த தடை' செய்கின்றது. அதாவது, கம்மாளர்கள் வேறுசாதியினருடன் கலக்கக்கூடாது. பிராமணர்கள் மட்டுமே மேற்கொள்ளும் புனிதநூலை புதுப்பித்துக்கொள்ளும் உபகர்மா எனும் சடங்கைச் செய்துகொள்ள கட்ஜன்சாசனம் என்றபெயரில் மதுரையின் பட்டு நூல்காரர்களுக்கு மங்கம்மாள் உரிமை வழங்கியதை, 1705ஆம் ஆண்டின் குறிப்பு வெளிப்படுத்து கின்றது. தனது ஆட்சியின்போது மங்கம்மாள், பண்டிட்டுகளின் மாநாடு ஒன்றை நடத்தி, அவர்களின்

ஆலோசனைகளைப் பெற்றார்.[50] தேவைப்படும்போது சமூக விதிகளை நாயக்க ஆட்சியாளர்கள் உருவாக்கிக் கொண்டார்கள். ஆயினும் மிகப்பழமைவாய்ந்த விதிகளிலிருந்து அவர்கள் விலகிச்[6] செல்லவில்லை. விஜயரங்க சொக்கநாத நாயக்கர் திருமண முன்மொழிதல் ஒன்றில் இலங்கை ஆட்சியாளரால் கடுமையாக அவமதிக்கப்பட்டது, சாதிய நோக்கத்தில்தான் என்பது குறிப்பிடத் தக்கது. அந்தப்புரம் மற்றும் சதிகளின்போது சமூகநிறுவனங்கள் கடந்து போகின்றனவாக மட்டுமே இருந்திருக்கின்றன. அரசர்களும் உயர்குடிமக்களும் அந்தப்புரம் மற்றும் சதிகளில் இழைந்து போனவர்களாக இருந்திருப்பது உறுதியாகின்றது. 'வைப்பாட்டியாகக் காமக் கிழத்தியர்களை வைத்துக்கொள்வது மக்களிடையே பிரபலமான ஒன்றாக இருந்தது.[51] குறிப்பாக, அலுவலர்களும் பணக்காரர்களும் ஆர்வமாகச் செயல்பட்டார்கள்' என்று ஜான் நியூஹாப் குறிப்பிடுகின்றார். முகம்மதியர்களின் செல்வாக்கு அதிகரித்தக் காலகட்டத்தில், அரசுரிமை சார்ந்த அந்தப்புரங்கள் நிறுவனமாயின. 'திருமலை நாயக்கர், தனது அந்தப்புரத்தில் 200 மனைவியர்களைக் கொண்டிருந்தார்' என்று இயேசு சபையின் குறிப்பு விரிகின்றது. கிழவன் சேதுபதி நாற்பத்தேழு மனைவியரைக் கொண்டிருந்தாராம். இவர்கள் அனைவருமே சம்பந்தப்பட்ட ஆட்சியாளர் மரணமடைந்தபோது, உடன்கட்டை ஏறினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. முகம்மதியப் பயணி ஒருவர், 1628ஆம் ஆண்டின் குறிப்பில், 'மதுரை ஆட்சியாளர் மரணமடைந்தபோது 700 மனைவியர், இறுதிச்சடங்கின் சிதையில் பாய்ந்தார்கள்' என்கின்றார்.[52] வெளிநாட்டுப் பார்வையாளர்கள், 'நிறுவனமயமாக சுயத்துடன் தீயில் பாய்ந்து மாய்த்துக்கொள்வதைத்'[7] தவறாமல் பதிவிட்டிருக்கின்றார்கள். அவர்களின் எழுத்துகளிலிருந்து தென்னிந்தியாவில் இந்த வழக்கம் நடைமுறையிலிருந்தது தெளிவாகின்றது.

**கல்வி** - ராபர்ட் டி நோபிலியின் 1610ஆம் ஆண்டின் நவம்பர், 22ஆம் தேதியக் கடிதம், நாயக்க ஆட்சியாளர்களின் கல்வி அமைப்பின் மீது, ஒளிவெள்ளம் பாய்ச்சுகின்றது. 'மதுரையில் வகுப்புக்கு இருநூறு அல்லது முந்நூறுபேர் வீதம், 10,000 மாணவர்கள் கல்வி பயின்றார்கள். அந்தமாணவர்கள் அனைவருமே, பிராமணர்கள். அவர்களுக்கு மட்டுமே மேல்நிலை அறிவியல் கல்வி கற்பதற்கு விண்ணப்பிக்கும் உரிமை இருந்தது. கல்வி கற்பதிலிருந்து இந்தமாணவர்கள் திசைதிரும்பிவிடக் கூடாது என்பதற்காக, அவர்களின் பராமரிப்புக்கு பிஸ்நகரும் நாயக்க ஆட்சியாளர்களும் பல்வேறு அறநிறுவனங்களை உருவாக்கினார்கள்.[53] கல்வி கற்றுக்கொடுக்கும் 'வாத்தியார்களுக்குப்' போதுமான

அளவில் சன்மானங்களும், மாணவர்களின் வாழ்வியல் பராமரிப்புச்செலவுகளுக்கும் வருவாய்கள் பெருக்கப்பட்டன. இவ்வாறாக, நாயக்க ஆட்சியாளர்களின் கல்விக்கொள்கை, மதம் மற்றும் அறிவியல் இணைந்தப் பழமைவாத இந்துத்துவ முறைக் கல்விக்கொள்கையாக இருந்தது. இது, அவர்களின் திட்டமுறை யில் ஒருபகுதி மட்டுமே. இந்துத்துவக் கல்விமுறையின் தலையாயப் பண்பாக, உள்ளூர் நிறுவனங்களாலும், தனிப்பட்ட வர்களின் வீட்டிலுமாகப் பயிற்றுவிக்கப்பட்டது. உயர்கல்வி மட்டுமே அரசு நிறுவனங் களால் வழங்கப்பட்டது. தவிர சமஸ்கிருதம், தமிழ் மற்றும் தெலுங்குமொழி, நாயக்க ஆட்சியாளர்களால் ஊக்குவிக்கப்பட்டது. 'மதுரை நாயக்கர்களில் திருமலை நாயக்கர், முத்தால காதிரி மற்றும் விஜயரங்க சொக்கநாத நாயக்கர் ஆகியோர் தெலுங்கு இலக்கியத்தின் காப்பாளர்கள்'[54] என்கின்றார், எச். கிருஷ்ண சாஸ்திரி. கல்வியை இலவசமாக வழங்கிய மடங்களுக்கும் கோவில்களுக்கும் தாராள மானியத்தை நாயக்க ஆட்சியாளர்கள் வழங்கியிருக்கின்றார்கள். அவர்களின் கட்டிடங்கள், நீர்ப்பாசன முறைகள் மற்றும் கல்வெட்டியல் ஆவணங்கள், மக்களின் உயர்நிலை அறிவுத்திறத்தையும் கல்வியையும் ஆதாரப்படுத்துகின்றன.

## 4. முடிவுரை

தென்னிந்தியாவின் மிகப்பெரியப் பரப்பொன்றின் விதி, ஊழ், லட்சியம் எல்லாமே இரண்டு நூற்றாண்டுகள் நாயக்கர்களின் கைகளில் இருந்தது. திருமலை நாயக்கரின் ஆட்சிக்காலத்தில், தேசத்தின் ஒருமைப்பாடு பாதுகாக்கப்பட்டது. அவருக்குப்பின் பொறுப்புக்கு வந்தவர்களின் திறமையின்மையும் பலவீனமும், நாயக்க ஆட்சிப்பரப்பின் எல்லையைக் குறைத்துவிட்டன. நாட்டைச் சிதைவுறச் செய்துகொண்டிருக்கும் சக்திகளைத் தடுத்துநிறுத்தி, முற்றிலுமாகக் கட்டுப்படுத்த மங்கம்மாவால் முடியவில்லை. நீண்டகாலம்வரை மதுரை மிகச்சிறந்த அளவில், கட்டுக்கோப்புடன் ஆளப்பட்டது. தஞ்சாவூரும் செஞ்சியும் அதன்மேன்மையில் பொறாமைப்பட்டன. இன்றைய தென் மாவட்டங்களின் நிலை, பெருமளவில் நாயக்க ஆட்சியாளர்களால் வடிவமைக்கப்பட்டவை. காடுகள் அழித்தலை ஊக்குவித்ததன் மூலமாக, விவசாயம் வளர்த்தெடுக்கப்பட்டது. அவை, அரசாங்கத்தின் வளத்தை உயர்த்தின. நீர்ப்பாசன வசதிகள் மேம்படுத்தப்பட்டன. மக்கள்தொகை வளர்ச்சிக்கேற்ப அக்ரகாரங்கள், அறநிலையங்கள் மற்றும் கோவில்கள் கட்டி, வாழ்விடங்கள் வசதிப்படுத்தப்பட்டன. காட்டுவிலங்குகளும்

கொள்ளைக்காரர்களும் ஆக்கிரமித்து உலவிய அந்த இடங்கள் - காடு- திருத்தப்பட்டு, அழகிய நகரங்களாகவும் எண்ணற்ற கிராமங்களாகவும் முளைத்தன. புகமுடியாதப் பகுதிகளெல்லாம் பாளையக்காரர்களின் கைப்பட்டு, விரிவுகளைக் கண்டன. பண்புநிறைந்த மக்களின் இயல்புகள் வாய்க்கப்பெற்று நாடு, நாகரீக நிலைக்கு உயர்ந்தது. குறிப்பாக, தற்போதைய மதுரை, பெரும்பாலும் நாயக்க ஆட்சியாளர்களால் செய்யப்பட்டதாகவே இருக்கின்றது. உபரிவருவாயை அரசர்கள் தாராளமாக மேலே சொன்னக் காரியங்களுக்குச் செலவிட்டதுடன், சிறப்புவாய்ந்தக் கோபுரங்களையும் மற்ற கட்டிடங்களையும் கட்டுவதற்கு மடைமாற்றினார்கள். மற்றும் இந்துமதக் கலாச்சாரத்தின் இன்றியமையாத சில அம்சங்களை புத்தாக்கம் செய்தார்கள். அரசாங்க நிர்வாகம், நாட்டை இந்துக்குடிமக்களுக்குப் பொருத்தமான இருப்பிடமாக மாற்றும் முயற்சிகளை அடிப்படையில் மேற்கொண்டது. இந்தப் பொதுப்பணிகள் எல்லாம் வேலையாட்களைக் கட்டாயப்படுத்தி செய்யப்பட்டது என்ற கருத்துரை அல்லது மதிப்பீடு மிகுதியாக, உள்ளீடில்லாத ஒன்றாக இருக்கின்றது. இந்து அரசர்கள் எல்லோருமே, தங்களின் முன்னோர்களால் மரபார்ந்துசெய்யப்பட்ட விஷயங்களில் ஆழ்ந்தமதிப்பும், சிலைகளிடம் பயபக்தியும் கொண்டவர்களாக இருந்தார்கள். மன்னிக்க முடியாதக் குற்றங்களைச் செய்த, வஞ்சனையாக ஏமாற்றித் திரிந்த, அதேவேளையில் தொழிற் நுட்பம்கொண்ட வேலையாட்களைத்தான் கட்டுமானப்பணிக்கு பயன்படுத்திக்கொண்டார்கள். அரிதானக் கலையாற்றலில் அற்புதமான மற்றும் நிரந்தரமான மூலஉத்வேகத்தை அடக்கு முறை மற்றும் கொடுங்கோன்மை எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு அளித்துவிடுகின்றது. ஒருகொடுங்கோல் ஆட்சிக்காலம் தரும் நியாயமற்ற, தேவையில்லாத கடும்வேதனை, அற்புதமானக் கலையம்ச மேதமையைத் தந்துவிடுவதுண்டு.

நிறுவனமயப்பட்டுவிட்ட துன்புறுத்தல் கொள்கைகளை மறுசீரமைப்பு செய்யாமல் நாயக்க அரசர்கள் இந்துமதத்துக்கும் கலாச்சாரத்துக்கும் செய்த சேவைகள் கிறிஸ்தவத் திருச்சபைகளின் பிரச்சாரத்திற்கு இலக்காகி, அவர்களால் ஓரளவுக்கும் பாராட்டப்படவில்லை. இந்துத்துவத்தில் அவர்கள் செலுத்திவந்தக் குறைவில்லாத கவனம், அதன்மீதான அபிமானம், அதன் செயல்பாடுகள், இடருக்கு உள்ளாவதாக இருந்த நாட்டை, அந்நிய மத ஊழிப்பெருவெள்ளத்திலிருந்து, அபாயத்திலிருந்து, சமூக அரசியல் பாதுகாப்புடன் மீட்டெடுத்தது குறிப்பிடத்தக்கது. முன்னரே குறிப்பிட்டதுபோல, சமகாலத்தின் ஆட்சியாளர்

களிலிருந்தும், அவர்களுக்குப் பின்னால் ஆட்சிக்குவந்தவர்களிட மிருந்தும் நாயக்க ஆட்சியாளர்கள் சற்றே வேறுபட்டவர்களாக இருந்தார்கள் என்பதை மறைக்கமுடியாது.

நாயக்க ஆட்சியாளர்களிடமும் அவர்களின் நிர்வாகமுறைகளி லும் அழியாநிலையில் அழுந்திப் படியக்கூடியக் குறைபாடுகள் இருக்கவே செய்தன. அரசர்கள் மற்றும் தகுதிவாய்ந்த உயர்குடி மக்களின் பெயர்களை எளிதாகக் குறிப்பிட முடியும். சாம்ராஜ்ஜியத்தின் நிறுவனர் விஸ்வநாத நாயக்கர், திருமலை நாயக்கர் மற்றும் மங்கம்மாள், அவர்களின் அமைச்சர்களான அரிய நாத முதலியார், ராமப்பையா மற்றும் நரசப்பையா ஆகியோரைத் தவிர்த்து, பெரும்பாலான நாயக்க அரசர்களும் அவர்களின் ஆலோசகர்களும் சாதாரணர்களாகவும், தன்னிலை யற்றவர்களாக வும் இருந்தார்கள். அவர்களில் சிலர் பகட்டு ஆரவாரத்தை விரும்புபவர்களாகவும், ஊதாரித்தனத்தில் மிளிர்பவர்களாகவும் இருந்தனர். அரசாங்கத்தின் வளம், பல நேரங் களில் வறண்டு போவதற்கு, அவர்கள் தன்போக்காக நடந்துகொண்டு செய்த செலவீனங்களும் ஒருகாரணமாக இருந்தது. பொதுவாகவே, நாயக்க ஆட்சியாளர்கள் நிர்வாகத்தில் சொந்தமானக் கருத்தோட்டம் இல்லாதவர்களாக இருந்தார்கள். உயர்ந்த அறிவுத்திறக் கூர்மதியும் நெகிழ்ச்சித் தன்மையும் தேவைப்படுகின்றவர்களாக இருந்தார்கள். தனிப்பட்டமுறையில் தொடக்க நிலையிலேயே குறைபாடுகள் இருந்தன. பழைய கால்வாயில் அவர்கள் அரசுக் கப்பலைச் செலுத்தினார்கள். கருத்தில்கொள்ளாத அளவில், புயல்களையும் தடங்கல்களையும் சந்தித்தார்கள். ஆபத்தானநேரங்களில் வலுவாகவும் திறமையாகவும் செயல்படத்தக்கவகையில் இல்லாமல் பலவீனமான அரசாக, மைய அரசு இருந்தது. பாளையக்காரர்கள்முறையால், அரசுதொடர்ந்து வாழ்ந்து கொண் டிருந்தது எனலாம். அதனால், வெவ்வேறுநேரங்களில், வெவ்வேறு நிலைகளில் நிர்வாகம் விசைகொண்டு செலுத்தப்பட்டது. நாட்டின் ராணுவத் தளவாடங்கள் பாழடைந்துபோயும், வழங்கப்பட்ட ஆயுதங்கள் உரமிழந்தவையாகவும் இருந்தன. பாளையக்காரர்களின் துருப்புகள் ஒன்றுபட்ட ராணுவமாக, ஒருங்கிணைந்துச் செயல்பட வில்லை. அவர்கள் தங்களுக்குள்ளேயே போரிட்டுக் கொண்டார்கள். அவர்களின் விசுவாசமின்மை கூடிக்கொண்டே போனது. பொதுக் காரணங்களுக்கு அவர்களை உடனடியாக ஒன்றுதிரட்டுவது, இயலாததாகிப் போனது. கூலிப் படைகளைப் பணியிலமர்த்துவது, ராணுவ அமைப்புக்கு வலுவான ஆதாரமாகக் கருதமுடியாது. அவ்வாறு சேர்க்கப்பட்ட படைகள், சேதுபதியின் துருப்புகளுக்கு இணையாக ஆக முடியவில்லை.

நாயக்க ஆட்சியாளர்கள், மற்ற இந்து ஆட்சியாளர்களைப் போலவே, கடற்படையில் குறைந்த கவனத்தையே செலுத்தினார்கள். அதனால் நாட்டின் வளம், தொழில் மற்றும் வர்த்தகத்தால் மேம்பாடடையவில்லை. போர்த்துக்கீசிய மற்றும் டச்சுவின் கடற்படை வலுவானதாகவும் அதிக எண்ணிக்கையிலானதாகவும் இருந்தது. அவர்கள், நாயக்க ஆட்சியாளர்களின் பணத்திலேயே தங்கள் கடற்படையை வலுவாக்கிக்கொண்டார்கள். அவர்களின் வளர்ச்சியைக் கண்ணுறுபவர்களாகவும், சிலநேரங்களில் அவர்களின் தவறுகளைப் பொறுத்துப் போகின்றவர்களாகவும் நாயக்க ஆட்சியாளர்கள் இருந்தனர்.

இந்தக்குறைபாடுகளும், அரியணைக்காக அடுத்தடுத்து சோர்வடையச் செய்கின்றப் போராட்டங்கள், கருத்து வேறுபாடுகளுடன் இணைந்துகொண்டன. வில்க்ஸ்[55] கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிட்டு, 'இந்துத்துவ முறையின் கொள்கைகள், சட்ட இயல் மற்றும் மதம், ஐரோப்பிய வாரிசுரிமை முறையில், இன்னும்மேலே செயல்படத் தூண்டுவதாக இருக்கின்றன. ஆனால் இங்கே சகோதரர்கள் அனைவரும் இணைமரபுரிமையாளர்களாக இருக்கின்றார்கள். தெளிவற்ற தனிச்சிறப்பு மூத்தமகனுக்குச் சாதகமான வரையறைகளைக் குறிப்பிட்ட விதிகளுடன் வழங்கியிருக்கின்றது. அதனால் அவன், அந்தப்பொறுப்புக்குப் பெருந்தகையனாகின்றான். ஆனால் உறவுகளை முடிவுசெய்வது, துரதிர்ஷ்டவசமாக எதிர்ப்பு செய்வோரிடம் போய்விடுகின்றது. அரசுரிமைப் பெறுவதில் பாசாங்கு, இறைவனின் அருள், உச்சபட்சத் தகுதி எல்லாமே காரணங்களாக இருந்தபோதும், வாளால் முடிவுசெய்யப்பட வேண்டியிருந்தது' என்கின்றார். கஸ்தூரி ரங்கய்யாவின் தகாதவழியில் அரியணையை அபகரிக்க நினைத்த முயற்சி, கொலையில் போய் முடிந்தது. திருமலை நாயக்கரின் மரணத்தின்போது, நிலைமை ஆபத்தைச் சுமந்திருந்தது. ஆனால் அதிர்ஷ்டவசமாக, நிலைமை சீர்செய்யப்பட்டது. குறைபாடுடைய இந்தச்சட்டம் கடைசியாக, விஜயரங்க சொக்கநாத நாயக்கரின் மரணத்தின்போது, அனைத்துவிதமானக் கேடுகளையும் அடுத்தபதவியேற்பில் வெளிப்படுத்தியது. இந்தச்சம்பவத்துக்குப் பின், அரசு பலவீனப்பட்டுப்போனது. அந்நிய ஊடுருவலுக்கு அது இடமளித்தது. இருந்தபோதும், அரியணையைக் கைக்கொள்ளும் சச்சரவுகள் நாயக்க ஆட்சியை, அடிக்கடி ஆபத்தில் ஆழத்தவில்லை. நாயக்க ஆட்சியின் வீழ்ச்சி, அனைத்துவிதமான உள்பலவீனங்களால் கட்டமைக்கப்பட்டது. முகம்மதியர்கள் ஊடுருவமுயன்றபோது, அது உச்சத்தில் இருந்தது. அதுவே அவர்கள் மதுரையைக் கைப்பற்ற எளிதாக வழிவிட்டது.

'நாயக்க சாம்ராஜ்ஜியத்தின் வீழ்ச்சி, சந்தேகமேயில்லாமல் மதுரைக்கு மிகச்சிறந்த ஆசிர்வாதம்தான். ஏனென்றால், அனைத்து முன்னேற்றங்களுக்கும் அது தடையாக இருந்தது. பணக்காரன், ஏழை, உயர்குடிமகன், இழிவானவன் உள்ளிட்ட அனைத்து வகையின மக்களுக்கும் கிடைத்தற்கரிய உண்மை மகிழ்ச்சியைக் கொடுத்தது' என்று நெல்சன் தனது கருத்தை வெளிப்படுத்துகின்றார்.[56] இந்தக்குறிப்பு ஒருவகையில், நாயக்க ஆட்சியின் கடைசிக்காலத்திற்குப் பொருந்திப் போகக்கூடியதாக இருக்கின்றது. பொதுவாக, நாயக்க ஆட்சியை, அதன்சேவைகளை உயர்வாக அங்கீகரிக்கவில்லை என்பதையே காட்டுகின்றது. அது, ஒருவகையில் உண்மைதான். 'புதியவன் இடத்தைக் கைப்பற்றியதும் பழைய உத்தரவுகள் மாறிவிடும்' என்றசொல் வழக்கு புழக்கத்தில் உண்டு. கால்டுவெல்லின் குறிப்பு, குத்தலாகப் பரிவிரக்கக் குறைபாட்டைச் சுட்டிக்காட்டுகின்றது. 'பகட்டுகளால் மறைக்கப்பட்ட தவறான ஆட்சி' என்பது, அவரது கருத்தாக இருக்கின்றது.[57] நடுநிலைத் தவறாதத் தீர்ப்பாக, ஏ.ஜே. ஸ்டுவர்டின் மதிப்பாய்ந்த பதிவு, இவ்வாறு பேசி, மதுரை நாயக்கர்களின் வரலாற்றுக்கு முடிவுரை எழுதுவதாக இருக்கின்றது. 'ஒரு அரசாங்கத்தின் வளமும், அதன் விருப்பமும் கோவில்களின் வழியாகவே வெளிப்படுத்தப்படுகின்றது. நாட்டின் அத்தனை வள ஆதாரங்களும் மக்களின் பயன்பாட்டுக்கானதுதான். அது, எண்ணற்ற இயற்கை நீர்வழிப் பணிகள் முடிக்கப்பட்டதன் மூலம் நிறுவப்பட்டுள்ளது. மக்களின் வளத்தை அது, மறைமுகமாகச் சுட்டுகின்றது. எண்ணற்றக் கோவில்களிலும் உருவச்சிலைகளிலும் காணப்படும் மனிதத் தொழில்நுட்பமும் நயநுணுக்கமான வகைமாதிரிகளும் உயர்ந்த பட்சக் கலையறிவை சான்றுடன் உறுதிப்படுத்துகின்றது. அதுபோலவே, நீர்ப்பாசனக் கொள்கையின் செயல்பாடுகளில் ஆற்றல் மற்றும் தேர்ச்சித்திறம் வெளிப்படுகின்றது. அவர்களின் நீர்ப் பாசனமுறையில் சிக்கலான மற்றும் செய்வதற்கரிய அருமைப்பாடுடையப் பொறியியல் நுட்பங்கள், முனைப்பானக் காட்சிக்குரியனவாக இருக்கின்றன.[58]

## அடிக்குறிப்புகள்

1. p.145
2. Bertrand, iv, p.74, Lockman, i, p.461, Vide appendix B, Letter No.3
3. Mr. Rangachari remarks that the two offices of Mantri and Dalvay were amalgamated in the time of Visvanatha and held by Ariyanatha. In dealing with the Nayak administrative system, he does not say anything about the letter's holding the office of Pradhani also (I.A.,

1915, p.113) whereas in another connection he rightly refers to him as the Dalvay and pradhani. (Ibid., p.64)

4. Bertrand, iv, p.74; Lockman, i, p.461, Vide Appendix B, Letter No.3
5. Bertrand, iii, p.178
6. p.144
7. Bertrand, ii, p.346
8. Taylor, O.H.MSS, ii, p.213-5
9. Bertrand, iii, p.17
10. p.297, Vide Appendix C
11. Appendix D, Nos. 16, 31, 38, 65, 78, 96, 128, 138, 151, 172, 182, 191, 203, 205, 213, 250, and 252
12. p.297, Vide Appendix C
13. p.158
14. Appendix D, No.12
15. Bertrand, iii, pp.178-81
16. p.295, Vide Appendix C
17. Ibid, p.296
18. Bertrand, ii, p.124, Vide Appendix A, Letter No.10
19. Ibid, iii, p.338, Vide Ibid, Letter No.8
20. Appendix D, No.37
21. Ibid, Nos. 75 and 79
22. Ibid., No.51
23. Ibid., Nos.4 and 100
24. Ibid., No.213
25. pp.156-6
26. Taylor, O.H.MSS, ii, p.147-9
27. Bertrand, ii, p.124 Vide Appendix A, Letter No.10
28. R.Sewell A Forgetten Empire, p.230
29. Bertrand, iii, p.366
30. i, p.23
31. p.155
32. p.156
33. Bertrand, iv, pp.194-5. Vide Appendix A, Letter No.12
34. Nelson, pp.155-6
35. Bertrand, iv, p.195
36. La Mission du Madurai, p.368n
37. Memorandum on the Progress of the Madras Presidency, p.7n
38. Akbar the Great Mogul, p.148
39. History of Tinnevelly, pp.107-8
40. Manual of Tinnevally, p.70

41. Appendix D, No.145
42. Ante. p.117
43. Bertrand, iv, p.13, Lockman, i, p.5
44. Bertrand, iv, p.44, Lockman, I, p.381, Vide Appendix B, Letter No.2
45. Danvers, Report, p.53
46. Nieuchoff mentions calico-painting and refers to the high perfection that it had reached (p.295. Vide Appendix C)
47. Sir. H.Elliot, History of India, vii, p.139
48. Appendix D, No.234
49. Appendix D, Nos. 124 and 125
50. Census of Inida 1901, xv, Madras, Part, i, p.173
51. pp.295 and 297. Vide Appendix C,
52. Sir H.Elliot, History og Inida, vii, p.139
53. Bertrand, ii, p.90
54. Archaeological Survay of India, Report, 1911-12, p.195
55. i, p.17
56. p.176
57. History of Tinnevelly, pp.62-3
58. Manual of Tinnevelly, p.69

## பிற்சேர்க்கை - அ[1]

## மதுரை சமயப்பரப்புப் பணி III

ஜே. பெர்ட்ராண்ட், இயேசு சபை,

மதுரை

### (1) நிகெலுக்கு பிரயோன்ஸா எழுதியக் கடிதம், திருச்சினாப்பள்ளி, 1659.

*(பக்.41) கடந்த மூன்றாண்டுகளில், நாம் மேற்கொண்ட சமயப்பரப்புப் பணியில் சந்தித்த இன்னல்களை, தங்களுக்கு எடுத்துரைக்கக் கடமைப்பட்டுள்ளேன். அவற்றில் முதலாவதாக, அவர்களுக்குள் நடந்த அரசியல் பெருமாற்றங்களை உங்கள் கவனத்துக்குக் கொண்டுவருகின்றேன்.*

***அரசியல் நிகழ்வுகள்*** *- நினைவுக்கு எட்டாத தொல்பழமைக் காலத்திலிருந்தே இந்தியாவில் அரசியல் நிலை, இப்படியாகத்தான் இருந்துவந்திருக்கின்றது. கன்னியாகுமரியிலிருந்து (நாட்டின் அனைத்துப் பகுதியிலிருந்து) கிழக்குத்தொடர்ச்சி மலைகளின் கீழே மதுரை, தஞ்சாவூர் மற்றும் செஞ்சியில் மூன்று நாயக்க ஆட்சியாளர்கள் இருந்துவருகின்றார்கள். அவர்கள் (விஜயநகர்) பிஸ்நகர் ஆட்சியாளர் நரசிங்காவுக்கு (பக்.42) திறை செலுத்துபவர்களாக இருக்கின்றார்கள்.[2] மைசூர், செஞ்சிக்கு மேற்கே இருக்கின்றது. அது, விஜயநகரப் பேரரசுக்குக் கீழே, திறை செலுத்தும் துணைமைநிலையிலிருந்து நீண்டகாலத்துக்கு முன்பு விலகிக்கொண்டது. இந்த மாநிலங்களுக்கு வடக்கே, பிஸ்நகர் இருக்கின்றது. அதற்குக் கிழக்கே கோல்கொண்டா அரசு. மேற்கில் தக்காணம் இருக்கின்றது. அந்த ஆட்சிப்பரப்பெல்லை பிஜப்பூர் அரசு அல்லது விசாபூர் அரசு என்று தலைநகரின் பெயரால் அழைக்கப்படுகின்றது. இந்த இரண்டு அரசுகளும், ஒருகட்டத்தில் பலம்பொருந்தியவையாக இருந்தன. தற்போது, டில்லியைத் தலைமையிடமாகக்கொண்டு ஆளும், முகலாயப் பேரரசின் சுபாவுக்கு அதிகமில்லாத நிலையில் அவை இருக்கின்றன. பலம் பொருந்திய எதிரியினால் பிஸ்நகர் தெற்குநோக்கி துரத்தப்பட்டிருக்கின்றது. அது, முகம்மதிய ஆதிக்கம் ஒட்டுமொத்த*

இந்தியாவிலும் பரவுவதுவரை வேலூரில் தன்னைப் பொருத்திக் கொண்டிருந்தது. நாட்டின் நெடுநீள்மரபுடைய ஆட்சியாளர்களின் வாரிசு அரசர்கள், போட்டிப் பொறாமைகளாலும் மடமைகளாலும் தங்களைக் கீழ்மைப்படுத்திக் கொண்டதைப் பார்க்கப் போகின்றோம்.

மதுரை நாயக்கர்கள் காலம்தவறாதவர்கள். ஆண்டுக்கு ஒருமுறை செலுத்தவேண்டியத் திறையை நீண்டகாலமாகச் செலுத்திவந்தார்கள். காலப்போக்கில் அவர்களின் பலம் அதிகரித்தது. அப்படியே இறுமாப்பும் அகந்தையும் கூடியது. கீழ்ப்படிந்திருத்தலை அவர்கள் சோர்வூட்டுவதாக, வெறுப்பூட்டுவதாக உணர ஆரம்பித்தார்கள். இப்போது ஆட்சி செய்துகொண்டிருக்கும் திருமலை நாயக்கர், தனது தந்தையின் வழியில்நடந்து, கீழமையிலிருந்து விடுதலைக்கொள்ள, மனந்துணிந்த உறுதிப்பாட்டுடன் இருந்தார். பேரரசை வெளிப்படையாகத் துணிந்து எதிர்க்க, வலுவில்லாத அவர், பல தந்திரங்களைக் கையாண்டார். கடந்த பலவருடங்களாகவே நன்மதிப்பையும் நட்புறவையும் பேணுவதன் அடையாளமாக, விலையுயர்ந்தப் பரிசுகளை மட்டும் பேரரசருக்குக் கொடுத்து வந்தார். திறையைச் செலுத்துவதில்லை. திருமலை நாயக்கரின் நடிப்பை உணர்ந்திருந்த வயதுமுதிர்ந்த பேரரசர் நரசிங்கா, இதற்காக, அசாதாரணச் சூழ்நிலையில் போர் உருவாவதைத் தவிர்க்க எண்ணினார். ஆனால் அவரது இறப்புக்குப்பின், பதவிக்கு வந்த புதிய அரசர், தந்தையைக் காட்டிலும் திறமையிலும் வலிமையிலும் வெகுஉச்சத்தில் இருந்தார். அவர் அமைதிகாத்துக் கொண்டிருக்கவில்லை. தனது உரிமையை நிலைநாட்டிக் கொள்வதற்குக் கடுகிச்செயல்பட்டார். வெட்டிப்பேச்சுகளில் நேரத்தைச் செலவிட்டுக் கொண்டிருக்காமல், வல்லமைமிக்கப் படையைத் திரட்டி, (பக்.43) போரை அறிவித்துவிட்டார். தலைமையை மீறுவதற்கு முடிவுசெய்துவிட்ட மதுரை நாயக்கர், தன்னைப்போலவே விஜயநகரத்துக்கு கீழமையாக இருந்த தஞ்சாவூர் மற்றும் செஞ்சி ஆட்சியாளர்களிடம் பேசி, அவர்களுடன் சேர்ந்து, மூவருக்கும் பொதுவானப் பேரரசரை போரில் சந்திக்கத் திட்டமிட்டார். ஆனால் தஞ்சாவூர் நாயக்கர், அத்தனை ரகசியங்களையும் கயமைத்தனத்துடன் தகவல்களாய்ப் பேரரசரிடம் சொல்லிக் காட்டிக்கொடுத்துவிட்டார். மட்டுமல்லாமல், படைக்குத் தலைமைதாங்கி, செஞ்சியின் எல்லைக்கும் முன்னேறிவிட்டார். தஞ்சாவூர் நாயக்கரின் ஊடுபாவலில் கடும்சீற்றமும், பேரரசரை எதிர்கொள்ளும் பேரவாவிலும் திருமலை நாயக்கர் வேறு ஒருவழியைக் கையாண்டார். கோல்கொண்டா ஆட்சியாளரிடம்,

'வேலூர்மீது படையெடுக்கச்சொல்லி' ரகசியமாக வேண்டுகோள் விடுத்தார். வேண்டுகோள் வந்ததுதான் தாமதம், இதற்காகவே காத்துக் கொண் டிருந்தவர்போல, கோல்கொண்டா ஆட்சியாளர் செல்வம் கொழிக்கும் வேலூர்மீது படையெடுத்துவிட்டார். நாட்டை சூறையாடிப் பாழாக்கினார். தெற்குநோக்கிப் படைகளை வீரமாகச் செலுத்திக் கொண்டிருந்த பிஸ்நகரின் புதிய பேரரசர் மகன் நரசிங்கா, அப்படியே வந்தவழியே படைகளைத் திரும்பி, எதிர்பாராத எதிரியுடன் போர்முனைய ஓடினார். ஆயினும் பேரழிவுடன் தோல்வியைத்தான் சந்தித்தார்.

வெற்றியையடுத்து, தனக்கு அனுகூலமாக அமைந்துவிட்ட வாய்ப்பை, புகழுடன் நிலை நிறுத்த எண்ணிய கோல்கொண்டா அரசர், முன்னைக்காட்டிலும் அதிகளவில் படைவீரர்களின் எண்ணிக்கையைப் பெருக்கினார். தோல்யுற்று ஓடிய நரசிங்காவைத் தொடர்ந்துசென்று, பிஸ்நகரைக் கைப்பற்ற முடிவுசெய்து, சுறுசுறுப்புடன் செயலில் இறங்கினார். போரில் வெற்றி பெறமாட்டோம் என்பதை நரசிங்கா முன்கூட்டியே உணர்ந்து கொண்டார். உடனே, மூன்று நாயக்கர்களையும் தன்னுடன் சேர்ந்துகொண்டு பொதுஎதிரியை வெல்ல அழைப்புவிடுத்தார். இதைச்சாக்காக வைத்து சமயோசிதமாக, மூன்றுநாயக்கர்களும் வேறுபல கோரிக்கைகளை விடுத்தனர். அத்தனையையும் ஏற்றுக்கொண்டார். மூன்றுநாயக்கர்களும் ஒன்றுசேர்ந்து தகவமைந்து, ஒத்திசைவுடன் புறப்பட்டுத் தாக்குதல் நடத்தினர். இங்கே இந்தியக் குணநலன்களைத் தெளிவுபடுத்த வேண்டியுள்ளது: மாறிமாறி மூன்று நாயக்கர்களிடமும் பேரரசர் நரசிங்கா ஓராண்டுக்குமேல் திருவிழாக்கள், விருந்துகள், கொண்டாட்டங்கள் என்று இன்புற்றுத் திளைத்துக்கிடந்தார். இந்த இடைவெளியில், கோல்கொண்டா அரசர் சத்தமேயில்லாமல், நரசிங்காவின் ஒட்டுமொத்த ராஜ்ஜியத்தையும் கைப்பற்றிவிட்டார். மகிழ்ச்சியும் இன்பமும்பொங்கிய அரசரின் மனதில் மோசம்போய்விட்ட ஆத்திரமும்பொறாமையும் கொப்பளித்தது. நால்வர் அணி நான்காக உடைந்துபோனது. மீண்டும் மூன்றுநாயக்கர்களால் ஓரம்கட்டப்பட்டுவிட்ட நரசிங்கா, தஞ்சாவூரின் வடக்கே கள்ளர்கள் நிறைந்தக் காட்டுப்பகுதியில், தனது கூடாரத்தை அமைத்தார். அங்கே அவருக்கு அனைத்துவிதமானத் துன்பங்களும் துயரங்களும் ஒருசேரக்காத்திருந்தன. அனுபவித்தார். அவரது சபையினருக்கும் அந்தத்துன்பங்கள் இருந்தன. ஒரு கா[illegible]த்துக்குமேல் அவர்கள், 'பேரரசரை'க் கைகழுவிவிட்டு ஓடிவிட்டனர். பேரரசராக இருந்த நரசிங்கா, இந்தியாவின் உயர்செல்வந்தர்களில் ஒருவர். தனக்குக் கீழமையிலிருந்த மைசூர் அரசரிடம் உதவிகேட்டுக் கெஞ்சும்

நிலைக்கு ஆளானார். அவரது கோரிக்கைக்கு உடனடியாகச் செவிசாய்த்த மைசூர் அரசர், தங்குவதற்கும்மேலாக, பேரரசரின் தகுதிக்கேற்பப் பகட்டாக, மதிப்பார்ந்து நடத்துவதற்கும் ஆதரவுதந்தார். பேரரசருக்கு வேறுவழியில்லை. இதுவே அதிகம் தான். அதனை ஏற்றுக்கொண்டார். விசாலமான மனதுடன் விருந்தோம்பும் பண்பில் பேரரசர் திளைத்தார். வாக்குறுதியின்படி, அவரது தூதுவர்களுக்கும் அதேஅளவு உபசாரம் நடந்தது.

.......... நரசிங்காவைப் பின்தொடர அனுப்பப்பட்ட முகலாயப் படையின் ஒருபகுதி குதிரைப்படை, தஞ்சாவூரைச் சுற்றிவளைத்துவிட்டது. அது, நரசிங்காவுக்குப் புகலிடம் தந்த இடத்தில் பீதியை ஏற்படுத்தியது.

(பக்.45)..... நரசிங்காவின் ஆட்சிப்பரப்பெல்லையை வென்றெடுத்த கோல்கொண்டா படை, பிஸ்நகர் அரசை தனக்குக் கீழே நிலவுடமையாளராக்கத் துணிந்தது. மேலும் செஞ்சியைக் கைப்பற்றும் நோக்கத்தில் முன்னேறியது. தன்னால் எதிரியுடன் பொருதி, வெல்வது அரிது என்று, தஞ்சாவூர் நாயக்கருக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. எதிரிப்படையின் எண்ணிக்கை அந்தளவுக்கு மிரட்டலாக இருந்தது. அதேவேளையில் மதுரை நாயக்கருடனானத் தொடர்பையும் அவரால் தொடர்ந்து, இழுத்துச்செல்ல இயலவில்லை. ஏதேனும் ஒருபக்கத்தில் இருந்தாகவேண்டிய சூழ்நிலையில், பயத்தின் செல்வாக்குக்கு அடிபணிந்து, மடத்தனமாக, அவலமான முடிவெடுத்து, கோல்கொண்டா அரசருக்கு தன்னை ஒப்புக்கொடுத்து, தகாத நட்புடன் சேர்ந்துவிட்டார். தன்விருப்பமாய் அவருடன் உடன்பாடும் செய்துகொண்டார்.

திருமலை நாயக்கரும் தனது திடமற்றக் (பக்.46) கொள்கைகளால், இரண்டாவது மடத்தனத்தைச் செய்தார். அது, நாட்டையே அழிவைநோக்கி நகர்த்திச் சென்றுவிட்டது. அவரது தூதுவர், நாயக்கரின் சார்பாகச் சென்று, தக்காண அரசர் இடல்கான் என்ற ஆதில்ஷாவைச் சந்தித்து உதவிகோரினார். ஆதில்ஷா, பதினேழாயிரம் குதிரைவீரர்களைத் தந்தனுப்பினார். வலிந்து கேட்டுப் பெற்றுவிட்ட அக்குதிரைப் படையுடன், நாயக்கரின் முப்பதாயிரம் காலாட் படையும் இணைந்து, பெரும்படையாக செஞ்சிநோக்கி நகர்ந்தது. ஆனால் இரண்டு முகம்மதியப் படைகளும் எளிதாக ஒன்றுசேர்ந்துகொண்டன. அவர்களுக்குள் அழகியபுரிதல் உண்டாகிவிட்டது. கோல்கொண்டா அரசர், இடல்கானின் தளபதியுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். தனது பதினேழாயிரம் வீரர்களைக்கொண்ட குதிரைப்படையுடன், சில

காலாட்படையினரையும் சேர்த்துக்கொண்டு செஞ்சி முற்றுகையைத் தொடர்ந்தார். செஞ்சியின் வெளிப்புறம் அவர்களிடமிருந்தது. முப்பதாயிரம் காலாட்படையிரைக்கொண்ட மதுரைப்படை, அரண்மனைக்குள் புகுந்து, செஞ்சிப் படையுடன் சேர்ந்து கொண்டது. செஞ்சிக்கோட்டை அதன் அமைவிடச் சிறப்பால் பாதுகாப்பாக இருந்தது. மேலும் படைவீரர்களின் வலுவான எண்ணிக்கையாலும் செறிவுகூடி, கூடுதல்பாதுகாப்பை அளித்தது. முற்றகையாளர்களின் அனைத்துவகையான முயற்சிகளையும் பின்னுக்குத் தள்ளச்செய்து, போதுமானக் காலஅவகாசத்தை உள்ளே இருப்பவர்களுக்கு வழங்கியது. ஆனால் வெகுசீக்கிரமே, முற்றுகையிடப்பட்டவர்களிடையே கருத்து வேறுபாடுகளும் பிரிவுகளும் முளைக்கத்தொடங்கின. அவர்கள் தேசிய இனங்களாகவும், வழி வகைநடைமுறையிலும் பலவகையாகப் பிரிந்து போனார்கள். அதைத்தொடர்ந்து, அங்கே மிகப்பெரிய கிளர்ச்சி வெடித்தது. பெரிய அளவில் ஏற்பட்டக் குழப்பத்துக்கு இடையில், கோட்டையின் கதவுகள் எதிரிகளுக்குத் திறந்து விடப்பட்டன. ஆரவாரத்துடன் உட்புகுந்த எதிரிப்படை யினர், அங்கிங்கெனாமல் எங்கும் சூறையாடலில் புகுந்துவிளையாடினர். மதிப்பிடமுடியாத அளவில் தங்கம், வெள்ளி, முத்துகள் மற்றும் விலையுயர்ந்தக் கற்கள் என்று மிகப்பெரிய அளவில் கொள்ளை நடத்தப்பட்டது.

செஞ்சியின் எஜமானர்களாகிப்போன முகம்மதியர்கள், தஞ்சாவூர் மற்றும் மதுரை நாயக்கர்களை வென்றெடுக்க வீரப்பயணம் தொடர்ந்தார்கள். செய்திகிடைத்ததும் முன்னவர், அதாவது தஞ்சாவூர் நாயக்கர், பிறரால் எளிதில் உள்நுழையமுடியாத அடர்காட்டுக்குள் ஓடி, தன்னை மறைத்துக்கொண்டார். பின்னவர், அதுதான் திருமலை நாயக்கர், தூரத்திலிருந்துவந்த எதிரியின் கண்களுக்குப் புலப்படாமல், மதுரைக் கோட்டைக்குள் புகுந்து, கதவைப் பூட்டிக்கொண்டார். அவர் அப்படி ஒளிந்துகொண்டதை முகம்மதியர்கள் ஒருபொருளாகக் கொள்ளவில்லை. எல்லா இடங்களிலும் தங்கள் கைவரிசையைக் காட்டினார்கள்; பாழாக்கினார்கள்; சூறையாடினார்கள். தாங்கள் (பக்.47) வெற்றிபெற்றுவிட்டதாக அறிவித்து, கைக்கொண்ட அவர்களின் விதிகளின்படி மனம்திறந்த பேச்சுவார்த்தைக்கு திருமலை நாயக்கரை அழைத்தார்கள். இவ்வாறாக, பரந்த நிலப்பரப்பைக் கைக்கொண்ட முகம்மதியர்கள், அதிகாரம் மற்றும் சக்திவாய்ந்த இரண்டு அரசர்களை, தங்கள் அதிகாரத்தின்கீழ் கொண்டுவந்தார்கள். போர்க்களத்தைச் சந்திக்கத் தேவையில்லாமல், ஒருவீரனைக்கூட இழக்காமல், விலைமதிக்கமுடியாத அளவிலானச் செல்வங்களை அள்ளிக்கொண்ட தக்காணப் படை, பிஜப்பூருக்குத் திரும்பியது. அங்கே அவர்களுக்கு எக்காள வரவேற்பு அளிக்கப்பட்டது.

வல்லமைமிக்க எதிரியிடமிருந்து பெற்ற அடியில் கலங்கிப் போயிருந்த இரண்டு நாயக்கர்களும், அவலமாகத் தோற்றப் போரின் காயங்களிலிருந்து தங்களைக் குணப்படுத்திக்கொள்ள, புதிய தாக்குதலுக்கு ஆயத்தமானார்கள். உடன்படிக்கைகளைச் செயல்படுத்தும் நோக்கம் அவர்களுக்கு இருக்கவில்லை. அதனால், மீண்டும் ஒருதாக்குதலை கட்டாயமாக எதிர்பார்த்தார்கள். முன்கூட்டியுணரும் ஆற்றலில்லாத, எதிரிகளுக்கு பயந்து ஓடிஒளிந்துகொண்ட கோழைகளான அவர்கள், குடிமக்களை வதைப்பதில் அதிகமாக ஈடுபட்டனர். அவமதிப்புக்கு உள்ளாக்கி யிருந்த இறுமாப்பையும் கஞ்சத்தனத்தையும் மக்கள்மேல் கொடுங்கோன்மையாகக் காட்டினார்கள். முகலாயர்கள் ஆதிக்கத் துடன் அச்சுறுத்திப் பணம்பறித்ததும் கொடூரமாக நாட்டைச் சேதாரப் படுத்தியதும், இயல்பாக நாயக்கர்கள்மேல் பரிவை ஏற்படுத்தியிருந்தது.

நரசிங்கா அதிவிவேகத்துடன் நடந்துகொள்ளத் தலைப்பட்டார். மைசூர் அரசர் தந்த வரவேற்பும், செய்த உதவியும், உபசாரமும் அவரை உருவேற்றியிருந்தது. இடல்கானின் தளபதி கணக்கன் (கான்-இ-கான்), அந்த எல்லைக்குள் இல்லாததைச் சாதகமாக எடுத்துக்கொண்ட நரசிங்கா, தனது சாம்ராஜ்ஜியத்தை மீட்டெடுக்க ஆயத்தமானார். அதன்படி மைசூர் படையின் உதவியுடன் களமிறங்கிய அவர், தான் இழந்த மாகாணங்களில் பலபகுதிகளை திரும்பப் பிடித்தார். ஆனால் கோல்கொண்டா படை, அவரைத் திரும்பியடித்துத் துரத்தியது. ஒருவேளை, மூன்றுநாயக்கர்களும் ஒன்றிணைந்து அவர்களின் படையுடன் களமிறங்கியிருந்தால், தங்களைப் பிளவுபடுத்தி, அதைச் சாதகமாக்கி, வஞ்சினமாக ஒருவரையொருவர் காட்டிக் கொடுக்க வைத்ததற்குப் பதிலடியாக, நாயக்கர்களால் பொது எதிரியைத் துரத்தியடித்து, எளிதில் வென்றிருக்க முடியும். ஆனால் அவர்களின் மடத்தனமே, முன்பின் ஆராயாத அழிவுக்கு அவர்களையும் நாட்டையும் கொண்டு சேர்த்தது.

(பக்.48) நரசிங்காவின் மறுநிர்மாண நடவடிக்கைகளுக்கு ஒத்துழைப்பதற்குப் பதிலாக திருமலை நாயக்கர் தானே, நாட்டைக் காப்பாற்றிக்கொள்ளும் முயற்சியில், முகம்மதியர்களுடன் மறுபேச்சுவார்த்தையைத் தொடங்கினார். அவர்களுக்குக் கிழக்குத்தொடர்ச்சி மலையின் கதவுகளைத் திறந்துவிட்ட அவர், மைசூர் அரசருக்கு எதிராகப் போர்த்தொடுக்க வலியுறுத்தினார். பிஸ்நகரின் இளவரசர் இரண்டாம்முறையாக, தனது நிலவுடமை யாளரான திருமலை நாயக்கரால் காட்டிக்கொடுக்கப்பட்டு,

போருக்கு ஆட்பட்டு, அகதியாகி, காட்டுக்குள் அடைக்கலம் புகுந்து, பரிதாப வாழ்க்கையை மேற்கொள்ளக் காரணமாக இருந்தார். இடல்கானின் தளபதி கணக்கன் (கான்-இ-கான்), தஞ்சாவூர் மற்றும் மதுரையை மீட்டெடுத்ததற்கான மீட்புத் தொகையைத் தராவிட்டால், நாட்டைவிட்டுப் போகமாட்டேன் என்று முகாமிட்டு உட்கார்ந்துகொண்டார். பெருந்தொகையும் மதிப்பிடமுடியாத அருஞ்செல்வத்தைப் பெற்றுக்கொண்டே பிஜப்பூர் திரும்பினார்.

கணக்கன், நாயக்கரின் எல்லையிலிருந்து தாண்டியதுதான் தாமதம், புதியதொரு போர் முன்னைக்காட்டிலும் சீற்றத்துடன் தொடங்கியது. விசுவாசமற்ற திருமலை நாயக்கரின் ஆபத்தானப் போக்குக்கு எதிராக, மைசூர் அரசர் கடுமையாக நடந்துகொண்டார். திருமலை நாயக்கரைப் பழிவாங்கவும், போரினால் தனக்கு ஏற்பட்ட இழப்பை சரிகட்டவும், தனது சாம்ராஜ்ஜியத்தின் எல்லையை ஒட்டியிருந்த சத்தியமங்கலத்தின் மீது ஒருபடையை ஏவி, அதனைக் கைப்பற்றினார். இந்தக்கைப்பற்றலின்போது, எந்தவொரு தடையோ எதிர்ப்போ இருக்கவில்லை. சத்திய மங்கலத்தை தனதாக்கிக்கொண்ட மைசூர் அரசர், வளமான அந்தப் பகுதியிலிருந்து பல்வேறு செல்வங்களைக் கொள்ளையடித்தார். இந்தவெற்றி அளித்த ஊக்குவிப்பால், தனது எஜமானரின் உத்தரவுகளைச் செயல்படுத்த, மதுரைக் கோட்டையை நோக்கிப் படையெடுத்துச் சென்றார். இடையில் அவர்களை, ஒருஎதிரிகூட மறிக்கவில்லை. மைசூர்படையின் எதிர்பாராத வருகையால், திருமலை நாயக்கர் திண்டாடிப்போனார். தன்னால் எதுவும்செய்ய முடியாது என்பதை உணர்ந்திருந்த அவர், தலைதெறித்து ஓடத்தலைப்பட்டார். தன்னை யாரும் பின்தொட ராதவண்ணம் காட்டுக்குள் ஓடிமறைந்துகொண்டார். அந்தநேரத்தில் எல்லாமே முடிந்துபோயிருக்கும். ஆனால் மறவர்களிடமிருந்து எதிர்பாராத உதவி வந்துசேர்ந்தது. போரைவிரும்பும் அந்தமக்கள், போர் முறையைப் பற்றி நன்கு அறிந்திருந்தார்கள். அவர்களுக்குப் போர் அனுபவமும் இருந்தது. மதுரைக்கும் கடலுக்கும் இடைப்பட்ட பகுதிகளில் வசிக்கும் மறவர்கள் என்றழைக்கப்பட்ட அவர்கள், கடலோரப் பகுதியில் ஐரோப்பியர்களுடன் ஒன்றுக்குமேற்பட்ட தடவைகள் (பக்.49) போர் புரிந்திருக்கிறார்கள். தனக்குக் கீழுள்ள நிலவுடமையாளரான மறவ அரசருக்கு, நாயக்கர் அபாயத்தி லிருக்கின்றார் என்றதகவல் அனுப்பப்பட்டது. அவர் ஒரேநாளில் இருபத்தைந்து ஆயிரத்துக்கும் அதிகமான வீரர்களைத் திரட்டி, தனது தலைமையில் புறப்பட்டு, மதுரை நகரின் சுவர்களுக்கும் முற்றுகையாளர்களுக்கும் இடையில் புகுந்துநின்றார். காலத்தில்

கிடைத்த உதவி, திருமலை நாயக்கரை பலப்படுத்தியது. அவரும் தன்பங்குக்கு இருபத்தைந்தாயிரம் வீரர்களைத் திரட்டினார். திருமலை நாயக்கரின் படை, எதிரியான மைசூர் அரசரின் படையைக் காட்டிலும் வலுவானதும், பலமானதுமாக ஆகிப்போனது.

வலுவான எதிரிப்படையைச் சமாளிக்க, தன்னிடம் பலமில்லாததை உணர்ந்திருந்த மைசூர் தளபதி, தலைநகருக்குத் தகவல்சொல்லி, அரசரும் அனுப்பிவைத்துவிட்டதாகச் சொன்ன கூடுதல்படையின் வரவுக்காகக் காத்திருந்தார். ஆனால் படை, வந்துசேருவதாகத் தெரியவில்லை. திடீரென்று, பிராமணத் தளபதியின் மதுரைப் படையை வென்றுவிட்டதாக ஆரவாரக் கூச்சல் கிளம்பியது. முற்றுகையிட்டிருந்த வீரர்கள் நாளுக்குநாள் சோர்ந்து போயிருப்பதை திசைதிருப்பி, ஆவலை ஏற்படுத்த மைசூர் தளபதி முனைந்ததாகத் தெரிகின்றது. போர் தொடங்காததில், மறவர்களும் பொறுமையிழக்கத் தொடங்கினார்கள். ஆரவாரக்கூச்சல், அவர்களுக்குச் சந்தேகத்தை உண்டாக்கியது. கீழறுப்பு வேலைசெய்த பிராமணரை நிலவறையில் சிறைப் படுத்தினர். இது, எதிரிகளைப் பதறவைத்தது. அவர்கள் சிதறிப் போனார்கள். மற்றவர்களைத் தோற்கடித்து, அருகிலிருந்தக் கோட்டைகளில் அகதிகளாகப் பூட்டினார்கள். சிலநாட் களுக்குப்பின், அங்கே மைசூர் அரசரால் அனுப்பிவைக்கப்பட்ட இருபதாயிரம் வீரர்களைக் கொண்ட படைவந்து சேர்ந்தது. மறுபடியும் தொடங்கியப் போர், மிகக்கடுமையாக நடந்தது. போர்க்களத்தில் இருதரப்புக்கும் தலா பன்னிரெண்டாயிரம் பேர்வரையில் உயிரிழப்பு ஏற்பட்டது.

அனுகூலம் இன்னமும் நாயக்கர் பக்கமே இருந்தது. தன்னிடமிருந்த வலுவானப் படை கொண்டு, தனது ராஜ்ஜியத்தின் மீது சுமத்தப்பட்ட அத்தனைக் கேடுகளையும் மைசூர் படை மீது திருப்பிச்செலுத்தினார். காட்சி மாறியது. மதுரையில் நடந்தப் போருக்குப் பழிகேடாக இப்போது, மைசூர் பிராந்தியத்தில் போர் தொடர்ந்தது. துரத்தித்துரத்தி தனிச்சிறப்பானச் சூழ்நிலையில், கடும்சீற்றத்துடன் அப்போர் அரங்கேறியது. தங்களிடம் சிக்கும் கைதிகளின் மூக்குகளை அறுத்துவிடச் சொல்லி, மைசூர் அரசர் தனது படைவீரர்களுக்கு உத்தரவிட்டிருந்தார். அதன்படி காட்டுமிராண்டித்தனமான அந்த உத்தரவை, யார் தங்களிடம் சிக்குகிறார்களோ, அவர்களில் ஆண், பெண், குழந்தைகள் என பேதமில்லாமல் மைசூர் படைவீரர்கள் அறுத்தொழித்தனர். அறுத்த மூக்குகளை சாக்குமூட்டைகளில் அள்ளி, மைசூருக்கு அனுப்பிவைத்தனர். இந்தச் செய்கையால் திருமலை நாயக்கர்

கடும்கோபத்துக்கு உள்ளானார். அவமானகரமான, திடுக்கிட வைக்கும் இந்தக்கொடுமைக்குப் பழிவாங்க (பக்.50) உத்தர விட்டார். மைசூருக்குள் புகுந்த அவரது படைகள், எதிரிகளுடன் போரிடவில்லை. மாறாக, மூக்குகளை அறுத்துக்குவித்தனர். மனிதத்தன்மையற்ற இந்தப்போரை, 'மூக்கறுப்புப் போர்' என்று இந்தியர்கள் குறிப்பிடுகின்றனர். இந்தக் காட்டுமிராண்டித்தனத்தை முதலில் திட்டமிட்ட மைசூர் அரசர், கடைசியில் தன் மூக்கை இழந்தார். அவரிட்ட உத்தரவு, வேறொருவரால் அவருக்கே வினையாக முடிந்தது.

இந்தவெற்றியை அனுபவிப்பதற்கான கால அவகாச அதிர்ஷ்டம், திருமலை நாயக்கருக்கு இருக்கவில்லை. தனது குடிமக்களிடமும், அண்டை ஆட்சியாளர்களிடமும் அவர் நடந்து கொண்ட துரோகக் கொள்கைகளுக்கு, கடவுளிடம் பதிலளிக்கவேண்டிய தருணம் வந்துவிட்டிருந்தது. முப்பது ஆண்டுகள் ஆட்சிசெய்த அவர், தனது எழுபத்தைந்தாவது வயதில் காலமானார். அவரது உயர்ந்த பண்புகளை யாரும் மறுத்துவிட முடியாது. அதேவேளையில் அவரது கடைசிகாலம் சூழ்ச்சி களாலும், மடமைகளாலும் நிறைந்து, அவரது புகழைச் சீர்குலைத்தன. அதையும் யாரும் நியாயப்படுத்தவும் முடியாது. அவரது ஆட்சிக்காலத்தில் கட்டப்பட்ட சிறப்பு வாய்ந்த, வளமையான, வனப்புநிறைந்த கட்டிடங்கள் புகழ்பெற்றவை. உண்மையிலேயே அம்சமானவை. அவற்றில் எகிப்தின் சிறப்ப நகரம் தெபெப்ஸ்போல, புராதன நினைவுச்சின்னங்களாக திரும்பத் திரும்பப் பார்க்கத்தோன்றும், பார்க்கத் தூண்டும் பிரமாண்டமான உருவச்சிலைகள் கொண்ட மதுரைக் கோவில், சில பொதுக் கட்டிடங்கள் மற்றும் அரசருக்கான அரண்மனை ஆகியவை முக்கியமானவை. அவர், கிறிஸ்தவ மதத்தை நேசித்தார்; பாதுகாத்தார்; அங்கீகரித்தார். ஆனால், தனது குற்றங்களை ஒத்துக்கொள்ளும் மனதைரியம் கொண்டவராக அவர் இருக் கவில்லை. மதமாற்றத்துக்கு அவருக்குப் பெரும்தடையாக இருந்தவர்கள், அவரது இருநூறு மனைவியர்தாம். மேன்மைதங்கிய அவர் மரணமடைந்தபோது, மனைவியர் இருநூறுபேரும் அங்குநிலவியக் காட்டுமிராண்டித்தனமான வழக்கத்தைத் தொட்டு, சிதையில் ஏகினர்.

திருமலை நாயக்கருக்குப்பின் பதவியேற்ற முத்துவீரப்ப நாயக்கர், தன் தந்தையின் தவறுகளைக் களைய முயன்றார். முகம்மதியர்களுடன் தனது பந்தயத்தைத் தொடங்கினார். ஆண்டுக்கு ஒருமுறை செலுத்தச் சொல்லி, அவர்கள் நிர்ணயித்திருந்தத் திறைத்தொகையை செலுத்தமறுத்து,

துணிந்துநின்றார். முகம்மதியர்களை எதிர்ப்பதற்கு உள்ளுரம் வாய்ந்த வீரர்களைக்கொண்ட படையை உருவாக்கினார். வடக்கு எல்லையின் முக்கியக் கோட்டையான திருச்சினாப்பள்ளியை வீரர்களாலும் ஆயுதங்களாலும் நிரப்பினார். தஞ்சாவூர் அரசர், மதுரை அரசரைப்போல இருக்கவில்லை. அவரைப் பின்பற்றவோ அல்லது அவருடன் ஒத்துழைக்கவோ இல்லை. மாறாக, இடல்கானுக்கு தன் தூதுவரை அனுப்பியிருந்தார். அவரிடம் பேச்சுவார்த்தை நடத்தி, நேரத்தை வீணடித்துக்கொண்டிருந்தபோது, இடல்கானின் படைகள் மலைகளைக் கடந்து, திருச்சினாப் பள்ளியை நெருங்கிவிட்டிருந்தன. நாட்டின் எல்லாப்பகுதிகளையும் வென்றுவிடும் திட்டம் அப்படைகளிடம் இருந்தது. ஆனால், திருச்சினாப்பள்ளியில் எதிரியைச் சமாளித்து, தாக்குதல்நடத்த, மதுரை நாயக்கர் தயார்நிலையில் இருப்பதை உணர்ந்த முகம்மதியப் படை, அப்படியே கிழக்குநோக்கித் திரும்பியது. சுற்றிலுமுள்ளப் பகுதிகளை மானாவாரியாகச் சூறையாடியது. பிறகு, எல்லோரும் எதிர்பார்த்ததுபோல, 1659ஆம் ஆண்டின் மார்ச், 19 ஆம்தேதி தஞ்சாவூருக்குள் புகுந்தது. அந்த நகரம், பசுமை வயல்கள் சூழ்ந்தப்பகுதிக்கு நடுவே அமைந்திருந்தது. ஆனாலும் ஐரோப்பியக் கோட்டைகளுக்கு ஈடானதாக இருந்தது. பல ஆண்டுகளாகவே வலுவானப் படைகளாலும் படைக்கலன்களாலும் நிரப்பப்பட்டிருந்தது. அப்படை, முற்றுகையிட வந்தவர்களை எளிதில் சமாளித்தது. படையின் தளபதியாக, அரசரின் மருமகன் இருந்தார். அவர் கோட்டைப் பகுதியின் மேலே ஏறியபோது, ஒரு அம்பு அவரைத் தாக்கியது. அதனால் அவருக்கு சிறுகாயம் ஏற்பட்டது. காயத்தைக்கண்டதும் அவரது தைரியம், தொலைந்துபோனது. வெட்கமில்லாமல் அந்த இடத்தை விட்டுக்கொடுத்துவிட்டார். இந்த ராஜாக்கள் தங்களின் கோழைத்தனத்துக்கு எதிராகவே போராடிக் கொண்டிருந்தார்கள்.

தஞ்சாவூரிலிருந்து முகம்மதியப் படை, மன்னார் கோவிலை நோக்கிப் போனது. அந்த நகரம், தஞ்சாவூரிலிருந்து மூவேழு கல்தொலைவில் கிழக்காக அமைந்திருந்தது. அதற்கும், தஞ்சாவூரைப்போலவே விதி அமைந்தது. எளிதாக, முகம்மதியப் படை அந்நகரைக் கைக் கொண்டுவிட்டது. அரசின் மூன்றாவது முக்கிய நகரமான வல்லக்கோட்டை (வல்லம்), ஒன்பது கல்தொலைவில் தஞ்சாவூரின் தென்கிழக்கே இருந்தது. செங்குத்தான மலையில் அதன் கோட்டை கட்டப்பட்டிருந்தது. நம்புதற்கரியவகையிலான எண்ணிக்கையில் பணியாளர்களையும் செலவீனத்தையும்கொண்டு செய்யப்பட்ட நகரம், அது. இயற்கையாக அமைந்த அதன் அழகுடன் கலைத்திறனும் (பக்.52)

சேர்ந்து, எளிதில் கைப்பற்ற முடியாததாக ஆகியிருந்தது. அதனால் அங்கே, நாயக்கர் தனது அனைத்துச் செல்வங்களையும் பெண்களையும் பொத்தி வைத்திருந்தார். அதனை, தனது அனைத்துவிதமான சக்திகளையும்கொண்டு பாதுகாத்தும் வந்தார். இந்நிலையில்தான் துன்பத்தின் நெருக்கடி, மணியடித்துக்கொண்டு வந்தது. அவரிடமிருந்து சொல்லிக்கொள்ளாமலேயே நம்பிக்கை ஓடிஒளிந்துகொண்டது. விசுவாசமிக்கக் குடிமக்களையும் பாசத்துக்குரிய நெருக்கமானவர்களையும் விட்டுவிட்டு, தனக்குத் திறைசெலுத்தும் தளவராயன் எல்லைக்குள்ளிருந்த காட்டுக்குள் ஓடிமறைந்துகொண்டார். இடல்கானின் பெரும்படை எந்தவொரு தடங்கலுமில்லாமல், மூன்றாவது நகரத்தையும் கோட்டையையும் சுற்றிவளைத்தது. மூன்றாவது கோட்டையான வல்லத்தைப் பாதுகாத்துக்கொண்டிருந்த வீரர்கள் முதலிரண்டு கோட்டைகளும் வீழ்ந்துவிட்டதைக் கேள்விப்பட்டதும் பயந்துவிட்டனர். வெல்லமுடியாத எதிரிகளென்று, எதிரில் வந்தவர்களைத் தடுக்கவில்லை. உண்மையிலேயே தஞ்சாவூர் படைவீரர்கள் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளவே முயன்றார்கள். அரசருக்கு சேவைபுரிய வேண்டுமென்ற விசுவாசம் அவர்களிடம் இருந்ததாகத் தெரியவில்லை. கோட்டைக் கொத்தளங்களில் பயந்து ஒடுங்கிக்கொண்டிருப்பதைவிட அடர்ந்த காடுகளுக்குள், பயமில்லாமல் இருக்கலாமெனும் மனப்பான்மை அவர்களுக்கு வந்திருந்தது. விரைவிலேயே, இரவு அவர்களைப் போர்த்திக் கொண்டது. ஒவ்வொருவராக, சத்தமில்லாமல் துல்லியமானச் செய்கையுடன் வரிசையாகத் தப்பினார்கள். அவ்வளவுதான். விடிந்தது. வெறிச்சோடிக்கிடக்கும் நகரத்தில் தானும் தன்னுடன் விசுவாசமிக்க சில அலுவலர்கள் மட்டுமே இருப்பதை தளபதி உணர்ந்தார். அவர்களும் தங்களைத் தாங்களே அகதியாக உணர்ந்து கொள்ளும் மனநிலைக்கு வந்திருந்தார்கள். ஆனால் நேரம்போன போது, எதிரிகள் அபகரித்துக் கொண்டுசெல்லவிருக்கும் அளவிடமுடியாத செல்வத்தில், தங்களுக்கானப் பங்கை எடுத்துச்செல்ல விரும்பினார்கள். நாயக்கரின் பொக்கிஷ அறையைத் திறந்தார்கள். அவர்களால் எவ்வளவுக்கெவ்வளவு அள்ளிக்கொள்ள முடியுமோ அவ்வளவு தங்கம், முத்துக்கள் மற்றும் விலைமதிப்பிட முடியாதக் கற்கள் ஆகியவற்றை சுருட்டிக்கொண்டு, எளிதில் புகமுடியாதக் காடுகளுக்குள் நுழைந்துகொண்டார்கள். அவர்களின் பேராசைக்கு ஒருஅளவு இருக்கவில்லை. வழியில் அதனை மனம்போனபோக்கில் செலவிட்டார்கள். அதையறிந்து, காடுகளைப் புகலிடமாகக் கொண்டிருந்தத் திருடர்கள், தங்கள் கை வரிசையையும் காட்டினார்கள். அதன்பின்பே கோட்டையின்

நிலைகுறித்து தகவல் வெளியானது. கூட்டங்கூட்டமாகக் கோட்டைக்குள் புகுந்தார்கள். அவர்களில் ஒருவரை வாசலில் காவலுக்குவேறு நிறுத்திக்கொண்டார்கள். இன்னும்கூட, எண்ணிமுடிக்கமுடியாத அளவிலானப் பொக்கிஷத்தை முடிந்தஅளவுக்குச் சொந்தமாக்கிக்கொண்ட அவர்கள், அவற்றை மரக்கால்களால் அளந்தார்கள். ஒவ்வொருவரும் தாங்கள் அணிந்திருந்த ஆடைகளைக் கிழித்து, பல துண்டுகளாக்கி அவற்றில் தங்கம், விலைமதிப்பற்றக் கற்களை மூட்டைகளாகக் கட்டிக்கொண்டார்கள். செய்திக்கேள்விப்பட்டு பின்னால் வந்தவர்களுக்கும், (பக்.53) முன்னால் எடுத்துச் சென்றவர்களின் அளவுக்கு அள்ளிச்செல்ல, அங்கே பொக்கிஷங்கள் கொட்டிக்கிடந்தன. கோட்டையை நோக்கி ஒருகூட்டம் ஓடிக்கொண்டே இருந்தது.

எந்தவொரு சந்தேகமுமில்லாமல் இது, போரின் ஒரு மகிழ்ச்சிகரமான அத்தியாயம்தான். இந்தப் பொக்கிஷங்கள் அரசரின் பேராசையால் கனிந்தவை; மக்களின் வியர்வையால் உருவானவை; முகம்மதியர்களின் கொடுங்கொள்ளையிலிருந்து பெரும்பங்கைக் காப்பாற்றி, ஏழ்மைப்பட்டக் கூட்டம் அதைப் பிரித்துக் கொண்டிருக்கின்றது. அதைக்கொண்டு அவர்கள் கௌர வமான வாழ்க்கை வாழ்கிறார்கள். திருடர்கள் எதிர்பார்த்ததைக் காட்டிலும் பெருந்தன்மையாக நடந்துகொண்டார்கள். ஆளும்போது, மக்களைத் துயரநிலைக்கு உள்ளாக்கியிருந்த அரசர், இப்போது அவர்களைப் பணக்காரக் குடிமக்களாய் ஆக்கியிருந்தார். இந்தக் கொள்ளைக் குழப்பத்தில் சிறைக்கதவுகள் தானாகத் திறந்து கொண்டன. பல்வேறு குற்றங்களுக்காக சிறையில் அடைக்கப்பட்டிருந்தவர்கள் எல்லோரும் விடுவிக்கப்பட்டனர். ஒட்டுமொத்தக் குற்றமும் அவர்களின் எதிர்காலத்துக்கும், சமூக அந்தஸ்துக்கும் உபயோகமாக இருந்தது. சிறையில் அடைக்கப்பட்டிருந்தவர்களில் இருவர், நாயக்கரைக் கவிழ்த்திவிட்டு ஆட்சியைக் கைப்பற்ற எண்ணிய அவரது சகோதரர்கள். கடைசியாக, முகம்மதியர்கள் வல்லத்துக்கு வந்துசேர்ந்தார்கள். அவர்களைச் சுவர்கள் மட்டுமே வரவேற்றன. பாதுகாப்புக்கு அங்கே காவல் படையை நிறுத்திவிட்டு, நாட்டுக்குள் புகுந்து சூறையாடினார்கள். அழகிய வளம்மிக்க அந்த நகரத்தில் அவர்கள் பலமாதங்கள்வரை தங்கியிருந்தார்கள்; அவர்கள் ஏன் அத்தனைக்காலம் தங்கினார்கள்; அவர்களின் திட்டம் என்ன என்பதை யாரும் அறியமுடியவில்லை; நீண்ட இடைவெளிக் குப்பின், அங்கிருந்து அவர்கள் கிளம்பிய போது, ‘அங்கே அவர்கள் செல்வங்களைக் கண்டெடுத்தார்களா? அப்படிக் கண்டெடுக்கப்பட்டச் செல்வங்களை தங்களுடன் கொண்டுசென்றார்களா?’ என்பதும் தெரியவில்லை.

கடந்த மூன்று ஆண்டுகளில், இந்தச்சம்பவங்கள் அரசியல் சூழலில் நடந்தேறின.

### (2) பிரயோன்ஸா, பால் ஒலிவாவுக்கு எழுதியக் கடிதம், திருச்சினாப்பள்ளி, 1662.

*(பக்.119)* போர்த்துக்கீசியர்களுக்கு எதிராக, டச்சுக்காரர்கள் தொடர்ந்து நடத்திவந்தப் போரால், ஐரோப்பாவிலிருந்து எங்களுக்கு செய்திகள்வருவது தடைபட்டது.

இடல்கானின் தளபதிகளான சாகோசி மற்றும் மௌலாவின் வழிகாட்டுதலின்படி, இரண்டு ஆண்டுகளுக்குமுன்பு கைப்பற்றிய செஞ்சியையும், தஞ்சாவூரையும் முகம்மதியர்கள் தங்கள் ஆளுமையின்கீழ் கொண்டுவந்துவிட்டனர். இரண்டுநாடுகளைச் சேர்ந்தக் குடிமக்களும் அதற்காக, மன உலைவெல்லாம் கொள்ளவில்லை. வெற்றிபெற்ற அந்நியர்களின் கடிவாளத்துக்கு ஏற்பத் தங்களை தகவமைத்துக்கொண்டுவிட்டனர். தங்களை ஆண்ட இறையாண்மை மிக்க அரசர்களின் நீதியைக் காட்டிலும், அந்நியர்களின் கொடுமை குறைவாக இருப்பதை அவர்கள் உணர்ந்தனர். நம்மைப் பொறுத்தவரை, மக்களின் அபிமானம் பெற்றுவரும் கிறிஸ்தவர்களின்மீது, இந்தவெறியர்கள் தவறான வழிகாட்டுதல்களைக் கைக்கொள்கின்றனர். கடவுள் அருளால் அந்தத்துன்பங்கள் யாவும் விலகும்.

கிளர்ச்சிகளும், போரினால் ஏற்பட்டப் பேரழிவுகளும், நாட்டைப் பஞ்சத்தில் கொண்டு வந்துசேர்த்தன. நாட்டின் எல்லாப்பகுதிகளிலும் வறுமை தலைவிரித்தாடியது. குடிமக்கள், தங்கள் பூர்வீகங்களைவிட்டு வெளியேறினர். அங்கிருந்து நடையாய்நடந்து, மதுரைக்கும் சத்தியமங்கலத்துக்கும் பயணப்பட்டனர். *(பக்.120)* அங்கும் அழிவிருக்கத்தான் செய்தது. ஆனாலும் பிற இடங்களைப்போல அதிகமாகயிருக்கவில்லை. இந்தத் துயரங்களுக்கும் அலைவுறுதலுக்கும் படையெடுத்துவந்து சூறையாடிய முகம்மதியர்களே காரணமாக இருந்தனர்; அதற்கு அவர்களே முதலில் இரையாகவும் செய்தனர்; வறுமை, முகம்மதியப் படைவீரர்களையும் அவர்களின் குதிரைகளையும் கொடுமையாகத் தாக்கியது. மனிதர்களும் விலங்குகளும் கொத்துக்கொத்தாய்ச் செத்துவிழுந்தனர். உயிரழந்த மனித சடலங்களையும் விலங்கின் சடலங்களையும் புதைக்கவோ எரிக்கவோகூட அவர்களுக்கு நேரமிருக்கவில்லை. அவற்றை அம்பாரமாக வழிநெடுகிலும், வயல்வெளிகளிலும் இழுத்துப் போட்டனர். இந்த மடத்தனமானச் செய்கை பல்வேறு நோக்காடுகளுக்கு மூலக்காரணமாக அமைந்தது. அது,

உயிரிழந்தவர்களின் எண்ணிக் கையைப் பன்மடங்காக்கியது. இந்தப்பேரழிவுக்கு தளபதிகளையும் அதிகாரிகளையும் தெரியவில்லை. அவர்களுக்குள் சச்சரவும் பிளவும் ஏற்பட்டது.

நடந்துசென்றன குதிரைகளும் அதன்மீது அமர்ந்துவந்த மனிதர்களும் கொத்துக்கொத்தாய் உயிரிழந்ததைக்கண்ட படைத்தளபதிகளில் ஒருவரான மௌலாவுக்கு, மிச்சமிருக்கும் தனது படைகளின் நிலையை எண்ணி திகிலேற்பட்டது. கொடுக்கவேண்டிய மூன்றாண்டு கால திறையைச் செலுத்தினால், இந்த நாட்டிலிருந்து ஓடிப்போய்விடுவேன் என்று, நாயக்கர்களுக்கு கோரிக்கைமேல் கோரிக்கை விடுத்துக்கொண்டிருந்தார். அத்துடன், தனது கோரிக்கைகளுக்குச் செவிசாயுங்கள் என்று ஆட்களுக்குமேல் ஆட்களைவேறு அனுப்பிக்கொண்டிருந்தார். தூது போயும் எதுவும் நடக்கவில்லை. தஞ்சாவூர் நாயக்கரிடம் இழப்பதற்கு இனி எதுவுமில்லை; அதுபோலக் கொடுப்பதற்கும் எதுவுமில்லை. அவர் அமைதியாக, நடப்பது நடக்கட்டும் என்று, காட்டுக்குள் போனவர்தான், வெளியில் எட்டிக்கூடப் பார்க்கவில்லை. மதுரை நாயக்கர், வலுவான திருச்சினாப்பள்ளிக் கோட்டைக்குகள் இருந்துகொண்டார். அவரை, லிங்கம நாயக்கரின் தலைமை யிலானப் பாதுகாப்புப் படை பாதுகாத்துவந்தது. வேறுவழி யில்லை. வறுமையும் கொள்ளைநோயும் பின்தொடர, தஞ்சாவூரிலிருந்து எதுவும் பெயராது என்றநிலையில் அந்த ஊரைக் கைவிட்டுவிட்டு, மௌலா புறப்பட்டார். அவரது அடுத்த இலக்காக, திருச்சினாப்பள்ளிதான் இருந்தது. தனது வீரர்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரைக்கொண்டு அதை முற்றுகையிட்டார். ஆனால் அவரை, ஒருபக்கத்தில் அந்தக்கோட்டையின் இயற்கையானப் பாதுகாப்பும், அதன் உயரமானச் சுவர்களும், மிக ஆழமான அகழிகளும் எதுவும் செய்யமுடியாது என அச்சமூட்டின. முற்றுகையிட்ட தைரியத்தை, அங்கிருந்து இடங்காத்து நிற்கும் பாதுகாப்புப் படையின் எண்ணிக்கைப் போக்கடித்தது. ஒன்று, நரித்தனத்துடன் தந்திரமாகக் களமாட வேண்டும். அல்லது கடுமையாக மோதவேண்டும். வேறுவழிதெரியாமல், நாட்டை சூறையாடத் தொடங்கினார். குறைந்த எண்ணிக்கையிலானப் படையென்றாலும் அதிகபட்ச உழைப்புடன் களமிறங்கியிருந்தார். ஆனால், பாலைவனத்தில் நடத்தியப் போரைப்போல, எந்தவொரு லாபமும் கிடைக்கவில்லை. அதுமட்டுமில்லாமல், அந்தப் பகுதியிலிருந்தத் திருடர்கள் இரவுநேரங்களில் காட்டி லிருந்து வெளிப்பட்டு, முகலாயப் படைகளின் முகாம்பிரிவுகளுக்குள் நுழைந்து, முகலாயத் தளபதிகளும் படைவீரர்களும் முன்பு, பல்வேறு இடங்களிலிருந்து தி(ரு)ரட்டி வைத்திருந்தச் செல்வங்களை, அடித்துக்கொண்டுபோய்விட்டனர். எல்லாத்

தரப்பிலிருந்தும் முகலாயப் படைக்கு கணிசமான இழப்புகள் உருவாயின. பின்பு மௌலா, மதுரை நாயக்கரிடம் கெஞ்சி, மிதமான ஒருதொகையை வாங்கிக்கொண்டு நாட்டைவிட்டுப் பின்வாங்கி வெளியேறி, மலைகளுக்குப் பின்னால் இறங்கிப்போனார்.

(பக்.121) எந்தவொரு சிரமமுமில்லாமல், 'பொத்தினாற்போல' அரியணையேறிய முத்து வீரப்ப நாயக்கர், அதை நீண்டநாட்களுக்கு அமைதியாக அனுபவிக்கும் அதிர்ஷ்டமில்லாதவராகவே இருந்தார். தந்தை திருமலை நாயக்கரைக் காட்டிலும் வீரதீர வல்லமையுடன் திகழ்ந்த இளவரசர் முத்துவீரப்ப நாயக்கர், ஆட்சியின் தொடக்கத்தை அபாரமாகவே ஆரம்பித்தார். ஆனால் அவரதுபோக்கு, வேறுதிசையில் பயணப்பட்டது. சிற்றின்பக் களியாட்டத்தில் வெகு பாய்ச்சலுடன் ஈடுபட்டார். முதலில் குணக்கேடடைந்த இளவரசரை, மட்டுமீறிய ஒழுக்கக்கேடு கடும்பிணியில் இருத்திவிட்டது. பின்னர் உடல்நிலைக்குன்றி, தொடர்ந்து உயிரையும் தொலைத்துவிட்டார். இதையடுத்து, அரியணை அவரது மகன் சொக்கலிங்க (சொக்கநாத) நாயக்கருக்குப் போனது. பதினாறு வயதுமட்டுமே ஆகியிருந்த அந்த இளவரசன், தனது அமைச்சரவையை மதுரையிலிருந்து திருச்சினாப்பள்ளிக்கு மாற்றிக்கொண்டார். திறமையும் அனுபவமும்கொண்டவராக இருந்த அவரது முதல்அமைச்சர், ஒருபிராமணராக இருந்தார். அவரது செயலாளர் மறைந்த அரசருக்கு மிகவும் நம்பகமாக இருந்தவர். அந்த இருவரும் அரசரின் இளம்பருவத்தைக் காரணமாக வைத்து, நிறைய அனுகூலங்களை செய்துகொண்டனர். எல்லா அதிகாரங்களை தங்களுடையதாகவும் ஆக்கிக்கொண்டனர். அப்படியும் தங்களை வலுப்படுத்திக் கொள்வதற்கு ஒத்துவராத உயர்குடிகள் மற்றும் தலைவர்களை நாட்டைவிட்டு வெளியேற்றினார்கள் அல்லது சிறையில் அடைத்தார்கள். பிராமண அமைச்சரின் உதவியுடன் இளம்அரசர், துணிச்சல் என்னும்பெயரில் வம்புக்கு இழுக்கும் திட்டம் ஒன்றில் இறங்கினார். அதன்செயல்பாடு அவரது அறிவுக்குட்பட்டச் செயலாகத் தெரியவில்லை. முகம்மதியர்கள் கைப்பற்றிய இடங்களிலிருந்து அவர்களை விரட்டியடித்துவிட்டு, அங்கே முந்தைய பிஸ்நகரின் ஆட்சியை மறுநிர்மாணம் செய்ய எண்ணியிருந்தார். செஞ்சியை மீட்டு அதன் நாயக்கரிடம் கொடுக்க ஆவல்கொண்டு, பொல்லாங்கை விரட்டுவதாக, தாத்தா திருமலை நாயக்கரின் கொள்கைகளைத் தொலைத்தார்.

இந்த நோக்கத்துடன் லிங்கம நாயக்கர் தலைமையில் நாற்பதாயிரம் வீரர்களைக் கொண்ட பெரும்படையை அனுப்பி,

முகம்மதியத் தளபதி சாகோசி மீது தாக்குதல் நடத்தி, செஞ்சியைக் கைப்பற்ற முனைந்தார். உள்ளத்துணிவும் செயல்திறமும் நிறைந்த கீர்த்திமிக்க தளபதி, பிராமண அமைச்சர் மற்றும் இளம் அரசரின் திட்டங்களைச் செயலாக்கி, வெற்றியுடன் திரும்புவார் என்று உறுதியாகத் தெரிந்தது. ஆனால், எதிரிப்படையின் தளபதிக்கு பரிசுகளைக் கொடுத்து, நீண்ட மற்றும் பயனில்லாத வெற்றுப் போராட்டத்தில் காலத்தை நகர்த்தியதுடன் அரசின் நிதி இருப்பையும் அந்தத்தளபதி பெருமளவு கரைத்துக் காலிசெய்து விட்டார். இரண்டு அமைச்சர்களுமாகச் சேர்ந்து திருச்சினாப் பள்ளியைத் தங்கள் கைவசம் ஆக்கிக்கொண்டனர். தங்களின் கொடூரத்தால் மக்களின் கடுஞ்சினத்துக்கு ஆளாகினர். (பக்.122) தனதுபெயரில் அவர்கள் ஒழுங்கற்ற நடவடிக்கைகளில் ஈடுபடுவதைக் கண்டு கடும்சினமுற்ற இளம்அரசர் அதற்குப் பரிகாரம் தேடமுடியாத அளவுக்கு அதிகாரமற்று இருந்தார். அரண்மனையே அவருக்கு சிறைக்கூடமாக ஆகியிருந்தது. அரசருக்கும் மக்களுக்குமானத் தொடர்பை அமைச்சர்கள் அனுமதிக்கவில்லை. அதனால் அரசரால் எந்தவொரு விஷயத்தையும் வெளிப்படுத்த முடியவில்லை. ஓர் அடிமைப் போல, தான் நடத்தப்படுவதை உணர்ந்தார். தன்மீது அமைச்சர்கள் அதிகாரம் செலுத்துவதில் திருப்தியற்றிருந்த அரசர், மனம் கொதித்தார். அதனால் இரண்டு சதிகாரர்களும் ஒன்றுசேர்ந்து அரசரை பதிவியிலிருந்து தூக்கிவிட்டு, அரசரின் இன்னொரு சகோதரரான இன்னும் இளவயதுடைய ஒருவரை அரசராக்கி, அவர்பெயரில் உரிமை கொண்டாடி, தன்னிச்சையாய் ஆளுவதற்கு நம்பிக்கையுடன் முடிவுசெய்திருந்தனர். அவர்களுடன் கூட்டுச்சதியில் இருந்தத் தளபதி லிங்கம நாயக்கர், அரசருக்கு இன்னும் விசுவாசமாக இருந்த உயர்குடியினரை அப்பதவியிலிருந்து மிரட்டியும், சிறையில் தள்ளியும் தனது செயல்பாட்டை முழுமைப்படுத்தினார். இந்த சதித்திட்டத்தை அமைச்சரவையிலிருந்த ஒருபெண், அரசருக்கு ரகசியமாகத் தெரிவிக்க, அது அமைச்சர்களால் திட்டமிட்டு வெளியேற்றப்பட்டிருந்த இரண்டு தளபதிகளுக்குத் தெரிவிக்கப் பட்டு அவர்களின் உதவிகோரப்பட்டது. வெளியிலிருந்த அரசருக்கு ஆதரவானத் தளபதிகள் இருவரும் உடனடியாகப் படைவீரர்களைத் திரட்டிக்கொண்டு திடீரென்று சதிகார அமைச்சர்கள் மீது தாக்குதல் நடத்தினார்கள். செயலாளரைத் துண்டாடினார்கள். பிராமணரின் கண்களைப் பறித்துக் குருடாக்கி, கடும்தண்டனைக்கு உள்ளாக்கினர்.

அதிரடித் தாக்குதல் நடத்தி, மீண்டுவந்த அரசர் சொக்கநாத நாயக்கர், வெளியேற்றப்பட்ட அல்லது சிறையில்

அடைக்கப்பட்டிருந்த, தன்மீது பற்றுறுதிகொண்ட நம்பகமான அமைச்சர்களை உடனடியாக வரவழைத்து, பதவியேற்கச் செய்தார். லிங்கம நாயக்கரைக் கடுமையாகத் தண்டிக்க இயலாமல், கண்டும்காணாமல் விட்டுவிட்டார். ஆனால் சதியில் ஈடுபட்டிருந்த லிங்கம நாயக்கரின் மனம் உறுத்தியது. ஏதும் செய்துவிடுவார்களோ என்ற பயம் அவருக்குள் இருந்துகொண்டேயிருந்தது. ஒருநாள் அங்கிருந்துத் தப்பியோடி, முகம்மதியப் படைத்தலைவர் சாகோசியுடன் சேர்ந்துகொண்டார். மிகவிரைவிலேயே, சாகோசியுடன் பன்னிரெண்டாயிரம் காலாட்படை வீரர்களுக்கும் ஏழாயிரம் குதிரைப்படை வீரர்களுக்கும் தலைமையேற்றுத் தலைவனாகத் திரும்பிவந்து முன்னர், தாம் பணியாற்றிய திருச்சினாப்பள்ளியை முற்றுகையிட்டார். நாயக்கப் படைவீரர் களின் எண்ணிக்கை, அப்படையின் எண்ணிக்கையைவிட ஐம்பதாயிரம் அதிகமாகவே இருந்தது. பழைய பிராமணனின் தொண்டராகயிருந்து புதிய அமைச்சராகப் பதவியேற்றிருந்தவர், இப்போது நம்பிக்கைத் துரோகம் செய்தார். படைவீரர்களிடையே பிளவை உண்டாக்கினார். ஏதுவாக, எதிரிப்படையுடன் செய்துகொண்ட உடன்படிக்கையின்படி, படைப் பிரிவுகளின் தலைவர்களை தன் கட்டுப்பாட்டில் வைத்துக்கொண்டதுடன், நெஞ்சுரம்கொண்ட மற்றும் நேர்மையான படைத்தலைவர்களை குயுக்தியாகக் களத்துக்கு அனுப்பி, படுகொலைக்கு உள்ளாக்கினார். அல்லது சிறைபிடிக்கச் செய்தார். முதல்கட்டம் வெற்றியில் முடிந்ததும், தனது முகமூடியைக் கழற்றித் தூர எறிந்துவிட்ட புதிய தளபதி, தனது படைகளுடன் திரும்பி நகருக்குவந்து அரசரை முற்றுகையிட்டு, பதவியிலிருந்து கீழிறக்க முயன்றார். பிராமணர் களை அளவுக்கதிகமாக நம்பிய அரசர், இரண்டாம்முறையும் காட்டிக்கொடுக்கப்பட்டார். ஆனால் மீத முள்ளப் படைகளைக்கொண்டு அரசர், தன்னைப் பாதுகாத்துக்கொண்டார். அரசருக்கு ஆதரவாக வீரர்கள் கடும்விசுவாசத்துடன் போரிட்டார்கள். கிளர்ச்சிசெய்த சதிகாரர்கள், சரிவைச் சந்தித்தார்கள். லிங்கம நாயக்கரும் சாகோசியும் தஞ்சாவூரில் அடைக்கலம் புகுந்துகொண்டனர்.

சொக்க(லிங்க)நாத நாயக்கரின் தலைமையில் படைகள் நம்பிக்கையுடன் மீண்டும் வலுப்பெற்றன. அனைத்துத் தரப்பிலிருந்தும், படிநிலைகளிலிருந்தும் அவர் தலைமையில் ஒன்று கூடினர். மறுதொடக்கத்தில் அவர், தனதுபோக்கைத் திறமை யுடனும், வீரார்ந்தும் அனுபவமுள்ள ஒருதலைவனைப்போல அமைத்துக்கொண்டார். அவரது நீதியும் நிர்வாகமும் உத்தரவுகளும் அனைத்துத் தரப்பினராலும் ஏற்றுக்கொள்ளும் வகைமையிலேயே

*அமைந்திருந்தது. அதுபோலவே, அவரது தைரியம் மற்றும் சமரசமற்ற உக்கிரம் மதிப்பையும் பயத்தையும் மற்றவர்களுக்குத் தந்திருந்தது. அவர் உருவாக்கிக்கொண்ட நற்பெயரும் கீர்த்தியும் எதிரிப்படையின் வீரர்களையும் கவர்ந்திருந்தது. வெற்றிகளுக்கான வாய்ப்பை உருவாக்கித்தரும் அவருக்கு தங்களின் சேவையை வழங்க, எதிரிப்படையின் வீரர்களுமே தயாராக இருந்தனர். ஒருதலைவராக, கட்டுக்கோப்புடைய எழுபத்தைந்தாயிரத்துக்கும் அதிகமான வீரர்களைக்கொண்ட பெரும்படையுடன் தஞ்சாவூரை நோக்கிப் புறப்பட்டார். அங்கே முகாமிட்டிருந்த இரண்டு தளபதிகளும், செய்தியைக் கேள்விப்பட்டதும் செஞ்சியைநோக்கிப் பறந்தோடினார்கள். தஞ்சாவூர் நாயக்கர் வெற்றிபெற்றவரின் விதிகளுக்கு உட்படுவதாக, தனது கோரிக்கையைச் சமர்ப்பித்தார். இவைதான், அதன்விரிந்த எல்லைக்கோடு. இவ்வரசியல் காட்சிகளின் சித்திரத்தை மேலும் விரித்து விளக்குவது, தங்களுக்குப் பயனுள்ளதாக இருக்காது.*

### (3) பால் ஒலிவாவுக்கு பிரயோன்ஸா எழுதியக் கடிதம், கெங்குவார்பட்டி, 1665.

*(பக்.158) ....... பயந்து, எதிர்பார்த்துக் கொண்டிருந்ததுபோலவே எல்லாமும் நடந்தது. முகம்மதியர்களின் படை, வழியெங்கும் குழப்பங்களை விதைத்து, கொடுமைகளை அறுவடை செய்தக் கதைகள் பலப்பல உண்டு. ஓரிடம்கூட விட்டுவைக்காமல் வழியெங்குமுள்ள நிலங்களை, குளங்களை, கிணறுகளைப் பாழ்படுத்தியதில், குடிமக்கள் ஒவ்வொருவர் நெஞ்சிலும் பீதி அமர்ந்துகொண்டது. உத்வேகமும், செயலறிவுத்திற நிர்வாகமும் கொண்ட சொக்கநாத நாயக்கர், எவ்வாறேனும், காத்துவிடுவார் என்ற நம்பிக்கை ரேகை, நாட்டில் படர்ந்திருந்தது. இடல்கானின் படைகள் கடைசியில் வந்தேவிட்டன. அப்படைகளுக்கு, வனமியான் தலைமை ஏற்றிருந்தார். முகம்மதியப் படைத் தளபதிகளில் வீரமும்தீரமும் நிறைந்தவர், அவர். மதுரை பிராந்தியத்தின் முக்கியத்தளமான திருச்சினாப்பள்ளிக்கு வெகுஅருகில் தனது படைகளை நிறுத்தி, முகாமிட்டார். அங்கிருந்தபடியே அரசரை பயமுறுத்துவதற்கு சில பல சாகசங்களை, எதிரிப்படையின் தளபதி என்னும் முறையில் செய்துகாட்டி, சக்தியை வெளிப்படுத்தினார். என்னென்னவோ செய்துகாட்டியும், மதுரை அரசர் மிரட்டல்களுக்கு அசரவே யில்லை. லாபமேதும் இல்லாமல் சக்தி மட்டும் வீணாய்ப்போனதை உணர்ந்த தளபதி வனமியான், அதற்கப்புறம்தான் இந்தமுறைக ளெல்லாம் பயன்தராது என்று, தொடர்தாக்குதலில் கடுமையுடன்*

ஈடுபட்டார். ஆனால் கோட்டைக்குள்ளிருந்து நடத்திய பீரங்கித்தாக்குதலில் முகம்மதியப் படைத்தலைவருக்குத்தான் பெரிய அளவில் சேதம் ஏற்பட்டது. ஆயினும் அவர், சுற்றுவட்டாரப் பகுதிகளை சினம்கொண்டு அழித்தார். அதில், நமது பேராலயமும் தாக்குதலுக்கு உள்ளானது. அது, முற்றிலுமாக அழிந்துபோய்விட்டது. நான்கு குதிரைப்படை வீரர்களால் எனக்கு ஆபத்து சூழ்ந்துநின்றது. நான் அவர்களிடம் சிக்கவிருந்தேன். இதனால் நானும், சில ஆதரவாளர்களுமாக நகரத்தைநோக்கி ஓடினோம். முற்றுகையிட்டிருந்தவர்கள் வீசிய சில குண்டுகள், எங்களுக்கு மிக அருகில் விழுந்து வெடித்தன. (பக்.159) கோட்டை மீது அவர்கள் நடத்தியத் தாக்குதல், மீண்டும் லாப மற்றுப் போனதால் அவர்களின் ஆத்திரம் பன்மடங்கானது. நகரத்தைச் சூறையாடினார்கள். பல்வேறு சேதங்களை ஏற்படுத்தினார்கள். கிராமங்களைத் தீயிட்டுக் கொளுத்தினார்கள். குடிமக்களைப் பிடித்து, அவர்களை அடிமைப்படுத்தினார்கள்.

நாட்டைச் சூழ்ந்துகொண்ட கொடுமையான, பயங்கரக் காட்சிகளைச் சித்திரிப்பது, அவ்வளவு எளிதில் முடிந்துவிடாது. இழிநிலைமாந்தர்களின் கைகளில் சிக்கிச்சீரழிவதை, இந்தியக் குடிகள் அவமானமாகக் கருதுகின்றனர். இந்தக்கொடுமைகளுக்கு ஆட்படாமல், அவர்கள் உயிர்த் துறந்துவிடுவதற்கு சிறிதும் அஞ்சுவதில்லை. எளிதாக ஏற்றுக்கொள்கின்றனர். பெரும் எண்ணிக்கையிலானப் பெண்களையும் குழந்தைகளையும் கொன்றுவிட்டு, தங்கள் உடல் களிலும் வாளைப்பாய்ச்சி, பிணங்களின் மீது மடிந்துவிழுகின்றனர். இந்தவழிமுறையில் பெரும் துன்பியல் முடிவை, ஒட்டுமொத்தக் குடிமக்களும் ஏற்கத்தயாராக இருந்தனர். வேறுசில கிராமங்களில் குடிமக்களெல்லாம் ஒருசில வீடுகளில் ஒன்றுகூடி, தங்களுக்குத் தாங்களே தீயிட்டுக்கொளுத்தி, சுவாலைகளுக்குள் மடிந்துபோய் விட்டனர். ஒரு கிறிஸ்தவப் பெண்ணும் இந்தப் பொதுவிதிக்கு உட்படுத்தப்பட்டு, ஒரு பெரியக் கட்டிடத்துக்கு இழுத்துவரப் பட்டார். பிறகு அந்தப்பெண் நானூறு பிணங்களுக்கு இடையிலானக் குவியலிலிருந்து உயிருடன் மீட்கப்பட்டார். இந்த சுய வன்முறைகள் எந்தளவுக்கு இந்திய மனங்களில் பிடிவாதமாக, எதற்கும் அடங்காத சாதியத்தின் கௌரவமாகவும், அதற்கானத் தனிச்சிறப்புரிமையாகவும் கொண்டிருக்கிறார்கள் என்பதை, தாங்கள் புரிந்துகொண்டிருக்க முடியும். அந்த இழிநிலைக்குப் பின்னால், முகம்மதியர்கள், தாங்கள் திரட்டிய அனைத்தையும் கணக்கிட்டார்கள். செலவைக்காட்டிலும் திரட்டியது, மிகவும் குறைவாகவே இருந்தது. அச்சுறுத்தலும் மிரட்டலும் அழிவுகளும்

ஏற்படுத்தியும் எந்த லாபமும் கிட்டியிருக்கவில்லை. இதையடுத்து, பெருந்தொகையைப் பெற்றுக்கொண்டு, மகிழ்ச்சியுடன் ஊர்த்திரும்பும் எண்ணத்தில், அவர்கள் நாயக்கரிடம் பேச்சு வார்த்தைக்கு முயன்றனர். நாயக்கர் சிறுஉதவி என்னும்பெயரில், சொற்பத் தொகையை மட்டுமே அளித்தார்.

முகம்மதிய எதிரியிடமிருந்து விட்டுவிடுதலையாகிய சொக்க(நாத)லிங்க நாயக்கர், போர்ச்சூழலில், உடன்பாடுகளுக்கு எதிராகத் தன்னை, மறுபடியும் முகலாயர்களிடம் காட்டிக் கொடுத்துவிட்ட தஞ்சாவூர் அரசரைப் பழிக்குப்பழிவாங்க எண்ணினார். அதற்கேற்ப, தனது வலுவானப் படைக்கு தானே தலைமைதாங்கி, தஞ்சாவூர் நகரத்துக்குமுன்பு முகாமிட்டார். சில பல சண்டைகளுக்குப் பின்னர், வல்லம் அவர் கைகளில் அடைக்கலமானது. (பக்.160) அந்தக் கோட்டை, நிலவியல் அமைப்பில் மிகமுக்கியமானதும், செல்வவளத்தில் அதிமுக்கிய மானதுமாக இருந்தது. சுற்றிலும் வளம்கொழிக்கும் வயல்கள் இருந்தன. பின்னர், தோற்கடிக்கப்பட்ட எதிரியுடன், தான் விரும்புவதுபோல பதிவிட்டு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார். அந்தக் கோட்டைக்குப் போதுமான பாதுகாவலையும் ஏற்பாடுசெய்துவிட்டு, தலைநகரம் திரும்பினார். அது, அவருக்கு மிகப்பெரிய வெற்றியாக அமைந்தது.

வெற்றியைக்கொண்டாடும் வீரர்களின் அதேவேகத்தைப் பயன்படுத்தி, முகம்மதியப் படையெடுப்பின்போது, தனக்குக் கைகொடுத்து உதவமறுத்த மறவ அரசருக்கு பாடம் புகட்ட சொக்க (நாத)லிங்க நாயக்கர் எண்ணினார். திருப்பத்தூர், புதுக்கோட்டை, மானாமதுரை உள்ளிட்ட முக்கியமானக் கோட்டைகளையும் மற்றும் சில சிறியக் கோட்டைகளையும் அதிரடியாகக் கைப்பற்றினார். பின்னர் அடர்ந்தக்காட்டுக்குள் புகுந்து, அதன் இதயப்பகுதி யிலிருந்து காளையார் கோவில் கோட்டையைக் கைப்பற்றினார். வலுவான மற்றும் முக்கியமானக் கோட்டைகள் பறிபோனபின்பும், தனது துணிவை விட்டுக்கொடுக்காத மறவ அரசர், காட்டின் நடுப்பகுதிக்கு முழுநம்பிக்கையுடன் வந்துசேர்ந்தார். வழியில் கொள்ளையர்களுடன் நடத்தியப்போர் தந்த சோர்வு, மேலும் மதுரையில் கொண்டாட வேண்டிய சில நிகழ்ச்சிகளில் பங்கேற்க வேண்டியிருந்த நெருக்கடியால், மேற்கொண்டு படை நடத்தும் அதிகாரத்தை தனது தளபதிகளிடம் விட்டுவிட்டு நாயக்க அரசர் மதுரைக்கு வந்துவிட்டார். ஆனால் அவர் ஊர்திரும்பியதும், அங்கு சூழல் மாறிவிட்டது. சூழலை எப்படி தங்களுக்கானதாக மாற்றிக்கொள்வதென்பது மறவர்களுக்கு சாதகமாகியிருந்தது. அவர்களுக்கு காட்டின் ஒவ்வொரு அங்குலமும் அத்துப்படி.

அங்கே எப்படிப் போர் புரியவேண்டுமென்பது, அரிச்சுவடி. அத்தனைக்கோட்பாடுகளையும் கைக்கொண்டு இழந்த பல இடங்களை மறவ அரசர் வென்றெடுத்தார்.

## (4) ஆண்ட்ரே பிரைரே பால் ஒலிவாவுக்கு எழுதியக் கடிதம்,.....1666.

*(பக்.201)* ..... மூன்று சாம்ராஜ்ஜியங்கள் இயங்கிய இடத்தில் இந்தத்திருச்சபை உட்பட்டிருந்தது. அவற்றின் செயல்பாடுகள் திருச்சபையால் தொடர்ந்து கண்காணிக்கப்பட்டன: சொக்க லிங்க நாயக்கர் மதுரையையும், விஸ்ஸராயா (விஜயராகவா) தஞ்சாவூரையும் மற்றும் செஞ்சியை இடல்கானின் மூன்றுதளபதிகளும் ஆண்டுவந்தனர். இந்த ஆண்டின் ஆகப்பெரிய அரசியல் நிகழ்வுகளாக, சில அமைச்சர்களின் மாற்றங்கள் நடந்தேறின. தஞ்சாவூர் பிரதானியாக ஒரு பிராமணர் இருந்துவந்தார். அரசருக்குத் திறைசெலுத்தும் பாளையக்காரர்களிடமிருந்தும் நிலவுடமையாளர்களிடமிருந்தும் வசூல்செய்து, அரசாங்கத்தின் பொக்கிஷத்தை நிரப்புவதும் அவரது பணிகளில் ஒன்று. அப்பணிகளின்போது, அப்படியே வகைதொகையில்லாமல் வசூல்செய்து, தனது செல்வ வளத்தையும் மேடுறுத்திக் கொண்டார். பணியாளர்கள் மற்றும் தொழில்களுக்கென்று ஒதுக்கப்பட்டதில் ஒருபகுதியை, தொழிலாளர்களின் வயிற்றில் அடித்துக் கொஞ்சம் சுருட்டிக் கொண்டார். பிரதானியின் மோசமான இச்செய்கை வெளியே தெரிந்துவிட்டது. இதற்கான தண்டனை அமைச்சருக்கு வழங்கப் படவேண்டுமென்று தொழிலாளர்கள், மிகப் பெரிய போராட்டத்தில் ஈடுபட்டனர். *(பக்.202)* தொழிலாளர்கள் தங்கள் பணிக்குப் போகவில்லை; வணிகர்கள் தங்கள் கடைகளை அடைத்து எதிர்ப்புதெரிவித்தனர்; குடிமக்களில் பெரும்பாலானோர் தங்கள் வீடுகளிலிருந்து வெளியேறிவிட்டார்கள். நாடே பாலைவனம்போல காட்சிதந்தது. அமைச்சரின் இந்த நாகரீகமற்றக் கொடுஞ்செயலைக் கண்டும்காணாமல் அரசர் இருந்திருக்கக்கூடாது. ஆனால் அரசரே, விடாத பொருள்வேட்கையில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்தார். இந்தக்கொள்ளைக்கு எதிரான நடவடிக்கை எடுக்கப்படும் என்று நம்பிக்கைக் கொண்டிருந்தக் குடிமக்களின் எண்ணத்தை சீர்கெடுப்பவராக, அவர் இருந்தார். பிறகு, இந்தப் போராட்டத்தை எப்படி முடிவுக்குக் கொண்டு வரலாம் என்று அவர் எண்ணியபோது, அவரது அமைச்சர் அத்தனைச்செல்வத்தையும் சுருட்டிக்கொண்டு போய்விட்டது தெரியவந்தது. அதனால் மக்களின் கோபத்தை அமைச்சர்மேல் திருப்பிவிட்டு, தன்னை ஏமாற்றியதற்குப் பழிக்குப்பழி வாங்கினார். இதுவே, அமைச்சர் மீது அரசர் எடுத்த ‘நேர்மையான’ மற்றும்

'கடுமையான' தண்டனையாகும். ஏழைகளின் கோபத்தைக் காட்டிலும் பயங்கரமானது எதுவும் இல்லை என்பதற்கு இது ஒரு உதாரணம்.

மதுரையின் பிரதானியும் இதேபோலானக் கொடுமையான வரி தண்டுதலுக்கு ஆளாகி, குற்றம் சாட்டப்பட்டு நின்றார். ஆனால் நாயக்கர் அவரை, அமைச்சர் பணியிலிருந்து நீக்கவில்லை. மாறாக, முந்நூறு ஆயிரம் ஈகஸ்கள் மட்டும் அபராதம் விதித்து, பிரதானியை திருப்திப்படுத்திவிட்டார். இந்த நடவடிக்கை, அரசர் தனது குடிமக்களையே தண்டனைக்கு உள்ளாக்கியதற்குச் சமமாக இருந்தது. அமைச்சர் தனது கொடூரத்தை வெளிப்படுத்தி, மக்களிட மிருந்து இரண்டுமடங்கு வரிவசூலித்து, அரசர் தண்டிய அபராதத் தொகையைச் செலுத்தினார். மகிழ்ச்சியுடன் தொடங்கிய அரசரின் ஆட்சி, ஒவ்வொருவரையும் மகிழ்ச்சிப்படுத்தும் முழுநிறை விவேகத்துக்கும் சமத்துவமானப் பொற்காலத்துக்கும் எப்படி அழைத்துச் செல்கின்றது, பாருங்கள். பேரார்வம் இளம்அரசரின் தைரியத்தைக் கண்மூடித்தனமாக செயல்படச் செய்து, விவேகத் தை ஊக்கமற்றதாக ஆக்கிவிட்டது. மதுரை, அவருக்குள் பல கற்பிதங்களை சித்திரப்படுத்தியிருந்தது. அவர் தனது கற்பிதங்களைத் தொட்டெழுப்பி, திருச்சினாப்பள்ளியில் வனப்பான அரண்மனையொன்றைக் கட்டுவதில் தன்னை மூழ்கடித்துக் கொண்டார். அதற்காக, திருமலை நாயக்கர் மதுரையில் கட்டியிருந்தப் பிரம்மாண்டமான அரண்மனையின் ஒருபகுதியை இடித்து அழித்தொழித்தார். அரண்மனையிலிருந்து விலைமதிப்பிட முடியாதப் பொருட்களைக் கொண்டு சென்றார். அவற்றில் அரிய அழகியப் பொருட்களான கறுப்புநிறக் கற்பாளங்களும் இருந்தன. மக்களின் கண்ணீரையும் இரத்தத்தையும்கொண்டு கட்டப்பட்ட நாட்டின் மிகமுக்கிய, கம்பீர அழகுச்சின்னத்தை அழித்தவராக இருக்கின்றார். இடிக்கப்பட்ட அந்தக்கட்டிடம் வேறு எதனுட னும் ஒப்பிட முடியாத ஒன்று.

ஆனால் வேறு எதனுடனும் ஒப்பிடமுடியாத அளவுக்கான கொடூரம் (பக்.203) செஞ்சியில் முகம்மதியர்களால் பணியமர்த்தப் பட்ட தளபதிகளால் நடத்தப்பட்டது. என் கண்களால் கண்ணுற்ற அவற்றை மறுபடியும் எண்ணிப்பார்க்க முடியாது. நான் அதை விளக்கத் தொடங்கினால், உண்மையென நம்புவது அரியதாகி விடும். சமீபத்திய சம்பவமாக நடந்த பயங்கரம், இடல்கான் பெரும்படையொன்றை அனுப்பி, நாயக்கர் ஒப்புக்கொண்டிருந்த தங்களுக்கானப் பங்களிப்பை, அடாவடியாகப் பெற்றுவந்ததைக் குறிப்பிடலாம்.

### (5) ஆண்ட்ரே பிரைரே பால் ஒலிவாவுக்கு எழுதியக் கடிதம்..1676.

*(பக்.247) .......... இந்தத்தகவல்கள், எனது 1673ஆம் ஆண்டின் கடிதத்திலிருந்து எடுக்கப்பட்டுள்ள நிகழ்வுகள்.*

*தங்களுக்கு முன்னர் அனுப்பப்பட்டக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்த போரின் அவலங்களுக்குப்பின், மதுரை நாயக்கர், தஞ்சாவூரைத் தன்வயப்படுத்திக் கொண்டார். அத்துடன், தனது எதிரியாகக் கருதிய தஞ்சாவூர் அரசரின் தலையைத் துண்டித்தார். காட்டுமிராண்டித்தனமான இச்செய்கையில் ஈடுபட்டும், அவரால் வெற்றியைத் தக்கவைத்துக்கொள்ள முடியவில்லை. இந்தத்தகவல்கள் இடல்கானைச் சென்றடைந்தன. கூடவே அவரிடம் உதவியும் கோரப்பட்டது. உடனடியாக அவர், பெரும்படையொன்றை தனது தளபதி ஈகோஜியின் தலைமையில் அனுப்பி, தஞ்சாவூரில் அரசை மறுநிர்மாணம்செய்து, தோற்கடித்துக் கொல்லப்பட்ட அரசரின் மகனுக்கு அரியணையைப் பெற்றுத்தருமாறு ஆணையிட்டார். தஞ்சாவூரைக் கைப்பற்றியிருந்த மதுரை நாயக்கர், தனது ஒன்றுவிட்ட மூத்த சகோதரர் அழகிரி நாயக்கரை, அங்கே அரசராக நியமனம் செய்திருந்தார். படையெடுத்துவந்த ஈகோஜியை, வழியிலேயே மூர்க்கமாக எதிர்த்துத் தடுத்து நிறுத்திவிட்டார், அழகிரி நாயக்கர். படைபலத்தால் அழகிரி நாயக்கரை வென்று நாடடைய முடியாது என்பதை ஈகோஜி அறிந்துகொண்டார். அதனால் பல்வேறு சூழ்ச்சித் தந்திரங்களை மேற்கொண்டு நாடடையும்திட்டத்தில் தஞ்சாவூரின் எல்லையிலேயே முகாம் அமைத்து அமைதியாக அமர்ந்துகொண்டார். அதுவும் ஓராண்டுகாலத்தை உள்வாங்கியது. இந்நிலையில் மதுரை நாயக்கருக்கும் அவரது மூத்தசகோதரர் அழகிரி நாயக்கருக்கும் கருத்துவேறுபாடுகள் அரும்பிவிட்டன. மடத்தனமும் பரஸ்பர பொறாமையுமாக அவர்கள் ஒருவரை யொருவர் விட்டு விலகிநின்றனர். இதனை சாதகமாக்கிக்கொண்ட ஈகோஜி, தனது திட்டங்களை அழகாகச் சாதித்துக் கொள்வதற்கான ஆயத்தங்களில் ஈடுபட்டார். அவரது எதிர்பார்ப்பு எதுவுமே பொய்க்கவில்லை. சகோதரர்களின் பிளவினை முன்னெடுத்து, ஈகோஜி ஓராண்டுகாலமாகக் காத்துக் கிடந்த தனதுபடைகளுக்குத் தலைமையேற்று, நகரம்நோக்கி ஏகினார். முதல்தாக்குதலிலேயே நகரம் சரிந்துவிழுந்தது. அதையும் அதன் சுற்றுப்புறத்தையும் இலகுவாக அள்ளிக்கொண்ட அவரது கால்கள், அடுத்து மதுரை அரசரின் தங்குமிடமாகயிருந்த திருச்சிராப்பள்ளி அரண்மனையின் வாசலில் போய்நின்றன. போனவேகத்திலேயே அரண்மனையையும்*

கோட்டையையும் தாக்கியிருந்தால், ஈகோஜியின் எதிர்காலம் வளமாக இருந்திருக்கும். 'தனது வெற்றியைத் தாக்குதல்மூலம் மறுபடியும் நடத்திக்காட்ட வேண்டுமா?' என்றும், 'பிறகு சமாதானத்துக்கு / உடன்படிக்கைக்கு தோதாக இருக்குமா?' எனப்பயந்து, யோசனையில் இருந்துவிட்டார். இந்தத் தயக்கம், நாயக்கருக்குப் போதுமான அவகாசத்தைத் தந்தது. அவர் தனது பயத்தை அகற்றி, செம்மைப்படுத்திக் கொண்டார். தன்னைப் பாதுகாத்துக்கொண்டதுடன் தலைநகரத்தையும் காப்பாற்றிக் கொண்டார். ஆனால், தனது ஆட்சிப்பரப்பெல்லையின் வலுவான இடங்களில் சிலவும் மற்றும் பெரும்பகுதியும் ஈகோஜியிடம் சிக்கிக்கொண்டிருந்தது.

ஒருகொடுங்கோலனின் தண்டனைகளைப்போல, அசுரமாக நடந்துகொண்ட மதுரை நாயக்கருக்குத் தெரிந்த ஒரே சட்டமாக, சிற்றின்பவேட்கையே இருந்தது. மக்களை மறந்து தன்னிச்சையாய் ஆளும்போக்கு, முந்தைய ஆட்சியாளர்களின் கொடூரத்தை மறக்கச்செய்தது. எதிரிப்படையினரால் அடிக்கப்பட்டக் கொள்ளைகளும் நடத்தப்பட்டக் கொடூரங்களும் மக்கள், அரசரை வெறுத்து, அவருக்கு எதிராகக் கிளர்ந்தெழ வைத்தது. அவர் தன்னைத்தானே வதைத்துக் கொள்பவர்போல, குடிமக்களையும் தனக்கு திறைசெலுத்திவந்தவர்களையும் மோசமாக நடத்தினார். ஆனால் அவரது எதிரிகளை விட்டுவிட்டார்.

நீண்டநெடியப் போர்களைத் தொடர்ந்துவந்த பஞ்சம், நாடெங்கும் தனது கொடூரக் கரங்களை விரித்தது. குறிப்பாக, மதுரையையும் மறவ நாட்டையும் ஒருகை பார்த்தது. எங்குபார்த்தாலும் சூறையாடப்பட்ட வெறுமையும், மனிதச்சடலங்களும்தான் காட்சிதந்தன. ஒருபக்கத்தில், குடிமக்கள் பட்டினிச்சாவால் மடிந்தார்கள். எப்படியாவது பஞ்சம்பிழைத்துவிட மாட்டோமா என்று நாட்டைவிட்டு எங்கெங்கோ மற்றவர்கள் பயணப்பட்டார்கள். ஈகோஜி ஒருபுறத்திலும், மைசூர் அரசர் மறுபுறத்திலுமாக, ஒருகாலத்தில் வளம்கொழித்துக்கிடந்த நாட்டின் மிச்ச மீதிக் குப்பைகளை ஒவ்வொருநாளும் பொறுக்கியெடுத்துக் கொண்டிருந்தனர். எதிரிகளுக்கு நாட்டைக் கைப்பற்றுவது எளிதாக இருந்தது. மக்கள், யார் தங்களுக்கு மீட்பராக இருந்தாலும் எதிரிகளையும் ஆதரிக்கத் தயாராக இருந்தார்கள்.

ஆனால் தஞ்சாவூரில் நடந்ததோ வேறாக இருந்தது. நாட்டைக் கைப்பற்றிய தளபதி ஈகோஜி, இடல்கானின் உத்தரவின்படி, கொல்லப்பட்ட தஞ்சாவூர் அரசரின் மகனை அரியணையில் அமர்த்தாமல், பட்டத்தைதானே சூடிக்கொண்டு ஆட்சிசெய்ய

எண்ணம் வைத்தார். அபகரித்த அரியணையில் அமர்ந்து ஒட்டுமொத்த சாம்ராஜ்ஜியத்துக்கு அவரே அரசராகிவிட்டார். மட்டுமல்லாமல், முன்னர் ஆட்சிசெய்த அரசர்களைக் காட்டிலும் குடிமக்கள் விரும்பும் அரசராகிவிட்டார். நீதியும்நேர்மையுமாகத் தொடங்கிய அந்தஆட்சி, முந்தைய அரசர்களின் காலத்தில் நேர்ந்த காயங்களுக்கு மருந்திடுவதுபோல அமைந்தது. நாட்டின் இயற்கை வளங்கள் மேம்படுத்தப்பட்டன. மண்ணின் வளத்தால் ஒட்டுமொத்த இந்தியாவிலேயே குறிப்பிடத்தக்க விளைநிலங் களைக்கொண்ட பூமியாக அது மாறியது. அதிகப்படியான மகசூல் குவிந்தது. கால்வாய்களையும் குளங்களையும் சீரமைத்ததில், பல ஆண்டுகளாக உழவைக் கண்டிராத நிலங்கள் சீராகி, பயிர்ப்பச்சைகளைக் காணும் விவசாய நிலங்களாக உருமாறின. விளைவாக, முன்னெப்போதும் காணாத அளவில், களஞ்சியங்கள் நிரம்பிவழிந்தன. துரதிர்ஷ்டவசமாக வளமைக்கொழிக்கும் இந்தநிலை, நீண்டநாட்களுக்கு நிலைக்கவில்லை. ஒருபக்கம் தன்னைமீறி கிளர்ச்சிசெய்து, ஆட்சியை அபகரித்துவிட்ட தனது தளபதியை ஒடுக்க, இடல்கான் பெரும்படையொன்றை அனுப்பிவைத்தார். மறுபக்கம், மதுரை நாயக்கரின் படைகள் ஆர்ப்பரித்துக்கொண்டுவந்தன. தனது சகோதரர் அழகிரி நாயக்கருடன் ஒன்றிணைந்து, எளிதில் ஈகோஜியை நசுக்கி ஒடுக்கி யிருக்க, மதுரை நாயக்கரால் முடிந்திருக்கும். ஆனால் அதனை உவப்பாக, மதுரை நாயக்கர் கருதவில்லை. அதேவேளையில் வல்லமைமிக்க படையொன்றை உருவாக்க, தனக்குத் திறை செலுத்தும் பாளையக்காரர்களை தங்களின் சச்சரவுகளையெல்லாம் மறந்து, பொது எதிரிக்கு எதிராக ஒன்றிணைய வைத்தார். அதேநேரத்தில், மைசூர் படைகளை எளிதாக எடைபோட்டு விட முடியாது. தங்களது எல்லைப்பகுதியில் அவர்கள் வலுவாகக் காலூன்றியிருந்தனர். மதுரையின் ஆட்சிப்பரப்பெல்லையின் வடக்குப்பகுதியிலுள்ள பாதுகாப்பு அரண்களையெல்லாம் கைப்பற்றி, அதனைத் தங்கள் வசமாக்கியிருந்தனர். அங்கெல்லாம் புதியபடைகளை நிறுத்தி, போருக்கு ஆயத்தமாகவே இருந்தனர். மதுரை நாயக்கர், தஞ்சாவூரின் மீது அல்லது தஞ்சாவூருடன் இணைந்து போரில் ஈடுபடுவதற்குமுன்பு, மதுரை மீது தாக்குதல் நடத்தப்படலாம் என்ற எதிர்பார்ப்பு இருந்தது. ஏனென்றால், அவர்கள் தங்களுக்குள்ளானக் குழப்பங்களைத் தீர்த்துக் கொள்ளவில்லை என்பதை (பக்.450) வெளிப்படையாகவே காட்டிக்கொண்டனர்.

செஞ்சி அரசாங்கமும் மாறிமாறி ஆட்சியை அபகரித்தவர்களின் மனம்போன செயல்பாடுகளால், கொஞ்சநஞ்ச பாதிப்புக்கு

ஆளாகவில்லை. ஒரு பிராமணர், செஞ்சியின் ஆளுநராக இருந்த ஒருவரின் சகோதரர். மரம்போல ஆளுநர் சும்மாயிருந்தாலும், காற்றுபோல அவர் சகோதரர் சும்மாயிருக்கவில்லை. இடல்கானுக்கு எதிராக அல்லது தக்காணத்தின் ஆட்சியாளர் களுக்கு எதிராக சதித்திட்டம் ஒன்றைத் தீட்டினார். அவரது செயல்பாடுகள் ரகசியம் காப்பவையாக இருக்கவில்லை. வெளிப்பட்டுவிட்டன. அவர்விரித்த வலையில் அவரே விழுந்துவிட்டார். படைகளைத் திரட்டி சூழ்ச்சியில் இறங்கியபோது, தக்காணத்தின் ஆட்சியாளரால் வல்லடியாக அடித்துக்கொல்லப்பட்டார். சூழ்ச்சியில், ஆளுநருக்கும் பங்கிருக்கும் என்று கருதப்பட்டது. அதனால் முன்னவரை வெளியேற்றவும், அவருக்கு மாற்றாக மற்றொரு ஆளுநரை நியமிக்க, ஒரு படை அனுப்பப்பட்டது. ஆனால் பொறுப்பிலிருந்த ஆளுநர் வலுவான எதிர்ப்பைக் காட்டினார். ஆயினும், பின்வாங்க நேர்ந்தது. அதன்படி, தலைநகரைவிட்டு வெளியேறிய அவர், ஆட்சிக்கு எதிராக அனைத்துவிதமான முயற்சிகளிலும் தன்னை ஈடுபடுத்திக்கொண்டார். இவ்வாறாக, தொடர்ச்சியானப் போர் நடவடிக்கைகள், ஏற்கனவே மூன்று அமைச்சர்களின் கொடுங்கோன்மையால் அல்லலுற்றிருந்த நிலையில், நாட்டின் மகிழ்ச்சிக்கு பங்கமாகவே அமைந்தன.

## (6) ஆண்ட்ரே பிரைரே பால் ஒலிவாவுக்கு எழுதியக் கடிதம், வீராணம், செஞ்சி சாம்ராஜ்ஜியம், 1678.

*(பக்.268)* இந்தக்கடிதத்தை வழக்கம்போல, அரசியல் நிகழ்வுகளின் விளக்கங்களாக, திருச்சபையின் மேன்மை தங்கியவருக்கு எழுதிச் சமர்ப்பிக்கின்றேன். முந்தையக் கடிதத்தில் நான் குறிப்பிட்டு எழுதியதைப்போல, இடல்கானின் பழைய தளபதியும் தற்போதைய தஞ்சாவூர் மற்றும் செஞ்சியின் ஒருபகுதிக்கு எஜமானராக இருக்கும் ஈகோஜியுடன் போர் தொடுப்பதற்கான அத்தனை ஆயத்தங்களையும் மதுரை நாயக்கர் செய்து கொண்டிருந்தார். இதனிடையே இச்செய்தி ஈகோஜியின் மூத்தசகோதரரான சபோஜி(சிவாஜி)க்குக் கொண்டுசெல்லப்பட்டது. சில காலத்துக்குமுன்பு, அவர் தங்கள் நாட்டில் அரசருக்கு எதிரானக் கிளர்ச்சியில் ஈடுபட்டு, பிஸ் நகரின் பல்வேறுபகுதிகளைக் கைப்பற்றியிருந்தார். வலுவானப் படையொன்று அவர் தலைமை யில் இயங்கியது. அந்தப்படை தக்காணத்திலும் கோல்கொண்டா விலும் இருக்கும் எதிராளிகளுடன் போர் நடத்துவதற்கு, மிகக்குறுகியகாலத்தில் பலநூறு கல்தொலைவிலிருந்து விரைந்து வந்தது என்பதை, நம்புவதற்கு இயலாததாக இருக்கின்றது.

இந்தப்பரப்புரையின் நம்பகத்தன்மை ஆய்வுக்குரியதாக இருந்தபோதிலும், முதல்தாக்குதலிலேயே மின்னலாய்ச் செஞ்சிக் கோட்டையை வீழ்த்தித் தன்வசப்படுத்தி, அந்தக்கேள்விகளுக் கெல்லாம் சிவாஜி பதிலளிக்கின்றார். எளிதாக அவர்பெற்ற இந்தவெற்றிக்குப் பின்னணியில், அவர் தனது படைகளை பல பிரிவுகளாய்ப் பிரித்து, மேம்படுத்தியிருந்தார். பல்வேறு வழிகளில் தகவல்தொடர்புகளை கவனமாக முகம்மதியர்களுடன் நடத்தியபடியே இருந்தார்.

செஞ்சியை தன் ஆளுகைக்கு உட்படுத்தியப் பிறகு, தன் சகோதரர் வசமிருக்கும் பகுதிகளில் முகாமிட்ட புதியவெற்றியாளர், ஈகோஜியை நட்புரீதியான சந்திப்புக்கு அழைத்தார். ஈகோஜியும் முழுநம்பிக்கையுடனானக் கொண்டாட்ட மனநிலையில் சகோதரரைச் சந்திக்கப் புறப்பட்டு, தஞ்சாவூரிலிருந்து மூவேழு கல்தொலைவில் கொள்ளிடக்கரையில் முகாமிட்டிருந்த சிவாஜியைக் கண்டார். அப்போது, இயற்கையாக நடக்கவேண்டிய சகோதரப் பாச உணர்ச்சிப் பெருக்கு எதுவும் நடக்கவில்லை. மாறாக, பேராசையும் எல்லாவற்றையும் கைக்கொள்ளும் சூதும் அரங்கேறியது. துரோகத்துடன் தனது சகோதரனைக் கைதுசெய்து, விலங்கிட்டு, தஞ்சாவூரை வளப்படுத்தி நிரப்பிவைத்திருந்த அனைத்துச் செல்வங்களையும் அபகரித்துக்கொள்ள முயன்றார். ஈகோஜி, தந்திரமாக சிவாஜியின் பிடியிலிருந்துத் தப்பித்து, கொள்ளிடம் ஆற்றை நீந்திக்கடந்து, அடர்ந்த காடுகளுக்குள் ஒளிந்துகொண்டார். ஏமாற்றமடைந்த சிவாஜியோ, அவ்வளவு தொலைவிலிருந்துவந்து முகாமிட்டு, அழைத்துப்பேசியதற்கானக் கூலியாக, கொள்ளிடம் ஆற்றுக்குவடக்கேயிருந்த அனைத்துப் பகுதிகளையும் அபகரித்துக்கொண்டார். பின்னர் தனது படைக்குப் பொறுப்பாக, வல்லமைமிக்கத் தளபதியான மற்றொரு சகோதரர் சந்தோஜியிடம் ஒப்படைத்து, அவருக்கு ஆலோசனைகள் கொடுக்க மதிநுட்பமும் முனைப்பார்வமும் உடைய ஒருபிராமணனையும் பணியமர்த்தினார். முகலாயப்படைகள் களமிறங்கி, தனது ஆளுகையை விரிக்கத் தொடங்கிவிட்டச் செய்திகிடைத்ததும் மகனுக்கு உதவும்நோக்கத்தில் தலைதெறிக்க வடக்குநோக்கி சிவாஜி ஓடினார்.

சிவாஜியின் புறப்பாட்டை ஈகோஜி, தனக்கு லாபகரமாக ஆக்கி, தனது அதிகாரத்தை மறுநிர்மாணம் செய்துகொள்ளப் படைவீரர்களைத் திரட்டினார்; ஆற்றைக் கடந்தார்; செஞ்சிக்குள் புகுந்தார். சந்தோஜியின் தலைமையில் எண்ணிக்கையில் வலுவானப் படை, மதிநுட்பமும் வல்லமையும் மிகுந்தத் தளபதிகளால் எதிரியை எதிர்கொண்டது. ஆனால் ஈகோஜி தன்னை

எதிர்த்தவர்களின் மனைவிகளை கௌரவக் குறைச்சலாக நடத்தினார். குழந்தைகளைக் கொன்றார். பழிவாங்கும் உத்வேகச்சீற்றம் இரண்டுதரப்பிலும் பன்மடங்காகப் பெருகியது; கட்டுப்பாடும் ஒழுங்கும் சீர்குலைந்தது; எங்கெங்கும் படுகொலைகளும் வன்முறைகளும் அரங்கேறின. எல்லாம் ஒருநொடிதான். சூழ்ச்சி, குருட்டு அதிர்ஷ்டத்தில் வெற்றியைத் தட்டிக்கொண்டு போய்விட்டது. சிவாஜியால், 'வல்லமைமிக்கவர்' என்று கருதப்பட்ட சந்தோஜி தப்பியோடுமளவுக்கு நிலைமை மாறியிருந்தது. தன்னை அமைதிப்படுத்திக்கொண்டு, பதுங்கிப் பாய ஒரு பெரும் படையைத் திரட்டும்பணியில் இறங்கினார். வெற்றியின் எக்காளத்தில் புறப்பட்டுச் சென்றவர்களின் பின்பக்கத்தில் சந்தோஜி திரட்டியப் படை, திடீர்தாக்குதலில் இறங்கியது. மூர்க்கமான இந்தத்தாக்குதலை எதிர்பார்த்திராத ஈகோஜியின் படை சிதறினாலும், போர் பலமணிநேரம் நீடித்தது. இறுதியில், சந்தோஜியின் படை வெற்றிபெற்றது. என்றபோதிலும் அதுவென்றதைக் காட்டிலும் கூடுதலாக இழந்திருந்தது.

இரண்டுபடைகளும் போரிட்டுக்கொண்டிருந்தபோது, மதுரை நாயக்கர் ஈகோஜிக்கு எதிராக, தனதுபடையுடன் தஞ்சாவூர்மீது தாக்குதல்தொடுக்க வந்துசேர்ந்தார். தஞ்சாவூரை முழுமையாக அள்ளிக்கொள்ளும் சந்தர்ப்பம், அப்போது கைக்கூடி நின்றிருந்தது. ஆனால் அதை சாதகமாக ஆக்கிக்கொள்ளும் நுட்பம்இல்லாதவராக, மதுரை நாயக்கர் இருந்தார். சந்தோஜிப் படையினரால் தோற்கடிக்கப்பட்ட ஈகோஜி படையினர், உயிர்பிழைக்க கொள்ளிடம் ஆற்றில் நீந்திக்கடப்பதை கண்ணால் காணுகின்றார். நிலைகுலைந்துபோயிருக்கும் அவர்கள் ஒழுங்கற்று ஓடோடிவந்து, தங்கள் கோட்டைக்குள் ஒளிவதையும் காணுகின்றார். அவர்கள்மீது தாக்குதல் நடத்தவோ அல்லது அவர்களுடன்சேர்ந்து நகருக்குள்புகுந்து, தனது சட்டத்தை நிலைநாட்டவோ செய்யாமல், தயக்கத்துடன் நேரத்தை வீணடித்துக் கொண்டிருந்தார். பின்னர் தனதுபடைகளின் நிர்வாகச்செலவுகளுக்குப் பகரமாக, தஞ்சாவூரில் வென்றெடுக்கும் பகுதிகளையும் கோட்டையையும் வைத்துக் கொள்ளலாம் என்ற உறுதிமொழியுடன் சந்தோஜியுடன் கூட்டுசேர்ந்தார். ஆனால் காலம்கனிந்து, உதிர்ந்துவிட்டிருந்தது. ஈகோஜி, தன்னிடமிருந்த அபரிமிதமானச் செல்வத்தைக்கொண்டு, சிவாஜியின் பேராசையைப் பூர்த்திசெய்துவிட்டிருந்தார். இதையடுத்து அவர், தான் இழந்தபகுதிகளையும் அதில் அமைதியையும் ஏற்படுத்திக்கொண்டார். கோழைத்தனமும் செயல்பாடின்மையும் நிறைந்த மதுரை நாயக்கர், தனதுநேரத்தையும் பொருளையும் இழந்து, வெட்கக்கேட்டுடன் ஓடோடிவந்து, திருச்சினாப்பள்ளிக் கோட்டைக்குள் ஒளிந்துகொண்டார்.

தனது ஆட்சியைப் பாதுகாத்துக்கொள்ள, பிஸ்நகரின் முந்தையத் தலைநகரான வேலூரை முற்றுகையிட்டிருந்த தனது சகோதரருடன் சந்தோஜி சேர்ந்துகொண்டார். ஓராண்டுக்குப்பின், சிவாஜி அதன் எஜமானராக ஆனார். இதையடுத்து, அவர் செஞ்சி உள்ளிட்டப் பெரும்நிலப்பரப்புக்கு முடிசூடிய மன்னரானார். ஆயினும், இத்தனைப்பெரியப் பகுதியை அமைதியாகக் கட்டியாளமுடியாது என்பதையும் அவர் உணர்ந்திருந்தார். எதிர்த்துவெல்லமுடியாத அளவில் பெருவலியைத் தந்துகொண்டிருக்கும் முகலாயப் படைகளிடமிருந்து தன்னையும் தன்னாட்டையும் பாதுகாத்துக் கொள்ளவேண்டியிருந்தது. முன்கூட்டிய இப்பார்வையை தன் மனதில் இருத்தியிருந்த சிவாஜி, தனது செல்வம் அனைத்தையும் முக்கிய நகரங்களைப் பலப்படுத்துவதில் செலவிட்டார். செஞ்சியைச் சுற்றிப் புதியஅரண்களை அமைத்தார்; அகழிகள் வெட்டினார்; கண்காணிப்புக் கோபுரங்கள் எழுப்பினார்; வடிநிலங்களை உருவாக்கினார்; அனைத்துப் பணிகளையும் ஐரோப்பியர்களின் துல்லியத்துக்கு சற்றும்குறையாத அளவில் இருக்குமாறு பார்த்துக்கொண்டார். இதுபோலவே, உபயோகத் துக்கு ஆகும் என்றுகருதிய மற்ற அரண்களையும் பலப்படுத்தினார்; உபயோகமில்லாதவற்றை அழித்துவிட்டார்; மலைகளிலும் சமவெளிகளிலும் பெரும்எண்ணிக்கையில் புதிய அரண்களைக் கட்டினார்.

இப்பெரும்பணிகளால் நாட்டின் செல்வமெல்லாம் கரைந்து போனது. அதைச் சரிக்கட்டுவதற்கு உலக வழக்கப்படியானக் கொள்ளைத் தொழிலில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டார். அதாவது, தனது குடிமக்களில் செல்வந்தர்களாக இருப்பவர்கள் சேமித்துவைத்திருக்கும் செல் வங்களைக் கொள்ளையடித்தார். அவரது உத்தரவுகள் கடுமையாகவும், காட்டுமிராண்டித்தன மாகவும் செயல்படுத்தப்பட்டன. இதையடுத்து, பெரும்பாலானக் குடிமக்கள் நாட்டைவிட்டு வெளியேறுவதைப் பாதுகாப்பாக (பக்.272) உணர்ந்தனர். தங்கள் இருப்பிடத்தைவிட்டுப் போக முடியாதவர்கள் இரும்புகரங்களில் சிக்கி அவதிப்படுபவர்களாக, வேதனைக்குரலில் புலம்பிக் கிடந்தனர். பழைய துயரங்களை யெல்லாம் இந்தத் துயரங்கள் மறக்கடித்துவிட்டன. முகலாயர் களின் வருகையை ஏக்கத்துடன் எதிர்பார்த்தனர். ஒழுங்கான ஆட்சியைவிட வல்லாட்சி மேலா னது என்றுகருதினர். அந்தளவுக் குப் பாழ்பட்ட நிலை செஞ்சி, வேலூர் சாம்ராஜ்ஜியங்களில் அலையாடியது. இதனை நான் விளக்கமாகச் சொல்லப் புகவில்லை. கண்ணுற்றக் கொடூரங்களைச் சொல்வதற்கு என்னிடம் வார்த்தைகள் இல்லை. தடுமாறுகின்றன.

தஞ்சாவூரைப் பொறுத்தவரை, அதனைத் திரும்ப மீட்டெடுப்பதற்கு ஈகோஜி பெருந்தொகையைக் கொடுக்க வேண்டியதாக இருந்தது. இந்த உட்குழப்பங்களுடன் மறவர்கள் நடத்திய வழிப்பறிகளும் கொள்ளையடித்தல்களும் கைகோர்த்துக் கொண்டன. முகம்மதியர்களின் படைகளுடன் அவர்கள் நேரடியாக மோதாமல், அவ்வப்போது மிரட்டியும் படைகள் மீது அதிரடித் தாக்குதல் நடத்தியும் வந்தனர். இருந்தபோதிலும், தங்கள் மண்ணின் வளத்தை அந்தமக்கள் கண்டறிந்திருந்தனர். அவர்கள் செலுத்திய உழைப்பில் விளைந்தத் தானியங்கள் இந்த ஆண்டின் துயரத்தைப் போக்கின.

மேலும் சிலவார்த்தைகள், மதுரை அரசாங்கத்தைப் பற்றி இங்கே பேசுகின்றேன். சொக்க லிங்கநாயக்கர் ஆட்சியிலிருந்தபோது, தஞ்சாவூரைக் கைப்பற்றிவிடவேண்டுமென்று பேராவலுடன் மைசூர் அரசர் கனவுகண்டுகொண்டிருந்தார். முடிவில், அவர் தனது எல்லைகளை இழந்ததுதான், நிகரலாபம். மதுரை ஆட்சிப்பரப்பெல்லையின் வடக்கில் இரண்டேஇரண்டு கோட்டைகளை மட்டுமே தன்வசம் வைத்திருந்தது. அங்கே எந்தவொரு சந்தடியுமில்லாமல் நுழைந்த மைசூர் அரசர், எளிதாகக் கைப்பற்றிக் கொண்டார். நாட்டின் உயர்குலப் பிரபுக்கள் நாயக்கரின் நடத்தையால் எரிச்சலடைந்தார்கள். அரசருக்கு எதிராக சதித்திட்டம் தீட்டி, அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாக போலிக் காரணம்காட்டி, சிறையில் அடைத்துவிட்டார்கள். அப்படியே அரசரின் சகோதரர் முத்துலிங்க நாயக்கரை அரியணையில் ஏற்றிவிட்டார்கள். அவரது அரசாங்கம் புத்திசாலித்தனமானதாகவும் இல்லை. கொடுங்கோன்மைக்குக் குறைந்ததாகவும் இல்லை. நாடுமுழுவதும் கொடுமைக்காரர்களுக்கு எதிரானப் புலம்பல்களும் சாபம் இடும் குரல்களும் கேட்டவண்ணம் இருந்தன. மேலும் நிலைமையைப் பேரழிவுக்கு உள்ளாக்கும்வகையில் பிரளயம் ஒன்றும் நடந்தேறியது. சத்தியமங்கலம், திருச்சினாப்பள்ளி, தஞ்சாவூர் மற்றும் செஞ்சி ஆகிய மாகாணங்களில் திடீர்வெள்ளப் பெருக்கு ஏற்பட்டு, (பக்.273) பல கிராமங்களைக் குடும்பம் குடும்பமாய் அடித்துக்கொண்டுபோனது. தெய்வீகக்கோபம் கசையடிகொடுப்பது போல, வெள்ளப்பெருக்கைத் தொடர்ந்து விரைவிலேயே பஞ்சமும் தொற்றுநோய்களும் ஓடோடிவந்து சேர்ந்துகொண்டன. மேலும்நாடெங்கும், வழிப்பறிகள் உச்சத்தைத் தொட்டிருந்தன. ஒருகாலத்தில் செல்வம்கொழித்தத் தலைநகரில், அதன் அடையாளங்கள் எதுவும் இப்போது காணப்படவில்லை. வளமைக்கும் கம்பீரத்துக்கும் அழகுசேர்த்த அரண்மனைகள் பாலைவனமாகி, பாழடையத் தொடங்கியிருந்தன. மதுரை நகர்

*திருடர்களின் குகையையொத்து காட்சியளித்தது. பெருமைக்குரிய புதிய நாயக்கர் எதையும்செய்யாது - துரும்பையும் கிள்ளாத - அரசராக இருந்தார். அவர் பகலிலும் இரவிலும் தூங்கினார். அதேவேளையில் அண்டை நாட்டு அரசர்கள் தூங்காமல் ஒவ்வொருநொடியும் அவருடைய நாட்டின் பகுதிகளை கீற்றுப்போட்டு அபகரித்துக் கொண்டிருந்தனர். மக்கள் அடைந்த லாபம் என்றுபார்த்தால், ஆட்சிமாறியது மட்டும்தான். எல்லைமீறி நாட்டுக்குள்நுழைந்து தாக்குதல்தொடுப்பவர்களைக் கண்டு கொள்ளாதவராகவும் அவர், இருந்தார். இருபது ஆண்டுகளுக்கு முன்பு, அத்தனைசெழுமையுடன் இருந்த நாட்டை மடத்தனமானக் கொள்கைகளாலும் செயல்பாடுகளாலும் எதிரிகளுக்கு இரையாக்கிவிட்டனர் என்று ஒவ்வொருவரும் ஆதங்கப்பட்டனர். பலதொகுதிகளைக்கொண்ட அரசியல் நிகழ்வுக் கதைகளை மட்டுமே பேசிக்கொண்டிராமல், எனது முதன்மைப் பணியான திருச்சபை ஊழியத்துக்கு நான் செல்கின்றேன்.*

### (7) பால் ஒலிவாவுக்கு ஆண்ட்ரே பிரைரேயின் கடிதம், வடுகர்பட்டி, 1682.

*(பக்.301) ....இந்தஅரசர்களின் பேராசையும் நியாயமற்றக் கொடூரங்களும்தான் அவப் பேருக்கும் நாட்டின் ஒட்டுமொத்தக் கண்மூடித்தனமாக அழிவுக்கும் காரணமாக இருக்கின்றன என்பதை, அவர்கள் புரிந்துகொள்ளாதவர்களாக இருக்கின்றனர். அது, தங்கள் நாட்டை பாதிக்கும் என்பதில் கிஞ்சிற்றும் அக்கறைப்படாதவர் களாகவும் இருக்கின்றார்கள். யானை தன்தலை யில் மண்ணை அள்ளிப்போட்டுக்கொள்வதுபோல, திருமலை நாயக்கர் ஆழ்ந்துணராத செய்கையாக, பிஸ்நகருக்கு எதிரானப் போரில் மூன்றுநாயக்கர்களுக்கு ஆதரவாக, முகம்மதியப் படையை அழைத்ததிலிருந்து, இடைவிடாது பொதுநலத்துக்குக் குந்தகம்தருகின்ற கொந்தளிப்பானத் தன்மையை இந்தியாவின் தென்பகுதியில் அச்செய்கை நிலைநிறுத்திவிட்டது. அழிவு உண்டாக்குகின்றப் பெரும்பாலானப் போர்களுக்கு இதுவே காரணமாக ஆகிவிட்டது. போரின் மூலமாக லாபம்பெறுவதி லிருந்தும், தவறுகளைத் திருத்திக்கொள்வதிலிருந்தும், ஒருங்கிணைந்தப் பாதுகாப்பை உருவாக்கிக்கொள்வதிலிருந்தும், அதன்மூலம் அறிவார்ந்த ஆட்சியை நல்கும் வாய்ப்பிலிருந்தும் விலகிய அந்த இளவரசர்கள், (பக்.302) தங்களுக்கிடையில் கீழறுப்பு வேலைகளைச்செய்து, தங்களைத் தாங்களே பலவீனப்படுத்திக்கொண்டும், கொடுங்கோன்மையான ஆட்சியால், தங்கள் வளத்தை அழித்துக்கொண்டும் இருப்பதையும் தாங்கள் புரிந்துகொண்டிருப் பீர்கள். ஏற்கனவே, பிஸ்நகர் சாம்ராஜ்ஜியம்,*

செஞ்சி நாயக்கர் மற்றும் தஞ்சாவூர் நாயக்கர் ஆகியோரின் அரசுகள் சிதைந்துபோய்விட்டன. மதுரை நாயக்கரின் அரசும் அதே விதிக்குப் பலி யாகும் விளிம்பில் நின்றுகொண்டிருக்கின்றது. அவரதுநாட்டை ஒருபக்கம் ஈகோஜியும் மறுபக்கம் மைசூர் அரசரும் நெருக்கிக்கொண்டிருக்கின்றார்கள். ஆனால் மதுரை நாயக்கர், தன்னைத் தானே திருச்சினாப்பள்ளிக் கோட்டைக்குள் பாதுகாப்பாக அடைத்துக்கொண்டிருக்கின்றார்.

கடந்த சில ஆண்டுகளாக, இந்த அரசு செயலற்றுக்கிடப்பதை விவரிப்பது, தங்களை தலை சுற்றவைத்துவிடும். முன்னர் எழுதிய சில கடிதங்களின்வழியாக, சொக்கலிங்க நாயக்கர் மன நோயாளி என்று போலிக்காரணம் காட்டி பதவிநீக்கம் செய்து, சிறையில் அடைக்கப்பட்டதும், அவரது சகோதரர் முத்துலிங்க நாயக்கர் அந்த இடத்துக்கு வந்ததும், அரியணை ஏறிய அவர் அறிவார்ந்தவராகவும் இல்லாமல், மனிதத்தன்மையில்லாதவராகவும் இயங்கியதையும் தாங்கள் அறிந்திருப்பீர்கள். எஜமானர்களின் மாற்றம், பேரார்வமான இன்னல்களையும் ஒழுங்கற்ற ஆட்சியையும்தான் குடிமக்களுக்கு வாரிவழங்கியது. இந்தநிலைகூட கொஞ்சகாலம்தான் நீடித்தது. அரசரின்சேவைக்காக இருந்தக் குதிரைப்படையின் முகம்மதியத் தளபதி ருஸ்தும்கான், அரசரின் கையாலாகாத்தனத்தை சாதகமாக்கி, அவருக்கு எதிராகக் கிளர்ச்சிசெய்து, கோட்டையின் கதவுகளை மூடி, அரசைக் கைப்பற்றிக் கொண்டார். தான், நீதியுடன் செயல்படுவதாகக் காட்டிக்கொள்ள, சிறைப்பட்டிருந்த சொக்கலிங்க நாயக்கரை விடுவித்து, அவரை அரசராக அறிவித்தார். உண்மையில் ருஸ்தும்கானிடம்தான் அரசருக்கான அதிகாரமும் உரிமைகளும் இருந்தன. தனது குதிரைப்படையின் ஆதரவுடன் ஒட்டுமொத்த நாட்டையும் தனது இரும்புக் கரங்களின் கீழ், எந்தவொரு பொறுப்பிலும் இல்லாமல் நிழல்ஆட்சி நடத்திக்கொண்டிருந்தார். அடாவழி உரிமையில் நிழலாட்சி நடத்திய ருஸ்தும்கான், அரண்மனையின் அனைத்துசொத்து களையும் அபகரித்ததுடன், இரண்டுஅரசர்களின் மனைவிகளையும் தனதாக்கிக்கொள்ள முயன்றார். மானக்கேடான அச்செயலிலிருந்து காத்துக்கொள்ள, அவ்விருபெண்களும் தற்கொலை செய்துகொண்டார்கள்.

*(பக்.303)* இத்தனைக் கொடூரங்களையும்கொண்ட அந்த ஆட்சி, இரண்டாண்டுகள்வரை நீடித்தது. எதற்கும் ஒரு முடிவிருப்பது போல, அதுவும் புதியதொரு பேரிடரின்மூலம் முடிவுக்கு வந்தது. மைசூர் தளபதி (தளவாய் குமாரய்யா) குமார ராயா, வலுவான படையுடன் வந்து, திருச்சினாப்பள்ளி மீது தாக்குதல் தொடுத்தார். அங்கே, பாதுகாப்புப் பொறுப்பிலிருந்த படைத் தலைவரை,

திடீர்படையெழுச்சிபோல ஆரவாரம்செய்து மயக்கினார். படைத்தளபதி அச்சலசலப்பில் ஏமாந்து புறப்பட்டபோது, அங்கே பதுங்கியிருந்த மைசூர் குதிரைப்படை உள்ளே புகுந்துவிட்டது. அப்போது சொக்கலிங்க நாயக்கர் நண்பர்களின் உதவியுடன் கோட்டைக்கு வந்து சேர்ந்தார். அவருடன் முகம்மதியப் படையும் இருந்தது.[3] ஏற்கனவே உள்ளே புகுந்திருந்த நான்கு பெரும்எதிரிப்படைகள் நாயக்கரைச் சுற்றிவளைத்தது. முதலாவதாக, மைசூர் படைத்தளபதி குமார ராயா அவரை முற்றுகையிட்டிருந்தார். இரண்டாவதாக, மறவர் படை. அப்படை தனது நாட்டின் இறையாண்மையைக் காத்துக்கொள்வதற்காக வந்திருந்தது. ஆயினும் அவர்களின் முக்கிய நோக்கமாக கொள்ளையிடும் பொருட்களில் பங்குபெறுவதாக இருந்தது. நேரத்திற்கு ஏற்றாற்போல தங்களைத் தகவமைத்துக்கொள்வதில் அவர்கள் திறமைபெற்றவர்களாக இருந்தார்கள். மூன்றாவதாக, சிவாஜிக்குப்பின் பதவியேற்ற அவரது மகன் சாம்போஜியின் தளபதி அரசுமலை. நான்காவதாக, ஈகோஜி. கடைசி இருவரும் நாயக்கரின் அழைப்பின்பேரில் உதவுவதற்கு வந்ததுபோல, பாசாங்கு செய்தார்கள். அவர்கள் மைசூர்படையைத் துரத்தியடித்துவிட்டு, காலவகைமையைப் பொறுத்து மதுரை ராஜ்ஜியத்தை முற்றிலும் கையகப்படுத்திக்கொள்ளும் நோக்கத்துடன் இருந்தார்கள். இந்தநேரத்தில் குமார ராயா, மிகக்குறைந்த எண்ணிக்கையிலானப் படைகளை வைத்துக்கொண்டு, நாயக்கருக்கு நாட்டில் அமைதியை உருவாக்கித்தருவதோ அல்லது நாட்டை மீட்டுத்தருவதாக உறுதியளிப்பதோ, தஞ்சாவூர் மற்றும் செஞ்சியில் முந்தைய நாயக்கர் ஆட்சியின் தொடர்ச்சியை மறுகட்டுமானம் செய்வதாக வாக்குத் தருவதோ முடியாத ஒன்றென்று தன்நிலை உணர்ந்தவராக இருந்தார். பசப்பு வார்த்தைகளை உறுதிமொழியாக நேர்மைக் குறைவானவர்களால் தரமுடியும். அந்தவகையில் சந்தேகமே யில்லாமல், முகலாயப் படையைத் துரத்தியடிப்பதற்கு மைசூர் அரசருடன் கூட்டணியமைத்துக்கொள்வது சமயோசிதமானச் செயலாக இருந்தது. குறைந்தபட்சமான இந்தசக்தியுடன் மக்களின் நம்பிக்கையும் இந்தத்திட்டத்தை, இரண்டு அரசர்களின் சமஅளவிலான விருப்பத்துடன் செயல்படுத்து வதற்கு உறுதியளித்தது. தனது உதவிக்கு வந்தவர்களைத் தாக்கியழிக்க, தனது எதிரியுடன் மதுரை நாயக்கர் கூட்டு அமைத்துப் புறப்பட்டது, பார்ப்பதற்குத் தனித்திறம்வாய்ந்ததாக இருந்தது. இந்தவகையானச் செயல்பாடுகளாலும் நடவடிக்கைகளாலும் நாட்டின் நிலைமையை அனுமானிப்பது யாருக்கும் வியப்பூட்டுவதாக இருந்தது. அதுமட்டுமல்லாமல், நீதிக்குப் புறம் பானதாகவும் இருந்தது. இந்தக்கூட்டுப்படைகளிடமிருந்து நாயக்கர் என்ன

பெற்றுவிடமுடியும் என்பதையும் எல்லோருமே துல்லியமாக அறிந்திருந்தனர். எல்லாவற்றுக்கும்மேலே, குமார ராயாவின் திட்டங்களுக்கு உடன்பட்டு, நாயக்கர் ஒத்துக்கொண்டது, நேர்மையான நடவடிக்கையே அல்ல. ஒருபக்கத்தில் முகம்மதியர்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையைக்காட்டிலும் நாயக்கர் கொண்டிருக்கும் நம்பிக்கை, போதாமையாக இருந்தது. மறுபக்கத்தில் இத்திட்டத்தை மேற்கொள்வதற்கான மனோபலம் அவரிடமில்லை. அதற்கு மனதைரியமும் நேர்மையான அர்ப்பணிப்பும் தேவையாக இருந்தது. அதற்கேற்ப, எஜமானர்களாக ஆகி, நாட்டை தங்கள் கைகளுக்குள் கொண்டுவர போட்டியை உருவாக்கியப் போட்டியாளர்களுக்கிடையில், அவர் ஒரு பார்வையாளராக மட்டுமே இருந்தார்.

அதேநேரத்தில் குமாரராயா, ரகசியமாக சாம்போஜியின் தளபதி அரசுமலையுடன் தொடர்பை ஏற்படுத்திக்கொண்டார். கணிசமான அளவில் அவருக்குப் பெருந்தொகையை அளித்து மனஉறுதியைக் குலைத்துவிட்டார். செஞ்சியிலேயே போக்குக்காட்டியபடி அப்படியே இருந்துகொள்ளச் செய்துவிட்டார். இந்தரகசியப் பேச்சுவார்த்தைகளால் மைசூர் அரசருக்கு குமாரராயா நம்பிக்கையளித்திருந்தார். மேலும் மைசூர் அரசரிடம் புதியபடைகளையும் அனுப்பக் கேட்டிருந்தார். ஆனால் அந்தக்கடிதங்கள் எதிரிகளின் கைகளில் சிக்கிக்கொண்டன. இளவரசரின் புகழுக்காக, தங்களின் விருப்பங்களை தியாகம் செய்தும், தங்கள் பொறாமைகளை தள்ளிவைத் திருந்தும் களத்தில் நின்றிருந்த எதிரிகள், தளபதியின் படைகளை அழிவுநிலைக்குக் கொண்டு சென்றனர். மைசூர் அரசரிடமிருந்து புதியபடைகளோ அல்லது பதில்கடிதமோ கிடைக்கப் பெறாத குமாரராயா குழம்பிப்போனார். வேறுவழியில்லாமல், தனது பாதுகாப்புக்குக் கௌரவமாகப் பின்வாங்கிக்கொள்வதுதான் அறிவார்ந்தசெயல் என்ற களநிலையின் போக்குக்கு உடன் பட்டார். எதிரிகளின் கவனத்தைஈர்ப்பதுபோல தனது குதிரைப்படைக்கு நடவடிக்கை களை மேற்கொள்ளச்சொல்லி உத்தரவிட்டார். பாசாங்குத்தனமான அந்தப்போக்கை வெகுநேரத்துக்கு நீடிக்கச்செய்தபடியே, மைசூருக்கு முழுவேகத்துடன் தப்பியோட முயன்றார். திசை திருப்பலுடன் கூடிய இந்தப்போக்கினூடே அவர் தப்பியோடும் போது, தனது காலாட்படையை எதிர்திசையில் பயணம் மேற்கொள்ளச்செய்து, முழுபடையையும் தற்காத்துக் கொண்டார். ஆனால் முகலாயர்கள், தங்கள் மீது குமாரராயா சேறு அள்ளிப்பூசிவிட்டதாகவே கருதினார்கள். நீண்டகாலமாக அவர்கள்கொண்டிருந்த தற்செருக்கும் அடாதடியும் குமாரராயாவின்

செய்கையால் பன்மடங்குக் கூடிப்போனது. முகலாயர்களுக்கு மைசூரின் பலவீனமும் தங்களின் பலமும் தெரிந்துவிட்டது. முகலாயர்களின் படை, குமாரராயாவின் படைகளுக்கு நெருக்கத்தில் இருந்தும், அவர்கள் எந்தவொரு நடவடிக்கையையும் மேற்கொள்ளவில்லை. இவ்வாறாக, குதிரைப்படை தனது பாசாங்கான நடவடிக்கையை மேற்கொண்டபோது, முகலாயர்கள் தாக்குதலுக்கோ வம்புக்குக்கூட அழைப்புவிடுக்கவில்லை. அமைதியாகப் பின்தொடர்ந்தார்கள். தங்கள் பலம் முழுவதையும் ஒட்டுமொத்தப் படைகளையும் அழிப்பதற்காக, சேமித்துக்கொண் டிருந்தார்கள். இந்தநிலையில் குமாரராயாவின் குதிரைப்படை, ஒழுங்குகுலைந்து சீர்கெட்டுப்போனது. அப்படையின் கடைசிப்பகுதியிலிருந்தவர்களுக்கு முறையான உத்தரவு கிடைத்து, அருமையாகக் களமாடினார்கள். ஆனாலும் முகலாயப்படை, காலத்தை வீணடிக்கவிரும்பாமல் பின்தொடர்வதிலேயே குறியாக இருந்தது. பின்னர், அப்படையின் கவனம் காலாட்படை மீது குவிந்தது. அப்போது அந்தக்களம் கொடூரமானச் சித்திரவதைக் கூடமாக ஆகிவிட்டது. பல ஆண்டுகளாகக் கொள்ளையடித்து சேர்த்துவைத்திருந்த, பெருமளவிலானக் கொள்ளைப்பொருட்களை முகலாயப்படை கண்டெடுத்தது. அவற்றை வாரிச்சுருட்டி அள்ளியது. எண்ணற்றோரை சிறைபிடித்தது. அவர்களில் குமாரராயாவும் ஒருவர். வலிமைமிக்கத் தளபதியான குமாரராயாவின் தோல்வியும் சிறைபிடிப்பும், அதன்பின் அரசுமலையின் பெருமையும் மகிழ்ச்சியுமாக வாழ்நாள்முழுவதும் விஞ்சமுடியாததாக நீடித்தது.

இந்தவெற்றியின் புகழைத் தனக்குச் சாதகமாக ஆக்கிக்கொண்ட அரசுமலை, ஆட்சிப்பரப்பெல்லைக்குள்ளும் மதுரை நாயக்கரிடமிருந்து கைப்பற்றியச் சுற்றுவட்டாரக் கொத்தளங்களி லும் இருந்த மைசூர் படையினரை விரட்டியடிக்க முடிவுசெய்தார். தனக்கு படைகளையும் பெருந்தொகையையும் கொடுத்து, சமயத்தில் போருக்கு உதவிசெய்த மதுரை நாயக்கருக்கு, அவர் இழந்திருந்த பகுதிகளை மீட்டுத்தருவதாக உறுதியும் அளித்திருந்தார். ஆனால் எதிர்பார்த்திருந்தபடி அந்த உறுதியளிப்பை அவரால் நிறைவேற்ற முடியவில்லை. மைசூர் படைகளைத் தொடர்ந்து, பின்தொடரும்பணியில் அரசுமலை இருந்தபோது, அவர் வெற்றிகொண்ட அத்தனைப் பகுதிகளும் சாம்போஜியின் ஆளுகையில் இருந்தது. மைசூர்படை வசம், மதுரைக் கொத்தளங்கள் தவிர்த்து, வேறுசில கொத்தளங்களும் இருந்தன. பேரிடர்தரும் சாம்போஜியைக் காட்டிலும் மறவர்களின் உதவியுடன் இருக்கும் மைசூர்படை பரவாயில்லாததாகத்

தோன்றியது. இதுவரை அவர் கொண்டிருந்த நம்பிக்கைகள் எல்லாமே கொஞ்சங்கொஞ்சமாய் நீராய்க்கசிந்து ஓடிமறைந் திருந்தன. நிர்க்கதிநிலையில் அவரது ஆட்சிப்பரப்பெல்லை, அதன்சொத்துகள் எல்லாமே கைவிட்டுப்போயிருந்தன. அத்துடன், வலுவானத் தாக்குதல் ஒன்றை, நாயக்கரின் கோட்டைகளில் முக்கியமான திருச்சினாப்பள்ளியில் சாம்போஜி நடத்தியத் தாக்குதல், நிச்சயமாக மைசூர் படையின் தாக்குதலைக் காட்டிலும் கொடூரமாக (பக்.306) இருந்தது. கையறுநிலை அவரை மனச் சோர்வுக்கு உள்ளாக்கி மரணத்துக்குப் பாதையாக அமைந்தது. குடிமக்களிடமும், திறைசெலுத்தி வந்த நிலவுடமையாளர்களிடமும் அன்பையோ அல்லது நம்பிக்கையையோ சிறிதும் காட்டியிராத உள்ளூர்க் கொடுங்கோலனான நாயக்கரின் கையறுநிலை மரணம், அந்நியக் கொடுங்கோலன் மகிழ்ச்சியை ஈந்தபோதிலும், சிறிதளவிலான அனுதாபத்தை நாயக்கருக்குப் பெற்றுத் தந்தது. அவற்றிலிருந்து இந்த இளவரசர்களும் அரசர்களும் தகுதிபெற்றவர்களாக இருந்திருந்தால், நிச்சயமாகப் பாடம் கற்றுக்கொண்டவர்களாக இருந்திருப்பார்கள். சொக்கலிங்க நாயக்கரின் இடத்துக்கு அவரது மகன் முத்துக்கிருஷ்ண (ரங்க கிருஷ்ண முத்து வீரப்ப) நாயக்கர் பதவிக்கு வந்தார். அப்போது அவருக்கு வயது பதினைந்து. என்னவிதமான ஆட்சியை அத்தனை இளவயதில், பலவீனமான நிலையில், அவராஂப் வழங்கியிருக்க முடியும் என்பதைக் கற்பனை செய்யலாம். நாடு நிலையில்லாத ஒழுங்கின்மைக்குள் மூழ்கிப்போனது. அங்கிங்கெனாதபடி எங்கும் சச்சரவுகள் நிகழந்தவண்ணமிருந்தன. அதைச் சாக்காக வைத்து கொள்ளைச் சம்பவங்கள் அரங்கேறின. கோட்டைக் கொத்தளங்கள் எதிரிகளால் எளிதாக ஆக்கிரமிக்கப்பட்டன. திருடர்களின் கைகளில் கிராமங்களும் நகரங்களும் சிக்கிக்கொண்டன. அவர்கள் இரவும்பகலுமாக அலைந்துதிரிந்தார்கள்.

தஞ்சாவூரைப் பற்றியும் கொஞ்சம் சொல்கின்றேன். ஈகோஜியின் கொடுங்கோன்மைப் பணி, பல அழிவுவேலைகளை செய்தபடியே இருந்தது. மனிதர்களிடமிருந்து அநீதியாய் அபகரித்துக்கொண் டிருந்த நிலையில், அப்படியே தனது பார்வையை நாட்டின் கோவில்களின் பக்கம் திருப்பினார். புறச்சமயங்களில் இந்தளவுக்கு யாரும் மடத்தனமாக நடந்துகொண்டதில்லை. ஆனால் ஈகோஜி, தனது கொள்ளையைக் காட்டிலும் வேறு எந்தக்கடவுளும் இல்லை என்பதுபோல, வன்மமாக நடந்துகொண்டார். தனது கொள்ளைப் பசிக்கு தகுதியுள்ள இடங்களாகக் கோவில்களின் வளங்களையும், அவற்றின் பெருமளவிலானச் சொத்துகளையும் அபகரித்தார். இச்செய்கைகளையடுத்து, பிராமணர்கள் புலம்பல்களையும்

ஒப்பாரிகளையும் வைக்கத் தொடங்கினார்கள். ஈகோஜியை சந்தித்து, தங்கள் கடவுள்களுக்கு வழிபாடுகள் செய்யமுடியாமல் கைவிடப்பட்ட நிலையுள்ளதாக முறையிட்டார்கள். வயல்வெளி களை பூஜித்தால்தான் நிலத்தில் வளம்கொழிக்கும். இல்லாது போனால் எல்லாம்போய்விடும் என்று வெளிப்படுத்தினார்கள். ஆனால் ஈகோஜி, கடவுள்கள் அரிசியெல்லாம் தின்பதில்லை. அவற்றுக்கு பூஜைசெய்ய மணம் வீசும் பூக்கள் மட்டுமே போதுமானவை என்று கூறிவிட்டார். இதிலிருந்தே ஈகோஜி தன் குடிமக்களை எவ்வாறெல்லாம் மகிழ்ச்சியற்றிருக்க நடத்தியிருப்பார் என முடிவுக்கு வரமுடிகின் றது. அவரது கொடுங்கோன்மையுடன் வேறுபல பேரழிவுகளும் கைகோர்த்துக் கொண்டன. பெருவெள்ளம் ஒன்று, 1677ஆம் ஆண்டு கரைபுரண்டோடி காலக்கொடுமையை உள்நாட்டில் தந்ததுபோல, இந்தமுறை கடலோரப்பகுதியில் புயற்காற்றும் (பக்.307) சேர்ந்து வாரிச்சுருட்டியள்ளியது. கடல், தன் எல்லைகளைக்கடந்து ஊர்புகுந்தது. ஆற்றுக்குள்புகுந்த கடல்நீர், ஊர்களை மூழ்கடித்தது. கடலோரக் கிராமங்களில் மட்டும் 6,000க்கும் அதிகமானோர் பேரழிவுக்கு இரையானார்கள்.

மகன் சாம்போஜி ஆண்டுகொண்டிருந்த செஞ்சியில், தந்தை சிவாஜியின் மரணம் எந்தவொரு அரசியல் மாற்றத்தையும் கொண்டுவரவில்லை. சாம்போஜி, ஏற்கனவே தந்தையைக் காட்டிலும் தானொரு வன்மனாகவும், நம்பிக்கைக்கு உகந்த நபராக இல்லாதக் கொடூரனாகக் காட்சிப்படுத்திவிட்டிருந்தார். கொடுமைசெய்து வரிதண்டியது, கொள்ளையடித்தது, கொலைகள் நடத்தியது, எல்லாமாகச்சேர்ந்து நாட்டை ஏழ்மைக்குள்ளாக்கி யிருந்தது. புதிய பேரிடர்களும் அன்றிலிருந்த அரசியல் மாற்றங் களும் அதைப்பற்றிப் பேசுகின்றன. மைசூரின் வேண்டுகோளுக் கிணங்க முகலாயர்கள் வெல்ல முடியாத படையொன்றை சாம்போஜிக்கு எதிராக அனுப்பியதாகவும் பேசப்படுகின்றது. இதற்கிடையில், சாம்போஜி மைசூர் வெற்றியையடுத்து மதுரை அரசை மட்டுமல்ல, வடக்கேயிருக்கும் அத்தனை மாகாணங் களையும் வெற்றிகொண்டு, பல கோட்டைக் கொத்தளங்களையும், அப்படியே தர்மபுரி முழுவதையும், அதனை அடுத்துள்ளப் பகுதிகளையும் கைப்பற்றினார். அவருக்கு இக்கேரியர்கள் அல்லது கானரி அரசரும், கோல்கொண்டா அரசரும் உதவியிருக்கக்கூடும். அவர்கள் இருவருக்கும் மைசூர் அரசர் பொது எதிரியாக இருந்தார். நடக்கக்கூடாத அனுபவங்களின் மூலம் என்னவெல்லாம் கற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு, மூன்று நாயக்கர்களும் நல்ல உதாரணம். மூன்று நாயக்கர்களுக்கும் எதிரிகள் ஈகோஜி,

சாம்பாஜி மற்றும் அவர்களுடன் வந்த நாடோடிக் கும்பல்தான். டிசம்பர், 1680 ஆம்ஆண்டில் வானத்தில் ஒரு விண்மீன் தெரிந்தது. அது செங்கோணத்தில் ஜொலித்தது. கொஞ்ச நேரத்தில், அதைத்தொடர்ந்து மற்றொன்று அதே இடத்தில் அகன்று படர்ந்திருந்தது. அச்சந்தருகின்ற இந்த நட்சத்திரங்களைக் கண்டு, இதே மாதிரியான தீமைகள்தான் தொடர்ந்துகொண்டிருக்கின்றதே என்று, இந்தியர்கள் பயந்தார்கள். அடுத்தடுத்த ஆண்டுகளில், அவ்வாறே நடந்தேறியது.

## (8) ஜீன் தே பிரிட்டோ பால்,
## ஒலிவாவுக்கு எழுதியக் கடிதம், 1683.

*(பக்.337)*... இந்தநாட்டின் நாகரீகமான அரசாங்கங்களைப் பற்றி, கருத்தூன்றி நான் பேசவில்லை. தொன்மைவாய்ந்த மதுரை சாம்ராஜ்ஜியம் கந்தைத் துணிக்கீற்றாகிக் கிடக்கின்றது. அதில் ஒருசிறுபகுதியை நாயக்கர்கள் கோட்டைக் கோபுரம், அரண்க ளுடன் ஆட்சிசெய்து கொண்டிருந்தார்கள். அதன் மற்றொரு பகுதியை, மைசூர் அரசர் ஆக்கிரமிப்புசெய்து ஆண்டு கொண்டிருக் கின்றார். பிறிதொரு பகுதி, மறவ சிற்றரசரிடம் சிக்கிக்கொண் டிருக்கின்றது. நான்காம் பகுதியை சாம்போஜியும், மீதியிருக்கும் ஐந்தாம் பகுதியை ஈகோஜியும் தங்கள் பங்காகப் பிரித்து வைத்திருக்கிறார்கள். இந்த எல்லாப்பகுதிகளிலுமே ஓர் ஒழுங் கின்மை பொதுவாக நீடித்திருப்பதை நீங்கள் அறிந்திருக்கமுடியும்.

மதுரையில் மைசூர் அரசரின் அதிகாரம், பலவீனப்படத் தொடங்கியது. அவ்வரசரின் ஆட்சிப்பகுதியில் சாம்போஜியின் படைகள் நேரடியாக வல்லாந்திரத் தாக்குதலை நடத்தின. அவரால் அந்தத்தாக்குதலை சமாளிக்க முடியவில்லை. மட்டுமல்லாமல், படையை பலப்படுத்தவும் முடியவில்லை. அதனால் அவர், கைக்கொண்டிருந்த மதுரைப் பகுதிக்குப் போதுமானப் படைகளை *(பக்.338)* அனுப்பி, அதனைப் பாதுகாக்க முடியவில்லை. அதுபோலவே, அவரது ஆட்சிப்பகுதியில் அவரது பிடி தளர்வுற்று, படிப்படியாக மக்கள் சுதந்திரக் கோரிக்கையை எழுப்பத் தொடங்கிவிட்டனர். அல்லது கந்தைத்துணியாக கிழிந்துகிடக்கும் பகுதியை செல்வாக்காக ஆண்டுகொண்டிருக்கும் யாரோ ஒரு இளவரசனுடன் தங்களைப் பிணைத்துக்கொண்டனர்.

ஈகோஜியின் ஆட்சியிலிருந்த தஞ்சாவூரின் ஒருசில பகுதிகளைத்தவிர, மற்றெல்லாப் பகுதியும் மறவ அரசரின் ஆளுகையில் இருந்தது. இதுதான் இந்நாட்டு நிர்வாகத்தின் குறைந்த பட்சச் சித்திரம். நாட்டின் உற்பத்தியில் ஐந்தில் நான்கு பங்கை,

ஈகோஜி தன்பங்காக வாரியெடுத்துக்கொண்டார். அதுபோதா தென்று, ஐந்தில் நான்கு பங்கை பொருட்களாகப் பெறாமல் பணமாகத் தரவேண்டுமென்று கட்டாயப்படுத்தினார். மட்டுமல்லாமல், பொருட்களுக்கான விலையை தானே கவனமாக இறுதிசெய்தார். பொருளின் விலைகுறித்து உழைத்தவனுக்கு ஒருவேளை மாறுபட்டக் கருத்து இருந்தால், ஒட்டுமொத்த உற்பத்திப்பொருளும் பங்குசெலுத்துவதற்கே போதுமானதாக இல்லை என்று அள்ளிக்கொண்ட சம்பவங்களும் நடந்தேறின. விவசாயிகள் கடன்சுமையால் நசுங்கினர். பங்கு தரமுடியாத இயலாமை அவர்களை வாட்டியெடுத்தது. காட்டு மிராண்டித் தனமானச் சித்ரவதைகளுக்கு உள்ளாகி, பங்கையோ வரியையோ செலுத்திவந்தனர்.

இதுபோன்ற அடக்குமுறையைக் கற்பனையில் நினைத்துப் பார்ப்பதுகூட கடினமான ஒன்று. மேலும், செஞ்சியில் நடந்தவற்றை நான் இத்துடன் பகிர்கின்றேன். அங்கே, கொடூரம் திகிலூட்டுவ தாகவும் அருவருப்பானதாகவும் இருந்தது. மேலும் அனைத்தையுமே சொல்ல விரும்புகின்றேன். ஆயினும் இயலாமை, அந்த பயங்கரத்தைச் சொல்லவிடாமல் தடுக்கின்றது.

### (9) நோயலுக்கு, லூயிஸ் டி மெல்லோ எழுதியக் கடிதம், 1686.

*(பக்.376)* இந்த சாம்ராஜ்ஜியங்களின் தற்போதைய நிலை, முந்தைய ஆண்டுகளைப்போலவே உட்பூசல்களாலும் குழப்பங்களாலும் நிறைந்தே இருந்தன. வடக்கிலிருந்து பெரும் படை வந்து, தனது வலிமையை நிலைநாட்டும்வரை, அது ஒரு தீர்க்கமுடியாதப் பணியாகவே இருந்தது. தெற்கே, ஒருகாலத்தில் மதுரைக்குத் திறைசெலுத்திக்கொண்டிருந்த சிற்றரசர்கள் தொடர்ந்து மைசூரின் பிடியை அசைத்தபடியே இருந்தனர். அதனால் மைசூரின் பலம் பலவீனப்பட்டுக்கொண்டிருந்தது. ஈகோஜியின் படைகளுக்கு எதிராகத் திருடர்களும் (கள்ளர்களும்) மறவர்களும் கொள்ளைப் போரைத் தொடர்ந்தபடியிருந்தனர். மைசூர் அரசருக்கு எதிராகக் கருணையற்றப் போரை சாம்போஜி நடத்தினார். முக்கியமாக, மைசூர் அரசருக்கு எதிராகக் குடிமக்கள் நடத்தும் கிளர்ச்சிக்கு ஆதரவளித்து, நூதனமாக அங்கே புகுந்துகொண்டார்.

இந்தக்கொந்தளிப்புகளுக்கு இடையில், திருச்சபை, முன்னெப்போதும் இல்லாத அளவில் சமீபத்திய மூன்றாண்டுகளில் பல்வேறு அதிர்ச்சிகளையும், பயங்கரமான அடக்குமுறைகளையும் சந்தித்ததை இப்போது நினைத்தாலும் எரிச்சலூட்டுகின்றது. ஓர் ஒழுங்குவரிசையில், முதலில் நான் சத்தியமங்கலம், தஞ்சாவூர் மற்றும் மறவ நாட்டில் நடந்த அடக்குமுறைகளைப் பகிர்கின்றேன்.

பின்னர், கண்ணீராலும் ரத்தத்தாலும் வளர்த்தெடுத்த மதமுன்னேற்றத்தை சில வார்த்தைகளாகப் பேசுகின்றேன்.

போர் செலவுகளுக்காக மைசூர் சாம்ராஜ்ஜியத்தின் இதயப்பகுதியில் தாக்குதலைத் தொடுத்தன, சாம்பாஜியின் படைகள். தனது சாம்ராஜ்ஜியத்தின் கிழக்குப்பகுதிகளை மைசூர் அரசர் இழக்க நேர்ந்தது. இழந்த பகுதிகளிலெல்லாம் கடுமையான வரிவிதிப்புகளும் கொடூரங்களும் நடந்தேறின. அவை மக்கள் மனதில் கடுமையான வெறுப்பை உருவாக்கி, அரசருக்கும் அமைச்சருக்கும் எதிரானக் கிளர்ச்சியை உண்டுபண்ணின. நாட்டுப்பற்று, தேசிய உணர்வு போன்ற உணர்ச்சிக் கொந்தளிப்புகளுக்கு இரையாகாமல், தொடர் இழப்புகளால் அவதியுற்று அடிமைப்பட்டுத் துன்பங்களின் உச்சத்தில் கிடந்த மக்கள், என்ன நடக்கிறதென்றே அறியாமல், அனைத்துப் பகுதிகளிலிருந்தும் போராடத் துணிந்துநின்றனர். அவர்கள், பிராமணர்கள் இரண்டு பேரை தங்கள் தளபதிகளாக விஷ்ணு மற்றும் சிவா பிரிவுகளிலிருந்து தேர்வுசெய்தனர். அவர்கள் தலைமையில் பெரும்படைகள் கட்டமைக்கப்பட்டன. அவற்றில் ஒரு படை எழுபதாயிரம் வீரர்களைக் கொண்டிருந்தது. அந்தப்படை நேரே மைசூர் கோட்டையை நோக்கிச் சென்றது. தன்னை உள்ளே பதுக்கிக்கொண்டிருந்த மன்னரை முற்றுகையிட்டது. மூவாயிரம் வீரர்களைக்கொண்ட மற்றொரு படை, சத்தியமங்கலத்தையும் அதன் சுற்றுவட்டாரப் பகுதிகளையும் அதிரடியாய்ச் சிதறடித்தது. இந்தப்பெருங்கூட்டத்தின் பயங்கரங்களை (பக்.378) விவரிப்பதை நான் நிறுத்தப்போவதில்லை. பழிவாங்குதல், கண்மூடித்தனமான வெறி, குற்றங்களைத் தயக்கமின்றி செய்ய வைத்தது. தங்களின் முதல்கட்டத் தாக்குதலை அரசரின் அதிகாரிகள் மீதும், வரிவசூலை கடுமையானமுறையில் நடத்தும் தண்டலர்கள் மீதும் நடத்திமுடித்த இரண்டுதளபதிகளும் தங்கள் வெறுப்பை, புதிதாகச் சமயம் பரப்பியவர்கள் மீதுதொடுத்து, கிறிஸ்தவத்தை அழித்தனர்.

### அடிக்குறிப்புகள்

1. My translation of the letters in this Appendix was revised by the Rev.J.Bourdot, S.J., Professor of French St. Hoseph's College. Trichopology through the kindness of the Rev. P.Carty, S.H., of the same college, A literal translation has been attempted as far as possible.
2. The kingod, of Vijayanagar was so called by the Portugfuese and onther foreighers, perhaps after the name of the great emperor Sjuva Narasimha or Narasinga.
3. Chiefly the Sepupati, instructed by Govindappaiya (217)

# மதுரை சமயப்பரப்புப் பணி II

## (10) லியர்ஜியோவுக்கு அந்தோணி விகோ எழுதியக் கடிதம், மதுரை, 30 ஆகஸ்ட், 1611.

### அரசியல் நிலை

*(பக்.124) அரசர் அல்லது மதுரையின் மகா அரசராக நாயக்கர் இருந்தாலும், அவரை நேரடியாகச் சார்ந்திருந்தது, மிகச்சிறிய நிலப்பரப்புதான். அதுதான், அவரது உடமையாக இருந்தது. மதுரை நாட்டில், உயர்குடிகள் நிலத்தின் உரிமையாளர்களாகவும், மக்கள் அவர்களிடம் உழவுப்பணி செய்பவர்களாகவும் இருந்தார்கள். மற்ற நிலங்களெல்லாம் சிற்றரசர் கூட்டத்திடமும் அல்லது திறைசெலுத்தும் பிரபுக்களிடமும் இருந்தது. மதுரை நாயக்கரின் மேலாண்மையில், பின்னவர்கள் தங்கள் எல்லைப் பகுதிக்குள், போலீஸ் மற்றும் நீதி, நிர்வாகத்தை மேற் கொள்பவர்களாகவும் இருந்தார்கள். உற்பத்தியில் குறைந்தபட்சம் சரிபாதியை, அவர்கள் பங்குத் தொகையாக உயர்த்தியிருந்தார்கள். அந்தப் பங்குத்தொகையை மூன்றாகப் பகிர்ந்து, முதல் பாகத்தை நாயக்கர்களுக்குத் திறையாகச் செலுத்தினார்கள். இரண்டாவது பாகத்தை தாங்கள் வைத்திருக்கும் படைவீரர்கள் மற்றும் படைகளின் பராமரிப்புச் செலவுகளுக்கு ஒதுக்கினார்கள். அப்படைகள் போரின்போதும், அரசர் கோரும்போதும் அனுப்பிவைக்கப்படும். மூன்றாவது பாகம் பிரபுக்களுக்கு உரியது. மதுரையின் மகா நாயக்கரும் தஞ்சாவூர் மற்றும் செஞ்சி நாயக்கர்கள் ஆகியமூவருமே பிஸ்நகருக்கு திறைசெலுத்துபவர்கள். அவர்கள் ஆண்டுக்கு தலா ஆறுமுதல் பத்துமில்லியன் பிராங்குகள் செலுத்தினார்கள் அல்லது செலுத்தவேண்டியிருந்தது. ஆனால் அவர்கள் அதனைக் குறித்தநேரத்தில் கட்டுபவர்களாக இருக்கவில்லை. அடிக்கடி திறைசெலுத்துவதை ஒத்திவைத்தார்கள். இன்னும்சிலநேரங்களில் திமிராகப்பேசி, செலுத்த மறுத்தார்கள். இந்தவிவகாரத்தில் பிஸ்நகர் அரசர் தனது தளபதிகளில் ஒருவர் தலைமையில் ஆயிரம் படை வீரர்களை அனுப்பி, மூவரிடமிருந்தும் நிலுவைஏதுமில்லாமல் முழுத்தொகையையும் வட்டியுடன் வசூலித்துவர அனுப்பிவைத்தார். இதுபோன்றதருணங்களில்,*

ஏழைமக்களே இளவரசர்களின் தவறுகளுக்கெல்லாம் தண்டம்கட்டுபவர்களாக இருந்தார்கள். அடிக்கடி இதுபோன்று நடந் திருக்கின்றது. நாட்டின் எல்லாப்பகுதிகளிலும் பேரழிவை நடத்தினார்கள். மக்கள் கொள்ளையடிக்கப்பட்டார்கள் அல்லது கொல்லப்பட்டார்கள்......

எருமைக்கட்டி, அரசருக்குத் திறைசெலுத்துபவர். *(பக்..125)* நகரத்தில் நான்கில் ஒரு பங்குக்குச் சொந்தக்காரர், அவர். நாம் கையகப்படுத்தியிருக்கும் ஒரு சிறிய மூலை அவருடையது. நாயக்கரின் சேவைக்காக, அவர் மூவாயிரம் வீரர்களைக்கொண்ட காலாட்படையையும் இருநூறு குதிரைகளையும், ஐம்பது யானைகளையும் வைத்திருந்தார். ஓர் உரிமையாளர் எனும் தகுதியில் அவருக்குக் கீழே, நாலில் ஒருபகுதி குடிமக்கள் இருந்தனர். இந்தபிரபு, அரசரின் சபையில் செல்வாக்குமிக்கவராக இருந்தார். நமக்கு அனைத்துவிதமானத் தீங்குகளையும் செய்வதில் அவருக்கு பெரும்விருப்பம் இருந்தது.......

## (11) கராபாவுக்கு மார்டின்ஜ் எழுதியக் கடிதம், சத்தியமங்கலம், 1651.

*(பக்.194)* சத்தியமங்கலத்தின் நாயக்கர் மரணத்தையொட்டி, அந்த இடத்துக்கு வந்த வயதுகுறைந்த அவரதுமகன், இடரும்கேடும்நிறைந்த அனுபவங்களை நமக்களித்தார். பொதுவாகவே, இந்தியாவில் இதுபோன்ற மோசமான அரசாங்கங்கள்தான் இருக்கின்றன. ஒரு முடிமன்னர், நாடெனும் பெரிய குடும்பத்துக்கு உரியவர் என்பதையும், அவர் அத்தனைபேருக்கும் தந்தை போன்றவர் என்ற எண்ணம், அரசர்களின் சிந்தையிலோ அல்லது இதயத்திலோ இருக்கவில்லை. தங்களை, நாட்டின் மிகப்பெரிய உரிமையாளர்கள் என்றும் தங்களின் அரசாட்சி தாங்களுக்காகச் சுரண்டியெடுக்கும் விளைநிலம் என்றும் கூச்சமில்லாமல் கருதிக்கொண்டிருந்தார்கள். அளவற்ற ஆற்றல் மற்றும் மதிநுட்பத்தைக் குடிமக்களிடம் முடிந்த அளவுக்குப் பணம் பறிப்பதிலுமே காட்டினார்கள். அவர்கள் அறிவுக் குருடர்களாக, மக்களைப் பேணிக்காக்காது புறக் கணிக்கின்றவர் களாக ஆகிப்போனார்கள். அவர்களின் இந்தமோசமான நிலையால், நற்காரியங்களைச் செய்வதில் பலமற்றவர்களாக ஆனார்கள். அதேவேளையில் அடக்குமுறையிலும் அநீதியைச் செய்வதிலும் அக்கறைக்கொண்டவர்களாக இருந்தார்கள்.

*(பக்.200)* பெரும்பாலானக் கிராமங்களுக்கும் மறவர்களின் நிலங்களுக்கும் உரிமையாளர்களாக நாட்டின் பணக்காரர்களே இருந்தார்கள். பிரதியாக, இளவரசருக்குத் தேவைப்படும்போது,

குறிப்பிட்ட அளவிலானப் படைவீரர்களை அனுப்பிவைப்பது, அவர்களின் கடமையாக இருந்தது. பிரபுக்கள் தங்களின் நிலைப்பாட்டை, இளவரசரின் மகிழ்ச்சிக்கு ஏற்ப தகவமைத்துக் கொண்டார்கள். அவர்களின் உறவினர்கள், நண்பர்கள் அல்லது அடிமைகள் நிலத்தைப் பயிரிட்டு வளர்த்தார்கள்.... தேவைப்படும் நேரத்தில் ஆயுதங்களைத் தூக்குபவர்களாகவும் இருந்தார்கள். இந்த வகையில் மறவ இளவரசனால் எட்டுநாட்களுக்கும் குறைவான நேரத்தில் முப்பது அல்லது நாற்பதாயிரம்பேரைத் திரட்டமுடிந்தது. மதுரை அரசருக்குத் திறைசெலுத்துபவராக இருந்தும் ஒருகட்டத்தில், மறவ அரசர் தனதுபிடியை விடுவித்துக்கொண்டார். தற்பெருமையுடன் மறவ அரசர் நடந்துகொண்டதும் தஞ்சாவூர் அரசரும் மதுரை நாயக்கரும்சேர்ந்து அடக்கியொடுக்க முயன்றார்கள். மதுரையின் தளபதி பிராமணர் நரசப்பையா கணிசமானப் படையுடன், 1709 ஆம்ஆண்டில் மறவநாட்டுக்குள் புகுந்தபோது, படை முற்றிலுமாகத் தோற்கடிக்கப்பட்டதுடன் அவரும் பரிதாபமாகக் கொல்லப்பட்டார். 1709 ஆம்ஆண்டில், தஞ்சாவூர் அரசர் அத்தனை நல்வாய்ப்புடையவராக இருக்கவில்லை. அவரது பரிதாபநிலையைக் கணக்கில்கொண்டு தனது படைமுழுவதையும் செல்வாக்கில் மேலோங்கியிருந்த மறவநாட்டுக்குள் அனுப்பினார். ஆனால் அந்தப்படை போனவேகத்திலேயே தோல்வியைக் கண்டது. தஞ்சாவூர் அரசர் அமைதிக்கு முறையிட்டுக் கெஞ்சினார்.

(பக்.203) ........ 1710ஆம் ஆண்டில் நான் அங்கிருந்தபோது, மறவ இளவரசர் தனது எண்பதாவது வயதில் மரணமடைந்தார். அவரது மனைவியர் நாற்பத்தேழுபேர், அவருடைய சிதையில் எரிக்கப்பட்டார்கள்....

(பக்.206) .... ஆளும் இளவரசரின் தாயான திருச்சினாப்பள்ளி அரசி, இருபதாண்டுகளுக்கு முன்னால் கர்ப்பமாக இருந்ததால், இதே தீர்மானத்தின்படி சிதையில் உடன்கட்டை ஏறும் முடிவை குழந்தைப் பிறப்புவரை ஒத்திவைத்தனர். குழந்தைபிறப்புக்குப் பின்னர், அரசி தனது முன்முடிவைச் செயல்படுத்தினார். அவரது மாமியார் மங்கம்மாள், சொக்கநாத நாயக்கரின் சிதையில் இதேகாரணத்துக்காக உடன்கட்டை ஏறவில்லை. அதேவேளையில் குழந்தை பிறப்புக்குப்பின் அப்படிச் செய்வதற்கு மறுத்துவிட்டார்; இளவரசனை வளர்த்து ஆளாக்கினார்; ஆட்சியில் அமர்த்தினார்; மங்கம்மாளை அன்புக்குரிய அரசியாகக் கருதினாலும் மருமகள் அவரைப் பின்பற்ற மறுத்துவிட்டார். சிதையேறுதலைத் தவிர்க்க, எத்தனையோ எடுத்துச் சொல்லியும் அவர், ‘எனது கணவரின் நினைவுகளுடன் அவரில்லாமல் வாழமுடியுமென்று

*நினைக்கின்றீர்களா? அடுத்த ஆட்சியாளரைப் பெற்றுத்தரும் அவரது விருப்பமே, எனது தியாகத்தைத் தள்ளிப்போட வைத்தது. ஆனால் இப்போது என்னைத் தடுக்க எதுவுமில்லை. எனது இறப்பினால் இளவரசர் எதையும் இழக்கப்போவதில்லை. அவருக்குப் பாட்டியான நீங்கள் பெரிதும் வாழ்க்கைப் பிணைப்புடன் அவரை வளர்த்துவிடுவீர்கள். என்னைவிட தங்களின் மேன்மையுற்ற அன்பு, அரசாங்கத்தை அவர் கையில் ஒப்படைக்க ஆதுரமாக இருக்கும்' என்று இருந்து விட்டார். (பக்.207)* மங்கம்மாளைச் சுற்றி பல்வேறு இழிதகவு பழிகூறும் சொற்கள் வீசப்பட்டன.

## பிற்சேர்க்கை - ஆ
## ஜான் லாக்மேன்,
## இயேசு சபைப் பயணம்[1] பாகம் I

### (1) பங்குத்தந்தை பௌச்சட் பங்குத்தந்தை லே கோபியனுக்கு எழுதியக் கடிதம், மதுரை, டிசம்பர் 1, 1700.

*(பக்.9)* மதுரையில் இயங்கும் நமது திருச்சபையின் சமயப்பரப்புப் பணி, நாட்டின் வேறு எந்தப்பகுதியையும்விட அதிகமாகச் செழித்தோங்குகின்றது. ஆயினும் இந்தஆண்டில் நாம் நான்கு பெரிய அட்டூழியங்களால் பாதிப்புக்கு உள்ளானோம். நமது சமயப்பணிப் பரப்பாளர்களில் ஒருவருக்கு நான்கு பற்கள் உடைத்தெடுக்கப்பட்டன. இப்போதுநான் இளவரசரின் அரசவையில் பங்குத்தந்தை போர்க்கீஸின் விடுதலைக்கான வேண்டுகோளுடன் காத்துநிற்கின்றேன். பங்குத் தந்தை போர்க்கீஸ் ரோமின் அரசகுடும்பத்தைச் சேர்ந்தவர். அவர் இப்போது திசெராபளி (திருச்சினாப்பள்ளி) சிறையில், கடந்த நாற்பதுநாட்களாக அடைபட்டுக்கிடக்கின்றார். அந்தநகரம் மதுரை அரசர் வசிக்கும் ஊர். நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள் மதுரைத் திருச்சபையினர் இறைச்சியையோ, மீனையோ அல்லது முட்டைகளையோ உண்ணுவதில்லை என்று. மேலும் அவர்கள் ஒயினையோ அல்லது மற்ற கடின மதுபானங்களையோ அருந்துவதுமில்லை. அதுபோல, வைக்கோல் வேய்ந்த தாழ்ந்தக் குடிசைகளில் வசிக்கின்றார்கள். அங்கே படுக்கை வசதியில்லை. நாற்காலி அல்லது வேறெந்த உபயோகப் பொருட்களையும் வைத்துக்கொள்ள வில்லை. மேஜை, மடிவிரிப்புத்துணி, கத்தி, கரண்டி எதுவுமில்லாமல் உணவு அருந்த கட்டாயப்படுத்துகின்றார்கள். அவர்களின் செயல்பாட்டுக்கு இதுவொன்றும் இடர்தருவதாக இல்லை.

### (2) பங்குத்தந்தை பீட்டர் மார்டின் பங்குத்தந்தை லே கோபியனுக்கு எழுதியக் கடிதம், காமியன்-நாகென்-பட்டி, (காமநாயக்கன்பட்டி) மதுரை அரசாங்கம், ஜூன் 1, 1700.

*(பக்.366)* மதுரைத் திருச்சபையில் சமயப்பணி செய்ய என்னை ஈடுபடுத்திக் கொள்வதற்கானக் கோரிக்கைக்கு மாகாண அரசாங்கம்

அனுமதி வழங்கியதும், சோம்பல் இல்லாமல் தமிழ் அல்லது மலபார் மொழியைக் கற்றுக்கொள்வதற்கு நான் முனைந்தேன். அது, எனது சமயப் பணியை எடுத்துச்செல்வதற்கு முக்கியமானதாக இருந்தது. மாகாணத்தில் பணியாற்றிய பங்குத் தந்தைகளில் மெய்யறிவார்ந்தவர்கள் பலர் இருந்தாலும், அவரைப்போல யாருமில்லை. அவர் இந்நாட்டின் மொழியைக் கசடறக் கற்றுத் தேர்ந்திருந்தார். மதுரையில் கிறிஸ்தவ மதத்தைப் போதிப்பதற்கு அனுமதி பெற்றிருந்தார். இந்த முன்னெச்சரிக்கைகளைத்தாண்டி, விரைவில், நமது செயல்பாட்டைக் குலைவிக்கச் செய்பவை, இடையிட்டுத் தடுப்பவை, எதிர்ச் செயலாற்றுபவை என்று உள்நோக்கம்கொண்ட பல்வேறு வகைமாதிரிகள் நாம் கண்டறியப்பட வேண்டியவையாக இருக்கின்றன. விரும்பியது போல, விரைந்து மொழியைக் கற்றுக்கொண்டு மேம்படுவதற்கு, நான் இருக்கும் தோபோ சந்தர்ப்பத்தைத் தரவில்லை. கடலோரப் பகுதிகளில் போதுமான பொருத்தத்துடன்கூட அந்தமொழி பேசப்படவில்லை. இங்கிருக்கும் மக்கள் நயமற்று அல்லது இயல்பான நிலையில் புறந்தள்ளக்கூடிய மக்களாக இருக்கின்றனர். இந்தக் காரணங்களுக்காக, மதிப்பார்ந்த திருச்சபையின் மாகாண அமைப்பு, என்னை கோடேடேக்கு (கோட்டாறு?) அனுப்பி வைக்கப் பணிவுடன் கோருகின்றேன். அங்கு, எனக்குக் கூடுதலாக ஓய்வு கிடைக்கும். மொழியைக் கற்றுக்கொள்வதற்கான நல்வாய்ப்பு இருக்கின்றது. அங்கே பணி புரிந்து, ஆலயத்தை (பக்.367) கவனமாகப் பராமரிக்கும் பங்குத்தந்தை மேனார்டை சந்திக்கும் வாய்ப்பு, ஒரு மகிழ்ச்சியான சூழல், எனக்கு உருவாக்கித்தந்தது. இந்தநாட்டிலேயே பிரஞ்சுத் தம்பதிகளுக்குப் பிறந்த அவர், நேர்த்தியாக இருமொழி ஆற்றல்பெற்றவராக இருக்கின்றார்.

கோடேடே (கோட்டாறு?) அழகானதொரு பெருநகரம். கன்னியாகுமரி மலைத்தொடர்களின் அடிவாரத்தில் அமைந்திருக் கின்றது. திருவாங்கூர் அரசின் தெற்குப்பக்க எல்லையாகவும் இந்த நகரம் இருந்தது. ஒவ்வொரு ஆண்டும் திறைபெற்றுவர, மதுரை அரசு அனுப்பிவைக்கும் படகாக்கள் உள்ளேறி நடத்தும் கொள்ளைத் தாக்குதல்களால், நாட்டின் மற்ற பகுதிகளிலிருந்து அதிகளவில் அறியப்பட்டதாக இருக்கின்றது. இந்தியாவில், பெருமளவில் கண்டுகொள்ளப்படாத திருவாங்கூர் அரசர், மதுரை மன்னருக்குத் திறைசெலுத்துபவராகவும் இருந்தார். திறை செலுத்தப்படாத பலதருணங்களில் பலவந்தமாக, அவர் எல்லைக்குள் நுழையும் படகாக்கள் வாள்முனையில் திறையை வசூலித்துக்கொண்டுபோகும் சம்பவங்களும் நடந்திருக்கின்றன.

அவமானங்களிலிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ள, படகாக்கள் தனது எல்லைக்குள் நுழையமுடியாத அளவில், எல்லைகளை திருவாங்கூர் அரசர் மாற்றியமைத்துக்கொண்டார். அங்கு வந்துசெல்ல இரண்டுமலைகளுக்கிடையே ஒரேஒரு குறுகியபாதை மட்டும் இருந்தது. அந்தப் பாதை (பக்.368) வலுவான சுவரால் மூடப்பட்டிருந்தது. சிறிய எண்ணிக்கையிலான படையொன்றும் அங்கிருந்தது. வலுவானப்படைகூட அந்த இடத்தைக் கடப்பது அத்தனை எளிதானது அல்ல. இந்தவகையில் கோடேடே பாதுகாக்கப்பட்டது. ஆனாலும் மற்ற பகுதிகள், ஆண்டுக்கு ஒருமுறை கொள்ளைக்கு ஆட்படுவது தொடர்ந்துகொண்டுதான் இருந்தது. இல்லாதுபோனால், திருவாங்கூர் அரசர் பெரும் எண்ணிக்கையிலான எதிரிகளுக்குத் தலைகொடுக்க வேண்டியது, அதிகரித்திருக்கும். இங்கே, இந்த ஒருசம்பவமே அந்தஇடத்தின் மதிப்பைக் காட்டுவதற்குப் போதுமானது.

படகாக்கள் திருவாங்கூரின் தலைமைக்கோட்டையும் தலைநகருமானக் கொற்குளத்துக்கு முன்னேறிவிட்டனர். அரசரும் எதிரிகளுக்குச் சமமான நிலை இல்லையென்றாலும், புதிய அரசியல் திட்டத்துக்குத் தன்னை மாற்றிக்கொண்டிருந்தார். இந்திய இளவரசர்களிடம் காணப்படாத மனோதைரியத்துடனும் நீதியுடனும் படகாக்களிடம் தனது கோட்டைகளில் ஒன்றை ஒப்படைத்தார். அரசரிடம் எட்டுஅமைச்சர்கள் (பக்.369) இருந்தனர். ஆரம்பத்திலிருந்தே பேராசையுடன் ஆட்சியைக் கைப்பற்றிய அவர்கள், 'நாட்டுக்கு அரசர்' என்று வெறும்பெயரை மட்டும்தான் அவருக்கு விட்டுவைத்திருந்தனர். கொடூரமாக நிர்வாகத்தை நடத்தி, தாறுமாறாக தண்டல்வசூலித்து, அரசருக்கானதை அவர்கள் பங்கிட்டுக்கொண்டனர். தனக்கு இப்போது எஜமானர்களாக இருக்கும் ஒழுக்கமற்ற அமைச்சர்களை ஒரேயடியாக விரட்டியடிக்க, அரசர் படகாக்களுடன் ஒருரகசிய உடன்பாடு செய்துகொண்டார். அதன்படி அவர்களை விரட்டியடித்தால், நாட்டில் ஒருபகுதியையும் கோட்டையையும் தருவதாக ஒத்துக்கொண்டார். இது அவர் செய்த மகா மடத்தனம். எதிரிகளை நாட்டின் இதயத்துக்குள் அவரே அழைத்துவந்துவிட்டார். அதன்படி படகாக்கள் வழக்கமான தங்கள் ஊடுருவலை எந்தவொரு எதிர்ப்பையும் சந்திக்காமல் நடத்தினர். தலைநகருக்குள் அந்தப்படை பீடுநடை போட்டது. அவர்களுக்கு இடமளித்த அரசரும் தனது படைகளுடன் சேர்ந்துகொண்டார். கொடூர அமைச்சர்களில் ஒருவரோ அல்லது இரண்டுபேரோ உடனடியாகக் கொல்லப்பட்டார்கள். மற்ற அமைச்சர்களில் சிலர் பயந்து, தப்பியோடிவிட்டனர். சிலர் உயிரைப் பாதுகாத்துக்கொள்ள, பெருமளவில் பணம்கொடுத்தனர். இதுவரை பயந்ததுபோல

பாசாங்கு செய்துவந்த அரசர், ஓடி ஒதுங்கிப் பதுங்காமல், சிதறியிருந்த தனது படைகளை ஒன்றுதிரட்டி, படகாக்களுக்கு ஒதுக்கியக் கொற்குளம் கோட்டையை முற்றுகையிட்டார். படகாக்கள் இந்தத் திடீர்தாக்குதலை சற்றும் எதிர்பார்க்கவில்லை. அவர்களால் தடுக்கவும் முடியவில்லை. அதற்குமுன்நடந்த மோதலில் படகாக்களில் பலர் தலைநகரில் கொல்லப்பட்டிருந்தனர். மற்றவர்கள் தாறுமாறாகச் சிதறினார்கள். அரசர் அவர்களைத் துரத்தித் துரத்தியடித்தார். குடிமக்கள் அவருடன் சேர்ந்து கொண்டனர். ஆண்டுக்கொருமுறை வந்து, அட்டகாசம் செய்தவர்களைப் பழிவாங்குவதாக, காட்டுமிராண்டித்தனமாக பலர் வெட்டிக் கொல்லப்பட்டனர். எஞ்சிய சிலர், தகவல்சொல்ல தங்கள் நாடுநோக்கி ஓடினர். (பக்.370) இந்த வெற்றியையடுத்து திருவாங்கூர் அரசர், அணிவகுப்போடு தலைநகர் திரும்பினார். ஆட்சிப் பொறுப்பை தனது சொந்தக்கைகளில் எடுத்துக்கொண்டார். அப்படியே அதிரடியாக, தனது எதிரிகளை அழித்தொழிக்கத் தொடங்கினார். கௌரவமாக வாழ்ந்துகொள்ளட்டும் என்று, அரசர் உயிர்ப்பிழைக்கவிட்ட அவரது முன்னாள் அமைச்சர்கள், என்றாவது ஒருநாள் அரசர் அரண்மனையிலிருந்து வெளியேவரும்போது கொன்றுவிடும் சதியை செய்தபடியே இருந்தனர். வல்லமைவாய்ந்த இந்த அரசர், தனது உயிரைக் காத்துக்கொள்ள இரண்டுபேரைக் கொன்றார். மூன்றாவது நபரொருவர் மூர்க்கமாகத் தாக்கப்பட்டார். ஆனால் கடைசியில் அரசரே உடல் முழுக்கக் காயங்களுடன் கிடந்தார். அந்நிகழ்வு, குடிமக்களை மிகவும் துயரத்தில் ஆழ்த்தியது. குறிப்பாகக் கிறிஸ்தவர்களை. அவர்களை மதித்த அவர், எல்லா தருணங்களிலும் ஆதரவாகவும் இருந்தார். மீண்டும் அவருக்கு எதிராக அந்த அமைச்சர்கள் சதித்திட்டத்தில் ஈடுபட்டார்கள். மறுபடியும் அரசு அவர்களின் கைகளுக்குப்போனது. நடப்பது அரச குடும்பத்தின் ஆட்சிதான் என்று தோற்றமளிக்கச் செய்ய, அரசரின் சகோதரி ஒருவரை சிம்மாசனத்தில் அமர்த்தினர். ஆயினும் அவர் நிழல் அரசி மட்டும்தான்.

மேற்கூறிய இந்த துர்சம்பவம், நான் கோடேடேவுக்கு வருவதற்கு இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது (பக்.371). இந்தச் சிறுநாட்டின் குறிப்பிடத்தக்க நகரமாக இது இருந்தது. அதனை அமைச்சர்கள் கீற்றுகளாகப் பங்கிட்டுக் கொண்டிருந்தார்கள். அங்கே அரசிக்கு எந்தவொரு அதிகாரமும் இருக்கவில்லை... புனித பிரான்சிஸ் சேவியர் திருவிழாவுக்கு சிலநாட்கள் முன்னர், நான் கோடேடே வந்தடைந்தேன். மிக விரைவிலேயே நான் தோபோவுக்குத் திரும்பிவிட்டேன் (பக்.372). கிறிஸ்துமஸ் விழாவுக்குள் மீண்டும் கோடேடேவுக்கு வந்து,

*சோம்பலில்லாமல் மலபார் மொழியைக் கற்றுக்கொள்வேன் என்று உறுதியளித்திருக்கின்றேன். பங்குத்தந்தை மேனார்ட்டின் உதவியுடன் நான் மிகக்குறுகியக் காலத்திலேயே பலவிஷயங்களில் பெரும்வளர்ச்சிப் பெற்றிருக்கின்றேன். அவரும் ஆச்சரியப்படத்தக்க வகையில் பல்வேறு வலிகளை என்னிடம் பகிர்ந்துகொண்டிருக் கின்றார் (பக்.373). திருச்சபை மாகாண அமைப்பின் உத்தரவின்படி, தற்போது நான் மீன்பிடி கிராமமான தாலாவில் இருக்கின்றேன். எனது பயணத்தில் (பக்.374) .... குமரிக்கடலில் மரக்கலங்களுக்கு வழிகாட்டும் கற்தூண் ஒன்றைக் கண்டேன். வடக்குத்தெற்காக இருந்த அக்கற்தூண், மலைத்தொடருக்கு நேர் எதிராக இருந்தது. அது, திருவாங்கூர் மற்றும் மதுரை ராஜ்ஜியங்களைப் பிரித்தது. அந்தக் கற்தூணிலிருந்து ஒருகோடு இழுத்தால், மூன்றரைக் கல்தொலைவு இருக்கும். அது, இரண்டு ராஜ்ஜியங்களுக்கு இடையிலிருந்தத் துல்லியமானக் கோடு....*

*(பக்.375).... உலக அளவில் புகழ்பெற்ற இந்த மீன்பிடிக் கடற்கரையில் எண்ணற்ற நகரங்கள் முன்னொரு காலத்தில் இருந்தன. போர்த்துக்கீசியர்களின் அதிகாரம் அந்தப்பகுதியில் பரவத்தொடங்கியதும் அது, இந்தியாவை பலவீனப்படுத்தி விட்டது. அவர்கள் இந்தக் கடற்கரையைப் பாதுகாக்கவில்லை. பெரும்பாலானக் கிராமங்கள் அழிந்துபோயின. தற்போது அங்கேயிருப்பது ஏழ்மைநிறைந்த சில கிராமங்கள் மட்டும்தான். அவற்றில் தாலா, மணப்பார், ஆலந்தலை, புண்டிகாயல் மற்றும் சில முக்கியமானவை. ஆனால் தூத்துக்குடி ஒருநகரம். அங்கே ஐம்பதாயிரம் குடிகள் இருக்கலாம் என்று கருதுகின்றேன். அவற்றில் ஒருபகுதியினர் கிறிஸ்தவர்கள். மற்றவர்கள், உருவவழிபாட்டைப் பேணுபவர்கள்.*

*போர்த்துக்கீசியர்கள் இந்தியாவுக்கு முதலாகவந்தபோது, மீன்பிடிக்கடலோரக் குடிமக்கள் அல்லது பரவாஸ் மதுரை அரசின் ஒருபகுதியைக் கைப்பற்றிய மூர்களின் காட்டாச்சியில் புலம்பிக்கொண்டிருந்தனர். அதன் உச்சபட்ச வேதனையிலிருந்த அக்குடிமக்களின் தலைவர், போர்த்துக்கீசியர்களின் உதவியை நாடினார். தான்மட்டுமல்லாமல், ஒட்டுமொத்தச் சமூகத்தையும் போர்த்துக்கீசியர்களின் பாதுகாப்பில் கொண்டுவந்தார். (பக்.376).... பரவாஸ்கள், கிறிஸ்தவர்களாக மதம்மாற உறுதியளித்திருந்தனர். இந்த உடன்பாடு முடிவுக்குவருவதற்கு முன்னமே, மூர்களை நாட்டைவிட்டு விரட்டியடித்தப் போர்த்துக்கீசியர்கள், தங்களை கடலோரத்தின் பல பகுதிகளில் தகவமைத்துக்கொண்டனர். அதன்பின்பு, புனிதபிரான்சிஸ் சேவியரின் கடும் உழைப்பால், கிறிஸ்தவ மதம் மீன்பிடிக்கடலோரங்களில் செழித்துவளர்ந்தது....*

போர்த்துக்கீசியர்களால் சுதந்திரம் கிடைக்கப்பெற்ற பரவாஸ், அண்டைஅசலில் தங்கள் வியாபாரத்தை நடத்திக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். அதில் அவர்கள் கொடிகட்டிப்பறந்து, பணக்காரர்கள் ஆயினர். அதிகாரமிக்கவர்களாகவும் இருந்தனர். போர்த்துக்கீசியர்களின் பாதுகாப்புக் குறைந்தபோது, டச்சுக்காரர்களால் அவர்கள் கசக்கிப் பிழியப்பட்டனர். வறுமையின் உச்சபட்ச எல்லைக்கு தள்ளப்பட்டனர். அவர்கள் வர்த்தகத்தில் உயரத்தில் இருந்தபோது, அவர்கள் பிடித்த மீன்கள் நகரத்துக்குள் கொண்டுசெல்லப்பட்டன. கொதிக்கும் மணலும் கள்ளிச்செடிப் பழங்கள் மட்டுமே கிடைக்கும் கடலோரப் பகுதிகளிலிருந்து, மீனுக்குப் பண்டமாற்றுமுறையாக, அரிசியும் அத்தியாவசியப் பொருட்களும் பெறப்பட்டன. கன்னியாகுமரியிலிருந்து தாலா வரையிலான மூன்று பன்னிரெண்டு கல்தொலைவிலுள்ள இடைவெளியில் ஏழெட்டு கிராமங்களைத்தவிர, வேறு எதுவுமே இல்லை. அக்கிராமங்களில் தாலாவுக்கு கீழுள்ள நிர்வாகத்தின் பேராலயங்கள் இருந்தன.

.... இந்த ஆண்டு, கடலோரப் பகுதி முழுவதிலும் திடீர்திடீரென விலங்குகள் (புலிகள்) பேரழிவை உண்டாக்கின. இதனிடையே *(பக்.377)* கால்நடைகளும்.... எழுபதுக்கும் அதிகமான மனிதர்களும் காணாமல்போய்விட்டனர். எனது மாவட்டத்திலுள்ள பல பேராலயங்களைப் பார்வையிட்டுவிட்டு, ஈஸ்டர் வாரத்தில், நான் தாலாவுக்குத் திரும்பிவிட்டேன்....

திருச்சபையின் மாகாண அமைப்பிலிருந்து மதுரைக்குப் புறப்பட்டுவரும்படியாக, ஓர் உத்தரவுக்கடிதம் கிடைக்கப் பெற்றேன். எனது மேலதிகாரியிடமிருந்து வந்த அந்தஉத்தரவு மற்றும் வழிகாட்டுதலையடுத்து உடனடியாக, தோபாவிலிருந்து மதுரைநோக்கியப் பயணத்தை தொடங்கிவிட்டேன். மீண்டும் கன்னியாகுமரியைக் கடந்து, தூத்துக்குடி வந்தடைந்தேன். இந்த நகரம், கன்னியாகுமரிக்கும் ராமணகோயிலுக்குமிடையில் (ராமேஸ்வரம்) சமதூரத்தில் இருந்தது....

*(பக்.380)* கடல்பயணத்தின் வழியாக தூத்துக்குடி வந்தடையும்போது, அது மிகஅழகிய நகரமாகத் தோற்றமளிக் கின்றது. ஓங்கியுயர்ந்த கம்பீரமானக் கட்டிடங்கள் பலவற்றைக் காண முடியும். அந்நகரம் இரண்டு தீவுகளுக்கு நிழலாகவும் இருந்தது. உள்நாட்டிலிருந்து வந்த டச்சுக்காரர்களால் சில ஆண்டு களுக்குமுன்பு கட்டப்பட்ட சிறுகோட்டை ஒன்று அங்குள்ளது. உருவ வழிபாடுசெய்பவர்கள் அவமானப்படுத்தியபோது, அதிலிருந்து தங்களைக் காத்துக்கொள்வதற்குக் டச்சுக்காரர்களால்

கட்டப்பட்டதாகும். நீரையொட்டியப் பகுதிகளில் இடவசதியுடன் கூடிய பொருள் வைப்புக்கிட்டங்கிகள் ஏராளமாகக் கட்டப்பட்டிருந்தன. அவையெல்லாமே அழகாகவும் இருந்தன. ஆனால் அங்கு வந்துசேர்ந்த பார்வையாளர்களால் அதன் அழகு தொலைந்துபோனது. டச்சுக்காரர்களுக்கு, தூத்துக்குடியிலிருந்து கணிசமான அளவில் வருமானம் கிடைத்துவந்தது. இத்தனைக்கும் அவர்கள் அதன் எஜமானர்கள் இல்லை. ஒட்டுமொத்த மீன்பிடிக் கடலோரத்தில் பெரும்பகுதி, மதுரை அரசருக்குச் சொந்தமானதாக இருந்தது. மீதமுள்ளப் பகுதி மறவ இளவரசரின் வசமிருந்தது. மறவ இளவரசர், சில ஆண்டுகளுக்குமுன்புவரை மதுரை அரசருக்குத் திறைசெலுத்துபவராக இருந்தவர். டச்சு நிர்வாகம், மறவ இளவரசருக்குச் சொந்தமான மீன்பிடி கடலோரப் பகுதியை வாங்குவதற்கு பலமுறை முயற்சிசெய்தது. தூதுக்குழுவையும் மிகச் சிறந்தப் பரிசுகளையும் அனுப்பிவைத்தது. பெருமிதத்துடன் மறவ இளவரசர் அந்தப்பரிசுகளை வாங்கிக்கொண்டார். நல்லவையே நடக்கும் என்று உறுதியளித்தார். ஆனால் இதுவரை, அவரது வார்த்தைகளை அவரே நல்லபடியாக செயல்படுத்தியதில்லை.

கடலோரப் பகுதிகளுக்கு டச்சுக்காரர்கள் எஜமானர்களாக இல்லாதபோதும், ஒட்டு மொத்தக் கடற்கரைப் பகுதியுமே அவர்களுக்குச் சொந்தம் என்பதுபோல அடிக்கடி நடந்துகொண்டனர். சிலஆண்டுகளாகவே பரவாஸ்களை பேராலயங்களிலிருந்தும் வெளியேற்றிவிட்டார்கள். திருச்சபையினரின் வீடுகளிலெல்லாம் தங்கள் படைப்பொருட்களால் நிரப்பிவைத்தனர்.

கடலோரப் பகுதிகளில் டச்சுக்காரர்கள் நடத்திய வணிகத்தால், அவர்களின் மதிப்பு உயர்ந்திருந்தது. மதுரையிலிருந்து வரவழைக்கப்பட்ட நார்த்துணிகளுக்கு, ஜப்பானின் தோல் பொருட்களும் மொலுக்கஸின் நறுமணப் பொருட்களும் பண்டமாற்றாகப் பெறப்பட்டன. முத்துக்குளித்தல் மற்றும் சங்குகுளித்தல் ஆகிய இரண்டுதொழில்களிலும் அவர்களுக்கு கணிச மான அளவில் லாபம் தொடர்ந்து கிடைத்துவந்தது. சங்கு என்பது, ஒருவகைச் சிப்பி. ஒலி எழுப்பக்கூடிய அதில், சிற்பங்களும் ஓவியங்களும் செய்யப்பட்டன. இந்த வர்த்தகத்தில் டச்சுக்காரர்கள் பொறாமைப்படுமளவில் திடீரென உயர்ந்தார்கள். இந்த சங்குகளை எவரொருவரும் யாருக்கேனும் விற்பனைசெய்தால், அவர்கள் கொல்லப்பட்டார்கள். அந்தவகையில் பல இந்திய உயிர்களை டச்சு காவுவாங்கியது. சங்கு, டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு சொந்தமானதாகும். சங்குகளை அற்பத்தொகைக்கு வாங்கிய அவர்கள், வங்காள அரசுக்கு பன்மடங்கு விலைவைத்து விற்றார்கள். இந்தச் சிப்பிகள், அதன் அகலத்திற்கேற்ப

சீர்படுத்தப்பட்டன. வட்டமாகவும் உள்ளீடற்றும் இருக்கும் சங்குகள் வளையல்களாக, காப்புகளாகச் செய்யப்பட்டன. பளப்பளப்புடன் இருக்கும் சங்குகள், தந்தநிறத்தில் மெருகேற்றப்பட்டன. இதுபோன்ற வகைகள் பெருமளவில் இந்தக்கடற்கரைப் பகுதிகளில் கிடைத்துவந்தன. வேறெங்கும்கிடைக்காத அரியவகை சங்குகளும் பெருமளவில் கிடைத்துவந்தன. கூடவே, மிக அரியவகையைச் சேர்ந்த இடதிலிருந்து வலமாக முகம்கொண்ட வலம்புரிச் சங்குகளும் கிடைக்கப்பெற்றன. இந்த சங்குகளை விக்ரக வழிபாட்டாளர்கள் கொண்டாடினார்கள். அதை வைத்திருக்கும் ஒருவர், பல லட்சம் மதிப்புள்ள சொத்து வைத்திருப்பவராகக் கருதப்பட்டார். கடவுள் அதில் குடியிருப்பதாக அவர்கள் கருதினர்.

(பக்.382) முத்துக்குளித்தலை இரண்டாவது முக்கியத்துவம் வாய்ந்தத் தொழிலாக, டச்சு கிழக்கிந்தியக் கம்பெனி நடத்தியது. முத்துக்குளித்த(ல்தொழி)லில், அவர்கள் இறங்கவில்லை. மாறாக, மீன்பிடி படகுகளை வைத்திருக்கும் கிறிஸ்தவர்கள், ஹீதன் அல்லது முகம்மதியக் குடிமக்களை அவர்கள் அதில் இறக்கினார்கள். ஒவ்வொருபடகும் அறுபது டச்சுக் கிரவுன்களை முத்துக் குளித்தலுக்கு தீர்வையாகக் கட்டவேண்டும். சிலவேளைகளில் இன்னும் அதிகமாக தீர்வையிருக்கும். தொழில்நடவைப் பொறுத்து, அறுநூறு அல்லது எழுநூறு கிரவுன்கள் வரைக்கும் கணிசமாக உயர்த்தப்படுவதுமுண்டு. ஆனால் எல்லோரையும், அவர்கள் விரும்பும் இடத்தில் முத்துக்குளிக்க அனுமதிப்பது மில்லை. சில இடங்களில் சில படகுகளுக்கு மட்டுமே அனுமதி. தொடக்கத்தில் டச்சு, ஜனவரி மாதத்துவக்கத்தில் நேரத்தையும் இடத்தையும் தெரிவு செய்து அனுமதித்துவந்தது. ஆனால் சோதனை முறையில் எதுவும் செய்யப்படுவதில்லை. அது, ஆண்டு முழுவதும் தொடரும். ஆனால் பல இடங்கள் அனுகூலமாக இருந்ததில்லை. எப்போதாவது ஓரிருமுத்துகள் கிடைத்துவிடுவதுண்டு. பெரும் லாபம் இருக்கவில்லை. பின்னர் நடைமுறைகள் மாற்றப்பட்டன. சோதனை முத்துக்குளித்தல் வெற்றிகரமாக இருந்தால் கம்பெனி குளித்தலுக்கான அனுமதிவழங்கியது. இதையடுத்து, கடலோரம் முழுவதும் குவிந்து நின்றனர், மக்கள். இலங்கைத் தீவின் தலைநகர் கொழும்பிலிருந்து டச்சு நிர்வாகத்தின் ஆணையாளர் முத்துக் குளித்தலுக்கு தலைமையேற்க வந்துசேர்வார். அந்தநாளில் விடிகாலையில் பெரிய பீரங்கி ஒன்று குண்டுமுழங்கும். உடனே அத்தனைப்படகுகளும் கடலில் இறங்கும். அவற்றை இரண்டு டச்சுக் கப்பல்கள் வழிநடத்தும். ஓரிடத்தில் அவை இடமும் வலதுமாக (பக்.384) நங்கூரம் பாய்ச்சி நிற்கும். இடம் குறிக்கப்பட்டு, அங்கே முத்துக்குளித்தல் தொடங்கும்.

*(பக்.386)* ....முத்துக்களை வாங்கும் உரிமையை டச்சு, தன்வசமே வைத்திருந்தது. முறையானதையும் பெரிய அளவிலானதையும் டச்சு நிர்வாகமே வாங்கிக்கொள்ள விரும்பும். ஆனால் அவர்கள் நிர்ணயிக்கும் விலைக்கு உரிமையாளர் தரவிரும்பாவிடில், அவர் விரும்புவதுபோல, எங்குவேண்டுமானாலும் யாருக்கும் விற்றுக் கொள்ளலாம். முதல்நாளில் அறுவடை செய்யப்படும் அனைத்து முத்துகளும் மதுரை அரசருக்கோ அல்லது மறவ அரசருக்கோ போய்ச்சேரும். அதுவொரு முறையாக இருந்துவந்தது. இரண்டாம் நாளில் அறுவடையான முத்துகளுக்கு டச்சு நிர்வாகம் லாபம்வைக்க அனுமதிப்பதில்லை. ....பணம்வைத்திருப்பவர்கள் யாராக இருந்தாலும், அங்கே எதையும் மிக மலிவாக வாங்கிக்கொள்ளலாம்.

....முத்துக்குளித்தல் தொழிலில் பல்வேறு சூழ்ச்சிகளும், ஏமாற்று, வஞ்சம் ஆகியனவும் நடந்தேறின. திருட்டும் தொடர்ந்து கொண்டேயிருந்தது.... முத்துக்குளித்தல் காலம்முழுவதும் ஒருவிதநோய்மை அங்கே படர்ந்துகிடப்பதைக் காணமுடியும்....

*(பக்.387)* .....இந்தஆண்டு தூத்துக்குடியில் நடந்த முத்துக் குளித்தல் பெருமளவு லாபத்தை ஈட்டவில்லை.... இது, எனது தூத்துக்குடி வருகைக்கு இரண்டுமாதங்கள்முன்பு நடந்தது. நகர் முழுவதும் இதுவே பேச்சாக இருந்தது. தொழிலில் ஈடுபட்டிருந்த பலர், எதிர்பாராத அந்த ஏமாற்ற அதிர்ச்சியிலிருந்து இன்னும் மீளாதவர்களாக இருந்தனர்.

....அப்போது நாடு ஆத்திரத்தின் பிடியில் சிக்கியிருந்தது. எல்லோருமே ஆயுதங்களுடன் அலைந்து திரிந்தனர். நமது மக்களில் யாரேனும் வெளியில் சென்றால், அவர்களிடம் கொள்ளையடிப்ப தற்கோ அல்லது அவர்கள் கொலை செய்யப்படுவதற்கான சாத்தியங்கள் நிறையவே இருந்தன.... உள்ளூர்க் குடிகள், கொஞ்சநேரத்துக்குமுன்பு பங்குத்தந்தை பெர்னார்ட் தே சா வைப் பிடித்துக்கொண்டனர். அவர், உள்ளூர் சாதியைச்சேர்ந்த தலைவர் ஒருவரை மதம் மாற்றியிருந்தார். அதனால் அவரை, குற்றவியல் நடுவர் முன்பு கொண்டுசென்று *(பக்.388)* நிறுத்தினர். பற்களை அடித்து உடைத்து எடுத்தனர். அவர் செய்த சமயப்பணிக்காக, கடுமையான கசையடிகளுக்கு ஆளாக்கப்பட்டார்..... பொதுவாகவே மக்கள், கிறிஸ்தவத்துக்கு எதிராக இருந்தார்கள்.... செயல்படாத நிலையில், தூத்துக்குடியிலிருந்து உடனடியாக வெளியேற எண்ணினேன்.... இயேசு சபையினர் வழக்கமாக அணியும் மதுரை திருச்சபையின் சமயப் பணியாளர்கள் ஆடைகளைக் கைவிட்டுவிட்டு, சாதாரண நிலையில் இருந்தேன்...

எதிர்பாராத நிலையில் நாங்கள் கோட்டையின் அருகாமையில் வந்துசேர்ந்திருந்தோம். அந்த ஆபத்திலிருந்து சூழ்ச்சித் திட்டத் துடன்தான் வெளியேறினோம்.... கொஞ்ச நேரத்துக்குமுன்புதான் காமியன்-நாகென்-பட்டி, (காமநாயக்கன்பட்டி) வந்துசேர்ந்தோம். அங்கே, பங்குத்தந்தை பெர்னார்ட் தே சா மிகப்பொறுமையாக எனது வருகைக்காகக் காத்திருந்தார். பல செய்திகளை அவர் கொண்டுவந்திருந்தார். நான் பயணம்செய்த வழியெங்கும் கணிசமான அளவில் கொள்ளைச் சம்பவங்கள் நடந்திருந்தன.

### (3) லே கோபியனுக்கு பீட்டர் மார்டின் எழுதியக் கடிதம், ஆவூர், மதுரை, டிசம்பர் 11, 1700.

*(பக்.452)*.....மதுரை நாட்டில் கொந்தளிப்பான சூழ்நிலை உருவாகியிருந்ததால், காமியன்-நாகென்-பட்டியில் ஏறத்தாழ ஒருமாத காலம் தங்கநேர்ந்துவிட்டது. பயணத்துக்கு ஏற்றாற்போல சாலைகள் இருக்கவில்லை. அங்கிருந்து மதுரை திருச்சபையின் முதன்மை இல்லமான ஆவூருக்குக் கிளம்பினேன்.

பங்குத்தந்தை பௌச்சட், அந்த இல்லத்தை இயக்கிக் கொண்டிருந்தார். நானும் ஒருவகையில் போர்த்துக்கீசிய இயேசு சபையின் சலுகைகளை அனுபவித்துவருபவனாக, கடமை யுணர்ச்சியின்பால் இருக்கின்றேன். மதுரை எல்லைக்குள் நான் வந்துசேர்ந்துவிட்டச் செய்தி அவரைச் சென்றடைந்தது. அதேவேளையில் பயணத்தை மேற்கொண்டு தொடர முடியாத படிக்கு தடுக்கப்பட்டேன். படைவீரர்கள் என்னைச் சூழ்ந்து கொண்டனர். கிறிஸ்தவத்தில் எல்லாவகையிலும் பற்றுறுதி கொண்ட ஒருவரை, என்னிடம் அவர்கள் அனுப்பிவைத்தனர். அந்த ஒருவரின் வழிகாட்டுதலின்படி நான் இயங்கவேண்டியிருந்தது. உடனடியாக, நெடுஞ்சாலையிலிருந்த என்னைப் புறச்சாலையில் இறக்கி, திருடர்களின் சாதியினர் நிறைந்திருந்த நாட்டுக்கு இட்டுச் சென்றனர். அவர்களில், சில தனிநபர்கள், ஒருகாலத்தில் திருட்டுத்தொழிலில் ஈடுபட்டிருக்கின் றார்கள். இருந்தபோதும் பெரும்பாலான எண்ணிக்கையிலானவர்கள் கிறிஸ்தவத்துக்கு மாறி யிருந்தனர். அவர்கள் இப்போது அத்தொழிலை அறவே விட்டொழித்திருந்தாலும், அவர்களின் முந்தையப் பெயர் மட்டும் அவர்களுடன் ஒட்டிக்கொண்டிருந்தது. அந்தக்காடுகளின் வழியே பயணம்செய்ய பயணிகள் அஞ்சிநடுங்கினர். மதுரையின் முதல்திருச்சபையினர் இந்தமக்களைப் பெறுவதில் மகிழ்ச்சியும் உயர்வானக் கருத்தும் கொண்டிருந்தனர். அந்தநேரத்தில் நாடெங்கும் பெரும்பற்றாக்குறையிருந்தது. நமக்கு எது நல்லது கிடைக்கும் அல்லது பாதுகாப்புடன் வசிக்க முடியும் என்ற பதைபதைப்பு

நிலையும் இருந்துவந்தது. அந்தநிலையில் அவர்கள், அற்பத் தொகைக்காக இத்திருட்டு தொழிலில் இருந்துவந்தவர்கள். உண்மைக்கடவுளின் சட்டவிதிகளைச் சார்ந்து அவர்கள் இயங்கிய போது, கடவுள் நம்மைத் தண்டிப்பார் என்ற நம்பிக்கையைப் பின்பற்றினார்கள். எனினும், ஒருவரின் இயற்கைப் பண்புகளையும் கண்மூடித்தனமானப் பழக்க வழக்கங்களையும் வேரோடு களைப்பது அத்தனை எளிதானதல்ல. ஆனால் பங்குத்தந்தை அத்தனைவிதமான வழிமுறைகளையும் மேற்கொண்டு, அவர்களை நல்வழிப்படுத்தி மதம் மாற்றினார். அவர்கள் நன்னடத்தை சோதனை நிலையில் கண்டறியப்பட்டது. இவையெல்லாம் அவர்கள் கிறிஸ்தவத்துக்கு வந்தபோது நடத்தப்பட்டவை. இதன் மூலம் திருடுவதோ, வழிப்பறி செய்வதோ அல்லது யாருக்கும் சிறிய தீங்குசெய்வதோ அவர்கள் மனதிலிருந்து அகற்றப்பட்டது. இதன்மூலம் அவர்கள், பண்புமிக்கவர்களாக மாறினர். எல்லாவகையிலானக் கொடிய குணங்களிலிருந்தும் அவர்கள் மீண்டெழுந்தனர்.

களவுத்தொழில் செய்த சாதியினர், கடந்த சிலவருடங்களுக் குள்ளாக அதிக அதிகாரம் பெற்றவர்களாக மாறியிருந்தார்கள். சில நடவடிக்கைகளை மேற்கொண்டு, தங்களை மதுரை அரசரிட மிருந்து விடுவித்துக்கொண்ட அவர்கள், சுதந்திரமானவர்களாக அறிவித்துக்கொண்டனர். விரும்பினால் ஒருதொகையை, அரசருக்குத் திறையாகச் செலுத்த எண்ணிக்கொண்டார்கள். இது நடந்து ஓரிரண்டு ஆண்டுகளிலேயே, கேள்விக்குரிய அந்த சாதியினர், இளவரசருடன் சேர்ந்து கொண்டு மதுரையை முற்றுகையிட்டனர். அது, அவர்களின் முன்னாள் தலைநகரமாகும். அதை, தங்கள் வசப்படுத்திக் கொண்டனர். அவர்களால் கைவசப் படுத்திய நிலையை மேற்கொண்டு இட்டுச்செல்ல முடியவில்லை. தாக்குதல் நடத்துவதைவிட கைப்பற்றியதை இட்டுச்செல்வது கடினமானது. அந்தநேரத்தில் மதுரையின் தளவாய், இளவரசரின் பெயரில் ஆட்சி செய்யும் அரசியிடம், முக்கியமான இடங்கள் முற்றுகையிடப்பட்டிருக்கும் தகவல்கள் குறித்துப் பேசி, படைகளை ஒன்றுபடுத்தினார். மதுரைநோக்கி நடத்திக்கொண்டும் வந்துவிட்டார். அதே நேரத்தில் திருடர்கள் சமூகப்படை, மதுரைக்கு இரவில் வந்துசேர்ந்தது. மதுரையின் ஒரு வாயிலை நான்கு யானைகளின் உதவிகொண்டு தகர்த்தது. அப்போது, மதுரைத் தளவாய் நடத்திய எதிர்தாக்குதலில் திருடர்கள் சமூகத்தினர் பலர் கொல்லப்பட்டனர். பெரும்எண்ணிக் கையாலானவர்கள் கைதுசெய்யப்பட்டனர். இருந்தபோதும், கிளர்ச்சிசெய்த இளவரசருக்குத் தப்பியோடிவிடும் வாய்ப்பும் கிடைத்தது. தப்பி,

காடுகளுக்குள் *(பக்.454)* ஓடிஒளிந்துகொண்டார். அதன்பின்பு அவர், மதுரைக்கு மிகவும் கீழ்ப்படிந்தவராகவும் நடந்துகொண்டார்.

அந்த அடர்ந்தகாடுகளின் வழியே நான், எந்தவொரு பயமுமில்லாமல் அவர்களின் முக்கிய நகரமான அரியபடிக்குப் பயணம் மேற்கொண்டு, கடந்துபோனேன். முன்னர் அங்கே, நமக்கு ஒரு ஆலயம் இருந்தது. அப்பெரியக் கட்டிடம் அழிந்துபோய் விட்டது. அத்துடன் ஒரு கோட்டையும் இருந்தது. அதனை மதுரை இளவரசர், நாட்டின் அதிகாரத்துக்கு வந்ததும் இடித்துவிட்டார்....

*(பக்.455)* நான் மறுபடியும் புறப்பட்டுவிட்டேன். வந்தடைந்த இடம்...... ஒரு சிறுகிராமம். இரண்டுமலைகளுக்கு இடையில் அமைந்திருந்தது. அங்கே, களவுத்தொழில் சிறப்பாக நடந் தேறிவந்தது......... நற்குணச் செயலுடைய ஒருமனிதர் என்னை வழிநடத்தி, இந்த சாம்ராஜ்ஜியத்தில் முன்னெப்போதும் கண்டிராத, அற்புதமானதும் பெரிதானதுமான ஒரு கோட்டத்துக்குக் கொண்டு போய்விட்டார். அது, ஏறத்தாழ எண்பது அடி நீளமிருந்தது. நாற்பத்தெட்டு அடி அகலம். அதன்மேற்கூரை, அத்தனை உயரமாக இல்லை. இந்தியக் கோவில்களில் நாம் காணும் ஒருகுறை, அதுதான். அதனைப் பலதூண்கள் தாங்கிப்பிடித்திருந்தன. ஒவ்வொன்றிலும் அரியவகையிலான வேலைப்பாடுகள். இவையெல்லாமே ஒரேகல்லில் ஆனதாக இருந்தது. முன்பக்கம் அல்லது கோவில்வாசல், முழுஅகலத்துக்குமானதாகவும் இருந்தது. வாசலை, குடையப்பட்ட எட்டு தூண்கள் சுமந்துநின்றன. அதன் அடித்தளமும் மேற்கூரையும் வளைவுகளும், முற்றிலும் நம்மிலிருந்து வேறுபட்டக் கலையாக இருந்தது. கோவிலில் ஒரு சாளரம்கூட இருக்கவில்லை....

.... நாட்டில் போருக்கான சூழல் அரும்பிவிட்டது. *(பக்.458)* இன்னும் சிலநாட்களில் இந்த நகரத்தின் வழியே, படைகள் நடமாடும் என்பதில் நான் உறுதியாக இருக்கின்றேன்...

*(பக்.459)* அங்கிருந்து இரண்டுநாள் பயணத்தில், நமது திருச்சபையினர் வழக்கமாகத் தங்கும் இல்லங்களில் ஒன்றான ஷெர்ரீனை வந்தடைந்தேன். ஆனால் அவரை அங்கே காண முடியவில்லை.... ஆயினும் பங்குத்தந்தை பௌச்சட்டைப் பார்த்தது, ஆறுதலாக இருந்தது. சிறப்புவாய்ந்த இந்தத் திருச்சபை பணியாளரை நான், முன்பு பாண்டிச்சேரியில் கண்டிருக்கின்றேன். இப்போது, இறைவனின் பத்துக்கட்டளைகளுள் ஒன்றாக, மிகுந்த மரியாதையுடன் அவரை ஆரத்தழுவிக்கொண்டேன். இந்தத் திருச்சபைக்குள் என்னைக் கொண்டுவர அடிப்படையானவற்றைப் பெற்றுத் தந்தவர், அவர். கொடூரமாக அவர் தாக்கப்பட்டு,

மூன்றுமாதங்களுக்கு மேலாக இருக்காது. உடல்நலம் இன்னும் தேறியிருக்கவில்லை. துயருற்றவராக இருந்தார். உடல்வெளுத்து பலவீனமாகக் காணப்பட்டார். அவருடன் இருந்தவர்கள் தண்டனைக்கு ஆளானார்கள்.

சமயப் பணியாளர்களில் ஒரு மூன்றுபேர்மட்டும், தங்கள் கடமையை மறந்தவர்களாக இருந்தார்கள். திருச்சபையின் புனிதப் பண்புகளிலிருந்து விலகியவர்கள், அவர்கள். குற்ற நடவடிக்கை களில் ஈடுபட்டவர்களும்கூட. சமயத்துக்கும், நற்செய்கைகளுக்கும் குந்தகம் விளைவித்த அவர்களை, சமயப் பணியிலிருந்து அப்புறப்படுத்தவேண்டியக் கட்டாயம் உருவாகியிருந்தது. இந்த அழிசெயலில் ஈடுபட்டவர்கள், நல்லறிவு பெற்றும் வாழ்வை சீர்செய்யும் வழிமுறைகள் இருந்தும், தங்கள் முகமூடிகளைக் களைந்து, சமயத்துக்கு எதிரானவர்களாக ஆகியிருந்தார்கள். அதன்வழியே, திருச்சபையையும் சமயப்பணி பரப்பாளர்களையும் அவர்கள் ஒருசேர அழிக்க நினைத்தார்கள். சமய போதகர்களுக்கு எதிராகச் செயல்பட்டு, குற்றச்சாட்டுகளை வைத்தார்கள். முதலாவதாக, சமயபோதகர்கள் பரங்கியர் அல்லது ஐரோப்பியர்கள்; இழிந்தவர்கள் என்று பெயரெடுத்தவர்கள்; அருவருப்பானவர்கள்; ஒட்டுமொத்தத் தேசத்தால் வெறுப்புக்கு உள்ளானவர்கள். இரண்டாவதாக, அவர்கள் இந்த சாம்ராஜ்ஜியத்தில் நீண்டகாலமாக இருந்து வருகின்றார்கள்; நிறைய பேராலாயங்களை வைத்திருக்கின்றார்கள்; அவற்றின் மூலம் அவர்களுக்கு நிறைய வருமானம் கிடைக்கின்றது; ஆயினும் அவர்கள் அரசருக்குக் குறைந்த பட்சமாக ஒன்றையும் செலுத்தியதில்லை (பக்.460). மூன்றாவதாக, இந்தத் திருச்சபையினர் மடத்தின் பணிகளில் ஈடுபட்டிருந்த ஒரு துறவியை, வஞ்சகமாகக் கொன்றுவிட்டார்கள்; இதனை போப்புக்கு யாரோ தெரிவித்து விட்டார்கள்; அதனால் போப், மறவர்களால் கொல்லப்பட்ட ஜான் தே பிரிட்டோவுக்கு புனிதர்வரிசையில் இடமளிக்க மறுத்துவிட்டார் என்று வகைப்படுத்தினார்கள். இவை அதிர்ச்சிதருவதும்; பொருத்தமற்ற; நகையாடத்தக்கக் குற்றச்சாட்டுகளாகும். அவர்கள் கொல்லப்பட்டதாகச் சொல்லும் மடத்தின் பணிகளில் ஈடுபட்டிருந்த அந்தத்துறவி அப்போது, சூரத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தார். பின்னர் அவர், ரோமுக்குப்போய் திரும்பி வந்தபோது, அவரது நற்காரியங்களுக்காக பேராயர் ஆக்கப்பட்டார். சமயப்பணிகள் மேன்மையுற்று வருவதைக்கண்டு பயந்த இளவரசர், ஆளுக்கு இருபதாயிரம் கிரவுன்களைக் கொடுத்து, துயர்மிகுந்த சமய எதிர்ப்புக்கு அவர்களைப் பயன்படுத்தி, கிறிஸ்தவத்தை வேரோடு பிடுங்கியெறிய நினைத்தது, வேதனையானது.

குற்றம்சாட்டியவர்களை நாட்டிலிருந்து அப்புறப்படுத்தத் தீர்ப்பளிக்கப்பட்டது. குறிப்பாக, பங்குத்தந்தை பௌச்சட் மீது வெறுப்பை உமிழ்ந்தவர்கள் மீது.

பற்றார்வம்மிக்க சமயப் பணிகள் முதலில் கடவுளிடம் புகலிடம் தேடுவதாக இருக்கின்றன; பாதுகாப்பை இரந்து வேண்டுகின்றன; பின்பு அவை, அழிவையும் பொல்லாங்கையும் தரக்கூடியத் திட்டங்களிலிருந்து பாதுகாக்க, அதற்கான முயற்சிகளை மேற்கொள்கின்றன. ஆனால் மனந்துணிந்து, பதிலாள் ஆட்சிசெய்யும் இளவரசரிடம் போய், தங்கள் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணவும் பாதுகாப்பு பேணவும் மன்றாடுகின்றார்கள். அதிகப்படியான இந்த நடவடிக்கையை எந்தவொரு சமயப்பரப்புப் பணியாளரும் செய்வதில்லை. குறைந்த நிறமுள்ள அவன் முகமே காட்டிக் கொடுத்துவிடும். இளவரசர் மேலே குறிப்பிட்டதுபோல, பரங்கியர்கள் என்று வெறுத்தொதுக்கக் குறிப்பிட்டதும் அந்தவகையில்தான். இந்நிலையிலும்கூட அவரது வாழ்க்கை, பயங்கரமானப் போரினூடேதான் இருந்தது.

ஆனால் பங்குத்தந்தை பௌச்சட், தனது முழுநம்பிக்கையையும் இறைவன்மேல்தான் வைத்திருந்தார். தன்னைத் தயார்படுத்திக் கொண்டு நகரத்துக்குச்சென்ற அவர், அரண்மனையில் அரசியையும் இளவரசரையும் சந்திக்க ஆயத்தமாக இருந்தார். நாட்டை இளவரசரின் பெயரில் அரசிதான் ஆண்டுகொண்டிருந்தார். அந்த அரசியின் பெயர், மங்கம்மாள். சொக்கநாத நாயக்கரின் மனைவி. அவரது மகன், ரங்க முத்துவீரப்ப நாயக்கர். வாக்குத்தவறாத இளவரசர். கருவுற்றிருந்த மனைவியைவிட்டுவிட்டு, சின்னம்மை நோயினால் மரணமடைந்தார். தற்போதைய இளவரசர் பாட்டி மங்கம்மாளால் வளர்க்கப்பட்டவர். மங்கம்மாள், ஆட்சியதிகாரத் தின் பாது காவலரான அவர், தன் பேரனைப் படிக்க வைத்து, (பக்.461) கவனமாகப் பராமரித்தார். இளவரசருக்கு பதினான்கு அல்லது பதினைந்து வயதானபோது, அரியணைக்குச் சொந்தமான இளவரசரி டமே பொறுப்பை ஒப்படைத்தும், அதேநேரத்தில் தளவாயிடமும் நம்பிக்கைவைத்து காக்கும் பொறுப்பைவிட்டார். இதையடுத்து, ஒட்டுமொத்த நிர்வாகத்துக்கும் தளவாய் அல்லது இளவரசரின் பதிலாள், எஜமானராக மாறினார். மதுரையை ஆண்ட அமைச்சர்களிலேயே அதிக செல்வாக்கு மிக்கவராக அவர் இருந்தார்.

இளவரசரை நேருக்குநேர் சந்திக்கும்முன்புவரை, பங்குத்தந்தை பௌச்சட், தனது செயல்பாடுகள் சரியானதுதானா என்றதொரு சித்திரத்தை தனக்குள் வைத்திருந்தார். அவர் நாட்டின் மரபு

ஆசாரங்கள், சடங்குகள் எதையும் அறிந்திருக்கவில்லை. தன்னுடன் சில பரிசுப்பொருட்களை எடுத்துச்சென்றிருந்தார். திருச்சபையின் பணியாளர்களால் செய்யப்பட்ட அவை, பெரும் பொருள் மதிப்பிலானவை அல்ல. ஆனால் புதிய வகைமையிலானவை. அவற்றை அங்கிருந்த எல்லோருக்கும் அளித்தார். மேலும் அவர், நிலவுலகப் பரப்புக்குரிய இரண்டடிவிட்டமுடைய உருண்டையைக் கொண்டுசென்றிருந்தார். அதில், உலகத்திலுள்ள பல நாடுகள், அரசாங்கங்கள், மாகாணங்கள், கடற்கரைகள் மற்றும் கடல்கள் குறிக்கப்பட்டிருந்தன. அதுவும் 'தமிழ்' மொழியில். மற்றொரு உலக உருண்டை கண்ணாடியிலானது. ஒன்பது அங்குல விட்டமுடைய அது, வெட்டு வேலைப்பாடுகள் நிறைந்தது. இன்னும்சில, பல அடுக்குகளைக்கொண்ட கண்ணாடிப் பொருட்கள். ஒளிரும்கண்ணாடிகளும் அதில் இருந்தன. மேலும்சில, புதுவகையிலான, ஆர்வத்தைத் தூண்டுகின்ற சீனாவிலிருந்துத் தருவிக்கபட்ட அரும்பொருட்கள், கைவளையங்கள், காப்புகள், கடகங்கள், நுணுக்கமாகவும் திறமையாகவும் சிப்பிகளால் செய்யப்பட்ட சேவல் என, பல பொருட்களை அவர்களுக்குப் பரிசளித்தார். அதன்பின் உரையாற்றிய பங்குத்தந்தை பௌச்சட், இளவரசரும் அமைச்சர்களும் போதுமான உதவிகளைச் செய்யவேண்டுமென்று கோரிக்கை விடுத்தார். இதையடுத்து அமைச்சர்கள் அவருக்குப் பரிந்து, ஆதரவாகப் பேசினார்கள். குடிமக்களில் பெருந்திரள் அவர் பக்கம் சாயத்தொடங்கியது. அவரது இந்தச்செயல்பாடு, மதத்துக்கும் மதுரையின் திருச்சபையின் உய்வுக்கும் (பக்.462) மிக முக்கியமான அம்சமாகும். புனித விதிகள் முதன்முறையாக ஒரு அரச சபையில் தகுதியையும் அங்கீகாரத்தையும் பெற்றிருக்கின்றன. இந்தச்சூழல், அதிகாரம் நிறைந்த அமைச்சர்களிடமும் பொதுமக்கள் மனதிலும் ஒருசேர இடம் பெற்றிருக்கின்றது. எவரொருவர் தன்மனதில் உள்ளடக்கமாக இறைகொள்கின்றாரோ, அவர் தம் விருப்பம்போல நிச்சயமான உயர்வை அடைவார்.

தான் அறிவுப்பூர்வமானது என்று கருதியத் திட்டங்களை, மேற்கொண்டு எடுத்துச்சென்ற பங்குத்தந்தை பௌச்சட்டின் செயல்பாடுகள், கடவுளின் உச்சபட்ச அருளால் வெற்றிகளையே பெற்றன.... அவர், தளவாயோ அல்லது இளவரசரோ தன்னை வரவேற்பார்கள் என்று எதிர்பார்த்தது தவறாகிவிடவில்லை. ஆனால், எதிர்பார்த்ததற்கும் அதிகமாகவே அவருக்கு பெரும் வரவேற்பும், தகுதியளிப்பும் இருந்தது. பங்குத்தந்தை பௌச்சட்டைக் கண்டதும், இளவரசர் எழுந்துநின்றதுடன் மட்டுமல்லாமல், வணக்கமும் வைத்தார். இதுபோலத்தான்

மரியாதைக்குரியவர்கள் தங்கள் எஜமானருக்கும், பொதுமக்கள் தங்கள் பிரபுக்களுக்கும் வணக்கமுறையை செய்கின்றார்கள். இரண்டுகைகளையும் குவித்து, முன்னந்தலையருகில் கொண்டு வருகின்றார்கள். பங்குத்தந்தை பௌச்சட், தனது வழக்கத்தை இங்கும் கடைப்பிடித்தார். பதில் மரியாதையாக இளவரசருக்கு வணக்கம் வைத்தார். பின்பு, கைகளை விரித்தபடி, எதிர்கொண் டழைப்பதுபோல இளவரசரை நோக்கிப்போனார். இளவரசர், தனக்குப் பக்கத்திலேயே ராஜகுடும்பத்தினர் மட்டுமே அமரும் இருக்கையில், சமயப்பணிப் பரப்பாளரை அமர்த்திக்கொண்டார். அது, ஒருவர் மட்டுமே அமரக்கூடிய அளவில் குறுகலானது. அதில், இளவரசரும் சமயப்பணிப் பரப்பாளரும் அமர்ந்திருந்தனர். தனக்குப் பக்கத்தில் அவரை அமர்த்திக்கொள்வதற்காக இளவரசர் குறுகி அமர்ந்தார். பங்குத்தந்தை பௌச்சட் கால்களைத் தொங்கப்போட்டபடி சுகமாக அமர்ந்திருந்தார்.

(பக்.463) யாராக இருந்தாலும், இந்த நாட்டின் பழக்க வழக்கங்களை அறிந்துவைத்திருந்தால், அவர்களுக்குக் கிடைக்கும் வரவேற்பு அலாதியானதுதான். இல்லாவிட்டால், மண்ணின் மைந்தர்களால் இயற்கையாகவே வெறுத்தொதுக்குதலுக்கு ஆளாகநேரிடும். குறிப்பாக பிராம ணர்கள், கௌரவமான வரவேற்பை இந்தச்சந்திப்பின்போது, பங்குத்தந்தை பௌச்சட்டுக்கு வழங்கினார்கள். அரசசபை முழுவதும் ஐநூறுக்கும்மேற்பட்ட மக்கள் குழுமியிருந்தனர். அவர்களில் பெரும்பாலானோர் பிராமணர்கள். அதைக்கண்டு பங்குத்தந்தை பௌச்சட் மலைத்துப் போனார். ராஜகுடும்பத்தினர் மட்டுமே அமரும் இருக்கையில், பங்குத்தந்தை பௌச்சட் அவ்வாறு அமர வைக்கப்பட்டது, அவர்செய்தப் பணிகளுக்குப் புகழ்ச்சி தெரிவிக்கின்றப் பாராட்டு ஆகும். அதன் பிறகு பங்குத்தந்தை பௌச்சட், இந்த நாட்டி லிருக்கும் குடிமக்களுக்கு புனித வேதவிதிகளை எடுத்துரைக்க, தான் வடக்கிலுள்ள வல்லமைமிக்க நகரமான ரோமிலிருந்து வந்திருப்பதாக, அறிவிப்பு செய்தார். பலஆண்டுகளாக தீரமிக்க நடவடிக்கைகளையும், எதிரிகளுக்கு பாடம்புகட்டுவதுபோல பல வெற்றிகளையும் பெற்றிருந்த இளவரசரைக் காண, பங்குத்தந்தை பௌச்சட்டுக்கும் ஆவல் இருக்கவே செய்தது. அத்துடன் இளவரசரிடமும் அவரது அமைச்சர்களிடமும் கிறிஸ்தவ சமூகத்துக்கானப் பாதுகாப்பைக்கோரும் வேண்டுகோளும் அவரிடமிருந்தது. ஒரு அரசனின் பணிகள் கடமைதவறாமல், தன் குடிமக்களைக் காப்பது எனும்சட்டத்தின் அடிப்படை விதிகளில் ஒன்றான முன்கணிப்பு, பங்குத்தந்தை பௌச்சட்டால் மிகச் சிறப்பாகக் கணக்கிடப்பட்டது. அந்தவகையில் குடிமக்களும்

இறையாண்மையை விட்டுக்கொடுக்காத கீழ்ப்படிதலை மேற்கொள்வார்கள். முழுகாப்புடன் அவருக்குக் கட்டுப்பட்டிருப்பார்கள். மெய்ப்பற்று இருக்கும்.

தான்வணங்கும் கடவுள், மிகுந்த சக்தி வாய்ந்தவராக இருப்பதால், காலத்தால் செய்யும் பணிக்கு, மிக உயர்ந்த கௌரவங்களுக்குப் (பக்.464) பொருத்தமானவரை, வெகுதூரத்திலிருந்து பயணம் மேற்கொள்ளச்செய்து, யார் தன்னை அறியாதிருக்கின்றாரோ, அவர்களுக்குத் தன்னை அறிமுகம் செய்ய, தங்களை அனுப்பியிருக்கின்றார் என இளவரசர், பங்குத்தந்தை பௌச்சட்டிடம் பதிலளித்தார். பங்குத்தந்தை பௌச்சட் தன்னுடன் எடுத்து வந்திருந்தப் பரிசுப்பொருட்கள் எல்லாமே, ஒளிவுமறைவற்ற, பார்த்தாலே எளிதில் விளங்கக்கூடியப் பொருட்கள்தான். இளவரசர் ஏற்கனவே பல்வேறு விஷயங்களை அறிந்துவைத்திருந்தார். அறிந்துகொள்ளும் ஆர்வமும் அவருக்கிருந்தது. தற்போது அவர் கொண்டிருக்கும் பல்லடுக்குப் பணிகள், பங்குத்தந்தை பௌச்சட் கொண்டுவந்திருக்கும் பலபொருட்களின் தன்மைகள் மற்றும் சிறப்புகள் குறித்து அறிந்துகொள் வதற்கான நேரத்தை வழங்கவில்லை. பங்குத்தந்தை பௌச்சட் கொண்டுவந்திருக்கும் பொருட்களில் கைத்திறம் மிக்கதாகவுள்ள உலக உருண்டை அவரைக் கவர்ந்திருந்தது. அதுகுறித்துத் (பக்.465) தெரிந்து கொள்ளவும் விரும்பினார். அதனால் நாட்டின் மிக முக்கிய கணியனை, விந்தைமிக்க அவ்வுலக உருண்டை குறித்துவிரிவாக அறிந்துவர இளவரசர் அனுப்பிவைத்தார். அவர் கொண்டுசென்ற பரிசுப்பொருட்களில் சில, அரசியின் மனத்தைக் கவர்வனவாகவும் இருக்கும் என்று பங்குத்தந்தை பௌச்சட் கணித்தார். இளவரசரைவிட்டு சிலநொடிகள் நகர்ந்து, மேன்மைதங்கிய அரசியாரிடம் தன்கைகளாலேயே அப்பரிசுகளை வழங்க எண்ணினார். இளவரசரும் எழுந்துநின்று, 'தந்தையைத் தோட்டத்துக்கு அழைத்துச் செல்லுங்கள். அவர் திரும்பவரும் வரைக் காத்திருந்து அழைத்து வாருங்கள்' என்று சபையிலிருந்த சிலருக்கு உத்தரவிட்டார்.

பரிசுகளின் புதுமைத் திறம் கண்டு, அரசியார் அகமகிழந்து போனார். மிகுந்த மரியாதையுடனும் கௌரவத்துடனும் அவற்றைப் பெற்றுக்கொண்டார். உயர்வானப் பரிசுகள் என்று சான்றளித்தார். அங்கிருந்தப் பரிசுப்பொருட்களில் கண்ணாடியிலான உலகஉருண்டை, காப்புகள், சிப்பிகளால் செய்யப்பட்ட சேவல் போன்றவற்றை வெகுவாக ரசித்தார். அவற்றிலிருந்து கண்களை அகற்ற அவரால் முடியவில்லை. அதையடுத்து அரசியார், பங்குத்தந்தைக்கு நன்றி சொல்ல விரும்பினார். அதனை, அவரை

எல்லாவகையிலும் கௌரவித்து, அவரது கோரிக்கைகள் அத்தனையையும் நிறைவேற்றித் தரும்படி வெளிப்படுத்தினார்.

தோட்டத்துக்குள் செல்வதற்காக, அரச சபையிலிருந்த சிலருடன் பங்குத்தந்தை பௌச்சட் உள்ளே சென்று மறைந்ததும், அரண்மனையிலும், நகரத்திலும் பரபரப்பானச் செய்திகள் உலவத் தொடங்கிவிட்டன. பங்குத்தந்தை பௌச்சட்டைக் கைதுசெய்து, சிறையில் போட்டுவிட்டதாகப் பரவியச் செய்தி கிறிஸ்தவர்களை உச்சபட்ச சோகத்தில் ஆழ்த்தியது. ....அவர்களின் சோகம் சிலநொடிகளில் சந்தோஷக் களிப்பாக மாறியது. அரசியின் இருப்பிடத்திலிருந்து பங்குத்தந்தை பௌச்சட் வெளியில் வந்ததும் அவரை ஒட்டுமொத்தச் சபையின் சார்பாக வரவேற்ற இளவரசர், ஒரு தூதுவருக்கான மரியாதையைச் செலுத்தினார். எட்டடி நீளமுள்ள தங்கம் மற்றும் வெள்ளியினால் நூற்கப்பட்ட கொசுவத் தலைபாகையை அணிவித்தார். இனிய நறுமணம் கமழும் பன்னீரைத் தூவினார். (பக்,466) பின்னர், பங்குத்தந்தை பௌச்சட் விரும்பும் அனைத்தையும் நிறைவேற்றித் தர, அரசியார் உத்தரவிட்டிருக்கின்றார் என்று அறிவிப்பு செய்தார்.

சமயக் கோட்பாடுகளுக்கு அடங்காமல், கடந்த சில மாதங்களாக,தொடர்ந்து திருச்சபை மீது அவதூறுகளையும், தொல்லைகளையும் கொடுத்துவரும், கொள்கைகளைக் கைவிட்டு விட்ட சிலர் மீது நடவடிக்கையெடுக்க ஒருசில வார்த்தைகளைப் பேசலாம் என்று பங்குத் தந்தை பௌச்சட் நினைத்தபோது, இளவரசரே அவர்களை நாடுகடத்தி விடலாம் என்றார். ஆனால் சமயப்பணியாளர், தனது மேன்மைதங்கிய கடவுளும் எஜமானருமாகியவரின் போதனையால் கிளர்ச்சியுற்று, தனது மதத்துக்கும் சபைக்கும் நன்றியுடையவர்களாக இல்லாமல் பல்வேறு தீங்குகளைச் செய்தவர்களேயாயினும், அவர்கள் எனது குழந்தைகள். அவர்களை அழித்துவிடவேண்டாம் என்றார். இவ்வாறாக, இளவரசர், அமைச்சர்கள் மற்றும் அரசியார் ஆகியோருடனான தனதுசந்திப்பால், சபைக்கு எதிராக அவதூறு மற்றும் பயங்கரக் குற்றச்சாட்டுகள் பேசியவர்களைக் காப்பாற்றியும் மனநிறைவு கொண்டார். எல்லாவகையான உறுதிகளைப் பெற்ற பின்பு, சொர்க்கத்தின் மற்றும் பூமியின் எஜமானர்களைத் துதித்து, அவர்களின் ஆசியை இளவரசருக்காக, பங்குத்தந்தை பௌச்சட் வேண்டிநின்றார். அவர் விரும்பும் ஆசிகளால் இளவரசர் தனது எதிரிகளை வெல்வார் என்று உறுதிகூறினார். பங்குத்தந்தை பௌச்சட்டிடம், 'தங்களை மறக்க மாட்டேன்' என்று வாக்குத் தத்தம்செய்த இளவரசர், மீண்டும் முன்னைப்போலவே வணக்கம் செய்தார். அப்படியே தனது அதிகாரிகளிடம், சிறப்பான அரச

பல்லக்கில் பங்குத்தந்தை பௌச்சட்டை அமர்த்தி, நகர்முழுவதும் உலா வரச்செய்து, அந்த அந்நிய நாட்டின் சமய மருத்துவரை உலகறியச் செய்ய உத்தரவிட்டார்.

பங்குத்தந்தை பௌச்சட்டின் தன்னடக்கம் இந்த சமயத்தில் மிகப்பெரிய சோதனைக்கு உள்ளானது. சமயப்பணியாளரான தனக்கு வழங்கப்பட்ட (பக்.467) பொதுகௌரவத்தை ஏற்பதா... மறுப்பதா... என்ற தயக்கம், அவருக்குள் பெரும்விவாதத்தை உருவாக்கியிருந்தது. பின்னர், தனது இதயத்தை கடவுள்முன்பு சமர்ப்பித்து, இறைவனின் கருணைக்கும் கிறிஸ்தவ மதத்தின் கௌரவத்துக்கும் அவசியமானதுதான் என்று கருதிக்கொண்டார். தலைநகரிலிருந்த குடிமக்கள் அத்தனைபேரும் ஒளிவுமறைவற்று, இளவரசர் கிறிஸ்தவ மதத்துக்கு அளித்திருக்கும் கௌரவத்தை நேரடியாகப் பார்த்தார்கள். தேவைப்படும்போது அவர் பாதுகாப்பார் என்று உணர்ந்தார்கள். அதன்பின்பு, அவர் பல்லக்கில் ஏறி, இந்தியர்கள் நகரத்தின் அனைத்துப்பகுதிகளுக்கும் வாத்தியங்கள் இசைத்தபடி சுமந்துசெல்வதை அனுமதித்தார். ஆடம்பரமான அந்தக்காட்சியைக் காண இசை எண்ணிறந்த மக்களை தெருக்களுக்கு இழுத்துவந்தது. அவர்கள் மரியாதைக் குரிய வகையில் வணக்கம் செலுத்தினார்கள். அவர்களுக்கு இடையில் அந்தப்பல்லக்குக் கடந்துபோனது. கிறிஸ்தவ மதம் இளவரசரால் இழிவாகக் கருதப்படும் மற்றும் பழிப்புக்கு உள்ளாகும் என்று நினைத்திருந்த கிறிஸ்தவ மக்கள், சமயத் திருப்பணிக்குக் கிடைத்தப் பாராட்டு பேரொலியையும் மகிழ்ச்சியான ஊர்வலத்தையும் கண்டு திரண்டுநின்றார்கள். தாங்கள் கிறிஸ்தவர்கள் என்றும் அந்நியநாட்டு சமய மருத்துவரைப் (பக்.468) பின்பற்றுபவர்கள் என்றும் ஓங்கியொலித்தார்கள். இந்த வெற்றிச் சிறப்பு, புதிதாக கிறிஸ்தவத்துக்கு வந்தவர்களின நம்பிக்கையை மேலும் வலுப்படுத்தியது. உருவ வழிபாடு செய்துவந்தவர்களில் பெரும்எண்ணிக்கையிலானவர்கள் கிறிஸ்தவ தீட்சைப் பெறுவதற்கு விண்ணப்பித்தார்கள். திருச்சினாப்பள்ளி நகர் முழுவதையும் பங்குத்தந்தை பௌச்சட்டைப் பல்லக்கில் அமர்த்திச் சுமந்தவர்கள் திருப்திகொள்ளாமல், தலைநகரிலிருந்து பன்னிரெண்டு கல்தொலைவில் அமைந்திருக்கும் அவரது இருப்பிடம்வரை விமரிசையாகக் களிப்புடன் இட்டுச்சென்றார்கள்....

....சமயக்கோட்பாடுகளைக் கைவிட்ட அந்த மூன்றுபேரும் தங்கள் மூர்க்கத்தனத்தைப் பிடிவாதமாகத் தொடர்ந்தனர். அவர்களின் வளைந்துகொடுக்காத் தன்மை அதிகரிக்கவே, பங்குத் தந்தை பௌச்சட், வேறுவழியில்லாமல் பொதுமக்கள்

முன்னிலையில் அவர்களுக்கான தண்டனையை அறிவித்தார்.... இதுபோன்ற கடுமையான நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது இதுவே முதல்முறை.... (பக்.469) ....அதன்பின்பும் ஆறு மாதங் களுக்கும் மேலாக, தங்கள் அடாவடியைத்தொடர்ந்த அந்த மூன்றுபேரில் இரண்டுபேர் பொதுமக்களின் இடித்துரைகளையும் பழித்துரைகளையும் பொறுக்க முடியாது, பங்குத்தந்தை பௌச்சட்டின் காலடியில் ஓடோடிவந்து வீழ்ந்தனர்.... மீண்டும் ஒளிபொருந்தியவர் மீதான நம்பிக்கையைத் தழுவிக்கொண்டனர். அந்த மூன்றாவது நபர், தனது மூர்க்கத்தனத்தை தொடர்ந்தபடியே இருந்தார்....

இந்த விவகாரங்கள் எல்லாம் மகிழ்ச்சியான முடிவை எட்டிய தருணத்தையடுத்து, பங்குத்தந்தை பௌச்சட்டின் உடல்நிலை, மிக மோசமான சூழ்நிலைக்குள் ஆழ்ந்துகிடந்தது. அதிலிருந்து அவர் மீளவேயில்லை. அந்த நிலையில்தான், மீண்டும் அவரை ஷெர்ரீனில் சந்தித்தேன். அங்கே ஒருநாள்தான் தங்கினேன். மறுநாள், அங்கிருந்து ஆவூருக்குப் புறப்பட்டேன். ஒருநாள் பயணத்தில் ஆவூர் போய்விடலாம். பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு முன்பு, பங்குத்தந்தை பௌச்சட் மதுரைத் திருச்சபைக்கு வந்தபோது, சமயப் பணிப்பரப்பாளர்கள் எல்லோரும் ஒருவித பீதியுடனேயே இருந்தனர். அவர்கள் இரவுநேரம் தவிர, மற்ற நேரங்களில் கிராமங் களுக்குள் புகமுடியாது.... ஆனால் அந்தக்காலகட்டத்திலிருந்து எல்லாமே மாறிவிட்டது. இப்போது எங்களால் பகலிலேயே ஆவூருக்குள் போக முடிவது மட்டுமல்லாமல், பக்கத்து நகரத்தின் கிறிஸ்தவர்கள் அத்தனைபேரும் ஒன்றுகூடி, வாத்தியங்கள் இசைத்தபடி ஊர்வலமாக வரவேற்கின்றனர். அந்தச்சூழலில் ஆனந்தக்கண்ணீர் என் கண்களிலிருந்து சொரிகின்றது.......

(பக்.470) .....ஆவூர் மதுரையைப் பொறுத்தவரை, மிக முக்கியமானத் திருச்சபையாக ஆகியிருந்தது. தலைநகருக்குப் பக்கத்தில் அது அமைந்திருந்ததால் மட்டுமல்ல, அதைச்சார்ந்து இருபத்தொன்பது ஆலயங்கள் இயங்கிவந்தன. முப்பதாயிரத்துக்கும் அதிகமானக் கிறிஸ்தவர்கள் அவற்றுடன் இணைந்திருந்தனர்... அவற்றில் நான்கு, உயர் சாதியினருக்கான ஆலயங்கள்... மண்ணால் கட்டப்பட்ட அவை வைக்கோலால் வேயப்பட்டவை. ஆனால் சுத்தமாகவும் மிக அழகாக ஒப்பனை செய்யப்பட்டதுமாக, அணி செய்யப்பட்டிருக்கின்றன. மிக விரைவிலேயே கல்லாலான ஆலயம் குறைந்தபட்சம் ஒன்றாவது கட்டிவிடவேண்டுமென்று ஆவல் கொண்டிருக்கின்றோம். (பக்.471) அது உருவ வழிபாடு செய்யப்படும் கோவிலுக்கு இணையாக, ஒருவேளை அதைக்காட்டிலும் சிறப்பாகக் கட்டிவிடவேண்டும். அது,

அத்தனைச்சீக்கிரம் நடந்துவிடக்கூடியதாக இருக்காது. கடவுள் சித்தமிருந்தால் ஐரோப்பாவிலுள்ளப் பெருந்தன்மைக் கொண்ட ஒரு நபர், இந்த நற்காரியத்துக்காக உதவினால் கூடிவரலாம். அதுபோலானதோர் கட்டிடம் நமது மதத்தை முன்னெடுத்துச்செல்ல பெரும் உபாயமாக இருக்கும். ஆவூரில் இதன் மூலமாக நமது முன்னெடுப்பை நிலைநிறுத்தலாம்.

பங்குத்தந்தை பௌச்சட் இந்தக்கிராமத்துக்கு வந்தபோது, அதுவொரு சிறுகிராமம்.... இன்று அது, சாம்ராஜ்ஜியத்தின் மிகமுக்கியமான ஒரு நகரமாக ஆகியிருக்கின்றது....

(பக்.473) ...அடிக்கடி நாங்கள் அபாயங்களைச் சந்தித்தவர்களாக இருந்தோம். தினமும் புதுப்புது அடாவடிகள் வந்துகொண்டே இருந்தன. ஆவூரில் வசித்தக் கொஞ்சகால இடைவெளிக்குள் மூன்றுமுறை காட்டைநோக்கி ஓடியிருக்கின்றோம். அங்கே ஆலயத்தின் ஆபரணங்கள், நமது புத்தகங்கள் எல்லாவற்றையும் முன்னமே எடுத்துக்கொண்டு போயிருந்தோம்.

(பக்.475)... கடிதத்தொடர்பு மிகவும் அரிதாக ஆகியிருந்தது. அதை மேற்கொள்வதும் கடினமாக இருந்தது. நாம் ஐரோப்பியர்கள் என்பதைக் கண்டுபிடித்துவிடுவார்களோ அல்லது போர்த்துக்கீசுடன் தொடர்பில் இருக்கின்றோமோ என, உள்நாட்டு மக்கள் ஏதேனும் சந்தேகம் கொள்வார்களோ எனும் அச்சம் இருக்கின்றது. இந்த சந்தேகத்தின் அடிப்படையில், ஒன்றுக்கு மேற்பட்ட முறை துன்புறுத்தலுக்கு ஆளாகியிருக்கின்றோம்.

சீரங்கம், காவிரி ஆறால் உருவாயிருக்கும் ஒரு தீவு. சாம்ராஜ்ஜியத் தலைநகர் திரிசெரா பளி (திருச்சினாப்பள்ளி)க்கு எதிரில் அமைந்திருந்தது. அகில இந்தியாவிலும் அது முக்கிய மானதொரு புகழ்பெற்ற இடமாகும். அங்கிருக்கும் கோவில் ஏழு சுற்றுச்சுவர்களால் ஆனது. இந்தப்பகுதியில் புனிதக்கோவில் என்றும் அது கருதப்படுகின்றது. கடந்த சில ஆண்டுகளாக, கிறிஸ்தவ மதம் அந்தத்தீவில் வேர் விட்டிருக்கின்றது. பங்குத்தந்தை பௌச்சட் அங்கே ஒரு சிறிய ஆலயத்தைக் கட்டியிருக்கின்றார்... அருகிலுள்ள கோவில் பூசாரிகள் இச்சிறு ஆலயக் கட்டிடத்தை எரிக்கும் பெருமுயற்சியில் அடிக்கடி ஈடுபட்டுவந்தனர்....

ஒன்னரை ஆண்டுகளுக்கு முன்னர், பங்குத்தந்தை சைமன் கார்வலோ தன் முயற்சியால் கட்டிய சிறிய தேவாலயம் தன் கண்முன்னே இடிக்கப்பட்டதைக்கண்டு பெருந்துயரமுற்றார். அவ்வாலயம், தஞ்சாவூர் நகரத்துக்கும் புகழ்பெற்ற உருவ வழிபாட்டுக்குக் கோவிலுக்கும் இடையில் அழகாக

நின்றிருந்தது.... (பக்.476) தேவாலயம் இடிக்கப்பட்டக் கேள்வி எழுப்பப்பட்ட போது, இடித்துத் தள்ளியவர்களை கையூட்டு வாங்கிய அமைச்சரொருவர் பாதுகாத்தார்.

கொஞ்ச காலம் கழித்து, திருச்சினாப்பள்ளியில் தங்கியிருந்த பங்குத்தந்தை பௌச்சட் சிலநாட்கள் தன்னுடன் தங்கிக்கழிக்க, எனக்கு அழைப்பு விடுத்திருந்தார். சில ஆண்டுகளுக்கு முன்புவரை அந்தப்பெருநகரத்துக்குள் என்னைப் போன்றவர்கள் நுழைந்தால், எப்போது கைது செய்யப்படுவோமோ என்ற அச்சம் இருந்தது. ஆனால், எப்போது இளவரசர் பங்குத்தந்தை பௌச்சட்டுக்கு பாதுகாப்பு அளித்தாரோ, அதன்பின்புதான் பகல் நேரத்திலும் வந்துபோக முடிகின்றது. வாசல்களில் நிறுத்தப்பட்டிருக்கும் பாதுகாவலர்கள் முன்னைப்போல தொந்தரவு எதுவும் கொடுக்கவில்லை. மாறாக, மரியாதையுடன் வரவேற்று வணக்கம் வைத்தார்கள். பங்குத்தந்தை பௌச்சட் இருப்பிடம்நோக்கி முன்னெடுத்தேன். அப்போது, அந்தப்பெருநகரத்தின் ஒரு பகுதியைக் காணும்வாய்ப்பு கிடைத்தது. அதிகளவிலான மக்கள் நடமாட்டம் இருந்தது. ஆனால் மோசமானக் கட்டிடங்கள்தான் இருந்தன. அவையெல்லாமே மண்ணால் கட்டப்பட்டவை. வைக்கோலால் வேயப்பட்டவை. பங்குத்தந்தை பௌச்சட்டைக் கண்டேன். நல்ல உடல் ஆரோக்கியத்துடன் இருந்தார். அவரைச்சுற்றிலும் பற்றார்வம்மிக்கவர்களும் செறிவார்ந்த சுடர்விடும் ஒளிமிகுந்த கிறிஸ்தவர்களும் பெரும்எண்ணிக்கையில் நிறைந்திருப்பது ஆறுதல் தருவதாக இருந்தது.

(பக்.477) பங்குத்தந்தை பௌச்சட்டுக்கு மனக்கலக்கத்தைக் கொடுத்த, இறுதித்துயரமாக இருந்ததொரு சம்பவம், அழிந்த கோவிலின் மீது அவர் கட்டியெழுப்பிய ஆலய விவகாரம். அந்த இடம், மதுரைத் திருச்சபையின் தலைவருக்குக் கொடையாகக் கொடுக்கப்பட்ட ஒன்றாகும். நாட்டில் அடிக்கடி போர் நடந்துவந்த நிலையில், ஒருபோர் மீண்டும் வெடித்துச் சிதறியது. அப்போது சமயப்பணிப் பரப்பாளர்கள் நகரத்தைவிட்டு வெளியேறும் துயரநிலை உருவானது. அவர்கள் காடுகளுக்குள் ஓடிஒளிந்து, நாட்களைக் கடத்தவேண்டியிருந்தது. சமயப்பணிப் பரப்பாளர்கள் அங்கே இல்லாததைப் பயன்படுத்தி, உருவ வழிபாட்டாளர் ஒருவர், அந்த நிலத்தைக் கையகப்படுத்திக் கொண்டார். அங்கே சிறிய கோவில் ஒன்றைக் கட்டினார். சில ஆண்டுகள் கழித்து, அந்த இடத்தை மீட்டெடுக்கும்நோக்கில், திருச்சபைக்குச் சொந்தமான இடத்திலுள்ளக் கோவிலை அகற்றும்படி பங்குத்தந்தை பௌச்சட் கேட்டுக்கொண்டார். அது, நமது மதத்துக்கு புகழ்தரக்கூடிய கீர்த்திமிக்கச் செய்கையாகும். அதேவேளையில், பரிவுகொண்ட

தொரு செய்கையுமாகும். உருவவழிபாட்டாளர் கடவுளை அப்புறப்படுத்துவதுதொடர்பாக, பல்வேறு கேள்வி களை எழுப்பினார். கிறிஸ்தவர்கள், அங்கிருந்து கோவிலை அகற்றும்படி அவசரப்படுத்தத் தொடங்கினார்கள். பின்னர் அவர்களே, விக்ரகத்தை எடுத்து வேறொரு இடத்தில் எந்தவொரு சடங்கும் இல்லாமல் நிர்மாணித்துவிட்டனர். இதையடுத்து அங்கே, குழுக்குழுவாக மக்கள் பிரிந்துநின்றனர். ஓலங்களும் கூப்பாடு களும் எழுந்தன. ஆனால் புகார் எதுவும் செய்யப்படவில்லை. சொந்தமில்லாத இடத்திலிருந்து ஆக்கிரமிப்பாளர் வெளியேறினார். கோவில் சரிக்கப்பட்டது. அதன் அழிவுகளின்மேல், ஆலயமும் ஒருசிறிய (பக்.478) இல்லமும் கட்டப்பட்டது. அது, திருச்சபையின் சமயப்பணிப் பரப்பாளர்கள் தங்கும் இடமாக ஆனது.

பாகம் II

## (4) பங்குத்தந்தை மார்டின், பங்குத்தந்தை தே வில்லியர்ட்டுக்கு எழுதியக் கடிதம், ஆவூர், 1701.

(பக்.282) ..... சாம்பல் புதன்கிழமையன்று மாலை, கோரமண்டலத்திலிருந்து எனது திருச்சபையின் இலக்குநோக்கிப் புறப்பட்டேன். நானும் சமயப்பணியாளர் சிலரும் ஆற்றின்கரையை அடைந்தோம். அப்போது நள்ளிரவு இருக்கும். அந்த ஆற்றை நாங்கள் கடக்கவேண்டும். இரவு, கூடுதல் இருட்டுடன் இருந்தது. நாங்கள் ஆற்றுக்குள் வழிதவறி இறங்கிவிட்டிருந்தோம். அந்த இடத்தில் நல்ல ஆழம். முகவாய்க்கட்டையையொட்டி தண்ணீர் தளும்பிக்கொண்டு ஓடியது....

சமயப்பணிப் பரப்பாளர்கள், சிலவேளைகளில் ஐரோப்பியர்கள் குடியிருக்கும் பகுதிகளிலிருந்து பயணம்போகும்போது, யாருக்கும் தெரியாமல் இரவில் பயணம்செய்ய வேண்டியிருந்தது. குறிப்பாக, ஹீதர்கள் என்றழைக்கப்பட்ட கடவுள் மறுப்பாளர்கள் கண்ணில்பட்டுவிடாமலிருக்க எண்ணினார்கள். கண்டதும் வசைமாரிப் பொழிபவர்களாக அவர்கள் இருந்தார்கள். பழி கூறுபவர்களாக, எங்களை அவர்கள் என்ன கண்ணோட்டத்தில் பாக்கிறார்கள் என்பதும் எது எங்கள் மதத்தை ஏறிக்கடக்க முடியாதபடி நடத்துகின்றது என்பதும் ஆச்சரியமாக இருக்கின்றது.

ஒருபயணத்தின்போது, இரவின் மிச்சத்தை பாழடைந்த ஒருவீட்டின்முன்பு கடத்தினோம். அந்த வீடு, ஒருகிராமத்தின் நுழைவாயிலில் இருந்தது. குளிர், என்னை வாட்டியது. இருந்தும் ஆற்றைக்கடந்தேன். விளைவு, காய்ச்சல் என்னை அள்ளிக் கொண்டது. என்னுடன் இருந்தவர்கள் பயந்துபோனார்கள்.

குளிர்காயவேண்டும் என்று விரும்பினேன். ஆனால் தீ கொளுத்துவதற்கு பயமாக இருந்தது. வெளிச்சம், ஹீதர்களுக்கு எங்களை அடையாளம் காட்டிக் கொடுத்துவிடுமோ என்று பயந்தோம். ஐரோப்பியர்களைத்தான் அவர்களுக்கு ஆகாதே. இந்தக் காரணங்களுக்காக, மறுபடியும் இரண்டுமணிநேரம் முன்னதாகக் கிளம்பவேண்டியிருந்தது. ஆச்சரியமாக, சோர்வு எதுவும் அண்டவில்லை.

(பக்.283)....மாலைநேரம் அது. நாலைந்துபேர் எங்களுக்கு வலப்பக்கமாகத் தோன்றினார்கள். எங்களைநோக்கி எவ்வளவு விரைவாக வரமுடியுமோ அந்தவேகத்தில் வந்தார்கள். இந்த நாடுமுழுவதும் திருடர்களால் நிரம்பியிருந்தது. எங்களிடம் பறிகொடுப்பதற்கு எதுவுமில்லை. ஆனால் தாக்குதல் நடக்கலாம். எங்கள் பயம் விரைவில் களைந்தது. அவர்கள் கிறிஸ்தவர்களாக இருந்தார்கள். அவர்கள் என்னைப் பார்க்கத்தான் விரைந்து வந்தார்களாம். இறக்கும் தருவாயிலிருக்கும் கிறிஸ்தவப் பெண்ணுக்கு, அதற்கானச் சடங்குகள் செய்யவேண்டுமாம்.... அந்தக்கிராமத்துக்குள் நுழைவது, அத்தனைப் பாதுகாப்பானது அல்ல. கிராமத்தில் பெரும்பான்மையினராக, உருவவழிபாடு செய்பவர்கள் இருந்தார்கள். கிறிஸ்தவர்களின் பெயரைக் கேட் டாலே எதிரிகளாகப் பதறினார்கள். இறக்கும் தருவாயிலிருக்கும் கிறிஸ்தவப் பெண்ணுக்கு அதற்கானச் சடங்குகள் செய்ய, எனது பயணத்தை கூட்டூர் நோக்கித் தொடர்ந்தேன்.

அந்த இடத்துக்கு மதியம்போல சென்றடைந்தேன். அங்கே, போர்த்துக்கீசிய இயேசு சபையின் பங்குத்தந்தை பெர்தோல்டியைக் கண்டேன். திருச்சபை மீது பற்றார்வம் அபரிமிதமாய்க் கொண்டவர்; செம்பணி செய்பவர்; மூத்தவர்; இயற்கை வளம் பொருந்தியவர்....(பக்.284). மதுரை திருச்சபையைச் சுற்றி நாங்கள் அடிக்கடி சந்திக்க நேர்ந்த பயங்கரம், பாம்புகள்; நாகங்கள்; அதை நல்லபாம்பு என்கிறார்கள்.

(பக்.285) கூட்டூரில் அரைநாள்வாக்கில் தங்கினேன். அங்கிருந்துப் புறப்பட்டு, மறுநாள் ஒரு குடியிருப்பின் வழியே கடந்துபோனேன். இரண்டுமாதங்களுக்கு முன்பு, பாண்டிச்சேரிக்குப் போகும்வழியில், அதே குடியிருப்பைக் கடக்கும்போது, இரண்டுசிறுவர்களுக்கும் மரணத்தைத் தொட்டுக்கொண்டிருந்த ஒரு முதியவருக்கும் தீட்சைக் கொடுத்தேன். அந்தக்குடியிருப்பில் வசிக்கும் நான்கைந்துபேர், மதம்மாறும் ஆர்வத்துடன் என்னுடன் பயணித்து, வேறொரு காலனி என்றழைக்கப்பட்ட அருகிலுள்ள கோகேரிக்கு அழைத்துச்சென்றனர்.

புதிய திருப்பணியின் இருக்கையான கூனம்பட்டியில் சமயப்பணிகளை, எனது உச்சபட்ச விருப்பத்துடன் செய்வதற்கு ஆவலாக இருந்தேன். செய்துமுடிக்கவேண்டியப் பணிகளைத் திட்டமிட்டதற்கு முன்பாகவே முடித்துவிட்டு, விரைவிலேயே பங்குத்தந்தை டயஸிடமிருந்து விடைபெற்றேன். முடிக்கப்பட்டு விட்ட பணிகளையடுத்து, மறுநாளின் அழகிய அதிகாலையிலேயே கொள்ளிடக்கரைக்கு வந்துவிட்டேன். ஆற்றில் நீர் கரை புரண்டோடும் காலம், அது. அகன்றுபரந்த ஆற்றில் நீர், கடுமையான வேகத்தில் ஓடிக்கொண்டிருந்தது. அதனை நான் கடந்து கரையேறியபோது, திருச்சினாப்பள்ளியின் இளவரசர் அல்லது கவர்னர் ஜெனரலான தளவாய், தஞ்சாவூர் அரசரின் படைகளை சற்றுமுன்பு வென்ற பேச்சே, எல்லோரிடமும் உரையாடலாக இருந்தது. அதேவேளையில், அரசரின் முதல் அமைச்சரின் மீதான வெறுப்பும் படர்ந்திருந்தது. நமது புனிதமதத்துக்கு எதிரான வெறுப்பைக் கொண்டவராகவும் அவர் இருந்தார். கீழே குறிப்பிடப்பட்டுள்ளவையெல்லாம், அந்தச் சந்தர்ப்பத்தில் என்னிடம் சொல்லப்பட்டவை. இந்த அமைச்சர் பணியமர்த்தப்பட்ட முறையே, அவரது குணநலத்தைப் பறைசாற்றிவிடும். தந்திரத் திறமுடைய அந்த எதிரி, நமக்கு அச்சம்தருபவராகவே இருந்தார்.

*(பக்.286)* தஞ்சாவூர்ப் படைகள், நாட்டின் எல்லாப்பகுதிகளிலும் அச்சந்தருகின்றப் பேரழிவை உண்டாக்கியிருந்தன. அப்படைகளிடமிருந்து நாட்டைப் பாதுகாத்துக்கொள்ளும் கட்டாயத்தில், ஆற்றின் வடகரையில் தளவாய் முகாமிட்டிருந்தார். ஆனால் அவரது முயற்சிகள் எதுவும் அப்படையெடுப்பைத் தடுப்பனவாக இருக்கவில்லை. எதிரிகளிடம் குதிரைப்படையின் எண்ணிக்கை மிக அதிகமாக இருந்தது. அதனால் தளவாய், தனதுபோக்கை மாற்றத் திட்டமிட்டார். ஆற்றைக்கடக்க முடிவுசெய்தார். அந்த இடத்தில் நீரின்போக்கு அதிகமாக இருந்தது. இதனை அவர் மிக ரகசியமாகச் செய்தார். அதன்படி எதிரிகளால், எதிர்கரைக்கு மதுரைத் தளவாயின் படைகள் வந்துசேருவதுவரை எதுவுமே தெரிந்துகொள்ள முடியவில்லை. தாங்கள் இருக்கும் அதேகரையில் எதிர்முகாமின் படைகள் இருப்பதைக்கண்டதும் தஞ்சாவூர் படைவீரர்களுக்கு பயம் பிடித்துக்கொண்டது. தங்கள் நாடு பாதுகாப்பில்லாமல் இருப்பதை உணர்ந்தார்கள். எதிரிப்படையின் இச்செய்கையை எதிர்பாராதத் தஞ்சாவூர் படை சிதறிவிட்டது. தங்களைப் பாதுகாத்துக்கொள்ள ஆற்றைக்கடந்து ஓடுவதைத்தவிர, வேறு வழியிருக்கவில்லை. மனந்துணிந்து அவர்கள் ஆற்றில் இறங்கிவிட்டபோதும், எதுவும் அவர்களுக்கு

சாதகமாக அமையவில்லை. அவர்களின்தேர்வு மிகமோசமாக யிருந்தது. இயற்கையும் அவர்களுக்குக் கை கொடுக் கவில்லை. மலபார் மலைகளில் பெய்தப் பெருமழை ஆறுகளில் கரைபுரண்டு ஓடிவருவது தெரியாமல், உள்ளே இறங்கிய தஞ்சாவூர் படையின் குதிரைகளையும் வீரர்களையும் சுருட்டியெடுத் துக்கொண்டது. தஞ்சாவூர் படையினரின் சீர்குலைவைக்கண்ட தளவாய், மீதமுள்ளவர்களை எளிதாக விரட்டியடித்தார். போர்க்களத்தின் கடுமையெதுவும் இங்கு நடைபெறவேயில்லை. ஆயினும் தஞ்சாவூர் படைகள் முழுவதும் அப்புறப்படுத்தப்பட்டுவிட்டன. இவ்வாறாகக் கிடைத்த முழுமையான வெற்றி, தஞ்சாவூர் சாம்ராஜ்ஜியத்தின் பெரும்பகுதியை தரிசாக்கிவிட்டது.

படைகள் தோற்றோடியதும், தஞ்சாவூர் அரசர் சினத்தின் எல்லைக்கே போய்விட்டார். முதன்மை அமைச்சர் பாலோகி என்ற வாகோஜி பண்டிதர், படைகளைப் பேணிக்காக்காததாலும் வழக்கமாகச் செய்யும் துரோகச் செயலாலும், படைகள் தோல்வி கண்டதாக அவர் கருதினார். உச்சபட்ச அதிகாரம்படைத்த அரசர், முதன்மை அரசரை வெறுத்தொதுக்கினார். போரின் ஒட்டுமொத்தத் தோல்வியும் அவரால்தான் ஏற்பட்டது என்று உறுதியாக நம்பினார். ஆனால் பாலோகி, தன்மீது குற்றம் சுமத்தப்பட்ட நிலையிலும் சற்றும் மனந்தளராது அரசருடனானச் சந்திப்புக்குக் காத்திருந்தார். அந்த வாய்ப்புக் கிடைத்ததும், ‘என் மேன்மையானவரே’ என்று அரசரை விளித்தார். பின்பு, நடுக்கமற்றக் குரலில், ‘இன்னும் ஒருவாரத்துக்குள் தங்களின் எதிரியுடன் நான் சமாதானத்தை மேற்கொள்ளவில்லையெனில், நானாக வந்து என் தலையை சீவிக் கொள்கின்றேன்’ என்று உறுதிசொன்னார். அவர் தனக்குவைத்துக் கொண்ட கெடு மிகக்குறுகிய காலமாக இருந்தது. அரசர் அந்தச் சலுகையை அனுமதித்தார்.

உடனடியாகவே, கூர்நுட்பமுள்ள அந்த அமைச்சர், தனது உதவியாளர்களை அழைத்து, நகரத்திலும் அதன் சுற்றுப்புறத்திலுமுள்ள முதன்மையான வர்த்தகர்களிடமிருந்து கணிசமானத் தொகையை வசூலிக்க உத்தரவிட்டார். மேலும், அவர்கள் பதுக்கிவைத்திருக்கும் அத்தனை உடமைகளையும் பறிமுதல் செய்யவும் உத்தரவிட்டார். தனது உறவினர்களிடமும் நண்பர்களிடமும் அவர்களால் ஈய முடிந்தத் தொகையைக் கேட்டுப்பெற்றார். அரசரின் கஜானாவில் சேர்க்கவேண்டியக் கட்டாயத்திலிருந்த ஒருதொகையையும் அவர் எடுத்துக்கொண்டார். இறுதி யில், குறைந்தபட்சம் ஒரு நான்குநாளில், திருச்சினாப்பள்ளி அரசியை வென்றெடுக்கும் நோக்கில், பெரும்பணமாக 5,00,000 கிரவுன்களைக் குவித்தெடுத்தார். அரசியின் அமைச்சரவை

உறுப்பினர்கள் அத்தனைபேருக்கும் அவர் கையூட்டளித்தார். எல்லாவற்றுக்கும் மேலாக, பணப் பேராசைப் பிடித்த தளவாயின் தந்தையையும் சரிகட்டினார். அவர் தனக்குத்தானே கெடு விதித்துக்கொண்ட ஒருவாரத்துக்குள்ளாகவே அத்தனையையும் சாமர்த்தியமாகச் செய்துமுடித்திருந்தார். திருச்சினாப்பள்ளியின் தளபதி, சம்பவ இடத்தில் இல்லாமலேயே திருச்சினாப்பள்ளிக்கும் தஞ்சாவூர் அரசருக்குமிடையில் அமைதி ஒப்பந்தத்தை நிறைவேற்றிக் காட்டினார். தனது சமயோசிதத்தால் சட்டம்மீறி, வெற்றியை வென்றெடுத்த பாலோகி, அரசரின் மனதில் மீண்டும் இடம்பிடித்துக்கொண்டார். அவரது அதிகாரம் முன்னெப்போதையும் காட்டிலும் அதிகமாக இருந்தது. அவர் இதைச்செய்து முடித்தபின்பு, தனக்கு மேலானோரையும் கிறிஸ்தவர்களையும் கடுமையான அடக்குமுறைக்கு இரையாக்க, தனது அதிகாரத்தைப் பயன்படுத்தினார்.

....இறுதியாக, பல்வேறுவிதமான சோர்வுகளுக்கிடையில் கூனம்பட்டி வந்தடைந்தேன். திருச்சபையின் செழிப்புள்ளப் பேராலயங்களில் ஒன்றாக இருந்த அது, பற்பலப் போட்டிப் பொறாமைகள், மேட்டுக்குடியினரிடம் தொடர்ச்சியாக நடந்துவந்த அதிகாரப் போர்கள் ஆகியவற்றால், ஏறத்தாழ இப்போது அழிந்துபோயிருந்தது. இந்தப்பேராலயத்தை கடந்த மூன்றாண்டுகளாகப் பங்குத்தந்தை கார்வால்கோ, உடல்நலக் குறைவுற்று இருந்தநிலையிலும், தனது சீரிய பராமரிப்பில், வேறெங்கும் இல்லாத அளவில் உழைப்பின் பயனைப் பெற்றுத் தந்திருந்தார்.

ஓராண்டுக்கு முன்புபெய்த மழைதான். மார்ச் மாதம் கடுமையான வெயில் கொளுத்தியது. பெருமெண்ணிக்கையிலான கிறிஸ்தவர்கள் கூனம்பட்டிக்கு வந்துசேர்ந்தனர். அக்கம்பக்கத்திலுள்ளக் குளங்களெல்லாம் காய்ந்துகிடந்தன. இங்குமட்டுமே கொஞ்சம் தண்ணீர் கிடந்தது. இந்தநிலையில் நான் ஏலக்குறிச்சிக்குப் போவதற்காகத் திட்டமிட்டிருந்தேன். ஆனால் கூட்டூரில் கிறிஸ்தவர்களுக்கு எதிராக உருவான அட்டூழியம் என்னைப் போகவிடாமல் தடுத்துவிட்டது.

கூட்டூரில் கிறிஸ்தவர்களுக்கு எதிராக நடத்தப்பட்ட வன்முறை என்னைக் கூனம்பட்டியில் தங்கும்படி செய்துவிட்டது....

(பக்.289) ....இப்போது கூனம்பட்டியின் தண்ணீர் ஆதாரம் முற்றிலுமாக வற்றிவிட்டது. ஏலக்குறிச்சிக்குப் புறப்பட்டுவிடத் துணிந்தேன். ஆனால் புறப்படுவதற்கு முன்பு, முதலில் ஆவூர் சென்று சமயப்பணிப் பரப்பாளர்களிடம் (பக்.290) கலந்தாலோசிக்க

எண்ணினேன். சில குறிப்புகள், எனக்கு மன அமைதியின்மையைக் கொடுத்திருந்தன....

(பக்.293) அங்கிருந்து நான் ஏலக்குறிச்சிக்குப் புறப்பட்டேன். எனது பயணத்தில் இந்த நாட்டின் முதலாவது குடியிருப்பான நந்தவனப்பட்டிக்கு வந்தேன். அங்கே, முன்னர் ஓர் அழகானப் பேராலயம் இருந்தது. கிறிஸ்தவக் குடியிருப்பு ஒன்றும் செழித்திருந்தது. போரில் அந்தப்பேராலயம் முற்றிலுமாக அழிந்துவிட்டது. போர் கிறிஸ்தவர்களை அழித்துவிடுமா....

காட்டின்வழியே சிலநாட்கள் பயணம்மேற்கொண்டு, கொள்ளிடக் கரையை வந்தடைந்தேன். அதைக் கடக்க, சிரமம் ஏதுமிருக்கவில்லை. பின்னர், ஆற்றங்கரை வழியாகவே பயணத் தைத் தொடர்ந்து சிறுகாட்டுக்குள் நுழைந்தேன்.... (பக்.294). கொள்ளிடக்கரையின் வழியாகவே பயணத்தை முன்னெடுத்து, மதியம்வாக்கில் ஏலக்குறிச்சி வந்தடைந்தேன்.

எனது வருகையையொட்டிய மாலையில், கூட்டூரிலிருந்து தகவலாளி ஒருவர், செய்தி கொண்டுவந்திருந்தார். பங்குத்தந்தை பெர்தொல்டி கடுமையான நோய்ப்பாதிப்பால் பார்வை மங்கி, காதுகள் கேட்காத நிலையில் போராடிக் கொண்டிருக்கின்றார் என்றார். பங்குத்தந்தை பெர்தொல்டி கடந்த ஒருமாத காலம் கடுந்தண்டனையாகச் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். அதுவே அவரைப் பாதிப்பில் தள்ளியிருக்கவேண்டும். எனது சக்தியைக்கொண்டு, அவருக்கு அனைத்துவிதமான உதவிகளையும் உடனடியாகச் செய்தேன். அதுவொரு அழகிய பௌர்ணமி இரவு. இடைவிடாமல் காடுகளின்வழியே, எங்கள் பயணத்தைத் தொடர்ந்தபடியே இருந்தோம். எனது வழிகாட்டி பலமுறை பாதையைத் தவறவிட்டார். அதனால் விடிவதற்கு முன்னால் என்னால் கூட்டூருக்கு வந்துசேர முடியவில்லை.... (பக்.295) ....அவருக்கு உதவிசெய்ய பருவத்தே வந்துவிட்டதாகவே கருதுகின்றேன்.... ஒரு மூன்றுநாட்கள்தான். அவர் எல்லாவிதமான வேதனைகளிலிருந்தும் விடுபட்டிருந்தார். அதையடுத்து, அவருக்கு என் உதவி தேவையாக இருக்கவில்லை. எனது அணுக்கம் தேவைப்படும் ஏலக்குறிச்சிக்குத் திரும்பத் திட்டமிட்டேன்....

அடர்ந்தக் காடுகளிலிருந்த பல கிராமங்களின் வழியே எனது பயணத்தைத் தொடர்ந்தபடியிருந்தேன். கிறிஸ்தவ மதம் புக விரும்பும் யாரொருவரையும் கண்டறிய முடியவில்லை. உள்ளூர் திருச்சபையின் பாடங் கற்பிப்பவர்களையும் காணவில்லை. ஆண்டவரின் பெயரில் பாரத்தைப் போட்டபடி, சோர்வுடன்

நடந்தேன்.... (பக்.296) எனது மாவட்டத்தில் பதினான்கு கிராமங்கள் இருந்தன. ஐம்பது இருந்தாலும் எனக்குப் போதாது.

(பக்.297) ஏலக்குறிச்சியிலோ அல்லது அதன் சுற்றுவட்டாரக் குடியிருப்புகளிலோ ஒரு கிறிஸ்தவச் சூத்திரனையோ அல்லது நடுத்தரப் பெருமக்கள் குடும்பத்தையோ காண்பது அரிதாக (பக்.298) இருந்தது. முழுமுற்றிலுமாக அங்கே, பறையர்கள் மட்டுமே இருந்தார்கள்.... எங்கள் முயற்சிகளை எதிர்ப்பதற்கு எந்தவொரு உயர்சாதிச் சூழலுக்கும் வாய்ப்பில்லாமல் போனது. பறையர்கள் தங்கள் கருத்தோட்டங்களில் எங்கள் புனித மதத்தை உரிமையுடன் பயன்படுத்திக் கொண்டனர். இதையடுத்து, ஏலக்குறிச்சியிலிருந்து மூன்றுகல் தொலைவிலிருந்த மற்றொரு குடியிருப்பில் உழைப்பின் பயன், நிறைவாகக் கிடைத்தது.

முகலாயப் படைகளால் வெல்லப்பட்ட கர்நாட்டிக்கின் நவாப், தனக்குத் திறைசெலுத்த மறுத்த சீலைய நாயக்கனை, பல்வேறு வன்வழிகளில் அச்சுறுத்தத் துணிந்துவிட்டார். உடனே முகலாயப் படைகள், ஏலக்குறிச்சி இளவரசரின் சகோதரர் ஆட்சிசெய்யும் அரியலூர் பகுதிக்குள் ஏற்கனவே நுழைந்துவிட்டதாகப் புரளி கிளப்பிவிடப்பட்டது. எங்கள் கிறிஸ்தவர்கள் அச்சத்தின் பிடிக்குள் வீழ்ந்தனர். உடனடியாக அவர்கள் கலைந்துவிட்டனர்.... (பக்.299)....சிலநேரங்களில் என்னிடம் ஒருவார்த்தைக்கூட சொல்லாமல், அவர்கள் ஆலயத்தின் ஆபரணங்கள் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு காட்டின் அடர்ந்த பகுதிக்குச்சென்று தனித்த வாழ்க்கையை மேற்கொண்டார்கள்.... கிட்டத்தட்ட எல்லோருமே குடியிருப்புகளிலிருந்து பறந்தோடினார்கள். அடுத்த நாள் காலை, கொள்ளிடத்தைக் கடந்து பறந்தோடிய அனைத்துக் கிறிஸ்தவர்களுக்கும், 'பயப்படும்படியாக ஆபத்து ஏதுமில்லை' என்ற தகவலை அனுப்பினேன். அதையடுத்து, எனது பேராலயத்தை அத்தனைபேரும் மொய்த்துவிட்டனர்.

மே மாதத்தின் மத்திவரை ஏலக்குறிச்சியில் தங்கியிருந்தேன். காற்றுக்காலம் தொடங்கியிருந்தது. கடுமையானக் காற்று. மெல்லமெல்ல பலம்பெற்ற அது, தூசிப்புயல்போலக் கிளம்பி சூரியனை மறைத்தது. சிலவேலைகளில் நான்கைந்து நாட்கள், சூரியன் காணாமல் போயிருந்தான்.... அந்தநேரத்தில் யாரும் மேற்குநோக்கிப் போவது, அரிதாக இருந்தது. (பக்.300) ஒரு வேளை புயல்வரலாம்....

இந்த உயர்காற்று, இந்திய மேற்குத்தொடர்ப்பி மலைகளிலும், மலபார் மலைத்தொடர்களிலும் அளவுக்கடங்காப் பெருமழை விழவிருப்பதை அறிவிக்கும் முன்னறிகுறியாகும். அம் மேகங்கள்

பொழியும் பெருமழையால் கொள்ளிடம் கரைபுரண்டுவழிந்து மைசூர், மதுரை, தஞ்சாவூர் மற்றும் சோழ மண்டலம் ஆகிய சாம்ராஜ்ஜியங்களைச் செழிப்புறச் செய்கின்றன.

இந்த ஆண்டு முன்னக்கூட்டியே ஆற்றில்வெள்ளம் பெருக்கெடுக்கும் என்று கருதப்பட்டது. சாதாரணக் காலங்களைப் போலில்லாமல், காற்று முன்னதாக வீசத்தொடங்கியிருந்தது. ஆற்றில் தண்ணீர் வரத்தொடங்கியதும் திருச்சபை இல்லாத அல்லது பாடம் கற்றுக்கொள்ள மாணவர்கள் இல்லாத ஊர்களைத்தேடி தெற்குநோக்கிப் போகும் திட்டம் என்னிடம் இருந்தது. ஆனால் அந்தக்காற்று மழையைக் கூட்டிவரவில்லை. ஆறு இன்னும் வறண்டுதான் கிடந்தது. குடிமக்கள் கடும்பஞ்சத்தில் சிக்கித்தவித்தனர்.

இருந்தபோதிலும் வழக்கமான மழைவிழுந்து அது, மலைகளின்வழியே ஓடோடி கொள்ளிடத்துக்கு வந்துசேர்ந்தது. அந்தத்தண்ணீரைத் தேக்குவதற்கு மைசூர் அரசர் இருகரைகளைத் தொட்டு அணைக்கரை ஒன்றை எழுப்பியிருந்தார். அவ்வணைக் கரையில் தண்ணீரைத் தேக்கி, அதிலிருந்து தான்வெட்டியிருக்கும் கால்வாய்கள் வழியே, நீரை மைசூரின் உட்பகுதிக்குச் கொண்டுசென்று செழிக்கச் செய்யலாம் என்பது, அவரது திட்டமாக இருந்தது. அந்தவகையில் தனது மண்ணை வளப்படுத்தி, நல்ல பலனை அறுவடைசெய்து, பொருளாதாரத்தை மேம்படுத்தலாம் என்று திட்டமிட்டிருந்தார் அதன்படி, தனக்கு அடுத்துள்ள இரண்டு சாம்ராஜ்ஜியங்களான மதுரையையும் தஞ்சாவூரையும் அழித்துவிடலாமென்ற எண்ணமும் அவருக்கிருந்தது. செப்டம்பர் மத்தி வரையில் கால்வாய் வறண்டுகிடந்தது.

(பக்.301) மதுரை மற்றும் தஞ்சாவூர் ஆகிய தேசங்களின் இரண்டுஇளவரசர்களும், தங்கள் சாம்ராஜ்ஜியம் செழித்தோங்கு வதில் அதீதப்பற்றார்வம் கொண்டவர்களாக இருந்தனர். மைசூர் அரசரின் இந்தச்செயல்பாட்டைக் கேள்வியுற்றதும் கடும் எரிச்சலுற்றனர். இரண்டுபேரும் ஒன்றுசேர்ந்து, பொது எதிரியைத் தண்டிக்கும் நோக்கில் படைகளைத்திரட்டி, அந்த அணைகரையை இடித்துத்தரைமட்டமாக்க முடிவுசெய்தனர். அதற்கானத் தயாரிப்புகளில் மும்முரமாகியிருந்தனர். தண்ணீரைத் தேக்கி நிறுத்திக்கொண்டால் மற்ற பகுதிகள் என்னவாகும் என்று, நேருக்குநேர் கேள்வி எழுப்பும் திட்டமும் அவர்களிடம் இருந்தது. காலத்தில்பெய்யும் மழை, மிதமாக இருந்தால்மட்டுமே, தாக்குப்பிடிக்கும்வகையில் அந்த அணைக்கரைக் கட்டப்பட்டிருந் தது. அதில் தேங்கும் நீர் கால்வாய்களின் வழியாக ஊர்ந்தோடி, வெட்டப்பட்டதன் தேவையைப் பூர்த்திசெய்ய வகைசெய்யப்பட்

டிருந்தது. ஆனால் நீர்ப்பிடிப்புப் பகுதியில் மழை, திடீரெனக் கொட்டித் தீர்க்க, அதைக்கொள்ளாதக் கொள்ளிடம், கரைபுரண்டு மைசூர் அரசர் இடையில் கட்டியிருந்த அணைக்கரையை உடைத்துக்கொண்டு, மூர்க்கமான விசையுடன் ஓடியது. இந்தவகையில் மைசூர் அரசர் இடையிட்டுத் தடுக்கச்செய்த எதிர்ச்செயலாற்றுக்கு தண்டமாகப் பெரும் செலவீனத்துக்கு உள்ளானார். லாபம் கொழிக்கலாம் என்று நினைத்திருந்தவர் தேங்கிப் போனார்.

கொள்ளிடம் அப்படியேதான் இருக்கின்றது. தளரா ஊக்கத்துடன் நான் அதனைக் கடந்து கூனம்பட்டிக்கு வந்துவிட்டேன். அங்கே, அனுகூலமான நல்லதொரு சந்தர்ப்பத்துக்குக் காத்துக் கொண்டிருக்கின்றேன். தஞ்சாவூர் போகவேண்டும்.. அந்த சாம்ராஜ்ஜியத்தில் கிறிஸ்தவம் கடுமையான முறையில் தாக்குதலுக்கு உள்ளாகியிருக்கின்றது....

### (5) பங்குத்தந்தை மார்டின், பங்குத்தந்தை தே வில்லியர்ட்டுக்கு எழுதியக் கடிதம், மறவா, மதுரைத்திருச்சபைக்கு உள்ளிட்டது, 8 நவம்பர், 1709.

*(பக்.408)* மதுரை மண்ணில் கிறிஸ்தவ மதத்தை நடும்முயற்சியை மேற்கொண்டு, பத்து ஆண்டுகள் ஓடிப்போய்விட்டன. பலன் எதிர்பார்த்ததைவிட இந்த ஆண்டு அதிகமாகவே இருக்கின்றது. அதற்காக, நான்பட்ட பாடுகளும் ஏராளம். உண்மையிலேயே இந்த மண் பலன்தரக் கூடியதாகவே இருக்கின்றது. மறவ நாடு பெரிதானதொரு ராஜ்ஜியம். மதுரைக்குத் திறை செலுத்திவந்த ஒருநாடு. அரசர் இயல்பான ஆட்சியைத் தர விரும்பினாலும், அவரது படைகள் மதுரைக்கு எதிராகத் தலையைக் கொடுத்தபடியே இருந்தன. அதனால் திறையை வசூலிக்க மதுரை அரசு கடும்நடவடிக்கையை மேற்கொள்ள வேண்டியதாக இருந்தது. மறவ அரசர் தனது பிடியை முற்றிலும் தன் கைவசம் வைத்திருந்தார். அவருக்குக் கீழே, பல சிற்றரசர்கள் இருந்தனர். அவரது ஆட்சி மகிழ்ச்சியளிப்பதாக இருந்தது.

அகன்றுபரந்த மதுரைத் திருச்சபையில் உள்ள அரசர்களில், மறவ அரசர் மட்டுமே சமயப் பணியாளர்களை ரத்தம்சிந்த வைத்தவர். பஞ்சமும் கொடியநோய்களும் அச்சந்தருகின்ற பேரழிவை நாட்டில் உண்டாக்கிவைத்தன. பெருமுயற்சியால் அதனைக் கட்டுக்குள்கொண்டு வந்தோம்; பெரும்பாடுபட வேண்டியிருந்தது; நோயாளிகளின் எண்ணிக்கையும் இறந்துகொண்டிருப்பவர்களின் எண்ணிக்கையும் அதிகரித்துக்கொண்டே இருந்தது; ஒருநிமிடம்கூட என்னால் ஓய்வெடுக்க முடியவில்லை.

கொள்ளைகளும் கொலைகளும் சாதாரண நிகழ்வுகளாக இருந்தன. குறிப்பாக, இந்த மாவட்டத்தில்....

*(பக்.409)* மறுநாள் எனது அணுக்கம்தேவைப்பட்ட மற்றொரு இடத்துக்குக் கிளம்பிப் போனேன். நான் வந்துசேர்ந்த உடனேயே, எனது குடிசையும் அங்கிருந்த சிறு ஆலயமும் பதினைந்து திருடர்களால் சூழப்பட்டுவிட்டன....

அவர்களுடன் நான் இரண்டுநாட்கள் தங்கவேண்டியிருந்தது. நாடு, இங்கிருந்து வெகு தொலைவு என்பதும், ஒரு காரணம். குடிமக்களில் பெரும்எண்ணிக்கையினர் நலிவுற்றிருந்தனர்....

*(பக்.410)* கள்ளர்கள் நாட்டுக்குள் இன்னும் அதிக தூரம் முன்னெடுத்துச் செல்லலாம் என்ற திட்டம் இதன்மூலம் எனக்குள் உருவானது. அதற்கான அழைப்பு வந்துவிட்டது. எனது பயணமும் தொடங்கிவிட்டது....

....ஒருவருக்கொருவர் பழிவாங்குவதை இந்தியர்கள் கடுமையாகக் கடைப்பிடிக்கின்றார்கள். ஓரிடத்தில் ஒரு சச்சரவு ஏற்பட்டால், ஒரு பிரிவைச் சேர்ந்தவர்கள் தங்கள் கண்ணைத் தாங்களே குத்தி, வெளியில் இழுத்துக்கொண்டோ அல்லது தற்கொலை செய்துகொண்டோ விடுகின்றனர். அதனை மற்றொரு பிரிவினரில் ஒருவன் செய்ததாகக் குற்றம் சுமத்தி, தண்டனை தருகின்றனர். அல்லது அவனது உறவினர்கள் மீது குற்றம் சுமத்துகின்றனர்....

*(பக்.411)* இந்தக்கொடூரத்தை அவர்கள் தங்கள் குழந்தைகள் மேலும் சுமத்துகின்றனர்.

*(பக்.413)* ....இந்தத்திருடர்கள் நாடுமுழுவதும் தங்கள் ஆளுகையை விரித்திருக்கின்றனர். அவர்கள், தங்கள் தொழிலுக்குத் திறையையோ அல்லது வரியையோ நாட்டை ஆளும் இளவரசருக்குச் செலுத்துவதில்லை. ஒவ்வொரு இரவிலும் தங்கள் காட்டைவிட்டு வெளியே வருகின்றனர். எண்ணிக்கையில் ஐநூறு அறுநூறுபேராக இருக்கின்றனர். அப்படியே புறப்பட்டுச் சென்று, குடிமக்களிடம் அல்லது கிராமத்தில் திட்டமிட்டு பிறர்பொருளைக் கையாடுகின்றனர்; கொள்ளையடிக்கின்றனர்; பறிக்கின்றனர்; கொள்ளையைத் தடுக்கும் இளவரசரின் முயற்சிகள் இதுவரை பயனற்றதாக இருக்கின்றன. ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பு, இளவரசர் தனது அனைத்துப்படைகளையும் திரட்டிக்கொண்டுசென்று அவர்களைத் தடுக்க முயன்றார். அவர்களின் காட்டுக்குள்ளேயே முன்னேறிச் சென்றார். கிளர்ச்சியாளர்களைக் கட்டுப்படுத்த அந்தக்காட்டுக்குள்

ஒருகோட்டையைக்கட்டி, அதற்கு பலத்தப் பாதுகாப்பிட்டு, கொள்ளைமுயற்சியைத் தடுக்கவும் முனைந்தார். ஆயினும் இளவரசரின் பிடியை, அவர்கள் அசைத்தாட்டிவிட்டனர். ஓராண்டுக்குள் அந்தக்கோட்டையை தங்கள் பிடிக்குள் ஆச்சரியப்படத்தக்கவகையில் கொண்டு வந்துவிட்டனர். அங்கிருந்தத் தளவாடங்களையெல்லாம் துடைத்தழித்துவிட்டனர். காவல்படையை அடித்துத் துரத்திவிட்டனர். அந்தக்காடு அவர்களின் நாடாகிவிட்டது.

அந்த நிமிடத்திலிருந்து அவர்கள், ஒட்டுமொத்த மாவட்டத்தின் பயங்கரவாதிகளாக ஆகிவிட்டனர். (பக்.414) இந்த இழிநிலை கடந்த ஐநூறு ஆண்டுகளாக நீடித்திருக்கின்றது.

கடந்த பல ஆண்டுகளாக இதுபோன்ற வெறுத்தொதுக்கும் வழக்காறு நிலவும் நாட்டில், கிறிஸ்தவத்தின் நம்பிக்கையைப் பரவச்செய்வது சற்றே கடினமான ஒன்றுதான். ஆயினும் நான், கணிசமான எண்ணிக்கையில் மாற்றியிருக்கின்றேன். குறிப்பாக, வள்ளியூரில். இந்திய மொழிபேசும் வெள்ளைக் குடியிருப்பு.... சிலஆண்டுகளுக்குள்ளாக போர், பஞ்சம், நோய் உள்ளிட்ட அழிவுகள், நாட்டின் எல்லாத்திசையிலும் பரவியது....

## அடிக்குறிப்புகள்

1. Published in two volumes on the 20th March, 1762 being translation from the letters edifinates et curiused, ecrites des missions & trangers contained in bertrand's la Mission du Madur'e. IV

# பிற்சேர்க்கை - இ

# ஜான் நியூஹாப்,

# கடற்பயணங்கள் மற்றும் பிரேசிலிலும் கிழக்கிந்தியாவிலும் தரைப்பயணங்கள் பாகம் II

(பக்.265) திருவாங்கூர் ராஜ்ஜியத்துக்குக் கிழக்கே, மதுரை ராஜ்ஜியம் அமைந்திருந்தது.... கல்கொளாங் திருவாங்கூரின் பெரிய நகரம். அது, மதுரை நாயக்கர்களுக்குக்[1] கட்டுப்பட்டிருந்தது. அரசரின் பிரதானக் குடியிருப்பு, அங்கே இருந்தது. நிரந்தரமாக, பத்தாயிரம் நெக்ரோக்கள் -நாயர்கள்- அங்கே பாதுகாப்பில் ஈடுபடுத்தப்பட்டிருந்தனர். மதுரை நாயக்கர்கள் எந்நேரத்திலும் தாக்கும் அபாயம் இருந்துகொண்டே இருந்தது. நாயக்கர்களின் அதிகாரம் அச்சம்தருவதாகவும் இருந்தது.

....திருவாங்கூர் அரசர் சிலவகைகளில் பேரரசராக இருந்தார். வேறெந்த மலபார் அரசர்களிடமும் இல்லாத அளவில் பெரிய நிலப்பரப்பு அவரிடம் இருந்தது. அவர் தன்னாட்டை மிகச் சிறப்பாக ஆட்சிசெய்துவந்தார். அவரிடம் மண்டிகல்ஸ் என்றழைக்கப்படும் படைத்தலைவர்கள் பெருமளவில் இருந்தனர். அவருக்கு ஆலோசனைக் கூற புல்லாஸ் என்றபெயரில் அமைச்சர்கள் இயங்கினர். எட்டுவிட்டில் பிள்ளமார் என்றும் அமைச்சர்கள் அழைக்கப்பட்டனர். அண்டை இளவரசர்களைக் காட்டிலும் அவர் உயர்ந்தவர் என்றெல்லாம் சிலர் போற்றிப் பேசுவதுண்டு. ஆனால் இந்த விஷயத்தில், எனது சொந்த அனுபவங்களைக்கொண்டு, நான் முனைப்பான எதிர்நிலையில் இருக்கின்றேன். ஆற்றல்வாய்ந்த மிகப்பெரிய அரசர் என்று, அவரை உயர்த்திப் பேசுபவர்கள் பயபக்தியுடன் அணுகுவது உண்மைதான். ஆனால் யாரும் அவருக்குக் கீழ்ப்படிவது இல்லை. மற்றவர்கள், அவரைப் பேரரசர் நரசிங்காவுக்குத் திறைசெலுத்துபவர் என்று மட்டுமே பார்த்தார்கள்.

## மதுரையின் ஏழு கடற்கரைத் துறைமுகங்கள்

1.தௌதேகொரின் (தூத்துக்குடி), மதுரைக் கடற்கரையின் கடல்துறைமுகங்களில் தலைமையானது. மற்றவை- 2. மண்ணப்பாரா (மணப்பாடு), 3. ஆலந்தலை, 4. விராணிப் பட்ணம்,

5. பொம்மிகியல் (புன்னகாயல்), 6. பேபயர் அல்லது வைபயர் (வைப்பாறு), மற்றும் 7. பெம்பேயர். இந்தக்கிராமங்கள் எல்லாமே பேராலயங்களால் அழகூட்டப்பட்டிருந்தன. அவை போர்த்துக்கீசியர்களால் கட்டப்பட்டவை. குறிப்பாக, அவற்றில் மண்ணப்பாராவும் பெம்பேயரும் முக்கியமானவை. ஆனால் அவையெல்லாம் போதுமானப் பராமரிப்பின்றி அழியும்நிலையில் இருக்கின்றன. ரோம்நாட்டைச் சேர்ந்த சில குருமார்கள் அவ்வப்போது வந்து, கிராமங்களில் பெருந்திரளாகக் குவியும் மக்கள்திரள் முன்பு, உண்மைபேசுங்கள் என்று பிரச்சாரம் செய்கின்றனர். திரளும்கூட்டத்தில் கிறிஸ்தவர்களைக் காட்டிலும் அதிக அளவில் ஹீதர்களே இருக்கின்றனர். ஆண்டுமுழுவதும் தூத்துக்குடி வாசிகள் வெளிநாட்டுப் பொருட்களைப் பயன்படுத்துகின்றனர். கடலோரம் முழுவதும் பெரும்எண்ணிக்கையிலான குடிமக்கள் இருப்பதும் அதற்கொரு காரணம். அவர்களின் தேவையை, கடல்கடந்து கொண்டுவந்து வழங்கினார்கள்.

தூத்துக்குடி திறந்தவெளியான ஓரிடம். கற்கட்டிடங்களால் அழகைச் சுமந்திருந்தது. அங்கே போர்த்துக்கீசியர்களால் கட்டப்பட்ட மூன்று பெரிய தேவாலயங்கள் இருக்கின்றன. தூரக்கடலிலிருந்து பார்த்தாலும் அவை தெளிவாகத் தெரியும். மற்றபடி, நாடு தட்டையாகவும் தாழ்ந்தும் காணப்படும். அவற்றுள் ஒன்றில், மதவணக்கச் சீர்திருத்த நெறிசார்ந்த பயிற்சி முறைகள் நடத்தப்பட்டன. பின்னர் அங்கே, பிரான்சிஸ் துறவிமடம் சார்ந்த கன்னிமாடம் இதே பயன்பாட்டுக்காகப் பொறுத்திக் கொள்ளப்பட்டது.

(பக்.294) டச்சு கிழக்கிந்தியக் கம்பெனி, இங்கே ஒரு தொழிற்சாலையை நிறுவியுள்ளது. அதன் வர்த்தகத்தை தலைமை ஆளுநர் நிர்வகிக்கின்றார். அவருக்கு, ஒரு துணைப்பொறுப்பாளரும் இரண்டு அல்லது மூன்று உதவியாளர்களும், ஒரு ராணுவ அதிகாரியும், அவருக்குக் கீழே, ஒரு படைத்தலைவரும் சில சிப்பாய்களும் அனுமதிக்கப்பட்டிருந்தனர். ஆனால் மதுரை நாயக்கர் அங்கே வேறு எந்த அரண்களையும் கட்டிக்கொள்ள அனுமதிக்க மறுத்துவிட்டார். நான் அங்கே தங்கியிருந்தபோது, தோட்டத்தைச் சுற்றி, செங்கற்களாலான சுவர் ஒன்றைக் கட்டத் தொடங்கினேன். கடவுள் மறுப்பாளர்களின் கண்கள், அதனைப் பொறாமையுடன் பார்த்தன. நான் அவர்களைத் தவிர்த்துவிட்டேன். மேலும், கம்பெனியின் வீட்டை ச் செம்மைப்படுத்தும் பணியில் என்னை ஈடுபடுத்திக் கொண்டேன். வீட்டின் உச்சியில் அவர்கள் கொடியை கடலிலிருந்து பார்த்தால், தெளிவாகத் தெரியும் வண்ணம் பறக்கவிட்டேன்.

இந்த இடத்தை டச்சுக்காரர்கள், எந்தவொரு எதிர்ப்புமில்லாமல் போர்த்துக்கீசியர்களிடமிருந்து எடுத்துக்கொண்டனர். தூத்துக்குடியில் மணற்பரப்பிலிருந்து ஐந்தடி ஆழத்தில் நல்ல சுவையானத் தண்ணீர் கிடைத்துவந்தது.

நரசிங்காவின் சாம்ராஜ்ஜியத்துக்கு தூரமில்லாமல், தூத்துக்குடியிலிருந்து மூன்று கல் தொலைவில் ரேமாநகோர் பாறைகள் அமைந்திருந்தன. அந்த இடம் புன்னக்காயல் கிராமமாகும். அங்கே முன்னர், போர்த்துக்கீசியர்கள் ஒரு கோட்டையும், நாற்பது வீரர்களைக்கொண்ட காவல்படையையும் நிர்மாணித்திருந்தனர். அங்கிருந்து இருமூன்று கல்தொலைவில் பிராமணர்களின் உருவவழிபாட்டுக் கோவில் திரிசாந்துரி (திருச்செந்தூர்) அமைந்திருந்தது. அங்கிருந்தக் கோவில் குருக்கள், செவிகொண்டு கேட்கமுடியாத வார்த்தைகளை அடிக்கடி போர்த்துக்கீசியர்களைநோக்கி வீசத்தொடங்கினார். இந்த வார்த்தைகளால் தூண்டிவிடப்பட்ட அக்கம்பக்கத்து குடி மக்கள், அருகிலிருந்த புன்னக்காயலுக்குள் புகுந்தனர். அதாவது, நரசிங்கரின் படகாஸ்கள், கிறிஸ்தவர்களை விரட்டியடிக்க, ஒரு ரகசிய உடன்பாட்டை செய்திருந்தனர். அதன்படி போர்த்துக்கீசியர்கள் கோட்டைக்குள் வெடிமருந்துகள் வைத்திருக்கின்றனர் என்ற தகவலைப் பொய்யாகப் பரவவிட்டு, புன்னக்காயலுக்குள் புகுந்தனர். போர்த்துக்கீசியர்கள் எதிர்பாராத இந்தப் போரினால் அதிர்ச்சியடைந்தார்கள். தடுமாற்றமும் தத்தளிப்பும் மட்டுமே அவர்களிடம் நிறைந்திருந்தது. கிறிஸ்தவக் குடிமக்களான பரவாஸ்களுக்கு ராணுவப் பயிற்சி எதுவும் அளிக்கப்பட்டிருக்கவில்லை. அவர்கள் மீன் பிடித்தல், நீச்சல் என்று மட்டுமே வாழ்ந்து பழகிவிட்டார்கள். எதிரிகளை எதிர்த்து நிற்கத் திராணியற்றவர்களாக இருந்தார்கள். அவர்கள் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள அசையும் பொருட்களுடன் படகுகளில் ஏறி, கடலுக்குள் சென்றுவிட்டார்கள். படகாஸ்கள் அவர்களைத் தடுக்க முயன்றார்கள். சிலர் தொடமுடியாத தூரங்களுக்குப் போய் விட்டார்கள். சிலர் கடற்கரையின் வேறுபகுதிகளுக்குத் தப்பிவிட்டனர். மீதமுள்ள பலர் எதிரியிடம் கருணைவேண்டி நின்றனர். அச்சந்தருகின்ற அழுகுரல்கள் போர்த்துக்கீசிய துறைமுகத் தில் உதவி கேட்ட வண்ணமிருந்தன. அந்தோணி கிருமினாலிஸ் பரவாஸ்களைக் காப்பாற்றுவதில் துணிச்சலாக ஈடுபட்டார். ஆனால் அவரை, படகாஸ்கள் கொன்றுவிட்டனர். அவர்களுடன் முகம்மதியர்களும் இருந்தனர்.

புனிகாயில் அல்லது பொம்மேகாயலிலிருந்து மிக முக்கிய நகரமான புத்தனம் தூரத்தில் இல்லை. அதையடுத்து, பெம்பேயர்

அல்லது பெம்பியர், காலேகுறி, பேதல், நியானங்கோர் அல்லது நேமாநகோரி ஆகியவை அமைந்திருந்தன. அடுத்தது, நாகப்பட்டிணம் சோழ மண்டலக் கரையில் உள்ள முதல் எல்லை. ஆனால் அந்தக்கடற்பகுதியின் முதன்மை நகரமாக பெரிய பட்டிணம்தான் இருந்தது. அது, மறவர்களின் (பக்.295) தலைநகரத்துக்கு அருகில் இருந்தது. மலைகளில் ஓடிஒளிந்து கொள்ளும் காட்டுமிராண்டிகளான அவர்கள் திருட்டைச்செய்யும் தலைமுறைகளைக் கொண்டவர்கள். பெரியபட்னம் பேராலயத்தின் இயேசு சபை சமயப்பணிப் பரப்பாளர்கள், முன்னர் அவர்களைக் காட்டுமிராண்டித்தனத்திலிருந்து மீட்டெடுக்க பற்பல பிரயத்தனங் களை செய்தனர். ஆனால் பெரும்பாலானவர்கள் மறுபடியும் தங்கள் பழைய தொழிலுக்கே திரும்பிவிட்டனர். நாகப்பட்டிணத்துக்கு நேர்எதிரே அமைந்துள்ள மற்றொரு கடற்கரை கிராமத்தின் குடிமக்கள் அத்தனைபேருமே குணநலம்மிக்க கிறிஸ்தவர்கள்.

## முறைகள் மற்றும் வழக்கங்கள்

இந்தப்பகுதிகளில் வசிக்கும் குடிமக்கள் யாவரும், அடர்கருப்பாகவும் வலிமைமிகுந்தவர்களாகவும் இருந்தார்கள். அவர்கள் சூழ்ச்சிமிக்கவர்களாக, வஞ்சகம் செய்பவர்களாகவும் கருதப்பட்டார்கள். மனைவியர் எண்ணிக்கையை சிறியளவில் கொண்டிருக்கின்றார்கள். ஆனால், மனைவியல்லாத வேறு பெண்கள் இரண்டு அல்லது மூன்றுபேருடன் தொடர்பு கொண்டிருப்பதை கௌரவமாகக் கருதினார்கள். அவர்களில் பலருக்கு பதினாறு அல்லது பதினெட்டுக் குழந்தை கள் இருந்தன. ஆண்கள், சொரசொரப்பான ஓரடுக்குப் பருத்தித்துணியை அணிந்தனர். அதனை அவர்கள் உடம்பின் நடுப்பகுதியில் சுற்றியிருந்தார்கள். மற்றொரு துணியை தங்கள் தலையில் சுற்றி யிருந்தார்கள். அதற்கு ருமாரி (உருமால்) என்றுபெயர். பெண்கள் பொதுவாக, வண்ண அச்சுப் பதிக்கப்பட்ட பருத்தித்துணியை ஆடையாக அணிந்தார்கள். வெளியில் செல்லும்போது தங்க மோதிரங்களாலும் வளையல்களாலும் தங்களை ஒப்பனை செய்துகொள்பவர்கள் வீட்டில் இருக்கும்போதோ, அருவருக்கத்தக்க அளவில் இருக்கின்றார்கள். தலைமுடியை, மலபார் பெண்களைப்போல தாங்கணைவாக பின்பக்கத்தில் முடிச்சிட்டுக்கொள்கின்றார்கள். மற்றபடி அவர்கள், அழகிய வடிவமைப்புடன் காணப்படுகின்றார்கள். உயிர்வாழ்தலுக்கு இறைச்சியும் அரிசியும் எடுத்துக்கொள்ளப்படுகின்றது. குடிப்பதற்கு தண்ணீர்தான். மாற்றுவழியில்லாத நிலையில் கடற்கரையிலிருந்து இரண்டு கல் தொலைவிலிருந்து தண்ணீர் கோரிக்கொண்டு வருகின்றனர். வாழ்க்கையின் ஜீவாதாரமாக, முத்துக்குளித்தலும்

*மீன்பிடித்தலும் தொழில்களாக இருந்தன. கணிசமான அளவில் சிலர் நெசவுத்தொழிலில் ஈடுபட்டு, வர்த்தகமும் செய்துவந்தனர். வண்ண அச்சுப் பதிக்கப்பட்ட பருத்தி ஆடைகள், கொலம்பா (கொழும்பு?) வுக்கும், மலபார் கடற்கரைக்கும் அனுப்பப்பட்டன. பருத்தி மற்றும் நார் நெசவுசெய்யும் நெசவாளர்கள் பெருமளவில் அங்கே இருந்தார்கள். பெரும்எண்ணிக்கையிலான மக்கள், பருத்தி ஆடைகளில் வண்ண அச்சுப் பதிக்கும் தொழிலில் ஈடுபடுத்தப் பட்டனர். அவை உன்னதமான ஒப்பனையுடன் இருந்தன. நான் அங்கு இருந்தபோது கவனித்தேன். அந்தவர்த்தகம் சிறப்பாக நடந்துகொண்டிருந்தது. அவர்களை ஊக்குவிக்கவும் செய்தேன்.*

## அரசாங்கம்

*குடிமக்கள், தங்களின் சொந்த நிர்வாகிகளாலேயே நிர்வகிக்கப் பட்டனர். அவர்களை ஒவ்வொரு ஆண்டும், அங்குள்ள டச்சுக் கம்பெனியின் தலைமை நிர்வாகி (கேப்டன்) தேர்வுசெய் வார். அவர், கடல்துறைமுகங்கள் ஏழுக்குமானத் தலைவர். ஒவ்வொரு கிராமமும், நான்கு பேரைப் பரிந்துரைக்கும் உரிமையைக் கொண்டிருந்தது. அவர்களில், மேலாண்மையிடம் கடப்பாடு நிறைந்த இரண்டுபேரை டச்சுக் கம்பெனியின் தலைமை நிர்வாகி பொறுக்கியெடுப்பார். அனைத்துக் குடிமைவழக்குகளும் சம்பந்தப்பட்டக் கிராமங்களிலேயே நடத்தப்பட்டன. அதேவேளையில் குற்றவழக்குகள் தூத்துக்குடியிலுள்ள ஒன்பது பேர்கொண்ட குழு விசாரித்து, முடிவு செய்தது. அதன்தலைவராக, டச்சுக் கம்பெனியின் தலைமை நிர்வாகி இருந்தார். அங்கே மீதமிருந்த போர்த்துக்கீசியர்கள், டச்சுக் கம்பெனிக்கு வரி எதுவும் செலுத்துவதில்லை. அதேவேளையில் மதுரை நாயக்கருக்குச் செலுத்திவந்தார்கள். எனினும், இந்தவரி தலைமை இயக்குநரின் அனுமதி அல்லது அங்கீகாரத்துடன் செலுத்தப்பட்டது. வரிசெலுத்துவதில் பின்னடைந்திருப்போர் விரைவில் செலுத்தக் கட்டாயப்படுத்தப்பட்டார்கள். வரிவசூலிக்கும் அப்பணியை நாயக்கரின் படைவீரர்கள் செய்துவந்தார்கள். நான் இருந்தகாலத்தில் குடிமக்களுக்கும் வசூலிக்க வந்த படைவீரர்களுக்குமிடையில் சச்சரவுகள் அடிக்கடி நடந்துவந்தன. பின்னர், வரிசெலுத்த முடியாத பரவாஸ்களிடமிருந்து நிலைநாட்டப்பட்ட வகைமையில் வரியை வசூலித்தனர். வரி செலுத்த முடியாதவர்களைக் கருணைகொண்டு அணுகவேண்டும் என்று வலியுறுத்தி, வரி வசூலிக்கும் தண்டுத்தலைவர் ஒருவருடன், சில வீரர்களையும் நாயக்கரிடம் அனுப்பிவைத்தேன். நாயக்கர், ஆணையாளர் ஒருவரை சிலவீரர்களுடன் அனுப்பிவைத்தார். நான், சம்பவ விவகாரங்களை*

எடுத்துரைத்து, வரிசெலுத்துவது அத்தனை சாத்தியமில்லை. கடல்துறைமுகங்கள் ஏழுக்குமானத் தொகையை இரண்டு வெள்ளிப் பாத்திரங்களில் பொற்காசுகளாகத் தங்கள் எஜமானர்களுக்கு அனுப்பிவைக்கின்றனர். தங்களுக்குத் தரப்படுவதோ, வெறுமனே அடையாளத்துக்குத்தான் என்று எடுத்துரைத்தேன். நாயக்கர், தங்கத்தால் வேலைப்பாடமைந்த கழுத்துத் துண்டு ஒன்றைப் பரிசாக அனுப்பியிருந்தார். கடல்துறைமுகங்கள் ஏழும், முன்னர் மார்டின் அரசரின் ஆளுமையில் இருந்தன. அவர், தென்காசி அரசிக்குத் திறைசெலுத்துபவராக இருந்தார். அந்த நேரத்தில் பரவாஸ்கள் நகரத்தில் வாழ்ந்துவந்தார்கள். அவர்களின் சேவையைப் போர்களின் போது பெற்றுக்கொண்ட அரசி, அவர்களை நல்லபடியாக நடத்தி, சன்மானங்கள் வழங்கினார்.

ஒருசமயத்தில் பரவாஸ்கள் சிலருக்கும் மூர்கள் சிலருக்கும் சச்சரவு உருவாகிவிட்டது. பரவாஸ்களில் ஒருவரின் மூக்கையும் காதுகளையும் அறுத்து மூர்கள் அனுப்பிவைத்தனர். அச்சம்பவம் பரவாஸ்களைக் கொதித்தெழச் செய்துவிட்டது. அவர்கள் ஆயுதங்களைத் திரட்டிக் கொண்டு பழிவாங்கும் வேகத்தில், மூர்களுடன் போரிடப் புறப்பட்டார்கள். அதன் முதல்படியாக, மூர்களில் பிரபலமான வணிகர் ஒருவரை சிறைபிடித்தனர். பதிலுக்குப் பதிலாக, அவரது மூக்கையும் காதுகளையும் அறுத்து, வீட்டுக்கு அனுப்பிவைத்தனர். இதையடுத்து, மூர்கள் 30,000 பேருக்கும்மேல் ஓரிடத்தில் திரண்டுநின்றார்கள். அங்கிருந்துப் புறப்பட்டு, தூத்துக்குடிக்கு அருகில் முகாமிட்டுக்கொண்டார்கள். மறுபக்கத்தில் பரவாஸ்கள், 5,000க்கு குறைவில்லாமல் திரண்டார்கள். அவர்கள் ஆயுதப்பயிற்சி பெற்றவர்கள். எண்ணிக்கையைக் காட்டிலும் தைரியம் நிறைந்தவர்களாக இருந்தார்கள். மூர்கள் மீது தைரியமாகப் பாயத்தொடங்கினர். அவர்களை அங்கிருந்து விரட்டியடித்தனர். அந்தச்சச்சரவில் மூர்கள் 7,000 பேர்வரை வெட்டி வீழ்த்தப்பட்டனர். எண்ணிறந்தோர் கடற்கரைநோக்கி விரட்டப்படவும் செய்தனர். அவர்கள் உயிர் பிழைக்க படகுகளில் ஏறித்தப்பினர். அவர்களால் கடலுக்குள் வெகுதூரம் செல்ல முடிந்திருக்காது. அப்போது தென்மேற்குக் காற்று பலமாக வீசத்தொடங்கியது. அவர்கள் சிதறிப்போனார்கள். சிதறிய அவர்கள் என்ன ஆனார்கள் என்பது இதுவரைத் தெரியவில்லை. இந்த வெற்றியையடுத்து (பக்.296) பரவாஸ்கள், கடலோரப் பகுதிகளின் எஜமானர்கள் ஆனார்கள். அரசியுடன் உடன்பாடும் செய்துகொண்டார்கள். மூர்கள் கொடுத்துவந்தது போலவே தாங்களும் வரி செலுத்துவதாக உறுதியும் அளித்தார்கள்.

ஆனால் சொன்னதுபோல வரி செலுத்துவது அவர்களுக்கு இயலாததாக ஆகியிருந்தது. இந்தநிலை அவர்களை சொல்லொண்ணாத் துயரத்திற்கு இட்டுச் சென்றுவிட்டது. வரிசெலுத்தாமையையடுத்து சிலர் கைதுசெய்யப்பட்டனர். பலர் அடிமைகளாக விற்கப்பட்டனர். பரவாஸ்களின் பிடி அப்பகுதியில் தளர்ந்தது. அதற்கான விலையை அவர்கள் அதிகமாகவே செலுத்தினார்கள். போர்த்துக்கீசியர்கள், 1490 வாக்கில் தங்கள் மரக்கலங்களுடன் அங்கே காணப்பட்டார்கள். அந்தநேரத்தில் கடந்த நாற்பது ஆண்டுகளாக அப்பகுதியில் வர்த்தகத்தில் ஈடுபட்டிருந்திருக்கிறார்கள் அவர்களின் பலம் பரவாஸ்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. பரவாஸ்கள், தங்கள் பிரதிநிதிகளை கொச்சினுக்கு அனுப்பி, போர்த்துக்கீசியர்களின் பாதுகாப்பை வேண்டினர். பிரதியாக, தாங்கள் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து, கிறிஸ்தவத்தில் நம்பிக்கை வைப்பதாக உறுதியளித்தனர். போர்த்துக்கீசியர்கள் இதனைத் தகுந்த சந்தர்ப்பமாக ஏற்று, உதவ முன்வந்தனர். 1533ஆம் ஆண்டில் இந்தக்கடற்கரையில் அவர்கள் இறங்கினர். அப்படியே கடற்கரைத் துறைமுக நகரங்களின் எஜமானர்களாகவும் ஆயினர். அதையடுத்து, பரவாஸ்கள் அத்தனைபேரும் ஒரேநாளில் தீட்சைப் பெற்றனர். அதன்பின்பு அவர்களுக்கு சோழமண்டலக் கடற்கரைப் பகுதியிலிருந்தும் மலபார் கடற்பகுதியிலிருந்தும் பெரும்நெருக்கடிகள் வரத்தொடங்கின. அவ்விருபகுதிகளுமே பரவாஸ்களின் கீழமையான உழைப்பினால், மேன்மை பெற்றவை. இந்த நெருக்கடிகளைத் தொடர்ந்து இருதரப்புக்கும் தக்கவாறு அமைத்துக்கொள்ளும் வகைமையில், போர்த்துக்கீசியர்கள் தொடர்ந்து அப்பகுதியின் எஜமானர்களாக இருந்துகொள்வது. பரவாஸ்கள் ஆண்டுக்கு ஒருமுறை தகுதிக்கேற்ப குறிப்பிட்டத் தொகையை அவர்களுக்கு வரியாகச் செலுத்துவது. குறிப்பிட்ட நாளில் நடக்கும் முத்துக்குளித்தலில் கடற்பகுதியின் தலைவர் களுக்கு ஒருபங்கை வழங்கிவிடுவது என்று தகவமைத்துக் கொள்ளப்பட்டது. மதுரை நாயக்கர்களின் ஆட்சியின் கீழ், இந்தப்பகுதி உடமையாக வந்தபோது, பரவாஸ்களின் மீதான விசாரணை அதிகாரம் உள்ளிட்ட அனைத்தையும் போர்த்துக்கீசியர் களிடமே விட்டுவிட்டனர். பரவாஸ்கள் மீதான மதம்பரப்பும் உரிமையும் போர்த்துக்கீசியர்கள் 1630 ஆம் ஆண்டுவரையில் தக்கவைத்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் மீது ஆதிக்கம் செலுத்த ரோமானியக் குருமார்கள் ஆளுநர் ஒருவரின் தலைமையில், போர்த்துகீசிய அரசரால் அனுப்பப்பட்டிருந்தனர். அவர்கள் அங்கே அதிக அதிகாரம் செலுத்துபவர்களாக மாறியிருந்தனர். அது

பல்வேறு சர்ச்சைகளுக்கு வித்தானது. பரவாஸ் குடிமக்கள் மதம்மீதானப் பற்றார்வத்தை ஒருமுகநோக்குடன் குருமார்களிடம் காட்டினர். அவர்களும் இதை மூலதனமாக்கி தங்கள் செல்வாக்கையும் அதிகாரத்தையும் பொதுச்செலவிலேயே மேடுறுத்திக்கொள்ளத் தவறவில்லை. அதேவேளையில், கடவுள் மறுப்பாளர்கள் மற்றும் உருவ வழிபாடு செய்பவர்களால் பரவாஸ்கள் அடிக்கடி அச்சத்துக்கு உள்ளானார்கள். சிலவேளை களில் அவர்கள் அத்தனைபேருமே இடம்பெயர்ந்து, அண்டை யிலுள்ளத் தீவுகளுக்குப்போய் தங்கநேர்ந்தது. இந்த நிலையை யடுத்துதான் அவர்கள் போர்த்துக்கீசிய ஆளுநரின் ஆதிக்கத்தின் கீழ், தங்களை செலுத்திக்கொள்ளத் தலைப்பட்டார்கள். அதன்படி, ஒவ்வொரு கிராமத்திலிருந்து இரண்டு நடுநிலையாளர்கள் ஆட்சிசெய்யவும், நீதி வழங்கவுமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இரண்டாண்டுகளுக்கு ஒருமுறை அவர்கள் மாற்றப்பட்டார்கள். வாரத்தில் இரண்டுமுறை அவர்கள் தலைமையிலான சபை கூடும். அனைத்துச் சச்சரவுகளும் சிலநொடிகளிலேயே தீர்க்கப்பட்டுவிடும். குடிமக்களின் செயல்பாடுகளுக்கேற்ப ஆண்டுக்கொருமுறை வரிசெலுத்தத் தீர்மானம் செய்வார்கள். ஆயினும் போர்த்துக் கீசியர்கள் அங்கே எஜமானர்களாக இருந்தார்கள். வரிசெலுத்த இயலாத பரவாஸ்கள் மனைவி, குழந்தைகளுடன் அண்டையிலுள்ள தீவுகளுக்குத் தஞ்சமடையச் செல்வதைப் பார்க்க முடிந்தது. கணிசமான அளவில் வரி தள்ளுபடி அறிவிக்கப்பட்ட பின்பு, அவர்கள் தங்கள் பழைய இடத்துக்கு திரும்பி வருவதையும் காணமுடிந்தது. பின்வந்தக் காலங்களில் பரவாஸ்கள் இப்படித் தீவுதீவாகத் தஞ்சம்புகும் வழக்கத்தைக் கைவிட்டார்கள். அவர்கள் செலுத்தவேண்டியத் தொகையை மூன்று தவணைகளில் செலுத்தும் முறை அங்கே கொண்டுவரப்பட்டது.

மதுரை நாயக்கர்களின் ஆட்சிப்பரப்பில் இருந்த இந்த ஏழு கடற்கரைத் துறைமுகங்களுக்கும் மேற்கில் திருவாங்கூரின் எல்லை இருந்தது. கிழக்கே கடல். வடமேற்கே, தஞ்சாவூர் நாயக்கர்களின் ராஜ்ஜியத்துக்கும் மலபாருக்கு அருகிலுள்ள கன்னியாகுமரிக் கடலிலிருந்து சோழ மண்டலக்கரை வரையிலும் பரவியிருந்தது. கிழக்குக் குடாவின் பரப்பு முழுவதும் அது நீண்டிருந்தது. அல்லது சிலோனுக்கு எதிர்ப்புறத்தில் கன்னியாகுமரியிலிருந்து அது தொடங்கியிருந்தது. அதன்நீளம், ஏறத்தாழ மூன்று எழுபத்தைந்து கல்தொலைவு இருந்தது. அகலம் கிட்டத்தட்ட மூன்று முப்பது கல்தொலைவு. இந்தக்கடற்கரை பொதுவாக, முத்துக்கடற்கரை என்றழைக்கப்பட்டது. தெற்கிலிருந்து வடக்காக, இங்கே பல்வேறு முத்து வங்கிகள் இருந்தன. நாயக்கரின் தலைநகரமும் அவர் தங்கும்

இடமுமாக மதுரை இருந்தது. கொயிலாங் (கொல் லம்) கிலிருந்து வடக்கில் ஐந்துநாட்கள் பயண தூரம். வழியெங்கும் பிரமாண்டமாகக் கட்டப்பட்ட கோவில்கள், கோபுரங்கள் அல்லது உருவ வழிபாட்டு ஆலயங்கள் நிறையவே இருந்தன. அவற்றின் உச்சியில் கலசங்கள் மின்னின. மதுரைக் கடற்கரை முழுவதும் எங்கேனும் புல் வகையோ அல்லது மூலிகையோ அல்லது ஏதேனும் ஒரு தாவரமோ காணுவது, அரிதாக இருந்தது. ஒருவகை பூச்செடிகளும் வீட்டுக்கூரைமேல் படரும் ஒருவகைக் கொடிகளுமே காணப்பட்டன. ருசிமிகுந்த நீரைக்கொண்ட மரங்கள் நிறைந்திருந்தன. கடற்கரையோரத்தில் முயல்களும் கௌதாரிகளும் நிறையக் காணப்பட்டன. முதல்வகையானது, நம்நாட்டின் குழி முயல்களை ஒத்திருந்தன. அவற்றின் இறைச்சி சற்றே கடினமாக இருந்தாலும் ருசி, நம்நாட்டின் குழிமுயல்களின் ருசிக்கு ஈடானதாக (பக்.297) இருந்தது. சிவந்த கால்களையும் வட்டமான அலகையும் கொண்டிருக்கும் கௌதாரிகளின் மாமிசம், மனதுக்குப் பிடித்தமானச் சுவையைக்கொண்டதாக இருக்கின்றது. இங்குள்ள எலிகள், பூனைகளைப்போல பெரிதாக இருக்கின்றன.... அவை நாய்களைப் போல கடிக்கின்றன.... கதவுகளுக்கு கீழேயும் கிட்டங்கிகளிலும் குழிபறித்து, கணிசமான அளவில் வணிகர்களுக்குத் தொல்லைத் தருபவனவாக இருக்கின்றன. விஷம்கொண்ட சர்ப்பங்களும், தவ்விச்செல்லும் உயிரினங்களும் நாடுமுழுவதும் பரவிக் கிடக்கின்றன. அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாதங்களில் மேலைக்காற்று கடுமையாக வீசுகின்றது. அப்படியே அடுத்துள்ளக் குன்றுகளிலிருந்து தூசியை அள்ளிக்கொண்டுவந்து, தரையில் கொட்டுகின்றது. அப்போது உங்களால் கண்களைத் திறந்துபார்க்க முடியாது. நாட்டில் பெருமழை பொழிகின்றது. கன்னியாகுமரி அருகில் இன்னும் அதிகமாகப் பொழிகின்றது. ஆனால் தூத்துக்குடியில், அவ்வளவாக இல்லை. மழைக்குப் பதிலாக, இரவில் உருகலானப் பனி பொழிகின்றது. அப்போது கடுங்குளிர் படர்கின்றது.... சிலவேளைகளில் காற்று, தீ உலைபோல வெப்பமாக வீசுகின்றது.

எண்ணிக்கையில் கணிசமான அளவிலான பல நாடுகளுக்கு, மதுரை நாயக்கர்கள் எஜமானர்களாக இருந்துவந்தனர். அந்நாடுகள் ஒவ்வொன்றையும் தனியியல்புக் கூறுகளுடன்கூடிய ஆளுநர்கள் ஆண்டுவந்தனர். அவர்கள் எல்லோரையும் கவர்னர் ஜெனரல் என்ற ஒருவர் கண்காணித்தார். நான் அங்கிருந்தபோது, பூமாலபல்லிஸ் ஆண்டுகொண்டிருந்தார். பூமாலபல்லிஸ் திருடர்களின் சாம்ராஜ்ஜியமாக இருந்தது. ஆளுநர்கள் தவிர்த்து ஒவ்வொரு கிராமத்திலும் இரண்டு நியாயவான்கள் இருந்தனர். அவர்களுக்குக்

குடிமக்கள் பெரிதும் மரியாதை செலுத்தினர். ஆளுநர்களின் மெய்ப்பற்று, அன்புறுதி, கடமைத் தவறாமை ஆகியவற்றால் நாயக்கர் தன்னைப் பாதுகாத்துக் கொண்டார். மனைவிகளையும் குழந்தைகளையும் மதுரையிலிருந்து ஏழுகல் தொலைவிலுள்ள ஜ்வாலாபதிக் கோட்டையில் வைத்திருந்தார். அவர்களை விதையகற்றப்பட்ட 300 ஆண் பணியாட்கள் காவல் காத்துவந்தனர். உள்ளே செல்வதற்கு நாயக்கரின் பிரத்யேக அனுமதி வேண்டும்.

இந்தப்பகுதியில் மூன்று நாயக்கர்கள் இருந்துவந்தனர். மதுரை நாயக்கர்கள். தஞ்சாவூர் நாயக்கர்கள். தஞ்சாவூரை டச்சுக்காரர்கள் தஞ்சவ்வெர் என்றும், சிலவேளைகளில் தீவேர் என்றும் அழைத்தனர். மூன்றாவதாக, செஞ்சி நாயக்கர்கள். சிலவேளை களில் அவர்களும் செங்கியர் என்றழைக்கப்பட்டனர். நாயக், நெய்க் அல்லது நஜேகா ஆகிய சொற்கள், ஆளுநர் என்பதையே குறிக்கின்றன. திறைசெலுத்துபவர் மற்றும் பிரதிநிதி என்ற பொருளும் இதற்குண்டு. இவர்களின் முன்னோர், முற்காலத்தில் விடியநகர (விஜயநகர), பிஸ்நகர் அல்லது நரசிங்கரின் பிரதிநிதிகளாக மட்டுமே ஆண்டுவந்தனர். பின்னர் அவர்கள், கிளர்ச்சியில் ஈடுபட்டு தங்களுக்கான அதிகாரத்தையும் பட்டங்களையும் உருவாக்கிக் கொண்டனர். மதுரை நாயக்கர் கணிச மானக் காலத்தை தஞ்சாவூர் நாயக்கருடன் போரிடுவதிலேயே செலவிட்டார். அவரிடமிருந்து பல இடங்களைக் கைப்பற்றினார். நானிருந்த காலகட்டத்தில் இருவருக்குமானப் போர் உக்கிர மடைந்திருந்தது. சிலநாட்களுக்கு முன்பு தன்னிடமிருந்து கைப்பற்றியப் பகுதிகளை மதுரை நாயக்கரிடமிருந்து மீட்க, தஞ்சாவூர் நாயக்கர் படைகளை திரட்டி, மூர்க்கமாகப் போரிட்டார். அப்போது, இழந்த பலபகுதிகளை அவர் மீட்டெடுத்தார். இந்த வெற்றியால் மதுரைப் படைகள் மனமுடைந்து போய்விட்டன. மதுரை நாயக்கர், தனது தலைமை ஆளுநரை கொய்லாங்கிலிருந்த என்னிடம் அனுப்பி, கம்பெனியின் உதவியைக் கோரினார். எந்தவொரு பக்கத்துடனும் ஈடுபடுத்திக்கொள்வதில் எங்களுக்கு விருப்பம் இல்லை. கௌரவமாக, அதை நான் நிராகரித்துவிட்டேன்.

### அடிக்குறிப்புகள்

1. The word Nayak in spelt sometimes Nayak and frequently Neyk; the fromer form however, is retained here throught.

# பிற்சேர்க்கை - ஈ

## கல்வெட்டுகள் காலவரிசைப்படியிலானது

1. 1475 தமிழ்; மன்மத, தனுஷ்; சிதம்பரம்; நாகம நாயக்கரால் விலைகொடுத்து வாங்கப்பட்டு பரிசளிக்கப்பட்டது. (331/1913).

2. 1482 தமிழ்; சுபகிரித்; திட்டக்குடி (விருத்தாச்சலம், தென்னாற்காடு); ஒருகிராமத்தில் பல ஆண்டுகளாக நீடித்த இருபிரிவுகளுக்கிடையிலான சச்சரவு நாகம நாயக்கரின் முகவரால் தீர்க்கப்பட்டது தொடர்பானது. (6/1903).

3. 1483 கிரந்தம் மற்றும் தமிழ்; சாகா சம்வத். 1404, சுபகிரித்; விரிஞ்சிபுரம் (வேலூர் வடாற்காடு), சாளுவ நரசிம்ஹதேவா; நாகம நாயக்கரால் கோவிலுக்கு வழங்கப்பட்ட கொடை தொடர்பானது. (48/1887; தென்னிந்தியக் கல்வெட்டு, I, பக்.132, எண் 119).

4. 1484 தமிழ்; சாகா சம்வத். 1406, சௌம்யா (1489) ; திருக்கச்சூர் (செங்கல்பட்டு) ; ந(ர) சிங்கராயா; கிராமத்துக்கு அடிக்கல் நாட்டியதற்காக, அரசருக்கும் நாகம நாயக்கருக்கும் அவரது முதன்மைப் பணியாளர் (முதற்பாவாடை) அளித்த நற்சான்று. கைக்கோளர்கள், நெசவாளர்கள் மற்றும் மற்ற தொழில் வகுப்பினருக்கு கிராமத்தில் விதிக்கப்பட்ட வரி தொடர்பானது. (பாவு ஒன்றுக்கு மாதத்துக்கு கால்பணம் வரியாக விதிக்கப்பட்டது. (318/1909; மெட்ராஸ் கல்வெட்டியல் துறை, 1910 பக். 113.).

5. 1518 தமிழ்; சாகாசம்வத். 1440, ஈஸ்வர; திருப்புல்லாணி-தர்பசயனம்-(ராம்நாட்) ; மகாபலி வானாதிராய நாயக்கரின் சிதிலமடைந்த ஓர் ஆவணம். (113/1903).

6. 1519 கிரந்த; சாகா சம்வத். 1441 பிரமாதின்; ஆனைமலை (மதுரை) ; கிருஷ்ண ராயா; மதுரை ராமாநாதா என்பவரை தனது முகவராகவும் திம்மபூபாவை தனது வாயிற் காப்போனாகவும் குறிக்கின்றது. (455/1906).

7. 1528 தமிழ்; சாகா சம்வத். 14(66), (விஜ)யா (1533) திருப்புல்லாணி; சுந்தரத்தோளுடையார் மகாவலி வானாதிராயரின் சிதிலமடைந்த ஓர் ஆவணம். (109/1903).

8. 1530 தமிழ்; சாகா சம்வத். 1452 மன்மத (1535) ; காளையார் கோவில் (சிவகங்கை, ராம்நாட்): சுந்தரத்தோளுடையார் மகாவலி வானாதிராயர் வழங்கிய நிலக்கொடை. (585/1902).

9. 1532 தமிழ்; சாகா சம்வத். 1454, ஹெவிலம்பி (1537) ; காளையார் கோவில்; மாவலி வானாதிராயரின் நிலக்கொடை (587/1902).

10. 1532 கொல்லம் ஆண்டு 707; திருக்காளூர் (ஸ்ரீவைகுண்டம், தின்னவேலி); மார்த்தாண்ட வர்மன்; கோவிலுக்கு வழங்கியக் கொடை. (சீவெல், 1 பக். 313-14).

11. 1533 தமிழ்; சாகா சம்வத். 145 (5) மன்மத (1535) ; தேவிப்பட்டிணம் (ராம்நாட்) ; சுந்தரத் தோளுடைய மகாபலி வானாதிராயரின் முடிவடையாத ஓர் ஆவணம். (121/1903).

12. 1533 சாகா சம்வத் 1455, சுபகிரித், மகர, பௌர்ணமி நாள் (1543); மதுரை; இரண்டு சகோதரர்களுக்கிடையில் எழுந்த யார் மூத்தவர் என்னும் சச்சரவின் தீர்வுக்கு எழுதிய, தனிநபர் ஆவணம். இளையவரான சின்ன வடவட தும்முசி நாயக்கர், 18 பட்டியின் நாயக்கர்களும் பாளையக்காரர்களும் நிறைந்த சபையில் இளையவராகவும் அவருக்கு, மூத்தவர் ராமராய தும்முசி நாயக்கர் சில நிலங்களை வழங்கவேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. அவர் சில்லவார்களின் தலைவர் என்றழைக்கப்பட்டார். அவருக்கானப் பட்டத்தை வாங்கா அரசர் கொடுத்ததாகத் தெரிகின்றது. (சீவெல்லின் தாமிரப் பட்டயங்கள் தொகுப்பு, எண். 27; பர்கெஸ் பக். 107-8, எண்.20.).

13. 1535 தமிழ்; சாகா சம்வத். 1457 காலாவதி, பிரபவ (1546); களக்காடு (நாங்குநேனரி, தின்ன வேலி): (ச)தாசிவ தேவ-மகாராயா; வித்தலதேவாவின் முகவராக ராமப்ப நாயக்கரை அறிவிக்கிறது. இந்த அரசர் முஸல்மான்களை வென்றதாகவும் எல்லா நாடுகளையும் தனது ஆட்சியின் கீழ் கொண்டுவந்ததாகவும்

சிலோனிலிருந்து திறை பெற்றதாகவும் அறிவிக்கின்றது. (129/1905; மெட்ராஸ் கல்வெட்டியல் துறை, 1915 பக். 60.)

14. 1535 தமிழ்; சாகா சம்வத். 1457, ஜய; திருப்பத்தூர் (ராம்நாட்); வீரப்பிரதாப அ(ச்சு)த்தேவ-மகாராயா; அரசரின் அதிகாரியும் நாகம நாயக்கரின் மகனுமான விஸ்வநாத நாயக்கரின் தகுதியை மெச்சி, வரகுணபுத்தூர் கிராமத்தைப் பரிசாகக் கொடுத்தது. (113/1908, மெட்ராஸ் கல்வெட்டியல் துறை, 1909, பக். 119.)

15. 1535 கிரந்த மற்றும் தமிழ்; சாகா சம்வத். 1457, மன்மத; தென்காசி (சங்கர நயினார் கோவில், தின்னவேலி) ; பாண்டிய ஜதிலவர்மன் என்ற பெருமாள் குலசேகர தேவ இரண்ட கால மேதுத்தா, பழைய காலத்துப் பாண்டியர்களை நினைவூட்டி வழங்கிய நிலக்கொடையின் சேதாரமுற்ற ஆவணம். (525/1909).

16. 1537 தமிழ்; சாகா சம்வத். 1459 காலாவதி, கொல்லம் ஆண்டு. 71 (3), ஹேமலாம்பா; திருக்குறுங்குடி (நாங்குநேரி, தின்னவேலி); வீருப்பிரதாப சதாசிவ மகாராஜா; திருவடி தேசத்திலுள்ள நாட்டாத்துப் போக்கு மாவட்டத்தின் கிராமமான புலியூர்க் குறிச்சியை தானமாகக் கொடுத்தது. கொடுத்தவர், மகாமண்டலேஸ்வர ராஜாதி ராஜா வித்தல ராஜாவின் அலுவலர் அண்ணன் பசவண்ண நாயக்கரின் மகன். (பிற்சேர்க்கை அ, 1906).

17. 1537 (15, அக்டோபர்) சமஸ்கிருதம் மற்றும் கானரீஸ்; சாகா சம்வத். 1459, ஹேமலாம்பி, கார்த்திகா 12. திங்கள்கிழமை; லெபாக்சி (இந்துபூர், அனந்தபூர்) ; வீரப்பிரதாப (அ)சுதயூத்தேவ-மகாராயா; துங்கபத்ரா கரையிலுள்ள வீரேஸ்வரா கோவிலுக்கு வித்த லேஸ்வரா முன்னிலையில் இரண்டு கிராமங்களை வழங்கியக் கொடைத் தொடர்பானது. (572/1912).

18. 1538 தமிழ்; சாகா சம்வத். 914)60 காலாவதி, விளம்பி; திருப்பத்தூர் (ராம்நாட்); வீரப்பிரதாப அச்சுத ராய மகாராஜா; அவரது தகுதியை மெச்சி பெரிய ராமப்ப நாயக்கர் என்பவர் பைரவர் கோவிலுக்கு வழங்கிய நிலக்கொடை (121/1908).

19. 1538 சாகா சம்வத். 1460, நந்தன (1532); அவினாசி (கோயமுத்தூர்) ; அச்சுத ராயா; சிங்கண உடையார் அவினாசி லிங்கம் அறக்கட்டளைக்கு வழங்கிய அரைவேலி நிலம் மற்றும் செல்லங்க சமுத்திரம் என்றழைக்கப்பட்ட தோண்டிய குளம். (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள், 1, பக். 523).

20. 1542 தமிழ்; சாகா சம்வத். 1464, பிளவ, புரட்டாதி 10; திருக்காலக்குடி (திருப்பத்தூர், ராம்நாட்); பெரிய ராமப்ப நாயக்கரின் தகுதியைப் போற்றி, கோவிலுக்கு வழங்கப்பட்ட நிலம். (65/1916).

21. 1543 தமிழ்; சாகா சம்வத். 1465, சுபகிரித், கர்நாடகா, ரோகிணி, வியாழக்கிழமை; குகையூர் (கள்ளக்குறிச்சி, தென்னாற்காடு); விஸ்வநாத நாயக்கரின் அலுவலர்களால் கோவில் மகா பூஜைக்காக சிலவரிகள் தள்ளுபடி செய்யப்பட்டது தொடர்பானது. (99/1918).

22. 1545 தமிழ்; சாகா சம்வத். 1466 காலாவதி, குரோதின்; திருவிடைமருதூர் (கும்பகோணம், தஞ்சாவூர்); சதாசிவதேவ-மகாராயா; ராமராஜ வித்தலதேவா வழங்கிய இரண்டு கிராமங்கள் கொடை. (140/1895).

23. 1546 தமிழ்; சாகா சம்வத். 1467 காலாவதி, விஸ்வாவசு, தனுஷ், வியாழக்கிழமை; கொந்தகை (குந்திபுரா)-(சிவகங்கை, ராம்நாட்); சதாசிவ ராயர்; கொந்தகையின் இருபிரிவினருக்குள் ஏற்பட்ட பிணக்கை, செம்மையாகக் கையாண்டு, தீர்த்துவைத்த அரசரின் முகவர் திம்மப்ப நாயக்கரின் திறமைக்கு, விஸ்வநாத நாயக்கரின் முன்னிலையில் அளிக்கப்பட்ட நற்சான்று தொடர்பானது. (பர்கெஸ், பக். 108-9, எண். 21).

24. 1546 கிரந்த மற்றும் சமஸ்கிருதம்; சாகா சம்வத். 1468, பராபவ, கலியுக ஆண்டு 4447 (4647); மதுரை; மகாமண்டலேஸ்வரா ராமராஜா-திருமலைராய-மகாராஜாவின் குடிவழிமரபுப் பட்டியல். (510/1907).

25. 1546 தமிழ்; சாகா சம்வத். 1468, பராபவ, விருச்சிக, திருவோணம், வெள்ளிக்கிழமை; தேவிகாபுரம் (ஆரணி, வடாற்காடு); சதாசிவதேவ-மகாராஜா; கிருஷ்ணப்ப நாயக்கரின் தகுதியைப் பாராட்டி, சூரப்ப நாயக்கரால் கோவிலுக்கு வழங்கப்பட்ட நெய். (391/1912).

26. 1547 தமிழ்; கொல்லம் ஆண்டு. 722; சுசீந்திரம் (திருவாங்கூர்); பூதல வீர-ராமவர்மன்; வித்தலேஸ்வர மகாராஜாவின் பிறந்தநாளையொட்டி வழங்கிய நிலதானம். (64/1896).

27. 1547 கிரந்த மற்றும் தமிழ்; சாகா சம்வத். 1469, பிலவங்க; கரிவலம்வந்தநல்லூர் (சங்கரன் கோவில், தின்னவேலி); பெருமாள் பராக்கிரம பாண்டியதேவா; நான்காவது ஆண்டு குறித்த முடிவுறாத ஓர் ஆவணம். (247/1908).

28. 1547 கிரந்த மற்றும் தமிழ்; சாகா சம்வத். 146(9), பிலவங்க; கரிவலம்வந்தநல்லூர்; அழகன்-பெருமாள் பராக்கிரமதேவா; ஐந்தாம் ஆண்டின் ஆவணம். மகன் ஐதிலவர்மன் என்ற கோ(நேர்மை)கொண்டான் திருநெல்வேலி பெருமாள். (277/1908).

29. 1549 கனாரீஸ்; சாகா சம்வத். 1471, கிலக, பத்ரபாடா; லெபாக்ஸி; வீரப்பிரதாப சதாசிவ; மகாமண்டலேஸ் வரர் ராமராஜ வித்தலதேவாவுக்கு அளித்த கொடை. (583/1912).

30. 1550 தமிழ்; கொல்லம் ஆண்டு. 725, சௌம்ய; ஆழ்வார்க்குறிச்சி (அம்பாசமுத்திரம், தின்ன வேலி); ராமப்ப நாயக்கரால் பெட்டிகுளத்துக்கு வழங்கப்பட்ட கிராமக் கொடை குறித்தது. கொல்லம் ஆண்டு 736 -ல் விஸ்வநாத நாயக்கரால் வழங்கப்பட்டதாகவும் குறிக்கப்படுகின்றது. (119/1907).

31. 1550 கிரந்த மற்றும் தமிழ்; சாகா சம்வத். 1472, பிங்கல (1557); கரிவலம்வந்தநல்லூர்; ஐதிலவர்மன், பெருமாள் குலசேகரதேவா; நிலக்கொடை; ஆரி-நாட்டிலுள்ள அதிவீர ராமன் மற்றும் கரிவர நல்லூர் ஆகியனக் குறித்தது. (276/1908).

32. 1550 தமிழ்; சாகா சம்வத். 1472, சாதாரண; குடிமல்லூர் (வாலாஜாபேட், வடாற்காடு); சதா சிவதேவ மகாராயர்; குமார கிருஷ்ணப்ப நாயக்கர் மற்றும் சின்ன பொம்மு நாயக்கரைக் குறிக் கின்றது. (417/1905).

33. 1550 தமிழ்; சாகா சம்வத். 1472, சாதாரண; கன்யா; மேலச்செவல் (வீரகேரள-சதுர்வேதி மங்கலம், முல்லைநாடு) (அம்பாசமுத்திரம், தின்னவேலி); வீரப்பிரதாப சதாசிவ மகாராயா; தேவதானக்

கொடைக்கான பட்டயம் மகாமண்டலேஸ்வரரின் முகவரான விஸ்வநாதாவுக்கு வழங்கப்பட்டது. *(599/1916).*

*34. 1550* தமிழ்; சாகா சம்வத். *147(2)*, சாதாரண; கன்யா; மேலச்செவல்; வீரப்பிரதாப சதாசிவ- மகாராயா; விஸ்வநாத நாயக்கரின் முகவர் உடன்தார், கடவுளுக்கு தினமும் உண்டக்கட்டி வழங்குவதற்கு அளித்த வரிவிலக்குத் தொடர்பானது. *(609/1916).*

*35. 1551* தமிழ்; சாகா சம்வத். *(147)3*, விரோதிகிருத; மதுரை; வீரப்பிர(தாப சதாசிவ)தேவ-மகா ராயா; கோவில் விழாக்களுக்காக திம்மப்ப நாயக்கரால் வழங்கப்பட்ட மூன்றுகிராமங்கள் தொடர்பானது. *(559/1911).*

*36. 1551* தமிழ்; சாகா சம்வத். *1473*, விரோதிகிருத; தென்காசி; பராக்கிரம பாண்டியனின் மகன் ஜதிலவர்மனின் *8* ஆம்ஆண்டையொட்டி கோவில் ஊழியரால் கொடுக்கப்பட்ட கொடை தொடர்பானது. *(132/1909).*

*37. 1551* தமிழ்; (கொல்லம் ஆண்டு) *726*. ஆவணி *30*; வீரவநல்லூர் (அம்பாசமுத்திரம், தின்ன வேலி) சேரவான்மாதேவியைச் சுற்றியுள்ள விரிவான நிலங்களை குடிகளுக்கும் படைகளுக்கும் பகிர்ந்து கொடுத்தது தொடர்பானதும், ராமராஜய்ய வித்தலதேவ மகாராஜாவின் முகவர் விஸ்வ நாத நாயக்கர் உழவு, பண்டாரவாடை உள்ளிட்ட தீர்வைகளைக் கட்டியது தொடர்பானது. *(721/ 1916).*

*38. 1552* சாகா சம்வத் *1474*, விரோதிகிருத; அபிராம பாண்டியரின் (வரதுங்க) ஸ்ரீவில்லிபுத்தூர் ஏடுகள்; சூரிய கிரகணத்தின்போது முல்லை நாட்டைச் சேர்ந்த பிராமணர்களுக்கு கிருஷ்ணார்ஜுனபுரம் கிராமத்தை தானமாகக் கொடுத்தது தொடர்பானது. (திருவாங்கூர் தொல்லியல் துறை வரிசை, *1*, பக். *106-14.)*

*39. 1552* தமிழ்; கொல்லம் ஆண்டு. *727*, பரிதாபின், ஆடி *31*, அனுராதா, வெள்ளிக்கிழமை; அத்தலநல்லூர், (அம்பாசமுத்திரம், தின்னவேலி), வித்தலதேவ மகாராஜாவின் உத்தரவின் பேரில் சித்திரா பௌர்ணமி திருவிழாவை ஒவ்வொரு மாதமும் நடத்த அவரது முகவர் ராமப்ப நாயக்கர் நிலம் வழங்கியது தொடர்பானது. *(428/1916).*

40. 1553 கிரந்த மற்றும் தமிழ்; சாகா சம்வத். 1475, பிரமாதின்; சங்கரநயினார் கோவில்; பாண்டிய ஜதிலவர்மன் என்ற குலசேகரதேவாவின் மூன்றாம் ஆண்டின் ஆவணம், ஆரி-நாட்டைக் குறிக்கின்றது. (281/ 1908).

41. 1553 சாகா சம்வத். 1475; சங்கரநயினார் கோவில், குலசேகர பாண்டியா; கோட்டூரிலுள்ள பெண் தெய்வத்துக்கு தனது மூன்றாம் ஆண்டின் நிமித்தமாக வழங்கிய கிராமக் கொடை. (சென்னை மாகாணக் கல்வெட்டுகள், III, பக். 1475.)

42. 1553 தமிழ்; கொல்லம் ஆண்டு. 729; இடைகால் (அம்பாசமுத்திரம், தின்னவேலி) ; விஸ்வநாத நாயக்கரின் மகன் கிருஷ்ணப்ப நாயக்கரால் வழங்கப்பட்ட நிலக்கொடை. தியாகராஜ சுவாமி கோவிலின் புத்துதாரணத்துக்கும் வழிபாட்டுக்கு மானது, அக்கொடை. (467/1919).

43. 1555 தமிழ்; சாகா சம்வத். 1477, கொல்லம் ஆண்டு. 7 (....); வடக்குக்காரக்குறிச்சி (அம்பா சமுத்திரம், தின்னவேலி); கோவிலில் பூந்தோட்டம் அமைக்க கிருஷ்ணப்ப நாயக்கரின் முகவ ரான ஏகாம்பர முதலியார் நிலம்வழங்கியது தொடர்பானது. (530/ 1916).

44. 1557 சாகா சம்வத். 1479; சங்கரன்கோவில்; பராக்கிரம பாண்டியா; தனது 16 ஆவது ஆண்டையொட்டி வழங்கிய கிராமதானம். (சென்னை மாகாணக் கல்வெட்டுகள், III, பக். 1476.)

45. 1557 சாகா சம்வத். 1479, (சாகா சம்வத். 1679?) ; ஈஸ்வர (1557); காரமடை (அவனாசி கோயமுத்தூர்); தேவராஜராசாவின் தளவாய் கிருஷ்ணராஜ உடையார்; பிராமணர்களுக்கு பூசாரிப்பள்ளம் என்ற கிராமத்தை தானமாக வழங்கியது தொடர்பானது. (மேலது, 1, பக். 523).

46. 1558 தமிழ்; சாகா சம்வத். 1480 காலாவதி, கொல்லம் ஆண்டு. 73(5); கல்லிடைக் குறிச்சி (அம்பாசமுத்திரம், தின்னவேலி); கருமான்களுக்கும் கொல்லர்களுக்கும் வீரப்ப நாயக்க அய்யன் வழங்கிய தானம் தொடர்பானது. (113/1907).

47. 1558 கிரந்த மற்றும்தமிழ்; சாகா சம்வத். 1480 காலயுக்தா; கரிவலம்வந்தநல்லூர்; ஜதில வர்மன்; விஸ்வநாதன் மற்றும் அதிவீர ராமன் குறித்தது. (273/1908).

48. 1558 தமிழ்; சாகா சம்வத். 1480, கொல்லம் ஆண்டு. 734, காலயுக்தி; மார்கழி 5, மன்னார் கோவில் (அம்பாசமுத்திரம், தின்னவேலி); ராமராஜதேவ-மகாராஜாவின் முகவர் விஸ்வநாத நாயக்கர். (381/1516).

49. 1560 சாகா சம்வத். 1482, ரௌதிரி; தின்னவேலி; விஸ்வநாத நாயக்கரால் வழங்கப்பட்ட 12 கிராமங்களின் கொடை. கடமைப் பேணுகின்ற கோட்டயம் நாகம நாயுடு மற்றும் மந்தார புத்தநேரி அரியநாயக முதலியார். (சீவெல்லின் தாமிரப் பட்டயம் எண். 10).

50. 1560 சாகா சம்வத். 1482, அன்னியூர் (விழுப்புரம், தென்னாற்காடு); விஸ்வநாத நாயக்கர்; சதாசிவ ராயரின் ஆட்சியின்போது சிவன் கோவிலுக்கு வழங்கப்பட்ட நிலக்கொடைக் குறித்தது. (சீவெல், 1, பக். 209).

51. 1560 தமிழ்; சாகா சம்வத். 1482; அன்னியூர்; வீரப்பிரதாப சதாசிவதேவ-மகாராயா; மகா மண்டலேஸ்வரர் ஸ்ரீரங்கராஜய்யதேவ-மகாராஜாவின் மகன் அல்லய்ய ராமராஜ்ஜியனின் தகுதியை மெச்சி, நாகம நாயக்கரின் மகன் விஸ்வநாத நாயக்கர் வழங்கிய நெசவுக்கான வரிகள் தொடர்பானது. (622/1915).

52. 1561 சாகா சம்வத். 1483, துர்மதி; சோழபுரம் (சிவகங்கை, ராம்நாட்); குலசேகரதேவ அதி வீரராம; அரசரின் 13ஆம் ஆண்டையொட்டி, கோவிலுக்கு கண்காணிப்பாளர் நியமனத்தையும் நிலக்கொடை வழங்கியது தொடர்பாகவும் குறிப்பிடுகின்றது. (சென்னை மாகாணக் கல்வெட்டுகள், II, பக். 1178.)

53. 1562 தமிழ்; சாகா சம்வத். 1483 காலாவதி, கொல்லம் ஆண்டு. 737, துர்மதி; தின்னவேலி; ராமப்பதேவ-மகாராஜா; விஸ்வநாத நாயக்கரின் மகன் கிருஷ்ணப்ப நாயக்கர் வழங்கிய நிலம் தொடர்பானது. (121/1894).

54. 1562 சாகா சம்வத். 1484, சங்கரநயினார் கோவில்; குலசேகரா; 13ஆம் ஆண்டின் கொடை குறித்தானது. (சென்னை மாகாணக் கல்வெட்டுகள், II, பக். 1475.)

55. 1562 தமிழ்; சாகா சம்வத். (1484), துர்மதி, வைகாசி 5; இடைகால்; அச்சுத்தேவ-மகாராயா சதாசிவ தேவா-மகாராயா; கோவில் வழிபாட்டுக்கும் மராமத்துப் பணிக்கும் விஸ்வநாத நாயக் கரின் மகன் கிருஷ்ணப்ப நாயக்கர் நிலம் கொடை வழங்கியது, தொடர்பானது. (494/1916).

56. 1563 தமிழ்; சாகா சம்வத். 1485, குரோதனா (1565) ; கிருஷ்ணாபுரம், (தின்னவேலி); வீரஸ்ரீ-சதாசிவ தேவ-மகாராயா; திருவேங்கடநாத கோவிலுக்கு அரியகுளம் புத்தநேரி என்ற திருவேங்கட நல்லூர், பொட்டைக் குளம், கொடிக்குளம், குந்துகால், சீரமங்கலம், அழிகுடியில் கொஞ்சம் நிலம் என்று பல கிராமங்களை காஸ்யபகோத்திரத்தைச்சேர்ந்த தனது தந்தை விஸ்வநாத நாயக்கரின் பெயரில் கிருஷ்ணப்ப நாயக்கர் வழங்கியது தொடர்பானது. இந்த கிராமங்களெல்லாம் திருவடி தேசத்திலிருந்து விஸ்வநாத நாயக்கரால் கைப்பற்றப்பட்டவை. அதற்காக, ராம ராஜ அய்யனால் அமரநாயகம் என்ற பட்டமும் வழங்கப்பட்டது. (17/1912; சென்னை கல்வெட்டியல் அறிக்கை, 1912, பக். 76).

57. 1564 தமிழ்; சாகா சம்வத். 1486, ரக்தக்ஷின்; திருத்தணி (சித்தூர்); வீரப்பிரதாப சதாசிவ தேவ மகாராயாவின் முடிவுறாத ஆவணம்; சிலோனை கொள்ளையடித்த தாக தருக்குப்பேச்சு. (451/1912; சென்னை கல்வெட்டியல் அறிக்கை, 1912, பக். 76).

58. 1654 தமிழ்ச் செய்யுள்; சாகா சம்வத். 1486, ரக்தக்ஷின்; தென்காசி; அழகன் சிவலவேல் (அதி வீர ராம பாண்டிய); அரியணை ஏறிய ஆண்டு. (509/1909).

59. 1564 தமிழ்; கொல்லம் ஆண்டு. 739, ரக்தக்ஷி, மார்கழி, உத்தரசதா, ஞாயிற்றுக்கிழமை; இடைகால்; விஸ்வநாத நாயக்கரின் மகன் வசவப்ப நாயக்கரின் தகுதியை மெச்சி, சின்ன வசவப்ப நாயக்கரால் தியாகராஜ சுவாமி கோவிலுக்கு நிலம்வழங்கியது தொடர்பானது. (495/ 1916).

60. 1566 தமிழ்; சாகா சம்வத். 1488, (கொல்லம் ஆண்டு) 726 (1550), சாதாரண (1550) ஐப்பசி 20, கிரியாம்பபுரம் (அம்பாசமுத்திரம், தின்னவேலி); தளவாய் ராமப்ப

நாயக்கரையும் அவரது மகன் பெரியப்ப நாயக்கரையும் குறிக்கின்றன. *(473/1916).*

*61. 1567* சமஸ்கிருதம் நாகரி மொழியில்; சாகா சம்வத். *1489,* பிரபவ; கிருஷ்ணாபுரம் ஏடுகள், கிருஷ்ணப்ப நாயக்கரின் வேண்டுகோளுக்கிணங்க திருவேங்கடநாத கோவிலுக்கு வழங்கப்பட்ட எண்ணற்ற கிராமங்கள் பற்றிய பதிவு. *(E.I., IX, pp. 328-42).*

*62. 1568* தமிழ்; சாகா சம்வத். *14(90),* வைபவ; அதன்காசி; ஜதிலவர்மன்; 6 ஆவது ஆண்டின் மகிழ்வையொட்டி, தென்னரை நாட்டிலுள்ள புலியூரில் பட்டாக்கள் மூலம் விற்கப்பட்ட நிலங் கள் பற்றியவை. *(533/1909).*

*63. 1568* தமிழ்; வைப(வ); வழுவூர் (வந்தவாசி வடாற்காடு); சதாசிவதேவ-மகாராயா; சேதமுற்ற ஆவணமொன்று கிருஷ்ணப்ப நாயக்க ராயனைக் குறிப்பிடுகின்றது. *(64/ 1908).*

*64. 1569* கொல்லம் ஆண்டு. *745;* விஜயபாடி (நாங்குநேரி, தின்னவேலி); அய்யனார் கோவிலுக்கு கிருஷ்ணப்ப நாயக்கர் அளித்த கொடைகள் பற்றியது. (சீவெல், *1,* பக். *316).*

*65. 1569* கனராரீஸ்; சாகா சம்வத். *1491,* சுக்ல; கொள்ளேகால் (கோயமுத்தூர்); வீரப்பிரதாப சதா சிவ மகாராயா; ஹட்டிநாட்டுச் சீமையிலுள்ள சிவனசமுத்ரதாஸ் தலாவைச் சேர்ந்த கிராமத்தை தானம் கொடுத்தது. *(15/ 1910).*

*66. 1570* தமிழ்; சாகா சம்வத். *1492,* கொல்லம் ஆண்டு. *745,* ஆனி *30;* பாப்பாகுடி (அம்பா சமுத்திரம், தின்னவேலி); விஸ்வநாத நாயக்கர், கிருஷ்ணப்ப நாயக்கர் மற்றும் வீரப்ப நாயக்கர் ஆகியோரின் முகவர்களான அரியநாயினார்-முதலியார், வீர ராகவ முதலியார் மற்றும் ஸ்ரீகார்யம் ராமப்ப நாயக்கர் ஆகியார் ஆதித்தவான்மா சதுர்வேதிமங்கலத்துக் கோவிலுக்கு கணக்கராக கருமுகிலன் கேரளாதித்ய தேவா நியமிக்கப்பட்டதற்கு நன்றி தெரிவிக்கும் ஆவணம். *(178/ 1916).*

*67. 1571* தமிழ்; சாகா சம்வத். *1493,* க்ஷய *(1566)* ; தேவிகாபுரம்; சதாசிவதேவ-மகாராயா; கிருஷ்ணப்ப நாயக்கர் மற்றும்

சிலரின் தகுதிக்கு வழங்கப்பட்ட பரிசுகுறித்த சேதமுற்ற மற்றும் முடிவடையாத ஆவணம். (403/1912).

68. 1572 தமிழ்; கலியுக ஆண்டு. 4416 (1315), ஆங்கிரச (1572), மார்கழி 9; தாராபுரம் (கோய முத்தூர்); வீரப்ப நாயக்கர்; அரசரின் முகவர் தம்பிக்கு..... லார் பிள்ளை. (147/1920).

69. 1574 தமிழ்; சாகா சம்வத். 1495 காலாவதி, பவ; கோரிப்பாளையம் (மதுரை), முகம்மதியர்களின் மஜ்ஸித்க்குள் உள்ள கற்தூண்; கிருஷ்ணப்ப நாயக்கர் மற்றும் வீரப்ப நாயக்கரால் ஆவணங்கள் உறுதி செய்யப்பட்டது. கணிசமான பகுதியை கூன் (சுந்தர) பாண்டியன் முகம்மதியர்களுக்குக் கொடுத்தது தொடர்பானது. (சீவெல், 1, பக். 292; நெல்சன், பக். 67; 77/1905).

70. 1577 தமிழ்; சாகா சம்வத். 1499, ஈஸ்வர; கிருஷ்ணாபுரம்; ஸ்ரீரங்கதேவ-மகாராயா; காஷ்யப கோத்திரத்தைச் சேர்ந்த தந்தை கிருஷ்ணப்ப நாயக்கரின் குணநலப் பண்புகளைப் போற்றி வீரப்ப நாயக்கர் தாமிரபரணி கரையிலுள்ள திருவேங்கடநாததேவ கோவிலுக்கு வழங்கிய தானம்; திருவடி தேசத்தையும் குறிப்பிடு கின்றது. (16/1912; சீவெல், 1, பக். 310.) சீவெல் இந்தக் கல்வெட்டின் காலத்தை 1578 ஆக குறிப்பிடுகின்றார்.

71. 1578 தமிழ்; சாகா சம்வத். 1500 விக்ரம (1580); ராமேஸ்வரம்; கிழிந்த ஆவணமொன்று விஸ்வநாத நாயக்க அய்யனைக் குறிப்பிடுகின்றது. (98/1903).

72. 1578 தமிழ்; சாகா சம்வத். 1500, கொல்லம் ஆண்டு. 75(3). பாகுதான்யா, வைகாசி 19; சேர்மாதேவி; ஸ்ரீரங்கதேவா-மகாராயா; கோவில் விழாவைத் தொடர்ந்து நடத்துவதற்கு வீரப்ப நாயக்கர் வழங்கிய தானம் பற்றியது. (663/1916).

73. 1581 தமிழ்; சாகா சம்வத். 1503, விக்ரம, ஆடி 2; மதுரை; விஸ்வநாத நாயக்கரின் மகன் வீரப்ப நாயக்கர்; ராமேஸ்வரம் கோவில் கணக்கு வரி, நாயக்கரின் கஜானாவுக்கு வந்து சேர்ந்தது. அந்தக் கோவிலுக்கு 700 பொன் வழங்கியது. (340/1918).

74. 1582 தமிழ்; சித்ரபானு; ராமேஸ்வரம்; விஸ்வநாத நாயக்கர்-வீரப்ப நாயக்கர் அய்யனின் நற்பண்புகளை மெச்சி நிலதானம் செய்யப்பட்டது தொடர்பானது. (97/1903).

75. 1582 தெலுங்கு; சாகா சம்வத். 1505, ஸ்வபானு, மாகா; ஸ்ரீமுஷ்ணம் (சிதம்பரம், தென்னாற்காடு); பெனுகொண்டாவிலிருந்து வீரப்பிரதாப வீரஸ்ரீ ரங்கராய தேவ-மகாராயா; காஷ்யப கோத்திர கிருஷ்ணப்ப நாயனி காருவின் மகன் கொண்டம நானி காரு, போனகிரி பட்டினச் சீமையிலுள்ளக் கோவிலுக்கு வழங்கிய முப்பத்தெட்டுக் கிராமங்கள். (266/1916).

76. 1583 சமஸ்கிருதம் கிரந்த மொழியில்; சாகா சம்வத். 1505, சுபானு; புதுக்கோட்டை (ஸ்ரீவில்லிபுத்தூர், ராம்நாட்) ஸ்ரீவல்லப மற்றும் வரதுங்க ராம பாண்டியன் ஏடுகள். இந்தத்தாமிரப் பட்டயங்கள் பிற்காலப் பாண்டியர் களைப் பற்றிப் பேசுகின்றன. புதுக்கோட்டை கிராமத்தைத் தானம் கொடுத்ததை திருமலை நாயக்கர் ஒப்புதல்அளித்ததைப் பேசுகின்றது. சாகா சம்வத். 1505 ஆம் ஆண்டு ஸ்ரீவல்லப மற்றும் அதிவீர ராம பாண்டியர்களின் முடிசூட்டு விழாவைப் பேசுகின்றன. (7 of Appendix A, 1906; M.E.R, 1906, pp. 71-2; T.A.S, I, pp. 61-88.).

77. 1584 தெலுங்கு; சாகா சம்வத். 1505 காலாவதி, சுபானு; மதுரை; சுந்தரேஸ்வரர் கோவிலில் கம்பத்தடி மண்டபம் கட்டுதல் தொடர்பானது. வீரப்ப நாயக்கர் காலத்தில் புராணீகக் காட்சிகளை பெரும் எண்ணிக்கை யில் சிலைகளாய் வடித்தது தொடர்பானது. (35/1908; சீவெல், 1, பக். 293).

78. 1584 தமிழ்; சாகா சம்வத். 1505 காலாவதி, சித்ரபானு; திருஉத்தரகோசமங்கை (ராம்நாட்); செவ்வப்ப நாயக்க-அச்சுதப்ப-நாயக்கர்; செம்பிநாட்டு உட்கோட்டத்தில் ஸ்ரீதேசத்திலுள்ள சோழ நாட்டின் உள்ளூர் கோவிலுக்கு, ராமசேது கிராமத்தை தானமாக வழங்கியது தொடர்பானது. (84/ 1905).

79. 1586 தமிழ்; வைய; பெரம்பலூர் (திரிசினொபாளி) திருச்சினாப்பள்ளி; கிருஷ்ணப்ப-நாயக்கரின் முகவரால் நொச்சியம் கிராமத்தில் செய்யபட்ட வரி குறைப்புத்

தொடர்பானது. மிகக் குறைந்த அளவிலான வரி, சூரப்ப நாயக்கர் காலத்தில் வசூலிக்கப்பட்டது. *(10/1913).*

*80. 1586* சமஸ்கிருதம் நாகரி மொழியில்; சாகா சம்வத். 1508, வைய; மதுரை; முதலாம் வேங்கடபதியின் தளவாய் அக்ரகாரம் ஏடுகள்; கங்குவார்பட்டி அல்லது வீரபூப சமுத்திரம் கிராமத்தை விஸ்வநாத நாயக்கரின் பேரனும் கிருஷ்ணப்ப நாயக்கரின் மகனுமான வீரப்ப நாயக்கரின் கோரிக்கை ஏற்று, பிராமணர்களுக்கு வழங்கியது தொடர்பானது. (E.I. xii, pp. 159-870).

*81. 1588* சாகா சம்வத். 1510; பிரான்மலை (திருப்பத்தூர், ராம்நாட்); முதலாம் வேங்கடபதி ராயா; அவரது ஆவணம். (சீவெல், 1, பக். 297).

*82. 1588* சாகா சம்வத். 1510, கொல்லம் ஆண்டு. 765; மன்னார்கோவில் (அம்பாசமுத்திரம், தின்னவேலி); உதய மார்த்தாண்டர் அளித்த ஒரு கொடை, (மெட்ராஸ் மாகாண கல்வெட்டுகள், III, பக். 1455).

*83. 1588* சாகா சம்வத். 1510, சர்வஜித்; சங்கரநயினார்கோவில்; வல்லபதேவா; அவரது இருபத்தாறாம் ஆண்டை யொட்டி வழங்கிய தானம். (மேலது, பக். 1475).

*84. 1588* தமிழ்; சாகா சம்வத். 1501 (தவறாக இருக்கலாம், 1510) காலாவதி, சர்வதாரின்; ஈரோடு; முதலாம் வீர வேங்கடபதி ராயா; வீரப்ப நாயக்கர் அளித்த ஒரு கொடை. (13/1891; மெட்ராஸ் மாகாண கல்வெட்டுகள், 1892, பக். 9).

*85. 1590* சாகா சம்வத். 1512, விக்ரிதி; தின்னவேலி; வேங்கடபதி; தின்னவேலி மாவட்டத்திலுள்ள கிராமங்கள் கும்பகோணத்திலிருந்து வழங்கப்பட்டது தொடர்பானவை. கிருஷ்ண தாஸின் நிர்வாகத்திலிருந்த வைஷ்ணவ கோவிலுக்கான கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டயங்கள். தொகுப்பு எண். 12).

*86. 1590* தமிழ்; சாகா சம்வத். 151(4) காலாவதி, பிரோதின் (1589); பெருமுக்கல் (திண்டி வனம், தென்னாற்காடு); வேங்கடபதி தேவ மகாராயா; நாகம நாயக்கரின் மகன் பொம்மு நாயக்கரையும் கிருஷ்ணப்ப நாயக்கரின் மகன் கொண்டம நாயக்கரையும் குறிப்பது. (36/1905).

*87. 1594* கிரந்த மற்றும் தமிழ்; சாகா சம்வத். 151(.) காலாவதி, கொல்லம் ஆண்டு. 769; சேர்மாதேவி (அம்பாசமுத்திரம், தின்னவேலி); ஸ்ரீரங்கதேவ-மகாராயா; விஸ்வநாத நாயக்கரையும் கிருஷ்ணப்ப நாயக்கரையும் வீரப்ப நாயக்கரையும் திறைசெலுத்துபவர்களாகக் குறிப்பது. (187/1895).

*88. 1594* தமிழ்; (ஐ)ய; பெரியகோட்டை (பழனி, மதுரை); கதிரிநாக-(நாத) பெருமாள் கோவில் கட்டுவது தொடர்பானது, எல்லா நாட்டிலுமிருந்து திறைபெற்ற வீரப்ப நாயக்க அய்யனின் முகவரால் வெட்டப்பட்ட குளம். (470/1907).

*89. 1595* தமிழ்; (சாகா சம்வத்) 15(17), மன்மத; கரிவலம்வந்தநல்லூர் (சங்கரநயினார் கோவில், தின்னவேலி); ஜதிலவர்மன்; வீரபாண்டியத் தேவா; அவரது பத்தாவது ஆண்டைக் குறிக்கும் மோசமாகச் சிதிலமடைந்த ஓர் ஆவணம். (275/ 1908).

*90. 1595* சாகா சம்வத், 15(17), மன்மத, வைகாசி 11; பாறைப்பட்டி (ஒட்டப்பிடாரம், தின்ன வேலி); இரண்டகாலமேதுத்த அதிவீரராமன்; விஜயநகரம் மற்றும் சாளுவ வம்சத்தின் மூதாதையரான தேவராயா, கிருஷ்ண ராயா, சதாசிவ ராயா, வீரநரசிம்ஹ ராயா, தர்ம ராயா மற்றும் ஸ்ரீரங்க ராயா ஆகியோரைக் குறிப்பிட்டு வேங்கடபதிரி ராயரின் ஆட்சிக்காலத்தில் மூன்று தனி நபர்களுக்கு வழங்கப்பட்ட சாவமான்ய நிலம் தொடர்பானது. (615/1915).

*91. 1596* கிரந்த; (சாகா சம்வத்) 1518, மன்மத; பெருங்கருணை (முதுகுளத்தூர், ராம்நாட்); வீர பூபாவின் மகன் கிருஷ்ண பூபா குறித்த ஒரு துண்டு ஆவணம். (404/ 1907).

*92. 1596* சமஸ்கிருதம் கிரந்தமொழியில்; (சாகா சம்வத்) 1518; மதுரை; ராமகிருஷ்ணப்பா சிங்கத்தில் அமர்ந்திருப்பதுபோலான தாமிரப் பட்டயம். வல்லப நரேந்திரா காலமாகி முப்பத்து மூன்று ஆண்டுகளின் நினைவாக, சில பிராமணர்களுக்கு வழங்கப்பட்ட அதிவீரராமபுரம் அல்லது நாடிக்குடி கிராமம். சாகா சம்வத், 1517; அப்பட்டயத்தின் முடிவில் மூக்கில் குறுவாள் செருகப்பட்ட நிலையில் ஒரு ஆண்

பன்றியின் சித்திரமும் உள்ளது. அதே விஷயம் மூன்றாம் தளவாய் அக்ரகார ஏடுகளிலும் உள்ளது. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 211; திருவாங்கூர் தொல்லியல் துறை. வரிசை 1, பக். 133-46).

93. 1596 தமிழ்ச் செய்யுள்; சாகா சம்வத். 1518, துர்முகி; தென்காசி; அதிவீர ராம பாண்டியா; தவறாக வசூலிக்கப்பட்ட வரியை தனது முப்பத்தொன்பதாவது ஆண்டு ஆட்சியின்போது கோவிலுக்கு வழங்கப்பட்டது தொடர்பானது. அதையடுத்து, அந்த கிராமத்தை சர்வமான்ய பட்டி யலில் இணைத்தது. (515/1909).

94. 1597 சமஸ்கிருதம் நாகரி மொழியில்; சாகா சம்வத். 1519, ஹெவிலாம்பி; கிருஷ்ணப்ப நாயக்கரின் வேண்டு கோளை ஏற்று முதலாம் வேங்கடபதி, பாண்டிய பார்திவ கிருஷ்ண நிர்பதி எனப் பட்டம் சூட்டி, மருதங்குடி மற்றும் காருபுர கிராமங்களைக் கொடையாக, வைஷ்ணவ பிராமணர்கள் சிலருக்கு வழங்கியது தொடர்பானது. காருபுரம் மதனகோபால புரம் என்றும் வழங்கப்பட்டது. நாயக்கர்களின் குடிவழிமரபும் அதில் குறிப்பிடப்பட்டுள்ளது. நாகன்ருபதி - விஸ்வநாத - கிருஷ்ண - விருபூபதி - கிருஷ்ண. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 136).

95. 1597 தமிழ்; ஹெவிலாம்பி, அர்பசி; பனையாவரம் (விழுப்புரம், தென்னாற்காடு); வேங்கட பதிதேவ-மகாராஜா; முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரைக் குறிப்பிட்டது. (329/1917).

96. 1598 சமஸ்கிருதம் நாகரியில்; சாகா சம்வத். 1520 விளம்பி; கல்லாடக்குறிச்சி (அம்பா சமுத்திரம், தின்னவேலி); வீர வேங்கடபதி தேவராயா; வெள்ளங்குடி ஏடுகள்; திருவடி தேசத்தி லுள்ள முல்லைநாட்டில் வீர பூப சமுத்திரம் என்ற வெள்ளங்கொள்ளி கிராமத்தை பிராமணர்களுக்கு வழங்கியது தொடர்பாக. வீர கிருஷ்ணப்ப நாயக்கரின் விருப்பப்படி 261 பங்குகளாக வகுக்கப்பட்டு அளிக்கப்பட்டது. நாயக்க வம்சத்தின் முதலாம் ஆட்சியாளர் விஸ்வநாத நாயக்கர் பாண்டியர்கள் உள்ளிட்ட பலரை போர்க்களத்தில்

தோற்கடித்ததாகவும் அந்த நாடுகளை மதுரை ராஜ்ஜியத்தில் இணைத்துக்கொண்டதாகவும் சொல்லப் படுகின்றது. நாயக்கர்களின் குடி வழிமரபு நாக-விஸ்வநாத-கிருஷ்ண -திருமணம்- திருமலாம்பிகா- வீர கிருஷ்ண என்று வரையறை செய்யப்பட்டுள்ளது. (பிற்சேர்க்கை 'அ' வில் 1919. மெட்ராஸ் தொல்லியல் அறிக்கை. 1912, பக். 76).

97. 1598 சமஸ்கிருதம் நாகரி மொழியில்; சாகா சம்வத். 1520, விளம்பின்; பத்மனேரி (நாங்குனேரி, தின்னவேலி); கிருஷ்ணப்ப நாயக்கரின் வேண்டுகோளுக்கிணங்க வேங்கடபதி தேவராயா சில பிராமணர்களுக்கு திருவடி ராஜ்ஜியத்திலுள்ள கிராமத்தைக் கொடை யாகக் கொடுத்தது. அவரது இறையாண்மையை அங்கீகரிப்பது தொடர்பானது. அதில் அவர் இரண்டாவது வள்ள லாகக் குறிப்பிடப்படுகின்றார். அவ்வாவணத்தில் நாயக்க சாம்ராஜ்ஜியத்தை நிறுவிய விஸ்வநாத நாயக்கரின் திருவடி வெற்றியையும், பாண்டிய அரசர் வானாதிராயர் உள்ளிட்ட மற்ற அரசர்களை வென்றதையும் கொண்டாடுகிறது, இக்கல்வெட்டு. (பிற்சேர்க்கை 'அ' வில் 14/1906; சீவெல்லின் தாமிரப் பட்டயம் ஏடுகள். எண். 111; மெட்ராஸ் கல்வெட்டியல் துறை. 1906, பக். 86; மற்றும் 1909, பக். 119).

98. 1600 தமிழ்; சாகா சம்வத். 1522, கொல்லம் ஆண்டு 77 (4), விகாரின், வைகாசி (2) 6; சேர்மாதேவி; விஸ்வநாத நாயக்கர் கிருஷ்ணப்ப நாயக்கரின் விருப்பத்தின்பேரில் அவரது முகவராக மூர்த்தி செட்டியாரை கணக்கராக நியமனம் செய்தது தொடர்பானது. (717/1916).

99. 1602 தமிழ்; சாகா சம்வத். 1523 காலாவதி, சுபகிருத்; மதுரை; வீர வேங்கட-மகாராயா; மதுரையிலுள்ள மதனகோபால கோவில் மற்றும் பாஷ்யகாரைக் குறிப்பிடுகின்றது. அதாவது ஸ்ரீ ராமானுஜாச்சார்யா. (36/1908).

100. 1604 தமிழ்; சாகா சம்வத். 1525 காலாவதி, சுபகிருத்; திண்டிவனம்; வேங்கடபதி ராயா; நெசவாளர்களின் வரிமை நாகம நாயக்கரின் முகவர் பொம்மு நாயக்கரால் கோவிலுக்குச் செலுத்தியது தொடர்பாக. (31/1905).

101. 1604 கனாரீஸ்; சாகா சம்வத். 1526, குரோதின்; சிவசமுத்திரம் (கொள்ளேகால், கோயமுத்தூர்); வேங்கடபதி ராயா; திருமலைராஜ நாயக்கர் தானம் வழங்கிய நிலம் தொடர்பானது. (356/1901).

102. 1606 கொல்லம் ஆண்டு. 782; கன்னியாகுமரி; முத்து வீரப்ப; பகவதியம்மன் கோவிலுக்கு தின்னவேலியிலுள்ள காகரை மற்றும் பல இடங்களிலுள்ள நிலங்களை வழங்கியது தொடர்பாக. (வி. நாகம் அய்யா, திருவாங்கூர் மாகாணக் கையேடு, 1, பக். 302).

103. 1606 தமிழ்; பிரபவ; தாயனூர் (திருக்கோயிலூர், தென்னாற்காடு); வீரப்ப நாயக்க ராயரின் முகவராக வானாதிராயரைக் குறிக்கின்றது. (366/1909).

104. 1606 தமிழ்; (பிர)ப (பராபவ) பங்குனி 3; பனையாவரம் (விழுப்புரம், தென்னாற்காடு); முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கரை மெச்சி தானம் வழங்கப்பட்ட ஒரு தோட்டம். (326/1909).

105. 1607 தமிழ்; சாகா சம்வத். 1527, பராபவ; ராமேஸ்வரம்; தளவாய் சேதுபதி கட்டத்தேவர்; ராமநாத சுவாமி - பர்வதவர்த்தினி அம்மன்கோவிலுக்கு ஐந்து கிராமங்கள் கொடை வழங்கியது தொடர்பானது. (பிற்சேர்க்கை 'அ' வில் 11/1911; மெட்ராஸ் தொல்லியல் துறை அறிக்கை, 1911, பக். 88-9).

106. 1608 தமிழ் மற்றும் கிரந்த; சாகா சம்வத், 1529 காலாவதி, பிளவங்க, ஆடிமாத முழு நிலவின் நான்காம் நாள் முன்னிரவில்; ராமேஸ்வரம்; திருமலை உடையான் சேதுபதி, நகரத்தின் பிரபு; சேதுக்கரையைக் காக்கும் பொறுப்பு பிரபு மற்றும் ராமநாத சுவாமியின் அறக்கட்டளை முகவர்; சிவபூஜைக்குப் பொறுப்பானவர்; மற்ற அரசர்களின் தலைவர்; அரியராயரின் படைகளை அழித்தவர்; வெற்றிகொண்ட நாட்டை ஒருபோதும் திரும்ப இழக்காதவன்; மூவராயாவை தண்டனைக்கு உள்ளாக்கியவன்; வீரமும் வளமுமுள்ள நாட்டின் பேராண்மை; வேதம் படிக்கும் பிராமணர்களின் பாதுகாவலன்; தீங்கு விளைவித்த யுவன அரசர்களின் வீரத்தையும் செருக்கையும் வெட்டி வீழ்த்தியவன்; துகாவூர் கோட்டத்தின் காரத்தூரில் வசிப்பவன். குருக்களாகவும் வணக்கப் படைகளாக

வும் சமையல்காரர்களாகவும் கோவிலில் சேவை செய்யும் 'ஐந்துநாட்டு' மக்களுக்கு அடிக்கடி நிலங்களைத் தானமாக அளிப்பவன். (பர்கெஸ், சேதுபதிக் கொடை, எண். 2).

107. 1608 சாகா சம்வத். 1530; ராமேஸ்வரம்; சாது ராமநாதரால் விஸ்வபூபதியின் காலத்தில் கோவில் பழுது பார்க்கப்பட்டது தொடர்பானது. (பர்கெஸ், பக். 59, எண். 10).

108. 1608 தமிழ்; சாகா சம்வத். 1530; ராமேஸ்வரம்; வீரபூபதியின் காலத்தில் ராமலிங்கேஸ்வரக் கோவிலுக்கு வழங்கப்பட்ட கட்டிடம் தொடர்பானது. (பிற்சேர்க்கை 'அ' வில் 102/ 1903).

109. 1608 தமிழ்; சாகா சம்வத். 1530; பிளவங்க, ராமேஸ்வரம்; தளவாய் சேதுபதி கட்டத் தேவர்; கோவிலுக்கு எட்டுகிராமங்கள் கொடை கொடுத்தது தொடர்பானது. (பிற்சேர்க்கை 'அ' வில். 12/1911).

110. 1609 தமிழ்; சாகா சம்வத். 1530 காலாவதி; கீழக; திருஉத்தரக்கோசமங்கை; முத்துவீரப்ப நாயக்கரின் பண்மைப் போற்றி திருவிழாக்கள் கொண்டாட பணக்கொடை. (87/1905).

111. 1609 சமஸ்கிருதம் நாகரியில்; சாகா சம்வத். 15(3)1, சௌம்ய; மதுரை; வேங்கடாபதி தேவராயா; முத்துவீரப்ப நாயக்கரின் வேண்டுகோளின்படி, நாகேநல்லூரு என்ற முத்துவீர மகி பால சமுத்திரம் கிராமத்தை பிராமணர் களுக்கு தானமாக வழங்கியது. (பிற்சேர்க்கை 'அ' வில். 9/1909).

112. 1610 தமிழ்; சாகா சம்வத். 15(3)2 காலாவதி, கொல்லம் ஆண்டு. 787; ஆழ்வார்க்குறிச்சி (அம்பாசமுத்திரம், தின்னவேலி); வன்னித்தீர்த்தக்கரையிலுள்ள கோவிலுக்கு விஸ்வநாத- வீரப்ப- முத்துவீரப்ப நாயக்க அய்யன்கள் பேரில் நிலதானம் வழங்கியது. (122/1907).

113. 1610 கிரந்த; சாகா சம்வத். 1532, ஈஸ்வர (1637); பாளையம்கோட்டை (தின்னவேலி) ; திருமலை நாயக்கர் மற்றும் விஸ்வநாத நாயக்கர்; ராஜவல்லி புரத்திலுள்ள ராமபத்ர சுவாமி தெப்பக்குளத்துக்கு சதாசிவராயரின் காலத்தில் வழங்கப்பட்ட நான்கு

மால்நிலம். (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். III, பக். 1493).

114. 1610 தமிழ்; சாகா சம்வத். 1532. சௌம்ய, ஆனி, பூச அஸ்டரியம்; மதுரை; விஸ்வநாத நாயக்கர்- வீரப்ப நாயக்கர் நீங்கலாக, சொக்கநாதர் கோவிலில் பணிபுரிந்து, அன்னைக்குடி மற்றும் கிராமங்களில் வசிக்கும் முதலியார் சேவையாளர்களிடம் தரகுக்கூலி வசூலித்தது. (பர்கெஸ். பக். 109-10. எண். 23).

115. 1612 தமிழ்; சாகா சம்வத். 15(34) காலாவதி; கொல்லம் ஆண்டு. 788, பரிதாவின், ஆழ்வார் குறிச்சி; விஸ்வநாத நாயக்கர்- முத்துவீரப்ப நாயக்கர் பண்பைப் பாராட்டி வழங்கப்பட்டகொடை. (123/1907).

116. 1613 சாகா சம்வத். மதுரை முத்துவீரப்ப நாயக்கர். (சீவெல், 1, பக். 293).

117. 1613 தெலுங்கு; சாகா சம்வத். 1535, கொல்லம் ஆண்டு. 789, பிரமாதீச, தை 13, புதன் கிழமை, வெள்ளங்குடி; விஜயநகரை ஆட்சிசெய்யும் வீர-வேங்கடபதி ராய; திம்மராசாவின் மகன் வெங்கடாதிரி பட்டர் வழியாக, வெள்ளங்குடி என்ற வீரபூபால சமுத்திரக் கோவிலில் கிருஷ்ணா மற்றும் காமேஸ்வரி சித்திரங்களை வைத்ததும், அவர்களின் வணக்கத்திற்கு நிலங்கள் வழங்கியது தொடர்பானது. விஸ்வநாத வீரப்பாவின் ஆட்சி நடந்தபோதும் விஸ்வநாத கிருஷ்ணப்ப நாயக்கரால் கொடை வழங்கப்பட்டது. (452/1916).

118. 1617 தமிழ்; சாகா சம்வத். 1539, கொல்லம் ஆண்டு- 792, நள; அடைச்சானி (அம்பாசமுத்திரம், தின்னவேலி); முத்துவீரப்ப நாயக்கரின் பண்பைப் பாராட்டி, சின்னதிப்பராகுத்தராயன் குளத்திலும் கண்மாயிலும் சில உரிமைகளை மக்களுக்கு வழங்கியது. (556/1911).

119. 1617 தமிழ்; சாகா சம்வத். 1539 காலாவதி, பிங்கல; திருச்சினாப்பள்ளி; வெங்கட தேவ மகாராயா; வீரப்ப நாயக்கரின் பெயரில் வழங்கப்பட்ட கொடை தொடர்பான சேதமுற்ற ஓர் ஆவணம். (134/1905).

120. 1620 தமிழ் மற்றும் கிரந்த; சாகா சம்வத். 1542, காலயுக்தி (1618); கோயமுத்தூர்; உறையூர் மகாராஜா ஸ்ரீவேங்கட தேவ மகாராயாவின் மகன் ரகுநாத் தேவ மகாராஜா

வழங்கிய கொடை. பெனுகொண்டாவை ஆண்டவர். (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 187).

121. 1623 சாகா சம்வத். 1545, ஸ்ரீமுகா (1633); கீழக்குளத்தூர் (உடையார்பாளையம், திருச்சினாப்பள்ளி); விஸ்வநாத நாயக்கரின் அமைச்சர் ராமய்யா, 1000 குழி நிலத்தை கிராமக் கடவுளுக்கு வழங்கியது தொடர்பானது. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள், பக். 1614).

122. 1623 தமிழ்; சாகா சம்வத். 1545, ருத்ரோத்காரி, மாசி 21 (மார்ச் 3, 1624) ; புதன்கிழமை; ராமேஸ்வரம்; உடையநாயன் சேதுபதி கட்டத்தேவர் மகன் கூத்தன் சேதுபதி கட்டத்தேவன் ராமநாத சுவாமி கோவிலின் முதல்பிரகாரத்தில் நடனமாலிகா மண்டபம் மற்றும் ஆருத்தா மண்டபம் கட்டியது தொடர்பானது. (பர்கெஸ், பக். 60. எண். 15).

123. 1623 சாகா சம்வத். 1545, மதுரை; முத்துவீரப்ப நாயக்கர். (சீவெல், பக். 292).

124. 1623 தமிழ்; சாகா சம்வத். 1545, கொல்லம் ஆண்டு. 799, ருத்ரோத்கரி, கார்த்திகா (1)6, ஞாயிற்றுக்கிழமை; அம்பாசமுத்திரம்; விஸ்வநாத நாயக்கர்-வீரப்ப நாயக்கர்-முத்துவீரப்ப நாயக்கரின் பொது உத்தரவிற்கேற்ப ஐந்து உட்கோட்டங்களில் வசிக்கும் கண்ணாளர் (கம்மாளர்) பிரிவை குடிமக்கள் உரிமையிலிருந்து விலக்கிவைக்கும் குருக்களின் உத்தரவு. (309/1916).

125. 1625 தமிழ்; சாகா சம்வத். 1547 கொல்லம் ஆண்டு. 798 (1922), ருத்ரோத்கரி, வைகாசி 15 (மே 27, 1623); பிரம்மதேசம்; விஸ்வநாத நாயக்கர்-வீரப்ப நாயக்கரின் உத்தரவின்பேரில் கம்மாளர்கள் மற்ற சமூகத்தினருடன் கலந்துறவாடக் கூடாது என்று செயலாணைப் பத்திரம் பதியப்பட்டது. (378/1916).

126. 1630 தமிழ்; சாகா சம்வத். 1(5)5(3), கொல்லம் ஆண்டு. 805, பிரமோத; தெற்குகாரசேரி (ஸ்ரீவைகுண்டம், தின்னவேலி); காரசேரி, அமுதகுன்ன வளநாடு என்று குறிப்பிடுகின்றது. பெரிய நாயக்க ராயன் வழங்கிய தானம் குறித்தும் பதிவு செய்கின்றது. (23/1912).

127. 1630 தமிழ்; சாகா சம்வத். 155(2) சுக்ல, தை 21, திங்கள்கிழமை; தேவிகாபுரம் (ஆரணி, வடாற்காடு);

திருமலைதேவ-மகாராயாவின் மகன் வேங்கடதேவ-மகாராயா; குளம் மற்றும் கிணறுகள் தோண்டி நிலங்களை வளப்படுத்தியது. விளைநிலங்களாக அவற்றை மாற்றி கோவிலுக்கு தானம் வழங்கியது தொடர்பாக.(388/1912).

128. 1634 சமஸ்கிருதம் நாகரியில்; சாகா சம்வத். 1556, பவ, வைகாசி; கூனியூர் (அம்பா சமுத்திரம், தின்னவேலி); இரண்டாம் வேங்கடாவின் கூனியூர் ஏடுகள். திருவடி ராஜ்ஜியத்தில் உள்ள வீரவ நல்லூர் மாகாண முத்துக்கிருஷ்ணாபுரத்தை கூனியூர் கிராம பிராமணர்களுக்கு வீர வேங்கடபதி மகாராயா வழங்கிய கொடை. விஜயநகர சாம்ராஜியம் மற்றும் மதுரை நாயக்க வம்சத்தின் குடிவழி மரபு குறிப்பிடப் பட்டுள்ளது. திருமலை நாயக்கரின் கோரிக்கையின் படி இந்தக்கொடை வழங்கப்பட்டுள்ளது.

129. 1635 கொல்லம் ஆண்டு. 810, கும்பம் (மாசி) 22; திருமலை நாயக்கரின் படைகள் ஏற்படுத்திய சேதத்தைத் தொடர்ந்து, நாஞ்சில் நாட்டு விவசாயிகளுக்கு திருவாங்கூர் மகாராஜா நிலவரி தள்ளுபடி செய்ததுதொடர்பான அரசாணை. (வி. நாகம் அய்யா, திருவாங்கூர் மாகாண கையேடு, பக். 302-3).

130. 1635 கொல்லம் ஆண்டு. 811; ஆலடியூர் (அம்பாசமுத்திரம், தின்னவேலி); திருமலை நாயக்கர்; உள்ளூர் சிவன்கோவிலுக்கு வழங்கிய நிலக்கொடை. குளத்தின் வாய்மடைப் பகுதியில் அவர் பெயர் பொறிக்கப் பட்டுள்ளது. (சீவெல், 1, பக். 309).

131. 1637 கலியுக ஆண்டு. 4738, ஈஸ்வர; கபிலமலை (நாமக்கல், சேலம்); திருமலை நாயக்கர்; கோவிலுக்கு நிலம் வழங்கியது. (மேலது, பக். 203).

132. 1638 தமிழ்; சாகா சம்வத். 1560, கொல்லம் ஆண்டு. 813, பாகுதான்ய, வைகாசி 15 (மே 27); மேலாம்பூர் (பூங்குறிச்சி); புதுக்குளத்தின் கிழக்குமூலையில் குடியிருக்கும் மக்களின் குடிசைகளுக்கு வரி விதிக்கப்பட்டது. கோவிலுக்குக் கொடைகளை வழங்கியது. நாகையா-விஸ்வநாத-திருமலை நாயக்கர் மற்றும் வைத்தியப்பையர், ராமப்பையர் மற்றும் கிருஷ்ணப் பையர். (519/1916).

133. 1640 தமிழ்; சாகா சம்வத். 1562, விஷு (1641); வேம்பங்குடி (சிவகங்கை, ராம்நாட்); திருமலை நாயக்கராயனின் கொடை. (290/1903).

134. 1642 தமிழ்; சாகா சம்வத். 1564. சித்ரபானு; திருப்பலாத்துறை (திருச்சினாப்பள்ளி); விஸ்வநாத நாயக்கர்-திருமலை நாயக்கர்; நிலக்கொடை; குறிப்பு. 289/1903. (290/1903).

135. 225(?) சித்ரபானு; திருமுருகன் பூண்டி (பல்லடம், கோயமுத்தூர்); திருமலை நாயக்கர்; அவரது குரு ரகுநாத பண்டிட் டும் சுற்றுகிராமத்திலுள்ள மக்களும் சுப்ரமண்ய பண்டிட்டுக்கு வழங்கிய கொடை. கோவில் குருக்களான அவருக்கு ஒருதுண்டு நிலமும் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் ஒருபணம் ஆண்டுக் கொருமுறை வழங்கப்பட்டது. திருமணத்துக்கு இரண்டு பணம் வழங்கப்பட்டது. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள், 1, பக். 560).

136. 1643 தமிழ்; சாகா சம்வத். பிரமாதி (1639), ஆனி 16; புதூர் (திருமங்கலம், மதுரை); திருமலை நாயக்கரின் பண்பைப் போற்றி, திருமலா சமுத்திரத்திலுள்ள சொக்கநாத சுவாமிக் கோவிலுக்கு தை, வைகாசி மற்றும் ஆனி மாதங்களில் திருவிழா நடத்த வழங்கப்பட்ட கிராமங்களின் கொடை. (395/1914).

137. 1644 தமிழ்; கொல்லம் ஆண்டு. 81(9), சுவபானு, ஆடி 1(5); ஆலடியூர்; பெரிய கோபுரத்தின் சீரமைப்புப் பணிகளுக்கும் சொக்கநாத சுவாமி கோவிலுக்கும் முகவர் பூவநாத பண்டாரத் தின் மூலமாக வழங்கப்பட்ட கிராமக் கொடை. (293/1916).

138. 1647 தமிழ்; சாகா சம்வத். 1569, கொல்லம் ஆண்டு. 824, சர்வதாரின், ஆவணி 3, வியாழக்கிழமை; வைராவிகுளம் (அம்பாசமுத்திரம், தின்னவேலி); முல்லைவளநாட்டின் கல்லிடைக்குறிச்சிக்கு மேற்கிலுள்ள இந்தக்கிராமம், மதுரையின் திருஞான சம்பந்த பண்டாரத்துக்கு விஸ்வநாத நாயக்க-திருமலை நாயக்கர் மற்றும் எம்பெருமான்பிள்ளை ஆகியோர் வழங்கியது. (285/ 1916).

139. 1648 சாகா சம்வத். கொல்லம் ஆண்டு. 824; வைராவிகுளம்; திருமலை நாயக்கர்; ஒரு சூத்திரக் குருவுக்கு வழங்கிய நில தானம். (சீவெல், 1, பக். 310).

140. 1648 தமிழ்; கொல்லம் ஆண்டு. 823, கார்த்திகை 22; சிவசைலம்; ராமப்பையன் காலத்தில் பரதேசிகளுக்கு தினந்தோறும் உணவு வழங்கப்பட்டது; சொக்கலிங்க நாயக்க ராயன் காலத்தில் அது ஐந்தாறு நாட்கள் இடைவிட்டு மீண்டும், பன்னிரெண்டு படி சாதம் வழங்கப்பட்டு, தொடர்ந்ததாகக் குறிப்பிடுகின்றது. (521/1916).

141. 1650 தமிழ்; விக்ரித; பள்ளிமடம் (அருப்புக்கோட்டை, ராம்நாட்); திருமலை நாயக்கர்; அரசரும் முத்துராமலிங்கப் பாண்டித்தொரையும் பள்ளிமடத்தில் சந்தித்துக்கொண்டபோது, அம்பலக்காரன் தாமிரப் பட்டயம் வழங்கியது தொடர்பானது. மற்றொரு பட்டயமும் அதே ஆண்டு வழங்கப்பட்டது. (பிற்சேர்க்கை ‘அ’ 5 மற்றும் 6/1911; மெட்ராஸ் கல்வெட்டியல் அறிக்கை, 1911, பக். 89).

142. 1651 கார; மதுரை; திருமலை நாயக்கர்; தனிநபருக்கு வழங்கியக் கொடை. (சீவெல் தாமிரப் பட்டய ஏடுகள், 1, பக். 204).

143. 1652 சாகா சம்வத். 1574; எருமைப்பட்டி (நாமக்கல்); திருமலை நாயக்கர்; அவரது ஆட்சியின்போது தனிநபர் வழங்கிய நிலம். (சீவெல், 1, பக். 204).

144. 1653 ஆனந்தா; மதுரை; திருமலை நாயக்கர்; ராஜ்ஜிய உலா; இதமான வரவேற்பும் உபசாரமும் செய்த நல்லமரம் கவுண்டனுக்கு நிலக்கொடை வழங்கியது. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். 92).

குறிப்பு : சீவெல் இந்தக் கல்வெட்டின் ஆண்டை 1656 என்கின்றார். ஆனால் ஆனந்தா, 1614 அல்லது 1674ஆக இருக்கலாம். ஒருவேளை அந்த ஆண்டு நந்தனாவாக இருந்தால், 1652-53 ஆக இருக்க வாய்ப்புண்டு.

145. 1654 ஜய; மதுரை; திருமலை நாயக்கர்; புலியைக் கொன்று சேவை செய்ததற்காக வெள்ளிக்குறிச்சி பிரபு ஸ்ரீரங்க நாயக்கருக்கு (வெள்ளிக்குறிச்சி சீமைக்கு கர்த்தர்) வழங்கப்பட்ட கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். 197).

146. 1655 கனாரீஸ்; ம(ன்ம)த; ஈரோடு; கந்திராய நரச ராஜ-வட்டேறு; தளவாய் ஹம்பை(யா) மற்றும்

மதுரையைக் குறிப்பிடுகின்றது. (170/1910); மைசூர் கெஜட்டியர், 1, பக். 364).

147. 1655 தெலுங்கு; சாகா சம்வத். 1577, மன்மத; கண்ணாடிப் புத்தூர் (உடுமலைப்பேட்டை, கோயமுத்தூர்); திருமலை நாயக்கர்; ஸ்ரீரங்கராயனின் ஆட்சியில் ஒரு பிராமணருக்கு வழங்கிய நிலக்கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டயம், எண். 190).

148. 1656 தமிழ்; சாகா சம்வத். 1579, விளம்பி; ராமேஸ்வரம்; திருமலை ரகுநாத சேதுபதி கட்டத்தேவர் ஹிரண்யகர்ப்ப நிகழ்ச்சி நடத்தியது தொடர்பானது. நிலம் வழங்கிய தாமிரப் பட்டயம். (பிற்சேர்க்கை, ‘அ’. 10/1911).

149. 1657 தெலுங்கு; சாகா சம்வத். 1579, ஹெவிலாம்பி; தின்னவேலி; திருமலை நாயக்கரின் பேரனும் சொக்கநாத நாயக்கர் மகனுமான ஸ்ரீரங்க முத்துவீரப்ப நாயக்கரின் பெயரில் ஒரு பிராமணருக்கு திருமலா சமுத்திரத்திலும் புதுக்கோட்டையிலும் வழங்கப்பட்ட நிலக்கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டயம். எண். 52).

150. 1658 சாகா சம்வத். 1580, விஸ்வாவசு (1545); ஸ்ரீரங்கம்; விஸ்வநாத நாயக்கர் காலத்தில், மதுரை ராமன் என்பவர், கடவுளுக்கு அரை வேலி நிலம் வழங்கியது தொடர்பானது. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள், பக். 1571).

151. 1659 தமிழ்; சாகா சம்வத். 1581, விளம்ப; திருச்செங்கோடு; குமாரமுத்து திருமலை நாயக்கரின் பண்பைப் பாராட்டி, விஸ்வநாத திருமலை நாயக்கரால் பரித்திப்பள்ளி-நாட்டிலுள்ள கொல்லங்காந்தை கிராமத்தைக் கொடையாக வழங்கியது. (650/1905).

152. 1659 சாகா சம்வத். 1581; திருந்செங்கோடு; தனது தந்தையின் ஆட்சியின்போது, குமார முத்து திருமலை நாயக்கரால் கோவிலுக்கு வழங்கப்பட்ட நிலக்கொடை. (சீவெல் 1, பக். 203).

153. 1659 தமிழ்; சாகா சம்வத். 1581, ஹெவிலம்பி; ராமேஸ்வரம்; மராத்திய குருக்கள் சபையைச் சேர்ந்த சங்கர குருக்கள் மற்றும் பலருக்கு, மராத்திய மற்றும் மற்ற

பக்தர்களுக்கு வசதிகள் செய்து கொடுப்பதற்காக, ரகுநாத சேதுபதியால் நிலம் வழங்கப்பட்டது தொடர்பானது. (பர்கெஸ், சேதுபதி கொடை, எண். 5).

154. 1659 தமிழ்; சாகா சம்வத். 1580 காலாவதி, ஹெவிலாம்பி (1657); ராமேஸ்வரம்; ரகுநாத திருமலை சேதுபதி கட்டத்தேவரால் நவராத்திரி விழா கொண்டாடுவதற்கு சங்கர குருக்கள் மற்றும் சிலருக்கு வழங்கப்பட்ட கொடைகள். (மேலது, எண். 6).

155. 1659 கனாரீஸ்; சாகா சம்வத் 1581, விகாரி; சிங்காநல்லூர் (கொள்ளேகால், கோயமுத்தூர்) ; ஸ்ரீர(ங்க)ராயா; தேவராஜா-உடையார் குறித்தது. (20/1910).

156. 1661 சாகா சம்வத். 1583; நென்மேனி (சாத்தூர், ராம்நாட்); சொக்கலிங்க நாயக்கர் மற்றும் சிலரை கௌரவப்படுத்தும்வகையில் கோவிலுக்கு குளம்தானம் வழங்கியது தொடர்பானது. (சீவெல், 1, பக். 305).

157. 1662 தெலுங்கு; சாகா சம்வத். 1584, கலியுக ஆண்டு. 4763, சுபகிரித்; ஸ்ரீரங்கம்; கோவில் குருக்களுக்கு சொக்கநாத நாயக்கரால் வழங்கப்பட்ட நில தானம் (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 51).

158. 1663 தமிழ் (உரைநடை மற்றும் செய்யுள்); சாகா சம்வத். 1585, ஷோபனா; திருச்செங்கோடு; விஸ்வநாத-சொக்கநாத நாயக்கரால் மலைமீது காசி விஸ்வேஸ்வரா ஆலயத்தையும் கோபுரத்தையும் கட்டியது தொடர்பானது. (654/1905; சீவெல். 1, பக். 203).

159. 1663 தமிழ்; சாகா சம்வத். 1585, சுபானு; ராமேஸ்வரம்; குருக்களின் வாரிசுகளுக்கு வழங்கப்பட்ட கொடைகள் குறித்தானது. முத்துராமலிங்க விஜய-ரகுநாத சேதுபதியால் வழங்கப்பட்டது. (பர்கெஸ், சேதுபதி கொடை. எண். 16).

160. 1663 தெலுங்கு; சாகா சம்வத். 1585, சுபகிரித்; பெல்லாரி; பெய்ரிஹல்லி கிராமம் ஸ்ரீசைல பிராமணருக்கு மூன்றாம் ஸ்ரீரங்கரால் வழங்கப்பட்டது. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 128).

161. 1663 தேவராஜா; சாமராஜாவின் பேரன்; 'பாண்டியனை வென்றுவீழ்த்திய வலிமை வாய்ந்தவன்' பட்டம்.

162. 1663 தொத்ததேவ ராஜா உடையார்; அவரது நஞ்சன்கூடு ஏடுகள்; அவரது பட்டங்களில் ஒன்று, 'பாண்டிய அரசனை அழித்தொழித்தவர்.' (மைசூர் தொல்லியல் அறிக்கை, 1917, பக். 59).

163. 1664 சாகா சம்வத். 1586, பராபவ (1666); ஸ்ரீரங்கம்; ரங்கநாதா மற்றும் திருவேங்கட நாதா கடவுள்களுக்கு விஸ்வநாத நாயக்க சொக்கநாத நாயக்கரால் வழங்கப்பட்ட கிராமக் கொடை கள். (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். பக். 1572).

164. 1665 சாகா சம்வத். 1587; நென்மேனி; சொக்கலிங்க நாயக்கர் மற்றும் சிலருக்கு கௌரவம் அளித்து வழங்கப்பட்ட கொடை. (சீவெல் 1, பக். 305).

165. 1665 சாகா சம்வத். 1587, விஸ்வாவசு; கண்ணாடிப்புத்தூர்; ஸ்ரீரங்கதேவாவின் ஆட்சியின் போது, கனியூர் கிராமத்தின் உள்ளூர் கோவிலுக்கு வீர நாயக்கரால் வழங்கப்பட்ட பதினைந்து மால் நிலம். (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டு, 1, பக். 562).

166. 1665 தமிழ் மற்றும் கிரந்த; சாகா சம்வத். 1587, விஸ்வாவசு; கனியூர் (உடுமலைப்பேட்டை, கோயமுத்தூர்); ஸ்ரீரங்கதேவ மகாராயாவின் ஆட்சியின்போது, அண்டைக்கிராம பிராமணர் களுக்கு விஸ்வநாத-திருமலை-வீரப்ப-சொக்கநாத நாயக்கரால் வழங்கப்பட்ட நிலக்கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 186).

167. 1666 தமிழ்; சாகா சம்வத். 1588, கீழக (1668); திருச்செங்கோடு; விஸ்வநாத-திருமலை நாயக்க-முத்துவீரப்ப நாயக்கரின் மகன் சொக்கநாத நாயக்கர் வழங்கிய நிலக்கொடை தொடர்பானது. (649/1905).

168. 1667 தெலுங்கு மற்றும் கிரந்த; சாகா சம்வத். 1589, பிளவங்க; குமாரலிங்கம் (உடுமலைப் பேட்டை, கோயமுத்தூர்); விஸ்வநாத-திருமலை-வீரப்ப-சொக்கநாதரின் நிலக்கொடை. ஸ்ரீரங்க ேதேவ ராயரின் ஆட்சியின் போது ஒரு பிராமணருக்கு வழங்கப்பட்டது. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 188).

169. 1668 தமிழ்; சாகா சம்வத். 1589 காலாவதி, பிளவங்க, வைகாசி, வியாழக்கிழமை; ராமேஸ்வரம்; பாண்டியூரின் பெருமாள் சேவைக்காரன் ஆனந்தூர் மற்றும் பாப்பாக்குடி ஆகிய கிராமங்களை கோவிலுக்கு தானமாக வழங்கியது. தளவாய் சேதுபதி கட்டத்தேவரின் மகன் திருமலை ஹிரண்யகர்பயாஜி ரகுநாதத் தேவரின் பண்பைப் பாராட்டி வழங்கியது. (பர்கெஸ், சேதுபதி கொடை. எண். 7).

170. 1669 சாகா சம்வத். 1591, சௌம்ய; சத்தியமங்கலம் (கோபிச்செட்டிப்பாளையம், கோயமுத்தூர்); சின்னம நாயக்கன் என்பவரின் மகன் அழகிரி நாயக்கன் என்பவர் உமையாபுரத்திலும் மற்றும் சில இடங்களிலும் ரங்கநாத கடவுளுக்கு இரண்டுவேலி மற்றும் நான்கு மால் நிலமும் தானம் வழங்கியது தொடர்பானது. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். பக். 1572).

171. 1669 சாகா சம்வத். 1591, சௌம்ய; சத்தியமங்கலம் (கோபிச்செட்டிப்பாளையம், கோயமுத்தூர்); கோமாரி கிராமத்திலுள்ள நிலத்தை தேவராய உடையார் தானம் வழங்கியது தொடர்பானது (மேலது, எண். 551).

172. 1669 கனாரீஸ்; சாகா சம்வத், 1591. சௌம்ய (1669-70) ; செங்களாரை (சத்தியமங்கலம் அருகில்); வீரப்பிரதாப தேவராய உடையார்; உடுவாங்க நாட்டின் சத்தியமங்கலத்தைக் குறிக்கின்றது. சிந்தாமணி மற்றும் பவானி ஆறுகள் கலக்குமிடமான துர்வாஸ ஷேத்திரம் அமைந்துள்ள தவளகிரி மலையின் குமாரசாமி கோவிலுக்கு வழங்கப்பட்ட நிலதானத்தைப் பேசுகின்றது. (181/1910).

173. 1670 தமிழ்; சாகா சம்வத். 1591 காலாவதி, சௌம்ய; திருமெய்யம் (புதுக்கோட்டை மாநிலம்); திருமலை சேதுபதி கட்ட தளவாய் ரகுநாதரேந்திராவின் பண்பைப் பாராட்டி வழங்கப்பட்ட கொடை. (394 மற்றும் 398/ 1906).

174. 1671 கனாரீஸ்; சாகா சம்வத். 1593, விரோதிகிரித்; வின்னப்பள்ளி (கோபிசெட்டிப்பாளையம், கோயமுத்தூர்); இக்கிராமத்தை அறுபத்துநான்கு பாகங்களாகப் பிரித்த தேவராஜ உடையார், அவற்றை அறுபத்துநான்கு பிராமணர்களுக்கு தானமாக

வழங்கினார். (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். பக். 552).

175. 1673 தமிழ்; சாகா சம்வத். 1595; அனுமந்தங்குடி (திருவாடனை, ராம்நாட்); முஸல்மான் ஒருவருக்கு திருமலை சேதுபதி கட்டத்தேவர் நிலதானம் செய்தது தொடர்பானது. (சீவெல். பக். 298).

176. 1673 சாகா சம்வத். 1595; தொட்ட பேளூர் (ஹோசூர், சேலம்); சிக்கதேவ ராஜா; உள்ளூர் அணைக்கட்டு தொடர்பானது குமாரராய தளவாய் காலத்தில் கட்டப்பட்டது. (சீவெல். பக். 194).

177. 1674 சாகா சம்வத். 1596; ஆனந்தா; ஸ்ரீரங்கம்; விஸ்வநாத-சொக்கநாத நாயக்கர் ஆட்சியின்போது, கோபால கிருஷ்ண மற்றும் ரங்கநாதக் கடவுள்களுக்கு சின்ன பொம்ம நாயக்கர் வழங்கிய நிலக்கொடை. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள், பக். 1572).

178. 1674 சாகா சம்வத். 1596; ஆனந்தா; ஸ்ரீரங்கம்; விஸ்வநாத-சொக்கநாத நாயக்கர் ஆட்சியின்போது, கோபால கிருஷ்ண மற்றும் ரங்கநாதக் கடவுள்களுக்கு 'வோகாகூடு' கிராமத்தை சின்ன பொம்ம நாயக்கர் வழங்கிய நிலக்கொடை. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள், பக். 1572).

179. 1674 சாகா சம்வத். 1596, ஆனந்தா ஸ்ரீரங்கம்; விஸ்வநாத நாயக்கர்-சொக்கநாத நாயக்கர் ஆட்சியின்போது ரங்கநாத மற்றும் வரதராஜக் கடவுள்களுக்கு மூங்காலூறு கிராமத்தை ராயஸம் பஸவராஜா தானமாக வழங்கியது. (மேலது).

180. 1674 சிக்கதேவராஜா; 'கர்நாடகச் சக்கரவர்த்தி' பட்டம். (மைசூர் தொல்லியல்துறை அறிக்கை, 1912, பக். 57).

181. 1676 சாகா சம்வத். 1598, நள; குமாரபாளையம்; ரங்கநாத செட்டியும் மற்றொருவரும் இரண்டு மண்டபங்களைக் கட்டி, அவற்றை சிக்கதேவா ஆட்சியின்போது நஞ்சை நிலத்துக்கு தானமாக வழங்கியது. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள், பக். 527).

182. 1676 தமிழ்; சாகா சம்வத். 1598, நள; சத்தியமங்கலம்; மைசூரை ஆளும் வீரப்பிரதாப சிக்கதேவராஜா; உடுவாங்க நாட்டின் சத்தியமங்கலத்தில், சிந்தாமணி

*மற்றும் பவானி ஆறுகள் கலக்குமிடமான துர்வாஸ ஷேத்திரம் அமைந்துள்ள தவளகிரி மலையின் குமாரசாமி கோவில் கட்டிடம் குறித்துப் பேசுகின்றது. (209/1909; மெட்ராஸ் தொல்லியல் துறை அறிக்கை, 1910, பக். 116).*

*183. 1678* *தெலுங்கு; சாகா சம்வத். 1600, காளயுக்தி; மதுரை; முத்து அழகிரி நாயுடுவால் பிராமணர் ஒருவருக்கு கிருஷ்ணாபுரம் கிராமத்தைத் தானம் வழங்கியது தொடர்பானது. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 20).*

*184. 1679* *சாகா சம்வத். 1601; திருக்கோஷ்டியூர் (திருப்பத்தூர், ராம்நாட்) ; ரகுநாத திருமலை சேதுபதி வழங்கிய நிலதானம் குறித்தானது. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். பக். 1189).*

*185. 1679* *சாகா சம்வத் 1601; திருவாடனை; ஹிரண்யகர்ப சேதுபதியால் சிவன் கோவிலுக்கு வழங்கப்பட்ட நிலதானம். இரண்டு தாமிரப் பட்டயங்கள் கொடை. (சீவெல். பக். 302).*

*186. 1679* *செரிங்கப்பட்டிணம்; சிக்கதேவராயர் 'கிழக்கில் பாண்டிய அரசர் சொக்கநாதரை போரில் வென்றது. பெருநகரமான திர்புரா (திருச்சினாப்பள்ளி) வையும் வளநகரமான அனந்தபுரி யையும் கைப்பற்றியது'.* (E.C, Mysore, I, S.R., No 151).

*187. 1679* *தெலுங்கு; சாகா சம்வத். 1602, சித்தாத்ரி, வெள்ளிக்கிழமை, அக்ஷயத்திரிதையின் மூன்றாம்நாள் வைசாக, பிரகாச முன்னிரவு. ரங்கநாத சுவாமிகள் முன்னிலை. சந்திர புஷ்கர்ணிக்கரை. விஸ்வநாத நாயக்கரின் மகன் முத்தாலகத்திரி நாயக்கர் தன் முன்னோரின் பெயரில் வழங்கிய தாமிரபரணியின் தெற்குக்கரையில் அமைந்துள்ள ஆராம்பன்னா கிராமத்தின் வருவாய் 600 மளுக்குகள். ஸ்ரீரங்கம் ரங்கஷேத்திர சித்திரை வீதியிலுள்ள கோபுரத்தின் மாடம். இந்தத் தாமிரப்பட்டயம் நஞ்சன்கூட்டிலுள்ள ராகவேந்திர சுவாமிகள் கோவிலிலிருந்து படியெடுக்கப்பட்டது. (மைசூர் தொல்லியல் துறை அறிக்கை, 1917, பக். 57).*

*188. 1680* தமிழ்; சாகா சம்வத். 1601 காலாவதி, சித்தார்த்தி, மகர, வியாழக்கிழமை; ராமேஸ்வரம்; ரகுநாத சேதுபதி கட்டத்தேவர் ராமநாதசுவாமியின் திருவிழாவுக்கு வழங்கிய கிராமக் கொடைகள். சங்கர குருக்களின் மகன் ரகுநாத குருக்களிடம் வழங்கியது. (பர்கெஸ், சேதுபதி கொடை. எண். 8).

*189. 1682* தமிழ்; துந்துபி; அருப்புக்கோட்டை (ராம்நாட்); திருமலை சேதுபதி ரகுநாத கட்டைத் தேவர்; பொம்மைக்கோட்டை கிராம தானம். தினமும் வணக்க முறைக்கு ஏற்பாடுசெய்த முகவரின் பண்புக்காக. (416/1914).

*190. 1683* தமிழ்; கொல்லம் ஆண்டு 858, துர்முகி (1656-7); தின்னவேலி; தின்னவேலியிலுள்ள ஒருகோவிலுக்கு வன்னிக்கூடம் தலைவரால் எழுதப்பட்ட விற்பனை பத்திரம். ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் மற்றும் திருவேங்கிநாதய்யர் பெயர்களில் எழுதப்பட்டது. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். 167).

*191. 1684* தமிழ்; சாகா சம்வத். 1606, கலியுக ஆண்டு. 4785, ரக்தாக்ஷி, வையாசி, முழுநிலவு, திங்கள்கிழமை; ஹிரண்யகர்பயாகி ரகுநாத சேதுபதி கட்டத்தேவர்; தென்னலநாட்டிலுள்ள காளையார்கோவில் சீமை ஏழுவபுரிஸ்வரர்-அகிலாண்டேஸ்வரி கோவிலுக்கு வழங்கியக் கொடை. புதுக்கோட்டை, களிக்குடி மற்றும் எட்டியன்வாயல் கிராமங்களின் சார்பானது. (பர்கெஸ், சேதுபதி கொடை. எண். 9).

*192. 1686* சாகா சம்வத். 1608; அரும்பாவூர் (பெரம்பலூர், திருச்சினாப்பள்ளி); (ரங்க கிருஷ்ண) முத்துவீரப்ப நாயக்கர்; தனது ஆட்சியின்போது மதகைச் சீரமைத்தது. (சீவெல், பக். 263).

*193. 1686* புதுக்கோட்டை (தஞ்சாவூர்), அழிந்த கோட்டை; தெற்கே பாம்பனாறு வரையில் விரிந்திருந்த கள்ளர்களின் நாடான பட்டுக்கோட்டையை ஷாஜி வென்றது தொடர்பானது. (தஞ்சாவூர் கெஜட்டியர், பக். 263).

*194. 1686* செரிங்கப்பட்டிணம்; சிக்கதேவராஜ உடையார் மதுரை பிரபுவின் படைகளை ஈரோடு நாட்டில் வென்றது. திர்புரா மற்றும் அனந்தபுரியைக் கைப்பற்றியது;

தாமராலய்யபேந்திரவை விட்டுவிலகி, அந்தோஜியுடன் போரிட்டது. குலசேகரனின் யானையைக் கைப்பற்றியது. சாம்பள்ளியில் (பவானி, கோயமுத்தூர்), ஓமலூரில், தாராபுரத்தில் தாக்குதல் நடத்தியது தொடர்பானது. (கர்நாடக தொல்லியல், மைசூர் 1, எண். 14).

195. 1687 தமிழ்; சாகா சம்வத். 1608 காலாவதி; உய்யகொண்டான் கால்வாய் அருகில் வேட்டு வாய்த்தலை (பேட்டைவாய்த்தலை?) (திருச்சினாப்பள்ளி); அக்கால்வாயின் தலைமதகில் ராணி மங்கம்மாள் குறித்த ஆதாரம். (71/1890; மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள், 1891, பக். 4 மற்றும் 8).

196. 1687 பிரபவ; ஸ்ரீரங்கம்; ரங்கநாத சுவாமிகளுக்கு ஸ்ரீரங்க கிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கரின் தாயார் அன்னமுத்தம்மாள் வழங்கிய இரண்டுகிராமங்களின் கொடை. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள், பக். 1571).

197. 1681 தெலுங்கு; சாகா சம்வத். 1613, கலியுக ஆண்டு 4792, பிரஜோத்பத்தி; திருச்சினாப்பள்ளி; சொக்கநாதரின் விதவை மனைவி மங்கம்மாள், ஒரு பிராமணருக்கு வழங்கிய கிராம தானம். (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 47).

198. 1692 தெலுங்கு; சாகா சம்வத். 1614 ஆங்கிரஸ; தின்னவேலி; மதுரை சமஸ்தானமந்துவுண்டி வகையாவைச் சேர்ந்த விஸ்வநாத நாயக்கரின் குடும்ப ஸ்ரீரங்க ராய நாயக்கர் கனககரியில் உள்ள ஒரு மசூதியை நிர்வகிக்க ஒரு முஸல்மானுக்கு வழங்கியக் கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். 53).

199. 1692 தெலுங்கு; சாகா சம்வத். 1614, முக; ஸ்ரீரங்கம்; விஸ்வநாத சொக்கநாத நாயக்கரின் மனைவி அரசி மங்கம்மாள் வழங்கிய நிலதானம். (பிற்சேர்க்கை 2, எண். 12/1888; பிற்சேர்க்கை ‘அ’. 25/1906).

200. 1693 தமிழ்; சாகா சம்வத். 1(6)15, முக, கலியுக ஆண்டு. 4794; உத்தமபாளையம் (பெரியகுளம், மதுரை); மங்கம்மாள் வழங்கிய நிலதானம். (733/1905).

201. 1695 சாகா சம்வத். 1617; தின்னவேலி; விஜயரங்க சொக்கநாத நாயக்கரின் முகவரால் திருப்புடைமருதூர் கோவிலுக்கு வழங்கப்பட்ட கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 202).

202. 1695 சாகா சம்வத். 1617, யுவ; அவினாசி; சிக்கதேவ ராயஉடையார்; அவரது பிரதானி குரு கரிமல்லையா உள்ளூர் கடவுளுக்குச் செலுத்திய பதினான்கு பணம் கொடை. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள், பக். 523).

203. 1695 (ஜுலை 11) தமிழ்; சாகா சம்வத். 1617 கொல்லம் ஆண்டு. 871, ஆடி11, வியாழக்கிழமை; அம்பாசமுத்திரம்; விஜயரங்க சொக்கநாத நாயக்கருக்கு பாண்டிய அரசர், சாகா சம்வத் 1408 ஆம்ஆண்டில் வழங்கிய சர்வமான்யக் கொடை. முல்லை நாட்டிலுள்ள தக்ஷிணகாசி யிலுள்ளக் கோவிலில் தின, மாதாந்திர, ஆண்டுத்திருவிழா தேவைகளுக்கானது. (பிற்சேர்க்கை 'அ', 1/1919).

204. 1697 கொல்லம் ஆண்டு. 873, கார்த்திகை 4; வடசேரி (அகஸ்தீஸ்வரம், திருவாங்கூர்); நாயக்கர் படையெடுப்பையடுத்து ஏற்பட்ட சேதங்கள் நீடித்ததைத் தொடர்ந்து, நாஞ்சில் நாட்டின் மக்களுக்கு பதிமூன்று ஆண்டுகளுக்கான வரிக்குறைப்புத் தொடர்பான ஆவணம். (வி. நாகம் அய்யா, திருவாங்கூர் மாகாணக் கையேடு, பக். 197-98 மற்றும் 317-18).

205. 1698 தெலுங்கு; சாகா சம்வத். 1619, ஈஸ்வர, மாஹ, வெள்ளிக்கிழமை; விஸ்வநாத-சொக்கநாத நாயக்கரின் அரசி மங்கம்மாகாரு எல்லா உரிமைகளுடனும் வழங்கிய ஆயிர்தர்ம கிராமக்கொடை. அக்கிராமத்தைச் சேர்ந்த உட்குடியிருப்புகளும் அதன் வருவாய் 400 மளுக்குகள். ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ள ரகுபதி பொக்கிஷதார் சுமந்திராதீர்த்த ஸ்ரீபட உடையாரிடம் வழங் கப்பட்டது. திருச்சினாப்பள்ளி ராஷ்டிரத்தில் அரசியின் ஸ்ரீவில்லிபுத்தூர் சீமையில் மாடத்துடன் அமைந்த மண்டபம். (மைசூர் தொல்லியல் துறை அறிக்கை. 1917 பக். 57).

206. 1700 தெலுங்கு; சாகா சம்வத். 1622, விக்ரம, தின்னவேலி; ஞானகிரியை ஆட்சிசெய்யும் ராஜாதிராஜ நரசம்ஹ தேவாவின் பண்புக்காக, ரங்க கிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கரால் தின்ன வேலியிலுள்ள சிவன் கோவிலுக்கு வழங்கப்பட்ட தானம். (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 168).

207. 1700 தெலுங்கு; சாகா சம்வத். 1622, வீஷ; மதுரை; ஸ்ரீமங்கம்மாளால் சில பிராமணர்களுக்கு வழங்கப் பட்ட பாலகிருஷ்ணா மஹாதானபுரம் கிராமக் கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண்.19).

208. 1700 சாகா சம்வத். 1622; திருமோகூர் (மதுரை), தளவாய் சேதுபதி; சிவன்கோவில் பழுது பார்த்தது. (சீவெல். பக். 295).

209. 1701 தெலுங்கு; சாகா சம்வத். 1623, விஜு (விர்ஷு); மதுரை; சுப்பராய பாகவதரின் அன்னதான நிறுவனத்துக்கு அரசி மங்கம்மாள் நிலக்கொடை வழங்கியது. பெனுகொண்டாவைத் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சிசெய்த வேங்கடதேவ மகாராயாவுக்கு, மகா ராஜாதிராஜா மற்றும் பரமேஸ்வர பட்டங்கள் வழங்கப்பட்டபோது அளிக்கப்பட்ட கொடைகள் இவை. (பிற் சேர்க்கை ‘அ‘. 3/1911).

210. 1701 தெலுங்கு; (சாகா சம்வத்) 1623 விஷு; திருச்சினாப் பள்ளி அருகிலுள்ள பாபா நத்தா தர்ஹாவுக்கு சொக்கநாத நாயக்கரின் அரசி மங்கம்மாள் தானம் வழங்கிய சில கிராமங்கள். (பிற்சேர்க்கை ‘அ‘. 19/ 1911).

211. 1704 தெலுங்கு; சாகா சம்வத். 1626 நடப்பு, தாரண; மருத்துவக்குடி (பாபநாசம், தஞ்சாவூர்) கூடுதல் மதகு உய்யக்கொண்டான் கால்வாய் அமைத்தது தொடர்பானக் கல்வெட்டு; ஒரு பிராமணரால் அமைக்கப்பட்ட கலுங்கில் சொக்கநாதயினிவருவின் அரசி மங்கம்மாகாரு. (394/ 1907).

212. 1706 தெலுங்கு; சாகா சம்வத். 1628, வைய; தின்னவேலி; ஞானகிரியை வேங்கடகிரி தேவா ஆண்டபோது, சொக்கநாத நாயக்கரின் கைம்பெண் அரசி மங்கம்மாள்

வழங்கிய கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். 110).

213. 1707 தமிழ்; சிவசைல வியாசராய மடத்திலிருந்து எடுக்கப் பட்ட தாமிரப் பட்டயம். ஏற்றுமதி இறக்குமதிக்கு சிலவரிகளை விதித்ததைப் பதிவுசெய்துள்ளது. ராமேஸ்வர மடத்தின் முகவராகச் செயல்பட்ட ராம்நாட்டின் விஜயரகுநாத சேதுபதி கட்டத்தேவர் வழங்கிய சலுகைகளையும் குறிக்கின்றது. அவருக்கு வழங்கப்பட்டிருந்தப் பட்டங்கள். தேவ நகரத்தின் பிரபு. பாண்டிய மண்டல நிறுவனர். செம்பிநாட்டு பிரபு. வைகையை வெட்டித்தடுத்து ரகுநாத சமுத்திரத்தை உருவாக்கியவர். தென்சமுத்திரத்தின் பிரபு. மூவரசர்களை வென்றான். தூங்காவூர் கூற்றத்தின் காட்டூர் என்ற குலோத்துங்க சோழநல்லூரில் வசிப்பவன். (மைசூர் தொல்லியல் துறை அறிக்கை, 1912, பக். 55).

214. 1708 தெலுங்கு; சாகா சம்வத். 1630, விக்ருதி (1710), காதுத்திகா 15, திங்கள்கிழமை; வீரப் பிரதாப வேங்கடதேவ மகாராயா, கஜாரனயஷேக்திராவில் (ஜம்புகேஸ்வரம்) வணக்கமுறையைத் தொடரவும், பிராமணர்களுக்கு உணவளிக்கவும் விஜயரங்க சொக்கநாத நாயக்கரால் வழங்கப்பட்ட கொடை. (பிற்சேர்க்கை ‘அ'. 4/1915).

215. 1708 தெலுங்கு; சிவசைலத்திலுள்ள வியாசராய-மடத்திற்கான குறிப்பிட்ட வரிகளை பாண்டிய அரியணையின் பிரபு விஜயரங்க சொக்கநாத நாயக்கர்-காஷ்யப கோத்திரம்- மடத்திற் கான வரியுடன் செலுத்தியது. (மைசூர் தொல்லியல்துறை அறிக்கை, 1912 பக். 55).

216. 1710 தமிழ்; சாகா சம்வத். 1632 கார, பங்குனி 20, சனிக்கிழமை; மதுரை; விலக்களிக்கப் பட்ட கிராமங்களிலிருந்தும் வரிவசூல் செய்யப்பட்டதைக் கண்டித்து, கோவில் ஊழியர் கோபுர உச்சியிலிருந்துக் குதித்து, தற்கொலை செய்துகொண்டதைக் குறிக்கும் ஆவணம். முத்துவீரப்ப நாயக்கரின் மகன் விஜயரங்க சொக்கநாதர் காலத்தைச் சேர்ந்த இந்த ஆவணம், சுவாரசியமாக தளவாய், பிரதானி, மதுரைக் கோட்டையின் தளபதி, சம்பிராதி (கணக்கர்), கோவில்

*நிர்வாகி, மற்றும் கோவில் பஞ்சாயத்து உறுப்பினர்களின் பெயரையும் கொண்டிருக்கின்றது. (பர்கெஸ், பக். 110-11, எண். 24).*

*217. 1710* *சாகா சம்வத். 1632; மதுரை; விஜயரங்க சொக்கநாத நாயக்கர். (சீவெல், பக். 292).*

*218. 1712* *(மார்ச், 8)- தமிழ்; சாகா சம்வத். 1634, கார, பங்குனி 10, சனிக்கிழமை; மதுரை; விஜயரங்க சொக்கநாத நாயக்கரின் ஆட்சியின்போது, சொக்கநாத சுவாமிக்கு வழங்கப்பட்ட நான்கு கிராமங்கள் கொடை குறித்த ஆவணம். இதில், படைத்தளபதி குமார தளவாய் கத்(ஸ்)தூரி ரங்கய்யன் மற்றும் பிரதானி வெங்கட கிருஷ்ணய்யன் பெயர்களும் இடம்பெற்றுள்ளன. (6/ 1915; மெட்ராஸ் தொல்லியல் துறை. அறிக்கை. 1915, பக். 116).*

*219. 1712* *அப்படியே 218.*

*220. 1713* *தமிழ்; சாகா சம்வத். 1635, விஜய; ராமேஸ்வரம்; முத்துவிஜய ரகுநாத சேதுபதி கட்டத்தேவர் ஹிரண்யகர்ப நிகழ்ச்சியை நடத்தியது தொடர்பான ஆவணம். பதினான்கு பிரா மணக் குடும்பங்களுக்கு அத்தியூத்தில் வீடுகளும் நிலங்களும் வழங்கியது. (பிற்சேர்க்கை 'அ' 9/ 1911).*

*221. 1714* *சாகா சம்வத். 1636, ஏத்தாப்பூர் (ஆத்தூர் சேலம்); தொத்த கிருஷ்ண உடையாரின் ஆட்சியின்போது (ஏதோ) விற்கப்பட்டதற்கான ஆவணம். (சீவெல். பக். 201).*

*222. 1715* *சாகா சம்வத். 1637, கொல்லம் ஆண்டு. 887; தின்னவேலி; விஜய சொக்கநாத நாயக்கரின் ஆட்சிக் காலத்தில் கோவிலுக்கு ஆதரவாக தின்னவேலியில் வழங்கப்பட்ட தனிநபர் நிலக்கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். 11).*

*223. 1715* *சாகா சம்வத். 1636 காலாவதி, ஜய, சித்திரை 12, திங்கள்கிழமை; ராமேஸ்வரம்; ஹிரண்யகர்பயாகி விஜயரகுநாத சேதுபதி கட்டத்தேவர் அறக்கட்டளை நிர்வாகத்துக்கு வழங்கிய மானியம். (பர்கெஸ், சேதுபதி கொடை. எண். 10).*

*224. 1716* *தெலுங்கு; சாகா சம்வத். 1638; ஸ்ரீரங்கம்; விஜயரங்க சொக்கநாத நாயக்கர் அறக்கட்டளை ஒன்றுக்கு வழங்கிய நிலக்கொடை ஆவணம். (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். 50).*

*225. 1717* *சாகா சம்வத். 1639, கார்த்திகை 21; மதுரை; (செங்கல்பட்டு) திருக்கழுக்குன்ற மடத்துக்கு வழங்கப்பட்ட பரிசு குறித்த தாமிரப் பட்டய ஆவணம். (மெட்ராஸ் அருங்காட்சியகம்).*

*226. 1718* *சாகா சம்வத். 1640; தளி (ஹோசூர், சேலம்); மைசூர் அரசர் கிருஷ்ண ராய உடையாரால் கட்டப்பட்ட கோபாலா கோவில் குறித்த ஆவணம். (சீவெல். பக். 195).*

*227. 1719* *தமிழ்; சாகா சம்வத். 1641, காலாவதி, விகாரி; தை 13, புதன்கிழமை; மதுரை; வத்தலகுண்டு கிராமத்தின் பத்து வகுப்புகளைச் சேர்ந்தவர்களில் எட்டு வகுப்பினர். கவுண்டன்ஸ், கோமிட்டிஸ், முகம்மதியன்ஸ் உள்ளிட்டப் பிரிவுகளின் எட்டுவியாபாரிகள் எழுதிக்கொடுத்த உறுதிமொழி ஒப்பந்தம். கிராமக் கோவில் திருவிழாவுக்கும் அதன் சடங்குகளுக்கும் தங்கள் லாபத்தில் பங்கு அளிப்பதாக உறுதிசெய்யப்பட்டுள்ளது. அந்தக்கொடை, அரண்மனை ஒப்புதலுடன் செயல்படுத்தப்படும். அரண்மனை முகவர்கள் கூளப்ப நாயக்கன், காவல் எட்டிலப்பநாயக்கன் ஆகியோர் நடத்தினார்கள். விஜயரங்க சொக்கநாத நாயக்கர், மதுரையின் ஆட்சியில் இருந்தார். (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 65 அ; பர்கெஸ், பக். 89-90. எண். 12).*

*228. 1721* *தெலுங்கு; சாகா சம்வத். 1643, சுபகிரித் (1722); திருச்சினாப்பள்ளி; விஜயரங்க சொக்கநாத நாயக்கரின் ஆட்சியின்போது, தன்வந்திரிக்கு பிரார்த்தனை செய்வதற்காக நரச பந்துலுவுக்கு வாடகையில்லாத நிலம் வழங்கியது தொடர்பானது. (பிற்சேர்க்கை ‘அ’. 1/1911; மெட்ராஸ் தொல்லியல் அறிக்கை, 1611, பக். 90).*

*229. 1722* *செறிங்கப்பட்டிணம்; சிக்கதேவ ராயா மதுரைக் கடவுளுக்கு வழங்கியது. (தொல்லியல் ஆவணம், மைசூர். எண். 64).*

*230. 1724* தெலுங்கு; சாகா சம்வத். 1646, குரோதி; தின்னவேலி; அறக்கட்டளைக்கு விஜயரங்க சொக்கநாத நாயக்கர், ஞானிகரியில் மகாதேவ ராயா ஆட்சி செய்து கொண்டிருந்தபோது கிராம தானம் செய்தது. (சீவெல்லின் தாமிரப் பட்டயம். எண். 109).

*231. 1727* தமிழ்; சாகா சம்வத். 1649, கலியுக ஆண்டு. 4828, பிராபவ; திருச்சினாப்பள்ளி; ஒரு சூத்திரப் பண்டாரக் குருவுக்கு திருச்சினாப்பள்ளி கோட்டையின் தெற்குவாசல் கோவிலில் துர்கா- காளி பூஜை செய்வதற்கு, விஜய சொக்க ரங்கநாத நாயக்கன் கொடை வழங்கியது. அப்போது கண்ணகாமாவில் வேங்கட வீம மகாராயா ஆட்சிசெய்து கொண்டிருந்தார். (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். 44).

*232. 1728* தமிழ்; சாகா சம்வத். 1650, கலியுக ஆண்டு. 4829, கீழக; திருநெட்டுங்குளம் (திருச்சினாப்பள்ளி); உள்ளூர் கோவிலுக்கு விஜயரங்க சொக்கநாத நாயக்கர் நிலதானம் வழங்கியது. (697/1909).

*233. 1729* சாகா சம்வத். 1651, கலியுக ஆண்டு. 4830, சௌம்ய; மதுரை; விஜயநகரப் பேரரசர் ஸ்ரீரங்கராயரின் பிரதிநிதியான விஜயரங்க சொக்கநாதரின் ஆட்சியின் போது, திண்டுக்கல்லுக்கு அருகில் பூபாலசமுத்திரத்தில் வசித்துவந்த ஊர்த்தலைவர் சின்னக்கதிரப்ப நாயக்கர், சுந்தர்ராஜ புரம் என்ற ஆனைப்பட்டியில் இருந்துவந்த பண்டிட்டுகளுக்கு வழங்கியக் கொடைக் குறித்தா னது. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். 33; பர்கெஸ், பக். 117-21, எண். 27).

*234. 1731* சாகா சம்வத். 1653, கொல்லம் ஆண்டு. 907, விரோதிகிரித்; தின்னவேலி; சிவன் கோவிலைச் சேர்ந்தப் பெண்களுக்கு வழங்கப்பட்ட வீடு குறித்தான ஆவணம். வைஷ்ணவ அடையாளங்களுடன் அந்தப் பத்திரம் இருந்தது. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். 56).

*235. 1733* தமிழ்; சாகா சம்வத். 1655, சமயவரம் (திருச்சினாப்பள்ளி); ஞானகிரி நகரத்தை வீர வேங்கடதேவ மகாராயா ஆட்சிசெய்தபோது, விஜயரங்க சொக்கநாதரின் மனைவி மீனாட்சி ராணி அம்மாள் வழங்கியக் கொடை. (சீவெல், பக். 267).

*236. 1733* தெலுங்கு; சாகா சம்வத். *1654*, கலியுக ஆண்டு. *4833*, பிரமாதீச; திருச்சினாப்பள்ளி; திருச்சினாப்பள்ளிக் கோட்டை வாயில் அறக்கட்டளைக்கு விஜயரங்க சொக்கநாத நாயக்கரின் மனைவி மீனாட்சி வழங்கியக் கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். *49*).

*237. 1733* சாகா சம்வத். *1655*; திருச்சினாப்பள்ளி; மகூதிக்கு மீனாட்சி வழங்கிய நிலக்கொடை. (சீவெல், *1*, பக். *268*).

*238. 1734* சாகா சம்வத்.- *1656*; திருச்செங்கோடு; மைசூர் அரசர் கிருஷ்ண ராஜ உடையார், கோவிலுக்கு வழங்கிய நிலதானம். (சீவெல், *1*, பக். *203*).

*239. 1735* தமிழ்; சாகா சம்வத். *1656*, காலாவதி, ஆனந்தா *(1734)*, கார்த்திகை, அபாரபக்ஷ- திரியோதசி, ஸ்வாதி, திங்கள்கிழமை; ராமேஸ்வரம்; ஹிரண்யகர்பயாகி குமாரமுத்து ரகுநாத சேதுபதி; பழனி வேலாயுத சுவாமி கோவிலுக்கு வழங்கிய நிலக்கொடை. (பர்கெஸ், சேதுபதி கொடைகள். எண். *14*).

*240. 1736* தமிழ்; சாகா சம்வத். *1658*, நள; மதுரை; குமாரமுத்து விஜயரகுநாத சேதுபதியின் மகனும் ஹிரண்யகர்ப யோகி ரகுநாத சேதுபதியின் மருமகனுமான முத்துக்குமார விஜய ரகுநாத சேதுபதி, ஒரு பிராமணருக்கு நிலதானம் வழங்கியது தொடர்பானது. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள். எண். *23*).

*241. 1739* தமிழ்; சாகா சம்வத். *1661*, கலியுக ஆண்டு. *4841*, பிரபவ *(1747)* ; திருச்சினாப்பள்ளி; 'உலகத்தை ராமராயா ஆண்டுகொண்டிருந்தபோது', காமாட்சி நாயக்கர் என்பவரால், ஒரு முஸல்மான் குருவுக்கு பள்ளிவாசலை நிர்வகிக்க வழங்கப்பட்டக் கொடை. (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். *43*).

*242. 1744* சாகா சம்வத். *1666*; அனுமந்தக்குடி; முத்துக்குமார விஜயரகுநாத சேதுபதி; ஒரு முஸல்மானுக்கு வழங்கிய நிலதானம். (சீவெல். *1*, பக். *43*).

*243. 1750* சாகா சம்வத். *1672*; திண்டுக்கல்; விஜயரங்க சொக்கநாத நாயக்கரின் ஆட்சியின் போது கிராமக் கோவில்கள் சிலவற்றை தளவாய் நாராயணப்பா மறுபுத்தாக்கம்

செய்தது. (மெட் ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். பக். 992).

244. 1756 கனாரீஸ்; சாகா சம்வத். 1678, தாதிரி, கலியுக ஆண்டு. 4857; அவனாசி கிருஷ்ண ராஜ வட்டேய மஹிசூரு ஸ்ரீரங்கப்பட்டிணக் கோவில்களை சீரமைத்தது. (201/1909).

245. 1760 சாகா சம்வத். 1682, விக்ரம; சத்தியமங்கலம்; கிருஷ்ணராஜ உடையார்; குத்தநாயக் கன்பாளையம், திருமலைச்செட்டிப்பாளையம் ஆகிய கிராமங்களை 7920 பகோடாக்களுக்கு ராமவதானி மற்றும் இரண்டு பிராமணர்களுக்கு விற்றது தொடர்பானது. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். பக். 551).

246. 1760 சாகா சம்வத். 1682; கொள்ளேகால்; மைசூர் கிருஷ்ணராஜ உடையார்; கர்ணம் ஒருவரின் மூதாதையர்களுக்கு வழங்கிய நிலக்கொடை. (மேலது, பக். 553).

247. 1760 சாகா சம்வத். 1682, விக்ரம; கோயமுத்தூர்; சிக்க கிருஷ்ண ராஜா; புத்தூர் மற்றும் கனியூரில் வழங்கியக் கொடைகள். (சீவெல்லின் தாமிரப் பட்டய ஏடுகள், எண். 189).

248. 1762 சாகா சம்வத் 1684; சத்தியமங்கலம்; கிருஷ்ணராஜ உடையார்; ஒரு விற்பனைப் பத்திரம் (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். பக். 551).

249. 1763 சாகா சம்வத். 1685, கலியுக ஆண்டு. 4864, சுபானு; ஆனைமலை (பொள்ளாச்சி, கோயமுத்தூர்); ஸ்ரீரங்கப்பட்டிணம் கிருஷ்ணராஜ உடையார்; சில பிராமணர்களுக்கு மைசூர் ராஜாவின் முகவரான மாதய்யா நிலக்கொடை வழங்கியது. (சீவெல்லின் தாமிரப் பட்டயங்கள். எண். 171).

250. 1765 தமிழ்; சாகா சம்வத். 1687, கலியுக ஆண்டு. 4866, பார்திவ, தை 4; மதுரை; மதுரை நாட்டை ராயா விஜயரகுநாத தொண்டைமானார் ஆளும்போது; பழனிமலையின் பாலசுப்பிர மணியக் கடவுளுக்கு காரியாப்பட்டியிலுள்ள நிலத்தை சில காரியங்களுக்காகவும் அறக்கட்டளைக்காகவும் தானம் வழங்கியது. (பிற்சேர்க்கை ‘அ‘. 22/1918).

251. 1771 சாகா சம்வத். 1693; தின்னவேலி; ராமலிங்க நாயக்கரால் கரிவலம்வந்தநல்லூர் சிவன்கோவிலுக்கு வழங்கிய நிலதானம். (சீவெல். எண். 201).

252. 1797 தமிழ்; சாகா சம்வத். 1719 பிங்கல, கலியுக ஆண்டு. 4898; நாரணபுரம் (பல்லடம், கோயமுத்தூர்); கொடுமங்கலம் உட்கோட்டத்திலுள்ள வாராக்க நாட்டு பல்லடக் கிராமத்தை, செட்டி ஒருவர், மதுரை நாயக்கர்களின் பெயரில் தானம் வழங்கியது தொடர்பானது. (பிற்சேர்க்கை 'அ' 1 மற்றும் 2/1910).

**மற்றவை தேதிகள் இடம் பெறாத கல்வெட்டு ஆவணங்கள்.**

253. காயத்தூர் (கயத்தார்?) (கோவில்பட்டி, தின்னவேலி); கயத்தார் மாகாணத்திலுள்ள நிலங்களை கொற்கைத் தலைவர் இருங்கோல் பிள்ளை, எல்லைப் பிரச்சனையையொட்டியத் தீர்ப்பை ஏற்று, நிலதானம் செய்தது. தீர்ப்பு செய்தது, விஜயரங்க சொக்கலிங்க நாயக்கர். (சீவெல்லின் தாமிரப் பட்டயம். எண். 57).

குறிப்பு : மதுரையில் நாயக்கர் ஆட்சியை நடத்திய விஜயரங்க சொக்கநாத நாயக்கரின் காலத்துடன் கொடுக்கப்பட்டுள்ள ஆண்டு, அதாவது சாகா சம்வத். 1549, கொல்லம் ஆண்டு. 803 (1627) ஒத்துப்போகவில்லை.

254. முக்கனாங்குறிச்சி (கரூர், திருச்சினாப்பள்ளி); விஸ்வநாத நாயக்கரின் ஆட்சியின்போது நடந்த ஒவ்வொரு திருமணத்துக்கும், கடவுளுக்கு ஒரு படகா தானியமும் இரண்டு பணமும் செலுத்த தீர்மானித்த ஆதாரம். (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். பக். 1510).

255. தமிழ்; கீழக்கரை (ராம்நாட்); அச்சு(த)ராயா மற்றும் தும்முசி நாயக்கர் ஆகியோரைக் குறிக்கின்றது. (398/1907).

குறிப்பு : கொடுக்கப்பட்டுள்ள ஆண்டு, அதாவது சாகா சம்வத். 146(.). அது, 1538க்கும் 1547க்கும் இடையிலானதாக இருக்க வேண்டும்.

256. கிரந்த; சாகா சம்வத். 1515, விஜய; கீழக்கரை; ஜதிலவர்மன் ஸ்ரீவல்லபா; தனது முப்பதாவது ஆண்டுநிறைவின்போது, அறுபத்தொன்பது பிராமணர்களின் தலைவரான அய்யங்காரபா வின் வேண்டுகோளை ஏற்று, பெயரை பெத்தப்ப நாயக்க சமுத்திரம் எனச் சூட்டியது தொடர்பான ஆவணம். (பிற்சேர்க்கை 'அ'. 1/1912).

257. ஸ்ரீவில்லிபுத்தூர் (ராம்நாட்); விஸ்வநாத நாயக்கர், வீரப்ப நாயக்கர் மற்றும் கிருஷ்ணப்ப நாயக்கர் ஆகியோர், கிருஷ்ணசாமி கோவிலைக் கட்டி, ருக்மணி, சத்யபாமா மற்றும் கிருஷ்ணர் சிலைகளை பிரதிஷ்டை செய்ததும், ஒருபகுதி நிலத்தை தானம் வழங்கியதும். (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். பக். 1183).

குறிப்பு : ஆண்டுச் சுழற்சியில் 'பவ' ஆண்டு கொடுக்கப்பட்டுள்ளது. அந்தவகையில் 1574 ஆக இருக்கலாம்.

258. கீரனூர் (பழனி, மதுரை); காளஹஸ்தியப்ப முதலியார் மற்றும் இருபத்துநான்கு நாட்டுக் கவுண்டர்கள், விஸ்வநாத நாயக்கர் ஆட்சியின்போது, பிராமணர்களுக்கு இலவச தானமாக வழங்கியது. (மெட்ராஸ் மாகாணக் கல்வெட்டுகள். பக். 1023).

259. ராமேஸ்வரம்; அழிந்துபட்ட பிரகாரத்தை முதலில் சீர்செய்த ராமநாதா, பின்னர் சைவ ஆகமங்களின் படி எல்லாச்சடங்குகளும் நடைபெறும்வண்ணம் சீர்படுத்தினார். (பர்கெஸ், பக். 58, எண். 7).

குறிப்பு : ஆண்டுச்சுழற்சி கல்வெட்டில் 'காளயுக்தி'யாகக் குறிக்கப்பட்டுள்ளது. அதன்படி, 1618 ஆம்ஆண்டாக இருக்கலாம்.

260. ராமேஸ்வரம்; விஜயரகுநாத சேதுபதி கட்டயத் தேவரால், பள்ளியறைக்கு வெள்ளி ஊஞ்சல் வழங்கப்பட்டது. (மேலது, பக். 60, எண். 13).

261. தமிழ்; பிரம்மதேசம் (அம்பாசமுத்திரம், தின்னவேலி); விஸ்வநாத நாயக்க-கிருஷ்ணப்ப நாயக்கரின் மகனான வீரப்ப நாயக்கர், மூத்தோர் பண்பைப் போற்றி கோபுரம் எழுப்பியது தொடர்பான ஆவணம். (377/1916).

## பிற்சேர்க்கை - உ

## 'மதுரைத்தல-வரலாறு'

## (புனிதநகர் மதுரைப் பற்றிய ஒரு மதிப்பீடு)

சிவனும், புத்திரன் உக்கிரனும் ஆண்டுமுடித்த நாற்பதுலட்சத்து அறுபத்தைந்தாயிரத்து, அறுநூற்று ஐம்பது ஆண்டுகளுக்குப் பின்னால், குலசேகரனிடம் மதுரையின் அரியணை வந்து சேர்ந்தது. குலசேகர பாண்டியன் காலத்திலிருந்து பராக்கிரம பாண்டியன் காலம்வரை, 'வாளுடன் விழிப்பாகத் தூங்கிய'[1] -வாளால் வலித்திருந்த- பாண்டியர்களின் பாதுகாப்பான ஆட்சி, மதுரையில் நடந்துவந்தது. கலியுகத்தில், சாலிவாகன ஆண்டு 1246-ல், ஐநூற்று ஓர் ஆண்டுகளுக்குப் பின்னர், ருத்ரோத்கரி ஆண்டின் ஆனிமாதத்தில் பேரழிவாக, ஆதில்சுல்தான் மலுக்கு நேமியான் தில்லியிலிருந்து மதுரைக்கு வந்தான்.[2] பராக்கிரம பாண்டியனை தில்லிக்கு அனுப்பி விட்டு, மதுரையைக் கைப்பற்றிக் கொண்டான். ருத்ரோத்கரி ஆவணியிலிருந்து குரோதன வரையில் மூன்றாண்டு காலம், இமயத்திலிருந்து சேதுவரை முஸ்லீம்களின் கையாட்சியாக இருந்தது. (துலுக்காணியம்). யாருக்கு வெற்றி என்பது தெரியாமல், போர் நீடித்த நிலையில், யாருடையது மேலாட்சி எனத் தெளிவான நிலை இல்லாது, உலாபதிகான் அக்ஷய ஆண்டில் வந்துசேர்ந்தான். அவனும் அடுத்த ஆறுஆண்டுகள், பிரஜோத்பதிவரை ஆண்டான். (கி.பி. 1326-31). பின்னும் உலாபதிகான் மதுரையை ஆங்கிரஸ ஆண்டிலிருந்து பவ ஆண்டுவரையில் மூன்றாண்டு காலம் ஆண்டான். அடுத்து, அவனது மைத்துனன் குதிபதிக் (குத்புதீன்?), யுவ ஆண்டிலிருந்து பிரமாதிச ஆண்டுவரையில், மதுரையின் ஆட்சியாளனாக இருந்தான்.[3]

அவனுக்குப் பின்னால் மற்றொருவன் நகலாதிக், விக்ரம ஆண்டின் ஆடி மாதத்திலிருந்து, விஜய ஆண்டுவரை (கி.பி. 1340-53) மதுரையைக் கைக்கொண்டிருந்தான். பின்னர் சவவுத் மலுக்கன் மற்றும் ஆத்துமருகன் சர்வஜித் ஆண்டிலிருந்து விளம்பி (கி.பி. 1347-58) ஆண்டு வரை ஆண்டனர். அவர்களையடுத்து, புங்கதிக்மலுக்கனிடம் விகாரி ஆண்டிலிருந்து சாதாரண ஆண்டுவரை (கி.பி. 1359-70) மதுரை ராஜ்ஜியம் சிக்கியிருந்தது. சாகா ஆண்டு

*1246 முதல் 93 வரையிலான நாற்பத்தெட்டு ஆண்டுகள் முகம்மதியர்களின் கையில் மதுரை இருந்தது.*[1]

*இவ்வாறாக, முஸ்லீம்களின் ஆதிக்கத்தில் சிக்கிக்கொண்ட மதுரை, 1293 விரோதிகிருத், கி.பி.1371 ஆம்ஆண்டில் மைசூர்*[2] *ஆட்சியாளரின் பாதுகாவலன் குமார கம்பணன் மதுரையை ஆண்ட முஸல்மான்களைத் தோற்கடித்து, ஆட்சியைக் கைப்பற்றினான்.*[4] *மூடப்பட்டுக்கிடந்த சிவ, விஷ்ணு ஆலயங்களைத் திறந்தான். திருவாலவாயுடையநாயனார் கோவிலின் கர்ப்பகிரகத்தைத் திறந்தபோது, பலஆண்டுகளாக மூடிக்கிடந்தக் கோவிலுக்குள் விளக்குகள் எரிந்து கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியமுற்றான். கடவுள் சிலைகளை நேற்றிரவுதான் பிரதிஷ்டை செய்ததுபோல, மாலைகள் அணிவிக்கப்பட்டு இருந்தன. குமார கம்பணன் தனது தவறை உணர்ந்து உடனடியாக தன் கன்னத்தில் போட்டுகொண்டு, பரிகார வேலைகளில் ஈடுபட்டான். கடவுள் வழிபாடுகளுக்கு, பல திருவிளையாடல் கிராமங்களைக் கொடையாகக் கொடுத்தான். பல்வேறு ஆபரணங்களை அள்ளி அணிவித்தான். தினமும் பூஜைகள் நடப்பதற்கு பற்பல மானியங்களை அறிவித்தான். இவ்வாறாக, அவனும் அவன் மகன் எம்பனா உடையார் (ஹீயுவாண்ணா), மைத்துனன் (அல்லது மருமகன்) பொற்காசுடையார், விரோதிகிருத் ஆண்டிலிருந்து சித்ரபானு (கி.பி. 1371-1402) வரை முப்பத்துமூன்று ஆண்டுகள் ஆண்டனர். அவர்களின் ஆட்சிக்காலத்தில் சிவ, விஷ்ணு கோவில்களுக்கு பல்வேறு மானியங்களுடன் நகைகள் வழங்கினர். தின பூஜைகளுக்கு ஏற்பாடு செய்தனர்.*

*அதன்பின்பு, சாகா ஆண்டு 1327 சுபானுவிலிருந்து விபவ ஆண்டு (கி.பி. 1403-48) வரை, லக்கனா நாயக்கர் மற்றும் மாதனா நாயக்கர் ஆகியோர் நாற்பத்தேழு ஆண்டுகள் ஆண்டனர்.*

*பின்னர், சுக்ல வருஷம் 1374 -ல் லக்கனா நாயக்கர் ஒதுங்கிக்கொண்டதும், பாண்டிய அரசனின் காமக்கிழத்தி அபிராமியின் மகன் காளையார்கோவில்-சுந்தரத்தோள்- மாவாலி வானாதிராயர், காளியார் சோமானார், அஞ்சாதபெருமாள் முத்தரசர் ஆகியோர், அடுத்தடுத்து பதவியேற்று நாற்பத்தெட்டு ஆண்டுகள், தங்கள் இருப்பில் மதுரையைக் கொண்டிருந்தனர்.*[5]

*பின்னர், பிங்கள ஆண்டு (கி.பி. 1497), சாகா 1422ஆம் ஆண்டின் வைகாசியில் நரசய்ய நாயக்கர் வந்துசேருகின்றான்.*[6] *ராமேஸ்வரம் கோவிலில் கடவுளை வணங்கியவன் அதே கையோடு அந்தக்கோட்டையைக் கைப்பற்றிக்கொண்டான். தென்னநாயக்கர் ஒரு பதினைந்து ஆண்டுகளுக்கு அந்த ஆண்டின் ஆவணியிலிருந்து*

ஆங்கிரஸ ஆண்டுவரை (கி.பி.1512) வரை ஆளுகின்றான். அதன்பிறகு, ஸ்ரீமுகாவிலிருந்து (கிபி.1513) சாகா 1437ஆம் ஆண்டின் தாது (கி.பி. 1517) வரை, ஒரு நான்காண்டு காலம் நாச்சியா பிள்ளை என்பவனும் மதுரையை ஆண்டு கொள்கின்றான். மதுரை என்னும் பந்து, அடுத்து குருகுரு திம்மப்ப நாயக்கரின் கையில் வந்து விழுகின்றது. அவன் ஈஸ்வர ஆண்டிலிருந்து விஷ்ணு ஆண்டுவரை சாமியின் பெயர்களில் ஆட்சிசெய்கின்றான். பின்னர், சித்ரபானுவிலிருந்து சுபானுவரை இரண்டாண்டு காலம் கி.பி. 1521-23 வரை, கொட்டியம் காமய்ய நாயக்கன் கையில் மதுரை சொட்டாங்கல் ஆகின்றது. தாரணாவிலிருந்து சர்வசித் வரையிலான (கி.பி.1524-27) நான்காண்டுகள், சின்னப்ப நாயக்கனின் ஆட்சி நடக்கின்றது. ஐயாக்கரை வையப்ப நாயக்கர் ஓர் ஐந்தாண்டுகாலம் சர்வதாரியிலிருந்து நந்தனாவரை (1527-32) ஆண்டு பார்க்கின்றான். விஜய ஆண்டிலிருந்து விபவ ஆண்டு முடிய ஒரு ஒன்பது ஆண்டுகள் கி.பி. 1533-42 வரை, விஸ்வநாத நாயக்கராயன் ஆண்டு முடிக்கின்றான்.[7] வரதா என்பவனும் சுபகிருத் ஆண்டில் நாற்காலியில் அமர்ந்து பார்த்துவிடுகின்றான். (கி.பி. 1542-43). தும்பிச்சி நாயக்கனையும் அந்த ஆசை விடவில்லை. குரோதி ஆண்டின் சுபகிருத்திலிருந்து கார்த்திகை வரையிலான ஓராண்டுகாலத்தை கழித்துக் கொள்கின்றான். விஸ்வநாத நாயக்கராயன் குரோதி மார்கழியிலிருந்து விஸ்வாவசு வரையிலான (கி.பி. 1544-45) ஓராண்டு ஏழுமாதங்களை நகர்த்திக் கழிக்கின்றான். வித்தலராஜா பிரபவ ஆண்டிலிருந்து பிங்கள (கி.பி.1546-57) ஆண்டுவரை நெடுக பதிமூன்றாண்டுகள் கழிக்கின்றான். திம்மப்ப நாயக்கர் செல்லப்ப நாயக்கர் மற்றும் பட்டுக்கோட்டை-வீரப்ப நாயக்கர் ஆகிய மூன்று அரசர்களும் காளயுக்தியிலிருந்து ரௌதிரி கார்த்திகை வரையில் (கி.பி. 1558-60) வரையில் பங்குபோட்டுக் கொள்கின்றனர். ஆக, சாகா ஆண்டு 1446 முதல் சாகா ஆண்டு 1485 வரையிலான (கி.பி. 1524-63) முப்பத்தொன்பது ஆண்டுகளில், இருபத்துமூன்று நபர்கள் மதுரையை ஆட்சி செய்துள்ளனர்.

சாகா 1481 ஆண்டில் (கி.பி. 1559) நடப்பு ரௌதிரி (கி.பி. 1560), மார்கழி, கூத்தியம் நாகம நாயக்கர் மகன் விஸ்வநாத நாயக்கர், ராயர்களின் உத்தரவின்பேரில் மதுரையை ஆளு கின்றான். ஆங்கிரஸ வைகாசிவரையிலான பன்னிரெண்டு ஆண்டுகள், கி.பி. 1559-72 வரை நீடித்த அவனது ஆட்சி, அவன் மரணத்தோடு முடிகின்றது. அதையடுத்து, ஆனியில் பதவி யேற்ற விஸ்வநாத நாயக்கரின் மகன், கிருஷ்ணப்ப நாயக்கர் விஷு ஆண்டின் வைகாசிவரை ஒன்பது ஆண்டுகள் பதவியில் கழித்துவிட்டுக் காலமாகின்றான். அந்தஆண்டின் ஆனியிலிருந்து மன்மத வைகாசிவரை கி.பி. 1581

முதல் 1595 வரையிலான, பதினான்கு ஆண்டுகள் மதுரையின் அரியணை கிருஷ்ணப்ப நாயக்கரின் மகன் வீரப்ப நாயக்கரால் அலங்கரிக்கப்படுகின்றது. அதே ஆண்டிலிருந்து ஏழாண்டுகாலம் சுபகிருத் ஆனி, கி.பி. 1595-1602 வரையில், வீரப்ப நாயக்கரின் மகன் கிருஷ்ணப்ப நாயக்கரிடம் மதுரை மெழுமையடைகின்றது. அவன் இறந்து போகின்றான். அதேஆண்டின் புரட்டாசியிலிருந்து பிளவங்கவரையிலான கி.பி. 1602-07 ஐந்தாண்டு காலம் குமார கிருஷ்ணப்ப நாயக்கரின் சகோதரன் விஸ்வநாத நாயக்கர் மண்ணுலகை ஆட்சிசெய்துவிட்டு, விண்ணுலகு ஏகுகின்றார். அவரது சகோதரன் கஸ்தூரி ரங்கப்ப நாயக்கன் பதவியேற்ற எட்டாம்நாள், ஆற்றுக்கு அந்தப் பக்கத்திலுள்ள சந்தியா மண்டபத்தில், கொல்லப்பட்டு பிணமாகக் கிடந்தான். இறந்தவனின் மகன் முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர் அந்த ஆண்டின் பங்குனியிலிருந்து துந்துபி கார்த்திகைவரை கி.பி. 1608-22 வரையிலான பதினைந்தே முக்கால் ஆண்டுகள் ஆண்டுவிட்டு இயற்கையாக மாண்டான். துந்துபி ஆண்டின் மார்கழி ஏழாம்நாள் முத்துவீரப்ப நாயக்கரின் சகோதரர் முத்து திருமலா நாயக்க ராயன் ஆளுகின்றான். மீனாட்சி சுந்தர்ரேஸ்வரரின் பக்திக்குப் பாத்திரமாகி, பல ஆபரணங்களை கடவுள்களுக்கு அன்பளிக்கின்றான். புதுமண்டபம் கட்டுகின்றான். ஆண்டுதோறும் விழா நடக்க தெப்பக்குளம் வெட்டுகின்றான். தங்க அரியாசனம் செய்கின்றான். தந்த வேலைப்பாடுகளுடனான தேரை செய்விக்கின்றான். வைரங்கள் பதித்த ஆசனங்கள் தயாரிக்கின்றான். அதில் முத்தும் பவளமுமாக இழைக்கின்றான். சிறப்புவாய்ந்தக் கோவில்களாக ஏழுகோவில் கட்டு மானங்களுக்கு உத்தரவிடுகின்றான். நாள்தோறும் பூஜைகள் செய்வதற்கு 44,000 பொன் வருமானம் கிடைக்கும்படி ஏற்பாடுகள் செய்கின்றான். வரியற்ற கிராமங்களை கோவில்களுக்குத் தானமாக விடுக்கின்றான். அவற்றில் பணிசெய்ய பணியாளர்களையும் நிர்வாகிகளையும் நியமிக்கின்றான். மேலும், அவன் தனித்தே, நாள்தோறும் அன்னதானம் அளிக்கின்றான். திருவிழாக்களை வேறெங்கும் பிரமாதமாக நடக்காத அளவில், தானே மேற்பார்வையிட்டு நடத்துகின்றான். சித்திரைத் திருவிழாவுக்கென்றே அழகருக்கு புதிதாக தேர் ஒன்றைக் கட்டுவிக்கின்றான். திருவிழா கொண்டாட்டம் ஆகின்றது. அவன் பிரார்த்தனை செய்யக் கோவிலுக்கு வரும்போதெல்லாம் பாதகாணிக்கையாக 1,000 பொன்களை செலுத்துவது வாடிக்கையாகக் கொண்டிருந்தான். இந்தவகையில் அவன், துந்துபியின் மாசி ஏழாம்நாளிலிருந்து விளம்பியின் மாசி நாலாம்நாள் வரை, முப்பதாறு ஆண்டுகள் (கி.பி. 1623-1659) ஆட்சியில்

நீடித்திருந்த அவன், விளம்பி மாசி நாலாம்நாள் செவ்வாய்க்கிழமை இரவு காலமானான். விளம்பியின் பங்குனி கி.பி. 1659 லிருந்து விகாரியின் வைகாசிவரையில் மூன்றுமாதங்கள் முத்துவீரப்ப நாயக்கர் அந்த இடத்தை ஆண்டார். அதன்பின்னர் இருபத்துநான்கு ஆண்டுகள் விகாரியின் கி.பி.1659 ஆனியிலிருந்து முத்துவீரப்ப நாயக்கரின் மகன் சொக்கநாத நாயக்கர் ஆட்சிசெய் தான். அவனது காலம் ஆனிமாதம் நாலாம்நாளுடன் முடிவுற்றது.

அதன்பின்பு, ரங்க கிருஷ்ணப்ப முத்துவீரப்ப நாயக்கர் மதுரையின் ஆட்சிபீடத்துக்கு வருகின்றான். ருத்ரோத்கிரி கி.பி. 1683ஆம் ஆண்டின் அய்ப்பசி 17ஆம் நாளிலிருந்து பிரமோதுதா ஆண்டு, கி.பி. 1690 வரையிலான ஏழு ஆண்டுகள் நீடிக்கின்றது, அவனது ஆட்சி. அவனது மகன் விஜயரங்கமுத்து சொக்கநாத நாயக்க ராயன் கைக்குழந்தையாக இருந்ததால், அவனது பெயரில் பாட்டி சிலகாலம் ஆட்சி செய்தாள். இந்த காலகட்டத்தில்தான் பிராமணக் குடியிருப்புகளான அக்ரஹார பிரதிக்ஷைகளுக்கு அடிகோலப்பட்டது. சத்திரங்களுக்கும் தங்குமிடங்களுக்கும் பெரும்ஆதரவு அளிக்கப்பட்டது. பிராமணர்களுக்கு மானியங்களும் கொடைகளும் அள்ளிக் கொடுக்கப்பட்டன. அவனது ஆட்சி தாத்தா திருமலை நாயக்கரின் ஆட்சிக்கு ஒப்பானதாகக் கருதப்பட்டது. மங்கம்மாளின் இறப்புக்குப்பின்பு, விஜயரங்கமுத்து சொக்கநாத நாயக்கன் அரசாட்சியை மிகத் துல்லியமாக திருமலை நாயக்கனைப்போலவே நடத்தினான். இவ்வாறாக இருக்கையில் ஒருநாள், அவன் மாறுவேடத்தில் நகருலா சென்றிருந்தபோது, கோவில்களில் வழிபாடுகள், சேவைகள் எதுவும் முறையாக நடைபெறாமலிப்பது கண்டான். அரண்மனைக்குத் திரும்பிய அவன், மறுநாள் அனைத்துக்கோவில்களின் நிர்வாகிகள் மற்றும் அமைச்சுப் பணியாளர்களுக்கும் (ஸ்தலத்தார் மற்றும் பாரிஜநாட்டார்) அழைப்புவிடுத்து, 44,000 பொன்கள் அளிக்கப்பட்டும் ஏன் ஏழ்நிலையில் பூஜைகள் நடக்கின்றன என்று விசாரணை நடத்தினான். அவர்களிடமிருந்துக் கிடைத்த பதில், அவனுக்குத் திருப்தியைக் கொடுக்கவில்லை. மாறாக, கோபம் கொண்டான். கோவில் நிர்வாகத்தின் கீழுள்ள நிலங்கள், வரி முதலியவற்றுக்கு பறிமுதல் செய்யப்பட்டுள்ளதாகவும், அதிலிருந்து கிடைக்கும் வருவாய் வேறுவழிகளில சென்றுவிடுவதாகவும், இருக்கும் தொகையில் ஏழு கோவில்களின் பூஜை, புனஸ்காரங் களுக்குப் போதுமானதாக இல்லை என்று அறிந்து வேதனைப்பட்டான். மேலும் சில கிராமங்களுக்கு வரிவிலக்கு அளித்து, வழிபாடு, அன்னதானம் உள்ளிட்ட கோவில் நிகழ்ச்சிகள் தொய்வின்றித் தொடர்ந்து நடக்க உத்தரவிட்டான்.

*இறைநாட்டத்தில் அதிக ஈடுபாடுகொண்டிருந்த அவன், நாற்பது ஆண்டுகள் ஆட்சிசெய்தான். விரோதிகிருத் கி.பி. 1731ஆம் ஆண்டின் மாசிமாத சிவராத்திரித் திருநாளில் அவன் நேரடி சிவலோகம் பூண்டான். அதையடுத்து, அவன் மனைவி மீனாட்சி விரோதிகிருத் மாசியிலிருந்து சித்தார்த்தி வைசாகி வரையில், ஒன்பது ஆண்டுகள் தனக்கு முடிசூட்டிக் கொண்டு, தனது சகோதரன் வெங்கட பெருமாள் நாயக்கனின் துணையுடன் ஆட்சிசெய்தாள்.*

*சாகா ஆண்டின் 1668, கி.பி. 1739, வைகாசி 30 ஆம் நாளிரவு, திருமலை நாயக்கரின் மகன், விஜயகுமார முத்துத்திருமலை நாயக்கரும், சேதுபதியின் பாதுகாவலன் வெள்ளையன்-சேர்வைக்காரன் இருவரையும் சந்தேகான்-படேகான் ஆகியோர் திண்டுக்கல்லைக் கைப்பற்றிவிட்டதாக தகவல் வந்தடைகின்றது. உடனே கோவில் நிர்வாகத்தின் அனைத்துப் பணியாளர்களின் உதவியுடன் மீனாட்சி சுந்தரேஸ்வரர் சிலைகள் மற்றும் கூடல்-அழகர் (விஷ்ணு) சிலைகளை அப்புறப்படுத்தி, வானரவீர மதுரை (மானாமதுரை)க்கு எடுத்துச் சென்றுவிடுகின்றனர். அங்கே சேதுபதி இரண்டாண்டுகாலம், 'கடவுள்களுக்கு அனைத்துவிதமான நிர்மாணங்களுடன் பூஜை, புனஸ்காரங்கள், உணவு, தண்ணீர் உள்ளிட்டவை வழங்கப்படுகின்றன. தக்க பாதுகாப்புடன் சித்தார்த்தி ஆனியிலிருந்து துர்முகி ஆனிவரையிலான இரண்டாண்டுகள் அனைத்தும் பாதுகாக்கப்படுகின்றன. இதனிடையே 60,000 குதிரைப் படைவீரர்களுடன் தேசிங்கு ராஜா திருச்சினாப்பள்ளியை வந்தடைந்து, முற்றுகையிட்டு, படேகானைக் கொன்று, கைப்பற்றுகின்றான். முஸ்லீம்களை அங்கிருந்து அப்புறப்படுத்தியவன், முராரிராவை நியமனம்செய்து, வழக்கமானக் கொடைகள் வழங்கி, இறைப்பணி அனைத்தும் சிவ, விஷ்ணு ஆலயங்களில் நடைபெற உத்தரவிட்டான். பின்னர் அவன், வடக்குநோக்கிப் போய்விட்டான். அதையடுத்து நகரத்தில் கடவுள் இல்லாமல் இருப்பதைக் கண்டு மனமுடைந்த முராரிராவ் 2,000 குதிரைப் படைவீரர்களை அப்பாஜி ராவ் தலைமையில் இருத்திவிட்டு, அவன் வானரவீர மதுரைக்குப் புறப்பட்டு விட்டான். அங்கே கடவுளை வழிபட்டவன், சேதுபதியின் ஒப்புதலுடன் கடவுள்களை தன்னுடன் எடுத்துக்கொண்டு, இரவு முடியும் சனிக்கிழமையில், துர்முகி ஆனி 17 ஆம்நாள், கி.பி. 1741ல் மதுரை வந்தடைந்தான்.*

*இந்துமத கர்நாடக வழக்கப்படி, கோவில்களைப் புனிதப்படுத்தும் சடங்குகளான சாந்தி மற்றும் சம்புரோக்ஷனா ஆகியவற்றை நடத்தி, நாள்தோறும் முறைப்படியான வணக்கமும் சேவைகளும் நடைபெற வழிசெய்தான்.*

ருத்ரோத்காரி, நடப்பு சாகா 1664, கி.பி. 1743 ஆம் ஆண்டு, வடக்கிலிருந்து நிஜாமு-ல்-முல்க் என்ற முஸல்மான் நிஜாம் வந்துசேர்ந்தான். திருச்சினாப்பள்ளி மற்றும் மதுரைக் கோட்டைகள் அவன் வசமாயின. அங்கே மாபஸ்கானையும் முஹம்மத் அலிகானையும் நவாப்களாக பொறுப்பில் அமர்த்திவிட்டு, வடக்கே திரும்பிப் போய்விட்டான். ருத்ரோத்கரியிலிருந்து ஆங்கிரஸ ஆண்டின் கி.பி. 1743-53, கார்த்திகை 31 ஆம்நாள்வரை முஹம்மதியர்களின் கையில் மதுரை துலுக்காணமாக இருந்தது. இந்தக் காலகட்டத்தில், அப்துல் குமுகான்-அப்துல் ரகுமான்கான்?- மதுரையை ஆண்டுகொண்டிருந்தபோது, 2,000 குதிரைப்படை வீரர்களுடன் வந்த மயானாவின் மைத்துனன் ஆலம்கான், தொண்டைமான் கோட்டையைக் கைப்பற்றி மதுரை யுடன் இணைத்தான். ஓராண்டுகாலம், திருவடி எல்லைவரை - திருவாங்கூர்- ஆட்சிசெய்தான். பின்னர் அவன், மதுரையின் பொறுப்பை மயானாவிடம் விட்டுவிட்டு, திருச்சினாப்பள்ளி சென்று சந்தேகான்-சந்தாசாகிப்- படையுடன் இணைந்து கொண்டான். ஆலம்கான் என்ற அல்மு கானின் மரணத்தையடுத்து குழப்பம் ஏற்பட்டது.

இதனிடையே மயானா மதுரைக் கோட்டையை மைசூருக்கு விற்றுவிட்டு, அடுத்துள்ள திருமோகூருக்கு ஓடிவிட்டான். மதுரையை வாங்கிய மைசூரின் குஹு சாகிப் அல்லது குகு சாகிப், கி.பி. 1752 ஆங்கிரஸ ஆண்டின் புரட்டாசி, 30 ஆம்நாள் கோட்டைக்குள் புகுந்தான்.[8] மைசூர்காரர்களால் மதுரைக் கோட்டை ஆக்கிரமிக்கப்பட்டுவிட்டதைக் கேள்வியுற்ற சேதுபதியின் தளபதி வெள்ளையன் சேர்வைக்காரன், சிவகங்கை ஜமீன்தார் உடையத்தேவரின் பாதுகாவலனும் பிரதானியுமான தாண்டவராய பிள்ளை ஆகியோர், தங்கள் படைகளுடன் மதுரைக் கோட்டையைச் சூழ்ந்துகொண்டனர். கி.பி. 1752 புரட்டாசி 30 ஆம்தேதியிலிருந்து, கார்த்திகை 26 ஆம்தேதிவரையிலும் முற்றுகை நீடித்தது. நடுவர் தீர்ப்பின்படி, சேதுபதியின் பொறுப்பில் கோட்டையை விட்டுவிட்டு, திண்டுக்கல்லை நோக்கி குஹு சாகிப் புறப்பட்டான்.

முகம்மதியர்களான நிஜாமு-ல்-முல்க் வந்தநாளிலிருந்து, குஹு சாகிப் சென்ற நாள் வரையிலான, ஏறத்தாழ ஒன்பது ஆண்டுகளுக்குப் பின், மதுரைக் கோட்டைக்குள் நுழைந்த சேதுபதியின் தளபதி வெள்ளையன் சேர்வைக்காரனும், உடையாத்தேவரின் பாதுகாவலன் தாண்டவராய பிள்ளையும் இருவருமாக நுழைந்தனர். மூடிக்கிடந்தக் கோவில்களைத் திறந்தனர். சேவைகள் தொடர்ந்து நடைபெற வழிசெய்தனர். குஹு சாகிப் முற்றுகை காலத்தில் பல பசுக்களைக் கொன்றும், பல்வேறு ஒவ்வாத

நிகழ்ச்சிகளிலும் தன்னை ஈடுபடுத்தியிருந்தான். அதனால் பல கோவில்களைத் தூய்மைப்படுத்தி, முறையான வணக்கமுறைகள் நடைபெற உத்தரவிட்டனர். அரசன் இல்லாத நாடாக இருந்த மதுரைக்கு, பங்காரு திருமலை நாயக்கரின் மகனான விஜயகுமார முத்துத்திருமலை நாயக்கரை, ஆங்கிரஸ ஆண்டின் மார்கழி, 14 ஆம் நாள் திங்கள்கிழமையன்று, அரசனாக, நாச்சியார் சந்நிதியில் வைத்து முடிசூட்டி, செங்கோல் கொடுத்து, அண்மனைக்கு கொண்டுசென்று அரியணையில் அமர்த்தினர்.

பின்னர், அவன் அந்தப் பேரரசை, ஆங்கிரஸ மாசி மாதம் 14 ஆம்நாளிலிருந்து ஸ்ரீமுக ஆண்டு வைகாசி 30 ஆம்நாள்வரையில், பதினாறு மாதங்களாக ஆண்டுகொண்டிருந்தான். அப்போது, மயானா, மஹாதிமியா மற்றும் நபிகான் ஆகிய மூவர் சேர்ந்துவந்து, மதுரையின் ஆட்சியாளனைக் கோட்டையிலிருந்து வெளியேற்றிவிட்டனர்.[9] அவன் வெள்ளிக்குறிச்சியில் தஞ்சம் கொண்டான். மூவர் மதுரைக் கோட்டையையும் அதன் சுற்றுவட்டாரப் பகுதிகளையும் வளைத்துக் கொண்டனர். மறுபடியும் குழப்பம் சூழ்ந்தது. கோவில் நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. நகரத்தின் வணிகம் பாழ்பட்டுப் போனது. கிணறுகளும் தோட்டங்களும் புரட்டிப் போடப்பட்டன. இந்தநிலையில் மைசூருக்குப் போய்விட்ட குஹூ சாகிப், வெள்ளையன் சேர்வைக்காரனுடன் சேர்ந்துவந்து, மதுரைக் கோட்டையை முற்றுகையிட்டான். முற்றுகை ஆறுமாதத்துக்கும் மேலாக நீடித்தது. அவர்களின் முகாம் அலுவலகம் பனையூருக்கு அருகிலுள்ள ஆலமரத்தடியில் இயங்கியது. மயானா படைகள் வெறிகொண்டுக் கிளம்பி, வெள்ளையன் சேர்வைக் காரனையும் குஹூ சாகிப்பையும் துரத்திச்சென்று கொன்றுகுவித்தனர். பின்னர் மதுரைக் கோட்டை அவர்கள் வசமானது. ஸ்ரீமுக ஆனியிலிருந்து பவ ஆண்டின் மாசி 21 ஆம்நாள், கி.பி. 1753-55 வரை அவர்கள் மதுரையை நிர்வகித்தனர். இதனிடையே கலி 4855, சாகா 1675 நடப்பு, பவ ஆண்டின் மாசி, 22 ஆம்நாள், 1,000 ஐரோப்பிய வீரர்களுடனும் இருபது பீரங்கிகளுடனும் தேவனாம்பட்டணத்தி லிருந்து புறப்பட்டான். மதுரைக் கோட்டையைக் கைப்பற்ற, அவன் நத்தம் கணவாயைக் கடந்துவிட்டிருந்தான். மயானா, தனது இருப்பிடத்தைக் கோட்டையாக மாற்றி வைத்திருந்த திருமோகூர் கோவிலுக்குள் புகுந்த ஐரோப்பியப் படைவீரர்கள், கடவுள் சிலைகள் விக்ரகங்களில் பூட்டப்பட்டிருந்த நகைகளை எடுத்துக்கொண்டு, மதுரைக்கு வந்தார்கள்.

பின்னர் அவர்கள், அதிவேகமாக தின்னவேலிவரை சென்று, மதுரைக்குத் திரும்பினார்கள். இறுதியாக, திருமோகூர்

விக்ரகங்களை அவர்கள் ஒட்டகங்களின் முதுகில் ஏற்றிக்கொண்டு திருச்சினாப்பள்ளிக்குத் திரும்பினார்கள். வழியில் அவர்கள் கள்ளன்களின் வாழிடமான அழகர் கோவிலைக் கடந்தபோது, முகம்மதியர்களை வழிமறித்த கள்ளன்கள் விக்ரகங்களைக் கைப் பற்றி, கோவிலுக்கு வழங்கினார்கள். பரகத்துல்லா என்ற தானிஷ்முந்த்கான், மாபூஸ்கானுக்காக மதுரையை ஆண்டு கொண்டிருந்தபோது, (vide page 40 of N. 2 S.C. Hill Yusuf Khan) முகம்மதியப் பக்கிரி ஒருவன், திருமலை நாயக்கர் கட்டிய புதுமண்டபத்துக்கு முன்னால் ஒரு கூடாரத்தை அமைக்க முயன்றான். இரட்டைச் செங்கல் சுவர்கொண்ட கட்டிடத்தை எழுப்புவதற்கும் தயாரானான். கோவில் கோபுரத்தின் உச்சியில் கொடி நாட்டவும் முற்பட்டான். கோவில் அதிகாரிகள், உள்ளூர் வணிகர்கள், குடிமக்கள், எல்லோரும் ஒன்றுகூடி, அவனது முனைப்புகளுக்கு எதிர்ப்பு தெரிவித்தனர். அவர்களின் எதிர்ப்புக்கு செவிசாய்க்க மறுத்த அவன், கோபுரத்திலிருந்து கீழிறங்க மறுத்துவிட்டான். அது, வலுவானதொரு ஆட்சியில்லாத குழப்பமான நிலையிருந்த நேரம். யாராலும் ஒழுங்கை நிலைநாட்ட முடியவில்லை. கோவில் நிர்வாகத்தினர் கோபுரங்களின் நான்கு வாயில்களையும் அடைத்துக்கொண்டு உள்ளேயே இருந்து கொண்டனர். இந்த நிலையில் அஸ்தமண்டபத்திலுள்ள தங்கத்தூண்களின் தென்கிழக்கு மூலை பத்ரகாளியம்மன் சிலையின் கண்கள் தை மாதம் 3ஆம்தேதி விடிந்த ஒருமணி நேரத்துக்கு பின்பு திறந்துகொண்டன. அந்நிகழ்ச்சி 5 ஆம்தேதிவரையிலும் நீடித்தது. ஆச்சரியம் தரத்தக்க இந்த நிகழ்ச்சி, எல்லாத் திசைகளிலும் பறந்தது. மக்கள் கொத்துக் கொத்தாகத் திரண்டுவந்தனர். பின்னர், கி.பி. 1757ஆம் ஆண்டு, ஈஸ்வர வருஷம் சித்திரை மாதத்தில், 1,000 ஐரோப்பியப் படைவீரர்களுடன் தேவனாம்பட்டியிலிருந்து தின்னவேலிக்குச் சென்றுகொண்டிருந்த கான்சாகிப், மதுரையைச் சுற்றிவளைத்து சித்திரையிலிருந்து ஆவணிவரையில் முற்றுகையிட்டான். பரகத்துல்லாவின் ஆட்சியில் மக்கள் துயருற்றிருந்தனர். அவர், கோட்டைக்குள்ளேயே இருந்துகொண்டார். கான் சாகிப்பின் முற்றுகையையடுத்து, கோட்டைச் சுவர்களிலிருந்துத் தப்பி, திருப்பூவனத்துக்கு வந்துவிட்டான்.[10] கான்சாகிப்பும் திரிசிரபுரம் மீனாட்சிநாத பிள்ளையின் மகனுமான முத்தழகு பிள்ளையும் நகரத்தையும் கோவில் வாசல்களையும் சுற்றிவந்தனர். முத்தழகுப் பிள்ளை கான் சாகிப்பிடம் கோவில்கள் இந்து கர்நாடக முறைப்படி நடக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டான். இதையடுத்து, கோவில் நிலங்கள் கோவில் பணிகளுக்காக மறுபடியும் வழங்கப்பட்டன. தூய்மைப்படுத்தும் பணிகளும்

*நிறைவேற்றப்பட்டன. திருஆலவாய் ஆண்டவனின் கோவிலில் வணக்க முறைகள், முறைப்படித் தொடர்ந்தன. ராயகோபுரத்தின் -புதுமண்டபத்தின்- முன்னால் முகம்மதியப் பக்கிரி எழுப்பியக் கூடாரம் சரித்துவிடப்பட்டது. அவனும் அடித்து, நகரத்துக்கு வெளியே துரத்தியடிக்கப்பட்டான். கோவில் பணிகள், தேரோட்டம், திருவிழாக்களுக்கென மாதத்துக்கு 1,000 பொன்கள் வீதம், 12,000 பொன்கள், கூடுதலாக உணவு ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. இந்த நிலையில், கான்சாகிப்பும் முத்தழகுப் பிள்ளையும் திருச்சினாப்பள்ளிக்குச் சென்று, தங்கள் வசமாக்கினர். இதையடுத்து, அவர்கள் பாண்டிச்சேரியிலுள்ள செயிண்ட். டேவிட் கோட்டைக்குச் சென்றபோது, கேப்டன் அவர்களை வரவேற்றுப் பரிசளித்துக் கௌரவித்தார். பின்னர் அவர்கள், மெட்ராஸுக்கு பிரமாதி ஆண்டு, வைகாசியில், கி.பி. 1759ஆம் ஆண்டு வந்துசேர்ந்தனர்.*

*சித்ரபானு 1712 ஆம்ஆண்டிலிருந்து, கோவில் நிர்வாகிகள் நிலங்களுக்குப் பொறுப்பேற்று, வழிபாட்டுச் செலவுகளுக்கு 1,000 பொன்கள் வழங்கிவந்தனர். சுபானு புரட்டாசி மாதத்திலிருந்து தாரண புரட்டாசி வரையிலுமான, கி.பி. 1763-64, ஆகிய காலகட்டத்தில், சென்னைப் படைத்தலைவர் பிரெஸ்டன், தனது ஐரோப்பியப் படையுடனும், அவர்களுடன் நவாபுகள் முஹம்மத் அலிகான் சாகிப் மற்றும் மாபூஸ்கான் சாகிப், சேதுபதி, உடையாத்தேவர் (சிவகங்கை), தொண்டைமான் மற்றும் சில பாளையக்காரர்களுடன் மதுரையை முற்றுகையிட்டார். அய்ப்பசி 3ஆம்நாள், சாகா 1684 நடப்பு, தாரண கி.பி. 1764ஆம் ஆண்டு முஹம்மத் அலிகான் கோட்டைக்குள் நுழைந்து, அதைக் கைப்பற்றியதும், அவர்கள் முஹம்மத் யூசுப் கானை தூக்கிலிட்டனர். பின்னர் கோவில் நிர்வாகிகள், ஊரின் முக்கியஸ்தர்கள், ஒரு குழுவாகச்சென்று அவனைச் சந்தித்தனர். இதையடுத்து, மதுரை வருவாய் அலுவலர் (அமில்) அப்துல் கான் சாகிப் அப்போது கோவில் நிர்வாகம், அவர் ஏழு கோவில்களுக்கு ஆண்டுக்கு, 7,000 பொன்கள் வழங்குவதற்கான உத்தரவைப் பெற்றார். நிலங்களும் கிராமங்களும் மானியங்களாகவும் தானமாகவும் வழங்கப்பட்டன. கோவில்களைத் தூய்மைப்படுத்தும் பணிக்கு, தலா ரூபாய் 500 வழங்கப்பட்டது. இந்த வகையில், அப்துல்கான்சாகிப், தாரண ஆண்டிலிருந்து விக்ருத்தி ஆண்டுவரை, கி.பி. 1764-70 ஆண்டுவந்தார். கராவிலிருந்து ஹெவிலாம்பி, கி.பி. 1770-77, வரையிலான ஏழாண்டுகள் மொஹிதீன் சாகிப்பின் ஆட்சி நடந்தது. மல்லாரி ராயரின் (மல்லாரி ராவின் ?) ஆட்சியும் கோவில் பணிகளுக்காக, 6,000 பொன்களை வழங்கிவந்தது.*

காதர் சாகிப்பின் ஆட்சி, ஓராண்டிலேயே, கி.பி. 1778, நிறைவுற்றது. அதுபோல, காய்லா-பெஹ-கான் சாகிப்பின் ஆட்சியும் விகாரியுடன், கி.பி. 1779, ஓராண்டிலேயே முடிவடைந்துவிட்டது. சார்வாரியிலிருந்து பிளவ வரையிலான, கி.பி. 1779-81, இரண்டாண்டுகளில் மல்லாரி ராயரின் ஆட்சியும், சுபகிருத்திலிருந்து குரோதிவரையிலான, கி.பி. 1781-84, மூன்றாண்டு ஆட்சிக்கு மாஸ்டர் டோரியன் என்பவன் உரிமையாளனாக இருக்கின்றான். அந்தக்கால கட்டத்தில் வெங்கட ராயர் கோவில் பணிகளுக்கான நிர்வாகியாக இருந்திருக்கின்றான். முன்னமே வழங்கப்பட்டதுபோல, 6,000 பொன்கள் தொடர்ந்து வழங்கப்பட்டிருக்கின்றது. தானங்கள், கிராமக் கொடைகள் தொடர்ந்திருக்கின்றன. கி.பி. 1785 ஆம் ஆண்டு விஸ்வவசுவில் சேகு முஹம்மத் சாகிப் என்பவன் வருவாய் அதிகாரியாக இருந்து, அரசாங்கத்தின் அனைத்துப் பணிகளையும் சொந்தப் பொறுப்பில் செய்துவந்திருக்கின்றான். கி.பி. 1787ஆம் ஆண்டின் பிளவங்க வில், ராமசாமி அய்யன் என்பவன், அதிகாரத்தை அனுபவித்திருக் கின்றான். சுப்பராயர் கீழகவிலிருந்து செளம்ய வரையில் கி.பி. 1788-89, செளம்ய ஆண்டின் பஙகுனியிலிருந்து சாதாரண ஆவணிவரையிலும் கி.பி. 1789-90, மீண்டும் ராமசாமி அய்யன் அனுபவத்தில் மதுரை இருந்திருக்கின்றது. கி.பி. 1790ஆம் ஆண்டின் புரட்டாசியிலிருந்து, மதுரை கம்பெனியின் அதிகாரத்துக்கு உள்ளாகிப் போனது. மாஸ்டர் மெக்கலாய்ட் -அலெக்ஸாண்டர் மெக்க லாய்ட்- விக்ரோதிக்ரித், 1791ஆம் ஆண்டுவரை பொறுப்பிலிருந்தான். அவனது நிர்வாகத்தின் போது, நவாப்களின் ஆட்சியைப்போலத்தான் எல்லாமே நடந்தது. பின்னர், காதர் சாகிப் பரிதா பதி, 1792, யில் ஆட்சிசெய்தான். அடுத்த இரண்டாண்டுகள் 1793-94, பிரமாதிச்சா முதல் ஆனந்தா வரையில், மீண்டும் ராமசாமி அய்யனே ஆட்சிக்கு வந்தான். அடுத்த இரண்டாண்டுகள் ரக்ஷனா மற்றும் நள ஆண்டுகளில், பொக்கிஷதார் வெங்கடராயர் அதிகாரம் செலுத்தினார்.

அடுத்த இரண்டாண்டுகள், பிங்கள மற்றும் காளயுக்தி, கி.பி. 1797-98, ராமசாமி அய்யனே மீண்டும் அதிகாரம் பெறுகின்றான். அடுத்த சித்தாத்ரி ஆண்டில், கி.பி. 1799, ராவோ பண்டிட் என்பவனிடம் அதிகாரம் போய்ச் சேருகின்றது. ரௌத்திரியில், நாராயண ராயர். இந்தக் காலகட்டத்தில் எல்லாமும் வழக்கம்போல, கொடைகள், தானம் என நடந்தேறுகின்றன. கி.பி. 1801, ரௌத்ரி ஆனியிலிருந்து துர்முகி ஆடி 23ஆம் நாள் வரையில், மீர் அஸ்தகான் பகதுருக்காக, ரங்கராயன் அதிகாரத்தைச் செலுத்துகின்றான். அவர்களும் வழக்கமான முறைமைகளைச்

செய்கின்றனர். அதன்பின்பு, துர்முகி ஆடி 23ஆம் நாளிலிருந்து, கி.பி. 1801, மதிப்புமிகு கம்பெனி அதிகாரத்தைப் பெற்று, வழக்கப்படியான மாமுல்களைச் செய்கின்றது.

சாகா 1723, கலி 4(90)2, துர்முகி ஆடி, 24ஆம்நாள், நிலப்பரப்பு கம்பெனியின் ஆளுகைக்குள் போய்ச்சேருகின்றது. ஆட்சியாளர் மேலூர் ஆர்தீஸ் சாகிப் (தாமஸ் போவர் ஹ¯ர்திஸ்) மதுரைக்கு வந்துசேருகின்றார். துணை அதிகாரியாக எம்.ஆர்.ரீ. கியானா சாகிப் மற்றும் பேஷ்காராக பீம ராயர் மற்றும் நாராயண ராயர், மதுரைக்கு நியமனமாகின்றார்கள். கோட்ட அதிகாரி- ஆட்சியாளரின் துணை அதிகாரி- கியானா சாகிப், மறுநாள் 25ஆம் தேதி, வந்து சேருகின்றார். நிலமனைத்தும் கம்பெனியின் சொத்தாகின்றது கியானா சாகிப், அரண்மனைக் கூடத்தில், தனது மன்றத்தைக் கூட்டுகின்றார். எல்லோரும் அவர்களை மதிக்கின்றார்கள். அவர் களின் சட்டத்துக்குக் கட்டுப்படுகின்றார்கள்.

## அடிக்குறிப்புகள்

1. The expression in queer, and may be an errouneous transcript of a well known title of Jatavarman Sundara Pandya Valal - Valitirandam' he that opened the way with the sword. South India and her Muhammdan Invaders, p. 53 note.i
2. This corresponds to the year A.D.1323-24 the month Ani would make in the year 1323 A.D.June - July. This would correspond to k.a.498
3. The dates are in error being earlier than the actual years by about five years. The name of the second ruler Kudipatik leaves litterl doubt that the dynasty under reference in that founded by Shaf-Halalu-d-din Ahasna shah. He ruled for five year A.D.1335-40 and was followed for a year by Alau-din Udauaji. Then Qutubu-d-din for forty days in A.H.740 (1339-40). The two Ulapatikahan of the Tamil accouts seem to stand for first two. The length of the reign of the three is wrong separately. The difference is made up with the third.

   The Sultans of Madura

   i. Sharif Jalalu-d-din Ahsan Shah coin. Jalalu-d-dunya Wad-d-din dated A.H.738 also 739 and 40

   ii. Alau-d-din Udauji or Uduji Alau -d-dunya Wa-d-din, Unauji Shah date A.H.740.

   iii. Uqtbu-d-din Firoz Shan, A.H.740, Qutbu-d-dunya Wa-d-din

   iv. Ghiyathu-d-din Muhammad Dama-ghan Shan, date. A.H.741

v. Nariru-d-din Mahmud Ghazi Damghan Shan, A.H.745, Break 745, Break, 745-757

vi. Adil Shan, A.H.757

vii. Fakhru-d-din Mubarak Shan, Muhammad Mustafa legend Nasifu-n-nabi, date 761-770.

viii. Alau-din Sikandar Shan, A.H.774-9, J.R.A.S., 1909, pp.667-683

4. Mysore, as a state was no then in existence, but the writer is apparently referring to his time. Kampana's office must have reference to the Hoysala ruler of the time

5. This passage is obscure in the original; the first name is that of the illegigimate son of the Pandys the next name and the next which I prefer to take as one name Anjadaperumal Muttaras' sar, these three in succession ruled for fort eight years apparently. Lakkna's Coronation refers only to his installation of the first.

6. There is a discrepancy in the date. The year Pingals is A.D.1497 and Saka 1422 is A.D.1500. The Cyclic year is likely it seems to me, to be correct and the Saka year wrong.

7. This ought to be Sobhakrit.

8. Khub Saheb Jamedar of the Mysoreans' accoriding to the Nawab Muhammad Ali of Trichopoly. Country Correspondence No.422 of 1754. See page. 31. N.1 S.C. Hill's Yusur - Khan

9. Mahammad Berky (Mianah of Orme), Mahamad Mainach (Moodemiah), Nabikahn Cattak.

10. This ovisiously refers to the attack and capture of Madura by Caillaud and Usufkhan in A.D.1757. But the Mindankahn or Maindan Kahan of the Pandyan Chonicle is Khumandan Khan Sahib of this, and stands for commedandt Khan Sahib which stands againg for Yusuf Khan, see ch. VI of Yusuf Khan.